# சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்

## தொகுதி மூன்று



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

# சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்

## தொகுதி—3

## ச – தோ




*முதன்மைப் பதிப்பாசிரியர்*

முனைவர் ப. அருணாசலம்



தமிழ்ப் பல்கலைக் கழகம்

தஞ்சாவூர்

*தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு:* ***52–3***

*திருவள்ளுவா ஆண்டு:* ***2019*** *ஆவணி; செப்டம்பர்,* ***1988***

*துறை:* **சங்க இலக்கியப் பொருட்களஞ்சியத் திட்டம்**

*நூல:* **சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்**
**தொகுதி-3**

*பதிப்பு:* *முதற்பதிப்பு*

*விலை:* *உரு.* ***250-00***

*அச்சு:* *சிவகாமி அச்சகம்,*
*அண்ணாமலைநகர்.*

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத | — | அகததிணையியல |
| அகம். | — | அகநானூறு |
| அ சி. | — | அபிதான சிநதாமணி |
| உ.வே.சா. | — | உ.வே. சாமிநாதையர் |
| ஔவை.து. | — | ஔவை. துரைசாமிப் பிள்ளை |
| ஐங. | — | ஐஙகுறுநூறு |
| ஐங் தி. | — | ஐஙகுறுநூறு-திரட்டு |
| க க. | — | கலைக் களஞ்சியம் |
| க.வா. | — | கடவுள் வாழதது |
| கலி. | — | கலிததொகை |
| குறி. | — | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | — | குறுநதொகை |
| ச.சி.பெ. | — | சங்க காலச் சிறபபுப் பெயர்கள் |
| சிறு. | — | சிறுபாணாற்றுப்படை |
| சூ. | — | சூத்திரம |
| த.பே. | — | தமிழப பேரகராதி |
| த.வ.க. | — | தமிழப புலவர் வரலாறறுக களஞ்சியம் |
| தி. | — | திரட்டு |
| தொல். | — | தொல்காப்பியம் |
| நச,நசசர் | — | நச்சினார்க்கினியர் |
| ந.சு. | — | ந. சுப்பிரமணியன் |
| ந.மு.வே. | — | ந.மு. வேங்கடசாமி நாட்டார் |
| நற். | — | நற்றிணை |
| நெடு. | — | நெடுநல வாடை |
| பக். | — | பககம |
| பட். | — | பட்டினப் பாலை |
| பதி. | — | பதிறறுப் பதது |
| பதி தி. | — | பதிறறுப் பதது - திரட்டு |
| பதி.ப. | — | பதிறறுப பத்து - பதிகம் |
| ப.மு. | — | பலலவர் காலத்துககு முன (Pre-Pallavan Tamil Index) |
| பரி. | — | பரிபாடல |
| பரி.தி. | — | பரிபாடல் - திரடடு |
| பி.நா. | — | பினனத்தூர் நாராயணசாமி ஐயர் |
| புறம. | — | புறநானூறு |
| பெரு. | — | பெரும்பாணாற்றுப்படை |
| பெருமழை | — | பெருமழைப் புலவர் பொ.வே. சோமசுந்தரனார் |
| பொரு. | — | பொருநராற்றுபபடை |
| பொருள். | — | பொருளதிகாரம் |
| மது. | — | மதுரைக் காஞ்சி |
| மலை. | — | மலைபடுகடாம் |
| முரு. | — | முருகாற்றுப்படை |
| முல்லை. | — | முல்லைப்பாட்டு |
| மொ.அ.து. | — | மொ.அ. துரையரங்கசாமி |
| வ.பி.அ. | — | வரலாற்றுப் பினனணியில் அகநானூறு (Ahananuru in its Historical Setting) |
| வெ. | — | வெணபா |
| வே.வி. | — | வேங்கடவிளககு |
| வை.பி. | — | வையாபுரிப பிள்ளை |

# பதிப்பு முகவுரை

சங்க இலக்கியப் பொருட்களஞ்சியததின் அகரம் முதல் ஔகாரம முடிய வுள்ள பெயர்களின விளக்கங்கள் அமைந்த முதல தொகுதி 1986, ஏப்ரல் திங்களிலும், ககரம் முதல் கௌகாரம் முடியவுள்ள பெயர்களின் விளக்கங்கள் அமைநத இரண்டாம் தொகுதி 1986, சூலைத் திங்களிலும் வெளிவந்தன. அவற்றைத் தொடர்ந்து சகரம் முதல தோகாரம் முடியவான பெயாகளுக்குரிய விளக்கங்கள் அடஙகிய இம்மூன்றாம் தொகுதி இப்போது வெளிவருகினறது. இத்தொகுதியைப் பயனபடுத்துவோர் இககளஞ்சிய உருவாககத்திறகு மேற் கொண்ட நெறி முறைகளை முதலிரு தொகுதிகளின் பதிப்பு முகவுரையில அறிநது கொள்ளுதல், செயதியைத தெளிவாக உணர்தற்குத் துணையாகும. அவற்றின் வேறாக இத்தொகுதியில மேறகொண்ட வேறுபாடு ஒனறு மட்டும இங்கே குறிக்கப்பட வேணடுவதாம். அது, ஒரு பொருளைக குறிககும் ஒரு சொல்லின வேறுபட்ட வடிவங்களை அவறறிறகுரிய வரிசைப்படி வேறுவேறு இடங்களில அமைத்த முன்னை முறைக்கு மாறாக அவற்றை இணைதது ஓரிடத்திலேயே அமைத்துள்ளதேயாகும். எடுத்துக்காட்டாகக கூட்டம் என்ற ஒரே பொருளுககுரிய கணம், கணன் எனற எழுததுப போலிச சொல· வடிவங்கள் முன தொகுதியில் வெவ்வேறிடஙகளில அமைநதன. இத்தொகுதியில அவையொதத சுரம், சுரன என்ற சொல வடிவஙகள ஒரே இடததில சுரம/சுரன் என நிறுததப்பட்டுப பொருள்தரப் பெற்றுள்ளன.

இபபொருட் களஞ்சியத்தை விரைவில உருவாககத திட்டம் வகுதது, இடையிடையே கலநது உரையாடிப, பல நல்ல அறிவுரைகளை வழஙகிப, பல்லாறறானும் உதவிய, தமிழ்ப் பல்கலைககழகத துணைவேந்தர், மாண்புமிகு முனைவர் ச. அகததியலிங்கம் அவர்களுக்கும், இபபணிககு உறுதுணையாக இருந்த பல்கலைக்கழக ஆட்சிக்குழுவினாககும, பதிவாளர், முனைவர் பெ. சின்னையன அவாகளுக்கும, இலக்கியத்துறைத தலைவர், பேராசிரியர், முனைவர் சோ. ந. கநதசாமி அவர்களுககும் என உளமார்நத நனறியை அன்புடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இககளஞ்சியத் தொகுதி உருவாவதற்கு விளககக் குறிபபுககள் எழுதித துணைபுரிநத சிறப்புதவியாளர்கள் முனைவர் வ. குருநாதன், எம. ஓ. எல., பி. எட்., பிஎச். டி., புலவர் நா. செலவராசு, எம். ஏ., எம். பில., புலவா த. முருகையன், மற்றும் கையெழுத்துப படிகளைத் தட்டசசுச் செயதுதவிய திருமதி இரா. உமாமகேசுவரி, பி. சயி., ஆகியோர்ககும நனறியறிதலுடையேன்.

மெயபபுத திருததம செயதுதவிய புலவா இரா. கணபதி, பி. லிட்., அவர்களுககும, விரைந்து செம்மையாக அச்சுப்பணி செய்து குறிதத காலததில் இந தொகுதியை வெளியிட உதவிய அணணாமலைநகர், சிவகாமி அசசகத தார்க்கும, கட்டமைப்பு முதலியன செய்து இப்பதிப்பு அழகாக வெளிவர உதவிய தமிழப் பலகலைககழகப் பதிபபுத்துறையினர்க்கும என் நனறியைப் புலபபடுததிக் கொள்கின்றேன்.

இதனைத தொடர்ந்து, நகரம முதலிய எழுத்துக்களை முதலாகக கொணட பெயர்களின் விளக்கஙகள் அமைநத களஞ்சியத் தொகுதிகள் வெளி வரும். இக்களஞ்சியததைக் கண் ணுறும அறிஞர் பெருமக்கள், எவையேனும் குறைகள் காணுவராயின் அவற்றைத் தெரிவித்தால் நன்றியுடன் ஏறறு, அடுதத பதிப்பினைச் செம்மையாக வெளியிட, வாயப்பாகும்.

தஞசாவூா
7—7—1988

ப. அருணாசலம்

# சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்

## ச

**சக்கரம் - உலகம்.** கரிகாலன் கால் நெருப்புற்றமையால் மூன்று சக்கரத்தையும் - உலகத்தையும் - அளப்பதற்கு நீட்டிய கால், இச்சக்கரம (இவ்வுலகம்) ஒன்றனையே அளந்தது (பொரு. வெ. 3; பட். வெ. 1).

**சகடம் - 1. வண்டி.** நுகத்திற் பூட்டப்பெற்ற இளைய எருதுகளையுடையதும் பண்டம் மிகுதியாக ஏற்றப் பெற்றதுமாகிய சகடத்திற்கு - வண்டிக்கு - பள்ளத்தே இழியும் போதும் மேட்டிலே ஏறும் போதும் ஏற்படும் ஊறுபாட்டினை அஞ்சி, உமணர் (சகடத்தின்)அடிமரத்தில சேம அச்சினைக் கட்டியிருப்பர் (புறம். 102:1-5). முழுமரத்தாலே கடைந்த உருளையினையும், வலிய பாரினையும் உடைய தொத்துளிப் பாயாலே வேயப்பட்ட ஒலிக்கின்ற வாயையுடைய சகடத்தின் மூக்கணை மீதிருந்து உமணமகளிர் எருத்தினை ஓட்ட உமணர், (எருதுகள் திருகாமலும அச்சு முறியாமலும்) புறங்காத்துச் சென்று உப்பின் விலை கூறி விற்பர் (பெரு. 46-65). முதலை கொட்டாவி விடுதற்கு வாய் அங்காந்தாற் போன்ற வடிவினையுடைய பாயால வேயப் பெற்ற ஒலியினைச் செய்யும் சகடத்தில் கூத்தர் செல்லுதல் (அகம். 301`6,7). ஏறுதற்கரிய கரையிடத்தே நின்றஉப்பேற்றிச் செலலும் சகடம், பெருமழை பொழிதலின அழிதல் (குறு. 165:3,4). உமணர் வெண் கல்லுப்பின் விலையைக் கூறி ஆநிரையை ஓட்டும் நெடு நெறியில் செல்லும் சகடம, மணலில் மடுத்துப்பேரொலி செய்திட அவ்வொலியினைக்கேட்டுக் கழனியிடத்துள்ள குருகுகள் அஞ்சியோடும (நற். 4.7-11). நீரவிழாவின போது புனலாடச் செல்லும காதலர், எருது பூண்ட வண்டி மீதும குதிரை பூட்டிய சகடத்தின மீதும் ஏறிச் செலவா (பரி. 10.16,17).

2. **உரோகிணி.** வானம் களங்கமற விளங்கத் திங்கள சகடத்தோடு - உரோகிணியோடு - கூடிய குற்றமற்ற நன்னாளில திருமணம் நடைபெறுதல் (அகம். 136.4-8)

**சங்கம் - பேரெண்.** நெய்தல், குவளை, ஆம்பல, கமலம், வெள்ளம் போன்ற பேரெண்களோடு சேர்த்துச் சங்கம்- பேரெண் - குறிப்பிடப்படுகிறது (பரி. 2:13-15).

**சங்கவருணர் என்னும் நாகரியர் - புலவர்.** நாகரியர் என்பது இவர் இயற்பெயர். வையாபுரிப் பிள்ளையின சங்க இலக்கியப் பதிப்பு இவரை மரபாற பெயர் பெற்ற புலவர் வரிசையில சுட்டுகிறது (ச. இ. புலவர்களின பெயர் வகை). சங்க வருணர் என்பதனை வளைவண்ணன என்னும தமிழ்ப்பெயரின் வடமொழி ஆக்கம் எனக்கொண்டு, வளைவண்ணன் என்று மணிமேகலையில் வருகின்ற நாகநாட்டரசன் பெயருடன ஒப்பிட்டு, இவர் பெயரும் 'நாகரியர்' என்றுள்ளமையால அவனோடும அந்நாட்டோடும் தொடர்புபடுத்துவர் ஔவை. து. இப்புலவா பாடியதாகப்புறநானூற்றில ஒரு பாடல உள்ளது (புறம். 360). பெருங்காஞ்சித் துறையில அமைந்த அப்பாடலில இவா தந்து மாறன் என பானுக்கு, நிலையாமையினை எடுத்துக் கூறுவா. சிறு சினமும பல கேள்வியும் நுண்ணுணர்வும பெருங்கொடையும் பணிமொழியுமாகிய நற்பண்பு நற்செயலகளால பலாக்கும பயன்பட வாழ்ந்து, இன்புற அரசியல நடத்திய வேந்தர் மிகச் சிலரே எனக் கூறி அவனை அம்முறையில ஒழுகுமாறு அறிவுறுத்துவர்.

**சடை - 1. முடிக்கற்றை.** அருந்தவத்தோன (சிவன) தாழ்சடையினால பொலிவுற்று விளங்குவன (புறம. க. வா. 13). அவிா சடை முனிவா (புறம. 43 4) ஆனேற்றை வெற்றியாக உயர்த்திய நெருப்பை ஒத்து விளங்கும் சடையினையுடைய மணிமிடற்றோன (புறம. 56 1,2). நன்றாய்ந்த நீள் நிமிா சடை முதுமுதல்வன (சிவன) (புறம. 166 1,2). முன்பு மகளிர்தம இழையினை நெகிழ்த்த மள்ளன, பின்னர் நெடிய மலையிடத்து அருவி நீரை ஆடி, காட்டு யானை கொண்டு வந்த விறகால செந்தீ வேட்டு, முதுகில சடையைப் புலாத்துதல (புறம. 251). முன்னர் இலல்ல மகளிரைக் கவர்ந்தவன், அருவிநீரை ஏற்றலால பழைய நிறம மாறித் தில்லந் தளிரபோன்ற புறசென்ற சடை

யோடு கூடித் தாளியைப பறிததது நினறான (புறம். 252). அவிா சடை முனிவர் வேளவி செயதனா (பட 54). மணிமிடறறநதணன (சிவன), நெருபபு எரிவது போனறு ஒவியுறறு விளங்கும பினனற சடை, பிறைத திஙகளோடு விளஙகும செனனியை உடையோான' (அகம. க. வா. 10-15). குனறுறை தவசியா நீடிய சடையொடு ஆடாமேனியா (நற 141:4,5). எணகையான (சிவன) தெளிநத கஙகை நீரைச சடையிலே கரநதவன (கலி. க. வா. 2,4). இமயததை விலலாக வளைதத குளிாந்த சடையினை உடைய அநதணன (கலி. 38.1). மிககு விளஙகும தாழநத சடையினையுடைய முககணான (கலி. 104:11,12). பிறஙகுநீா சடைககரநதான (கலி. 150:9). தாமரை இறையால் (பிரமனால) வீழத தபபெறற பெருவாரியை (ஆகாய கங்கையை) மலாநது வீழும் பூவை ஒப்பததம சடையிலே தாங்கிய சலதாரி (பரி.9:4-6).

2. திருவாதிரை நாள. 'எரிசடை எழிலவேழம்' என்னும தொடரில எரி-கார்த்திகையினையும சடை-திருவாதிரையினையும் வேழம் - பரணியினையும் உணர்ததும் (பரி. 11.2).

**சடையன்** - (சடையினையுடையவன் சிவன). புறததே புதைநது தாழநத சடையன - சடையினை உடையவன (பதி. க. வா. 5).

**சண்பகம்** - ஒருவகை மலர். முருகனின துவர முடித்த துகளறு முச்சியில, பெருந்தண சண்பகம் சூட்டப்பெற்றது (முரு. 26,27). தோழிமாரோடு தலைவி பறிதத மலர்களுள் பெருநதண் சணபகமும ஒனறு (குறி. 75). அருமபெறலாதிரையான் (சிவன் அணி பெறப பெருநதண சண்பகம மலர்ந்தது (கலி. 150:21). மல்லிகை, மௌவல், மணம் கமழ சணபகம, அலலி, கழுநீர், அரவிந்தம் முதலிய மலர்களை இரு கரையும மணம் கமழ வையை அடித்துச்சென்றது (பரி. 12:76-81).

**சத்திநாதனார்** - புலவர். இவரைத தெயவததால் பெயா பெறறவர் வரிசையில ச. வையாபுரிப் பிள்ளையின சஙக இலககியப் பதிப்புக கூறும. இவா பெயர் சததிநாதனார்' என்றும் காணபபடுகிறது. (குறு.உ.வே. சா. பதிப்பு. பாடவேறுபாடு). இவர் பாடிய பாடலொனறு குறுநதொகையில் (119) இடம் பெற்றுள்ளது. இயற்கைப் புணர்சசி புணர்நது நீஙகும் தலைமகன பாஙகறகு உரைத்தது எனனும துறையில இப்பாடல அமைநதுள்ளது. இளமைப பருவமுடையவளும், நாணல் முளை போன்ற ஒளியுடைய வெண்பற்களையுடையவளும், வளையணிநத கைகளையுடையவளுமான தலைவி, பாமபினது சிறிய குட்டி பெரிய காட்டு யானையை வருததினாற போலத் தன்னை வருததினாள் எனற தலைவன கூற்றில் அமைநதுள்ள உவமை நலம உணர்ந்து இனபுறத்தக்கது.

**சதுக்கம்** - நாற்சந்தி. முருகவேள் வழிபாட்டிடங்களாக, யாறும குளனும வேறுபலவைபபும் சதுககமும் - நாறசந்தியும - சந்தியும் புதுபபூங்கடமபும் முதலியன சுட்டப பெறறுளளன (முரு. 224,225). மூதூரில் அகலநெடுநதெருவிலே, கூகையின் சேவல அதன பெடையோடு சென்று மக்கள் இயங்காத ஆரிரும் சதுக்கதது யாவர்க்கும அசசமுணடாகும் படி குழறும (நற். 310:3-5) சதுககு காணக.

**சதுக்கு** - நாறசந்தி. இளஞ்சேரல் இரும்பொறைஅருந் திறலையுடைய, பெருஞசதுககில-பெரிய நாற்சநதியில்-விரும்பியிருக்கும் கொடுநதிறல பூதங்களை இவ்வுலகத்தே கொண்டு வநது நிறுததினான (பதி. ப. 9:13,14). சதுக்கம காணக.

**சந்தம்** - சந்தனம். புதுப்புனல், சந்தம்-சந்தன மரம் அகிற்கட்டை ஆகியவறறைச் சுமந்து கடலநோககி விரைந்தது (பதி. 87:2,3). சநதனம, சநது காண்க.

**சந்தனம்** - சந்தம். தலைவனைத் தழுவ விரும்பும பெண், பொங்கின முலையிடததே சநதனததைப பூசி உதிர்தது, மணம நிலைபெற்றவழி, தன்னைத தழுவும எனறு கருதி அதனைப் பினனும் பினனும் ஊட்டுவாள் (பரி. 21:25,26). சந்தம், சநது காணக.

**சந்தி** - தெருக்கள் கூடுமிடம். முருகவேள் வழிபாட்டிடங்களாக, யாறும குளனும் வேறுபலவைப்பும், சதுக்கமும சநதியும் - முசசநதி, ஐஞ்சநதிகள்-புதுப் பூங்கடம்பும் முதலியன சுட்டப்பெற்றுள்ளன (முரு. 224, 225).

**சந்து** - 1. சநதனம். பாண்டியன தன கடலிற் பிறந்த முத்தாலாகிய ஆரததையும், பொதியில மலையிலுள்ள முருகவேளை வழிபட்டுக் குறவா கொணடு வந்த சநதின் ஆரததையும்-சநதனத்தாலாகிய மாலையையும்-எழில்பெற அணிநதான (அகம.13.1-5). திருப்பரங்குனறததைச் 'சநதுகெழு நெடுவரை எனபர் (அகம. 59:12). யானை, மலைபபகததிலே சிறிய இலைகளையுடைய சந்தினையுடைய காட்டி

னகத்துத் துஞ்சும் (நற். 7:7-9). சந்தம், சந்தனம் காண்க.

2. மயிர்ச்சாந்து. பூசிய சந்தினை-மயிர்ச்சாந்தினை-உடைய பரந்த கூந்தலைக் காற்று வீசிப் புலாத்த, கொடிச்சி அதனைக் கையாற் கோதினாள் (அகம். 102.3-5).

3. சந்தி. 'முன்பு நன்மையறியாத தீய நிலத்தை வழியறியாமற் போய் மீண்டு வருவீராயின், பின் வருகின்றவரும் அவ்வாறு போய மீளாமற் பொருட்டுப் பலவழிகளும் கூடின சந்தினை சந்தியை-கையாலே துடைத்து, அறிகுறியாக ஊகம் புல்லை முடிந்திட்டு வைப்பீர்' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 392, 393).

**சமம்-போர்.** 'வன்கண்மையை உடைய கொலை யானையாலே பகைவர் காவலையுடைய கணைய மரத்தை முறித்து, இரும்பாற் செய்த தோட்டியால முன்னாச் செலுத்திச் சமம் தாங்கவும் - போரைத் தடுக்கவும்-ஆழமுடைய அகழியைக் கடக்கப் பாய்தற்குக் குதிரையைக் குசைதாங்கி வேண்டுமளவிலே செலுத்தவும், அம்பறாத் தூணி பொருந்திய முதுகை உடையையாய்த் தேர்மேலே நின்று, வலிய நாணாற் பிறந்த வடுப்பொருந்துமபடி அமைபைச் செலுத்தவும் வலியவாகும் நின் கைகள்' என்று செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் போற்றுவர் (புறம். 14:1-11). மறம்மிக்கு எழுந்த, சமம் வென்ற, கணைய மரத்தோடு மாறுபடும், தசைசெறிந்த தோளினை உடைய வளவன் (புறம். 39:11). 'நம்மால் சிரிக்கத் தக்கவர்கள், இவனது நாட்டை மிகுத்துச் சொல்பவர்கள்; இவனோ இளையன்' என யான் மனம் உளையுமாறு கூறி, 'ஒலிக்கும் மணி இருமருங்கும் மாறி மாறி இசைக்கும் பரந்த அடியினையும், பெரிய காலினையும் உடைய உயர்ந்த நல்ல யானையினையும் தேரையும் குதிரையையும் படைக்கலத்தொழிலமைந்த வீரரையும் (நால்வகைப் படையையும்) உடையேம் யாம்' என்று எனது மிக்க வலிக்கு அஞ்சாது புல்லிய வார்த்தைகளைக் கூறிய சினம் பொருந்திய அரசரை அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசத்தோடு கூட அவரைக் கைக்கொண்டிலேன் ஆயின் என் குடிமக்கள் பழிதூற்றும் கோலேன் ஆகுக எனத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சினம் உரைத்தான் (புறம். 72:1-12). தலைமை பொருந்திய யானை, போர்க்களத்தின் கண்ணே பட அரிய சமத்தே சிதற வெட்டி அதிய மான் விழுப்புண்பட்டான். (புறம். 93:13-15). வீரக்கழலணிந்த அடியோடு, நிலம் கவர்தற்காக, விரைந்து வந்து சமம் தாங்கிய வலிய வேற்படையினையுடையவன் மலையன் (புறம். 125:12-14). இடியேறுபோல முரசு கிளர்ந்தொலிப்பத் தலைமையுடைய யானையோடு வேந்தர் போர்க்களத்தின் கண்ணே பட, பொறுத்தற்கரிய சமத்தே சிதற வெட்டி, பொருந்தாத பகைவரைத் தடுக்கும் நாடு கிழவோன மலையமான் திருமுடிக்காரி (புறம். 126: 19-23). 'நினக்கு வேண்டியவற்றைத் தவறாது தருபவன் நின் வேந்தன்; வேந்தன் பொருட்டு நீ சாதற்கு அஞ்சாய்; இந்நிலையில் பொறுத்தற்கரிய சமம் ஒன்று வருமேயானால், நீ அப்போரில் உயிர் கொடுப்பதன் விளைவாக, வருந்துதலும் உளதாம் எனது பசித்துன்பத்தையுடைய சுற்றம்' என நாஞ்சில் வள்ளுவனை மருதனிளநாகனார் பாடுவர் (புறம். 139 11-15). வாளின் மிசை வீழ்ந்து கிடந்த ஆண்மையோன் திறத்து, முழங்கும் முரசினையும் இனம் அமைந்த யானையினையும், நிலத்தினகண் நெடிது செலுத்திய ஆணையாகிய ஆழியினையுமுடைய வேந்தரும் சமம் நிகழும் இடத்தே ஒன்று கூடி அன்பால் வருந்தினர் (புறம். 270:1-4, 13). வீரன் ஒருவன், கையில் வேலை ஏந்தியவாறு, இவ்விடத்தே இவனைச் செல்லாதபடி பரிகரியுங்கோள் என, ஏனைத் தானைவீரர் தம்மிற் கூறித் தடுக்கவும் அவர் தடையைக் கடந்து, கொலையுண்டு வீழ்ந்த மறவர்களின் குடர், தன் காலைத் தளைக்கவும், கன்றைக் காதலிக்கும் கறவைப் பசுப்போல முன் சமத்து (முன்னணிப்போரில்) பகைவரால் வளைப்புண்டிருக்கும் சோழனபால் வருவானாயினான் (புறம். 275 5-9). காலால் நடந்து தமியனாய் வந்த மூதிலாளன் (மறக்குடிமகன்) தடுத்தற்கரிய சமத்தே பகைவரை மேற்செல்லாதவாறு தடுத்து, தான் முன்னே நின்று வாளால் வெட்டி வீழ்த்தின களிறாகிய பிணத்தினது கோட்டிடையே வளைந்த வாளை நிமிர்த்துக்கொண்டு, தன்னைக் கண்டு அஞ்சியோடிய பகைவனை, அவன் பெயர்த்துக் காட்டிய புறமகண்டு நகுவன் (புறம் 284:4-8). இரும்பாலாகிய படைகள் வாயமடிந்து ஒடியும் படியாகப் பகைவரைக் கொன்று, கடத்தற்கரிய சமம் வெல்லுதல் பிறர்க்கும் எளிதாகலாம், ஆயின் பாசறையிலே உள்ளான் எனக் கேட்ட மாத்திரத்தே அஞ்சும் (வீர) ஒளி தலைவனபாலே உள்ளது. (புறம். 309:1-7) மகனைப் பெற்று வளர்த்து விடுதல் தாயின் கடமையாகும், அவனைச் சான்றோன் ஆக்குவது தந்தைபாலுள்ள கடமை; அவ

னுக்கு வேண்டும வேலை வடித்துக் கூரிதாக்கித் தருவது கொல்லனது கடமை; நன்னடை நல்கல வேந்தனது கடமை; ஒளிறுவாள் அருஞ்சமம முருக்கிக் களிறு எறிந்து பெயாதல காளைக்குக் (வீர னுக்கு) கடமை (புறம். 312:1-6) கிழவன (மறக்குடிமகன) அருஞ்சமம் சிதையத்தாக்கிப் பெருஞ் சமத்து அண்ணல யானை அணிந்த, பொன்னாற செய்த நெறறிப்பட்டத்தைப பரிசிலாக வழங்குபவன (புறம் 326:12-15). வாணுதல இறசெறிக்கப் பட்டுள்ளாள்; அவளை மணமபேச வேந்தர் வருதலைத் தவிரார்; அவள் தமையன்மாரோ, பொருசமம கடந்த, அஞ்சத்தக்க நெடிய வேலையும், பகைவர் குருதி படிந்த கண்டார்க்கு அச்சம தரும் தலையையும உடையர் (புறம். 337: 12, 16-20). பொன்னாற செய்த ஆழிப்படையைச சமத்தில் முன்னே நின்று செலுத்தியும பகைவா வரப்பெறாமையால போர்க்கண் மேமபட்ட முன்னோர் விண்ணுலகு செல்லக்கண்டும உடன்செல்லாது இருக்கின்றேன என்று நிலமகள் புலம்பும (புறம். 365:1-11). 'யாம அஞ்சுவோமல்லம்; வென்றிதரும வேலைக் கையில ஏந்தி அரிய சமம கடக்கும ஆற்றலையுடைய கிள்ளிவளவன தாள் நிழலில வாழ்கின்றோம' எனப பரிசிலன கூற்றாகப் புலவர் பாடுவர் (புறம். 397:25-27). பகைவர்க்குப் பிறக்கிடாத மேற்கோள் உடையவர்களாக வீரக்கழல் அணிந்தவர்களாக, பெருஞ்சமத்தே பகைவரைச சிதைத்துக் கெடுத்த போர்த்தொழிலை விரும்பும் வீரர்க்கு, சோற்றுணவாகிய பெரிய விருந்து உண்பித்தற்காக, வேந்தனது முரசம் எறியப்படுகிறது (பதி. 30:40-44). வீரரது வலிகெடுமாறு முரசுமுழக்கிச செய்யும பெருஞ்சமம் கெடும்படி ஆரவாரம் உண்டாக, பகை மன்னரது வலி முற்றவும அழியப பொருது வென்றி பெறும வலியையுடையவனே! குதிரை மீது இவர்ந்தும தேர் மீதேறியும யானையின வலிமிக்க கழுத்தின் மீதிருந்தும நிலத்திடத்துப பொருந்தியும போர் செய்தற்கண் நீ நின தானையைப பாதுகாப்பதனால பகைவர் நின்னை வீட்டு நீங்குவா எனக் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் புகழ்வர் (பதி 34 4-12). படை எடுத்துச் செல்லுதற்கு அடையாளமாகத் தும்பைப் பூவைச சூடியும சேர அரசன எனபதைச் சுட்டுதற்குப பனமதோட்டால் தொடுத்த மாலையணிந்தும வஞ்சினம கூறியவாறு சென்று, எதிர்த்து வந்த வேந்தருடைய அருஞ்சமம கொன்று அவ்வேந்தரைப புறம தந்தோடச செய்து வெற்றியாற குரவையாடி மகிழ்ந்தவன களங்காயக் கண்ணி நார் முடிச்சேரல (பதி. 40:9-16). முரசுடைப் பெருஞ்சமத்து எதிர்த்த வேந்தர் பட்டழியுமாறு வென்று மறவா வஞ்சின முடித்தனர் (பதி. 41: 18,19) இமயம வடக்கெல்லையாக, தெற்கெல்லை குமரியாக, இடைப்பட்ட நிலத்தின்கண் முரசுடைப் பெருஞ்சமம கெடுதலால, வெற்றியாரவாரம் உண்டாகப பகையரசர் நாட்டின் பழைய நலத்தைக்கெடுத்தவன் குட்டுவன (பதி. 43.6-11). போர் யானைகள் செறிந்து திரிதலால, நெடிய தேர்களை வேறிடங்களில பரப்பியும் தற்காப்புக்கு வேண்டும் கேடகத்தையோ கவசத்தையோ தாமும் வேண்டுமென்றெண்ணாமல், வேலும் வாளும் ஏந்திக் கொண்டும் முன்னணியில நின்று சமத்திற்கு எழும் வனக்ணாடவர், தோலாமைக் கேதுவாகிய தும்பை மாலை பகைவரிடையே விளங்கித் தோன்றப் பொருதலால், பகைவர் உயிா நீத்து உயர் நிலை உலகம் எய்தினர் (பதி. 52:1-9). செல்வக் கடுங்கோ வாழியாதன முரசு முழங்க, வஞ்சினம கூறியவாறு சென்று பகைவருடைய வேலேந்திய படைக்கூட்டம செய்யும் சமம அறக்கெடும்படி அழித்தான (பதி 66:4-6). களிறுகளைச செலுத்திய தாளினையும் குதிரைகளைச செலுத்திய தாள் விளிம்பினையும் சமம ததைந்த வேற்படையினையும் கலலை ஒத்த தோளினையும வில்லேந்திப் பொருது பகைவரை வருத்திய நல்ல வெற்றியினையுமுடைய வயவர் பெருமகன செலவக் கடுங்கோ வாழியாதனாவான் (பதி. 70:1-5). பெருஞ்சேரலிரும்பொறை ஊர்கள் பலவும பாழபடும்படி பகைவர் நாடு நோக்கிச் சென்று நாள்தோறும் புதிதாகத் தாங்கள் தேடுகின்ற பொருளோடு முன்னே தேடிக் கிடந்த பொருளும அற்றதெனக் கருதிக் கடத்தற்கரிய சமத்தினைத் தடுத்து யானைகளையும் அணிகலன்களையும திறையாகக் கொண்டு பெயர்தல் (பதி. 7:17-24). பெருஞ்சேரலிரும்பொறை களிறுகளைக் கொண்டு செய்யும்பெருஞ்சமம கெடுமாறு வேலும வாளும் ஏந்திச் சென்று, பகைவரை அழித்து வெற்றி முரசம் முழங்க, யானைக் கூட்டம உற்ற போர்ப்புண்களை ஆற்றி இரந்தோர்க்கு நல்கிப் பாசறைக்கண் இருத்தல (பதி. 76.1-9). யானைகள் வன்மையினால் பகைவரது மிகுக்ச் செல்கின்ற சமம் தொலைத்தன (பதி. 82:3, 4). முருகப்பெருமான ஆறுமுகங்களுள் ஒன்று, பகைவரை அழித்து மேற்சென்ற சமத்தே அசுரர் முதலியோரைக் கொன்று, கறுவுதல கொண்ட உள்ளத்தோடு களவேள்வி வேட்டது. (சமம என்பதற்கு நடுவு நிலைமை என்றும் நச் பொருளுரைப்பர்) (முரு. 98-100). தம மேலே வருகின்ற சமம வென்ற கணைய மரத்தோடு மாறுபடும திணிந்த

தோளினை உடையவர் ஏழுவள்ளலகள் (சிறு. 112, 113). களிறு தோட்டி வெட்டின வடுவழுநதிய முகத்தினையும போர்ககருவிகளைப் பலகாலும் பயிலுதலால தேயநது தழுமபுபட்ட சமம்தாஙகு தடககையினையும் உடையது (மது. 592,593). மாற்றாரைச் சினந்தவேந்தன செலசமம் போல விரை தலையையுடைய அநதிப்பொழுது நெருஙகி வருதல (குறி. 229,230). போர்வேட்டு எழுந்தமைக்கு அடையாளமாகப் பூளைப் பூவோடு உழிஞைப் பூவையும் சூடி,முரசம் பாசறையிலே முழங்கப பகைவா போர் முனையிற் கெட்டோடுமபடி சென று, முதலில் செய்யும் சமத்திலேயே (கஎனிப்போரிலேயே) வென்று, அவ்வளவின அமையாதே அபபகைவர் அரணிடதது மேலுமசென்று பொருதவன திருமாவளவன் (பட். 234-239) பொருநர், எதிர்நது வரும் சமத்தினை வெனறொழித்தவன 'திதியன (அகம. 25: 19, 20). செறுநர் களிறுகளோடு நிகழ்ததப் பெறும் அரிய சமம சிதையச் செழியன கொனறான (அகம. 46: 11-13). பிட்டன், பொருநதா மனனரோடு செயத அரிய சமத்தினகண் உயர்ததிய வேல்போலத் தலைவன பிரிவில் தலைவியின் கண அருநதுயர் தரும (அகம. 77:16-18). முசிறி எனனும பட்டினததை ஆரவாரம் மிக வளைதது, அரிய சமம் கடநது, அங்குள்ள பொறபாவையினைச் செழியன் கவர்நதான (அகம். 149:11-13) அருஞ் சமத்துப் பேராண்மைச் செயகையை உடைய வீரர் உறையினினறும் உருவி வீசும வாள்போல மேகம மினனியது (அகம். 188:4-7). அஞ்சததக்க செலலூரிடத்தே மதம பொருநதிய யானையின கூட்டம சமததே அழிய, மன்னவர் கால் வழியினை அழித்தவன் மழுவாள் நெடியோன் (பரசுராமன்) (அகம. 220:3-5). பசும்பூணபாண்டியன் பகைவர் எதிர்நத சமம் கடந்தவன (அகம. 231:10-12). வழுதி 'செல சமத்து' உயர்த்திய வேலபோல மழைமேகம் மின்னியது (அகம். 312:12, 13). விற்படை நெருங்கிய அரிய சமம் சிதைய அழிதது நல்ல புகழை நிலை நாட்டினர் மானம் மிகக வீரர் (அகம். 387: 13, 14). 'வெற்றி வேலை உடைய வேநதன், பகைவரின்றிப் போர்மேற் செலலுதலைத தவிர்ந்தமையான், யானும் முரசு முழககததால் உலகம அதிரும்படி படைகளை ஏவிப பகையரசர்படவெலலும் அருஞ்சமத்தில செல்லுதலை ஒழிநதேன்' என வினைமுறறிய தலைவன் கூறினான (ஐங. 426) செவ்வேள் ஊர்நதது பொருசமம் கடநத புகழ்சால் வேழம் (பரி. 21:1, 2). பாணடியன், சமததுப பகைவர் திறைப்பொருளாகக் கொடுத்த யானைகளை வரிசையாக நிறுத்தினாற் போல மேகஙகள் படர்ந்தன (பரி. 22:1,2).

2. நடு. மழை முழக்குப் போன்றும், இடிபோனறும் சமத்து-நடுவான நிலததின்கண-ஆரவாரம எழுந்தது (கலி. 101:10-14). யாழினகண இளிவாயப் பாலையையும் குரலவாய்ப் பாலையையும வலியவும் மெலியவுமாகத் தாககாது சமமமாகத தாககி அதன இனபத்தைக் கொள்ளுதல் (பரி. 19: 42).

**சமழ்ப்பு - நாணம்.** தலைவிபூணும் வளையையும் ஆரததையும் பரததைககுக கொடுதத தலைவன, தலைவியோடு உடனிருக்குமபோது தலைவியின வளையைப பரத்தைபால கண்ட அயலவா, அவடகு இவள் மாற்றாள் போலுமஎனறு அவனை நோகக அவன் நாணியபோது அககளவனது சமழபபு-நாணம்-உடைய முகததைக் காணமின எனககூறினர் (பரி. 20: 33-36).

**சமன் – நடுநிற்றல.** 'நீதலைநினறு ஒழுகுகினறபரததை, நாட்காலததே எமமுடைய வாசலிலே வநது கடுஞ சொறசொலலிப புலககினற தொழிலை நீ அறியாதாய போல, இபபோது சமனாக-நடுவாக-நினறு எமமை இகழகினறாய' எனறு தலைவனிடம தலைவி கூறினாள் (கலி 97:1-5).

**சமைப்பு - கருக்கொள்ளல்.** 'இறைவன கணடயாகத துணடிதத வசிதடியை நம மனைவியர் சமைபபின-கருக்கொள்ளின-நிறைவிழபபர்; அதனால அங்கியே தரிகக' என எண்ணி மாதவர் அழலை வேடடு அதனகண் அவியுடனே அதனைப் பெயதனா (பரி. 5:37-40)

**சரணத்தர் - பாதங்களை உடையவர்.** தாளித நொயநூற சரணததர் (பரி. 10 10).

**சருமம் – தோல்.** முருகன காலில அணிநதது, சருமததால் - தோலால – தைததல அமைநத அடையற செருபபு (பரி. 21:3).

**சல்லியங்குமரனார் - புலவர்.** சல்லியன எனபாாககு மகனாகிய குமரனார் எனக் கொள்ளுமாறு இவா பெயர் அமைநதுள்ளது. இவர் பெயரைததெயவப் பெயராக ச. வையாபுரிபபிள்ளையின சஙக இலக்கியப் பதிப்பு கூறும. இவர் பாடியதாக நறறிணையில மட்டும ஒருபாடல (141) உள்ளது அது, பொருள் கடைககூடடிய நெஞ்சிறகுச சொலலித

தலைவன் செலவழுங்கியது என்னும் துறையில் உள்ளது. 'அரிய சுரநெறியில் செல்வது உனக்கு எளிதாகலாம்; யானோ தலைவியது கூந்தலில் துயிலுதலை விட்டுப் பிரியேன்; நீ வேண்டுமாயின் தனித்துச் செல்' எனத் தலைவன் தன் நெஞ்சொடு பேசுவதாக உள்ளது. 'பொரிந்த அடியையுடைய கொன்றை மரங்கள் குழல் போன்ற காய்களுடன் வெயிலில் பொலிந்து தோன்றுவது, நீராடாத மேனியையுடைய தவசியர் சடையுடன் குன்றுகளில் உறைவது போலுள்ளது' எனக் கூறும் உவமை நயம் சிறப்பாக உள்ளது. இவர் பாடலில் கிள்ளி பற்றியும், அவன் அம்பர் நகரைச் சூழ்ந்த அரிசிலாறு பற்றியும் குறிப்புக்கள் உள்ளன.

**சலதாரி - சிவன்** (நீரைத் தலையில் தாங்கியவன்). தாமரை இறையால் (அயனல்) வீழ்த்தப்பட்ட பெருவாரியை (ஆகாய கங்கையை) மலர்ந்து வீழும் பூவையொப்ப, வேகம் தணிய, சடைப்பாரத்தின் கண் தாங்கியவன் சலதாரி சிவன் *(பரி. 9:4-7).*

**சலப்படையான் - மன்மதன்** (வஞ்சனை செய்யும் படையான்). நல்ல காற்றுத் தாலாட்ட மகளிர் இடைமுலைக்கண் கிடந்து துயிலுதல் முருகன் பரங்குன்றத்தின்கண்ணே கூடுவது என, ஆண்டுச் செல்லாதார்க்குச் சொல்லுவதுபோல் வையை இறங்கி வந்து மதுரையில் தெருவின்கண்ணே ஓடி, சலப்படையான்-மன்மதன்-இரவிற் செய்ததெல்லாம் ஊர்காப்பார்க்குப் புலப்படக்காட்டித் தண்ணம்புனல் எங்கும் பரந்தது *(பரி. 6:53-60)*

**சலம் - 1. நீர்.** மண்ணுலுதற்ற நீலமணிபோலச் செறிந்த கூந்தலிடத்தே வண்டார்ப்பப் பத்துத் துவரையும் ஊட்டி மகளிர் சலங்குடைவார்-நீராடுவார் *(பதி. 10:89, 90).*

2. **மாறுபாடு.** கடலில் சுறாமீன்கள், தம்முள் சலம்-மாறுபாடு-விரும்பிச் செருக்கித்திரியும் *(மது. 112).*

3. **கோபம்.** திருமால் சலம்-கோபம்-மிக்க தண்டினை ஏந்தினவர் *(பரி. 15:58).*

**சனம்-மக்கள்.** வையையிற் புனலாட்டிற்குச் சனம்-மக்கள்-திரண்டு சென்றனர் *(பரி. 10:9).*

# சா

**சாஅய் - சாய்ப்பாவை.** (தண்டான் கோரையைக் கிழித்துச் செய்த பாவை) (பொம்மை). தலைவன் பிரிவால் புலம்பும் தலைவி, திங்களில் உள்ள குறுமுயலிடம், 'சார்பில்லாத தலைவன் யாம் விளையாடும் சாஅயினையும்-சாய்ப் பாவையினையும் - மலரையும் கொண்டு வந்து எமக்குக் காட்டி, யான் தன் பின்னே செல்லும்படி அவற்றைக் கொண்டாடிய அவ்விடத்தே பாராய்' எனக் கூறினாள் *(கலி. 144:32, 33).*

**சாகலாசனார் - புலவர்.** சாங்கிய நெறியை மேற்கொண்டொழுகிய வட நாட்டுத் துறவியார் சாகலையர் என்பவரின் பெயர் சங்கப் புலவராய இவருக்கு அமைந்தது என மொ. அ. து. கூறுவர் *(ச. இ. பெ. பக். 71).* இவர் மருதத்திணை பற்றியும் நெய்தல் திணை பற்றியும் அகநானூற்றில் இரு பாடல்கள் *(16, 270)* பாடியுள்ளார். மருதத்திணைப் பாடலில் 'கண்டார் அனைவரும் விரும்பும் புதல்வன் தாமரை மலரின் அக இதழை ஒத்த அகங்கையினையும் பவளம் போன்ற அழகிய வாயினையும் கேட்டார்க்கு மகிழ்ச்சியைத் தரும் இனிய குதலைச் சொற்களையும் உடையவன்' எனத் தலைவனின் மைந்தனைப் புனைந்துள்ள திறன் பாராட்டுதற்குரியது. அச்சிறுவனைக் கண்ட பரத்தை, தலைவன் போன்ற தோற்றம் கருதி, யாரும் காணவில்லை எனக் கொண்டு அவனை எடுத்து மார்போடு அணைத்தாள். சிறுவனின் தாயாகிய தலைவி பரத்தையைக் கண்டபோது, 'ஏன் மயங்கினாய்' நீயும் இவனுக்கு ஒரு தாயே' எனக் கூறினாள். அதுகேட்ட பரத்தை, தாம் செய்த களவைக் கண்டு கொண்டவர் முன் உடன்பட்டு நிற்பார் போல முகம் கவிழ்ந்து நிலத்தைக் கால் விரலால் கீறி நாணி நின்றாள், இந்நிலையினைப் புலவர் 'களவுடம்படுநரின் கவிழ்ந்து நிலங் கிளையா நாணி நின்றாள்' என ஓவியப்படுத்தும் நிலை உணர்ந்து இன்புறத்தக்கது. நெய்தல் திணைப்பாடலில் கைவண்மை மிக்கவனும் குதிரைகளையும் நல்ல தேரினையும் உடையவனுமான குட்டுவனுக்கு உரியது கழுமலம் என்றும் அவ்வூரினைப் போன்ற அழகுடையவள் தலைவி என்றும் கூறியுள்ளார்.

**சாகாட்டாளர் - வண்டி ஓட்டுநர்.** வயலில் புக்க சாகாட்டின் ஆழி சதுமெனச் சேற்றில் புதைதலால் சாகாட்டாளர் - வண்டி ஓட்டுநர் - துள்ளி, உரப்பி எருதுகளைச் செலுத்த அவ்வெருதுகள் முயன்று சேற்றினின்றும் சாகாட்டினை ஈர்ததேகும வருத்தத் திடைப்பிறந்த பூசலையன்றி வேறு ஆரவாரம் கேட்டறியாத நல்ல நாட்டின் தலைவன், பல் யானைச் செல்கெழுகுட்டுவன் *(பதி. 27:10-16).*

**சாகாடு - வண்டி.** குராபபள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன, கடறகரையிடத்துக் கழியின் நீரால விளைந்த உப்பை ஏறறிக் கொணடு மலைநாட்டை நோக்கிச் செல்கின்ற, அச்சுமரம் பொருந்திய சாகாடு-வண்டி-குழிப்பாயாவாறு ஈர்த்துச் செல லும் வலிய பகட்டினை ஒப்பான் (புறம. 60:6-9). பாரத்து மிகுதியால் பார் அச்சுமரத்தொடு பொருநத, மிகுந்த பண்டங்களை ஏற்றிச் செல்லும் சாகாடு, பள்ளத்தில் ஆழ்நது விடாமல் மணல் பரக்கவும் கல் பிளககவும ஈர்த்துச் செலலும் பெருமிதப் பகட்டிற்குப் போதறகரிய துறை இல்லை (புறம். 90:6-9). உருளையையும் பாரையும கோத்து உலகின்கண் செலுததப்படும் காப்புடைய சாகாடு, அதனைச் செலுத்துவோன மாட்சிமைப் படின் துன்பமின்றி வழியே இனிதாகச் செலலும்; அவன் செலுததத் தெரியானாயின சேற்றிலே யமுநதித் துன்பம் மிகவும் தரும (புறம. 185). சுரத்திடைத தலைவனை இழநத தலைமகள, சாகாட்டினைக் கொண்டேகும் உருளின கண் ஆரத்தைப பலலி பொருந்தி வநதது போலத் தானும் தலைவனைத தொடர்நது வநதமையால அவனொடு தனக்கும சேர்தது முதுமக்கள் தாழி வனையுமாறு வேட்கோவனிடம் கூறிப் புலம பினாள் (புறம. 256). உபபு வாணிகர் உப்பினைச் சாகாட்டிற் கொணடு செல்வர் (புறம. 313:5). உழவர் தமக்குக் கள் கொணரும சாகாடு சேற்றின கண் வநதுவிடின அதன் உருள் சேற்றில அழுநதாத படி கருமபுகளை அடையாகக் கொடுபபா (அகம. 116:2-4). கரிய பழைய சேற்றினகண் அழுநதிய சாகாட்டால் உண்டான துன்பம் தீரும் பொருட்டு வலித்திழுககும் உமணர் கையிற் பற்றிய எருது வருநதிபபெருமூச்சு விட்டது (அகம். 140: 11-15). சகடம, சாடு காண்க,

**சாடி - 1. ஒருவகைப் பாண்டம்.** 'இஙகிருக்கும் மறவர் ஒருகால் உண்பதன முனபே பெரிய ஆனிரையை ஊர்ப்புறமெல்லாம் நிற்குமாறு கொணடு வரும வீரன விடாய் மிகவுடையனாய வருவான; ஆதலின் முதிர்ந்த மதுவை உடைய சாடியை-பாணடததை-பேணி வைப்பாயாக' என உலோசசனார் கள் வழங்குவோனுக்குக் கூறுமாப் போலப் பாடியுள்ளார் (புறம். 258:6-11). உண்டாட்டின்கண தானைத்தலைவன் ஒருவன், நாரால வடிககப பட்டுப் பூககளையிடடு முதிர்வித்த, சாடியில உள்ள கள்ளை வாழ்த்தி, 'சீறூரைப் புரவாக (கொடையாக) கொள்ளேன்; மருதநிலத் தூர் களையே கொள்வேன்' என மொழிந்தான் (புறம். 297. 4-8). சிறிய வீட்டின முற்றத்தில் உள்ளதாகிய முதிய வாயையுடைய சாடியில செமமண நிலதது மடுவில சிறிதளவாக ஊறிய நீரை முகநது வைத தனர் (புறம. 319: 1-4). நெய்தல நில மககள, கொழியலரிசிக் கூழைச்சமைதது வலிய வாயினை யுடைய சாடியில இட்டு வெந்நீரில் வேகவைதது நறுங்கள்ளை அமைததனர். (பெரு. 274-281). பல நாளும் வடிககப் பெற்ற கள் நிறைநத சாடியைக் கள் முகக்கும கலம உடைதநிடின மழைததுளி போலத் தெருவெலலாம் கள் துளிககும் (அகம. 166:1-3) நாவாய் வழங்கும் பெருநதுறைககண உள்ள, செருககு மிகுகினற கள்ளையுடைய சாடி போன்றவள தலைவி (நற. 295.6-7).

**2. உழுபடைச் சால்.** வையை நீராட்டினகண் தலைவியின் ஆயத்தார தலைவிககு மாறறாளாய பரத தையைப பார்த்து, 'வனபபாகிய வயலிலே கள ளாகிய நீரை விட்டுக் காமமாகிய கலபபையால எம்முடைய எருது (தலைவன) சோம்பிக கிடவா மல் உழுகினற பழைய சாடியே-உழுபடைசசாலே-என இகழ்ந்துரைததனர் (பரி. 20 52-54)

**சாடு-சகடம்.** (வணடி) புகை சூழ்நத கொடடிலின (குடிலின) நெடுஞ் சுவா, குறிய சாட்டின-சகடத தின-உருளையோடு கலபபையையும சாாதநி வைததமையான தேயநதிருநதது (பெரு. 188, 189). சகடம, சாகாடு காணக.

**சாணம்-தழும்பு.** கடுங்களிறு, தோட்டி வெட்டின வடு அழுநதின முகததையும் போர்க கருவிகளைப பலகாலும் பயிலுதலால தேயந்து சாணம-தழுமபு-பட்ட போரைத தாங்கும பெரிய கையினையும உடையது. (மது. 592, 593).

**சாத்தந்தையார்-புலவர்.** சாத்தனுககுத் தந்தையார் சாததந்தையார் எனப் பெயா பெறுதல பணடைத தமிழ மரபு. இவர் அவ்வகையில பெயர் பெறறவா ஆகலாம். புறநானூறறில நானகும (80, 81, 82 287) நற்றிணையில ஒனறும (26) ஆக ஐநது பாடல்கள் இவர் பெயரில காணபபடுகினறன. புறப பாடலகளுள் முதல மூனறினால இவா, சோழன போர்வைககோப் பெருநறகிள்ளி முக காவலநாட்டு ஆமூர் மலலனை மறபோரில கொனறு நினற நிலையை இயலபுறப புனைந்துள்ளாா. பெரு நற்கிள்ளி, ஆமூர் மலலனது மிகு வலிமையைக கெடுத்து, ஒருகாலை மணடியாக அவனுடைய மார்பிலே மடித்து வைத்தும மறறொரு காலினால்

அவனுடைய எதிர்ச்செயகையை விலக்கி முதுகிடை வளைத்தும தலையும காலுமாகிய இரணடும் முறிய மோதி அவனைக் கொனற முறையை இவர் புனையும் திறம (புறம. 80) பாராட்டுககுரியது. அக் கிள்ளி அமமலலனை முறிதத நிலைமைசகுப பசிதத யானை மூங்கிலைத தினன முறிககும் நிலைமையை இவா அபபாடலில உவமித்துள்ளார். அப போரில கிள்ளியின விரைவை இவர் மறறொரு பாடலில (புறம. 82) வியககின றார். கரநதைத திணையில மறவனொருவன நீணமொழி கூறுவ தாக இவரது நானகாவது புறபபாடல (புறம. 287) உள்ளது. போரில பகைவரின அம்பு தைததாலும வேல பாயநதாலும யானை கொமபினால குததினாலும் புறமுதுகிட்டு ஓடாத மறவரை இவர் அபபாடலில பீடுடையாளர் எனச் சுட்டுகின றார். தலைவன பிரிவுணர்ததிய நிலையில தலைவியின வாட்டம கணடு தோழி அவனை நெருங்கி, இவள் உடனபோககினில உனககுத துணை வநத தவறறிறகாகவோ, இபபோது நீ பிரிதலால இவளது கைவளைகள் கழனறு விழுநதன' என வினவி அவனது பிரிவைத் தடுககும் முறையில் இவரது நறறிணைப பாடல அமைநதுள்ளது.

**சாத்தன் – 1. பாண்டியன் கீரஞ்சாத்தன்.** 'தன் முறறத் திறகு வந்த சானறோர் பசியினமையால அப போது உணண மறுப்பினும, 'நீர் உணணவிலலையாயின யானும் உண்ண மாட்டேன்' எனத் தன்னொடு சாாதறிச் சூளுற்று, உண்ணுவீரெனறு அவரை வேணடிக் கொளளும பெரிய புகழையுடைய சாததன் எம்போலவாரிடம இனிய மெனமையுடையவன' எனப பாண்டியன கீரஞ்சாத்தனது பண்பைப் பாராட்டுவர் ஆலூாமூலங்கிழாா் (புறம. 178:3-6). 'பாண்டியன கீரஞ்சாததன்' காணக.

**2. ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்.** முலலைப பூவே, தன் ஆண்மை யாவாககும வெளிப் பட வீரரை எதிா நினறு கொனறு வெனற வலிய வேலையுடைய சாத்தன இறந்தமையால நினனை இளைய வீரா சூட மாட்டார்; இளமகளிர்பறிகக மாட்டாா; பாணன பறிததுசசூடிக கொள்ளான; பாடினி அணியாள்; இநநிலையில அவனது ஒலலையூர் நாட்டில் நீயும பூககக் கடவாயோ' எனக குடவாயிற் கீரததனாா ஒலலையூர் கிழான் மகன பெருஞ்சாததன மாய்நதபின செயலற்றுப பாடினாா் (புறம 242). 'ஒலலையூர் கிழான மகன பெருஞ்சாததன' காணக.

**3. சோழநாட்டுப பிடவூர் கிழான மகன் பெருஞசாத்தன்.** 'நெடுங்கை வேணமானாகிய கிழானுககுரியது பிடவூர்; அரிய காவலமைநத அப்பிடவூரில அககிழான் மகனாய அறபபுகழோடு விளங்குகின்ற சாததனுடைய சுற்றததினர் யாம்' என நககீரர் கிணைஞன கூறறில பாடியுள்ளார் (புறம். 395:20, 21). 'சோழநாடடுப் பிடவூர் கிழான் மகன பெருஞ சாத்தன்' காணக.

**சாத்தனார் – புலவர்.** சாத்தன் என்னும தெய்வப் பெயா இவாககு இயறபெயராய அமைநதது. இவர் வரலாறறில் வேறு செயதிகள் புலனாக வில்லை. குறுநதொகையில 349-ஆம் எண ணிலமைநத பாடலொனறே இவருடையதாகக் காணப்படுகினறது. பரததையிற பிரிநது மீணட தலைமகன அண்மையிடத்தே நிறகையில,தலைவி அவனிடதது முனனா இழநத தனது நலததை மீளபபெற மாட்டாமையைத தோழிககு உரைப்ப தாக இவர் அபபாடலை இயற்றியுளளார். வறுமைத துனபததிறகு அஞ்சி இரநதோர் வேணடியவற்றை அவாககுககொடுத்துப பின்னர் அவற்றை மீளக் கேட்பதை விடவும் இன னுயிரை யிழததல் இனிது எனற சிறநத அறத் திணை இவர் தலைவி வாயிலாக உணர்ததுகின றார். தன்னைக காதலிததுத் தனதுநலததை விரும் பிய தலைவனுககு அதனைக் கொடுதது இழநத பின் அவனது புறததொழுககம் கணடு அநநலததை மீளபபெறல இயலாது என்ற தலைவியின கருதது இதனால புலனாகின்றது. அடுமப மலரை மிதிததுச சிதைத்தவாறு நாரை மீனருந்தும் துறையையுடையவன் எனபதன மூலம் தலைவியின பெண்மை நலததைச சிதைத்தவாறு தலைவன் புறத்தொழுககம் மேறகொணடு பரத்தையரை நுகரும தனமையை இவர் இறைச்சிப் பொருளாகப புலபபடுததியுள்ள நயம பாராட்டத்தகும.

**சாத்து - 1. திரள.** ஒத்த எடையுடையனவாகப் பொதிநத மிளகுச சுமைகளை இருபுறமுமிட்ட வடுவழுநதிய வலிய முதுகினையும எடுபபான செவியினையும் உடைய கழுதைகளின சாதது–திரள் - வியனகாட்டு வழிகளில இயங்கும் (பெரு. 78-80).

**2. வாணிகச் சாத்து.** மூங்கில தமமில் உராய்தலால் எழுநத பெருநதீ காட்டைத தனனுள் அகப்படுத்தி எரிய, அதனால் சாதது-வாணிகச சாதது-தாம சென்ற வழியை விட்டு ஓடி அசசததால அலறியது (அகம. 39:6-10). உமணா சாத்து சமைததுணடு கைவிட்டுப்போன கலலால் அமைதத அடுபபின

கண மழவர் ஊனை மணமுண்டாகும்படி புழுககி உணபர் (அகம். 119:7-9). கொடுவில் ஆடவர், பிறரை வருத்தும் பகழியால வழிசசெல்லும சாத்தினைக கொன்று அவர்தம்பொருளைக் கொள்ளை கொண்டு உண்பர் (அகம. 167:7-9). வலிய வில்லினைக் கொண்ட இளையர் (மறவர்) வறணட நெறியில செல்லும சாததினை அலைத்திடும அன்பிலலாத வாழ்க்கையுடையவர் (அகம். 245: 5-7). ஆறலைப்போர், கவர்தத நெறிகளில் ஆரவாரித்து ஒருங்கே அரிய பொருள்களைப் பறித்துக் கோடலின் சாத்து சிறிதும் அநநெறியிடையே இயங்குதல இல்லை (அகம். 291:11-15). 'சாதது வநது அடைந்ததாக, வேலேந்திக் காவற் காடடிட ததே வந்து பெயருமு ஆறலைப்போரது தணணுமையின் முழககத்தினைக் கேள்; ஆதலின நீவிர் இருவரும செலல வேண்டா' எனக கணடோா கூறிக காதலர் செலவைத் தடுத்தனர் (குறு. 390).

**சாதல் – இறத்தல்** அரிதாகப் பெற்ற நெல்லிக் கனியின பெரும பேற்றினைக கூறாமல சாதல-இறத்தல-ஒழியுமாறு அதனை ஒளவையார்கு ஈநத அதியமான அஞ்சியை அவர், 'நீலமணிமிடற்று ஒருவனை (சிவனை) போல வாழ்க' என வாழத்தினார் (புறம். 91-6-11). 'நீ வேணடிய பொருளை நின வேந்தனாகிய சேரன் வழங்குவான; நீ அவன பொருட்டுச் சாதல் அஞ்சாய' என நாஞ்சில வள்ளுவனை மருதனிள நாகனார் பாராட்டினார் (புறம. 139;11, 12). கணியன பூஙகுனறன் கூறும தெளிவுரைகளுள் ஒனறு 'சாதலும புதியதனறு' எனபதாம் (புறம். 192:4). ஒரு பயனினறியும போரிற சாதல் விருபபம உடைய வீரனுககு, வேந்தன் தான அணிந்திருநத பலவகை மணிகள் விரவிய பலவடமுள்ள மாலையைச் சூட்டி, அவன அணிந்திருநத ஒறறை வட மாலையைததான சூடிக கொண்டான் (புறம. 291: 6-8). இனபுற்று வாழதல் போலும் காதலையுடைய உயிா, சாதல் போலும் துனபினைத தரும் பிரிவுக்கு வருநதும் (அகம. 339: 13-14). தலைவன மணநதுகொள்ளாது களவிலே நெடுங்காலம் வநது ஒழுகுதலால் வருநதிய தலைவி தோழியிடம், 'நமமை விருமபிக் களவின்கண் வந்தொழுகும சானறோராகிய தலைவரை நாம் விருமபி யொழுகுதல் பழியுடைய -தாமெனில தூங்காதனவாய அழுகினற கண்ணொடு ஏக்கத்தால இளைத்துச் சாதலும் இனிதே' எனக் கூறினாள (நற். 327.1-3). பிரிவிடை ஆற்றாளாய தலைவி, 'யான் சாதலுககு அஞசவிலலை; செத்தால இனி வரும் பிறபபு மககட் பிறப்பன்றி வேறொரு பிறப்பாகி மாறிவிடின என காதலனை அபபோது மறபபேனோ எனற அவ்வொனறனுககு அஞ்சுகினறேன்' எனத் தோழியிடம் கூறினாள் (நற். 397: 6-9). 'தமமிடம வநது இரந்தார்கு ஏதேனுமொன்றை முகம மாறாது ஈயாதவா சாதலும நனறே' எனத் தலைவன கூறியதாகத தலைவியிடம தோழி கூறி உடனபடச செயதாள் (கலி. 61: 11,12). உணடெனறு கூறுவதறகும் இயலாத நிலையில உள்ளதன உயிா, அநநிலையிலும் நிலலாமற சாதலை உணர்நதும, தலைவன பரததையர்பால பிரிநதமையால ஏற பட்ட பழிககுத்தலைவி நொநது கூறினாள (கலி. 77: 9-11).

**சாதி - திரள்.** பசுமையறும்படி முற்றின பெரிய செந்நெல, கொட்டபபட்டார்கதக கடுபபுததனமையைக் கொடுககும பறவையாகிய குளவியின சாதி-திரள- போல இருநதது (பெரு 229, 230).

**சாந்தம் - 1. சந்தனககட்டை.** தமிழ பொருந்தியமதுரைக கண, குளிாநத செங்கோலையுடைய வேநதனாக ஆணடவன வெள்ளியமபலததுத் துஞ்சிய பெருவழுதி, அவன நெலலும நீரும எலலா வேநதாககும எளியவெனக் கருதிப பெறுதறகரிய பொதியின மலையிடததுச சாநததததையும-சநதனக கடடையையும-கடலிடதது முததையும தனககே உரியவாககொணடவன எனக காவிரிபபூமபட்டினததுக காரிக கணணனார் பாராட்டினாா (புறம 58: 10-13). குதிரைமலைக குறவா, காட்டுப பசுவைக கறந்து கொண்ட பாலுடன, சிறுதினையிட்டுச சாநத விறகினால புழுககிய சோறறை அகனற வாழை இலையிலிட்டுப பலருடன பகுததுணபர் (புறம. 168:5-14). ஆய அண்டிரன தனபால வரும விருநதினர்கு முள்ளம பனறியின கொழுமையான ஊனும மலைபபக்கத்தே தழைதது நிறகும சாநதமும யானைககொம்புமாகிய மூனறையும புலித தோலினமேற் குவிதது வழங்குவான (புறம். 374: 11-16). கானவன மதுவினை உணடு, சாநத விறகாலாய தீயில ஊனுடன கூடிய சோறறைச சமைததுச சுறறததுடன உண்பான (அகம். 172·6, 11-13) தலைவனது முயககததால தோனறிய புதுமணம காரணமாகத தலைவியின தோளில வணடு மொயககக் கணடு ஐயுறறு வினவிய தாயககுத தோழி, அடுப்பிலிட்ட சாநத விறகின கொள்ளியைககாட்டி, 'அதிலிருநத வணடுகள் இவள தோளில மொயத்தன' எனப் பொயயுரைததாள (நற. 55·3 12). குனறததில வாழும குறவன

சாநதததைச் சுடுதலால எழுந்த நறுமபுகை, தேன் மணம கமழும் மலையிடமெலலாம பரவும (ஐங். 253 1, 2).

**2. சந்தனச் சாந்து.** தென்னவர் (பாண்டியர்) தென கடலிற பிறநத முததினை மாலையாக அணிநது வடமலையிற பெறற சாந்தம-சந்தனச் சாநது-பூசினர் (புறம. 380:1-5). இளஞ்சேரலிரும பொறை மாட்சிமை பொருநதிய வரிகளுடன விளங்கும சாந்தம பூசபபெறற மார்பை உடைய வன (பதி. 88.30). தலைவன் குளிரநத சிறந்த சாநதம மணககும் சேரிப்பரததையின் தோளைக கூடி அவளிடததே தஙகுவானாயினான (அகம். 186:10-13). முசுணடை எனபான பாணர் வேண டின பொறபூணினைக கொமபில சேர்த்துப பொனனரி மாலையினைக் கழுத்தில் அணிவிததுச சாநதம் பூசிய இமிலுடைய ஏறறொடு களிறும தேரும் வழஙகுவான (அகம். 249:4-9). தலைவன வினை முடிதது, புலவர் பாராட்டும விழுபபுண் கொணட, மாலையணிநத தன மார்பிடததே சாந்தத்துடன நுணணிய பொடிகளை அணிய வெனறிகொள் உவகையுடன் இலலம் புகுநதான் (அகம. 354:9-11). தலைமகன, தலைவியின ஊட லைத் தீர்கக விரும்பித் தெருவில தேரை இழுதது நடைபயிலும் சிறுவனை எடுத்து மாரபோடு அணைதத போதுசிறுவனின வாயநீர ஒழுகுதலால அவன மாரபிற் பூசியிருந்த சாந்தம் சிதைந்தது (நற. 250:2-4). தலைவன, வினைமுடிதது மீளுங் கால இடைச்சுரத்துக் கண்டோர், 'தன காதலியை ஆறறுமாறு இததலைமகன் தன் மார்பிற் பூசிய சாந்தத்தினும குளிர்ச்சி உடையனாய் வரு கினறான' எனப் பாராட்டியுரைத்தனர் (நற. 394: 7-9). தன் புறத்தொழுககததை மறைதத தலைவனிடம் தோழி, 'சாந்தம் கமழும் நின்னு டைய மார்பு, வண்டுகள மொய்க்கும்படி நறுமண முடையோளின (பரததையின) கூந்தல மணம் கமழ்வதால் நின் ஒழுக்கததை யாம் அறிவோம்' என இடிததுககூறினாள் (ஐங். 240) 'மணபபொ ருள் பலவும கூட்டிய நறிய சாந்தம், மலையில் பிறநததாயினும மலைககுப பயனபடாது, மெய யில பூசுபவாககே பயனபடும; அதுபோல நும மகளும பயனபடும பருவதது நுமக்குப பயன படாள்' என முககோறபகவா உடனபோய மக ளைத தேடும செவிலிககுக் கூறினர் (கலி. 9: 12-14). பரததையரின முயக்கததால தலைவன மலாநத மாரபிற பூசிய சாநதம் பாடழிநதது; அதுவே தலைவனின் உட்பகையாய அவன பரத தைமையைத் தலைவிக்குக் காட்டியது (கலி. 73:12, 13). சேரியில உள்ள மையுணட கண்ணாரின (பரத்தையரின்) முயக்கததாலே பாடழிந்த, சிதறு தலபட்ட சாநதமுடைய தலைவனின் வடிவு கணடு தலைவி ஊடினாள் (கலி 91:12-15). 'வணடுகள் ஊதும் சாநதத்தைக கை வடுககொளப் பூசிய அகனற மார்பினையும் பரததைமைக் குணத்தினை யும் உடையவனே' எனத தலைவி தலைவனை விளித்தாள (கலி. 93.1,2). மதுரையிலிருந்து திருப் பரஙகுனறம் செல்லும தலைமகளிர் வழிபாடு செய வதற்குரிய சாநதம், புகைததற்குரிய பொருள் விளக்கு, மலர், முழவு முதலிய பல பொருள்களை, யும் ஏந்திச சென்றனர் (பரி. 8:96-102) வையை யில வெள்ளம பெருகிட, நீராடச் செலவோரிற சிலர் தாம பூசியிருந்த சாந்தத்தை மாற்றி அகிற் குழம்பு பூசினர் (பரி. 12.13, 14). அடியவர் கோல் விளக்கும் இசைககருவியும சாநதம முதலிய நறு மணப்பொருள்களும சுமந்து திருபபரங்குன்றம சென்று கடம்பினை வாழ்ததி முருகனை வழிபட்ட னர் (பரி. 17:1-5). திருப்பரங்குன்றம், ஆடவர் மலையையொத்த தம் மார்பில பூசிய சாநதத்தின் குளிர்ச்சியையும் நறுமணத்தையும் ஏற்றுவரும் காற் றினை உடையது (பரி. 21:46, 47). வையைப புதுப்புனலாட மதுரை நகரத்து மகளிரும மைந தரும் முனனே செனறனர்; அவர் பின் சிலர் பதது வகைத் துவாகளையும புகைககபபடும் பொருள்க ளையும சாந்தததினையும் எடுத்துச் சென்றனா (பரி. 22:17-20).

**3. சந்தன மரம்.** வாழைக்கனி, பலாச்சுளைச் சாறு இவற்றால ஆய கள்ளைச் சுனைநீர் என்று கருதிப பருகிய ஆண்குரங்கு, மயக்கததால் தனக் குரிய சாநதத்தில-சநதனமரததில-ஏறமுடியாமல் மலர் அடுக்கால இயன்ற படுக்கையில துயிலும் (அகம. 2:1-7). நீணடு வளர்நத, சிறிய இலைகளை யுடைய சாநதததின மெல்லிய கிளைகள் தீணடு மாறு மலையின் பிளபபுக்களிடததே தேன் இறால தொங்கும (அகம. 242:19-21). யானையின கொம பினைக கொண்டு பொன்னை அகழ்நதெடுககும் கானவன, அப்பொனனையும் பொன்னுடன வெளிப்போநத ஒளிபொருநதிய மணிகளையும் யானைக்கொம்பு ஒடிதலால அதனினறும சிநது கினற முததுக்களையும சாந்தத்தைக காவு மரமா கக் கொணடு மலையினினறு எடுதது வநதான (அகம. 282:1-10). மலையில வாழும் குறவர் அறியா மையால மேறபட்டையை அறுதத சிறிய இலையை யுடைய சாந்தம், அறுபட்ட வழியே நீர் வடிநது

உலாந்து கெட்டது (நற். 64:4 7). சிறிய கிளை களிலே பூங்கொத்துககளையுடைய சாநததநின கட்டையொடு பலவாய பொருள் சேர்ததமைதத சாந்து பூசிய கூந்தலையுடையவர் தோழியர் (நற். 140:2-5). சாந்தததினின்றும் போநத நறுமணம் கமழும் மலைபபிளபபினையுடைய துறுகலலின் அயலிலே உள்ள சிறிய நெறி வழியே இரவுக குறியில் தலைவியைச் சந்திககத தலைவன் வநதான (நற் 261:8-10). சாந்த மரத்தின இடையே எழும அகிற்புகை சந்தன மலரின மணததோடே விரவிச சிறநத கலவை மணமாகக கமழும் நாட்டையுடைய வன தலைவன் (ஐங. 212:1, 2). தலைவியும ஆயத் தாரும் ஐவனமாகிய வெணணெலலைப பாறை யாகிய உரலிலே பெய்து, யானைத தந்தத்தாலும் சாந்த மரததினாலும் பண்ணின உலக்கைகளாலே குற்றிப பாடும் வள்ளைபபாடலுள முருகனைப பாடுவார் போல இருவாககும பொருநதத தலை வனைப பாடினர் (கலி. 43:1-7)

**சாந்தாற்றி** - விசிறி வகை. மேகம் ஒலிககினற போது தம இரண்டு சிறகினையும சாநதாற்றி - விசிறி - போல விரிதது மயிலகள் ஆடின (பரி. 21 30-32).

**சாந்தி** - சாந்தப்படுத்தும் சடங்கு. இளஞ்சேரலிரும பொறை அரிய திறலுடன் நாற் சநதியில விரும்பி யிருககும கொடிய பூதங்களை இவவுலகில கொணடு வந்து நிறுததி, நூல்களிற் சொலலப்பட்ட முறைபபடி கிரகஙகளுக்குச் சாநதி - சாநதபபடுத் தும் சடங்கு - செயது உயிர்களைக் காதத செங் கோலை உடையவன (பதி. ப. 9. 13-16).

**சாந்து** - 1. சந்தனச் சாந்து. கருங்கையொள்வாட் பெரும் பெயர் வழுதி பொற்கழல் அணிந்த காலி னையும் பூசிப்புலாநத சாந்தம் - சநதனச சாந்து - பொருநதிய குறுக்கே அகன்ற மார்பினையும் உடை யவன் (புறம். 3:13-16). இராசசூயம வேட்ட பெருநறகிள்ளி புலால நாறும வாளினையும பூசிப் புலர்நத சாந்தினையும் முருகனை ஒதத சீறறததை யும் உடைய தலைவனாவான (புறம். 16:11, 12). 'நினனைச் சூழ்ந்த பாணரின இசைகேட்டு மகிழ்ந்த பினனர், சாநது பூசிப புலர்நத நின அகலததை நின உரிமை மகளிரின தோள் சூழவதாக' என நலங்கிள்ளியை முதுகண்ணன சாததனார் வாழ்ததினார் (புறம். 29.6, 7). 'சாநது பூசப பெறற மார்பின்கண்ணே நெடிய வேல பாயந் தனவாக வேநதரும (குடககோ நெடுஞ்சேரலாத னும் வேல் பஃறடக்கை பெருவிறற கிள்ளியும) பொருது அக்களததே மாயந்தனா' எனப் பரணர் இரங்கிப் பாடினர் (புறம 63:9 10) குமணன சாநது பூசபபெற்ற பல நலல இலசகணம பொருந திய மேமபட்ட அழகிய மாாபினை உடையவன (புறம. 161:26, 27). நம்பி நெடுஞ்செழியன் மணம் நாறும் குளிர்ந்த சாநதினைப பூசினான (புறம. 239:3). 'பெருவேநதன சினநதெறிந்த வேல என தலைவனின சாநது அணிநது மாாபில தைதது ஊடுருவியது எனச சீறூர் மனனனின மனைவி பாணற்குரைததாள் (புறம. 308: 6, 7) வெண்குடை என்னும ஊருககுரியவனான சோழிய ஏனாதி திருககுட்டுவன விற்பயிறசியால உயாநது அகனற தும சாநது பூசபபட்டதுமான மாாபையுடையவன (புறம். 394:1-3). சாநது புறததே பூசிய கட்குடங் களுககு இஞ்சியையும பூவையும கலநது தொடுதத வாடா மாலையைச சூடடினா (பதி. 42 10, 11) கடலபிறக் கோட்டிய செஙகுட்டுவன, பல வரி களையுடைய மாாபில பூசிய சாநது புலாநதது, பகைவா நாட்டைச சுடுதலால எழுநத தீபபட்டு அவன மார்பு மாலை வாடியது (பதி. 48:10-12) கடலபிறககோட்டிய செஙகுட்டுவன பகைமனனரை வென்று, தன மாாபினால பிணிககப்பட்ட மகளிரின பூசிய சாந்து புலரவும திலகம, கணணிலிட்ட மை முதலிய வண்ணஙகள் நீங்கவும் அவரை முயங கினான (பதி. 50:16-20). பாரி, பூசிபபுலாநத சாந தினை உடையவன (பதி 61 7,8) செலவக் கடுஙகோ வாழியாதன, மெயயில வடுவும தழும்பும உறுதலால சாநது எழில மறைதத உடமபையுடைய வீராகநத தலைவன ஆவான (பதி 67:17, 18) பெருஞ்சேர லிருமபொறையின பகைவா பூசிய சாந்து புலாநது அகனற மாாபினையும தொடி விளஙகும வலிய கையையும உடையவா (பதி. 80:5, 6). வில லால் கொலைபுரியும கானவர் நறிய சாநது பூசிய மாாபினை உடையராய, நெடிய மூஙகில குழாயில விளைநத கள தெளிவை உணடு குரவைக கூததாடு வர் (முரு 193-197). ஆய வள்ளல சாநதுபுலா திணி தோளையும ஆரவ மொழியையும உடைய வன (சிறு. 98, 99). படைத்தலைவா விளககதனை யுடைய வஞ்சிப பூவினையும பூசினவாறே புலாநத நறிய சாநதினையும அணிநதிருநதனா (மது 225-227). நறிய சாந்து பூசிய மாாபினை உடையராய யாகஙகளைச் செயது பெரிய சுவாககம செல லும சானறோரைப் போனறு காவிதி மாககள் ஒழுகினா (மது. 493-499). இரவு வநதவுடன தம கணவரைக் கூடும் பொருட்டு மகளிா நறிய சாந்தினை அரைத்தனா (மது. 547-549, 553). பெருஞ்செய ஆடவர் (மனடலஙகளை ஆளவோர்) பூசிய புலர்நத சாநதினையும விரவு

தலையுடைய பெரிய பூமாலையினையும உடைய வா (மது. 745, 746). தலைவன்சாந்து பூசிய தன அகனற மாாபில பூணும தாரும் அணிநதான் (குறி. 120-122). திருமாவளவன, புதலவர் ஓடிவநது ஏறி விளையாடுகையினாலும மகளிரின முலைகள புணாதலாலும சாந்து சிதைநத மார்பினன் ஆனான (பட். 295-297). தலைவனது நறும் சாந்து அணிநத கேழ் கிளர் அகலத்தைத தலைவி முயங்க விருமபினாள் (அகம. 26:13-15). இருங்கோ வேண்மான தேன்கமழ் அகலததுப் பூசிப புலர்ந்த சாநதினையுடையவன (அகம. 36.18, 19). தன மார்பில சிவநத சாந்தணிநத தலைவன் வேட்டை யாடினான (அகம். 48:11, 12). தேரில கட்டப் பட்டு விரையும் குதிரையின் வாயிலிருந்து சிதறும தெவ்ட்டல் சிலமபியின் நூலபோலச் சிதறித தலைவனின் சாந்து புலர் மார்பில் வீழ்நது மறுச செயதது (அகம. 224:5-9). இரவில் சாநதும் பட்டும ஒளிசெயய, மகளிர்போல நாணியிருந்த பரத் தைமைத தலைவனைக கண்ட தலைவி ஊடல நீங்கினாள் (அகம. 236.10-13). 'கடற்பரபபில உள்ள எம ஊாககண தஙகுவையாயின வடவர் கொணர்நத வெள்ளிய வட்டககலலில் பொதிய மலையின சந்தனககட்டையுடன பிற மணப பொருள்களும் கூட்டியுணடாககிய நறிய சாந் தினை அணிவிப்போம' என்று தோழி தலைவ னிடம கூறினாள் (அகம். 340.16-18). 'என அம்பு பட்டுத் தபபி வந்த யானையைக கணடீரோ' என வினவிய தலைவனின சாந்து பொருநதிய அக லததை நினைநது தலைவி வருந்தினாள் (அகம். 388:10-17). மலைநாடனின சாநது புலர் மார் பினை நினைநதால உள்ளததின்கண் காமநோய பெருகும எனபது தலைவி கூற்று (குறு. 150:3, 4). தலைவன, மலையில விளையும சிவந்த சாநதினை யும முததுமாலையினையும அணிநதவன (குறு. 321:1). பாணடியன பூவாலாகிய குளிர்நத மாலை யும புலர்நத சாந்தும அணிநதவன (கலி. 57:8). பரத்தை, தனனுடன் தலைவன் கூடியதைத் தலைவி அறியுமாறு அவன் மார்பில சாந்து பூசி னாள் (கலி. 79.9, 10). 'ஏநதெழில மார்பனே, சாநது அழிதறகுக காரணமான வேர்வையை உடையையாதலால எவ்விடததே சென்று வந் தாய' எனத தலைவி பரததைமைத் தலைவனை வினவினாள் (கலி. 96.3, 4). பிருங்கலாதன திரு மாலைப புகழ அதுகேட்டுப புகைந்த நெஞ்சும புலாநத சாநதும உடைய இரணியன் அவனைப் பிணிததான (பரி 4:10-12). மகளிரின படலை மாலையும் குலைந்த மயிரும் ஆடவரின் மார்பில் பூசின சாந்தினைச சிதைத்தன (பரி. 6:19). வையையில புனலாடச் சென்ற மகளிர் பனிநீா கலநத சாநதினை எடுத்துச சென்றனர் (பரி. 10:13). வையையில நீராடும் மகளிரிற சிலர் மாலை, சாநது, கததூரி, அணிகள் ஆகியவற்றை நீரில் இட் டனா (பரி. 10: 92, 93). இனிய மணமுடைய சாந் தினை உடையது வையை (பரி. 11: 27, 28). வையையில நீராடிய மகளிரின் மார்பினின்றும் வழிந்து வீழநத மணமுடைய சாந்தினால வையை யாற்றின் மணல சேறாம தனமை பெறறது (பரி. 12, 96, 97). அரக்குநீர் பட்ட ஆடையுடையா ளைத தலைவன நெருஙகியபோது, 'இவள் பூப பெயதினாள்; இவள்பாற் செலலற்க' எனப் பொய யாகக கூறி நகைததனா; தலைவன, அவள்மேல உள்ள செஞ்சாந்தின நாற்றததால உண்மையினன தெனை அறிநதான (பரி. 16: 20-26). நீராடும் பரத் தையரை அடுததடுத்துப் புலவியமையால் அழிந்தும அழியாததுமாகிய மானமதச் சாநது பொருநதிய மாாபுடன தலைவன காணப்பெற்றான (பரி. 16: 43, 44). மகளிரும் மைநதரும் இனபம வேணடிக் கையுறையாகிய பொன்மீன முதலியனவும சாநதும மாலையும புகையும உண்டியும் வழங்க, மழை இடையறாமல் பொழிநது வெள்ளம் பெருகி வருக என நல்லழிசியார் வையையை வேணடினார் (பரி. 16: 50-55). கூடலுககும் பரஙகுன்றத்திறகும இடை யேயுள்ள தொலைவு மிகக குறைவு எனினும் சமழும் நறுஞ்சாநது அணிநத மகளிரும் மைந்தரும நெருஙகிய விளையாடுதலால மிகச் சேயதாகத தோன்றியது (பரி. 17:23-25). சாநதும் மாலையும் கோதையும சுண்ணமும மகளிர் கூந்தலினின்றும் மைந்தர் குடுமியினின்றும சோர்நத பூவும் நிறைந் திருததலால் வையையாற்றின் நீரின் நிறம தோன்ற விலலை (பரி. தி. 2: 84-86).

2. மயிர்ச்சாந்து. சாந்து – மயிர்ச்சாந்து – பூசிய வளைந்த கொத்தாகிய கூந்தலை வாரித் தாய் மலர் களை இணைக்கப் புகும்பொழுது அதற்கு உடன படாளாய் நின்ற தலைவியின நேற்றைய நிலையை மகட்போக்கிய தாய் மறுநாள் நினைக்கிறாள் (அகம். 117: 10, 11). நெறிநத கொத்தாக உள்ள சாநது அணிந்த கூந்தலை ஆற்றி மகளிர் போது அணிவர் (அகம. 389: 1, 2). தலைவியின கூநதல் சாந்து அணிநதமையால் இருள்போல கருமையாக இருந்தது; (அகம. 399: 1, 2). இரவுககுறியில் தலைவன சூட்டிய மலர்களை உதிர்த்துவிட்டுத தலைவி விடியற காலத்தில் சாந்து பூசிய நறிய கூநதலில எண்ணெய நீவித தமருடன் ஒழுகா

நினறாள் (குறு. 312: 5-8). களவொழுககம் வெளிப் பட்ட நிலையில தலைவி சாநது பூசி உலர்ததின மயிரை முடிதது ஆடையைக கையால தழுவி அச் சத்தால தளாநது நடநது சென்று பககததில இருந்த கானததில ஒளிநதாள (கலி. 115: 12-15).

3. துவையல். கைம்மை நோனபால் வருநதும் பெண்டிர் நீர்ச சோற்றுத் திரளுடன் வெள்ளிய எள்ளினை அரைத்த சாநதுடன்-துவையலுடன - வேளையிலைக் கறியை உணபர் (புறம். 246.6-8).

4. சந்தனமரம். இளஞ்சேரலிரும்பொறை, சாந்து- சந்தனமரம்- கொண்டு வரும வானி என்னும ஆறறு நீரினும இனிய தணணிய மெனமையுடை யவன (பதி 86: 12, 13). தேனீககள் தாமரையின தணணிய தாதினையும சந்தனததின் தாதினையும ஊதிச் சாநதிலே தொடுதத தீநதேன போலத் தலை வர் நட்பு இனியது; சிறநதது என்பது தலைவி கூறறு (நற் 1:3-5). சாநது மிகுதியாகவுடைய உயர்ந்த பெரிய மலை (நற். 328. 9, 10). குனறி னிடத்தில சாநதினால செயது புலிததோலால் வேய்ந்த பரணில் இருந்து தலைவி புனஙகாததாள் (நற். 351·6-8) குறிஞ்சி மகளிா தினையைச் சாந் துரலில பெய்து யானைக கொம்பாலாய உலக் கையாற் குறறினர் (கலி. 40.3-5). வையையில நீாபபெருககினால அதன கரையின மேல மிளகுக் கொடி, சாநது, நுரை முதலியவற்றை அலைகள் வீசின (பரி 16:2, 3). வாடைக காலத்தில வெள்ளிய நிறததையுடைய வட்டககலலும சாநதும மக்க ளால ஒதுக்கப்பட்டன (நெடு. 51, 52).

**சாபம் – வில்.** கரிகாற் பெருவளத்தான் கண்ணிற்கு விளங்கும அழகிய சாபம - வில - பொருநதிய வன் (புறம். 7:4). செலவக கடுஙகோவாழியாதன அமபறாத தூணியுடன தோமேல நின்று சாபத தின வலிய நாணினால வடு உணடாகுமபடி அம்பைச செலுததினான (புறம். 14·8, 9). தலை யாலங்கானததுச செருவென்ற நெடுஞ்செழியன குறுநதொடி களைநத கையினகண சாபம பறறி நெடுந்தேரேறிப் பொலிவுடன நினறான (புறம். 77: 4, 5). பல்யானைச செலகெழு குட்டுவனின படை மறவா போர் விருப்பததால எபபொழுதும் நாண ஏற்றியே கிடககும சாபத்தை உடையவர் (பதி. 24: 12). இளஞசேரலிரும்பொறை, மாட்சிமைப்பட்ட தொழிலையுடைய சாபத்தை மார்புற வளைதத வலிமை பொருந்திய கையையுடையவன (பதி. 90: 32, 33). பாலை நிலதது வீடுகளில மறவர் வேலி யைப பலகையுடன நிரைதது வைத்துத் தலை யிலே முடிந்த நாணையுடைய சாபததைச சாத்தி வைததனா (பெரு. 119-121). பெருங்கை வேழம அச்சஙகொணட சாபத்தினின்றும [எயயுங கணைககு அஞ்சிப பிளிறும (நற. 228.6-8). தேவர் கள் முருகனுககு அளிதத படைகளுள இலசசினை யிடபபட்ட வரிநத சாபமும ஒனறாம (பரி. 5·65).

**சாம்பல் – வாடல்.** இல்லததே தஙகும குவிநத சிறகுக ளையுடைய குருவிகள ஆமபல பூவின சாமபல- வாடல-போனறு காணபபெறறன (குறு. 46 1,2).

**சாம்பு - படுக்கை.** வரிநத கழிகளிடததே வரககு கறறை களை வேயநது சாமபு - படுககை-அமைததனா (பெரு. 150).

**சாமரை - சுனனப்பூ** (காதணி). கீழே தொங்கும இயல புடைய சாமரை-சுனனபபூ-பெணகள் காதணியா கும (கலி. 96:11).

**சாமனார் - காமன தம்பி.** ஆண பெண்[ழ]விழைவுககுக காரணமான கணையையுடைய காமனின தமபி சாமனாா (கலி. 94:33, 34).

**சாய் - மென்மை.** ஆடுகோட்பாட்டுச சேரலாதன நறவு என்னும ஊரினகண சாய-மெனமை-வாயநத மகளிரினததிடை இருநதான் (பதி. 60:12). பெருஞ் சேரலிரும்பொறையின தேவியர் சாய வாயநத அறல போனற கூநதலையுடையவா (பதி. 74:3).

2. செறும்பு. (சிலாமபு) கரடி, கரிய பனையின புலலிய சாய்-செறுமபு-போனற கருதத மயிரினை யும உடமபினையும உடையது (முரு. 312, 313). பொயகையிலுள்ள யாமை கழனியில உளள கமரு பின சாயப புறம ஊாநது சென்று இளமவெயிற காயும (அகம். 306.6, 7).

3. கோரை. பசிய சாயை-கோரையை-அடியிலே குத்தி எடுதத மண கிடககினற கொமபையுடைய கரிய கடாககள் தம்மிற பொருதன (பொரு. 209, 210). மருத நிலததில உணடான பசுமையுடைய சாயினைப பலலால மென்று கிழிதது நாரால மாலை கட்டுவர் (பொரு. 216-218). பனி தஙகிய சாய உடைய களனெலலாம நெறகட்டுகள் நிறைந திருநதன (அகம். 236:5, 6). பெணடிர் சாயை அழ கிய வளையலாகப பூணுவா (நற். 60.9-11). கரிய நிறமுடைய சாயுடன செருநதியாகிய நெட்டிக கோரை கரும்புபோலச சுழலும (ஐங. 18.1,2)

துனபம கெட உணபர், உண்டு, மழையில் நனைந்த பருநதினது ரச்சிறகை யொததனவாகிய மண ஙழுககேறிய சிதாஅரைக் களைநத பினனர் படடாடைகளை இடையிலே உடுததிக கொள்வர் (பதி. 12.9-21). சோழன கரிகாற பெருவளததான தனனைப பாடிவநத பொருநனது, ஈரும்பேனும் நிறைநததும் வோவையால நனைநது வேறறிழை களால தைககப் பெறறதுமாகிய சிதாஅரை நீககி மெலலிய பூநதுகிலைக கொடுதது உடுபபித்தான (பொரு 79-83). 'நீவிர கரிகால வளவனையணுகித தொழுது முனனிறபீராயின அவன, பாசியின் வேரபோல அழுககோடு கிழிநது தையலையுடை யனவாகிய நும சிதாஅரை நீககித் தூய பட்டுடை களை நலகுவான' எனப பொருநா ஆறறுப்படுத்தப் பெறுகினறனா (பொரு. 148-155). பாலைநிலப் பாறை வழியில தூது செல்லும பார்ப்பானின கையிலிருந்த ஓலைச்சுருளைப பொன்னாயிருததலும கூடுமெனக கருதி அவனைக் கொனற ஆறலைகள் வராகிய மழவர், அவன தகைமையிலலாத சிதா அரை உடுததிருககும வறுமையை நோககிக கையை நொடிததுப புறம போயினர் (அகம. 337:6-13).

**சிதார் - சிதறிய துணி (கநதையுடை).** 'கூதிர்காலத்துப் பருநதின கரிய சிறகையொதத கிழிநத சிதாரை-சிதறிய துணியை-உடையேனாய் யான என சுறறத் தோடு காட்டு வழியில பலாமர நிழலில அமர்ந் திருந்தேன்' எனறு தொடங்கி வனபரணர்கணடீ ரககோப்பெரு நள்ளியைக கணட நிகழச்சியைப் பாணா கூற்றில பாடியுள்ளார் (புறம. 150.1,2).

**சிதை - சிதைவு.** பிரிநத தலைவன் குறித்த பருவத்து மீளாமையால் கலககமுறற தலைவி கணடோரிடம கூறுகையில், 'எனனைச சிதை-சிதைவு செய்தவன் இவன்' எனறு தலைவனைச் சுட்டிக கூறினாள் (கலி. 142:19,20).

**சிதைத்தோர் - அழித்தோர்.** மகளிருடைய கருவைச் சிதைததோர்ககும-அழிததோர்ககும்-அவர் செயத தீமையை ஆராயுமிடதது அதனைப்போக்கும் கழு வாயு முணடு; நிலமே கீழ மேலாகப புடைபெயர் வதாயினும ஒருவன செயத நனறியைக் கொன றோர்ககு நரகம் செலலுதலினின்று தப்பிககும் வழியிலலை (புறம். 34:2-6). 'காரகாலததிறகுரிய பெருமழை வந்த இநநிலையிலும் தம் பிரிவினால் பொனனை யொதத என் மேனியின நலததைச் சிதைததோராகிய தலைவர் வநதிலராயின இனி நம் உயிர் நிலை எனனாம்' எனத் தலைவி ஆற றாது தோழியிடம் கூறினாள் (குறு. 139:5-8).

**சிதைப்போர் - அழிப்போர்.** முனனோரால தேடி வைக கப பெற்றுள்ளதாகிய செலவததைச சிதைப்போர்-(செலவு) அழிபபோர்-செலவரென்று உலகததோ ரால் சொலலப்பட மாட்டார் (குறு. 283:1)

**சிதைவு - 1. நெஞ்சழிவு.** தலைவனிடத்துக் காதல் கொணட தனது சிதைவினை-நெஞசழிவினை-செவிலி அறிதற்கு அஞ்சித் தலைவி, இலலததின காவலைக் கடநது தலைவனுடன் போனாள (அகம். 7:8-13).

2. மெலிவு. விருப்பததிறகுரிய பிடியானையை இழந்த களிறு தழையுணணாது வாடிய வாட்டத தைப போல், தலைவியை அடையாமையால் தலை வன தன அழகிய உடலினது சிதைவினை-மெலி வினை-நனகு அறிந்தும வெறுப்பினறித தோழி யிடத்துத் தலைவியை வேண்டிப பினனின்றான (அகம. 392:2-5).

3. கேடு. மரககலங்கள் தாம சென றவிடங்களில் தமககொரு சிதைவு-கேடு-நேராமல் தாம போன வினை வாய்ககப பெறறு வநது தலைமையெயதி நிறகின்ற கடலதுறையினை உடையவன தலைவன (கலி. 132:6,7).

**சிந்துவாரம் - கருநொச்சி.** தலைவியும் தோழியும் பறிததுக்குவிதத மலர்களுள் சிநதுவாரமும - கரு நொசசியும் ஒனறாகும் (குறி. 89).

**சிந்தை - சிந்தனை.** 'முந்தைநாட் போரில் தமையன் எதிர்தது வநத யானையைக் கொன்று தானும களததிலே மாண்டனன; நேற்றைய போரில கொழுநன் பெரிய ஆனிரைகளை மீட்டு அவ் விடததே மடிநதனன; இன்னும் போர்பபறை கேட்டு விருப்புற்று மயஙகித தனககு ஒருமக னல்லது வேறு மகனில்லாத மறக்குடித்தாய் அவனைப் போர்முகம நோககிப் போகவிடுககின றாள்; இவள் சிநதை-சிநதனை - கெடுக; இவள் துணிவு மிகக்கடிது; இததகைய இவள் மூதில மகளாதலும் தகும்' எனறு ஒக்கூர் மாசாத்தியார் மறககுடிப பெணணொருததியின மாணபினைப் பாடுவார் (புறம். 279).

**சிமயம் - மலையுச்சி.** தேனடை பொருந்திய சிமயத் தின்-மலையுசசியின்-பக்கத்தில முசுண்டைககொடி யின வெணபூக்கள் விணமீனகளைப போல் நள்ளிர வில் பூததிருககும (அகம. 94:1-3) சிமை 1, சிமையம: காணக.

**சிமிலி** - நூலுறி. மதுரை அமண் பள்ளியில ஆனறடங்கிய அறிஞர் நோனபு நோறறறகு ஒடுஙகிய வாயையுடைய குணடிகைககளைப பல வடங்களையுடைய சிமிலியில-நூலுறியில்-தொங்கவிட்டவாறு கூடினர் (மது. 481-483).

**சிமை** - 1. மலையுச்சி. 'முருகனையொக்கும் பெரிய வெற்றியையுடைய பாரியின், அசைந்த மூங்கிலகள் இழைந்து ஒலிககினற உயாந்த சிமையை-மலையுச்சியை-உடைய நாடு, முனபு வருநதவேணடாத, புது வருவாயையுடையதாய இருநதது; இனிஅது கெடும் போலும்' என்று அவனது இறபபின் பினனர்க் கபிலர் இரங்கிப் பாடினாா (புறம். 120:16-21). 'உயர்நத சிமையை உடையதான நாஞ்சில மலைககு வேநதே' என்று நாஞசில வள்ளுவனை மருதனிள நாகனாா விளிப்பா (புறம- 139.8). கண்டீரக் கோனின நாட்டில் வானளாவிய சிமையையுடைய மலைப் பக்கத்தில தம கணவன நெடுநதூரத்தே சென்றிருபபின், பாடுவார் விரும்புமாறு அணிகளை அணிவித்துப பிடியானையைப் பரிசிலாகப் பெண்டிரும் தமமளவில் கொடுப்பர் (புறம். 151:1-6). முழையமைநத சிமையையுடைய உயர்நத பெரிய கொலலி மலைக்குத தலைவன வலவிலோரி (புறம. 152:30,31). மிகக்குளிர்நத மலையில இருள் செறிநத பெரிய முழையினையும தெய்வம காககும உயர்ந்த சிமைகளையுமுடைய மலை நாட்டினையுடையவன பேகன் (புறம. 158 10-12). இழுமென இழியும் அருவிகளையுடையதும வானளாவ உயாந்ததுமான சிமையமைநதது தோன்றி மலை (புறம. 399:33,34). கேடகங்கள சூழ அவற்றிறகு மேல உயர்நது தோனறும் வேற்படை விடியறகாலத்தே மேகக கூட்டம சூழ்ந்த சிமையை ஒததிருததல் (பதி. 66: 11,12). இளஞ்சேரலிருமபொறையின மார்பு, வானைத் தொடுகின்ற உயர்ந்த சிமைகளையுடைய பெரிய மலையினை யொக்கும (பதி. 88.34,35). தேனிறால தொங்குகின்ற உயர்ந்த சிமை பொருந்திய மலைகள தோன்றி விளங்கும் அகலமுடைய ஞாலம் (மது. 3,4). மேகம் தவழும் சிமையையுடைய மலையிடத்தே உலாவும் வருடைமானின் தோற்றம போலக காவிரிப்பூம்பட்டினததுப் பண்டசாலையில் பண்டங்கள் பொதிநத மூடைபபோர்களில நாயகளும ஆடுகளும் ஏறிக் குதித்தாடின (பட. 136-141). வானளாவிய சிமையையுடைய மலைச்சாரலில் மரைப்பசுவை வலபபக்கததே வீழுமாறு கொன்று வீழத்தி அதன் ஊனைக் குருதியுடன் கலநதுண்ட புலி, எஞசியவற்றை விட்டுச் சென்றது (அகம. 3:6-9). தலைவியைப பிரிநது தலைவன் மேகம படியும் சிமைகளையுடைய மலைநெறிகளில பொருள் கருதிச் செல்வான (அகம 119:20). பொதியில் மலையில அடைதற்கரிய சிமையிலிருந்து அருவி இழியும் (அகம. 138:7,8). மேகம தவழும உயர்நத சிமையினையுடையது குதிரைமலை (அகம. 143:13). உயாநத சிமையினையுடைய நெடிய மலைச சிகரததில இடி முழங்கும் (அகம. 145 9). வானதது இடியொலிககும உயர்ந்த சிமையினையுடையது குறுமபொறை என்னும மலை (அகம். 159.13,14). பெரிய மலை வானளாவிய சிமையினையுடையது (அகம். 179:1). முதிய முசுக்கலை மிளகின தளிரையுணடு வெறுதது, உயர்நத சிமையினையுடைய நீணட மலைச் சிகரங்களில் தாவியாடும் (அகம. 182.14,15). மேகம மழை பெயயா தொழிநதமையால அருவிகளறற உயாநத சிமைகளில் இலவ மரஙகள் இலைகளின்றி மலர்ந்திருநதன (அகம. 185:2-12). வலிய மேகத்துடன இடி தஙகுகின்ற உயர்நத சிமையுடைய பெரிய மலைநாடன் தலைவன (அகம. 192:13-15). நடு இரவில் மேகம பெரிய மலையின குளிர்நத சிமை அதிருமாறு சூழநது, மினனிப பரநது, மழைத் துளிகளைச சிதறி முழஙகும் (அகம. 218:3-6). பருநதுககூட்டம் தங்கியிருக்கும் நெடிய சிமையையுடைய சிகரமுயாந்த மலைநெறிகளைக கடந்து, தலைவன் பொருள்வயிற பிரிந்து போனான (அகம. 247:12,13). உயாநத சிமைகளையடுதத வழிகளில நெல்லிக்காய்கள் உதிர்ந்து கிடககும (அகம. 291: 15-17), உசசிப் பாறையிலுளள இனிய தேனை அறுததெடுகக முயலும குறவரும் எயதியறியாத ஏறுதற்கரிய நீணட சிமையினையுடையது பொதியில மலை (அகம. 322 12-14). ஞாயிறு காயதலால மூங்கில கணுககளுடைநத சிமைகளையுடைய மலைநெறியைக கடநது தலைவன பொருள தேடிச சென்றான (அகம. 399:16-18) தாயை யிழநத குட்டியுடன ஆணபனறி கானவருடைய தினைப புனததை மேயநது விட்டு, மூஙகில ஓஙகி வளாநத உயாநத சிமையினகண உறஙகும (ஐஙு. 268.1-3). மழையால வருநதிய கிடடுதற்கரிய சிமைகள தோறும உளள பெரிய மரஙகளை வேரபறிதது வீழததியவாறு வையை வெள்ளம சென்றது (பரி. 7:13,14). காற்றினால மோதபபடும உயாநத சிமைகளையுடைய மலையில் பெயத மழைநீர் பெருகுதலால மதுரைககும திருபபரஙகுனறததிறகும இடைப்பட்ட மருதநிலததுப பொழிலகள் தழைதது மிக மலர்நதன (பரி. 8.90-92). பெரிய நிலவுலகு அசையாமல வடதிசையில ஓஙகி நிறகும இடியேறு சூழநத நெடிய இமையச சிமையின கண தெயவமுனிவா அறுவரும உடனபட்டதனால காாததிகை மகளிா அறுவரிடததில மணி

மிடறு அண்ணலாகிய சிவபெருமானுக்குத் தோன்றியவர் செவவேள் (பரி. 9'1-7). மேகங்கள் மழைபொழிந்த நீர், தேனிறால நிறைந்த சிமைகளையுடைய மலைகளிலிருந்து இழிந்து மதுரை மக்கள் எதிர்கொள்ளும்படி வந்தது (பரி. தி. 1:1-4). சிமயம், சிமையம் காணக.

2 உச்சி. கலந்த பல பூக்கள் செறிந்த சிமையினை - உச்சியினை - உடைய பொழில்கள், குளிர்ச்சியைக் கொண்ட கொம்புகளையுடையனவாய் அவற்றில நின்ற மழைத்துளிகள் இடையறாது வீழுமாறு மழை நிறைந்து கூதிர்க்காலம் நிலைபெற்றது (நெடு. 27,28,71,72). உயர்ந்த சிமையினையுடைய சோலை (அகம. 190:6,7). தேனிறால தொங்குகின்ற நெடிய சிமையையுடைய மூங்கில நிறைந்த மலைநாடன தலைவன் (அகம. 242.21,22). பனையின உச்சியிலுள்ள நெடுமடல குருகதோடு சேர்ந்து மறையுமாறு கடுங்காற்றுக் கூட்டிய மணற் குவியலாகிய தொகுதிகொண்ட சிமைகளையுடையது கடற்கரைச் சோலை (குறு 372:1-3). சிமையம் 2 காணக

**சிமையம் - 1. மலையுச்சி.** நெடிய பெரிய (இமையத்தின்) சிமையத்தின் - மலையுச்சியில - தருப்பை வளர்ந்த பசுஞ்சுனையிடத்தே வான, காற்று, தீ, நீர், நிலம் ஆகிய ஐவருள் தீக்கடவுள் தன் கைகளில் ஏறப அருந்ததி யொழிந்த கற்புடைய மகளிர் அறுவரால பெறப்பட்ட ஆறுவடிவம் பொருந்திய செல்வன முருகன் (முரு. 253-255) செம்மலையாகிய மேரு, இமையவர் உறைகின்ற சிமையத்தையுடையது (பெரு. 429). பாண்டியன் நெடுஞ்செழியன் பனியொழுகும சிமையத்தின்கண் உள்ளனவாகிய காடுகளைக் கடந்துபோய்ப் பகைவர் நாட்டினுள் புகுந்து அவருடைய அரண்களைக் கைக்கொண்டான் (மது. 148,149). உயர்ந்த சிமையத்தின்கண் முசுக்கலைகள் தாவியாடும (மது. 332). வேனிற்காலத்து ஞாயிற்றின் கதிர்கள் காயந்து கெடுத்த வெப்பம் மிக்க காட்டின்கண் கடுங்காற்று வீசுதலால மூங்கிலில தோன்றி விளங்கிய தீ பரவிப் பசுமையற்ற சிமையத்தையுடைய பயனற்ற அருவழியில தலைவி தலைவனுடன போனது குறித்துச் செவிலி இரக்கமுற்றாள் (அகம. 153:4-13). இரவின கடையாமத்தில் வாயிலில நின்று தேன நிறைந்த சிமையத்தையுடைய தன குன்றத்தைப் பாடுகின்ற அகவுநர் விரும்பினால் வெளியன் வேணமான ஆஅய எயினன அவர்க்குத் தலைமைத் தன்மையுள்ள யானையை ஈவான் (அகம. 208: 1-5). குறுகிடுகின்ற பெரிய சிமையத்தையுடைய மலைக்கு அப்பால் வேறுபட்ட பல மொழிகள் வழங்கும் தேயத்தைக் கொள்ளக் கருதித் தலைவன தலைவியைப் பிரிந்து செலலத் துணிந்தான (அகம. 215:1-5). 'பனி உறைந்த சிமையத்தையுடைய பல மலைகளைக் கடந்து தலைவா பிரிந்து செல்வாரோ' எனத் தலைவி தோழியை வினவினாள் (அகம்.329:9,14). 'உன்னைப் பிரியேன' என்று வஞ்சினம் மொழிந்து நம்மைத் துறந்தவராகிய தலைவர் நினைந்திலராயினும அவா நாட்டு நெடுமபெருங்குன்றத்தின வானளாவும சிமையம் காணப்பெறுதலால அதனைக் கண்ணுறறவாறே யான உயிர்தாங்கி யிருக்கின்றேன' என்று தோழியிடத்துக் கூறுபவள் போலத் தலைவன் கேட்பக் கூறினாள தலைவி (அகம. 378.18-24). சிமயம, சிமை 1 காண்க

2. உச்சி. மரம், செடி, கொடி போன்றவற்றின் சிமையத்தில் - உச்சியில - மலாந்த பூங்கொத்துக்களைச் சூடி, இமையமலைக் காடுகள போல மணம் கமழும் கூந்தலையுடையவள் தலைவி (அகம். 399:1-3). சிமை 2 காண்க

3. மேடு. நீர்த்துறையில் புனல்விளையாடும் மகளிர் மணல குவிந்த சிமையத்தின்கண-மேட்டின்கண்-இட்டு மறந்துவிட்ட ஒளிபொருந்திய அணிகளை எருமை கிளைக்கும் (ஐங். 100.1,2).

**சிரகம் - கரகம்** (செம்பு). தலைவி எதிர்பாராத அளவில் அவளது மனைக்குள் புகுந்த தலைவன் பருகுதற்கு நீர்வேண்டினானாக, அவளுடன இருந்த அன்னை, 'தகட்டுப பொன்னால் செய்த சிரகத்தினால் - கரகத்தினால் - நீரை வார்த்துச் சென்று அவனைப பருகச் செய்து வா' என்று அவளை ஏவினாள் (கலி. 51:4-8).

**சிரந்தை - உடுக்கை.** காலங்கடந்த முதல்வனாகிய சிவபெருமான நுண்ணிய நூலால் கட்டப்பட்ட சிரந்தையை - உடுக்கையை - மாறிமாறி ஒலிக்கச் செய்யும் விரல்களையுடையவன் (பதி. க. வா. 6, 7, 12).

**சிரம் - 1. தலை.** சிரம்-தலை-உமிழும் (குருதியாகிய) புனல் (பரி. 1:27). தலைவியின் ஊடலதீர்க்கக் கருதித் தலைவன் அவள காலடியில பணிந்தபோது அவள் அவனது சிரத்தை மிதித்து ஊடல தணியாது பிணக்குற்றாள் (பரி. 7.70-75).

2. உச்சி. திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில மத்தாகிய மந்தரமலையைத் திருமால் ஆமை

வடிவுடன தம அழகிய சிரத்தில்-உச்சியில் (முது கில்) - ஏற்றித தாஙகினார் (பரி. தி. 1:64-66).

**சிரல் - சிச்சிலிப் பறவை.** இரைக்காக மீனைததேடும சுழற்சியோடு குளததில் மூழகியெழும் சிரலினது - சிச்சிலிப்பறவையது-அலகையொத்த நீண்ட வெள் ளிய ஊசிகொண்டு புண்களைத் தைததலால் உண டான தழும்புகள் பொருந்திய மாாபினையுடைய வர் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனின் மறவர் (பதி. 42:2-5). காலைப பொழுதில சிரல காஞ்சி மரத்தின கொம்பில அமர்நது அருகேயுள்ள நீர் நிலையின் ஆழததில திரியும் மீனகளைக் கொத்தி யெடுபபதற்குரிய காலததைக் கருதி நெடும் பொழுது காத்திருககும்; பொனனிற அலகினையும் நீலமணிபோலும் நிறமுடைய மேனியையும கொணட அது கயலமீனை மூழகியெடுககையில் அதன கூர்மையான நகங்களால நீரிலுள்ள தாமரையிலைகள் கிழிபட்டு வடுககளோடு இருக கும (சிறு 178-183). நீர்ததுறையிலே கூடி நீராடிய மகளிர் விடுத்துச் சென்ற பொற்குழையை, இரை தேடுகின்ற நீலமணிபோலும் நிறமுடைய சிரல் தனககுக் கிடைத்த இரையாகக் கருதியெடுததுக கொண்டு, ஏனைய பறவைகள் நிறைநதிருககின்ற பனைமரத்திற்குச் செல்லாமல அநதணருடைய வேள்வித்தூணின மேற்சென்று அமர்நதது; அவ் வாறு அமர்நத நிலையில் அது யவனர் கூமபின மேலிட்ட அன்னவிளக்குப் போலவும் விடிவெள்ளி போலவும் தோனறியது (பெரு. 311-318). பறக்க மாட்டாத முதிய சிரல், தாமரைபபூக்களையுடைய வயலில் வாழும் பல சிறுமீன்களை உண்ணும் பொருட்டு இலையின்மேல் மெல்லமெலல அசைந்து வந்து தங்கியது (அகம. 106:1-4). இளமகளிர் காஞ்சிமர நிழலில வெண்மணலைக குவிததுத் தம் குடிப்பெருமை பாடிக் குற்றும்போது, இறால மீனைத் தின்று முடிதத சிறிய சிரல மருதமரததின் தாழ்கிளையில தங்கித துயிலும் (அகம். 286:1-7). வணடுகள் தேன் உண்ணும நறுமலர்கள் சிரலின சிறகுகள் போலக் கிளைகளிலிருந்து உதிர்ந்து காட்டுவழியில் கிடந்தன (அகம. 324:9-11). சிர லினது வாயலகு போனறது செமமுலலையருமபு (நற். 61:8; ஐங. 447:2). சிரலினது தலைபோன்றது கள்ளிச்செடி (நற். 169:4).

**சிரறியவன் - சினந்தவன்.** தனனிடததே தங்கியிருந்த பொருநர் தம் பழைய ஊர்க்குச செலல விடை வேண்டிய அளவில சோழன் கரிகாற பெருவளத் தான சிரறியவன் - சினநதவன - போல அவர்கரு வருததமுணடாகும் பார்வையுடன் நோககி, 'எம கூட்டத்தைவிட்டு இவ்வளவு விரைவிலே அகன்று போகினறீரோ' என வினவினான (பொரு. 121-124).

**சில்காற்று - தென்றல்.** மதுரை நகர அங்காடித்தெரு வில.. வானுற ஓஙகியுள்ள இல்லங்களின பல சாளரங்களிலும சிலகாற்று - தெனறல - வீசி யொலிககும் (மது. 357-359).

**சில்பதவுணவு - சிறிதானபக்குவத்தோடு இடப்படும் உணவு** (உபபு). உமணா சிலபத உணவின-உபபின-விலை கூறி விறறவாறே ஊர்தோறும செலவர் (பெரு. 64,65).

**சில்பதம் - சிறு பரிசில்** கொடையாளர் கொடுத்த கூலி யாகிய சிலபதத்தை-சிறு பரிசிலை-கூத்தா காதது வைககாமல் இடையறவினறி உண்டு செலவிடுவர் (அகம். 301:4,5).

**சிலபலி - சிறு பலி.** குறமகள வெறியாடற களததில கிடாயினது குருதியொடு கலநது பிசைந்த வெள் ளரிசியைச் சிலபலியாக-சிறுபலியாக-இட்டு முரு கனை வரவழைப்பாள் (முரு. 232-244),

**சில்லேராளர் - சிற்றுழவர்.** பலவாக விதைததறகு உழு கினற சிலலேராளர்-சிறறுழவர்-வயலில உழுதற கிடையே சிறந்த மணிகளைப பெறுதற்கிடமான வளம மிக்க நாட்டிறகுரியவன் பெருஞ்சேரலிரும பொறை (பதி. 76:11-15).

**சில்லை - சிலுவைக் காளை** (முரட்டுக்காளை). ஏறு தழுவும தொழுவததிலே தலைவன சிலலை-சிலு வைக காளை-ஆகிய ஏறறினைத தழுவினான (கலி. 107.5,6),

**சிலதர் - தொழிலாளர்.** சிலதா-தொழிலாளர்-காவல புரியும மிகவுயர்நத பணடசாலைகளையுடையது தொணடைநாட்டு நீரபபெயறறு எனனும பட்டி னம் (பெரு. 319,324,336).

**சிலம்ப - குறிஞ்சிநிலத் தலைவ.** வலிய கிடாய தனனி டததே வாராதொழியினும் அது பினனரேனும வரககூடுமெனற ஆசையால அதன காதற பெட்டை யாடு காத்திருககும்படியான அருவிகளையுடைய குளிர்ந்த பெரிய சிலம்ப - குறிஞ்சிநிலத தலைவ - எனத தோழி தலைவனை விளிததாள் (ஐங். 238: 1-3). 'ஆணபனறி தன காதறபெண பனறியைக கூடுதறகிடமானதும் அருவிநீா விளஙகுவதுமான

சிலமப' எனபது தலைவனைக குறிதத தோழியின் விளி (ஐங். 264:1-3).

**சிலம்பகம் - மலையிடம்.** சோலையில் சூரரமகளிர் பலரும் கூடிச் சீர்மை திகழும் சிலம்பகம்-மலையிடம்-எலலாம எதிரொலிககும்படி முருகனுடைய கோழிககொடியினை வாழததி பாடியாடுவர் (முரு. 38-41). குறிஞ்சி நிலததின்கண் தோனறும பலவேறு வகைபபடட ஓசைகள் எல்லாம அருவி முழககததோடு கலந்து சிலமபகத்தே மாறிமாறி எதிரொலிக்கும் (மது. 298-300). வெம்மை மிகக காட்டுச் சார்பிலே பெருங்களிற்றைக் கொன்று வீழ்ததிய ஆணபுலி, அவ்வெற்றியோடு சிலம்பகம் எதிரொலிககுமாறு இடிபோல முழங்கும் (அகம். 389:17-23)

**சிலம்பன் - குறிஞ்சிநிலத்தலைவன்.** வானளாவிய மா மலைகளையுடைய சிலமபனின-குறிஞ்சி நிலததலைவனின்-மாாபு தலைவிககுக் காமநோயினைத் தந்து வருததியது (குறு. 362:5-7.)

**சிலம்பாறு - திருமாலிருஞ்சோலைமலையிலிருந்து வருவதோர் ஆறு.** நம்பி மூததபிரானது மார்பில அணியப் பட்ட வெணகடபப மாலைபோல மாண்புறத் தோன்றி அசையும் அருவி ஆரவாரித்து இழியச் சிலம்பாற்றைத் திருமாலிருஞ்சோலைமலை அணிநது சீர் பெறறது (பரி. 15:19-23).

**சிலம்பி - சிலந்தி.** வேலமரத்தின உலர்ந்த கிளைகளில் சிலம்பி-சிலந்தி-நூலால் பின்னாது வெள்ளிய நுண் மயிர் போன்ற வாயிழையால் பினனிய அசைகினற வலையினைக் கண்டு புறாக்கூட்டம் அஞ்சியலறும் (பதி. 39:9-13). களங்களில் சிலமபியின வெள்ளிய நூல்வலை சூழ்நத பக்கங்களையுடைய நெற்கட்டுப் போர்கள், துகிலுடுத்து நிற்கும் பூதங்களைப் போல் தோன்றும் (பெரு. 230-237). கூதிர்க்காலததிலே ஆலவட்டம் பயன்பாடின்றி உறையிடப்பட்டுச சிலம்பியினது வெள்ளிய நூலவலையால் சூழப்பட்டனவாய் முளைககோலில தொங்கும் (நெடு. 58: 59). ஞெமை மரததின் உலாநத கிளையில பினனப்பெற்ற சிலம்பியின வலை, பட்டத்துயானை கையில்கொண்டு உயர்த்திய துகிற்கொடி போல மேலைக் காற்றினால் அசைந்தது (அகம் 111:3-6). காட்டிலே சிலம்பிகள் வலை பினனிய வறுங்கிளைகளையுடைய உலர்ந்த மரஙகளின் அருநிழலில் வற்றிய மரலைத தினனமாட்டாது கவ்விக் கொண்டு மான் கூட்டம தஙகியிருந்தது (அக 9: 5-7,11). தேரினை இழுத்துச் செலலும் குதிரைகளின் வாய் நுரையின இழைகள் சிலமபியின நூலைப் போல வடிநது சிதறும (அகம். 224;4-8). காட்டினகண் இலைகள் உதிாநது வறறிய வேல மரத்தில் வலை பின்னியது போல சிலம்பிகளின கூடுகள் பலவும் சூழநதிருந்தன (அகம். 293:1-3). வேட்டுவன் விரிதத வலையில் அகபபட்டுப் பின அதனை அறுத்து விட்டுத தப்பிப பறநத புறாச் சேவல, மரககிளைகளில சிலம்பி வாயநூலாற பின்னிய கூட்டைக் கண்டு வெருவியது (நற். 189: 7-10). சிலம்பி வலையால் பொதியப்பட்ட ஈநதின செங்காய்கள் துகிலால் பொதிநது வைககப்பட்ட பவளஙகள் போன்றிருந்தன (ஐங.இ.2:2,3).

**சிலம்பு - 1. பக்கமலை.** பாரியது பறம்பு மலையின் மரங்கள் நிறைநத பெரிய சிலம்பில-பக்கமலையில முசுக்கலைகள் பாய்ந்தாடும (புறம. 116:11,14). மிகக் குளிர்ந்த சிலமபில இருள் செறிநத பெரிய முழையினையும் தெய்வம் காககும் உயர்நத சிகரங்களையும் கொணட பெரிய மலைநாட்டினன பேகன (புறம. 158:10-12). வானளாவ மூங்கில் வளரும் சிலம்பின்கண சுரபுனனையோடு ஓஙகி வளாந்து, ஆசினியோடு அழகுபெற்ற பலாமரத்தின் பழத தைப பெற்ற கடுவன தன் மநதியையழைக்கும் புதுவருவாயையுடைய முதிரமலைக்குத் தலைவன் குமணன (புறம 158:20-25). இமைய மலையின முள் முருக்க மரங்கள் செறிநத சிலம்பிலே துயிலும கவரிமான் தான உண்ட அருவி நீரையும் நரநதம புல்லையும் கனவிற் காணும் (பதி.11:21-23). அருவி நீர் ஒலிககும சிலம்பினையுடையது நேரிமலை (பதி. 40:20). குறமகள் வெறியாடற்களததில் செறிந்த மலையின் சிலம்பிலுள்ள முருகனது நல்ல கோயிலை வாழத்தி அம்முருகனை வரவழைபபாள் (முரு.238, 242,244). பெரிய மலையினது சிலம்பிலே மகிழ்ச்சி மிகுந்து ஆடுகின்ற தோகை மயில்களைப போல் மாடஙகளிலே மகளிர் பந்தாடினர் (பெரு.330-333). பூஙகொததுக்களையுடைய காநதள்நிறைந்தஅழகிய சிலம்பிலே களிறறியானை படுததிருநதாற்போலப் பாம்பணைப் பள்ளியிலே திருமால் அறிதுயிலமர்ந திருந்தார் (பெரு. 371-373). பறவைகளின் ஓசையாகிய நிறைந்த இசையினையுடையனவும் ஒனறற தொன்று குறுககிட்டு நிறபனவுமான மலைகளின சிலம்பகத்தேயுள்ள தினைப் புனத்தில தலைவியும் தோழியும் கிளிகளையோட்டியிருந்தனர் (குறி. 99-101). கடுமரங்கள் மிகுந்து வளர்ந்த இடமகனற சிலமபில கற்பாறையின பககததிலிருநத சிறுநெறியில கூததர் செனறனர் (மலை. 14-20) வேங்கைப் பூக்கள் உதிரப பெறற குறவரது

குடிசையைப் புலியெனக் கருதி வெருவிய களிற்றி யானை, மேகம் படிந்த சிலம்பிலே மூங்கில்கள் முறிபடப் பெயர்ந்து செலலும் (அகம். 12:9-12). செழியனது சிறுமலையென்னும் வெற்பின் சிலம் பிலே கூதளஞ்செடிகள் மலர்ந்து மணம் கமழும் (அகம். 47:15-17). கூட்டமான கலைமான்கள் தாழ ஒலிப்பதும் மிளகுக்கொடி படர்வதுமான சிலம பிலே தலைவனும் தலைவியும் பிறரால் எய்துதற் கரிய காமத்தால் கூடிக் களவொழுக்கம் புரிநதனர் (அகம். 112:14,15). சிறு காடாகி இருண்டதும் சிறு நெறிகளையுடையதும் செல்லுதற்கரியதுமான சிலம பின்கண் உள்ள குறுஞ்சுனையில் பூத்த குவளைப் பூக்களை வண்டு மொய்க்கும்படி சூடிக்கொணடு தலைவன் இரவுககுறியிடததே தலைவியைக காண வருவான் (அகம். 128·8· 10). ஓங்கிய மலைச்சிலமபில் பிடவமலருடன் சேர்ந்து வேங்கைமலரும் மலர்ந் திருநதது (அகம். 147:1,2). வலிய யானை, குளிர்நத மணங்கமழும் சிலம்பிடத்தே மரங்கள் வீழுமாறு முறித்துத்தள்ளிவிட்டு, மாறுபாடமைநதபுலியினைக் கதறுமாறு குத்திக் கொனறு போயத் தினைப்புனத் தில் கதிர்களை மேயும் (அகம. 148:2-6). பாரம் என் னும் ஊர்க்குத தலைவனாகிய நன்னனதுஏழில் என் னும் நெடுமலையில் பாழி என்னும் சிலம்பிடத்தே யுள்ள களிமயில் தோகை போன்றது தலைவியின் கூந்தல் (அகம். 152:3,12-14). ஒலியெழுநது அருவி கள் ஆரவாரிக்கும் பெருமலைச் சிலமபிலே ஈன்ற ணிமையுடைய பிடியானையைத் தழுவிககொணடு களிற்றியானை தன் கன்று துயிலும் இடத்தைக் காத்து நிற்கும் (அகம்.168:7-10). மூஙகில்கள் நிறைந்த சிலம்பிலுள்ள சுரபுன்னையின் உச்சி வாடும்படி ஞாயிற்றின் கதிர்கள் சினத்தைப் பயினற கற்கள் மிக்க காட்டு நெறியிலே தலைவன் பொருள்வயிற் பிரிந்து சென்றான (அகம. 177:6-12). கற்களை யுடைய சிலம்பிலே யானை கையை உயர்த்திப் பெருமூச்சு விடுதலால் வேங்கை மலாகள் பலவும் புதரில் பரவி விழும் (அகம். 202:3-8). 'மலையி லிருந்து இழியும் அருவி சந்தன மரத்தில் வீழந்து அதனைக குளிரும்படி நனைத்திடும செறிந்த மலைச்சிலம்பினது கல்முழைஞ்சிலுள்ள சுனையில் பகலிலே தலைவர் நம்முடன் விளையாடி இரவிலே தம் சிறுகுடியாய ஊர்ககுச் செல்வராயின் நன்று' எனத தோழி தலைவியிடம கூறினாள் (அகம். 228: 2-7,13). காட்டிலே ஈன்று காவற்பட்ட பெண்புலி பசியுற்றதாக அதற்கு இளமானாகிய உணவைக் கொணர்நது தருதற்கு நடுஇரவில, இருணட குகை களையுடைய சிலம்பில் இரை கொள்ளுதலை விரும் பிப் புறப்பட்ட ஆண்புலி, காட்டுப்பசு தொலை விலே நினறு அலறுமாறு அதன் ஏறறைக கொனறு இழுத்துச் செலலும் (அகம. 238:1-9). பெரிய மலை, தேன கூடுகள நிறைநத குளிாநத குகைகளையுடைய சிலமபினைக கொணடது (அகம. 242:18,19). மழவா இளம பசுவைக கொனறு தின்ற புலால நாறுமிடததைத துழாவி வீசும மேல காற்றின ஒலியைக கேட்ட உழைமான கூட்டம், அவ்வொலியை நீணட மூங்கிலகள் நிறைநத சிலமபிலே இரைகொள்ள விருமபி வநத புலி மானைப் பறறியதனால எழுநத ஒலியெனக கருதி வேறுவேறு வழிகளில அலறியோடும (அகம. 249: 12-18). பேகனது பெரிய மலையிடததே பூககளை நிறையக் கொணடுவரும அருவிகள் ஆரவாரிதது வீழகினற நீாவளமமிகக சிலமபிலே துளளும நீாத துளிகள் அருகிலுள்ள புதாகளை நனைககும (அகம். 262:13-17). பெரிய மலைச சிலம்பிலே வேட்டைககுச் சென்ற கானவன் தனனுடன போரிட்டுத தொலைநத யானைக் கொமபினால நீாவளம மிகக சிலமபில நன்பொனனை அகழந தெடுபபான (அகம. 282 1-4). சிலம்பிலே செவ வாழை நீண்டு வளரும (அகம. 302·1) மேகம தவழும சிலம்பில இளைய பிடியானை தன முதற சூலினை ஈனறு மூஙகிலைத தினறு கொணடிருக கையில் தனனை விருமபும களிறு தடவிவிட அந நிலையிலேயே வாழைகள் வளாநத அழகிய அச சிலம்பில துயிலும (அகம. 328·11-14). இனத துடன் செனறு மூங்கிலை மேயநத யானை, தன்னைத தாக்குதற்குப பதுஙகியிருநத புலியைக கொனறு குருதி தோயநத கொமபினை மழைநீரால கழுவிககொண்டு மலையடுககததில மெலல மெலல நடநதுசெனறு, பகைவெனற செருககுடன பிடியைத் தழுவிப பின வாழை மரங்கள வளர்நத அழகிய சிலமபிலே துஞசும (அகம. 332·1-9). சிலமபினிடததே நீணடு வளாநத சோலையில துளிகள சிதறும வெள்ளருவிபோலத திஙகளின கதிர்கள விளஙகின (அகம. 362 13-15). ஓஙகிய பெரிய சிலமபில, ஒளிபொருநதிய கொநதுககளில நறுமலர்களைக கொணட வேங்கை மரததின கவை யிடததே கட்டிய பரணில இருநதவாறு தலைவியும தோழியும் தினைபபுனததிற படிநத குருவிகளை ஓட்டிப பின அவவேஙகைப பூககளில ஊதும தும்பிகளின இனனிசையைச செவியுறறு இருநதனர் (அகம. 388:4-9). மலைச சாரலாகிய சிலமபு மரா மரங்களைத தனககு அழகாயக கொள்ளும (குறு 22:2,3) சிலமபிலே தஙகி வாழும யானைகள் மிதிதத பள்ளங்களில நீர் தேஙகி நிறகும (குறு. 52:1). சிலம்பில சேமபு வளரும (குறு. 76:3). பெரிய மலையுச்சியில தோனறிய அருவி சிலமபிலே இழியும (குறு. 78 1-3). குலையாகப பூததிருககும

காந்தள், பிளப்புகளையும் முழைகளையுமுடைய சிலம்பு முழுதும் மணம் கமழும் (குறு. 239:2, 3). நீர்வளம் மிக்க சிலம்பிலே வெண்கூதாளத்தின் அழகிய புதுமலர்கள் ஒருமித்து மலர்ந்திருந்தன (குறு. 282:5, 6). வாழைக் குருத்திலே தலை மோதுண்டு வலிமையழிந்த களிறு, பிடியானை புறந்தடவ அருவி நீர் இழியும் சிலம்பிலே அரிதில் துயின்றது (குறு. 308 1-5). சிலம்பு பொலிவழியும்படி அங்கிருந்து வாழையினை மலையாறு பெயர்த்துச் சென்றது (குறு. 327·4, 7). மலைச்சாரலில் தினைக் கதிர்களையுண்ணும் கிளிகளை ஓட்டுகின்ற குறத்தியின் கையிலுள்ள குளிரென்னும் கருவியின் ஓசை சிலம்பிலே சென்று எதிரொலி யுண்டாகும் (குறு. 360.4-7). தலைவனது மலைநாட்டில் மேகங்கள் படியும் சிலம்பிலே ஐவன நெல்லை விதைத்து அருவி நீரினால் அதனை விளைவு செய்வர் (குறு. 371:2, 3), வெண்ணெலைத் தின்ற யானை குளிர்ந்த நறுமணமுடைய சிலம்பிலே துயிலும் (நற். 7:7, 8). தேன் மணங்கமழும் சிலம்பின் கண்ணே புலியேறு களிற்றுடன் போரிடுகையில் அவற்றால் விளையும் துன்பத்திற்கஞ்சாத குறச் சிறுவர் பாறைமேல் ஏறியிருந்து மனச்செருக்கோடு தொண்டகச் சிறுபறை அறைவர் (நற். 104:1-5). வாழைகள் வளர்ந்த சிலம்பிலே அரும்புகள் மலர்ந்த செங்காந்தள் மணங்கமழ, அவற்றைச் சூழ்ந்து திரண்ட யாழிசை போலும் இன்குரல் வண்டுகள் அருவியாகிய முழவின் ஒலியோடு ஒரு சேர மெல்ல ஒலிக்கும் (நற். 176:6 10). ஆழ்ந்த சுனைநீரையுடைய சிலம்பில் வாழை தழைத்து வளரும் (நற். 188:1). குன்றத்தில் தேனடைகள் முற்றிய சிலம்பின்கண் முளைத்து வளைந்த மூங்கில் போலும் பருத்த தோளையுடையவள் தலைவி (நற். 188:7-9). பலவாகிய வாழைகள் ஓங்கி வளர்ந்ததும் சுரபுன்னை மரங்கள் நெருங்கி வளர்ந்தது மான சிலம்பிலே துயிலும் தன் காதற்பிடியானைக் கருகில் மேகம் படிந்து மறைத்ததனால் அதனைக் காணப்பெறாத களிற்றியானை பிளிறுகின்ற சோலையையுடையது தலைவனது உயர்ந்த குன்றம் (நற். 222:6-10). தேன் உண்டாகின்ற சிலம்பிலே நீர் சூழ்ந்த துறுகல்லின் அயலில் தூய மணலெடுத்த கரையில் மாஞ்சோலையிருந்தது (நற். 243:1-4). மழை பெய்த குளிர்ந்த மலைச்சாரலில் கூதாள மணத்தைத் தன்மேற் கொண்டு மணக்கும் வண்டு களின் விரும்பத்தக்க இனிய குரலை யாழிசையெனக் கருதி மணம் கமழ்கின்ற சிலம்பிலே அசுணமான கூர்ந்து கேட்கும் (நற். 244:1-4) 'களிற்றியானை யோடு போரிட்ட வேங்கைப்புலி துறுகற்கள் நிறைந்த சிலம்பில் முழங்குகின்றதே' எனத் தலைவி, இரவுக்குறியிடத்திற்குத் தலைவன் வரும் வழியின் ஏதத்தைக் கருதி வருந்தினாள் (நற். 255·4,5). அரும்பவிழ்ந்த காந்தள் மலர்கள் சிலம்பெலாம் மணங்கமழ்கின்ற சாரலையுடைய மலைநாட்டி னன் தலைவன் (நற். 294:7-9). தலைசரிந்த சிலம் பிடத்தே கருகிய வள்ளிக்கொடிபோல் புறவழ கெலலாம் அழிந்து தழைத்த கூந்தலையுடையவர் தலைவியின் தோழியர் (நற். 295:1-3). கிளிகள் சாரல் பொருந்திய மலையிலுள்ள தம் இனத்தோடு சேர்ந்து தினைக்கதிர்களைக் கொய்து தின்று கொம்பு வாசசியம் போல கூவி ஒன்றையொன்று அழைக்கும் நெருங்கிய பெரிய சிலம்பினையுடைய மலைநாடன் தலைவன் (நற். 304·1-4). சிலம்பிலே மேய்ந்த செம்பசு காந்தள் மலர்க்கொத்தினை மோதி அம்மலர்களின் தாதுக்கள் தன்மேல் உதிரப் பெற்று நிறம் மாறிய நிலையில் அதன் கன்று தாயைக் கண்டு மருண்டது (நற். 359.1-3). பல நாட்கள் வானம் மழையினைப் பெய்யாதாயினும் அருவிகள் ஆரவாரித்து இழியும் நீர்வளம் மிக்க சிலம்பினையுடைய வானளாவிய மாமலை நாடன் தலைவன் (நற். 365:5-8). 'தலைவனொடு கூடி அச்சம் பொருந்திய சிலம்பின் அருவியிலே நீராடி, வேங்கை மரத்தின்மேல் கட்டப்பட்ட பரண் மீதேறியிருந்து, தினைப்புனத்தில் கிளிகளை யோட்டி மகிழ்ந்திருத்தல் இன்று போல் நாளையும் நமக்கு வாய்க்குமோ' எனத் தோழி தலைவியிடம் வினவினள் (நற். 373:4-9). சிலம்பிலே சென்ற கோழிப்பெடை தன் சேவலுடனே பழங்கொல்லை யின் மேற்புறத்தைக் கிளைத்த புழுதியில் மிகப் பல நன்பொன் கிடந்து ஒளி வீசும் மலை நாட்டினையுடையவன் தலைவன் (நற். 389:7-10). நீண்ட மூங்கில்கள் ஓங்கி வளர்ந்த நிழல் மிக்க சிலம்பிலே பிடியானை கன்றீன்று வருந்தியிருக்க கையில் பாலமடி சுரந்த அதன் பசிநோயைத் தீர்க்க வேண்டிக் களிற்றியானை தினைக்கதிர் களைக் கவர்ந்ததைக் கண்டு, புனங்காவலான கான வன் எரிகொள்ளியை வீசினான் (நற். 393:1-5). அருவிகள் ஆரவாரிக்கும் பெரிய மலையடுக்கத்தில், வண்டுகள் தேனுண்ணுமாறு காந்தளம் பூக்கள் மலர்கின்ற இடமான, வாழைமரங்கள் வளர்ந்த அழகிய சிலம்பிலே, பன்றி கிளைத்த நிலத்தில் கிடக்கும் பல அழகிய மணிகளின் ஒளிதிகழும் விளக்கத்தில், கன்றீன்ற மடப்பிடியானை தன் னைக் களிறு காத்து நிற்கத் தங்கியிருக்கும் (நற். 399.1-7). மலையினது நறுமணமுடைய குளிர்ந்த சிலம்பிலே காந்தளம் பூங்கொத்து மணங்கமழும் (ஐங். 226:1,2). தலைவனது குன்றத்தினைக் கிழங்கு களை அகழ்ந்துண்பதற்காகப் பன்றிகள் உழுத

சிலம்பிலே மேலும் உழாது விதைத்து விளைநத தலைவிளைச்சலைக் கானவர் கொய்து செல்வர் (ஐங. 270:1-3). 'அருவிகளால் அழகுகொண்ட நின மலையின் சிலம்பு, பிறர் கூறுவனவற்றையே தானும் எதிரொலித்துக் கூறுமாறு போல நீ கூறுவனவற்றையே கூறுவாள் இவள்' என்று தலைவியைக் குறிதது்த் தோழி தலைவனிடம் பேசினாள் (கலி. 46.25-27). செறிநத மலையின் சிலம்பு தொட்டு நீண்டு கிடக்கும் நிலத்தின்கண் நிலவு பரந்தாற் போல் வையையாறு நீரைப் பரப்பிச் சென்றது (பரி. 11:32,33).

2. மலை. மரங்கள் செறிந்த குளிர்ந்த சிலம்பில்-மலையில் - குரங்குகளைப் போலக் கைப்பொருள்களைப் பறித்துக் கொள்ளும் இயலபையுடைய ஆறலை கள்வர் பரந்து வந்து அலைப்பர் (புறம். 136:12-14). குறுநதடியால் அடிக்கப்பட்ட முரசு போல் ஒலிக்கும் அருவியையுடைய பெரிய உயர்ந்த சிலம்பின்கண் அமைந்த சீறூரிலிருநத பேகனது மனைவாயிலில் நின்று கபிலர் அவனையும் அவன் மலையையும் வாழ்த்திப் பாடினார் (புறம். 143:9-12). செறிவுடைய சிலமபிடத்தே பளிங்கைக் கரைத்துச் சொரிந்து வைத்தாற்போன்ற சுனையில் குடைந்து தலைவியும் தோழியும் தம் மனத்திற்கு விருப்பமானவற்றைப் பாடி நீராடினர் (குறி. 57,58). 'மூங்கில் ஒலிகின்ற அரிய வழிகளையுடைய சிலம்பைச் சேர்ந்திருக்கும் சீரூர்களையடைநது நீவிர் நன்னனுடைய கூத்தர் என்பதை அங்குள்ளார்க்கு அறிவிப்பீராயின் அவரில்லததே உரிமையோடு விருந்து பெறுவீர்' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 161-169). மூங்கிலகள் ஒலிக்கும் சிலம்பிலே ஆண் பனறியைக் கொன்ற புலியேறு அதனைப் பலாமரங்கள் செறிந்த பக்க மலைகளில் புலால் நாறும்படி ஈர்த்துச செல்லும் (அகம். 8:6-8). வேங்கை மரக் கிளையிலிருநது புதுமலரைப் பறிக்க வேணடிக் குறமகள் 'புலி புலி' எனப் பூச விட்டபோது, உயர்ந்த கற்பாறைகள் நிறைநத பக்கமலையிலே இருண்ட குகைகளையுடைய சிலம்பில் இருநது ஊராருடைய பசுக்களைக் கவர்ந்து தின்னும் புலி வநததாகக் கருதிச் சீறூர் ஆடவர் பலரும் விற்களுடன திரண்டனர் (அகம். 52:2-8). தெய்வங்களையுடைய சிலம்பிலிருநது பெண் தெய்வங்கள் மலர்களைச் சூடிக்கொணடு தாம் விரும்பிய உருவஙகளை மேற்கொண்டு தலைவியின் மனைத்தோட்டததிலே இரவில் வரும் (அகம 158: 7-9). யானைகள் முழங்குவதும நீர்வளம் மிக்கது மாகிய சிலம்பிலே தேனுடன கலந்து வரும் வெள்ளருவி இன்னிசையுடன முழங்கும் தணணுமையொப்ப இம்மெனும் ஒலியுடன் குகைகளும் பிளப்பிடங்களும் எதிரொலிக்குமாறு மலைசசாரலில வீழும் (அகம். 172:1-5). ஆயஅண்டிரனுடைய நாட்டின்கண் தெய்வங்கள் உறையும சிலம்பில் கவிரம என்னும் பெயரையுடைய அசசம பொருநதிய பககமலையில சுனையிலுறையும் சூர்மகளே யாவாள் என்று தலைவியைக் குறித்துத தலைவனது நெஞ்சு நினைந்தது (அகம். 198 11-17). நீணட மூஙகிலகள உயர்ந்து வளர்நத நிழலபொருநதிய சிலம்பின் அருவிநீர் ஊாநது இழியும அழகிய உச்சியில, வேங்கையின நறுமலாகள உதிருமாறு கிளைகளில் ஏறிக கூட்டமான முசுககலைகள தமமினங்களைக் கூவித்தாவும (அகம. 205:16-22). ஓயாத முழக்கத்தோடு மழை மிகுதது இடியிடிதது மேகம மேலெழுநது பெயயத தொடஙகிய குளிாசசி மிகக சிலமபிலே, மூங்கிலகள நெருஙகி நீணடு வளர்நத வானளாவிய நெடுஞ்சிகரததிலிருநது இழிநது விளங்கும் வெள்ளருவிகளையுடைய பகக மலையில, அருமபுகள் மலர்ந்த வேங்கையின பொன்போலுமபூககள்பாறைகளினமேல் உதிர்நது பரவியிருககும் நலல மலை நாட்டினையுடையவன தலைவன (நற. 257:1-7). மேகஙகள் தவழகினற சிகரங்கள் உயர்நத பொதியிலாகிய ஓங்கிய பெரிய சிலம்பில செங்காநதள் அரும்புகள நீணடு நனகு பூத்திருக்கும் (நற். 379.11-13). 'வயலைககொடிகள் வளர்நத அழகிய சிலம்பினஉச்சியிலிருக்கும அசோக மரத்தினினறும உனககாகத் தலைவனால அருமையாகக் கொயது கொணரபபட்ட தழையை நீ ஏலாது மறுத்து விடுவாயாயின அது பயனின்றி வாடிவிடும்' எனறு தோழி தலைவியைத தழை யேற்க வேண்டினாள் (ஐங. 211:2,3). தலைவியின காமநோயை அறியாத வேலன, மிளகுககொடிகள் வளரும சிலம்பிற்குக கடவுளாகிய முருகனை வாழததிப் பாடி, 'இநநோய தெய்வத்தால நேர்நதது' என்பான் (ஐங். 243:1,2). குறவன எரிககினற சந்தனத்தின நறுமணம கொணட புகை, தேன மணககினற சிலமபினது பககமலையெஙகும கமழும் (ஐங. 253:1,2). சிலமபினகண மூஙகில வளர்நதிருந்தது (ஐங். 278:1). சிலம்பிலே காநதளம பூங கொத்து மணங்கமழும (ஐங். 293.1). காநதளம பூககள் மணங்கமழ்வதும காண்போா கண்களைத் தனனிடததே கவர்ந்து கொள்வதும் ஆகிய கரிய சிலமபினகண் குறமகளிர் தததம் கணவரைத தப்பாதவராய் அவரே தெயவமென வணங்கி எழுவராதலால அவர் கணவனமாரும தாம தொடுக கின்ற அம்புகள் இலக்குத் தபபாதவராவர் (கலி. 39:15-18). 'தலைவி குறிதத குறியிடததே இரவுப் பொழுதில் நீ வருவையானால நினனைக கண்டு

பிற விலங்குகள் வெருவியோடுகின்ற ஓசையினால் மிளகு வளரும் சிலம்பிலே உலாவுதலையுடைய புலி யென்று இவ்வூரார் கருதுவர்' எனத் தோழி தலை வனை இரவுக்குறி விலக்கி வரைவு கடாவினாள் (கலி. 52:16-18). வையை நீர்ப்பெருக்கினால் அதன் அலைகள், மேகங்கள் படியும் சிலம்பிலே விளைந்த் மிளகுக்கொடி, சந்தன மரம், நுரை முதலியவற் றைக்கரையிலே மேன்மேலும் வீசும் (பரி. 16:1-4).

3. காற்சிலம்பு. செறிந்த உள்ளிடு மணிகளை யுடைய சிலம்பு–காற்சிலம்பு - அணிந்த மகளிர் ஆன்பொருநையாற்று வெண்மணலிடத்தே பொற் கழங்கு கொண்டு விளையாடுவர் (புறம். 36:3-5). போர்வைக்கோப் பெருநற்கிள்ளி ஆமூர் மல்ல னொடு போரிட்டு வென்ற காட்சியைக் கண்டு வந்த நக்கண்ணையார், 'என் கால்களில் அழகிய சிலம்பு ஒலிக்க யான் ஓடிச்சென்று என் தலை வனது வெற்றியைக் கண்டேன்' என்றார் (புறம். 85: 6-8). இளையோளாகிய தலைவி ஒருத்தி செம்பொறிகள் அமைந்த சிலம்பணிந் தவள் (புறம். 341:3). ஆடுகோட்பாட்டுச் சேரலா தனின் கோட்டை வாயிலில் செம்பொறிகள் அமைந்த சிலம்புகள் தொங்க விடப்பட்டிருந்தன (பதி. 53:6, 7). கால்களில் அணியப்பட்டுள்ள செம் பொற் சிலம்புகள் ஒலிக்குமாறு மாடத்திலே மகளிர் பந்தாடினர் (பெரு. 331-333). செல்வமகளிர் விழாவைக் காண்பதற்கு, ஏனைய அணிகளோடே, தெளிந்த ஓசையினையுடைய உள்ளிடு மணிகள் நிறைந்த பொற்சிலம்புகள் ஒலிக்கும்படி மேல் மாடத்தினின்றும் இழிந்து வந்தனர் (மது. 443-451). தித்தன் மகளாகிய ஐயையென்பாள் பரல்கள் இடப்பெற்ற சிலம்பினையணிந்தவள் (அகம். 6:1-4). 'என் மகளுடைய சிலம்பு பொருந்திய சீறடிகள், தந்தையின் அரிய காவலைக் கடந்து, மலைகள் குறுக்கிட்டு நிற்கும் சுரநெறியிலே தன் தலை வனுடன் செல்ல வல்லவையோ' எனத் தலை வியை நினைந்து செவிலி இரங்கினாள் (அகம். 17:7-10,22). தொகுதி கொண்ட பரல்களையுடைய சிலம்பு ஒலிக்குமாறு தலைவி விளையாடுவாள் (அகம். 49:17, 18). சோழர் மகளான அஃதை என் பவள் செம்பொற் சிலம்பினை அணிந்தவள் (அகம். 96:11-13). பாழ்நாட்டு வழியிலே தன் சிவந்த அடிகளில் சிலம்பு ஒலிக்கத் தலைவி தலைவனுடன் போயினள் (அகம். 117:7-9). ஊர்முழுதும் துயிலும் யாமத்திலே தலைவி, வில்லினைப்போலும் வகை யமைந்த நல்ல குடச்சூல் ஆகிய அழகிய சிலம் பினை ஒலியாது அடக்கிக்கொண்டு அஞ்சியவளாய் இரவுக்குறியிடத்தே வந்து தலைவனைத் தழுவி மீண்டாள் (அகம். 198:9-11). சிறப்புப்பொருந்திய பெரிய மனையின்கண் தலைவி சிலம்பொலிக்க நடந்து சிறுபொழுதே தோழியருடன் பந்தாடி னாலும் தாய் அவளை வரவழைத்துப் பாராட்டிப் பாலூட்டுவாள் (அகம். 219:1-7). உள்ளிடுமணி கள் பொருந்திய சிலம்பினையணிந்த சீறடிகள் சிவக்குமாறு தலைவி சுர நெறியில் தலைவனுடன் நடந்து சென்றாள் (அகம். 257:2-4). உடன் போக்கினிடையே தலைவன் தலைவியை நோக்கி, 'நீ சிலம்பொலிக்குமாறு மெல்ல நடந்து நினது அழகிய முதுகினை யான் காணுமாறு முன்னே செல்வாய்' என்றான் .(அகம். 261:5-8). தலைவ னுடன் செல்லும் தன்னைத் தாய் அறிதற்கஞ்சிய தலைவி உள்ளிடு மணிகளைப் பெய்து மூடித் தேர்ந்து செய்யப்பெற்ற தன் சிலம்புக்ளைக் கழற்றி விட்டுச் சென்றாள் (அகம். 321:15-17). தலைவி தன் கால்களில் அணிந்திருந்த சிலம்புகள் ஒலிக்கும்படி நடந்து வயலைக்கொடிக்கு நீர் ஊற்றி வளர்த்தாள் (அகம். 383:6-13). தலைவ னுடன் போன தலைவியின் மெல்லடிகளின் மேல் அணியப்பட்டிருந்த சிலம்பினைக் கண்டோர் அவ் விருவர்க்கும் மணம் நிகழாமையை யுணர்ந்து இரங்கினர் (குறு. 7:1-3). வாகை நெற்றுக்களை, அவற்றின் விதைகள் உள்ளிடு பரல்களையுடைய சிலம்பு போல் ஆரவாரிக்க மேல் காற்று அலைக் கும் (குறு. 369:1-3). தலைவனுடன் போகத் துணிந்த தலைவி வைகறை விடியலில் தன் மெய்யி னைப் பிறர்க்குத் தோன்றாதபடி மறைத்துத் தன் காலில் அணிந்திருந்த உள்ளிடு மணிகளமைந்த சிலம்பினைக் கழற்றிப் பந்துடனே சேர்த்து ஓரிடத் திலே வைக்கச் சென்றவள், 'இவற்றைக் காணுந் தோறும் என் தோழியர் வருந்துவர்; அவர் இரங்கத்தக்கவர்' எனக் கருதிப் புறப்படவும் அவள் கண்கள் அவளை மீறி நீரைச் சொரிந்தன (நற். 12:4-10). தலைவி சிறுமியாயிருந்த போது, செவிலி யர் தேன் கலந்த தீம்பாலைப் பொற்கலத்திலேந்திய வாறு ஒருகையில் சிறுகோலையும் கொண்டு அவளை உண்ணச்சொல்லி அடிக்கவும், அவள் தெளிந்த ஓசையையுடைய முத்துப்பரல்களையிட்ட பொற்சிலம்பு ஒலிக்குமாறு பாய்ந்தோடினாள் (நற். 110:1-5). உடுத்தியிருந்த தழையுடை சிதைய வும் மாலை வாடவும் வளைகள் கழலவும் தலைவ னொடு சேர்ந்து நண்டுகளை ஓட்டி விளையாடிய தலைவியின் சிலம்பு உடைபட்டது (நற். 363:7-10). 'பாவையன்ன மடந்தையாகிய என் மகள் தன் தலைவனுடன் மெல்ல நடந்து சென்றனள் என்று கூறுகின்றீரே, அவளுடைய அழகிய சிலம் பணிந்த அடிகள் நிலத்திலே படிந்தனவோ' எனத்

தலைவியைக் குறித்துச் செவிலி கணடோரிடம் வினவினாள் (ஐங. 389). காமஞ்சாலா இளமை யளாகிய பெண தன் கால்களில அணியபபட்ட அழகிய சிலம்புகளின் உள்ளிடு மணிகள் ஆரவா ரிககுமாறு மனையினினறும் பந்துடனே தளர்ந் தொதுங்கி நடந்து சென்றாள் (கலி. 57:2-7). 'காலுக்குப் பொருந்திய சிலம்பின் உள்ளிடுமணி ஆரவாரிக்க நடந்து என் ஆருயிரைக் கவர்நது கொண்டு இளமையால் அதனையறியாது போகினறவளே, எனத தலைவன காமஞசாலா இளையவளை விளித்தான (கலி. 58:5,6). மரத் தால செய்த சிறுபானையாலும் பாவையாலும விளையாடுதற்கு, உள்ளிடு மணிகள் இட்ட அழகமைநத புனைதொழிலகளையுடைய அழகிய சிலமபுகள் மிகவும ஆரவாரிகக அடியிட்டு நடக கும் நின் கூந்தலைக கண்டு என அறிவு முதலியன என்னை விடடுப் போகுமபடி செலபவளே' எனத் தலைவியை விளிததுத தலைவன இரநது பினனின றான (கலி. 59.5-9). தெளிந்த ஓசையையுடைய உள்ளிடு மணிகள் இடப்பட்ட சிலம்பு ஆரவாரிக்க நடந்து வந்து தெருவிடததே தலைவனைப பரததை தாககணங்கு போல் தாககி அவனது நெஞ்சினை அகப்படுத்திக் கொண்டாள் (கலி. 69:8,9). இனிய ஓசையமைநத உள்ளிடு மணிகளையுடைய சிலம் பினை அணிநதிருந்தாள் தலைவி (கலி. 125.16) தலைவன் பிரிவு நீட்டிததலால கலக்கமுற்ற தலைவி தன் சீறடியில சிலமபு ஒலிக்குமாறு எஙகும் திரியும நிலைககுள்ளானாள் (கலி. 147:3,4). 'அதிரற்பூங் கண்ணி அணிந்தவளே' நீ மிகுநத அனபு கொணடி ருக்கும நின கணவன் என்னிடததே அன்புடைய னாதலால் நின வளையினையும ஆரத்தினையும் கொணர்ந்து எனக்கு விலையாகத தநதான; அவன் இவறறையேயனறி நாளை நின் காலகளின சிலம்பு களையும் கழறறும் தனமையன' எனறு தலைவி யிடம பரததை உரைததாள் (பரி. 20:79-81). நிததிலங்களை உள்ளிடு மணிகளாகக கொணடு சிலமபு செயயப்பட்டது. (பரி. 22:49).

4. ஓசை. பாணடியன் நெடுஞ்செழியனின அரண் மனையின் பந்தியிலே நிறறலை வெறுதத குதிரை கள் புலவுணவைக் குதட்டுகினற ஓசை ஒருபுறம் எழும; நிலாமுற்றததிலே நீர் வநது வீழவதற் கமைந்த பததல நிறைநது நீர் கலஙகி விழுகினற அருவியோசை மற்றொரு புறம் ஒலிககும; அதனரு கில் பீலிமயில் ஒன்று ஒதுங்கவும செருககுடைய மற் றொரு மயில், ஊதுகொம்பின இனிய ஓசைபோல அகவும்; இவையெல்லாம ஒனறு சேர்ந்து செறி வுடைய மலையின் சிலம்பு-ஓசை-போல அவ்வரண் மனையில ஆரவாரிக்கும (நெடு. 93-100). யாழி னது பததல சிலமபு அமைநதது (மலை. 26). நன னனசேய நனனனுடைய நாட்டு மலைகளில் பல வேறு ஓசைகளும் அவ்வோசைகளால குனறுகளில எழுகினற சிலம்பும் (எதிரொலியும) ஒருஙகு இயைந்து ஒலிககும (மலை. 292-348).

5. குகை. திருமாலிருஞ்சோலைமலையில மநதிகள் சிகரததிற்குச சிகரம தாவுதலாலும் மயிலகள் அகவு தலாலும் குயிலகள் கூவுதலாலும் எழும ஓசையி னால அதன சிலமபில - குகையில் - சிலம்புகினற (ஒலிககினற) எதிரொலி ஒழியாது (பரி. 15 38-45).

**சிலம்பு கழித்தல்** - திருமணத்தின முன் தலைவியின் சிலம்புகளைக கழிககும் ஒரு நோன்பு. தலைவி தன மனையிலே சிலமபுங் கழியாளாய் - சிலமபுகளைக கழிககும நோனபையும இயறறபபெறாளாய - தலைவனுடன புறபபட்டுபபோனாள் (அகம. 315: 7-9) 'பெரிய மடபபமும தகுதியுமுடைய என மகள, ஒரு சீறூரில வறுமையுறற பெணணொருத தியின குடிசையாகிய தொடர்பிலலாத வறுமனை யிடததே சீரும சிறபபுமினறிச சிலமபு கழிததுத தன தலைவனுடன மணம பொருநதினளோ', எனறு தலைவியைக குறிததுச செவிலி நினைநது வருநதினாள (அகம். 369:21-26). 'தான விருமபிய துணைவன ஊககிவிட, ஊககம கொணடு தமரைச சிறிதும் நினையாமல செனறுவிட்ட சிறு வனகண மையளாகிய என மகள் அஙகே சிலமபு கழிதது அறியாத தேயததளாதல கொடிது' எனறு செவிலி தலைவியையெணணி வருநதிக கூறினாள (அகம. 385:15-18). 'எனமகள் தனககுத தலைவனோடு மணம நிகழததுமுன தன காலில அணிநதிருநத செறிநத வாயமைநத சிலமபினைக கழிதத விழாச சிறபபை யான கணடு மகிழ்ந்தறகினறிப பிறா கணடு மகிழுமபடி அவனுடன செனறுவிட்ட னளே' எனத தலைவியை நினைநது தாய வருநதி னாள் (நற. 279.9-11). தலைவியை உடனகொணடு போன தலைவன அவளைத தன் இலலததிறகுக கொண்டு புகுநதானாக, அவனதாய அவளுககுச செயத மணவினைகளைக கணடு அஙகிருநதும வந்தோர் அவறறைத தலைவியின தாயக்கு அறி வித்தபோது, அவள் அவரிடம், "நீவிர் அததலை வனின தாயிடததே, 'நும் மனையில இவளுடைய சிலமபினைக கழிதது நோனபியறறினாலும, எம் மனையில இவளுககுரிய வதுவையாகிய நனமணம் நிகழவதாக' எனத தெரிவிததிருப்பின் தவ றெனனோ" என வினவினாள் (ஐங. 399).

சிலை - 1 வில். குறவர் பெருமகனான ஏறைக்கோன சிலையை - விலலை - முழுதுமாக இழுதது அம பெயதலால அகனற மாாபினன (புறம். 157.6,7.13). கடிய நெடுவேட்டுவன வலிய சிலையையுடைய வன (புறம. 205.9). குறவர் சிலையையுடையவர் (புறம. 236·2). வெட்சி மறவனொருவன பகைவ ருடைய ஆனிரை செல்லும இடத்தைப பார்தது, மெலல எணணிச் சிலையினாலே கரந்தை மறவ ரது போரையும் மாற்றி அவ்வானிரையைக கவர்ந் தனன் (புறம. 257:8-10). குறவர் சிலையினால முள்ளம் பனறி வீழத்தபபடுதல் (புறம். 374:11) வெண்குடை எனனும் ஊர்ககுத் தலைவனாகிய சோழிய ஏனாதிதிருககுட்டுவன் சிலைப் பயிறசி யால நிமிர்நதெழுநத மார்பினையுடையவன் (புறம். 394·1-3) பகைவரது சிலையினினறும் புறபபட்டு வருகின்ற அமபுகளின விசையை அடககுவது கேட கம் (பதி. 45:15,16). ஆடுகோட்பாடடுச சேரலா தனின் மறவர், அமபுதொடுத்து எய்வதில் சோம பலைக களைநதவா; சிலையையுடையவர் (பதி. 60: 9). வளைநத சிலை தாங்கபபட்டு உராயநத மார்பிணையுடையவன் செலவககடுங்கோவாழியா தன் (பதி. 63:4). எயிறபட்டின நாடனாகிய நலலி யககோடன் தலைமையமைநத சிலையைத் தாங்கி உராயபபட்ட தோளையுடையவன (சி.வெ. 1:3,4). பாலை நிலதது மறக்குடி மைநதன் சிலைப்பயிற்சி யமைநத வலிமையுடைய தோளையசைதது மகிழந் தாடுதல் (பெரு. 136-146) செவ்வரிகளையுடைய கயல மீன்களும பசுமையான இறா மீனகளும் முறையே குருதியாற் சிவநது புலால் நாறுகினற முனையினையுடைய அமபுகளையும் சிலைகளை யும் ஒக்கும் (பெரு. 269,270) பாலைநில வழிகளில இளைஞர் சிலையுடைக் கையராய நினறு ஆறலை கள்வரை அணுகவாராது காபபர் (மது. 311-314). தாம் காவல் சோர்ந்தபோது யானைதினைப் புனத்தை மேயநததைப் பொறாத கானவர் சினமுற்றுப் பாம்பையொத்த அழகிய சிலையை நாணேறறிக் கணைகளை எய்தனா (குறி. 156-160). குனறததின்கண் குறுங்காட்டில குறவர் முறியாத வலிய சிலையை ஏநதியவராய் இரவிலும விலங்கு களை வேட்டையாடுதறகுத தேடிததிரிதல (மலை. 271-275). காட்டிலே மறவரின சிலையொலிக்கு வெருவிய மரையேறு முனனுள்ள குறுங்காட்டில விரைநதோடும (மலை. 406,407). அழகிய சிலை தன இடபபுறததேயிருகக அமபுகளை ஆராய்ந் தெடுததுககொணடு தலைவன தலைவியைக காண நினைநது குறியிடத்திறகு வருவான (அகம. 38:3-5). மலைசசாரலிடத்து வேங்கைமரததின உயாநத கிளையிலுள்ள புதுமலரைப் பறிக்க விருமபிய குறமகள், அககிளை தாழந்து கொடுககும கருததில புலிபுலி எனனும ஆரவாரததை எடுததலால அது பசுவினைக கவரவரும புலியைக குறிதத ஒலியாம என எண்ணிச் சீறூர் ஆடவரெல்லாரும சிலையை யுடைய கையராய விரைநது வந்தனர் (அகம். 52: 1-8). கள்வா கோமானாகிய புலலியெனபானு டைய மறவர், பசிய காலும மாட்சி பொருநதிய வரிகளுமுடைய வலிய சிலையில நாணையேறறிப் பகைவா மார்பில் அம்பெய்வர் (அகம். 61:5-12). பாலை நிலத்து மறவர் விசிததுக கட்டப்பட்ட சிலையினையுடையவா (அகம். 89:10). மழவா வலிய சிலையையுடையவர் (அகம. 119:9). வடிததலுற்ற அம்பினையும வளைநத விலலினையுமுடைய மறவர், பகைவரை வருததமுறுத்துகினற வலிய சிலையை மிக வளைதது அவர்தம ஆனிரையைக கவர்நது கொண்டு செலலுகையில, அதனை மீட் பதற்கு ஆரவாரிதது வருவோராகிய அபபகை வரை அலைதது ஓட்டிய வெறறியராயத் துடி கொட்டியாடுவா (அகம். 159.5-9). மலையடி வாரததுச சீறூாமக்கள் செப்பம் செய்துகொணட அமபினராய வலிய சிலையைத தோளில் தாங்கிக் கரடியின் ஒலியை உணர்நது அதனை இடந தோறும் தேடுவர் (அகம. 171:8-11). விசிததுக் கட்டபபடும் நாணவிளிம்பினை உருவி விடப பட்ட, விசையமைநத வலிய சிலையினை இழுதது அம்பு தொடுததலில குறிபிழையாதவர் வனகண ஆடவர் (அகம. 175:1,2). குறவன வளைநத மூங்கி லால இயற்றப்பட்ட வலிய சிலையைத் தோளிலே தாஙகிககொண்டு வேட்டையாடச் சென்றான் (அகம. 182: 2, 6). மயிலகள் உதிர்ததுவிட்ட தோகையின் பிளபபினை வலவிலலில் சுற்றிக கொணட வடுகர், அவ்வலிய சிலையினது நாண் விளிம்பிறகுப் பொருநதிய கணைகளையும் உடையவர் (அகம். 281:4-8). பாலை வழிகளில் ஆறலைகள்வரின சிலையிலே கோககபபெற்ற கணைகளால வழிப்போகும் புதியவர் வீழ்வர் (அகம. 289:1). வலிய சிலையில் தொடுததலமைந்த அமபுகளையுடையவர் வடுகர் (அகம. 295:14,15). குறவர் கள்ளருநதி மகிழநது காவலை மறநத போது தினைபபுனததை யானை மேயந்ததாக, அதனைப்பொறாத அககுறவருள் இளையரும முதியரும் கூடிச் சிலையினை ஆராயநதெடுததுக கொணடு, அநத யானையைத தேடித திரிதல (அகம. 348:7-13). அழகிய நாண்விளிமபினை உருவி விடப்பட்ட விசையமைந்த வலிய சிலையினையும குருதியாற சிவநத வாயினையுடைய அமபினை யும கொண்டவா செயிர்நோககாடவர் (அகம. 371:1,2). விசிததுக்கட்டபபடுதலையுடைய சிலை

யேநதிய மறவர் பலமுறையும் புகுந்து ஆனிரையைக் கவர்தலால் பாலை நிலத்து ஊரின் குடிகள் இடம்பெயர்ந்து போவர் (அகம். 377:4-6). அழகிய நாண் விளிம்பை உருவிவிடப்பட்ட கொடிய சிலையையேந்திய மறவருடைய அம்பினது பகையினின்றும் தம்மைக் காத்துககொளளாதவராய் வழிபபோகும் புதியவர் அவாகசு எதிரே சென்று அவரால் வீழததப்படுவர் (குறு. 297:1-3). கொடிய சிலையேந்திய மறவர், பாலை வழிகளில் செல்லும் புதியவர் மடியுமாறு நினறு காட்டிலே கொள்ளையிடுவர் (குறு. 331:1-3). வளைந்த சிலையையுடைய மறவர் (நற். 148·6). கானவன தனது வெஞ்சிலையை வளைத்துககணை தொடுத்து முள்ளமபனறியை வீழததினான் (நற. 285:2-4). அனபிலலாத ஆடவராகிய ஆறலை கள்வா அம்புகளைச் சிலையிலே பொருத்தமுற இருததிக் கொணடு புதியவராய வழிப்போவோரை வருததிக கொலவர் (நற 352:1-3). தலைவனுககும் தலைவிக்கும் இடைப்பட்ட களவினைக்குறித்துத் தோழி அறததொடு நினறதைச செவிலி வாயிலாயுணர்ந்த நற்றாய், அதனைத தலைவியின தமையன்மார்க்கு மெல்ல அறிவிதத அளவில, அவர் கண்சிவந்து, அமபுகளை நோக்கியும சிலையை நோககியும் எழுநது மனஞ்சுழனறு, பின இருவரிடத்தும் குற்றமின்மையுணர்நது சினம தணிந்தனர் (கலி.39·20-25). தலைவி நீஙகியிருநது நெஞ்சின வேட்கையை அடககியிருக்கையில, கருமபுவில்லாகிய தன் கைச் சிலையை வளைதது மலரம்புகளை ஏவித் தொழிலகொள்ள வலல காமனைப்போல் தலைவன் அவளிடததே வேட்கையை ஊட்டுவான (கலி. 143:33,34). செவ்வேள் காரணமாக நோந்த போரில வானவனமகளான தேவசேனையின பாங்கியாககெதிராக வள்ளியின பாங்கியர், வரிந்து கட்டப்பட்ட தம் சிலையை, அம்புகள் மார்பிலே பொருநதுமாறும வளைததுப் போரிட்டனர் (பரி. 9:53). திருமால் வரிநது கட்டப்பட்ட சிலையோடு வெறறி பொருநதிய அம்பினை யுடையவர் (பரி. 15:60). வரிநது கட்டபபட்ட சிலைபோலும் புருவததினையுடையவர் மகளிர் (பரி. தி. 1:36,37).

2. வானவில் (இநதிரவில). 'சிலை - வானவில் - போலும் மாலையணிநத மார்பனே' என்று சோழன் நெயதலங்கானல் இளஞ்சேட்சென்னி விளிககப் பெற்றனன (புறம. 10:10). போர் முரசுக்குச சிலை போலும் மாலையணியபபட்டது (புறம. 36:12). சோழன இலவநதிகைப பள்ளிதுஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி சிலைபோலும மாலையணிநத மார்பினன. (புறம். 61:13,14)

3. சிலைமரம். சிலையினால - சிலைமரததினால - செய்யப்பெற்ற வில்லையுடையவன கானவன (குறு. 385:2). எயினா சிலையினாலான விலலையுடையவர் (ஐங. 363.1,2). சிலையினால செயயப்பெறற அழகிய வலிய வில்லின நாணியெழுநத, சிஙகம முழஙகினாற்போனற சிறுநாணொலியினால பாலைநில மறவர் படையுடை அரசரையும புறங்காணபா (கலி. 15·1-3,7).

4. ஓசை. வெறறிமுரசம, கடுமையான சிலையை- ஓசையை - பாசறைமுழுதும பரபபுகினற ஒலி முழககமுடையது (பதி. 68.3). இனிய சிலையினையுடையது மானேறு (அகம. 7:9,10). சிலையினால மாடசிமையுடையது வில (அகம 69 15). ஆனேறு இனிய சிலையினையுடையது (அகம. 265.12). சிலையினால மாடசிமையுடையது கலைமான (குறு. 272:5). சிலைவலல இடியேறு (நற். 112·9). ஏறுதழுவும் நிகழசசியில, தழுவ வநத ஆயர் மேல் அவ்வேறுகள சிலை செறிநத சினம மிகுநது பாயநதோடின (கலி. 102:19,20).

5. சிலைத்தல் (ஒலிததல). நிறைநத முழக்கததை யுடைய மேகம, கணககிலலாத, அதிாசசிமிகக, கடுமையான சிலையோடு-சிலைததலொடு-முழஙகி மழை பொழிதல (பதி. 43 17,18,81 2-5).

**சிலைப்பு** - முழக்கம. சிலைபபு - முழககம - செயய வலலது ஆனேறு (பதி. 52·15)

**சிவப்பு** - 1. கண சிவபபு (சினம, ஊடல, கடகுடி ஆகியவற்றின வெளிபபாடு). பகைவரைச் சினநது நோககிய அதியமான் நெடுமான அஞசியின கண்கள், தன தவமகனாகபபிறநத சிறுவனை நோககியும சிவபபு - (அசசினததின வெளிபபாடான) கணசிவபபு - மாறப பெற்றில (புறம. 100:10,11). 'சினவாதே; நின கண சிவபபினை அஞ்சுபவனாகிய தலைவனொடு நீ கொணட ஊடலை நீஙகி, அவனொடு விளையாடத தொடஙகுவாய' எனறு காதறபரததைக்கு முதுபெணடிர் கூறினா (பரி. 6 96,97). திருபபரங குனறத்தினகண ஒருததிகள்ளைககுடிதத மகிழசசியினால கணகளில சிவபபுப்பரவப பூங்கொடிபோல அசைநதாடினாள் (பரி. 21·57-59).

2. சினம். பிரிநதிருககும காதலாககு மிககசுடிய சிவபபொடு - சினததொடு - அசசததைத தோறறு

விததுப பனிககால வாடை வீசுதல் (அகம். 235: 14,15).

3. செந்நிறம். தலைவி தன் சிவந்த விரலிலே மிகவும சிவபபு-செந்நிறம - பரவுமபடியாகக் கழி யிடததில தனடானகோரையைப் பறிகக மாட்டா திருககக்கண்ட தோழி, அதனைப் பறித்துபபாவை செயது தந்தாள் (கலி. 76:6,7).

4. செவ்வணி. தலைவன புதியவராய் நுகர்ந்த பரத்தையரிலலததிலே இருககையில் கறபுத் தலைவி, தனக்குப் பாஙகான ஒருததியை நாட்காலையில் சிவப்பு - செவ்வணி - அணிநது அவனிருக்குமிடத் திறகு விடுத்துத் தன் பூபபினை அறிவித்தல (பரி. 9:19,20).

**சிவல்** – கௌதாரிப்பறவை. காவிரிப்பூம் பட்டினத்துப் புறசேரியில் ஆட்டுக் கிடாய்களும் சிவலும-கௌ தாரிப்பறவைகளும்-தத்தமகருள் போரிட்டு விளை யாடும் (பட். 76,77).

**சிவலை** - சிவப்புப்புள்ளியமைந்த காளை. ஏறுகோடலில் தலைவன நெற்றிச் சிவலையை - (நெறறியில்) சிவபபுப புள்ளியமைந்த காளையை-வலியழிதது அடக்கினான் (கலி. 104·65).

**சிவிகை** - பல்லக்கு. வையையில் புனலாடுதற்கு மதுரை நகர மக்கள் பலரும் தண்டு பொருந்திய சிவிகையை யும் பல்லக்கையும-பிற ஊர்திகளையும அமைத்து அவற்றில் ஏறிச் சென்றனர் (பரி. 10:9,17·27).

**சிவிறியர்**- துருத்தியை (நீர் வீசும கருவியை) ஏந்தியவர். வையைப புனலில் ஆடுதற்கு மதுரை நகர மகளிரும் மைந்தரும உள்ளிடப்பட்ட புழுகு நெய்யினால் மாட்சிமையமைந்த சிவிறியராய்-துருத்தியை ஏந்தி யவராய்-செனறனர் (பரி. 6:27,34,37).

**சிள்வீடு** - சிள்வண்டு. வேலமரத்தின்கண் சிள்வீடு-சிள்வண்டு-ஒலித்தல் (அகம். 89·6) பாலையாகிய அருவழியில், வேர்முதல் முழுவதும் உலறி நிற்கும் துளைபட்ட காலினையுடைய வற்றல் மரத்தில் பொருந்தியிருந்து, தேர்மணி ஓசைபோலச் சிள்வீடு ஒலிககும். (அகம். 145:1-6). சுரநெறியில வற்றல மரததினைப் பொருந்திய சிள்வீடு பலவும ஒருங்கு சேர்நது உப்புவணிகரின கூட்டமான எருதுகளின் மணியொலிபோல ஓசையெழுப்பும (அகம. 303:16-18). காட்டுவழியில உலர்நத ஓமை மரககிளைக ளில் மறைந்திருந்து சிளவீடு ஒலிததல (நற். 252: 1,2).

**சிற்றடிசில்** - சிறுசோறு. வையை நீர் விழாவில இளம் பாவையா சிலர் தாம இழைத்த பொலிவுடைய சிறறிலிலதாம சமைத்த சிறறடிசிலை - சிறுசோற் றைப்பிறர்க்கு இட்டாராக, அதனைச் சிலர் ஏற்றனர் (பரி. 10:104,105).

**சிற்றாய்த்தியர்** - ஆயர்குல இளமகளிர்' மான் மருண்டு நோக்கினாறபோன்ற குளிர்ச்சியமைந்த கணணை யுடைய சிற்றாயத்தியராய்-ஆயர்குல இளமகளி ராய-நீ மயககிககூறும மொழிகளில மயஙகுவார்கசு உன மொழிகளைக கூறுவாயாக; யான் அவறறிற்கு மயஙக மாட்டேன' என முல்லைத் தலைவி தலை வனிடம் கூறினாள் (கலி. 108:46,47).

**சிற்றாறு** – சிறிய ஆறு. முன்னாளில் மோர்விற்று மீளும் நீ செமமுலலை நெருஙகிய கானததுச் சிறறாற றின்-சிறிய ஆறறின்-அயலிடததே, நின கணணி னால் எனனெஞ்சைக கவர்நதுகொணடு அடிமைத தொழிலுக்கு ஆட்படுததினாய' என்று முலலைத தலைவன தலைவியிடம மொழிந்தான் (கலி. 108.26-29) வெட்சிமறவரிடத்தயிருநது ஆனிரையை மீட்டு மாய்நத மறவனது உடமபு கானததுச் சிறறியாறறின கரையிலே நினறு நடுக்கததுடன சாயந்த இலக்குமரம் போல பகைவரின அமபு களால சலிதது வீழ்ந்தது (புறம. 260:15–24).

**சிற்றில்** - சிறுவீடு. மறக்குடித் தாயொருத்தியின் சிற் றிலினகண-சிறு வீட்டினகண்-அமைநத தூணைப் பற்றி நினறவாறு மறறொருபெண, 'நின மகன் எங்குளான, என வினவினள் (புறம. 86:1,2). இம மகளிர், முள்வேலியையும பஞ்சுபரந்த முற்றத்தை யுமுடைய சிறறிலினகண பீர்கசு முளைததுச சுரைபடர்ந்த இடததில ஈநதிலையையுடைய குபபைமேல ஏறிநினறு உமணரின உபபு வணடி களை எணணுகினறனரே' எனக்கபிலர் பாரி மகளிர் நிலைகணடு நொநதுரைததார் (புறம். 116: 3–8). தலைவி தோழியர் கூட்டத்துடன கடறகரைச சோலையில சிறறில் இழைத்தும சிறுசோறு சமைத் தும் வருநதியவருததம் நீஙக இளைப்பாறியிருந் தாள் (அகம. 110:5-9). ஆறலை கள்வராகிய கொடு வில் ஆடவரது பகைககு அஞ்சிக குடிகள் இடம மாறிபபோன பாழூர் மனறததுச சிறறிலின மெழுகப்படாத புலலிய திண்ணையிடததே, முன் னா இடையறாது நிகழ்ந்துவநத பலி மறநதமை யால் அதனிடை எழுதபபட்டிருநத கடவுளும புறத்தே போயவிடவே, பொலிவழிநதிருககும' அத் திணணையில ஈனறணிமையுடைய நாய படுத்துக குழியிட்டிருநதது (அகம. 167:8-17). முள்வேலியின்

கத்தே பந்தரையுடையதும் புதுமட்கலம் போன்ற செமமண் பூசியதுமாகிய சிற்றில் அமைநதிருந்தது. (அகம். 394:8,9). தலைவி, கோலம் புனைதலை யுடைய சிற்றிலிழைத்துச சிறுவிளையாடல் புரிவ தும் ஒழியுமாறு பெருநதுயருறறனள் (நற் 123.8-12). தலைவன சிறு பருவத்திலே தலைவி தெருவில் இழைத்து விளையாடிய மணற் சிறறிலைக் காலால சிதைதது ஓடினான் (கலி. 51:1-4). தலைவி தோழி யருடன் விளையாடியிருக்கையில் அங்குவநத தலை வன, 'நல்லவளே, நீ இழைத்து விளையாடும் சிற்றிலை யானும் சிறிது புனைகிறேன' எனறான் (கலி. 111:5-9). வரிமணலையுடைய துறையின் முன்னே சிற்றில் இழைத்து விளையாடிய தலைவி தோழியர் கூட்டததினின்று தனித்த போது தலை வன் அவளைக் கணடு கூடினான் (கலி. 114.15-17). பிரிவு நீட்டிபபினால் கலககமுற்ற தலைவி தலை வனைக் கூடுதல் இயலுமோ எனறு தனது சிற்றி லுள்ளே கூடற்சுழி இழைத்து ஆராய்நதாள் (கலி. 112:24,25).

**சிற்றினம்** - அறிவும் ஒழுக்கமுமில்லாத மாக்கள் கூட்டம். ஓய்மானாட்டு நல்லியக் கோடன தனககுச சிறறி னம - அறிவும ஒழுக்கமுமிலலாத மாககள் கூட்டம் – இலலாமையை அறிந்தோர் புகழுமாறு வீறறி ருந்தான் (சிறு. 207.209,222).

**சிற்றூர்** - சீறூர். தலையில் மோர்ப்பானையுடனே தலைவி பேரூரிலும சிறறூரிலும் – சீறூரிலும் - ஆரவாரம் உண்டாக்குவாள்போல மோர் விற்று வந்தாள் (கலி. 109:6,7).

**சிறகர்** - சிறகு. அருளியல வாழ்ககையினையுடைய வெளியன் வேணமான ஆஅய எயினன் எனபான பாழிப்பறநதலை எனனும போர்க்களத்தில மிஞிலி எனபானொடு நண்பகறபொழுதில செய்த வாட் போரினால புணபட்டு வீழநதானாக, ஞாயிறறின கதிர்கள் அவனுடலைக் காயாதவாறு புட்கள் பல வும் கூடித தம சிறகரால-சிறகால-பந்தரிட்டு நிழல் செயது சுழனறன (அகம். 208:5-12). ஆமபல மலரின வாடலையொத்த குவிநத சிறகரையுடையது மனையுறை குருவி (குறு. 46:1,2). மாலைப் பொழு திலே வெளவால இரைதேடச் செல்லுதற்கு முயன்று பரப்பிய சிறகரால் உயரபபறககும் (ஐங். 378:1,2). வெம்மை மிக்க காட்டிடததே. புறாச் சேவல்கள் தாம அனபுகொணட பெடைகள் வெமமையால வருந்திய வருத்தத்தைத் தம மென்சிறகரை விரிதது அநநிழலால ஆற்றும (கலி. 11:11-13). ஊழி முடிவில மேகங்கள் பொழித லால் விசும்பினின்றும் வீழ்கின்ற நீர் வறளுமாறு திருமால அனனச் சேவலாயச சிறகரால புலாத்து கிறார் (பரி: 3:25,26). சிறகு 1. காணக.

**சிறகு - 1.** இறகு. கூதிரககாலத்துப் பருநதினது கரிய சிறகை – இறகை - ஒதத கிழிந்த துணியை யுடையவராய இரவலர் இருந்தனர் (புறம். 150: 1, 2). கானக் காககையின தழைத்த சிறகு போன றது இருள்வாசிப்பூமாலை (புறம. 342:1, 2), மழை நீரில நனைந்த பருந்தினது கரிய சிறகு போனறது அழுககுததினற கநதையாடை (பதி 12.19, 20). பலயானைச் செலகெழுகுட்டுவன, குதிரைகளாகிய விரையும சிறகுகள விரியுமாறு தேராகிய பறவை யைச செலுததிப் பகைவர் நாடுகளில போரிட்ட னன (பதி. 25:12, 13). காறறினால உதிரககப பட்ட மலாகள் சிசசிலிப பறவையின சிறகுபோல மணறபரபபில சிதறிககிடநதன (அகம. 324.9 11). வணடுகள வரிகள் பொருநதிய அழகிய சிறகுகளை யுடையன (நற. 399.3). சிறகர் காணக.

**சிறத்தல்** - மிகுதல். மேடு பள்ளமெஙகும நீர் திரணடு பெருகவும் அருவிகள் ஒலிககவும யானைகள நடுங் கவும இடியுடனே கூடிய பெருமழை சிறததலால- மிகுதலால-ஆற்று வெள்ளம தாங்காது கீழகட லுககு விரைதல (மது. 240-245). அமபின வேகம் போலச செலலுதலைப பழகிய குதிரைகளைத தாறறுககோலின முள்ளால தீணடினால அவற றின வேகம சிறத்தலை அஞ்சிக கடிவாளததினால (குறிபபிததுத்) தேரினைச செலுததியவாறு தலை வன இரவுககுறிககண வநதான (அகம. 160.8-15). புதுபபுனலில இளநதுணை மகளிரொடு தலைவன அவாகள் நோககுநதோறும தன விருபபம தவிராத வனாயக காமம அளவு கடநது சிறததலால நாணிழநது ஆடினான (அகம. 266 1-9).

**சிறந்தது** மேமபட்டது. தமபியால நாடு கொளளப பட்டுக காட்டிலிருநத குமணனைப பெருநதலைச சாத்தனாா பாடி நினறபோது, அவாககுத தரும படியாக அஙகே தனினும சிறநதது-மேம பட்டது - பிறிதொனறுமிலலாமையால அவன தன தலையைத தருவானாகக் கைவாளைத தநதான (புறம். 165:8-13). பகைவரையும பகைபபடையின யானையையும வீழததித் தானும மடிநத மற வனைக கணட வேநதன போர்ககளததில மடி தலினும சிறநதது பிறிதொனறு இலலையென எணணி மறசசெயல் புரிநது மாணடனன (புறம. 307:2, 9-14). தலைவியின முலையிடை முயக

கத்தை ஒரு நூல் இடைப்பட்டுத் தடுப்பினும் அதனையாற்றாது வெறுக்கின்ற மிகப்பெரிய காமவின்ப நுகர்ச்சியினும் சிறந்ததொன்று இல்லையெனத் தலைவன் தன்னெஞ்சிற்கு அன்பினால் உரைத்தான் (அகம். 361:4-9). தலைவி தோழியருடன் விளையாடியிருக்கையில் மணலிலே ஊன்றிய புன்னைவிதை முளைத்துச் செடியாகவளர்ந்ததுகண்டு நெய்யையும் பாலையும் நீராகப் பெய்து இனிது வளர்த்த அப்புன்னை மரத்தை 'இது நும்மினும் சிறந்தது; நும் உடன் பிறப்பாகும்' என்று அன்னை அதன் சிறப்புரைத்தனள் (நற். 172:1-5). 'நான்மறைப் பொருளை விரித்து அதன் நல்லிசையை விளக்கும் புலவீர், சிறந்ததொரு பொருளைக்கேண்மின்: காமத்திலே சிறந்தது காதலையுடைய காமம்; புலத்தலால் சிறந்தது கற்பு வாழ்க்கை' என்று களவுக்காதலின் சிறப்புரைப்பர் குன்றம்பூதனார் (பரி. 9:12-16). தெய்வங்கள் தாமாக விரும்புகின்ற சிறந்த குலவரைகள் சிலவற்றுள்ளும் சிறந்தது, மாயோனையும் தன் முன்னோனையும் (பலராமனையும்) தாங்குகின்ற இருங்குன்றம் (பரி. 15:8-14).

**சிறந்தவர் - மேம்பட்டவர்.** திருப்பரங்குன்றத்தில் தமரினின்றும் பிரிந்த பேதைப் பருவத்தினள் ஒருபெண் கற்களின் இடையிடையே திகைத்து, 'சிறந்தவரே' எனவும் 'சிறந்தவரோ' எனவும் அவரை விளித்துக் கூவினாள் (பரி. 19:58-61).

**சிறந்தவள் - மேம்பட்டவள்.** தலைவன் வரையாது களவு நீட்டித்தலை ஆற்றாத தலைவியை, 'வாழும் நாள் சிறந்தவள் - மேம்பட்டவள் (மிக்கவள்) - என்று தோழி குறித்தாள் (கலி. 48:48-9).

**சிறந்தவன் - மேம்பட்டவன்** (கணவன்) 'எனக்குச் சிறந்தவன்-மேம்பட்டவன்-ஆகிய கணவன் என் வலிமை அறும்படி என்னைத் துறத்தலால் பெருகிவந்து என்னிடத்தே நிலைபெற்ற இக்காம நோய், கோடையில் பெய்யாதொழிந்த மேகம் வருத்து தலைப் போலும், என்று தலைவி தலைவன் பிரிவு நீட்டித்த நிலையில் கலங்கி மொழிந்தாள் (கலி. 146:14-17).

**சிறந்தவை - மேம்பட்டவை** (சிறப்புக்கள்). 'மனையிலே மெல்ல நடந்து தோழியருடன் சிறிதே பந்தாடினாலும், அவளை வாராய் எனப் பாராட்டி அன்புறப் பாலூட்டிப் பிறந்தநாள் தொட்டுச் சிறந்தவை-மேம்பட்டவை-ஆகிய சிறப்புக்கள் பலவற்றையும் செய்து, யான் நலம்புனைந்து வளர்த்த என் குறுமகள் அறனிலாளனாகிய தன் தலைவனுடன் போயினளே' எனத் தாய் இரங்கினாள் (அகம். 219:1-10).

**சிறந்தார் - மேம்பட்டார்.** 'மாயோளே, யான் விரும்பு தற்குரியராய் நின்னைக் காட்டிலும் சிறந்தார்-மேம்பட்டார்-இம்மண்ணுலகில் இல்லாமையை நீ தெளிவாயாக' எனத் தலைவன் தலைவியிடம் கூறினான் (கலி. 108:53,54) பிடியானையைக் கண்டு மயக்கமுற்றோடிய களிற்றியானையை அடக்கி ஆடவருள் சிறந்தார் மகளிருள் சிறந்தாருடைய நடுக்கத்தைக் களைந்தனர் (பரி. 10:49-52).

**சிறந்தான் - மேம்பட்டவன்** (கணவன்). மிக்க கற்பினையுடையாளாகிய நும்மகளைக் குறித்து நீர் வருத்தமுறாதீர்; அவள் தன் பெற்றோரினும் சிறந்தானை-மேம்பட்டவனை (கணவனை)-வழிபட்டு அவனுடன் போயினள்' என்று தலைவியைத் தலைவனுடன் போகக் கண்ட முக்கோல் பகவர், பின்தேடிச் சென்ற செவிலிக்கு அறிவுறுத்தினர் (கலி. 9:22,23). தன் தோள் நலத்தையுண்டு பின் பரத்தையிற் பிரிந்து தன்னைத் துறந்தானெனக் கணவனொடு ஊடியிருந்த குலமகளொருத்தி, வையை நீர் விழாவில் அச் சிறந்தானொடு ஊடல் தணிந்து யானை மேலேறினாள் (பரி. 12:45-49).

**சிறந்திசினோர் - மேம்பட்டோர்** (சிறந்தோர்). தலைவ, உலகம் படைக்கப்பட்ட காலத்திலேயே, தம் காதல் மகளிரின் கூந்தலில் துயில்வதாகிய அருமையாகப் பெறுகின்றபெரும்பயனைக் கொள்ளாதுபொருளை மட்டும் படைத்தோர், அவ்வின்பப் பயனை மறந்தனரோ? ஆயின், அவர், சிறந்திசினோரே-மேம்பட்டோரே'- எனத் தோழி தலைவனது பொருள்வயிற்பிரிவை விலக்கும் குறிப்புடன் பேசினாள் (நற். 337).

**சிறந்தோர் - மேம்பட்டோர்.** பாதியிரவில் தலைவியின் இல்லக்கதவினைத் திறந்து அவளைக்கூடிய தலைவன் அவளினும் தனக்குச் சிறந்தோர்-மேம்பட்டோர் இம்மையுலகத்தில் யாருமில்லையெனப் பாராட்டிப் பன்னாளும் பழகினான் (அகம் 311:1-7). 'நீ பிறந்த போதே நின்னைக் கண்டு மனம் துணுக்குற்றுச் சிறந்தோர் (இந்திரன் முதலாய தேவர்) அஞ்சுதற்குக் காரணமான சீருடையோயே' எனச் செவ்வேள் போற்றப்படுதல் (பரி. 14:25, 26). அறத்தைச் செய்து அதன் பயனை நுகரச் சிறந்ததோருலகமாகிய தேவருலகத்திற்குச் செல்வாரைப் போல மதுரை நகர மைந்தரும் மகளிரும் திருப்பரங்குன்றத்திற்குச் சென்றனர் (பரி. 19:8-11).

**சிறந்தோன்** - மேம்பட்டோன் (தந்தை). தலைவன், தனக்குச் சிறந்தோன் - மேம்பட்டோன் - ஆகிய தந்தையின் பெயரனாகிய தன் மைந்தன் பிறந்தானாகப் பரத்தையரில்லத்திலிருந்து இடையாமத்தே கள்வன் போலத் தன்னில்லத்திற்கு வந்தனன் (நற். 40:10-12).

**சிறப்பினோன்** - சிறப்புக்களையுடையோன். 'பிற அரசுகள் வீழும்படியாக அவற்றை வென்று நெறியோடு கொண்டு வந்த தலைமை மிகுகின்ற சிறப்பினோன் - சிறப்புக்களையுடையோன் - ஆகிய பாண்டியனுடைய தொல்குடிக்குரியவாய் நிலத்தில் விளைந்த முத்துக்களோடு கடல் விளை முத்துக்களும் பிற பொருள்களும் தீதின்றிப் பொலிக' என்று கருதி ஆயர் ஏறுதழுவினர் (கலி. 105:1-7). சீர்மிகு சிறப்பினோனான ஆலமர் செல்வன் (சிவன்) தான் இருந்த ஆலமரத்தில் தூக்கி வைத்த நீர் நிறைந்த கரகம் போலத் தாழை மரத்திலே பழம் தொங்குதல் (கலி. 133:3, 2-4).

**சிறப்பு - 1.** தலைமை. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, பல மாண்புகளும் பொருந்திய கெடாத சிறப்பு-தலைமை-அமைந்த வேள்விகள் பலவற்றைச் செய்து முடித்து, அகன்ற அவ்வேள்விச் சாலைகளில் தூண்களை நாட்டினான் (புறம். 15:19-21). 'புகழ்த் தொடங்கியோர்க்கு அருமையினால் மாயோனையொத்த உரைசான்ற சிறப்பினையுடைய புகழமைந்த மாறனே' என்று பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை விளிப்பர் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் (புறம். 57:2,3). வளவனுடைய மாலைவெண்குடை, பகைவராலும் கொடியோராலும் வருகின்ற துன்பவெயிலை மறைப்பதற்கு உயர்த்திய அச்சம் பொருந்திய சிறப்பமைந்தது (புறம். 60: 10-12). சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போரிட்டு மாய்ந்த களத்தில் புகழமைந்த சிறப்பினையுடைய முரசுகளும் வீழ்ந்தன (புறம். 62:8,9). ஓங்கிய சிறப்புடனே மேம்பட்ட கேள்வியறிவையுடைய மாங்குடி மருதனார் முதல்வராக, உலகத்தோடு நிலைபெற்ற பலரும் புகழும் சிறப்பமைந்த புலவர் பாண்டியன் அவையிலே இருந்தனர் (புறம். 72:13-16). தம் குடியின் மூத்தோரைக் கூற்றம் கொண்டு போனதனால் விதியால் கொடுக்கப்பட்டுத் தம்மிடத்தே வந்த பழைய அரசுரிமையை, 'இச்சிறப்பினைப் பெற்றோ'மெனக் குடிமக்களை வரிவேண்டி வாங்கும் ஆண்மையில்லாத சிறியோன் பெறுவானாயின் அவனுக்கு அது தாங்க மாட்டாதபடி மிகவும் கனமுடையதாம் (புறம். 75:1-5). 'இறைவ, புகழ்சான்ற சிறப்பினையுடைய நினது நல்ல புகழை நினைந்து யான், விறலி பின்தொடரச் சீறியாழை ஒரு புறம் தழுவிக்கொண்டு நின்னிடத்தில் வந்தேன்' என்று ஆய் அண்டிரனைப் பாடுவர், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் (புறம். 135.4-10). 'இவ்வுலக முழுவதிலும் விளங்குகின்ற சிறப்பினையுடைய குமணனே' என்று அவனை விளிப்பர் பெருஞ்சித்திரனார் (புறம். 158.26). அணுகுதற்கரிய சிறப்பினையுடைய மிக்க செல்வர், வறுமையால் இரப்போர்க்குக் கொடாமையால் தம் பெயரை நிறுத்தி உலகொடு தொடர்ந்து வருதலை அறியாதவரானார் (புறம். 165'3-5). 'இறைவனது (சிவனது) வாயினின்றும் நீங்காத முதுநூலுக்கு (வேதத்திற்கு) மாறுபட்ட நூல்களைக் கண்டாராகிய புறச் சமயத்தோரின் மேம்பாட்டினைச் சாய்க்க வேண்டி, அவரது மெய்போன்ற பொய்ம்மையுணர்ந்து, அப்பொய்யை மெய்யெனக் கருதாமல் உண்மைப்பொருளை அவர்க்குணர்த்தி இருபத்தொரு வேள்வித்துறையையும் குறையறச் செய்து முடித்த புகழ் சான்ற சிறப்பினையுடைய அறிவுடையோர் மரபில் வந்தோனே' என்று சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனை ஆவூர் மூலங்கிழார் பாராட்டி விளிப்பர் (புறம். 166'1-9). சேய்மைக்கண்ணே நின்று விளங்கும் சிறப்பினையுடையது ஞாயிறு (புறம். 174'2). இகழ்ச்சியற்ற சிறப்பினையுடையது முள்ளூர் (புறம். 174.13) தன்னைக் கொடிமுல்லையானது நாத்தழும்பேறப் பாட மாட்டாதாயினும் அதற்கு நெடுந்தேரினைக் கொடுத்த, பரந்துமேம்பட்ட சிறப்பினை யுடையவன் பாரி (புறம். 200: 9-12). கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த இடத்திற்குத் தாமே உள்ளுணர்வினால் வந்த பிசிராந்தையாரின் வரவுகண்ட பொத்தியார் 'எத்துணையும் பெரிய சிறப்புடனே கூடியும் இவன் தன் நிலைமையினைக் கைவிட்டு இங்கே வரத்துணிதல், கருதுங்காலத்து வியக்குந்தன்மையுடையது' என வியந்தார் (புறம். 217.1,2). ஞாயிறு வானத்தின்கண் பரந்தாலொத்த, சேய்மையிலிருந்தும் விளங்குகின்ற சிறப்பினையுடைய செம்பியர் மரபிலுள்ளவன் சோழன் குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (புறம். 228'8-10). பாரி இறந்த பின் அவன் மகளிரைப் பார்ப்பாரிடத்தே அடைக்கலப் படுத்திவிட்டு வடக்கிருந்த கபிலர் அப்பாரியை மனக்கண்முன் கண்டு, 'பாரி, யானும் நின்னுடன் வருதற்கிசையாமல், 'இங்கேயே இரு' எனச்

சொலலிப் பெருமையமைநத சிறபபினையுடைய
நட்பிறகுப பொருநதாமல நீ இபபடி வேறு
படடனை யாதலின நினககு யான பொருநதினே
னலலாமையால நீ என்னை வெறுத்தாய போலும்'
என நொந்துரைத்தார் (புறம். 236:3-9). 'நேற்று
உரைசான்ற சிறப்பினையுடைய பகைவேந்தர்
காணுமாறு அவர் படைகளைப பிளநது சென்று
போரயானைகளைக் கொன்ற என்னைக குறித்து
இன்று இகழ்வோரைக கொலலும காளையாகிய
இவன குதிரையைச செலுத்தி வேலினையாட்டிய
வாறு வருகின்றான்' எனக களத்திலே மறவ
னொருவன அஞசாது நின்றான (புறம். 303).
போரககளததில மறததலைவனொருவன் தனக்கு
யாரையும துணைவேணடாத நிலையில தன
சிறப்புடைய செங்கண சினததீயின புகையை
வெளிப்படுததுமாறு பகைவர் முன்னின்று ஒரு
கேடகததைககொணடே தன்னை மறைததுப
பொருது மேம்பட்டனன (புறம். 311:4-7). தகை
சான்ற சிறப்பொடு இமையவரமபன் நெடுஞ்
சேரலாதன் பெருமபுகழ் அமைநத மரபினரான
ஆரியரை வென்று பணிவிததான் (பதி. ப. 2:6,7).
பழைய நிலைமையான சிறபபினையுடைய தன்
ஆடசியினகீழ வாழும் குடிமக்களுக்குக் கொடுமை
கள் அறுமபடி அவரைச செமமையுறக் காத்த
மாறுபடாத கோட்பாடமைந்தவன் களங்காய்க
கணணி நார்முடிச்சேரல (பதி. 37:10,11). 'முறை
யாக வளாநத உயர்பெருஞசிறப்பினையுடைய பூழி
நாட்டைக களஙகாய்க் கணணி நார்முடிச்சேரல்
படையெடுதது வென்று தன்னாட்டுடன் சேர்த்துக்
கொண்டான் (பதி. ப. 4:5,6). பெருஞ்சேரலிரும்
பொறை அதிகமானொடு வநத சோழபாணடி
யராகிய இருபெருவேநதரையும் ஒருஙகே வென்று,
அவர் தம் முரசுகளையும் கொற்றக்குடைகளையும்
முடிமுதலாயகலன்களையும கைப்பறறிக் கொண்டு,
உரைசான்ற சிறப்பினையுடைய களவேள்வி
செய்து, அதிகமானின மகளிர் கண்டு இரஙகு
மாறு அவன வலிமையையழித்துத் தகடூரையும்
எறிநது அதனமதிலகளைக் கைக்கொண்டான (பதி.
ப. 8,4-10). 'உயாநத பெரிய சிறப்பினையுடைய
மேம்பட்ட புகழோனே' என்று இளஞ்சேரலிரும்
பொறை விளிககப்பெறறான (பதி. 90:40). 'பூண
களையணிந்த சிறப்பினையுடைய பழையோளாகிய
காடுகிழாள் குழவியே' என முருகன ஏத்தப்பெறு
தல (முரு. 259). தன்னுடன எககாலமும் நெருஙகி
விளஙகுகின்ற சிறப்பினையுடைய பலகலையறிஞர்
புகழ, நலலியககோடன வீற்றிருந்தான (சிறு. 209:
220). முரசு முழங்குகின்ற தானையையுடைய
மூவேநதருள்ளும மேமபட்ட சோழர்குடி மரபின
னான பலவேற்றிரையன, கடலிடத்துப்பிறந்த
சங்குகளில மேலானதாக உலகம் கூறுகின்ற
வலமபுரிச சங்கையொதத குற்றம தீர்நத சிறபபினை
யுடையவன (பெரு. 29-37). பாணடியாகுடியின்
முன்னோனாகிய நெடியோன் உயர்ந்தோங்கிய
மேம்பட்ட சிறப்பினால பிற அரசருடைய
நிலங்களையெல்லாம் வென்று தன் நாட்டுடன்
இணைததனன (மது. 59-61). பகைவரின் அரண்
களை அவ்விடங்களிலே சென்று கைப்பறறிக்
கொண்டு மீணட சீரிய சிறபபினையுடைய
கொறறவர்தம் கோனாவான் பாணடியன நெடுஞ்
செழியன (மது. 67-69,74). பாணடியன் நெடுஞ்
செழியன அச்சம் பொருந்திய பெருஞ்சிறப பினை
யுடைய கன்றுகளோடும பிடிகளோடும் களிறு
களைப் பொருநாககு வழங்குவான (மது. 99-
102,105). பெரிய உலகததிலே மேமபட்டதாயத்
தோன்றுதலால் புகழமைநத விழுச்சிறப்பினை
யுடையது கொற்கை (மது. 133,134,138). இசை
ஏழும் தனனிடததே கூடிய சிறப்பினையுடைய
இனிய நரமபமைநதது சீறியாழ (மது. 559).
தொல்லாணையை உடைய நலலாசிரியர் பலர்
கூடியிருந்து ஆராயநத ஆராய்ச்சியின பயனை
நுகாந்த புகழசான்ற சிறபபினையுடையவன்
நிலந்தரு திருவின நெடியோன (மது. 761-763).
பாணடியன சான்றோர் பலர் வாயிலாய்க குறற
மற்ற சிறபபினையுடைய மெயபபொருளையுணர்ந
தான (மது. 764, 765). திருமகள் நிலைபெறற
குற்றமறற சிறபபினையுடையது அரணமனை
(நெடு. 89, 100). பாணடியன் நெடுஞ்செழியன
பீடமைநத சிறபபினையுடைய பெருநதகை (நெடு.
106). விணணிடததே மிகக செலவினையுடைய
ஞாயிற்றுடனே மாறுபாடு மிகுந்த சிறப்பு
அமைநதவன் திஙகளஞ்செல்வன் (நெடு. 161,162).
குற்றமறற சிறபபினையுடையது தெய்வம (பட்.
159). குறையாத சிறபபினையுடையது காவிரிப
பூம்பட்டினம (பட். 218). பரநத இருள் நீஙகுமபடி
பகற்பொழுதைச் செய்து தோன்றும ஞாயிறறை
யொததுப பகையிருளைக கடிந்த குறறமிலலாத
சிறபபினையுடையவன் நன்னன சேய நன்னன
(மலை. 84, 85). தலைவியின் காமநோயினைத்
தெயவத்தால நோநததாகக் கருதிய அன்னை
இனியம் இசைககக கைதொழுது அச்சம்
பொருந்திய சிறபபினையுடைய முருககடவுளை
மனைககண வருவிதது வெறியாடடெடுததாள்
(அகம. 138:1-13). கொடுமுடி என்பான காககின்ற
ஆமூர், நெடுநதொலைவிலும சென்று விளஙகும
சிறபபினையுடையது (அகம. 159:18,19). 'குடிககு
விளக்காகிய புதலவனைபபெறற புகழமிகு சிறப

பினையுடைய நலலோள்' என்று தோழி தலை வியைக் குறித்தல (அகம். 184:1-3). புகழ்மிக்க சிறப்பினையுடையது பாண்டியனின் கொற்கைப் பட்டினம் (அகம். 201:3,4) ஆட்டனததி என் பானைக் காவிரி வெள்ளம் கவர்ந்து கொண்டதாக அவனைத் திசையெல்லாம் தேடியலைநத அவன் காதலியாகிய ஆதிமந்திக்கு அவனைக காட்டிக் கொடுததுத் தான் கடலிலே போயொழிந்த பாடல் சான்ற சிறப்பினையுடைய மருதி எனபாள் மாட்சிமைப்பட்ட புகழெயதினள் (அகம. 222:7-12). பசுமபூட் பாண்டியனின் கூடல் மாநகர் பெருமைபொருநதிய சிறப்பினையுடையது (அகம். 231:12,13) 'பாணனே, பலரும் புகழதறகுரிய சிறப்பினையுடைய நும தலைவரை நினைந்து நீ அவரிருககுமிடத்திறகுச் செலலவிரும்பினையாயின, எமமை அரிய துனபததில ஆழத்திய அபபொய்வ லாளர் போல நீயும் எமமை மறவாது நினைவா யாக' எனத தலைவி பாணனுக்குரைத்தாள் (ஐங். 473). ஒரு குழையொருவனான நமபிமூதத பிரா னும் பருதியஞ்செலவனும் மீனேறுக்கொடியோ னான காமனும அவன தம்பியான சாமனும் ஆனேற்றுககொடியோனான இறைவனும் என்ற குறறம் தீர்நத சிறப்பினையுடைய ஐவர்தம நிறம் போல வெண்கடமபும செருநதியும காஞ்சியும் ஞாழலும் இலவமும் ஆகிய மரஙகள் பூததுப் பொலியுமாறு இளவேனில் வநதது (கலி. 26:1 8). 'வளமை சானற உயர்ந்த சிறப்பினையுடைய நுந்தையின மனையினின்றும் இளமையால பநது டனே தளர்நதொதுங்கிப புறபபடுபவளே' எனத் தலைவன காமஞ்சாலா இளமையோளை விளிததுப் பேசினான் (கலி. 57:6,7) புகழ் சானற சிறபபி னையுடைய நினது நெஞ்சை, நீ ஆடிய புதுபபுனல் (புதுப்பரத்தை) கவர்ந்து கொண்டதனாலே அப் புனலின் பெருககிலிருநது ஏறுதற்கு நீ இன்னும் கரையைக் கண்டதுமில்லை' எனத் தலைவி தலை வனின பரததைமையைப பேசினாள் (கலி:98:27-29). தாம சென்றவிடத்துத் தமக்கொரு கேடின் றித் தாம் போன செயல வாய்த்து வநது சிறப் பெயதித துறையிடத்தனவாகிய மரககலங்கள் சூழந்து நிறகும கடலையுடையவன தலைவன் (கலி. 132:6,7) விருமபத்தககதொரு சிறபபுப் போல் தோன்றும காமம, கணடோர்கசு நனவில் உத வாது வேறுபட்டுப்போகும் கனவினும நிலைபேறு இலலாதது (கலி. 145:1-3). 'அறநெறியிற் செல லும் திறனில்லாதவரை அநநெறியிற செலலும்படி திருத்திய குற்றமறற சிறபபினையுடைய மறககரு ணையும் நீயே' எனறு திருமால போற்றப பெறு கின்றார். (பரி. 1:39,40) 'திகழ்கினறதாகிய நின திரு மேனியொளி, சிறப்பினையுடைய இருண்ட நீல மணியை ஒக்கும்' என்று கீரநதையார் திருமாலைப் போற்றுவர் (பரி. 2:52) 'அனைததுப பொருள்களும அவற்றின் உட்பொருள் நீயாதலால, மறதியுடை யோர் தம் மறதியாலே நினனைப போற்றுகினற சிறப்புக் காரணமாககுறித்துசசொல்லபபட்டநின் உறைவிடங்களும் உறைதலும் ஆகியவை நினக்கு உளவாதல் பொய்' எனக கடுவனிளவெயினனார் திருமாலின தன்மையைக்கூறுவார். (பரி. 3. 68-70). 'பூதங்கள் ஐந்தும் செயற்பொறிகள (கனமேந் திரியங்கள்) ஐந்தும் அறிவுபொறிகள் (ஞானேந திரியங்கள்) ஐநதும் புலனகள் ஐந்தும உட கருவி கள் (அநதக்கரணங்கள்) மூன்றும் மூலப் பகுதியும் பாழும (புருடனும) எனப்பட்ட மெய்பபொருள் கள் இருபததைநதனாலும எககாலததும ஆராயப் படும் சிறப்பினையுடையவர் திருமால் (பரி. 3.77-80). 'இவ்வுலகிற்கெலலாம் தலைவன நீயேயாத லால் வெறியாடலில வேலன் நினனைக்கண்டு ஏத்துகின்ற பாட்டுககள் மெயயுமல்ல; ஆயினும் அஙகே நீ தோன்றுதலால் அவை பொயயுமலல; அவற்றுள் ஒன்றானவிடதது அததலைமையாகிய சிறப்பினையுடைய நீ அசசிறபபினறி ஒழிவாய' எனச் செவ்வேளைப் பாடுவார கடுவனிளவெயின னார் (பரி. 5:15-18). பிறர் கிடடுதறகரியதும விரும்புதறகுரியதுமான சிறபபினையுடையவன அமரர் செலவனாகிய இநதிரன (பரி. 5:51). வையைக் கரையில அமபாவாடலையுடைய கனனி யர் பனிககாறறு வீசும வைகறையில நீராடிய பின் அந்தணரது வேத நெறியால வளாககபபட்ட தீயினைப பேணிய சிறபபுடனே அதனகண தம ஈரவுடையைப் புலர்ததுவர் (பரி. 11 81-87) திரு மால் பாறகடலைக கடைநத காலததில அவுண ரும் அமரருமாகிய புகழசானற சிறபபினையுடைய இருதிறததோர்ககும் பறறியிழுககும நாணாகி யிருநதவர் பூமுடி நாகரான ஆதிசேடன (பரி. தி. 1;64-68). தனககுப் பிறா பணிதலேயனறித தான பிறர்க்குப் பணிதல் இலலாத உயாநத சிறபபினை யுடையவன் பாணடியன (பரி. தி.2.46).

**2. மதிப்பு.** மக்கட்பிறப்பில சிறப்பு - மதிபபு - இல்லாதது குருட்டுப் பிறபபு (புறம. 28:1). சிறபபு டைய முறைமையினால பொருளும் இனபமும அறததின பினனே தோனறுதல் (புறம். 31:1,2). சோழன செருப்பாழியெறிநத இளஞ்சேட்சென்னி தன கோயில வாயிலில் நினறு பாடிய கிணைப பொருநர்க்கு அவர் தரத்திறகு மேமபட்ட சிறப் பினையுடைய அருஙகலஙகளாகிய செல்வததை அவர் ஏறகுமளவிறகு மேலும கொடுத்தான (புறம்.

378 5-12). சோழன் நலஙகிள்ளி இரவின் கடையா மததே தன்வாயிலில நினறுவாடிய கிணைஞனின் கநதையாடையை நீககிவிட்டு, மிகபபெரும சிறப் பினையுடைய வீறுசால ஆடையை அளித்தான (புறம. 400 5-13) பேண ததகக சிறபபினையுடையது பெ ண்ணியல்பு (பதி. தி. 3.1) நனனன்சேய் நனனன தனனைக காண வந்த கூத்தர்க்கு இகழ்சசியற்ற சிறபபினையுடைய, இழை போககு அறியபபடாத நுண்ணிய நூலாடைகளை இடையிலே உடுததி விடுவான; கணடு விடைவேணடும விறலியர்க்கு அழகமைநத சிறபபினையுடைய விளககம மிக்க பேரணிகலனகளை அணியக கொடுபபான (மலை. 561-570). 'மெலலியல குறுமகளே, யான் அரிதாகப் பெற்ற சிறபபினையுடைய நினனிடத்தினினறும் பிரியுமாறு கருதுதலுமுண்டோ' எனத் தலைவன் தலைவியைத தேறறி வற்புறுததினான (அகம். 75: 21- 23). அரிதாகப பெறுகின்ற சிறப் பினையுடையது காமம (அகம். 353:5). 'அறியாத நாடடின அருஞ் சுரநெறியிலே தனனையழைத துபபோன சிறியோனுககொத்த என் இளமகள் சிறபபும சீருமினறிச சீறூரினிடத்தே வறிய பெணடின் குடிசையாகிய தொடர்பில்லாத வறு மனையில் சிலம்பு கழித்து அவனுடன மணம பொருநதினளோ' எனறு செவிலி, தலைவனுடன் போன தலைவியைக குறித்து இரங்கினாள் (அகம. 369:20-26). அரிதாகப் பெறுதற்குரிய சிறபபினை யுடையது புத்தேள்நாடு (தேவருலகம) (குறு. 101·2). தலைவி தோழியருடன விளையாடியிருக் கையில மணலிலே ஊன றிய புனனைவிதை முளைத் துச் செடியாக வளர்நதது கண்டு, நெயயையும் பாலையும் நீராகப பெயது இனிது வளர்ந்த அப் புன்னை மரததை, 'இது நும்மினும் சிறநதது; நும் உடனபிறபபு ஆகும், எனறு அன்னை அதன் சிறப்புரைத்தனள் (நற 172:1-5). தலைவனுக்கு அகனற பெருஞ்சிறப்பினையுடைய தந்தை பெயர னாகிய புதலவன முறுவலிததுச் சிறுதேருருட்டும் தளர் நடையைக கண்டு விருப்பம் மிகுந்தது (ஐங. 403). 'நெஞசே' புகழ்சானற சிறப்பினை யுடைய காதலி தனித்திருக்குமாறு நீ அவளைப் பிரிந்து வந்ததுமலலாமல எமமையும் வரச செய்த னையே' எனறு தலைவன் பாசறைக்கணணே பருவ வரவு கண்ட நிலையில தலைவியை நினைந்து நெஞ்சொடு புலந்துரைத்தான் (ஐங். 445). 'ஒளி பொருந்திய அணிகளையணிந்தவளே, சிறப்பொடு விளஙகிய காட்சியினையுடைய நின மாமையழகு' நினனைக் காதலர் மறக்குமாறு விடுமோ' எனத தோழி, தலைவனின பிரிவுக் காலததில பருவவரவு கணடு வருநதிய தலைவியை வறபுறுததினாள் (ஐங். 470:3-5). 'தேடுகின்ற பொருளாலுணடாகும் சிறபபினை நினைந்து போனவராகிய தலைவர்க்காகப பிற தெயவங ணடிக்'கொள்ளககருதி மனஞ்சுழலாதே' என்று தோழி தலைவியை ஆற்றுவிததாள் (கலி. 16:18,19). புல்லியார் அருகில் இருககும போது ஒருவர்க்குச் சிறப்பு செயது புகழ்ந்து வாழ்ததி அவர் எழுந்து போன அளவிலேயே அவாககுள்ள பழிகளைத் தூறறுவர் (கலி. 25:15,16). பாடல்

ற சிறபபினையுடையன பூக்கள் (கலி. 28:1). கார்காலம் முதிர்தலால மலர்களைச் சூடிச் சீர் முற்றிப் புலவர்வாயிற சிறப்பினை வையை பெறறு வரும (கலி. 67:1-3). 'நின் கண்ணாலும் நுத லாலும் கதுப்பாலும அழகிய கையாலும் நீ நின் தந்தைககுத் தணனைச் செய்யும் சிறப்புப் போலே எமககும்சிறபபுச் செயது இவ்விராககாலத தில் எம்மோடு தங்கிப் போக வேண்டும்' என்று தலைவனுடைய பரத்தையர் அவன மகனை வேண்டினர் (கலி. 83·17-20) 'விளக்கமுறுத்தாத மணியைப் போல அழகு கெட்ட நின காதலியின் திரண்ட நெடுமென தோளின வளை கழனறது, நீ நறும் பொழிலிலே அவளைப் புணர்நதிருநது, 'நின்னைப் பிரியேன' என்று தெளிவித்ததனால் உள்ள சிறப்பன்றோ' எனத தோழி தலைவனை வினவி வரைவு கடாவினாள் (கலி. 132:12-15). திருப்பரஙகுன்றத்தின்கண முருகனது யானைககுச் செயயும் பூசையில் அந்த யானை கவளங்கொண்ட மிசசிலைசசிறபபோடு உணணாதொழியின் மணம பெற்ற மகளிர் தம் காதலரது அருளை எய்தார்; மணம் பெறாத கனனியர் மைநதர் தோள்களைக் கூடார் (பரி. 19:85-94). தாழாத சிறப்பினையுடைய வர் தளிரியல் மகளிர் (பரி. தி.2:15).

3. செல்வம். யானையணிகள் போரிட்ட இடமகன்ற பாசறையில், ஊன தடிகள் வானில பறக்கும் பருந்து களைக கவர்ந்து ஈர்க்குமாறு, பகைவருடைய நாட் டிலே முற்றுகையிட்டுத தங்கியிருககும் அழகிய பெரிய சிறப்பு-செல்வம்-அமைந்தவன முதுகுடுமிப பெருவழுதி (புறம. 64:3-6). பொயகையில மேயந்த நாரை இனிமை கொண்ட மருதமரததின் பூங் கிளையில் தங்குதலை வெறுத்தால அழகிய காஞ்சி மரககிளையிலே சென்று துயிலும் காப்பமைநத சிறப்பினையுடைய நன்செய் வயலகள் நிறைந்தது நலஹூர் (புறம. 351·9-12). பல நல்ல வயல்களைக் கொண்டு பொலிவுறுகின்ற தலைமையமைந்த விழுச் சிறப்பினையுடையது தித்தனது உறையூர் (புறம.395:16-19). வேள்வியில் இடுகினற ஆவுதியின் புகையும் சமைத்தலுககு இடுகின்ற நெய்யின புகை

யுட ஆகிய இரண்டும் ஒருசேர சுமபூமமண ததோடு வானுலகைக கடவுளரும விரும்பும் வகையில அவ ரைப பேணும் வளம் நிறைநத அழியாத சிறப்பு டையவன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் (பதி. 21.1-16). கருமபுகள் நெருங்கிய கழனிகளையுடைய நாடு வளம் சுரக்குமாறு, வளம் பொருந்திய சிறப் பினையுடைய உலகமக்களைக காத்துக் காவிரியாறு கிழககு நோக்கிப் பாயும் (பதி. 50·3-6). 'பல்வேலிரும் பொறையே, நின நாட்டில் பயன ஒழிதலையறியாத வளம பொருந்திய, நின் சிறபபினையுடைய பல வான புதுவருவாயாகிய தானியங்கள் மலிய நீ பொலிநது வாழக' என்று இளஞ்சேரலிரும் பொறையைப் பெருங்குன்றூர்கிழார் வாழத்தினார் (பதி. 89.6-13,20). மணவொலி மிக்க பந்தரிடத்தே தலைவியை அணிகள் அணிவிதத சிறபபினொடு, அப்போது அரும்பிய வியர்வையை ஆற்றித தமர் அவளைத தலைவனுக்கு ஈந்தனர் (அகம். 136:16-18). 'மடநதையே, மலைகள் பொருந்திய சிறப்பினை யுடைய நம்மூர்க்குப் பகல் விருநதாக நாம் செல் வோம் 'எனததலைவன தலைவியை உடன்கொண்டு போய் மீளுகையில் கூறினான் (ஐங். 396:3-5). மகளி ரது ஆராக் காமவினபத்தைப் பொழிற்பாயலில் தலைவரொடு கூட்டும களவுப் புணர்ச்சியையும அடியுறை மகளிர் தம் மைந்தர் மார்பை நீங்காத கற்புபபுணர்ச்சியையும் அம்மகளிர் மனமெனத் தரும சிறப்பினையுடையது திருப்பரங்குன்றம் (பரி. 8:39-46). காதலரிடையே துனியையும் புலவியையும் ஏறபடுத்துவது வையையாற்றின் சிறபபாகும (பரி. 20.96,-97).

4. தனித்தன்மை. 'புகழ்சானற சிறபபு - தனித் தனமை - கொண்ட அமபினை ஏவும தொழில மிகச் சென்று பொருந்துதற்குக் காரணமான இக் கொலைவன் யாரோதான' என வல்வில்ஓரியின அமபெய்யும் ஆறறலை வியப்பர் வனபரணர் (புறம். 152:7, 8). பிறபபொத்த ஒருவயிறறுப பிறந் தோருள்ளும் கல்விச் சிறபபினால் தாயும மனம் வேறுபடுவாள் (புறம. 183:3, 4). பகைவரை வாள் கொணடு வீசும் போது அவருடைய மாாபுகள் பிளந்து சிந்தும குருதியினால் கரிய கழிநீர் நிறம மாறிக் குஙகுமக் குழமபு போல் ஆகுமாறு போரிட்டு அவர்தம மதிலகளையழிதத வலிமை யினால மேம்பட்டு விளங்கும சிறபபினையுடைய உயாந்த முயறசியமைநதவன இமையவரமபன நெடுஞசேரலாதன (பதி. 11.7-11). ஞாயிறு விருமபி ஊர்கினற தீதற்ற சிறபபினையுடையது விசும்பு (பதி. 17:10, 13). 'எபபொழுதும் வெறறியில விருப பததையும் பகைவாக்கு அசசம் பொருநதிய சிறப பினையும் உடைய கொள்ளை மறவர் கொலகளிறு களைப் பெறுக எனக் கடல்பிறகக்கோட்டிய செங்குட்டுவன அவர்க்குப பரிசில அளித்தான (பதி. 43:24, 25). கருநிறததையும மின முதலான தொகுதிகளையும் உடைய வளம பொருநதிய சூல் மேகங்கள், உலகினைக காககினற அசசம அமைநத சிறப்பினையுடையன (பதி. 81.1, 2). கமுகினது முற்றாத இளங்காய நீர் உண்போர்க்கு மகிழ்ச்சியை மிகுதியும் வளர்ககினற சிறபபுடையது (அகம். 335·22-24). 'வாலியோனாகிய பலதேவ னுக்கு நீ பிறபபு முறையில இளையையாதலும் தலைமை முறையில முதுமை தோனறலும வேதத தால தெரிநதுணருஙகால் உயிர்தொறும் உள் ளுறைந்து நிற்றலும ஆகிய இநநிலைமைகளும் நின் பழைமை நிலைபோல நினககேயுள்ள சிறப பாகும' எனத் திருமாலைக் கீரநதையார் போறறு வார் (பரி. 2:20-27). 'குறப்பிணாவான வளளியை மணநதோய், எம வாழத்தினை நின்செவிககுச சிறபபுணவாகக் கேட்டல் வேணடும்' என்று முருகனை வேண்டுதல் (பரி. 19·95, 96).

5. கற்பு. 'அழகிய இனிய மொழியினையுடைய வளே, வெற்பன் மணம் வேண்டி வர, நமரும் அவனுக்கு நினனைக் கொடுகக நோநதனராதலால இனி நின சிறபபு - கற்பு - பொலிக' எனத தோழி தலைவிக்கு வரைவினையறிவிததாள் (ஐங். 300·2-4).

6. நல்வினை. 'நின்னையொழிநதோர் சிறப பினால-நலவினையினால-உயர் பிறபபினராதலும தீவினையினால இழிபிறபபினராதலும ஆகிய இது நின ஆணைக் கணணே உள்ளது' என முருகனை ஏததுவர் கடுவனிள வெயினனார் (பரி. 5 19-21).

**சிறப்புடையாளன** - தனியாண்மையுடையோன. கடல கிளர்நதாற் போனற போர்ககளததின நடுவே சினததினால மனமபுழுஙகி, வாயமடிதது, வேலை யசைததுக கொணடே தனபககதது வீரரையும செலுததிச சென்று, எதிாவரும படையைப பிளநது நின்று, போரிட்டு அபபடையிடையே தானும வெட்டுணடு, மெயசிதைநது வேறுபடடுக் கிடககும சிறபபுடையாளனின - தனியாணமை யுடையோனின - மறமாணபு கணடு அவன தாயின வாடிய வறுமுலை ஊறிச சுரநதன (புறம. 295).

**சிறாஅர்** - சிறுவர். சிறுவர் சிறாஅர் என விளிககப் பெறுவர் (புறம. 291.1).

**சிறாஅர்** - சிறுவர். நலலறிவுடைய குயககுலத்துச் சிறாஅர் - சிறுவா - கலம வனைதறகுத திகிரிக

கணணே வைத்த பசுமண் திரள் அவர் நம் கருத்திற் கொணட முடிவைப் பெறுவதாம (புறம. 32:7-10). சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன மலையமானின மககளை யானைக் கால்களில இடத் துணிநதபோது இடைப்புகுநத கோவூாகிழார் அமமனனனிடம, 'இவர் இபபொழுது களிற்றைக் கணடு தம இளமையால் தாம முனபு வெருவியழும் அழுகையை மறநதுவிட்ட புலலிய தலையையுடைய சிறாஅர்; அனறியும மனறினை வெருவிப்பார்த்து முனபு அறிநதிராத புதியதோர் வருத்ததைதை யுடையர்' எனக்கூறி அசசிறுவரை உயவித்தார் (புறம. 46:5-7). உழவரின், புலலிய தலையையுடைய சிறாஅர் பெரிய தெஙகம பழத்தை வெறுத்தால் நெடிய போரினகண ஏறி விசைததெழுந்து பனம் பழததைப் பறிப்பர். (புறம். 61:8-11), சிறுகுடி கிழானான பணணனது இலலத்திலிருநது பெற்ற சோற்றையுடைய கையினராய்ப பெரிய சுற்றத் துடன கூடிய சிறாஅர், மழைபெயயுங காலததைப் பார்ததுத தம் முட்டைகளைக கொணடு மேட்டு நிலத்தையடையும் எறும்பின் வரிசைகளைப போல வேறுவேறு செனறனர் (புறம. 173:5-9). மரத்தைத் துணிககும தசசனின மழுவையுடைய கைததொழில் வல்ல சிறாஅர் காட்டிடததே செனறால் அககாட்ட கத்தின் எத்திசைககணணும அவர்ககு வேணடிய மரங்கள் கிடைக்கும் (புறம. 206:11-13). சிறுவர், 'சிறாஅஅர்' எனறு நீட்டி விளிககப் பெறுதல் (புறம். 291.1) அசையும தலையையுடைய இளைய ஆமான் கன்றைப் புல்லிய தலையையுடைய சிறாஅர் தம் சிறுதோக்குரிய கன்றெனப பூட்டி விளையாடுதல் (புறம. 319.10,11). புதுவரகு அரியப்பட்ட அரிகாலிலே மேயும் எலியைப பிடித்தற்குக கள்ளி மரத்தடியிலே நினறு பார்ததிருககும புலலிய தலையையுடைய சிறாஅர் தம் விலலையெடுத்து ஆரவாரித்தால குறுமுயல அஞ்சியோடும் (புறம. 322:2-6). இரத்தி மர நிழலிலே மெலலிய தலையையுடைய வேட்டுவச் சிறாஅர் அம்பெய்து விளையாடுவர் (புறம். 325:11,12). வேட்டுவச் சிறாஅர் நெடுந்தொலைவு செலலாமல் மடைக கரையிலே பிடிததுக் கொணாநத உடுமபினை மறவன மனைவி சமைத்து விருநதயர்வாள் (புறம 326:7-12). புல்லிய தலையையுடைய சிறாஅர் மனறததினகண் ஆரவாரித்தால் குறுமுயல வைககோறபோரிலே ஒடுஙகும (புறம். 334:2-4). நுணணிய பூணணிநத மாாபினையும புலலிய தலையினையும் உடைய சிறாஅர் தாம எயது விளையாடும் அம்புகள் அறற காலததில தநதை முதலான தமர்முகம் நோககுவர் (புறம. 373:16,17). சிறாஅர் புலிப்பல் கோககப் பெறற கழுத்தணியணிந்த புலலிய தலையினர் (புறம். 374:9). பிள்ளையஞ் சிறாஅர் (புறம். 380:13). மூதறி சிறாஅர் (புறம. 382:11). உழவருடைய காதலஞ் சிறாஅர், தேன மணங் கமழும் நெயதற் புதுபபூவைச சூடி அதனை வெறுபபாராயின், பினனர் முள்ளி மலாகளைப் பறிததுக் கோரையைப் பலலினால மெனறு கிழித்த நாராலே அவறறைக் கணணியாகத தொடுத்துத் தலை நிறையச் சூடுவர்; சூடிக் கொண்டு சணபங்காயை முறித்து அதன சுண்ணத்தைத் தம் மார்பிலே பொனனுரை காணும் உரைகலபோல் தோன்றும் படி அப்பிக கொள்வர்: அப்பிக் கொண்டு பழைய சோற்றை உணடு வெறுதது, குடிலின முறறத்தே அவல் இடிப்பர் (பெரு. 213-226). தச்சச சிறாஅர் பிறர் விரும்பும்படி சிறுதேர் செய்வர் (பெரு. 248, 247). மலையகச சீறூரிடததே ஏற்றமான நெறியிடை வழுக்கி விழுநது முடம்பட்டுக் கிடககும் பட்டிற்குப் புல்லியக குடுமியையுடைய சிறாஅர் இருபபைப் பூககளை விலலினால் உதிர்த்து, அவற்றைத் தினன வரும மரைமானையும விரட்டிவிட்டு உண்பிபபர் (அகம். 107:14-18). சேறறுப பரப்பிலே காலைப் பொழுதில மீன வேட்டைக்குச் சென்ற, கொழுமீனாகிய உணவினையுடைய புல்லிய தலையமைந்த சிறாஅர் இட்ட வலையில் கொக்குச் சேவல சிககியது (அகம. 290:2-4). உவர் மண் அரித்தலால் மயிர் உதிரபபெறறு ஊன பொருநதிய தலையினையுடைய சிறாஅருடன புலைததி (வணணாத்தி) ஆடைகளுக்குக் கஞ்சி ஊட்டுதல் (அகம. 387.4-7). 'சிறாஅர் இனபுறுதறகுக காரணமான நணபினையுடையவனே' என்று தலைமகன தன் பாங்கனை விளித்தான (குறு. 129:1). செல்வச் சிறாஅர்தம் சீறடிகளில் தவளை வாய போலும் வாயையுடைய பொனனாலான கிணகிணி அணிசெயதன (குறு. 148:1,2). கன்றுகளை மேய்த்தற்குரிய வழிகளிலே செலுத்திய புல்லியதலையினையுடைய சிறாஅர், மனறததில உள்ள வேங்கை மரம மலரும செவவியைப் பார்தது அதன்மேல் ஏறாமலே 'புலி புலி' எனச செயத இனபந்தரும் ஆரவாரம வானளாவிய மலைமுழையினிடததே எதிரொலியுண்டாககும் (குறு. 241:3-6) விலலேர் உழவராகிய ஆறலை கள்வரின சீறூரிடத்து வானளாவிய வேபப மரததின் புள்ளிபட்ட நிழலிலே கட்டளைக் கல்லைப போன்ற அரங்கினையிழைதது, ஏனைத தொழிலொனறும் கலலாத சிறாஅர் நெலலிக் காயகளைக கொணடு பாணடியாடுவர் (நற. 3:1-5). பெரிய கழிசூழநத பாககத்தில் பரதவருடைய வனறொழிற சிறாஅர் இறாமீன்களோடு ஏனை மீனகளையும் பிடித்தற்காகப படகினை மேறகொண்டு கடலிற் புகுநது சுறா

மீனையும் மற்றுமுள்ள வலிய மீன்களையும் பிடித்துத துண்டிததுப் பெய்த தோணியராய் மணற பரப்பின்கண் வநதிழிவர் (நற். 111:2-9) கொலைத் தொழில விருப்பமுடைய பரதவச் சிறாஅர் வலையும் தூண்டிலும் கொண்டு, பெருங்காற்று வீசுதலால அலையெழுகின்ற கடலிலே மீன பிடிக்கச் செல்வர் (நற். 207:10-12). கடலிற் சென்று சுறா வேட்டையாடும் தந்தை தான செலலும் கடலுககு உடன் கொண்டு போகாமையால் மனையின கண்ணே அழுது தங்கிய புலலிய தலையையுடைய சிறாஅர் விரைவில் முயனறு பெற்ற நுங்கினால் உவபபர் (நற். 392:1-5).

**சிறாஅன் – சிறுவன்.** மறகுகுடித்தாயான செம்முது பெண்டின் காதலஞ் சிறாஅன்-சிறுவன் (மகன்)-குடப்பாலிலே ஆயமகள் தெறித்த சிறிய உறை போலப் படை நடுவே தானொருவனாய் நின்று போர் மேம்பாடுறறான் (புறம். 276:3-6). மணம வேண்டியோர்க்கு மறுக்கப்பட்ட தலைவியொருத்தியின தமையனான வல்லாணமையுடைய சிறாஅன 'யான் சிறிது கலவியறிவுடையேன்' எனறு தருக்குப் பேசினான (புறம். 346:3).

**சிறார் - சிறுவர்.** வெள்ளாட்டின் வெள்ளிய குட்டி புலலிய தலையினையுடைய சிறாரொடு - சிறுவரொடு - துள்ளியாடுதல (அகம். 104:9,11). திதியின் சிறார் (மக்கள்) ஆகிய அசுரர் உட்பட யாவரும் யாவையும் திருமாலிடத்தேயிருந்து தோன்றிப் பரவுதல் (பரி. 3:6,10).

**சிறியர் - இளைஞர்.** மதுரையின் நால்வேறு தெருவிலும் சிறியரும் - இளைஞரும்-பெரியருமாகிய நெய்தல் (நெசவு) தொழிலோர் திரணடு நின்று ஆடை விற்றல் (மது. 520-522). சிறியரும் பெரியரும் வாழும் ஊர் (குறு. 368:5).

**சிறியவன் - சிறியோன்.** கொடுத்தற்கு மனம் சிறியவன்-சிறியோன் - ஆனவனுடைய செலவம் தன்னைச் சேர்ந்தவரைப் பாதுகாவாது (கலி. 10:2).

**சிறியோர் - சிறியவர்.** 'பேரியாற்று நீரின் வழியே போகும புணைபோல ஆருயிரானது ஊழின்வழியே அமையுமென்பதை அறிஞர் கூறிய நூலாலே தெளிநதனமாதலால் நன்மையில் மிககவரை மதித்தலுமிலேம்! சிறியோரை - சிறியவரை - பழிததல் அமமதித்தலினும் இலேம்' என்பர் கணியன் பூங்குன்றனாா (புறம். 192.8-13), 'நீ நின்னிலும பெரியோரைப் போற்றிச சிறியோரை அருள்வாய' என்று பெருஞ்சேரலிரும்பொறையின் பணபினைப பராட்டுவார் அரிசில் கிழாா (பதி. 79.3).

**சிறியோன் – சிறியவன்.** தம் குடியின மூததோரைக் கூற்றம் கொண்டு போனதனால விதியால் கொடுக்கப்பட்டுத் தம்மிடத்தே வந்த பழைய அரசுரிமையை, 'இச்சிறப்பினைப் பெற்றோம' எனக் குடிமக்களை வரிவேண்டி வாங்கும் ஆண்மையிலலாத சிறியோன் - சிறியவன் - பெறுவானாயின அவனுககு அது தாங்க மாட்டாதபடி மிகவும் கனமுடையதாகும் (புறம். 75:1–5). 'மணிகள் பதித்த பலகை (பரிசை) யினையும் நெடிய வேலினையும துணிவுடை உள்ளமொடு மிகக மெய்வலிமையினையும கொணடு அறியாத் தேயததினகண என் மகளை அழைத்துச் சென்ற சிறியோன' என்று தலைவனைக் குறிதது, மகடபோக்கிய தாய் கூறினள் (அகம். 369:18-21).

**சிறுகாலை - விடியல்.** தலைமகன தொடர்பு கொணட பரத்தை சிறுகாலையில - விடியலில-தலைவியின மனைவாயிலில வநது நினறு அவனைப புலந்து கடுஞ்சொல கூறினாள் (கலி. 97.3-5).

**சிறுகுடி - 1. சீறூர்.** குறவர், நீணட மூங்கிலிலே யிருந்து முற்றிய தேனால செயத கள்ளின தெளிவைக குன்றகத்துச் சிறுகுடியிலே - சீறூரிலே -இருககின்ற தம சுற்றத்தோடே உணடு மகிழநது, தொண்டகச் சிறுபறையின தாளத்திற்கேறபக் குரவையாடுவர் (முரு. 194-197). 'மலைபபககததில் தேனையும கிழங்குகளையும் உடையராயப் பனறியின பழுதுநீககபபட்ட ஊனையும மற்றுமபல ஊன் நிறைநத கடகங்களையும யானைககொமபுகளே காவுமரமாகக கட்டிக கொணர்ந்த கானவருடைய வளம பொருநதிய புதுவருவாய அமைநத சிறுகுடியில நீவிா தஙகுவிராயின நும் சுற்றததோடு அவ்வுணவுகளை மிகவும் பெறுவீா' எனக் கூத்தர் ஆறறுபபடுததப பெறுகினறனர் (மலை: 151-157). பலாவின சுளைகளை உணணும் முசுககலைகளால உதிர்க்கபபெறற பலாவித்துக் கள் எங்கும கொளளககிடககும மலையிடததே பொருந்திய சிறுகுடியையுடைய கானவன மகள் தலைவி(அகம். 7.20-22). பாலைநிலததில கரிநது உதிரப்பெற்ற மரங்களையுடைய காட்டு வாழக்கையமைநத மறவர், தொன்று தொட்டு இயனறு வருவதான தமது சிறுகுடியில உள்ள மனறதது நிழலிலே படுததுறங்குவர் (அகம். 75:4-7). வனலிலததைச் சாாநதிருநத பழைய பெரிய மனறததிலே ஆறலை கள்வர் தஙகி வழியைப் பார்ததிருக்கும படியான, பசுககள் மிகக சிறுகுடியின

கண வாழநதோர் மனைகளைவிட்டுப பெயர்ந்து போவர் (அகம. 103·6-8). தலைவியும் தோழியரும் கானலிடததே சிற்றில இழைததுச சிறுசோறு சமைத்து விளையாடியிருககையில் அஙகு வநத தலைவன, 'இளமகளீர், பகலும் ஒளிமங்கியது; யானும தளர்ச்சியுடையேன்; ஆதலால் நும் விருநதினை உணடு, ஆரவாரமுடைய இச்சிறுகுடியிலே இன்று இரவு யான் தங்கிச் செனறால குறை ஏதுமுண்டோ' என வினவினன் (அகம். 110 5-14). குகையிடங்களைத் துழாவி அருவி கொணர்ந்த அரவு உமிழந்த அழகிய மணி பெருமலைச சிறுகுடியின் தெருவினை இருளகற்றி விளங்கச செயதது (அகம. 192.10-12). 'தோழி, நம் தலைவர், நெடுஞ்சுனையிலே நம்மோடு ஆடிப் பகலை இனிது கழிததுச் சோலையினையுடைய பெரிய மலையிலுள்ள அழகிய தமது சிறுகுடிக்கு இரவே செல்வாராயினும் நன்று' எனத தோழி தலைவிககுக கூறினள் (அகம. 228:5-13). குற்றங்களே வேலிகளாகவுடைய சிறுகுடியிடத்தே வேங்கை மரங்கள் பூத்த மலர்கள் பரநது பாறைகளை அழகுறுத்தும் முன்றிலில், குறவர் மகளிரொடு குரவையாடினர் (அகம். 232:6-10) தலைவனைக கண்டது முதல் தலைவி அரிய நினைவுததுனபத்தால்தோள் மெலிந்து பரதவரது கானலஞ் சிறுகுடியிலுள்ள பெண்டிரின் அலரால் உள்ளங்கலங்கி வளைநெகிழப்பெற்றாள் (அகம. 250·9-13). முலலை நிலம சார்ந்த குன்றின அடிகளிலுள்ளது சிறுகுடி (அகம். 284:7). 'பெரும, நீ மிகக ஆரவாரமுடைய எமது அழகிய சிறுகுடிக்கண்வந்து இரவு தங்கினால் யாம் நினக்கும் நின் இளையர்க்கும் நல்விருந்து அயர்வோம்' என்று தோழி தலைவனுக்குரைத்தாள் (அகம். 300:14-22). 'தோழீ, நம் தலைவன் நமமை மணந்து கொள்ளுதலைத துணிநதானாயின், காந்தட்பூக்களையுடையசிறுகுடியின் அலரைப் பொருட்படுத்தாது அவன் மார்பே புணையாக நாளை நாம் அருவியாடுவோம் எனத் தோழி தலைவிக்கு உரைததாள் (அகம. 312:3-8). 'தலைவி கூர்வேல விடலையாகிய தன் தலைவனதுசொலலைத் தேறிச் சென்று, காட்டு வாழ்க்கையுடையாரது சிறுகுடியின்கண் தஙகியிருபபாளோ' எனறு தாய இரங்கினள் (அகம். 315:14-18). 'நாடனே, எமமைக காண இரவுக் குறியிடததே வருவையாயின, மீளுங்காலை யாம மனமயக்கம ஒழியுமாறு நீ நின் மலைகள் பொருநதிய சிறுகுடியை அடைநதவுடன் ஊது கொம்பினைச் சிறிதே ஊதல வேணடும' எனறு தோழி தலைவனிடம·வேணடினள் (அகம. 318:7-15). கடலிலே மீன பிடிககும படகினன் ஆகிய தமையன் கொணர்ந்த மீனகளை அவனுடைய தங்கையர், விழாவினையுடைய தெருக்களில் விறகும் கானலஞ் சிறுகுடிகள் அமைநத கடற்கரையினன தலைவன (அகம். 320:1-5). எயினமகளிர் இருப்பைப் பூக்களை மூஙகிறகுழாயிலே தொகுததுக் குன்றகச் சிறுகுடியின்தெருக்களில் விறறனர் (அகம் 331:1-7). பெரிய மலையிலிருந்து இழிகினற வெள்ளருவி பாறை வெடிப்புக்களில் ஒலிக்கும் பல மலர்களையுடைய சாரலில் உள்ள சிறுகுடிக்குறவனின குறுமகள் தலைவி (குறு. 95:1-3). கொல்லிக குடவரையில் அருவிபாயும் பரந்த நிலத்தில் ஐவன நெல்லை விதைதது அதனிடையே களையாக முளைத்த மலைமல்லிகையையும் மரலையும் களைநதெறியும், காந்தள் வேலியையுடைய சிறுகுடியில் உள்ளோர் உணவின்றிப் பசிததால் யானைக கொமபை விற்று உண்பர் (குறு. 100.1-5). மேகங்கள் விளையாடுதறகிடமான குன்றுகளைச சேர்நத சிறுகுடியினிடத்தேயிருநது மேயசசென்ற பசுககள் மாலையில மீளும் (குறு. 108:1,2). 'கானற்சோலையையுடைய சேர்ப்பனது கொடுமையை நினைநது மிகும் துன்பததோடு வருந்தி நள்ளிரவில துயிலாதிருப்பாரை ஏனெனறு வினவாத உறக்கம பொருந்திய கண்களையுடைய அறிவற்ற மாக்களோடு நெடிய இரவையும் கொண்ட இநதக் கடற்றுறையிலமைந்த சிறுகுடி நாம் தங்குதற்கு ஏறறதனறு' எனத தலைவி நொந்துரைததல (குறு. 145). 'பரதவர் மடமகளது கண் வலையிலேபட்டொழிதறகிடமான கானலிடத்தேயுள்ள சிறுகுடிககண் செலலுதலைத் தவிர்வீராக' என்று தலைவன் தன் காதலைக் கழறிய பாங்கனிடத் துரைத்தான் (குறு. 184: 2,6, 7). 'கானலிடத்தே பொருந்திய நம் சிறுகுடியின் முன்னிடததில் தலைவர் நாட்டுக் கடலலை வநது மீளும்' என்று தலைவி பிரிவுக்காலததே தான் ஆற்றியிருந்தமைக்குக் காரணம கூறினாள் (குறு. 228:3-6). 'நமக்கு இன்னாததாகியிருக்கும் இச் சிறுகுடியிலுள்ளார், தலைவன பிரிந்திருத்தலைக் குறித்து நம்மைப் பழிப்பாரோ' எனறு தோழி தலைவியை வினவிப் பேசினள (குறு. 284:3-8). களிற்றியானை பிடியானையைத் தழுவிக்கொண்டு குன்றகச் சிறுகுடியின் மன்றததிலே இழிநது செல்லுதல் (குறு. 332:4-6). 'வேங்கை மரததின மலர்கள் மணம்வீசுகினற எம் சிறுகுடியை இநநள்ளிரவிலே எவ்வாறு அறிந்து வநதனையோ' எனத தோழி இரவுக்குறிக்கண தலைவனை வினவினாள் (குறு. 355:4-7). தலைவனது மலைநாட்டில கருங்குரங்கு தோண்டியதனால் உடைந்த மலர்மணம வீசும பலாப்பழம் அருகிலுள்ள காந்தளஞ் சிறுகுடியிடததே கமழும (குறு. 373;5-8). கடறகரைச் சோலையிலுள்ள சிறுகுடியில் கடல்மேற் செல்பவ

ராகிய பரதவர் வசித்தல் (நற். 4:1). பிளவுபட்ட நீணட மலைச்சாரலில் வன்னிலத்தைச சேர்ந்த சிறுகுடியின் மன்றத்திலே மாலைப் பொழுதில ஆறலை கள்வர் வழிப்போக்கரைப் பார்த்திருப்பர் (நற. 33:1-7). இவள், கடற்கரைச் சோலையைப் பொருநதிய அழகிய சிறுகுடியிலிருககும் பரதவர் மகள்' எனத் தோழி தலைவியின் குலங்கூறித் தலைவனைச் சேட்படுததினாள் (நற். 45:1-3). 'முருகனொடு கூடிச் சென்ற வள்ளிபோல நீ என்னுடன எமது சிறுகுடிக்கு வருகினறனையோ' என்று தலைவன், தலைவியை வினவினான் (நற். 82:2-4, 11). தலைவனது மலைநாட்டின் சாரலிலே கானவன் அம்பெய்து கொணர்நத முள்ளம்பன்றியின் இறைச்சியை அவன மனையாளான கொடிச்சி மகிழ்ந்து கொண்டுபோய், காந்தள் மலர்கள் நிறைந்து மணககும அச்சிறுகுடியில வாழ்வோர் பலர்க்கும் பகுத்தளிப்பாள் (நற். 85:7-11).. 'தோழீ, தலைவர் நாட்டுப் புன்னையரும்புகள் மலர்ந்து அவற்றின தாதுக்கள துறையில் மேய்கின்ற இப்பியின ஈரமான புறத்திலே படிதற்கிடனான சிறுகுடியில் வாழும் பரதவர் மகிழ்ச்சியையும் அங்குள்ள கடற்கரைச் சோலையையும் நினைந்தவுடனே, அவ்விடத்தே யான் அவரைக் கூடியிருக்குமாறு கண்ட கனவு, நனவுக்கு வாராதே மறைந்தது' எனத் தலைவி பிரிவாற்றாத நிலையில கனாக்கண்டு இரங்கினள் (நற். 87:5-9). 'தோழீ, கடற்கரைச் சோலையிடத்தேயமைந்த அழகிய தோட்டததையும குறையாத வளமிக்க உணவையும் பெரிய ஈகையையுமுடைய நம் சிறுகுடி பொலியுமாறு நெடுந்தேர் ஊர்நது நம் தலைவன் பகற்பொழுதிலே பலரும் காண வருதலை நீ உணர்ந்தாயோ' எனத் தோழி தலைவனது மணவரவினைத் தலைவிக்குணர்த்தினாள் (நற். 91:8-12). இடியேறு மோதிக் கொன்ற களிற்றியானையை அங்குள்ளோர் பிளந்து அதன வெணகொம்புகளைப பாறையில உலர வைப்பதும், ஊனைக் கெண்டி நகங்களைப் புதைப்பதும ஆகியவற்றால் எழும் அரவம் புலால் நாறும் சிறுகுடியின தெருக்கள் தோறும் எழும் (நற். 114). மலைசூழ்ந்த இடத்திலிருககின்ற கானகத்தே பொருநதிய சிறுகுடியின வளப்பமமிகக பககங்களில மலலிகை மலர்தல (நற். 122:3,4). கொறுககச்சி முளைத தடர்நத பெரிய மலைபபககத்தே சிறுகுடி இருநதது. (நற். 156:7) 'நாடனே, சாரலினகண் உள்ள எம சிறுகுடியாகிய இங்கு நீ இரவிலே வருதல பணபுடையதாகுமோ' என்று தோழி தலைவனை இரவுக்குறி மறுததாள் (நற. 168:6-11). 'ஞாழற்பூங்கொத்துக்கள, மகளிர் மணறபரபபிலே இழைத்த வண்டற்பாவையின வனமுலை முற்றத்தில சுணஙகுபோல் மெல்லப் பரவுதற கிடமானதும் கண்டல மரங்களே வேலியாகவுடையதும் ஆகிய அழகமைநத சிறுகுடியிடததே நேறறிரவு ஒரு தேர் வநததன்றோ' எனத் தலைவனின இரவுக்குறி வரவு தொடர்பான அலா தலைவியின ஊரில எழுநதது (நற். 191:1-7). தலைவி தான் குறித்த பகறகுறியிடத்தே தலைவனைக் கூடி இன்மொழி பேசிய பின ஏற்றினைப் பிரியும் இளைய பிணைமான்போல அகனறு, மூங்கிலகள் உயர்ந்து வளர்ந்த சிறுகுடிககு மீணடனள் (நற 204 7-11). 'அருவி ஆரவாரிக்கும பெருமலைககுப பக்கத்திலே தன் கனறு கட்டபபட்டிருககும் வேபபலாவின பழததைத தினற சேதா, அருகிலுள்ள சிறுமலையினகண நீரைப பருகுதறகிடமான, பெரிய மலைகளையே வேலியாகவுடைய நும சிறுகுடி யாது' எனத் தலைவன தோழியை மதியுடமபடுககும குறிபபொடு வினவினன (நற். 213.1-6). களிறுகளும பிடிகளுமாகிய யானையினம நீர்சசுனையிலே மெயகுழையப புணர்நது, மலைவாழையைத தினறு வெறுத்தபின அயலதாகிய மூங்கில வேலியையுடைய சிறுகுடியினர் அஞ்சியலறும்படி பலாப்பழங்களைத் தினனும (நற். 322:1-5). நண்டுகள் விளையாடிய புலவுநாறும மணல்முற்றததை யுடையது அழகமைநத பரதவர் சிறுகுடி (நற். 239: 4,5). 'கடற்பரபபினையுடைய தலைவனே, உபபுபபாத்தியிலே கடலநீரைப் பாய்சசி உபபு விளைததுக கொள்வதாகிய, மழையை வேணடாத வேளாணமையையுடைய, கடறகரைச் சோலை சூழநத எம் சிறுகுடியினகணணே வநது நீ இனறிரவு தஙகிச செலவாய' எனத் தோழி தலைவனிடம கூறினாள் (நற். 254.5,10-12). மலாநத பூககளை யுடைய தாழைப புதரில மேலகாறறு வீசுதலால உதிர்ந்த பூநதாதுககள மகளிருடைய வளைகள் உடைநது உதிரநதலறறைப போல பரநது தோனறும அழகமைநதது சிறுகுடி (நற 299.2-5). புலால் நாறும சிறுகுடியின மனறததில பனைமரம ஓங்கி வளாநதிருநதது (நற. 338·8,9). மலையகததே பொருநதிய தலைவியின சிறுகுடி பொலியுமாறு தலைவன அவளை மணகக வநதான (நற். 386: 8-10). விடியற் காலத்தில சுனையிடததே அழகு பெற்று மலர்நத காநதட் பூஙகுலையினைப் பாமபெனக் கருதி இடியேறு இடிததலால எழுநத ஓசை பரந்து மலைசசாரலில ஒலித்தலால சிறுகுடியில் உள்ளோா துயிலெழுவர் (கலி. 45 1-7). முலைத தலைவனது தோளையும தலைவியது தோளையும கொணடாடிச் சிறுகுடியின மனறததிலே அவன ஏறுதழுவிய புகழ பரநதது (கலி. 102:

37-39). பொதியின்மலையையுடைய பாண்டியனுக் குரிய சிறுகுடியில் வாழும் ஆயர் அவ்வேந்தன் இனிதிருந்து வாழுமாறு அந்நிலத்தெய்வத்திற்கு மடைகொடுப்பர் (கலி. 108:58,59).

2. வாணன் ஊர்ப்பெயர். மாமரத்தின் முற்றிய பழத்தை யாமை தன் பார்ப்போடு கவர்ந்துண்ணும் பொய்கைகள் சூழ்ந்துள்ளதும் அறாத புது வருவாய்களையுடையதுமான வாணனுக்குரிய சிறு குடிக்கு-சிறுகுடி என்னும் பெயரையுடைய ஊர்க்கு-வடக்கின்கண் உள்ள இனிய நீரினையுடைய காட்டாற்றின் கருமணல் போன்றது தலைவியின் கூந்தல் (அகம். 117:14-19). வெண்ணெல் அரிவோர் இசைக்கின்ற கிணையொலி, அருகிலுள்ள பொய்கைகளில் பொருந்திய பறவைகளை வெருட்டி ஒட்டுதற் கிடமான விளைநெல் வயல்களையுடைய வாணன் சிறுகுடியின் சோலைபோலத் தலைவியின் கூந்தல் மணம் கமழும் (அகம். 204:10-14). மகளிர் பொற்காசுகளைத் தொடுத்தணிந்த அல்குலிடத்தே பூங்கொத்துக்கள் தழையுடையுடன் அசைய, ஊதுகொம்பின் தெளிந்த இசைஒலிக்க, வண்டல் விளையாட்டுக்குரிய பாவையை நீர்த் துறையில் கொணர்ந்து வைத்துக் குரவைக் கூத்தாடுகின்ற கடற்கரைச்சோலை சூழ்ந்தது வாணன் சிறுகுடி; அவ்வூரைச் சார்ந்த அழகிய நீர்வளஞ் சான்ற நெல்வயலில் அரும்பு மலர்ந்த செங்கழுநீர் மலர்களைப் போன்றன தலைவியின் கண்கள் (அகம். 269:15-25). செழியனின் பெயரால் செய்த பெரிய குளத்துநீர் மடைதிறக்கப்பட்டு ஓடியதனால் அக்குளத்தினின்றும் புறப்பட்டுக் கால்வாய் வழியே சென்ற வாளைமீன் சேற்று வயலினுள் ஓடி, அங்கே உழுது வருகின்ற எருமைக் கடாவின் காற்சேறுபட்ட புறத்தோடு, உழவருடைய கோலடிகளுக்கும் அஞ்சாது செருக்குற்று வரம்படியில் சென்று அப்பாற்போக மாட்டாது அங்கேயே புரளுகின்ற வயல்வளம் சான்ற வாணன் சிறுகுடி போன்ற அழகு நலம் அமைந்தவள் தலைவி (இவ் வாணன் சிறுகுடி காவிரியின் வடபால் உள்ளது என்பர் பி.நா.) (நற். 340:2-9).

3. பண்ணன் ஊர்ப்பெயர். மணத்தை ஆராயும் ஆராய்ச்சியையுடைய வண்டு சிறிய வெள்ளாம்பலின் மேல் ஊதுகின்ற வளம்பொருந்திய பண்ணனது சிறுகுடிக்கண்-சிறுகுடி என்னும் பெயரையுடையஊரின்கண்-உள்ள பாதிரிமலர்களின் மணம் விறலியின் கூந்தல் மணத்திற்கு உவமை (புறம். 70. 11-15). பண்ணனுடைய சிறுகுடித்தோட்டத்தில் உள்ள நெல்லிக்காய் சுவைச் சிறப்புடையது (அகம். 54:14-16).

4. அருமன் ஊர்ப்பெயர். காக்கைப்பேடை தன் பிள்ளையோடு கூடி இனத்தையும் அழைத்து வந்து கருனைக்கிழங்கின் பொரியலொடு செந்நெல் அரிசிச் சோற்றைத் தெய்வத்துக்குரிய பலியுடனே கவருதற்கு மனைகளிடத்தே குழுமியிருக்கும் படியான பழைமைமிக்க இல்லங்களையுடையது அருமனின் பெரும்புகழ் அமைந்த சிறுகுடி (நற். 367:1-6).

5. சிறிய குடி (இல்லம்). சிறுகுடி - சிறிய குடி (பதி. 59:7; மது. 122; அகம். 70:2; 118:4; 140:1; 270:2 330:15; நற். 169:10; 203:6; 219:6; 323:6; 374:2 கலி. 50:13).

**சிறுகுடி கிழான் பண்ணன்** - கொடையாளி. சிறுகுடி என்னும் ஊர்க்குரியவன்; வேளாள குலத்தலைவன்; பண்ணன் என்பது இவனது இயற்பெயர். இவன் சிறப்பினால் இவனுடைய ஊர் பண்ணன் சிறுகுடியென்றே வழங்கலாயிற்று (புறம். 70:13; அகம். 54: 14). காவிரியாற்றின் வடகரையோடு தொடர் புறுத்தி இப்பண்ணன் பாடப்பெறுவதனால் (அகம். 177:16), இவனுடைய சிறுகுடியைக் காவிரியின் வடகரையில் உள்ளதாக வே.வி. உரைக்கும் (அகம். 54,177-உரை). இவனது சிறுகுடி, வண்டுகள் ஊதுமாறு ஆம்பல் மலரும் நீர்வளம் மிக்கது; இங்குள்ள பாதிரி மரங்களின் பூக்கள் மணச்சிறப்புடையன (புறம். 70:11-14). இவனூர்த் தோட்டத்தில் சுவை மிக்க காய்களையுடைய நெல்லி மரங்களும் நெடிய அடிகளையுடைய மாமரங்களும் இருந்தன (அகம். 54:14-16;177:16,17). இத்தகைய வளமிக்க ஊரினையுடைய இவன் அறமும் மறமும் சிறந்து திகழ்ந்தான். எனவே, கொற்றங்கொற்றனார். கோவூர் கிழார், செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனார், மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் ஆகிய புலவர்களேயன்றிச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனான வேந்தனும் இவனைப்பாராட்டிப் பாடியுள்ளனர். தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் பண்ணன்' என்று கொற்றங் கொற்றனார்பாராட்டுவதும் (அகம். 54:13 14). 'பசிப்பிணி மருத்துவன்' என்று கிள்ளிவளவன் சிறப்பிப்பதும் (புறம். 173:11), இவனது கொடைப் பண்பை உணர்த்தும். பழுத்த மரத்தினைச் சூழ்ந்து பறவைகள் ஒலிப்பதுபோல் இவனது மனையிடத்தே உண்போரின் ஆரவாரம் மிகுந்திருக்கும்; மழை பெய்யும் காலத்தைப் பார்த்து முட்டைகளைக்கொண்டு மேட்டுநிலம் சேருகின்ற எறும்பின் வரிசைகள் போலச் சுற்றத்துடனான சிறுவர்கள் பலரும் இவன் மனையில் இருந்து சோறு பெற்றுக் கையில் ஏந்தியவராய்ச் செல்வர். இத்தகைய

சோற்றுக் கொடையினால் இவனைப் பசிப்பிணி மருத்துவனாகப் பாராட்டிய கிள்ளிவளவன பாணன் கூறறில் பாடிய அதே பாடலில (புறம். 173), 'யான்வாழும் நாளும் பண்ணன வாழிய' என வாழ்த்தக்காணலாம். இவன து கொடை மேமபாட்டைப் பாடும மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார், 'இவனை நாள்தோறும் பாடாவிடில் என்சுற்றத்தைக் காத்துவரும் வழுதி அவ்வாறுகாக்கும் கண்ணோட்டம் ஒழிவானாக' என உணர்ச்சியொடு மொழிவர் (புறம். 388). இவ்வாறெலலாம் அறப்பண்பில சிறந்து விளங்கிய இவனை, வேலின இலை குருதியால் சிவக்கும்படி பகைவரின் மலை போலும் யானைகளைப் போரில அழிதத மறப் பண்பு மிககவனாகச் செயலூர் இளமபொன் சாத்தன கொற்றனார் பாடுவாா (அகம .177:13-16).

**சிறுகுடியீரே** - சிறுகுடியோரே (விளி). சிறுகுடியில உள்ளோர் 'சிறுகுடியீரே சிறுகுடியீரே' என விளிககப பெறுதல் (கலி. 39:11).

**சிறுகுடியோர்** - சிறுகுடியிலுள்ளோர். 'தாமரைப் பூங் கணணியை அணிநது சந்தனததைப் பூசி நீ, தலைவி கூறிய குறியிடததே வருவையாயின, மலையிலே பலிகொள்ளும அணங்குகளில் ஒன்றெனக் கருதிச் சிறுகுடியோர் - சிறுகுடியிலுளளோர் - அஞ்சுவர்' எனத தோழி இரவுக்குறியிடதது வந்த தலைவனிடம் கூறிக குறிமறுதது வரைவுகடாவினாள் (கலி. 52:7-10).

**சிறுகுழை** - தாளுருவி என்னும் காதணி. ஆய்மகள் சிறுகுழை - தாளுருவி - அசையும் காதினையுடையள் (பெரு. 161,162).

**சிறுகுறுந்தொழுவர்** - சிறியராகிய குற்றேவல் வினைஞர். காவலையுடைய அகனற மனைகளில சிறுகுறுந் தொழுவர் - சிறியராகிய குற்றேவேல் வினைஞர் - சாந்தம்மியில கத்தூரி முதலிய பல பசுங்கூட்டுக் களை அரைககக கூதிர்க்காலம் நிலைபெற்றது (நெடு. 49,50,72).

**சிறுகுறுமாக்கள்** - சிறுவர். தலைவன் ஊர்ந்து வரும் மடனமாவை ஈாததுத் தெருவின்கண் திரிகினற சிறுகுறுமாககள் - சிறுவா - தலைவியின் தோழியைக் குறித்து, 'இவள் அவனுக்கு அயலானவள்' எனக கூறியது பறறிப் பெரிதும் சாலபுடையோர் போலும என வஞ்சப புகழசசியாயப பேசபபடுதல (நற். 220:3-10).

**சிறு சினத்தர்** - சிறுபொழுதே நிற்கும் சினத்தையுடையவர். பெரிதும் நிலையாத சிறுசினததராய - சிறு பொழுதே நிற்கும சினததையுடையவராய - இந் நிலவுலகை இன்பமுற ஆணடோர் சிலரே (புறம். 360:1,8,9).

**சிறுசெங்குரலி** - கருந்தாமக்கொடிப்பூ. தலைவியும் தோழியும் கொய்து குவித்த பூககளுள் சிறுசெங் குரலியும் - கருந்தாமக் கொடிபபூவும் - ஒனறாகும் (குறி. 82).

**சிறுசொல்** - இழிசொல். 'நலல யானையையும் தேரையும் குதிரையையும் படைககலத் தொழில அமைநத மறவரையும உடைய செருககினால எனது மிகுவலிமைகரு அஞ்சாமல மாறுபடும சினம பெருகி என்னைக் குறித்து, 'இவன ஆளும நாட்டை மிகுததுச் சொலவோர் நம்மால சிரிககத தககவர்' எனவும், 'இவனதான இளையன' எனவும், யான வெறுககுமாறு பேசிச சிறுசொல் - இழிசொல - கூறிய சினமபொருநதிய அரசரைத தடுத்தற்கரிய போரின்கண்ணே சிதறப பொருது முரசததோடு அவரைக் கைபபறறுவேன' எனறு பாண்டியன நெடுஞ்செழியன பகைவரைக குறித்து வஞ்சின முறைததான (புறம். 72:1 9). தலைவனொடு தலைவி களவில புணாநததனை அறியாளாயினும அனனை, சேரியமபெணடிா அலாதூற்றுவதாகிய சிறுசொலலை நமபி அவள் மேனியைச சுட்டெரிபபவள் போல நோககினாள (நற். 175·5-9).

**சிறுசோறு** - 1. சிற்றளவான சோறு. அதியமான நெடுமானஞ்சி இறந்தது குறிதது வருநதிப பாடும ஔவையாா, 'சோறு எலலார்ககும பொதுவாத லால சிறுசோறறானும -சிறறளவான சோறறினை கணணும-மிகபபல கலஙகளோடும பலாககும் பகிர்நதளிதது அவருடனே கூடியிருந்து உணபான; இபபோது அது கழிந்ததே' என இரஙகினாா (புறம். 235:4).

2. **இளமகளிர் விளையாட்டாகச் சமைக்கும் சோறு.** தலைவி தன தோழியருடன கடலில நீராடியும கடறகரைச் சோலையில மணலினால சிற்றில இழைததும் சிறுசோறு - விளையாட்டுச்சோறு- சமைததுக குவிததும விளையாடியிருநதாள் (அகம. 110·5-9).

3. **இளமகளிர் நோன்பினுள சமைக்கும் சோறு.** தலைவி சிறிய குழமகனைப பேணிவளாதது

அவனுக்கு வேறொருத்தியின் பெண்மகளை மணத்தற்காகச் சிறுசோறு-நோன்புச்சோறு-சமைத்துப் பிறாக்கு இட்டுத் தோழியருடன் மகிழ்ந்து நோன்பியற்றியமை (கலி. 59.20,21).

**சிறுதினை** - சிறியதினை (தினை வகை). மலைச்சாரலினிடத்தே காந்தட் கிழங்குகளைக் கிளறிப் பன்றிகள் உழுத புழுதியில் மேலும் உழாமல் அதுவே உழவாகக் குறவர் நல்ல நாள் வந்தமை பார்த்து விதைத்த பருமை கொண்ட தோகையையுடைய சிறுதினை-சிறியதினை-முற்பட விளைந்தன (புறம். 168:2-7). காய்ந்த சிறுதினையை முன்றிலில் இறைத்து அவற்றைத் தின்ன வருகின்ற புறாக்களையும் கவுதாரிகளையும் பிடித்தல் (புறம். 319: 5-7). சிறுதினையரிசியைப் பூக்களுடன் கலந்து பிரப்பரிசியாக வைத்து முருகனுக்கு விழாவெடுத்தனர் (முரு. 218,220). சிறுதினை கொய்யப்பெறுதல (மது. 271). 'மூங்கிலைத் தின்பதற்கு மேனோக்கி நின்ற யானை அவ்வருத்தம் தீரக்கொம்பினிடத்தே இறக்கிப் போகட்டதாகிய துதிக்கை போன்று வளைந்ததும் துய்யினைத் தலையிலே கொண்டதும் ஈன்றணிமை தீர்ந்து முற்றியதுமான பெரிய கதிர்களையுடைய சிறுதினைப் புனத்திலே படுகின்ற பறவைகளை ஓட்டியிருந்து மாலைப் பொழுதிலே வருக' என்று தலைவியையும் தோழியையும் செவிலி விடுத்தாள் (குறி. 35-39). தலைவி சிறுதினைக் கதிர்களில் படியும் கிளிகளைக் கடிதற்காகக் குளிர், தட்டை ஆகிய கருவிகளைப் பல முறையும் புடைத்து நின்றாள் (அகம். 32:5-7). தினை வகைகளுள் ஒன்றாகிய அழகிய சிறுதினையைச் சேணோன் (பரணமேலோன்) காத்திருத்தல் (அகம். 73:14). யானை சிறுதினைப் பெரும்புனத்தை மேய்ந்தது (அகம். 148:3,6). பன்றி, கிளைகள் நெருங்கிய சிறுதினையின் விளைகதிர்களை மேய்ந்து இனிது கண்ணுறங்கியது (அகம். 178:2, 12,13). 'நாடனே, நீ பகலிலே வருவாயாயின் மலைக் குகையின் மேலிருக்கும் பரணில் எம்முடனிருந்து சிறுதினையிற் படியும் கிளிகளை ஓட்டி,' காதலியின் கூந்தல் மெல்லணையில் துயின்று மீளலாம்' எனத் தோழி தலைவனுக்கு இரவுக்குறிமறுத்துப் பகற்குறி நேர்ந்தாள் (அகம். 308.6-15). நறுமணமுடைய சந்தன மரத்தை முழுதும் வெட்டியெறிந்து உழுது விதைத்த சிறுதினையின் துய்யையுடைய கதிர்களைக் கவரும் குருவிகளை, வேங்கை மரக்கவையில் கட்டப்பட்ட பரணமீதிருந்து மூங்கில் தட்டைகளால் ஒலியெழுப்பி ஓட்டிய தலைவியும் தோழியும் தும்பியின் இன்னிசையைக் கேட்டனர் (அகம். 388'1-9). மலைச்சாரலில் பெரும்புனத்தையுடைய குறவனது சிறுதினை அரியப்பட்ட மறுகாலினிடத்தே முன்பனிக் காலத்தில் அவரைக்கொடி மலரும் (குறு. 82:3-6). தெய்வங்களுறையும் தலைவனது மலைநாட்டில் குறவன் தன் தோட்டத்தில் விளைந்த பொன்னிறமான சிறுதினையின் கடவுளுக்குப் பலியாக விடுத்த வளமையுடைய கதிர்களை அறியாமையால் உண்ட மயில் வெம்மையுற்று நடுங்கியது (குறு. 105:1-5). குறவனது தோட்டத்தில் விளைந்த பொன்னிறமான சிறுதினையின் கதிரைக் கிளி ஒடித்து உண்டபின் நின்ற கூழைத்தாள் மழையினால் மீண்டும் தழைத்தது (குறு. 133: 1-3). சிறுதினையைக் காக்கின்ற பரணமேலோன் வீசியெறியும் கொள்ளிக்கட்டையினால் அஞ்சியகலும யானை, வீழ்கின்ற விண்மீனின் சுடரொளியையும் கண்டு வெருவும் (குறு. 357:5-7). மலைச் சாரலிலே அகன்ற பெரிய புனத்தில் விளைந்த சிறுதினையை இரவிலே தொண்டகப்பறையை முழக்கியவாறு அரிவர் (குறு. 375:2-5). கடமை மான்கள் நெருங்கிய தோட்டத்தில் வளரும் அழகிய சிறுதினைப் பயிர்க்கிடையே களையெடுத்தற்குக் களைக்கொட்டை எறிதலால் எழும் புழுதி படிந்த மேனியையுடைய களைஞர் தங்கை தலைவி (குறு. 392:4,5). சிவந்த தாளையும் வளைந்த கதிரையுமுடைய சிறுதினை விளைந்த புனம் அறுவடைச் செவ்வியை அடையுங்காலத்தே, இனி இப்புனங் காவலுக்கு வருவதோ வந்து தலைவனைக் கூடுவதோ இயலாதெனக் கருதும் தலைவியின் அழகு, அப்பிரிவினை யெண்ணித் தொலையும் (நற். 57: 8-10). தலைவர் வருதற்குக் குறிசெய்த மலையிடத்துள்ள சிறுதினைப் புனத்திலே படிகின்ற கிளிகளை நாம கடிந்தோட்டுதற்கு அன்னை நம்மைத் தட்டையோடே அங்குச் செல்லுமாறு ஏவினள்' என்று தோழி தலைவியிடம் உரைத்தாள் (நற். 134.2-6). 'இளமகளே, சாரலிடத்துள்ள சிறுதினையின் பெருங்கதிர்களைக் கிளிகள் கவரும்படி விடுத்து நீ எங்கே சென்றாய்' என்று தலைவியை அன்னை வினவினாள் (நற். 147.1-5). 'நாடனே, யாம் நின்னையும் நின் மலையையும் பாடிச் சிறுதினை காப்பதற்குச் செல்வோம்; அதனால் நீ பகலிலே அங்கு எம் துன்பமெல்லாம் தீரும்படி வந்து முயங்குவாயாக' என்று கூறித் தோழி தலைவனுக்கு இரவுக்குறி மறுத்தாள் (நற். 156.3-6). 'மழை மிகப் பெய்ததனால் விளைந்த செந்நிறம் பொருந்திய செழுங்கதிர்களையுடைய கொய்யத்தகும் இச்சிறுதினைப் புனங்காவல் நும்முடையதோ' எனத் தலைவன் தலைவியையும் தோழியையும் கண்டு வினவினான் (நற். 213:8-10). 'தலைவனொடு மலையின்கண் அருவியாடி, வேங்கைமரத்தின் மேலே கட்டப்பட்ட

ஊனுடன இருக்கும் (அகம். 388.22-24). ஆரிய ரைத் தாக்கி வடமலையில் விற்பொறிதது வெஞ் சின வேந்தரைப பிணிதது வந்தவன் சேரன(அகம. 396:16-18). வெஞ்சின அரவின் பைநதலை துணி படுமபடி வலிமிகக இடியேறு நள்ளிரவில் முழங் கும் (குறு. 190:4,5). சிறிய கண்களையும் மிகக சினத்தையும் உடைய ஆண் பன்றி சேற்றில உழன் றமையான முதுகு புழுதி படிந்திருப்ப அப்புழுதி யுடன சென்று சுருககுவார் வைத்த வெறும் பிளப் பில விழுநது பட்டதாக, அதனை நாயகள் பற்றிக் கொன்று கொண்ட தசைகளைக் கானவா கவர்நது செல்லுவர் (நற் 82:7-11) மதததால் செருக்கிய கடுஞ்சின முனபின களிறு நின்று சென்ற நீரலலாத ஈரத்தில் செநநாய்ப் பிணவு வயிற்றை நிலததில சேர்த்திப் பசியட முடஙகிக் கிடந்தது (நற. 103: 3-6). வெண்ணிறக களர் நிலத்தின புழுதி படிநத, கடும் நடையையுடைய களிற்றியானை நெறியின கண் செலவாரைக் கண்டு கொலவதறகு விருமபிச் சுரததின்கண் சென்று ஆஙகு யாரையும காணா மையால தான் கொணடிருநத அச சினததைப் பனை மரததின் மீது செலுதழ மோதித தணிகின்ற பாழ்த்த நாட்டினையுடையது பாலை நிலம் (நற். 126:2-6). கொல்லும் வலிமையையுடைய ஆண் புலி வில்லையுடைய மறவர் மராமரத்தின பகக லில உள்ளமை கண்டு அஞ்சாது, மலை முழையில் கிடககும ஈன்றணிமை உடைய - பெண்புலியின் நோயும் பசியும் தீர்ககச சினம மிகுநது களிற்றி யானையின புகர் முகத்திற பாயும் (நற. 148. 5-10). வலிய போர் செய்யும் வெஞசின வேநத னின் படை அலைத்தலால் கலஙகிககுடியோடிப் போன, பாழபட்ட பேரூரைத தனிமகன் காத்தி ருத்தல் (நற். 153·7-10). குறுங்காட்டில களிற்றை வலபபககம் வீழ்ததிய வெஞ்சினம மிகக ஆணபுலி பிறர் அஞ்ச முழங்கும் (நற். 154:4-6). மலையின பிளநத முழையிலே பதுங்கியிருநத ஆண்புலி புகர் முக வேழம் புலம்புமாறு தாககி அதன குருதியைப பருகிய வாயை வேஙகை மரத்தின் அடிப்புறத்தில் துடைக்கும (நற. 158.5-8). விரைந்த செலவினை உடைய களிற்றியானை, வலிய புலி தன் முன் எதிர்தது நிறக இயலாது அஞ்சி ஓடுதலால அய லில உள்ள வேஙகைமரம் சிதையுமாறு முறிததுத் தள்ளித் தன் சினம் தணியும் (நற் 217:2-5). முருக வேளையொதத வலியோடு கடுஞ்சினம் மிகுத்துப் பொருத யானையின குருதி படிந்த வெணகோடு போல, வாழை ஈன்ற கூரிய கொழுமுகை தோன றும (நற். 225:1-3). மழை பொழிநத நடுயாமத் தில களிறறியானையைப் பற்றிச சுறறிக கொண்ட மிக்க சினத்தையுடைய மலைப் பாம்பு வயிரம பொருந்திய மரத்துடன சேரப்பிணிததுப புரட்டும (நற. 261:5-7). உரவுசசின வேழம இரவில புலியை எதிர் நோக்கி நிறகும (நற். 336,7,8). யாமத்தில புலியைக் கொன்ற பெருங்கை யானை கடுஞ் சினததையுடைய இடிபோல முழங்கும (நற். 353: 8-10). சிறிய கணணையும் கடுஞ்சினததையும உடைய ஆணபன்றி கானவர் உழுது விளைத்த தினைக் கதிாகளைத் தின்று, பககததிலுள்ள மலைப்பிளபபில தஙகிய புலிககு அஞ்சாது மூஙகில செறிந்த மலைச சாரலில உறஙகும (நற். 386: 1-5). சிறுகணகளையும பெருஞ் சினததையும உடைய ஆண்பன்றியோடு வலிய புலி போரிடுதற கிடனான மலை நாட்டையுடையவன் தலைவன (ஐங. 266:1,2). சிறிய கணணையும் பெருஞ் சினததையும் உடைய ஆணபன்றி பககமலைச சாரலில வில் ஏநதிக் காவல மேற்கொணடு நிறகும குறவரைக காவல சோரும்படி மாறுபடுததி மலை நெல்லைக் கவர்நதுணணும் (ஐங. 267·1-3). பெருஙகை யானைகள தம சினததைப பெருககு தற் கிடமானது வெஞசுரம (ஐங. 352:3,4). 'வெஞ் சின விறலவேல காளையொடு என் மகள, மீண டும் என் மனைககு வருமபடி கரைவாயாயின உன கிளையோடு உணணுமபடி பசுஞன பெயத பசிய நிணததோடு கூடிய நலலுணவைத தருவேன' என நற்றாய காககையிடம வேணடினாள் (ஐங். 391). வெஞ்சின வெனவேல விடலை எனத்தலை வன குறிககபபெறுதல (வெநதிறல வெள் வேல எனவும பாடம்) (ஐங. 393 5) வெஞ்சின விறல வேறகாளை (ஐங. 400:5). பெருஞ்சினததையு டைய நம் வேநதன இபபோதத் தொழிலைக கை விட்டு அமைதியுறுவானாயின (என்னைப பிரிந திருக்கும்) தலைவி தான விருமபுகின்ற விருநதோம பல தொழிலைப பெறுவாள்' எனப் போரப் பாச றையில உள்ள தலைவன தன நெஞ்சிற்குக் கூறி னான (ஐங. 442:1,2). நாட் காலையில முரசம இயம்பக கடுஞ்சின வேநதன தொழில எதிர்ந தனன (ஐங. 448· 1,2). பெருஞ்சின வேநதன பாசறையில தங்குதலை முனியான (ஐங் 460 1). பகலவன கடுகிக் காயகின்ற கதிாகளைச செலுத திச் சினத்தால சுடுதலால முனபு வணடுகள் மொய்ககும மதத்தினை உடையவாய, இபபொழுது அழகிழநதுள்ள யானைகள ஈரமற்ற நிலததை உழுகின்ற கலபபைகள் போலக கொம்புகளை ஊனறிக் கையை நிமிாதது நிலததில கிடநதன (கலி. 8:2-5). செருமிகு சின வேநதன கோபித்து முற்றுகையிட்ட பகைபபுலததை நெருப்புத தின னும் (கலி. 13:1,2). அரிய பாலை நிலக காட்டில் உள்ள மறவர் வலிய படையை உடைய மனனர்

வநது போா செயயினும் தமது வில்லில் எழுந்த நாண ஒலியால அவரைப புறமுதுகு காணடலனறி அமபை விலலிலே தொடுததலை நாணும, கடிய துடியினது ஆரவாரததையும மானின கொம்பு போல முறுக்குணட தாடியையும் கொடிய சினத் தையும் உடையவர் (கலி. 15·1-7) புலியொடு பொருது வெனற வருததததோடு நெடிய மலைச சாரலில துயிலும யானை நனவில தான பொருது வெனறது மனததில கிடககையால், அதனைக கன வில கணடு கடுக வெருவி எழுநது புதிதாக மலர்ந் துள்ள வேஙகையைப புலி என நினைதது அத னைத் தாககி அழகைச் சிதைததுத் தன் சினம தணிநது அவ்வேஙகையைக் காணும்போது தன செயலுககாக நாணித தலை கவிழும (கலி. 49:1-9) பரததைமை ஒழுககமுடையனாய வந்த தலை வனை நோககி, 'நீ காதலோடு அப்புனலில ஆடி அதனால் வெளிப்படும் அலரையான அறிதலஅஞ்சி மறைந்தொழுகினாய எனறு பிறர் சொலலக் கேட் டேன; அது பொறாமல உணமையைமறைத்தசினத் தோடு புருவமாகிய திரையையிட்டுநலல நீர்மையை, உடைய நின ஒழுக்கததைத் தடுக்கும்படி சிலம் பொலியால் ஆரவாரிககும அப்புதிய புனல (பரத் தை) நீ குளிதத அவ்விடததே நினனை இழுததுச் செலுத்துவதைக கண்டவரும உளா' எனத தலைவி புலநது கூறினாள (கலி. 98:20-26). ஏறுதழுவும் போது அவ் வேறுகள் கொலைத தொழில மிக்க சிலை செறிநத குறறத்தைச செய்யும சினம மிககு ஏறுதழுவுவோா மீது பாய்ந்தன (கலி. 102 19,20). ஆயாகள் தொழுவினுள் விட்ட ஏறுகளுள் வசசி ரததோனது (இநதிரனது)ஆயிரங்கணகளை ஒககும பலவாகிய புள்ளிகளையும கடிய சினததையும நிறத் தையும் உடைய ஏறும் ஒன்று (கலி. 105:15,16). சினப பொதுவர், எழுகினற துகள் விசுமபைத் தூர்க்குமாறு மேலெழ ஆதது ஏறுதழுவினர் (கலி. 105·27,29). இன மீனகளைத் தாககி வென்ற சினத் தையுடைய சுறா மீனினது மருபபால செய்த பல கையைக கோதது, புறவிதழ் ஒடிந்த நெய்தற் பூவை நெடிய நாரிலே தொடுதது அழகு பெறககட்டித தாழையினது விழுதால திரித்து ஊசல செயயப பட்டது (கலி· 131:5-11). 'பிறரால தாங்க இயலாத சினததோடு தன வடிவைக் காட்டி அவருயிரைப் போககும பாமபும் பலரிடைப் பட்டால சாவாது' எனபது உலக வழககு (கலி. 140.21,22). ஊரை எலலாம தனககுள்ளாக்கிக கொணடு எரியும கடிய நெருபபுத தனனை அவிக்கும நீரைச் சொரிய சினம மாறும் (கலி. 144:59,60). திருமால குதிரை வடிவத் தோடு வநத அசுரனின (கேசியின) கனலகினற சினததை அடக்கிக கொனறார் (பரி. 3:31,32). பிற உயிரைக் கொல்லும் தீய நெஞ்சததோடு சினம் உடையோர் திருமாலின திருவடி நீழலை அடை யார் (பரி. 5:73,76). 'ஒரு வண்டு தான படிநத மலரினை நெரிதத ஒருததியைச் சினஙகொணட நெஞசுடன் முனனருந் தாககிப் பினனரும் தாக்கு தற்கு விரைந்து வருதற்குக் காரணமான அதனு டைய சின இயலபைக காண்மின' என வையைப் புனலாட்டு நிகழ்சசியை மைந்தர் ஒருவருக்கொரு வர் சுட்டிக்காட்டினர் (பரி. 11:130-132). சினன் காணக.

2. வெம்மை. வானத்தின்கண் பரவியுள்ள இருள் அகலுமாறு செல்லும தன தனமையில பிறழாது வலிய சினம்-வெமமை-முதிர்ந்த ஞாயிறு நிலவு திகழ் மதியமொடு நிலம் சேர்ந்தாற் போல, வஞ்சி னம் கூறித் தனனை எதிர்தது வநத சேர சோழ ராகிய இருபெரு வேநதர் போாககளததில் மாய, தலையாலங்கானததுச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பொருதான (புறம். 25.1-6). 'பெரும,' நீ நின பகைவர்க்கு எந்நாளும் சுடு சினம் ஒழியாதுகடலிடததே கிளர்நதெழுகினறஞாயிற்றை ஒப்பாய: எம்போல்வார்க்குத் திங்களை ஒப்பாய,' எனப் பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன் மாறனை மதுரைக கூலவாணிகன் சீததலைச் சாத் தனார் பாராட்டினார் (புறம. 59.5-7). 'நெருப்பு தன் சினம் ஆறுதற்குக் காரணமான நிணம் பொருநதிய கொழுவிய ஊன துண்டங்களைக கள் வார்த்த மண்டையோடு முறை முறையாக ஒன்றற் கொன்று மாறுபட உணபேமாக என் தலைவ, நினனைக் காண வந்தேம்' எனத தேர்வண் மலை யனிடம வடம வண்ணக்கன பெருஞ்சாததனார் கூறினார் (புறம். 125:1-4), மழை பெய்யாது பொய்த் தலால்காட்டிடததே மூங்கிலகள் வாடி உலரவும குன றுகள் பசும் புல்லும் இன்றி வறளவும் ஞாயிற் றினது சினம் மிககுத தோனறவும் அருவிகள் நீரறறு ஒழிநத பெரிய வறுமைக காலத்தும் தனனை அடையும பரிசிலர்க்கு நிறைய உணவளிதது நன கலம சிதறிப் பரிசில பல நலகும பானமையினன் கடல்பிறககோட்டிய செங்குட்டுவன (பதி. 43:11-20). நிலம் தன்பால் விளை பொருள்களை விளை விக்க, பகலவனது சினம தணிய, பயனமிகக வெள்ளி மழைககுக் காரணமான பிற கோள் களுடன் நிறப, மழை முகிலகள் நலல மழையைப் பொழிதலால உலகுபுரக்கும செயலுறறு நிறப நாறறிசைகளும ஒனறுபோல ஆககம எயத அர சாட்சி செயதவர் செலவக் கடுஙகோ வாழியாத னின் முனனோர் (பதி. 69: 13-17), 'வேல காய்ந தாற் போலும் குடுமிக் கூாஙகற்களையுடைய

பாறையில் குளிர்ச்சி வாராமல வெயில் பாது காக்கும துனபநதரும் வழியிடததில் போகும் பொழுது ஞாயிறு சினம் மாறின அநதிப் பொழு திலே செனமின' எனக் கூததர் ஆறறுப்படுததப் பட்டனர் (மலை. 373-375) நெருப்பின் சினம் பரந்த பெரிய காட்டில் இலைகள் கரிநது உதிரப் பெற்ற கானததின வாழககையையும் புலிபோலும் வலிமையையும் உடைய கழலணிநத மறவர் பழைமை பொருநதிய தமது சீறூரில் உள்ள மன்றத்து நிழலில கண்படுபபர் (அகம். 75:4-7). 'ஞாயிறு சினந்தணிநது மேலை மலையினை அடைய, துனபததைச சுமந்து வந்த இம்மாலைக் காலத்தில தலைவா யாணடுளரோ' எனப பருவ வரவினகண தலைவி மெலிநது கூறினாள் (குறு. 195:1-3). 'கதிர் சினம தணிநத கையறு மாலையை உயிர் வரமபாக நீநதினும கஙகுல வெள்ளம் கட லினும பெரிதாக வரும்' எனப பிரிவிடைத் தலைவி தோழியிடம வருநதிக கூறினாள் (குறு. 387:2-5). ஞாயிறு சினம் சிறிது தணிந்த மாலையின முற்படு பொழுதில இலை உதிர்நத அழகிய மரககிளையில் இருந்து புறாக்கள் கூவும (நற். 305:6, 7). ஆதித்த மணடிலம் தான் கொணட சினம் தணியப் பெற்று மலையைச் சேரவும குருகினம் விசும்பிற் பறந்து செலலவும பகற்பொழுதை மெல்ல மெலலப் போககி முல்லையருமபுகள் வாயதிறந்து மலரவும் மாலைக் காலம வந்தது (நற். 369:1-4). தீத் திகழும் ஞாயிறு வெதுப்பும் சினம் தணிதற் பொருட்டு, யாமரததினது வரி நிழலில் இருநது இளைபபாறிய பின்னர் இவவிடததினினறும் சிறிது தொலை செலவாயாயின நின்மக ளோடு வெனவேல விடலை செனற வழியினைக் காணபாய்' என இடைச் சுரததுக கண்டோர் செவிலித் தாயிடம கூறினார் (ஐங். 388). ''புனை யிழாய், காதலர் பொருளை விருமபிப் பகைப்புல மெனறு கருதாராயப் போதற்கு நினைநத அரிய வழியில, 'மரக் கொமபுகள் வாடுமபடியாகச் சிறக்கும் நின் சினம் தணிவாயாக' என்று ஞாயிற் றைப் பரவி வேண்டுதல நம் கற்பிற்குப பொருந் துமோ எனத் தோழி தலைவியை வினவித தேறறி னாள (கலி. 16:9-12). பலவகை உணவுகளையும விளைவிதது நுகர்விககும நிலம் காயுமபடி ஞாயிறு செயிர் செயயும் சினததோடு கதிர்களைச சொரித வால கோடைககாலததில குளிர்ச்சியை விரும்பித திரளுகினற பசிப பிணியையுடைய யானைத் திரளைத் தாங்கியுள்ள மணிகள் விளங்கும மலை வெமபியது; மண பிளநதது; நீரநிலைகளும் உலர்நது துகளாயின (கலி. 20:1-6).

3. முழக்கம். 'மேகங்கள் தவழும் பெரிய குன்று களில வாழும் அரவினை எறிந்து மிக்க கோபததை யுடைய அதன வலியை அழிககும் பெரிய சினததை- முழக்கததை – உடைய இடியேற்றை ஒப்பாய்' என ஆடு கோட்பாட்டுசசேரலாதனைக காககை பாடினி யார் நசசெள்ளையார் பாராட்டுவர் (பதி. 51:25-28 உலகதது உயிர்களைக காககும் உருகெழு சிறபபி னையும கரிய நிறத்தையும் உடைய வளம பொருந் திய மேகங்கள் அகன்ற வானததினகண எலலாப் பொருள்களும் அதிரும்படி சினஞசிறநது இடித்து வானமுழுவதும் பரநது நிறகும தனமையது கார் காலம (பதி. 81:1-5).

**சினவு** - சினவுதல். (சினத்தல). சினவு - சினவுதல- கொண்ட நாய பின தொடரத தலைவன சென றான் (அகம். 388:14,15).

**சினன்** - சினம். 'பகைவரை வெகுண்டு நோககிய கண், தன தவமகனை (முதலமகனை) நோக்கிய போதும் சிவப்பு மாறாவாயின; எனவே, சினன- சினம் - இனனும் மாறாது நிறகின றமையால் இவனை இவ்வாறு சினப்பிததோர் இனிப பிழைப் பாரலலர்' என று அதியமானின மறமாண பினைப் பாடுவார் ஔவையார் (புறம். 100.8-11). சினன முதலான தீப்பணபுகள் இவ்வுலகததிலே அரசாட்சி யாகிய ஆணைச் சக்கரம் நடத்துதறகு வழித்தடை யாகும் (பதி. 22:1-4). 'கொடிய வலிமையினையு டைய இச்சிவநத ஏறறினது சினனை அஞ்சா னாயத் தழுவியடககுவோன, வரியமைநத குழை யணிநத இவளுடைய மெலலிய தோளிலே துயிலைப பெறுவான' என று ஆயா அறிவிததனர் (கலி. 104: 23-25). திருப்பரஙகுன றததில எழுதது நிலை மண்டபததை (சித்திரசாலையை) கணடபோது அதிலுள்ள ஓவியவுருவஙகளைப பறறி வினவிய மனைவியாககுக கணவனமார், இபபூனையுருவம இநதிரன: இககலலுருவம அகலிகை, இவன அவ விடததே செனறோனாகிய கௌதமன; இககௌ தமன சினனுறறதனால இவவகலிகை கலலுருவான வரலாறு இதுவாகும. என விளககிக காட்டினா (பரி 19:49-54). சினம் 1. காணக.

**சினை** - 1. கோடு (கிளை). இளமகளிர் வணடலமண ணினாற செயத சிற்றிலின கண செய்த பாவைக் குச் சூட்டுதறகு வளைநத சினைபபூவை - கோட் டுப்பூவை (கிளைப்பூவை) - பறிததுப பொருநை யாறறில பாயநது விளையாடும வளம மிககது வஞ்சி (புறம். 11:3-6). நிலை கலஙகிப பூககமழும நீணட சினைகள் தனிபபக காககள தோறும பகை வேநதனின காவல் மரங்களைக் குளமுறறததுத

துஞ்சிய கிள்ளி வளவன் வெட்டினான் (புறம். 36: 7-9). 'நின்னொடு பொருவோன பனையினது வெள்ளிய தோட்டைச் சூடினோனல்லன; கரிய சினையையுடைய வேம்பினது மாலையை உடை யோனல்லன; நினது கண்ணியும் ஆத்தியால் கட் டப் பெறறது. நினனோடு பொருவோன் கணணி யும ஆத்தியாலாயது; எனவே போரைத் தவிர்க' எனச சோழன நலங்கிள்ளிககுக் கோவூர் கிழார் அறிவுரை கூறினார் (புறம். 45:1-4). வழுதியொடு பொருதோர் நாடு ஊாதொறும் மீன் சுடுகின்ற புலால நாறும புகை வயல்களிலுள்ள மருதததின் வளைநத சினைகளில சூழும (புறம். 52:8-10). பாண்டியன வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெரு வழுதி, ஆலமரத்தின கொழுநிழல் தரும் நெடுஞ் சினையை அதன விழுது தாஙகினாற்போலத் தன முன்னோர் இறநதாராக அது கருதித் தளர்தலின்றி நற்புகழ வாயநத குடியைத் தடுமாற்றமின்றி அணைத்துக் காத்தான. (புறம. 58:2-5). தலையா லங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மனற வேம்பின் பெரிய சினையில் பொருந்திய தளிரை உழிஞைக் கொடியுடன் விரவிச சூடிப் பொரு தான (புறம். 76:4, 5). பாரியினது பறம்பில் குறததி அடுப்பில மடுதது எரிதத சந்தன விறகின புகை அதன அயலில உள்ள வேங்கைப பூஞ்சினை களில் தவழும் (புறம். 108:1-4). பொதியின மலை யில் மனறததிலுள்ள பலவினது பெரிய சினையில் வாழும் மந்தி பரிசிலர் கொணர்ந்து தூககிக் கட்டி வைத்த மததளத்தின் தெளிநத கண்ணினைப பலாப பழமென்று கருதித் தட்ட அவ்வொலி யினைக் கேட்ட அனனசசேவல அதற்கு எதிராகத் தானும் எழுந்து ஒலிக்கும் (புறம. 128:1-5). தெய் வம் உறையும ஆலமரததினது பெரிய சினையில் பழுத்துள்ள பழஙகளைப புள்ளினங்கள் நேறறு உணடோம் எனறு அமையாது பினனும் அங்கு செல்லுதலைத் தவிரா (புறம். 199:1-3). இளந் தோழருடன கூடி உயர்ந்த சினைகளையுடைய மருதத் துறையில் வநது நீரகரு அண்மையில் தாழநதுள்ள கொம்பில் ஏறிக் கரையில உள்ளவர் மருளவும் அலைகள் மேலெழவும ஆழமான நீரையுடைய மடுவில துடும எனப பாய்ந்து மணல எடுத்து வநது காட்டிய கலலா 'இளமை எவ்விடததுள்ளதோ எனத் தம முதுமையில தொடித்தலை விழுததணடினார் இரங்கிப் பாடி னார் (புறம. 243:5-11). வேம்பின சினையை ஒடிதது அதன இலையைக கொணர்வதிலும காஞ்சிப் பணணினைப் பாடுவதிலும மனையி லுள்ளார் நெயயுடைக் கையராய் வெணசிறு கடு கைப் புகைபபதிலும் ஈடுபட்டதால எலலா மனை களும் ஆரவாரமாயிருந்தன (புறம். 296:1-3). கொற்ற வேநதர் கருஞ்சினை வேம்பும் ஆததியும, போநதையும மூனறும சூடிய சென்னியர் (புறம. 338.5-8). பொயகை மீனை மேய்நத செவ்வரி நாரைகள் மருதின பூஞ்சினையில் தங்குதலை வெறுப்பின் காஞ்சி மரததில் துயிலும் (புறம். 351: 9-11). முளவு மான இறைச்சி, சினை முதிர் சாந் தம், யானைககோடு ஆகிய மூன்றும் புலித் தோலில குவிககப் பெற்று விருந்தினர்ககு வழங்கப் பெற்றன (புறம். 374:11-15). காற்றால கொணரப் பட்ட மரக்கலங்களை எண்ணும் மகளிர் தங்கும கானற் சோலையிலுள்ள புன்னையின் சினைகள் கடல அலைகளால் அலைப்புணணும் (புறம. 386: 14,15). உயர்சினைக் கூட்டில் இருந்த புள் குர லெழுப்பின (புறம. 397:1,2). ஓங்கு சினை மாவின் தீங்கனி உணவு சமைக்கப் பெறுதல் (புறம. 399.4). மணல் ஓங்கிய அடைகரையில உள்ள புன்னையின் வெள்ளிய பூங்கொத்தையுடைய சினைகளில் குரு குகள் தங்கும் (பதி. 30:3-5). வேலமரததினது காய்ந்த அழகிய சினையில் சிலந்தி வலை பினனி யது (பதி. 39:12,13). மலைபபக்கத்தே வளர்ந்து நின்ற பூக்களையுடைய வேங்கை மரத்தை மறப் புலியின் தோற்றமாகக் கருதி அதன பூவுடைப் பெருஞ்சினைகளை வளைத்துப் பிளநது ஆண் யானை தன் கரிய தலையில அணிந்து கொணடு மறவர் போரெதிர்ந்து செல்லுதல் போலக் காடு எதிரொலிக்கப் பிளிரும் (பதி. 417:-13). கடல பிறக் கோட்டிய செங்குட்டுவன கருஞ்சினை விறல் வேம பாகிய, பகைவரது காவல் மரத்தை வெட்டினான (பதி. 49:16,17). பழையன் காக்கும கருஞ்சினை வேம்பின அடிமரத்தைச் செங்குட்டுவன் சாயததான் (பதி. ப. 5:13,14). இரை தேடி வருந்திய நாரைகள் குவிந்த பூங்கொத்துககளையுடைய ஞாழல் மரத்தின பெரிய சினைகளில சென்று தங்கும (பதி. 51:4-6). பறவைகளும் வணடினங்களும் பெரிய மரச்சினை யில் ஆரவாரித்தன (பதி. 89:3). பழமுதிர் சோலை மலையினகண அருவி, சிறிய மூங்கிலின் பூக்களை யுடைய சினை தனிகுமாறு வேரைப் பிளந்து பாய்ந்தது (முரு 297, 298,316). இரும்பனம் போந் தைததோடும் கரிய சினையையுடைய அரததின் வாய போனற வேமபின் தளிராலாகிய மாலையும அணிந்தசேரனும்பாண்டியனும களத்திற பட்டொ ழியுமபடி கரிகாலன் வெணணிப பறந்தலையில் பொருதான (பொரு. 143-148). பூம்புன்னைச் சினை யில தங்கிய இன நாரை கடல ஒலிக்கு அஞ்சிப் பனையின மடல்களிற சென்று தங்கின (பொரு. 204-207). நளிச்சினை வேங்கையின் புது மலரை விரும்பிச் சுரும்பு அரற்றும் சிறு. 23,24). காரிக

குதிரையை உடைய காரி செறிந்த சினையின கண் நறிய பூக்கள் நிறைந்த சுரபுன்னை மரங் களையும் மலைகளையும உடைய நலல நாடு களைக் கூத்தாக்குப் பரிசிலாகக கொடுத்தான (சிறு. 107-110). மாலை கட்டினாற போலத் தொடுத்த நறிய பூக்களையுடைய சினைகளையும் குறுங்காலையும் உடைய காஞ்சிக கொம்பிலேறி யிருந்து சிரல் குட்டததிலுள்ள கயலைக் கவரும் (சிறு. 178-181). நலலியக் கோடன் பரிசிலர்கரு நலகிய தேர் முருககினது நெடிய சினையினகண் பூங்கொத்து முறுககு நெகிழந்த தோற்றம் போல உள்ளே சாதிலிங்கம் வழிதத உருககமைந்த பல கையை உடையது (சிறு. 254-256). இலவதது அலங்கு சினை பயநத பசுங்காய் புடை விரிநதாற் போல வரிப்புற அணில தோனறும (பெரு. 83-85). உழவரின சிறுவர் முள்ளியின முட்சினைகளில உளள வளைநத காமபினை உடைய கரிய பூவைப் பறிததுப் பஞ்சாய்க கோரையின் நாரைக கிழித் துக் கண்ணியாகக கட்டித் தலையில சூடுவர் (பெரு. 214-219,223). பாம்பு உறைகினற உயர்நத சினைகளை உடைய மரத்தின் நிழலில் நெல்லரிநத உழவர் கடாவடி விட்டனர் (பெரு. 232-238). மகளிர் கொன்றையின் அரும்புகளையுடைய மெல் லிய சினைகளில பனிமாசு கிடநது தவழ்பவை போலப் பசிய மணிகளைக் கோத்த வடங்களை யுடைய அலகுலில் கிடககின்ற மெல்லிய ஆடை அசையுமாறு மயில போல் இயலுவர் (பெரு. 327-331). 'பறவை இனங்கள் திரண்டு தஙகியிருக் கினற கொழுவிய மெலலிய சினைகளையுடையன வாகிய பூவாமல காய்ககும் மரங்களுள் பழததின பருமையாலும இனிமையாலும் மேலாகச் சொல லபபடுகினற பலா மரத்தைப போல, கடல சூழந்த உலகத்து நகரங்களுள் பலசமயததாரும் தொழுமபடி எடுத்த விழாக்களால மேம்பட்டு விளங்குவது பழவிறல் மூதூராகிய கச்சி (பெரு. 406-411,420). கருங்கால வேங்கை இருஞ்சினைக் கொமபுகளில பூத்த நறும்பூ கொயயும் மகளிர் தம் ஆரவாரம் எழுநதது (மது. 296,297). சுரும்பு கள் மொய்ககும் சினைகள் தலைககூடிய, செநதீப போன்ற தெள்ளிய பூக்களையுடைய அசோக மரங்கள் பொழிலினகண நிறைந்திருந்தன (மது. 700,701). செறிந்த குவடுகளில விரவியுள்ள மலர்ச் சோலைகளின சினையிலிருந்து மழைத துளிகள் வீழநதன (நெடு. 27,28). தலைவன தனது தலைமுடியில மலையிடத்துள்ளனவும் நிலததின கண் உள்ளனவும சினையினகண பூத்தனவும சுனைகளிற பூததனவும ஆகிய வண்ண வண்ண மலர்களால ஆகிய தொடையலைச் சூடியிருநதான் (குறி. 112-114). தலைவன் சுரும்புகள் மொயதத பூககளையுடைய தழை பரநத சினை ஒனறை முறிதது வீறு பெற ஓசசித தன வேட்டை நாய களின கடிய குரலை மாறறித தலைவியின மறு மொழியை எதிர்பார்த்து நினறான (குறி. 148-152). மலையடுககில அலங்கு சினைப் பலவு, கோடி யர் முடிவு போலக கீழும மேலும பல காய்த்து முற்றி இறைஞ்சின (மலை. 141-144). மரா மரம் எரி கானறனன பூஞ்சினைகளை உடையது (மலை. 498). நாரிலலாத முருங்கையின் அசையும சினைகளிலுள்ள வெணணிறப பூக்கள் சூறைககாற்று வீசுதலால் உதிரநது திரையின துளிகளைப போல பரநது கிடததலின காடு கட லின கரையகம போல் தோனறும (அகம. 1:15-19) பெருஞ்சினைகளை உடைய, காணபதறகினிய ஓமை, உபபங்கழியிலுள்ள முதலையின மேந தோலை ஒதத கரிய அடிமரததினையுடையது (அகம. 3:1,2). முடவு முதிர புன்னையின தடவு நிலை மாசசினையில பறவைகள் தங்கும (அகம. 10:3,4). 'நம் தலைவர் விரைவாக நமமை உடன கொணடு செனறனராயின காட்டா றறினது பூங் கொத்துக்களை உடைய பெரிய சினைகள் தாழந துள்ள மணல மேட்டில மெய்கள் ஒனறோடொன்று புகுவதைப் போன்ற கை கவர் முயக்கத்தினைப பெறுவர்' எனத் தலைவி கூறினாள் (அகம். 11:7-11). பெருஞ்சினை விழுககோட் பலவின் பயனைக கொள்வதறகுக் குறவா அங்கே குடிசை நாட்டினா (அகம. 12:7-9). கரடிக் கூட்டம கொனறை மரத தின சினையில உள்ள குழல போனற பழததைக கறிததுத தின்னும (அகம. 15 15,16). தலைவியும தோழியும புலிநகக் கொனறையின உயர்நத சினை களில் கட்டித் தொங்க விடபபட்ட தாழை விழு தாலாய கயிற்றால ஊஞ்சல ஆடினர் (அகம். 20:5,6). மராமரததின புரியிணா மெலலவிழ அஞ சினை பூக்களையிழநது தனிமையுறத் தென்றல வீசியது (அகம. 21·9-12). 'மனை இடததுள்ள முலலை சூழநது மலரும இடமாகிய குறிய நொசசி யினது கரிய சினையைக காட்டித தாம வேறறு நாட்டிலிருந்து பொருள ஈட்டும காலததெலலை அமமுலலை மலரும அளவே எனறாா; ஆதலின, தலைவர் ஆண்டுத தஙகாமல் விரைநது வருவார' எனக் கூறித தோழி தலைவியைத் தேறறினாள (அகம. 23:10-13). இளவேனிற காலதது வணடுகள் சினைப் பூங்கோஙகின நுண் தாதுககளை இலவம பூககளிடதது உதிர்ததன (அகம. 25.9-12). அருஞ சுரத்தில தளிரறற யாமரததின் உயர்நத சினையில இருநத, இரை கொள்ள வலல பருநதின சேவல தன பேடை தனபால வருமாறு இளி எனனும

இசைபோனற இனிய குரலால் கூவியழைக்கும் (அகம. 33:3-7). அழகிய தளிர்களையுடைய அசோகினது உயர்ந்த சினையில ஊசல கட்டபபடடிருந்தது (அகம. 38.6-8). முருகக மரததின நெருபபை யொதத மலர்ந்த பூககளையுடைய சினையில இன வணடுகள் ஆரததன (அகம். 41:2,3). தலைவி தோழியருடன ஒலிசினை வேஙகையின் மலர் பறிககச் சென்றாள் (அகம. 48.5,6). ஆள் நடமாட்டமற்ற சுரததில பிளநது செலலும் காற்று முழங்கும யாமரததின உயர்நத சினையில் புலால் விருப்பத்துடன் பருநதின பேடை தங்கியிருககும (அகம். 51:1-4). அரககு ஊட்டினாற் போனற அழகிய நிறமுள்ள தளிாகளையுடைய அசோகினது உயர்ந்த சினையில கட்டபபட்ட ஊசலைப பாம்பெனறு கருதி அம்மரததின் அடிப்புறம துணியுமபடி இடிவீழநதது (அகம.68:5-7). பயனின்மையின் வறிய வரை விட்டுச் செலவரை நாடிபபோகும், நனறி மறநத நயனில மாககளைப போல வணடினங்கள் சுனைபபூ நீத்துச சினைப பூககளில் படர்நதன. (அகம. 71:1-4). விடியற் காலததே உலாவும கரடி, உயர்நத சினைகளை உடைய இருபபையின இனிய பழத்தை வெறுப்பின கறையான் புற்றினை இடந்து இரையினைத் தோந்துண்ணும் (அகம். 81.1-5). மராமரததின கரய்நத உசசியை உடைய வலிய சினைகளில ஏறிப் பருநது தனிமை கொள வருநதும் (அகம. 81:7-9). வேங்கை நறுவீயாடிய மயில நனைப் பசுங் குருநதின மணங்கமழும சினையிலிருநது தன துணையை அழைககும் (அகம. 85:10-13). அழகிய தளிருடன் கூடிய பெரிய சினைகளையுடைய மாமரச சோலையில புகை போனற வெண்மேகங்கள் தவழக குயிலகள் கூவும் (அகம். 97:20-23). முருகக மலர், கோஙகு, அதிரல அழகிய சினையிலிருநது உதிர்ந்த பாதிரிப்பூ ஆகிய வெல்லாம் கடமப மலரொடு விரவிபபரவுககடன் பூண்ட அணங்குடைய கோயிலிற் பரந்து கிடக்கும் தோறறம போல காட்சியளிக்கும (அகம். 99:2-10). காயாவின் மெலலிய சினைகள் தோயுமாறு நீணடு தூககிய பல துடுபபுகள் போலும குலைகளை யுடைய காநதள் மலரின் தாதுணணும் வண்டுகள் கையாடு வட்டுப போலத தோனறும (அகம. 108.14-17). பருத்த அடியில கிளைதத அசையும் அழகிய சினையிலுள்ள கூடு பொலி விழககப பறவை வேற்றிடம பறந்து செலலும (அகம' 113: 23-25). மலையில உள்ள வேஙகை மரத்தின் பல புள்ளிகளை உடைய புலியின நிறத்தைப பொருந்திய பூக்களிடையே பெருஞ்சினையை உடைய நாரததை மரததின நறிய புதுமலர்கள் உதிருமாறு குரஙகு பாயநது தாவும் வளமுடையது வேங்கடம (அகம். 141:24-29). காட்டின் அழகுக் கெடக் கதிரவன தெறுதலின தேககின் நீடு சினைகள் வறியனவாம்படி மேறகாறறால இலைகள் உதிரும (அகம். 143:2-5). குறுங்கால் வாகை மரததின சினையில் முதிர்நது முற்றிய நெறறின் குலை ஆடுமகள் கோலால அரிதெழுப்பும பறை ஒலி போல ஒலிககும் (அகம. 151:8-10). கைதையம படுசினையில் கடற சிறு காககை பெடையொடு வருத்தததுடன் தஙகி இறாமீனையுணணக் கனவு காணும் (அகம். 170:9-12). கரடிகள் தரையில கிடககும் உணவினை உண்ணாமல மேலே சினைகளில் உள்ள இனிய சாறறினை உடைய துளையுடன் கூடிய பூககளை உணண இருபபை மரங்களில் ஏறும் (அகம். 171:12-15). பைம்புதல நளி சினையில குருகு இருந்தாற போல வெண கூதாள மலர் கட்டவிழும (அகம. 178:8-10). சோலைகளில் புனனை மரததின சினையைச் சேர்நதிருந்த நாரைகள் பறநதோடுமபடி ஊதைக் காற்றுடன கடல அலைகள் மோதும (அகம. 190:7-9). யாமரதது அருங்கவட்டு உயர்சினையிலிருநத குஞ்சுக்கு எருவை கொழுங்கண ஊனதடியை ஊட்ட, அது வழுககி வீழ்ந்து முது நரிக்கு உணவாயிற்று (அகம். 193:6-10). மயில் தோகையை விரித்து உழவர் நிழலுக்கு விட்டு வைதத குருந்தின வளைந்த சினையிலிருநது இனபுற அகவும (அகம. 194:11-15). சிலந்தி வலை பினனப் பெறற வறிய சினையுடைய வற்றலாகிய மரஙகளின் நிழலில மானினம் தஙகியது (அகம். 199:5,6,11). வேங்கையின நறுமலர்கள் உதிருமபடி அதன் உயர்நத சினைகளில ஏறி ஆணகுரஙகுகள் தம பெண் குரங்குகளைக் கூப்பிட்டுத தாவும் (அகம. 205.20-22). கைதையம்படு சினைகளால தலைவன் தேர் செல்லுதல தடைப் படுதல் (அகம. 210.12,13). வாங்கு சினை மலிநத திரள் அரைக கடமபின் பூங்கொத்துக்களைத் தளிரோடு கொணடு வநது தலைவன தலைவியின கூநதலில சூடடுவான (அகம. 221:6-9). முருக்க மரததின சினைகளிலுள்ள செந்நிறப பூககளால் சூழபபட்ட கல, காட்டில் அழலால் சூழபபெறற யானை போலத தோனறும (அகம. 223:5-7). புலி நிற வேஙகைப பூஞ்சினையின் மலர்கள் உதிரப் பெற்றுத தனிமையுறச் சினமிகுந்த களிறு, அதன் அடிமரததைத் தாககி முழங்கியது (அகம். 227.6-11). இளவேனிலில குயில் அழகிய அரும்புகளை ஈனற சினைகளையுடைய முருகக மரத்தின் மலர்களைக் கிண்டி, அவறறின தாதினை உண்டு அழகிய தளிர்களை உடைய மாமரததின கிளைகளிலிருந்து கூவும் (அகம. 229:5-20). கருஙகோடடு மாஅதது அலங்கு சினைப் புதுபபூ மழைத்துளி போல உதிர்நது

கழனியில் பரந்து கிடக்கும் (அகம். 236:6-8). அரவின் எயிறு போன்ற அரும்புகள் முதிர்ந்த குராமரத்தினது நறிய கிளையில் தென்றல் ஊடுருவித் தவழ்ந்தது (அகம். 237:3,4). சிவந்த பூவினையுடைய புலி நகக் கொன்றையின் கரிய சினையில் தனியே இருக்கும் தன் குஞ்சினை நினைந்து தணியப் பறக்கும் நாரைகள் மேலே எழுந்து பறத்தலால் கடற்கரைச் சோலைகள் தனிமையுற்றன (அகம். 240:1-4). வேங்கையின் அசையும் மென் சினையிலுள்ள போதை வண்டு வாய் திறப்ப, அதிலுள்ள பொன் போன்ற நுண்தாதுக்கள் மயில் தோகையில் படிந்தன (அகம். 242:1-3). பெரும் மலையின் பிளப்பிடத்தில் உள்ள சந்தன மென்சினை தீண்ட மேலே தேனிறால் தொங்கும், மூங்கில் செறிந்த மலை நாடன் தலைவன் (அகம். 242:19-22). வெளவால், பகலில் தங்கியிருந்த மிக உயர்ந்த சினைகளையுடைய முதிர்ந்த மரம் தனிக்குமாறு மாலையில் பறந்து செல்லும் (அகம். 244:2,3) இலவத்து அலங்கு சினையிலுள்ள தீ எரிந்தாலன்ன ஒள்ளிய பூக்களில் குழல் போலும் இசையையுடைய வண்டுகள் ஒலிக்கும் (அகம். 245:14-16). நொச்சி மென்சினையின் வளைந்த பூங்கொத்துக்கள் வாடினும் தலைவி வருந்துவாள் (அகம். 259:14-16). காட்டிடத்தே கோடைக் காற்று சினையினை மோதி உதிரச் செய்த இருப்பையினது வெள்ளிய பூக்களைக் கரடிக் கூட்டம் கவர்ந்துண்ணும் (அகம். 267:4-8). பராஅரைப் புன்னையின் வளைந்த சினையைக் கடலலை தோயும் (அகம். 270:5,6). ஆண் புறா சுவை பொருந்திய காய்களைக் கொண்ட நெல்லி மரத்தின் அழகிய சினையிலிருந்து அகவும் (அகம். 271:1,7,8). பொன்போல் மலர்ந்த வேங்கையின் அலங்கு சினை பொலிய மணி போன்ற நிறத்தினையுடைய மயில் அகவும் (அகம். 272:16-18). தலைவி தலைவன்பால் கொண்ட வேட்கை நோயாகிய முளை, வருத்தமாகிய திரண்ட தண்டாக நீண்டு, ஊரார் எழுப்பிய அம்பலாகிய அழகிய சினைகளைக் கொண்டு, ஆராக் காதலாகிய தளிர்களைப் பரப்பி, நாணமில்லாத பெருமரமாகத் தழைத்து, அலராகிய மலர்களைச் சொரிந்தது (அகம். 273:11-17). இறால் மீனை அருந்திய சிறிய சிரல் பறவை மருத மரத்தின் தாழ்ந்த சினையில் உறங்கும் (அகம். 286:6,7). யா மரத்தின் ஓங்கு சினை நல்கிய வரிநிழலில் தலைவன் தங்குதல் (அகம். 287:11,12). தலைவன் வேங்கைப் படுசினைப் புதுப் பூக்களாகிய பிறவற்றோடு மணம் மாறுபடும் அழகிய கண்ணியையுடையவன் (அகம். 288:3,4). உகா மரத்தின், குயிலின் கண் போன்ற காய் முற்றி, அழகிய பொற் காசுபோன்ற பெரிய கனியாகி அதன் சினைகளினின்றும் உதிரும் (அகம். 293:6-8). முன் பனிக் காலத்து நள்ளிரவில் வண்டுகள் சினையில் அசையும் (அகம். 294:11). வேங்கை மரத்தின் ஒளிமிக்க தளிர்கள் விளங்கும் பெரிய சினையிலுள்ள குளிர்ந்த நீர்த்துளிகளை, அசைந்து வரும் காற்று மெல்லென வீசி உதிர்க்கும் (அகம். 298:4-6). அலங்கு சினைக் குருந்தின் நிழலில் குட்டியைத் தழுவிய பெண்மான் இரலையொடு தங்கும் (அகம். 304:8-10). வண்டினம் ஊதுந்தோறும் குரவத்து ஓங்கு சினையிலுள்ள நறுமலர்கள் கோங்கின் பூவகத்தை உதிர்த்தன (அகம். 317: 10,11). ஆலத்து அலங்குசினையில் ஏறியிருந்த காக்கையினம் பாலை நிலத்தில் எயினரது வில்லால் இறந்து பட்டோருடைய பிணங்களைக் கவர்ந்துண்ணும் (அகம். 319:1-5). வண்டுகள் தேன் உண்ணும் நறிய பூக்களைக் காற்று சினையினின்றும் உதிர்த்தலால் அவை அறலிடத்து வீழ்ந்து அழகு செய்யும் (அகம். 324:9-11). புற்றுகள் அடிமரத்தில் கட்டப் பெற்றுள்ள காய்ந்த சினைகளையுடைய மரத்தின்கண் உள்ள காக்கைகள் பிணங்களின் பசிய கொழுப்பினைக் கவர்ந்துண்ணும் (அகம். 327:14-16). இருப்பை மரங்களின் வெண்பூக்களைப் பெண் கரடிகள் சினைகளிற் சென்று உண்டு எஞ்சியவற்றை எயினர் மகளிர் மூங்கில் குழாய்களில் திரட்டிக் கொண்டு போய்க் குன்றகச் சிறுகுடி மறுகுதொறும் விற்பர் (அகம். 331:1-8) கொடிய வேனிலில் களிற்றியானை தனது கொல்லுதல் வல்ல கோடு ஒடியுமாறு பாய்ந்து சினம் மிகுந்து காய்ந்த சினைகளையுடைய யாமரத்தின் பட்டையைக் கிழித்துத் தன் பிடிக்கு ஊட்டும் (அகம். 335:4-7). பக்க மலையின்கண் யாமரத்தின் உயர்ந்த சினையில் மாரிக் காலத்தில் தளிர்த்த தளிர் போன்ற மேனியை உடையவள் தலைவி (அகம். 337:1,2). மலைப்பக்கத்துள்ள சினை ஒண்காந்தள் போல் மணக்கும் நறுநுதலினள் தலைவி (அகம். 338:6-8). குயில்கள் மாமரத்தின் உயர்ந்த சினைகளில் கூவும் (அகம். 341:2,3). அகன்ற இடத்தில் நிற்கின்ற யாமரத்தின் அழகிய தளிர்ப் பெருஞ்சினை இல்லின்கண் இருப்பது போல் நிழலைத் தந்தது (அகம். 343:10,11). குன்றின்கண் அருவிகளின் நீர்த் துளியால் மலர்ந்த கருங்கால் நுணவின் பெரிய சினைகளில் உள்ள பூக்கள் சிவந்த மணலையுடைய சிறுநெறிகளில் உதிர்ந்து கம்மென்று மணம் வீசி அழகு செய்யும் (அகம். 345:14-17). ஞாயிற்றின் கதிர் தெறுதலால் இலைகளை உதிர்த்த இருப்பையின் தாழ்ந்த சினைகளில் தீ கப்புவிட்டாற் போன்ற அழகிய தளிர்கள் தோன்றின (அகம். 351:5-7). முதிர்ந்த இலைகளை ஒழிந்த மலர்கள் விரிந்த பெருஞ் சினையில் வண்டினம் முரலும் (அகம். 355:3-5).

நீர் சூழந்த வியன களத்தில் மருதம் தழைத்து அழகு பெற்றிருககும (அகம. 366.1,2). மகளிா ஊசல ஆடுவதறகாகக குன்றின பககததில் உள்ள வேஙகையின சினைகள் கழிக்கப்பட்டன (அகம. 368.4,5). வரகின கவாதத கதிருடன கூடிய தட்டைகளைத தொகுத்த பொலியில மாடுகளின கவர்பட்ட குளம்பினால் துவைககப்பட்ட பல சினைகளினினறும் உதிர்ந்த வரகினைக் குடவர் பாறையில குவித்து வைபபர் (அகம். 393:4-7). அழறசினை வேஙகை நிழலில ஓட்டந் தவிர்ந்து தஙகிச செல்லுமாறு தலைவி ஆறறினை வேண டல் (அகம். 398:17). காஞசியினது பூங்கொத்தி லுள்ள தாதுககள தம மேலே படுமபடி உழவர் கமழபூ மெனசினையை வளைத்தனர் (குறு. 10.2-4). தலைவியின நுதல, மலைபபககத்திலுள்ள தாழ வரை அழகு பெறுதறகுக் காரணமான கடப்ப மரததினது வேனிற்காலத்து அஞ்சினை போனறு மணங்கமழும் (குறு. 22-2-5). மலர்நத கருங்கால் வேஙகையின மேலே எழுநத பெருஞ்சினையில உள்ள மயில்கள் பூக் கொய்யும் மகளிரைப் போன்று தோன்றும் (குறு. 26:1-3). களிறு பெண் யானையின பசியை நீககுவதற்கு யாமரத்தின் மென் சினைகளை ஒடிக்கும (குறு. 37:2,3). பொரிந்த அடியையுடைய ஓமை மரத்தின் நெடுஞ் சினையில ஏறிப் பெணபுறவு ஆணபுறாவை அழைககும் (குறு. 79:2-4). தலைவி, பசுமையான அரும்புகளையுடைய ஞாழல் பலசினை சூழ்நத ஓரிடத்தில் தலைவனைக கூடியதால் உணடாகிய புத்தழகினைத தலைவன பிரிதலினால இழநதாள் (குறு. 81:2,3), சினைகள் தோறும் பலவின பழம தொங்கும வள மிக்க மலை நாட்டையுடையவன் தலைவன (குறு. 83:4-6). சிறகின் ஆற்றலை இழந்த முதிய நாரை கடல அலைகள படிகின்ற வளைநத மரசசினையில தங்கியிருக்கும் (குறு. 125:5, 6). கலபொருது இழிதரும அருவி நீர் குறிய கற்களிடையே வளர்நதுள்ள வேஙகையின பூவுடன கூடிய அசையும சினைகளை அலைத துப பாயும (குறு. 134.3-5) முனறிற பலா மரங் களின் கரிய சினைகளில ஆண குரங்குகள் தாவிப் பாயினும தலைவி நெஞ்சம அஞ்சும (குறு. 153:1-3). அனறிற சேவல் தன பெடையுடன் தடாமரத்தின உயர்நத சினையிலுள்ள கூட்டி லிருநது ஒலிககும் (குறு. 160:1-4). தேனை விரும பிய பலவாகிய வணடினஙகள் திணிநத மணலை யுடைய அடைகரையில நீரால நனைந்த புன்னை மரக கரிய சினைகளில கூடும (குறு. 175:1-3). புலலிய காயாவினது பூக்கள் பொருநதிய பெருஞ் சினைகள மயிலினது கழுததைப்போனறுதோன்றும் (குறு. 183:5, 6). வலிய சினையிலிருந்த புள்ளினம் தாம புணர்நதமையின பிரிநதோா வருநதத தீங் குரலால அகவும் (குறு. 191:2-4) குயில மாமரச சினையில பூத்துள்ள பூககளின நறுந்தாதினைக கோதும (குறு. 192:3-5). வளைந்த சினைகளை யுடைய வெடசியின மலாகள் மணககும் கூநதலை யுடையவள் தலைவி (குறு. 209:5,7). தீய்ந்த மரா மரத்தினது ஓஙகல் வெஞ்சினையின் ஒறறைப் பூங்கொத்திலுள்ள தேனைத தும்பி என்ற வண்டும் தேன என்ற வண்டும் ஊதிவறிதே மீணடன (குறு. 211:4-6). அடைகரையில நின்ற புனனையின் நிலம தோயந்த தாழசினைகளில புதிய நாரைகள வநது தங்கும் (குறு. 239:3-5). வேங்கையின கெடாத மென் சினையிலிருநது மலர்கள் உதிருமிடததில யானை துயினறு உயிாக கும (குறு. 247:4-6). கோங்கின் இலை இலலாத அழகிய சினைகளில வணடுகள் கூட்டமாக ஒலிகக முலையினது அழகைக கொண்ட மெனமையான அரும்புகள் விரியும (குறு. 254:1, 2). புனனையின அசைகினற சினையிலிருநத நாரை கழியிலுள்ள சிறுமீனை வெறுப்பின வயலில் உள்ள தேன கமழும் நெயதலைக் கதிரொடு தின்ன விரும்பும் (குறு. 296:1-4). வேனிற காலததே மலர்ந்த கான இருபபையின வெணபூககள் காற்றால அலைப் புணடு நெடிய சினைகளினினறு உதிாநது, களிற்றி யானை செல்லும் சிறு நெறியைப் பரவி மறைக் கும் (குறு. 329:1-3). மகளிா அகனற பாறையில செநதினையைப் பரப்பி உலர வைததுச் சுனையின கண ஆடுகினற நெகிழசசியை நோககிப பெண் குரங்கு மரசசினைகளினினறும இறங்கி வந்து தன குட்டியோடு அதனைக கவரும (குறு. 335:1-4). கார்காலததில பூககளையுடைய குராமரம நெற் பொரிபோலும் பூககள செறிநத புனக மரத்துடன அழகு பெறறுச சினைகள் காணபதற்கு இனப முடையனவாய்த தோனறின (குறு. 341:1-3). ஆணபுலி யானையின் முககததில பாய அதனை யானை குததிக கொனறதால மருபபு குருதிககறை படிய, கொலலப்பட்ட புலிமேல்காறறால் வீழதப் பட்ட வேங்கை மரததின வாடியசினை போனறு கிடநதது (குறு. 343:2-6). யானை உலர்நத சினை யைப பிளகக வலியின்றி வருந்தியது (குறு. 388: 5,6). மழைக்காலத்தில பூஞ்சினையிலிருந்த மயில, அகன்ற இடம் தனிதது வருநத அகவும (குறு 391: 6-9). முளிசினை ஓமையைக் களிறு குததியது (குறு. 369:3,4). பொரியரை வேமபு பார்ப்புககளை ஈன்ற பருநது வருநதியுறையும் நெடிய சினைகளை உடையது (நற 3:1,2). நெடுஞ்சினைப புனனையி லுள்ள கடுஞ்சூல் வெண் குருகு அலையோசைக்கு

அஞ்சும் (நற். 31:10,11). கூட்டமாகக கூடியுள்ள குறவா சிறார், விளையாட்டு அயாகின்ற முனறி லில தஙகி ஆசினிப் பலாவினையுடைய தோட்டத தில நீணடுயர் நதுள்ள மரங்களின் சினைகளிலுள்ள மினமினிப் பூசசிகளை விளக்காகக் கொண்டு விசும் பில் செலலும மேகங்களின இயககத்தைக காண பர் (நற். 44.8-11). பரதவர் முன்றிலின்கண் உள்ள புன்னையின் கரிய சினைகளிலுள்ள நறிய மலர் அயலிலுள்ள தாழை மலரோடு கூடி மணங் கமழும் (நற். 49:8,9). உகாய் மரக் காயையுண்ட புறா வருத்தமுற்று நெடிய சினையின் மேலேறி அதனை யுண்டதன தவறறை நினைதது மயக்க முற்று வருநதும் (நற். 66:1-5). சீறூரிலுள்ள முன றிலில சிவநத வேர்களையுடைய பலாமரததின சினைகள் தோறும பழங்கள் தூங்கும (நற். 77: 4-8). ஊரிலுள்ள மாமரததில் வௌவால உயர்ந்த சினையில தொங்கியுறஙகும. (நற. 87: 1,2). கடலின்கண் துழாவித் தன் பெடையுடன் இரை தேரும நாரை சிறுமீனகளைப பிடித்து வநது உயர்நத சினையின மீதுள்ள கூட்டில் இருநது தன் பிள்ளையின் வாயில கொடுக்கும் (நற. 91:3-7). காயந்த கொடிகள சுறறிய இல வதது விளங்கிய சினைகள் அதிர வீசி அவை முறி யுமாறு கொடிய காற்று மோதியடிககும் (நற். 105: 1-3). தலைவி நறுமலரையுடைய ஞாழலின் அழகிய சினையிலுள்ள பூங்கொததைக் கொய்து அத னோடு இளந்தளிரையும் சேரப் பிசைநது உதிர்த் தாள் (நற். 106:6-8). மானினம் நிமிர்நது தழை உண்ணுதலால சிறிது வளைந்த சினைகளையுடைய இலநதையின் காய்கள் கறகள் பொருந்திய சிறு நெறிகளில் உதிர்நது பரவிக்கிடககும (நற். 113: 1-3). பலவின் மாசசினையினின்று கீழே விழுந்த பழம் மலையின் பிளபபிடத்தில வீழ்நதொழிநதது (நற். 116:6-8). தணணறுஞ் சோலையில மாமரத் தின நெருங்கிய சினை தழைதது தளிரீன்று கவி னெய்தியது (நற். 118:1,2). மலைப்பக்கத்தில கள வுப புணர்ச்சியில கடுவனால் முயங்கபபட்ட பெண்குரங்கு தனககுப் புணர்சசி வேறுபாட் டான் உண்டாகிய குறியைத் தன சுறறம அறியு மெனறஞ்சி, பொன்போனற பூக்களையுடைய வேங கையின சினை மீது ஏறிச செனறு ஆழமாகிய சுனையை நோககித தலைகவிழ்நது முனபு புணர்ச சியால் குலைநத தன் முச்சிமயிரைத் திருத்தும் (நற. 151:5-11). புன்னையினது மேலோங்கி வளைநத பெரிய சினையில புதுவதாக வந்து தங்கிய நாரைகள் ஒலிககும (நற. 167:1,2). சுரும் புணணுமாறு விரிநதுள்ள வேங்கைப் பெருஞ் சினையில தேனடைகள் கட்டப் பெற்றிருந்தன (நற். 168:1,2). மககள் இயங்காத நெறியின்கண் தாளிபபனையினது குலைகளையுடைய நெடிய சினையில தங்கி, ஆணபறவை தன பெடையை அழைபபின அவ்வொலி கேட்ட புலி எதிரோசை எழுமபடி முழங்கும (நற். 174:2-4). ஆண் நாரை யினால இனபம நுகரப்பெறறுப் பிரிநது செயலற்ற பேடை சிறுமீனை உணணாது தாழையின பெரிய சினையில் துனபததுடன தங்கும (நற. 178:2-5). பராஅரை வேம்பின் பெரிய சினையிலிருந்த குராலாகிய கூகை இரவு முழுதும குழறும (நற். 281:7,8). வேங்கையின சிவநத மலாகளையுடைய வளைநத சினையில் வடுககொளக கயிறறினாலாகிய ஊசல கட்டபபட்டிருநதது (நற. 222.1-3). நீலமணி போன்ற பன்மலர்களையுடைய காயாவின குறுஞ் சினைகள் பொலியக் கார்காலம தொடஙகியது (நற. 242:3-5). அசைகினற சினையில தளிர்ததுத தழைதத நறிய வடுககளையுடைய மாமரம மிகக சோலை தோறும் குயிலகள் கூவின (நற. 243.3-7). நொசசி வேலியிலுயாநத மாமரததின் சினையி லிருந்து கரிய குயிலகள் இனிமையுறக கூவும் (நற. 246:3,4). காாப் பருவததில வயிரம முறறிய வேல மரத்தின தாழந்த சினையின வரி நிழலில் பிணைமானைப புணர்நத கலைமான்கன் தஙகி யிருககும (நற். 256:7-10). வேம்பின பழங்களைத் தின்னுதலை வெறுத்து இருப்பையின் இனிய பழததை விரும்பி வௌவாலகள் சினைதோறும் பாயந்து பறததலால அவற்றின் மேல தோய்ந் துள்ள பனிததுளிகள் சிதறி விழும் (நற். 279:1-4). பலியுண்ணும் காக்கைகள காறறு மோதுகின்ற நெடிய மரச்சினைகளில தமமேல விழுகினற மழைத்துளியைத் தாங்கிக் கொண்டு அசைந்திருக் கும் (நற. 281:1,2). உயாநத மரச சினைகளிலுள்ள மயில காலையில் இளவெயில் காய வேண்டி அருவி ஒலிககின்ற மலைப பககத்தில் பெடையொடு ஆடும (நற. 288:1-3). நெடிய கணுக்களையுடைய சநதன மரத்தின அசைகினற சினையில சுற்றிய தமாலக கொடியைத தேனெடுக்கும் வேடர் அறுத்துக்கொண்டு செலவர் (நற. 292:1,2). இலை யுதிாந்த அழகிய சினையில இருநது புறா கூவும (நற. 305:6,7). ஓமையின தாழநத சினை பயநத நிழலில் தலைமககள் தங்கியிருததல் (நற். 318:1-3). மலைபபக்கததில கொழுதத சுளையையுடைய பலா வின செழுமையாகிய காய காய்ததுப் பருததலால தாங்கமாட்டாது வளைநத கரிய சினையில கொககு மீனைககுடையும் நாறறம் தாங்க முடி யாமல மநதி தும்மும் (நற. 326:1-4). எருமைக கடா நாரையின கூட்டம இரிநதோடுமபடி நீர் நிரம்பிய பொய்கையில துடுமெனப பாயநது

கிடந்து களைப்பு நீங்கிய பின்னர் நீண்ட சினைகளையுடைய மருதமரத்தின இனிய நிழலில் தங்குமே (நற். 330:1-5). நெலலறுப்போா முழக்கும தண்ணுமைகது அஞ்சி வயலிலுள்ள பலவகைப புள்ளினம ஓடுதலால வயலில தாழ்நது வளைநத சினையையுடைய மருததின பூஙகொத்துக்கள் உதிரும (நற். 350:1-3). நீடு சினைப் புன்னையின நறுநதாது உதிருமாறு கிளையின மீது குருகினம் பெயர்நதுலாவும் (நற். 375:1,2). எரி கபபு விட்டாற் போன்ற மலர் நெருங்கிய பூஙகொத்துக் களை உடைய வேஙகைச சினையில் குரஙகுககுட்டி மறைநதிருநது கொடிசசி கையிலிருந்த பாலைக் கலத்தோடு கவாநதோடியது (நற். 379:1-5). பொன போன்ற பூக்களையுடைய வேங்கை மரத தின சினைகளிலுள்ள பூநதுகளை அளந்து அழகு பெறற மயில கறபாறையின் உச்சியில தன கூட்டததோடு தஙகிக் கதிரவனின் இள வெயிலை நுகரும (நற. 396:4-7). அசைகின்ற சினைகளையுடைய மாமரததில அழகிய மயில்கள் தங்கியிருககும் (ஐங் 8:4). மணல திடரில் நிற்கினற மாமரததினது புதிய மலர்களையுடைய பெருஞ்சினை புதுவதாக மணந்த மணமகளிர் மெய் போனற நறுமணங் கமழும (ஐங். 19.1,2). மணல பரபபில் நினற ஞாழல மரத்தினது பூங்கொததுக்களை உடைய தாழ்ந்த சினையில பறவைகள் தங்கும (ஐங் 142:1, 2). எககர் ஞாழல் சிறியிலைப் பெருஞ்சினையைக் கடல் வளைக்கும (ஐங். 145:1,2). எககர் ஞாழலின இகந்து படு பெருஞ்சினையிலுள்ள மலர் இனிது கமழும் (ஐங். 148:1,2). எககர் ஞாழல் நறுமலர்ப பெருஞ்சினையை அலை அசைக்கும் (ஐங். 150.1,2). பெருங் கடற் கரையில வாழும கடற்காககை பொன் போனற பூங்கொததுககளையுடைய புலி நகக் கொன்றையின மேல உறைதலை வெறுப்பின் இதழ் விரிகினற புன்னையின பூஞ்சினைகளில சென்று தங்கும (ஐங. 169.1-3). குரஙகுக் குட்டி மலையில் கட்டபபட்டுளள தேன கூட்டில தேன் பருக எணணி அதிலுள்ள ஈககளைக கலைத்து விட்டு, அவற்றிற்கு அஞ்சி அருகிலுள்ள அசசம பொருநதிய நெடுஞ்சினையில பாயும (ஐங். 272:1-3). மலர்ந்த வேஙகைப பெருஞ்சினையில மயில் பூக கொய்யும் மகளிர் போல தோனறும் (ஐங. 297:1,2). வெண் கடமபின சினையிலுள்ள வெண்ணிற மலாகள் அருஞசுரங்கடநது வழிச செலவோர் தம துணைவியரை நினைநது செலவழுஙகுமாறு நறுமணங்கமழும (ஐங. 331.2-4). சிறிய இலைகளை யுடைய குறுஞசினை வேமபின நறும்பழம உண்ண வாவல் உயரப பறககும (ஐங 339·1-3). இள வேனிற பருவத்தில் பெரிய சினைகளையுடைய நுணா மரங்கள் நன்கு மலர்ந்து நறுமணம் கமழும்பொழுது சுருமபு களித்து ஆரப்பரிக்கும் (ஐங. 342.2,3). அஞ்சினைப பாதிரி அலாநததெனக் குயில இளவேனிற் பொழுதில கூவும (ஐங். 346.2,3). பொரிகால் மாவின சினை மறையுமாறு இளவேனிற் பொழுதில நெருப்புப் போனற அதன செநதளிர் கள் தோனறும் (ஐங. 349:2,3). இளவேனிலில குராமரததின நீண்ட சினைகளில தங்கிக கரிய குயிலகள் கூவும் (ஐங். 369 4,5). வண்சினைக் கோங்கின மணம கமழ் மாலையை வண்டினம மொய்க கும் (ஐங. 370:1,2). தலைவன அழகிய கூநதலை உடைய தலைவிககாகப பாலை நிலததினகண் வளர்நதுளள மரா மரத்தின் வண்டுகள் ஒலிக்கும் குறுஞ்சினையை வளைததுப பூககொயய நினறான் (ஐங். 383:1-4). பாலை நிலததிலுள்ள மரஙகள் இளமைப பயன கொள்ளாது வறியனானவன இளமைச் செவவியினறி இருககுமாறு போலத் தளிர்கள் வாடிய சினைகளுடன நின்றன (கலி. 10.1,7). ஞாயிற்றை நோககிக காதலா நமமைப் பிரிநது செல்வதற்கு எணணிய வழியிடத்தில மரசசினைகள் வாடும படியாகச் சிறககும நின் சினம் தணிவாயாக' என வேண்டுதல நம் கறபிற்குப் பொருநதுமோ' எனத் தோழியிடம் தலைவி வினவினாள் (கலி. 16:9-12). அருஞ சுரம, பாகர் யானைகளை ஓட்டும் கவணையால் மரச்சினைகளிலுள்ள பூககளை உதிர்ககும மலைகள் வெமபிய வழிகளையுடையது (கலி. 23:1-3). மரசசினைகளில் உள்ள பூககளைக கண்ணியாகத் தொடுப்போர் நாடி வந்து கொய்தலை வேணடாது தாமே விரும்பிக கொடுபபது போல, நீர்த் துறைகளில உள்ள மரஙகள் வளைநது தாழநது துறைகள் அழகுற நினறன (கலி. 28:1-4) சினையின் பூககளில சுருமபு ஆர்பபரிககும (கலி. 28:16). வண்டுகள் அருமபுகள் விரிநத மரச்சினை தோறும் தாம் விருமபும தாதைப் பொருநதியுணடு ஆர்க கும (கலி. 30:2,3). அறிவான அமைநதவர் தங் காரியததை முடிததறககு காலம வருநதுணையும் அடஙகியிருககுமாறு போல, மரசசினைகள் காலம வருந்துணையும் மலர்தலிலலாத அருமபுகளைப பெறறிருநதன (கலி. 32:8). சுரும்புகளும வணடுகளும் ஆர்கக மரச சினையிலிருநது பல மலர்கள் ஆற்றிலே உதிர இளவேனில வநதது (கலி. 34·6,7). தளையவிழ்ந்த பூஞ்சினையிடததே சுருமபு யாழ போல இசைததது (கலி. 34:16). மடியிலான செலவம பெருகுமாறு போல மரங்கள் பூககளைப பெருக்க, அங்ஙனம் முயனறு பெறற செலவததைத தான வருந்தாமல பெறறு உணபாரது நுகர்சசி போல அம்மரச் சினைகளில தேனை உணடு வணடு

கள ஆரவாரிததன (கலி. 35:1,2). தலைவியின எழில் மேனி பூககள் நிறைநத தாழசினையின தளிரை ஒத்தது (கலி. 40:19,20). களிறறியானை தான விருமபிய பிடியானைகதகு உண்டான வயா நோய்ககு இனிய கனுவிடததே தோனறிய நெடிய சினைகளையுடைய கருபபங்கோலை முறிககும (கலி. 40:26-28). மலைச சாரலில பாயும் அருவி தனது அழகிய சினைகளில வீழ்தலால வேஙகை யின முதிர்நத பூங்கொததுக்கள் அலர்நதன (கலி. 44:2-4). யானைத தலைவனோடு வரிபபுலி வநது போர் செயத காலததுத துமபி அதனை வேஙகை யின சினை எனக கருதிச சூழ்ந்தும வேஙகையின் சினை என்று யானையினது புகர் முகததை அணு கியும பலகாலும திரியும (கலி. 46:2-6,8). மாவின உயர்ந்த சினையிலிருநது மிகக காறறாலசையும நறிய வடுக்களின காமபு முறிநது பால சொட்டி யது (கலி. 84:1,?). சினையலா வேமபின பொருப் பன் பொருத முனை அரண உடைநதது (கலி. 92: 27,28). 'புணாநதீா! பிரியனமின; புணர்சசி நீட் டிதது இடையே பிரிநதீர்! கூடுமின' எனக கூறு வன போல இளவேனிலில கரிய குயிலகள் அருமப விழ்ந்த பூககளையுடைய சினைகள் தோறும கூவும (கலி. 92:61-64). ஏறுதழுவும போது அவவேறுகள் தம கொம்பால தோணடிய குடாகள் தொஙகி விழும்படி எடுத்துக கொணடு உயர்ந்து செல்லும பருநதின வாயினின்றுந தபபி, ஆலமரத்திலும கடப்ப மரததிலும் உறையுந் தெய்வங்கட்கு மகிழ்ச்சியுணடாக வேணடி இட்டு வைதத மாலை கள் போல அவற்றின் சினைகள் தோறும தொங் கும (கலி. 106:26-29). மாலைக காலமே, நீ மருட் சியை உடையை; அதற்குக் காரணம் என்னெனில் நம்மைத் துறந்த காதலரை நினைககையினாலே கயஙகளில பூத்த போதுபோல நின்னைக் கண்டு மனங்குவிந்த என்னுடைய நலத்தை இகழ்கின்ற நீ வணடுகள் ஆரவாரிககுமபடி மலாநத சினைப பூபபோல மனம் நெகிழ்ந்த காதலரைக் கூடிய மகளிருடைய அழகைப போக்க மாட்டாய்' எனப பிரிவிடையாற்றாத தலைவி மாலையைப் புலநது கூறினாள் (கலி. 118:9-20). மாலைக் காலததில அழகு மிக்க தாழநத சினைகளில தம இருப பிடததே பெடையும சேவலுமாகக் கூடிப பறவை கள் ஒலிததன (கலி. 118:17) புன்னையின சினை கள் தோறும் மலர் மலரும் செவவி பார்தது நுகர் தற்குச் சுரும்பினம ஆரவாரிககும ஓசையோடு கரிய தும்பிகளும் ஒருஙகியைநது இமமென ஒலிககும (கலி. 123:1-3). தீககொழுநதினை ஒககும் தளி ரொடு கொழுநிழல தரும பலவாகிய சினைகளை யுடைய ஆலமரததின கீழும கடபப மரததின கணணும் ஆறறிடைக் குறையிலும குனறுகளிடத் தும இனனோரனன பிறவிடஙகளிலும பறபல தெயவஙகளாக வகுததுச்சொலலபபடுமபெயரோடு திருமால உறைவாா (பரி. 4:66-69). வையை யாறறின புனல, விளங்குகினற கிளைகளையுடைய வேஙகை மரததினின்றும உதிாநத பூககளோடு கூடி, மலைச சிகரஙகளில உள்ள காறறால முறிநத சினைகளையுடைய பெரிய மரஙகளை வேருடன அகழநது உருட்டிப் பள்ளததிடததே ஓடியது (பரி. 7:10-15). மலையின்கண பெயத மழையினால குளிாநத சினைகளையுடைய பூமபொழிலகள பறிககப் பறிககக குறையாதவாறு பூககளைப பூததன (பரி. 8.90-92). மழை பொழிதலால காலைப் பொழுதில வையையாறறில பெருகிய நீா பலவேறு மலாகள் நெருஙகின போாவையுடன மணற பரபபை மூடிககொணடு, வரி வணடுகள மொயதத அழகிய மொட்டுகள மலாநத சினை களையுடைய மாமரததின தளிாகளோடு வாழை இலைகளையும மயககிக கொணடு சென்றது (பரி. 10:1-8). வரையினகண உளள புனனை, ஆறறின கரையிலுள்ள சுர புன்னை, சணபகம், தேறறா, வாள்வீரம, சினைகள் தழைதது வளாநத வேஙகை முதலிய மரஙகளின மலாகளை அருவி சோலையில குவிததது (பரி. 11:16-23). திருமாலிருஞ் சோலை யில சுனைகள் எஙகும நீலம மலர அசசுனை களைச் சுறறியுள்ள அசோக மரததின சினைகளில எலலாம அழகிய மலர்கள் மலர்நதன (பரி. 15. 30, 31). திருமாலிருஞ் சோலை மலையில மரச சினைகள் தோறும நீலமணியை ஒதத நிறமுடைய மயிலகள் தஙகி அகவும (பரி. 15 40) திருபபரங குனறத்தில மகளிா சிலா சுனையின அருகே நினறு அதன பககமாகத் தாழநதுள்ள மரசசினைகளில ஏறி, அவறறில தோனறியுளள மணங்கமழும பூங்கொததுககளோடு கூடி தளிர்களைச சுனை நீரில உதிாபபர் (பரி. 19 57, 58). மரசசினை களிலே மலாநது உதிாநத மலாகளையும புதர் களில மலாநத மலாகளையும வையையாறு தன அலைகளால அடிததுச செலலும (பரி. 20 102, 103). உள்ளஙகவரும இயலபினையுடைய பாலைப பணணை நலல யாழ இசைகக அதறகு எதிராகச சோலையில பூககளையுடைய சினைகளில வண டினம இசைபாடும (பரி 22:38,39).

2. கரு. பனையினது நுகும்பைப போனறது சினை - கரு - முதிாநத வரால மீன (புறம். 249.5). பரதவர் மகளிரோடு முனறிலையுடைய மனையின கண சினையையுடைய சுறாமீனின கொமபை நடடு அதனிடததே தெயவததை ஏறறி வழிபடுவா

(பட். 83-90). சினை கொண்ட பச்சைப் பாம்பின் முதிர்ந்த சூலையொத்த திரண்ட கரும்பின் குவிந்த அரும்பு மலரும்படி நுண்ணிய மழைத்துளி பொழிந்தது (குறு. 35:2-4). 'சிறு வெள்ளாங்குருகே, அவ்விடத்திலுள்ள இனிய புனல் இவ்வூரின்கண் வந்து பாயும் கழனிகள் நிறைந்த நாட்டையுடைய என் காதலர்பால் ஏகி என்னுடைய கலன்கள் கழலும் துன்பத்தை இதுகாறும் சொல்லாதோயே, நீ எம்மூருக்கு வந்து பொய்கைத் துறையில் துழாவிச் சினையுள்ள கெளிற்று மீனைத் தின்று அப்பால் அவரது ஊருக்குச் சென்று உன் நிலையைக் கூறுவாயாக' என்பது தலைவியின் காமமிக்க கழிபடர்கிளவி (நற். 70). ஊரன் மலர்களையுடைய காஞ்சிமரமும் சினைகளையுடைய சிறு மீன்களும் வாழ்தற்கிடனான நாட்டினையுடையவன் (ஐங. 1:4,5). யானை தாமரை மலரின்கண் இட்டு வைத்துள்ள அறுகால் தும்பியின் சினைகளை யழிக்கும் (ஐங். 20:1-3). பாணன் கழியின் பக்கத்திலிருந்து தூண்டிற் கயிற்றில் வஞ்சகமாக இரையை மாட்டி வைத்து, சினைக் கயல் மீனை மாயப்பான் (ஐங. 111:1-3). பழன உழவர், சினை முதிர்ந்த வாளை மீன் போன்று விலாப் புடைக்க உண்டு தம் சுற்றத்தாரோடும் கூடித் தம் தொழிலைச் செய்தவர் (பரி. 7:38,39).

3. தேர்க் கொடிஞ்சி. தலைவன் வினை முடித்துக் கடும்பரி நெடுந்தேரில் வளைந்த சினை - கொடிஞ்சி - பொலிய ஏறிச் சீறூர் பல பிற்படுமாறு தலைவியைக் காண விரைந்து வந்தான் (அகம. 104:6-14). 'நின் திண்ணிய தேரில் வளைந்த சினையைக் கையிற் பற்றிக் கொண்டு மெல்ல மெல்ல அசைந்து இங்கு நினக்கென்று வைத்துள்ள பாலை உண்பதற்காக என்கையிடத்தே வருவாயாக' எனத் தன் மகனைப் பாலுண்டற்காகத் தலைவி அழைத்தாள் (கலி. 85:17-21).

4. முட்டை. ஊர்க்குறு மகளிர் கரும்புலக்கையால் கொடியிடை நுடங்க மீனின் சினை - முட்டை - போன்ற வெண்மணலைக் குவித்துக் காஞ்சி நிழலில் தம் குடியினரின் பெருமைகளைப் பாடிக் குற்றுவர் (அகம. 286:1-5). அரும்புகள் முதிர்ந்த ஞாழலினது சினையைப் போன்ற திரண்ட மலர்களை நெய்தலின் கரிய மலரில் பெய்யுமாறு போல ஊதைக் காற்று தூவும் (குறு. 397:1-3).

5. வலை. சுரநெறியில் கொலைத் தொழில் வல்ல வேட்டுவனது வலையை அறுத்துச் சென்ற சேவற் புறா, தன் வாய் நூலால் கட்டிய சிலந்தியின் அழகிய சினையை - வலையை - கண்டு அஞ்சியது (நற். 189:7-10).

6. கிளைத்தல். சினை - கிளைத்தல் - பொருந்திக் கரு விரிந்து வளைந்த கதிர்களையுடைய நெல் ஒலி செய்யும் கழனிகளின் பள்ளங்களைத் துழாவி வாடைக் காற்று வீசியது (அகம். 243.5-8).

**சினைஇயோர் - சினப்பித்தோர்.** காற்றுடனே எரி நிகழ்ந்தாற் போலும் செல்வமைந்த போரிலே மேம்படுதலையுடைய சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைச் சினைஇயோர் - சினப்பித்தோர் - ஆகிய பகைவர் நாடு, கனவிலும் நனவிலும் பொறுத்தற்கரியவற்றைக் கண்டு, அவனது படைவரவையுணர்ந்து மயக்கமுற்ற, காவலில்லாத இருப்பினையுடையராய்த் தம் பிள்ளைகளின் பூங்கண்களை முத்தமிட்டு, மனைவியாகுத் தமது வருத்தம் தோன்றாமல் மறைக்கும் துன்பத்தையுடைய ஆடவருடனே மிக்க கலக்கத்தையுற்றது (புறம. 41.11-18).

**சினைப்பூ - கோட்டுப்பூ** (கிளைகளில் பூக்கும் பூ). தேனை வழங்கி வற்றிய சுனைப்பூக்களை நீத்துத் தேன் துளித்துள்ள சினைப்பூவினிடத்தே - கோட்டுப் பூவினிடத்தே - வண்டினம் செல்லுதல் (அகம. 71:3,4). வண்டுகள் ஆரவாரித்து மொய்க்கும்படி சினைப்பூ முறுக்கு நெகிழ்ந்து மலரும்; அது போல் காதலரைக் கூடியிருக்கும் மகளிர் நெஞ்சு நெகிழ்ந்து அழகுற்றிருப்பர் (கலி. 118:11,12).

## சீ

**சீத்தலைச் சாத்தனார் - புலவர்.** மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்றும் இவர் பெயர் காணப்படுகின்றது. எனவே, மதுரையிலிருந்து நெல் முதலிய கூலங்களை வாணிகம் செய்து வாழ்ந்தவரென்றும் சீத்தலை என்னும் ஊரினரென்றும் சாத்தனார் என்னும் இயற்பெயரினரென்றும் இவரைப்பற்றி யறியலாம். சீத்தலை யென்பது செந்தலை, முகுத்தலை என்பவை போன்றதோர் ஊர் எனவும் அது திரிசிராப்பள்ளி மாவட்டத்தில் பெரும்பளூர் வட்டத்தில் உள்ளது எனவும் கூறுவர் பிறர். (நற். பாடினோர் வரலாறு). சாத்தன் என்பது ஐயனார்க்குரியதொரு பெயர்; அஃது இவர்க்கு இயற்பெயராய் இடம்பெற்றது. இவர் பாடியன வாகப் புறநானூற்றில் ஒன்றும்(59) அகநானூற்றில்

ஐந்தும் (53, 134, 229, 306, 320) குறுந்தொகையில ஒன்றும (154) நற்றிணையில மூன்றும (36, 127, 339) சேரப பத்துப்பாடலகள் உள்ளன. புறப் பாடலால் இவர், பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனைப் பாராட்டியுள்ளார். பகை வர்க்கு ஞாயிறு போலவும எமக்குத் திங்கள் போல வும நீ திகழ்கின்றாய' என்று இவா அவனுடைய சினவெம்மைக்கும அருள் தண்மைக்கும உவமை கூறியுள்ள நயம சிறப்பானது. அகத்திணைப பாடலகளை இவா ஐந்திணைகளிலும அமைத்துப பாடியுள்ளார். தலைவன் பொருள்வயிற் பிரிந்திருக் கையில் வற்புறுத்தி ஆற்றுவிக்கும தோழிக்குத் தலைவி ஆற்றாது எதிர்மொழியும துறையைப் பாடுவதில இவருடைய ஈடுபாடு மிகுந்து காணப படுகின்றது (அகம. 53, 229; குறு. 154). வினைமுற்றி மீளும தலைவன், காட்டுவழியில கலைமானும் பிணைமானும சேரும் கூட்டத்திற்கு இடையூறா காமைப பொருட்டுத் தேரினை ஓசையின்றி மெல லச் செலுத்துமாறு பாகனுக்குக் கூறுவதாக இவா பாடியுள்ள பாடல (அகம. 134) அருட்சிறப்புடை யது. அதனுள் கலைமான் கொம்பிறகுப பூமடல உதிர்ந்த வாழைக் குலையை உவமித்துள்ளதும இயலபுற அமைந்துள்ளது.

**சீதை** - இராமன் தேவி, இராமாயணத்தலைவி. ஆற்றல் மிக்க இராமனுடன் சென்ற சீதையை, வலிமிக்க அரக்கன் கவர்ந்துசென்றபோது நிலத்தில் வீசப் பெற்ற அவள் அணிகலன்களைக் கண்ட குரங்கு கள் அவற்றை முறைமாறியணிந்து அவ்விழையால பொலிவு பெற்று விளங்கின (புறம. 378:18-21).

**சீப்பு** - தாழ் (கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலே நிலத்தே விழ இடும மரம). இளம் பருவத்து அந் தண்ன ஒருவன், தூதாக இரவுநேரத்தே வந்து, அரசனிடம நேராகச சென்று சொலலிய சொற் களோ சில; அவற்றைக் கேட்ட மாத்திரத்திலேயே **போர் நின்றுவிட்டது; ஏணியும சீப்பும்-தாழும்-** மாற்றி மாணவினை யானையும மணிகளைந்தன (புறம. 305).

**சீர்** - 1. அழகு. நீர்க்கு அணிமையில் படிந்த மருதி னது கொமபிலே ஏறி, சீர் - அழகு - மிக, கரை யிடத்து நிற்போர் மருள, மடுவின்கண் 'துடும' என்று ஒலிப்பக் குதித்து, மூழ்கி, மணலை முகந்து காட்டிய கலலா இளமை இரங்கத்தக்கது (புறம. 243:6 9). சீரோடு, வடிவாலும நிறத்தாலும வலம புரிச சங்கினை ஒக்கும், வெள்ளிய நரைமுடியினை யுடையவர் முனிவர் (முரு. 126,127). கடம்பு சூடு தலால சீர மிகுகின்ற நெடுவேள் (மது. 614). விறல பட ஆடும் மகளிர், சீர்பொருந்தின, தலைமை யினை உடைய விளங்குகின்ற பேரணிகலன்களைப் பூணுமாறு நன்னன் பரிசில நலகுவான (மலை 570, 580) மயில, வானிற பறந்து சென்று, நீண்ட கணுக்களையுடைய அசையும மூங்கிலின்கண், பசிய புறத்தினையுடைய மெலலிய சீர (அழகிய இடம) வளைய இருக்கும் பெருங்கல நாடன (அகம. 378, 5-11). வெண்கடுகை அப்பி, எண்ணெய் தேய்த்து நீராடியதனால, நறிய அணியைப பெற்ற, குளிர்ந்த நெய பூசிய, மிகக மென்மையாகிய உடமபினை யுடைய சீர் பொருந்திய தலைவி உறங்க, கள்வன போலத் தலைவனும் வந்தனன் (நற். 40 7-9). சிறந்த சீர்மிகக அகன்ற மாளிகைக்கண்ணே அன்னை இன்று வந்தனள் (நற். 339:5,6). மருதமரத் தில ஏறி நீர்விளையாட்டிடத்தே பாயவோளது, குளிர்ந்த நறிய கூந்தல வானிலிருந்து இறங்கு கின்ற மயிலினது சீர்போன்றது (ஐங. 74). இள வேனிற காலத்தே காமனுக்கு நிகழ்த்தும விழா வினை எதிர்கொள்ளும வகையில, சீர மிகக நல்ல நேரமும வந்தது (கலி. 36:9-10). மெலலிய சீர உடைய மயிலின இயலபை உடைய மகளிர் தமக குள் நிகழ்ந்த போரில தோளவளையாகிய ஆழி யைச் சுழற்றுவார் (பரி. 9.55,56). சீர்பொருந்திய திரு என்னும சொலலோடும சோலை என்னும சொல்லோடும மாலிருங குன்றம என்னும சொல தொடர்ந்து திருமாலிருஞ்சோலை மலை என்று பெயர் பெற்றது (பரி. 15 22,23). சீர உடைய வையை (பரி. 22:32). திருமால, திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தே, மந்தர மலையை மேலே எழ எடுத்து, ஆமை உருக்கொண்டு தன் சீருடைய சிரத்தே ஏற்றியமை (பரி. தி. 1 65).

2. அளவை. பரந்த சீர - அளவை - உடைய பொருள்களைத் துலாக்கோல ஆராயும (புறம. 6.8,9). முதல தானமாகிய குரலிலே வந்து பொருந்தும, சீர உடைய பாட்டை வலல பாண னும பொற்றாமரைப பூவைப பெற்றான (இத்தனைத தாளம் என்றலும பொருந்தும (புறம. 11 14-18). 'நினனை, மிகாமல சீர்ப்பட (அளவிறப்ப) நுகர்ந்த களிப்பினை உடைய பரத்தையின அழ கிய மையுண்கண் அழும்படி, சிலநாள விட்டுப பின்னாக கூடினாய நீ, எனப பரத்தைமைத் தலை வனிடம தலைவி கூறினாள் (கலி. 97:26,27)

3. ஓசை. வதுவை நிகழும பரத்தையா மனையில, ஒலிக்கும கண்ணினையுடைய முழவின இனியசீர - ஓசை - தன்னை அழைப்பன போல வந்திசைப

யினையுடையதாய எரிநதது (நெடு 172-175). இல வந்நின முதிரநத மலர்கள், விழாவினைக கொணட டூழதாரிடததே நெய பெயத விளககின சுடாவிழுவது போலக காற்றுப பொருதலின வீழநது எஞ்சியவை விடியற காலதது விணமீன போலத தோனறும (அகம 17.18-21). மலையிடதது மூங்கில உரசிக் கொள்வதால உணடாகிய தீ, மீன பிடிககும பரத வரது படகில உள்ள மிகக சுடர்கள் வானளாவிய கடலலையின மீது தோன்றுமாறு போலப் பொருநதத தோன்றும (அகம. 65·9-13). சிறுதினையைக் காக்கும சேணோன் கையிலுள்ள தீயுடைய கொள்ளிக கோலவிடுமசுடாபபொறிகள போல மேகம் மினனி மழை பொழிநதது (அகம 73·14-17). சிறுதினையை உணணுதறகுவரும பனறியின் வருதிறம நோக்கிக் கானவன பரண மீது கொளுத்தி வைத்த நீண்ட சுடரின ஒளியினை நோககி வநது தலைவன் தலைவியின துயரைக களைநதான் (அகம. 88·1-7) காநதள சுடரினைக் கொணட அகல போல அரும்புகள் விரிநதன (அகம 235·7,8). காயநத மூங்கிலில தோனறிய, காற்றால வளாநத தீயின சுடர் விடுகினற நெடுங்கொடி, வெடிபபுடைய குகைகளில முழங்கியது (ஐங 395.1,2) ஒள்ளிய சுடரையுடைய பாணடிலின் செஞ்சுடா போலத் தலைவி தலைவனின மனைககு விளககாயினாள் (ஐங 405). நெடுஞ்சுடரினையுடையது தீ (கலி. 137:10,21). வேள்விக் கண கனலைப் பெருக்குங்கால் ஆண்டுதோன்றும் திகழொளியுடைய ஒணசுடரினது பெருக்கம் திருமாலின வெளிப்பாடாகும எனக் கீரநதையாா குறிபபிடுவர் (பரி. 2·63-68).

5. நெருபபு கழியிடத்துச் சுடர்–நெருப்பு–போல் பூமலர்தல (புறம். 17·12). தீப்பொறிகள் கலநது தோனறுமாறு காடடை இடமாகக கொணடதும நாடடிலுளளாரெலலாம் காணுமாறு விளஙகுவது மாகிய சுடரினை யொத்த சினததீயைக கைவிட்டுக களிறுகளபாகர் ஏவலோடு பொருநதியமை (பதி.40: 28-31). சுருமபினமும மொய்க்காத சுடர் போலும் பூவினையுடையது செங்காநதள் (முரு. 43). சுடர் போலும இதழ்களையுடையது தாமரை (மது. 710). தோனறி, சுடர் போலும பூவினை யுடையது (குறி. 90, அகம. 364 6). சுடாபோனற பூககளையுடையது தாமரை (அகம 6·16). ஒளளிய சுடா போனற பூககளையுடையது செஙகாநதள (ஐங. 440.3).

6. கதிர். இராசசூயம வேட்ட பெருநற்கிள்ளி தன பகைவா நாடடிடதது இடட நாடுசுடு நெருபபின ஒளி, விடுகினற சுடரை – கதிரை – உடைய ஞாயிற்றின செககர் நிறம போலத தோனறும் (புறம். 16·7,8) ஒள்ளிய சுடரையுடைய வெபபத்தையுடைய ஒளி மழுஙகுமாறு சினந தணிநது சென்ற ஞாயிறு நணபகற பொழுதைச சேரககொணடு மேறறிசை மலையிடத்து மறைநதது (மது. 545-547). ஒளளிய சுடா முதிராத இளைய ஞாயிற்றையுடையது காலைப்பொழுது (அகம். 187:19). ஒளளிய சுடர்களையுடைய ஞாயிற்றினது ஒளியாலே உசசிககாலத்து மதி ஒளி குனறும் (கலி. 121:17,18).

**சுடர்க்கடைப் பறவை** - மின்மினிப் பறவை. பாணர் மறைகாப்பாளா உறையும பதியிடத்தே தங்குவாராயின பாாப்பனி பதமறிநது அட்ட சுடர்ககடைப பறவையின் - மின்மினிப பறவையின் - பெயரைப் பெறுகினற நெலலுச சோறறினை மாதுளைக கறித்துண்டோடும பெறுவா ('சுடாககடைப பறவைபெயர் படு வததம' எனபதறகுச் சுடர்க கடை – ஞாயிறு மறையும் பொழுது; பறவை பெயர் படுவத்தம – பறவையின பெயரை (இராசான்னம) பெறும நெல என்று நச்சினார்ககினியர் பொருள் கொள்வர்) (பெரு. 301-310).

**சுடர்த்தொடீ** - ஒளிவிடும் தொடியணிந்தவளே (விளி). தலைவன் தலைவியைச 'சுடர்தொடீ' என விளித்து 'நின முதுமைக்கு உறைகின்ற நிலையினைக கைவிட்டுயான கூறுகினற தனைபபேணிக்கேள்; நீருண்பாா அந்நீர் இன்ககிறது என்று கருதி உண்பரே அலலது அந்நீருககும் இனிதாயிருககும என்று கருதி உண்பரோ' என்று வினவினான (கலி 62:9-11).

**சுடர்த்தொடீஇ** - ஒளிவிடும் தொடியணிந்தவளே (விளி). தலைவி தோழியைச 'சுடர்தொடீஇ' என விளிதது முனனாளில தனககு நோதகக செயத தலைவன பினனாளில தனனிலலிறகு வநது நீாகேட்ட முறையில மகிழசசியைத தரும கூடடதிறகுத தனனை உடம்படச செயத நிகழசசியைக கூறினாள் (கலி. 51).

**சுடர்நுதல்** - ஒளிவிடும் நுதலையுடைய தலைவி. கவின பெறுகினற சுடர்நுதலின - தலைவியின - தந்தையினுடையதும கழனித தாமரை மலர்வதுமாகிய சிறநத ஊா, நீரோடைகளையுடைய பழனங்களின நடுவணது (ஐங. 94).

**சுடர்நுதால்** - ஒளிவிடும் நுதலினையுடையாய (விளி). 'நனமை பெறுகினற சுடர்நுதால, நீ எமமோடு வருவையாயின, சிஙகக கால மேலுள்ள கட்டிலின படுக்கையிடததே உறஙகும நீ அககாடடிடததில விலஙகாகியசிங்கததினகுரலைககேட்பின அஞசுவை

யலலையோ' எனத் தலைவன் தலைவியை விளித்து வினவினான் (கலி. 13:14-17).

**சுடர்நேமி - சுடர்ச்சக்கரம்** (இராசி மண்டிலம்). பரங் குனறத்துச் சிததிரசாலையுட் செனறவரில சிலர், நாண்மீன்களையும் ஏனைய விணமீன்களையு முடைய சுடர் நேமியை-சுடாச்சக்கரததை-பொருந் திய ஞாயிறு முதலாக வரும கோள்களின நிலை எழுதிய காட்சியினைக கணடறிநதனர் (பரி. 19: 46,47).

**சுடர்மண்டிலம் - ஞாயிறு.** விளங்கும் சுடர்மண்டிலம் -ஞாயிறு-வானிடததினினறும் நீஙகித் தன் பலகதிர் களும் வெமமை குறையப பெறறு மலையினை யடைநது மறைநதது (அகம். 367:1,2).

**சுடர்வரல் - விளங்குதல்.** இமைய வரம்பன் நெடுஞ் சேரலாதன் மணிகள் இழைதத பசுமபொன்னாரம தனனிடையே அழுத்தின வயிரததோடு மாறுபட் டுச சுடாவரும - விளங்கும - மார்பினை உடைய வன (பதி. 16:15-17). ஞாயிறு விரிந்து வானகம சுடர்வர, வடதிசைககண சாய்ந்து தோனறும வெள்ளி பயனபொருநதிய மற்றைக் கோள்களோடு நிறப மழை பெயயும் (பதி 24:23-28). மறவர் இருளிலும வீரவளை சுடர்வருமபடி, போர் விருப்பம மிககுப பாசறைக்கண் சுழனறு திரிவர் (81:9-14). நெடுஞ்செழியன், பொனனாற்செயத விளக்கம (மோதிரம), வலிகெழு தடக்கையின் வீர வளையோடு சுடாவரக கலிஙகததைத் தன உடை யணி பொலிய உடுததான் (மது.719-722).

**சுடரிழாய் - ஒளிவிடும் இழையினையுடையாய்** (விளி). தலைவி தோழியைச 'சுடரிழாய' என விளிதது, 'இளவேனிற பொழுதினை நினையாது நம்மை மறநதாரை எண்ணி மனம் விருமபுதலால என மேனி வாடுதலைப பிறா அறியலாகாது என்று மறைபபேன யான அவ்வாறு மறைததனைக் கைகடககுமபடி மாலைககாலம வநது வருததததைத தரும' என்று கூறினாள (கலி. 29'14-17). 'சுடரிழாய, நாம பலவாறு வருநதி விடுகக, தலைவர் நமமிடம வருவேம எனறுரைதத காலம, கூடலநகரததார் கவிகளின புதுமையைக கொணடாடும இவ்விள வேனிற காலமலலவோ' எனப பருவஙகணட தலைவி தோழியை விளிதது வினவினாள (கலி. 35: 17-20). தோழி தலைவியைச சுடரிழாய என விளிததுத் தலைவன குறையுறறு நினறதனைக கூறத தொடஙகினாள் (கலி. 47,8). நீர் வேடகை யுறறு வநத தலைவனுககு நீரை உணபிகக வேணடி அன்னை தலைவியிடம் 'சுடரிழாய், பொற்சிரகத் தால் உணணும் நீரை உணபித்து வா' என்று கூறினாள் (கலி. 51:7,8).

**சுடலை - 1. சுடுகாடு.** 'தலைவர் நமமோடு ஓரூரில வாழ்ந்தாலும நம சேரிககணவாரார; நம் சேரியி யிடதது வரினும நம்மை ஆர முயஙகார்; காமம சேட்செனறு அழியும்படி, ஏதிலாளரது சுடலை யை-சுடுகாட்டை-நோககுமாறு போல நமமைக கண்டும காணாது கழிவர்' எனறு வாயிலபுகக தோழியிடம தலைவி கூறினாள (குறு. 231).

**2. ஈமம்.** மனம விருமபும் காதலா அழுதலால ஒழுகும் கணணீா, எலுமபுகள கிடக்கும சுடலைக கண-ாமததுககண்-உள்ள சாமபலை அவிககும (புறம். 356 5,6).

**சுடுபடை - சூட்டுக்கோல.** இடையர், கழுவும (கறததற கரிய பசுககளைக கறததறகு இரணடு தலையும சீவி மாலையாகக கட்டிக கழுததில இடும கிடடி யும) சுடுபடையும் - சூட்டுககோலும - இட்டுச சுருககிய தோறபையினையுடையவா (கலி. 106 1,4).

**சுடுபுனம-மரஙகளை வெட்டிச் சுட்ட கொலலை** சுடுபுன மருஙகில-மரஙகளை வெடடிச சுடட கொலலை மருஙகில்-விளைநத தினையிடததே படியும கிளி களைக கொடிச்சி, ஓட்டினாள (குறு. 291.1,2).

**சுடுமண - செஙகல.** சுடுமணணால - செங்கலலால- செயயபபட்டு, உயாநத, புறபபடை வீட்டைச சூழநத மதிலினையுடையது மூதூா (பெரு. 405,411).

**சுடுமண்தசும்பு - மண்ணாற் செயது சுடபபட்ட தாழி-** சுடுமண தசுமபில்-மணணாற செயது சுடபபடட தாழியில-மததாற கலககபபட்டபோது வெபபம மிககவழி நனகு திரளாது சிதறிக கிடந்த வெணணெய போனற உபபுப பூதத களரை யுடையது காடு (நற். 84.6-8).

**சுண்ணத்தர் - சுண்ணததையுடையவர்.** பலரும திரணடு இடிதத பூநதாதுகள் போலப பரககும சுணணத தர்-சுணணததையுடையவர்-உளளிடட பணடம விறபோா பலரும மதுரை நகர வீதிகளில மாட நிழலிலே ஒதுஙகியிருநதனா (மது. 399-406).

**சுணணநீறு - சுண்ணப்பொடி.** பரததையாகிய புதுதி யானை சுணணநீற்றினை-சுணணப பொடியினை- அணிநது, மனை வாசற சுதவாகிய கமபததைச சோநது நினறு தனனலஙகாடடி அதனாலே

ஒருவரும் போகாதபடி காலைத் தடுத்து வீழ்க்கும் (கலி. 97:10,16,17).

**சுண்ணம் - 1. தாது.** கருங்கை வினைஞரின் காதலஞ் சிறுவர், கண்பின் காயில் தோன்றிய சுண்ணத்தை - தாதை - தம் மார்பில் அப்பிக் கொண்டமையின் மார்பு பொன்னுரை கல்லை யொத்துக் காணப்பட்டது (பெரு. 220,221,223).

2. நறுமணப்பொடி. நீராடியவர் அணிந்திருந்த சந்தனமும் தாரும் கோதையும் சுண்ணமும் - நறுமணப்பொடியும் - கூந்தலிலிருந்தும் குடுமியிலிருந்தும் உதிர்ந்த பூவும் நிறைந்திருத்தலின் வையை நீரின் நிறம் தோன்றாதாயிற்று (பரி. தி.2:84-86).

**சுணங்கறை - புணர்ச்சி.** கற்பு, புலவியினாற் சிறந்தது; கற்பு நிலையில் நின்ற தலைவி, பரத்தையில்லிற்கு ஒருத்தியைச் செவ்வணி பூட்டி விடுத்து அறிவிப்ப அதனால் தலைவன் வந்து உவக்கும் சுணங்கறையை - புணர்ச்சியை - உடைத்து; அச்சுணங்கறைகள் தலைவிக்குப் பாங்காயினார் கேட்டு வருந்துமாறு பரத்தையராலே பழி கூறப்படுவன வாம்; அன்றியும் அச்சுணங்கறையின்பம் இயல்பாக உளதாகாது ஊடுதலானே உண்டாவதாம். (பரி. 9:16-22).

**சுணங்கினள் - சுணங்கினையுடையவள்.** வேங்கையின் நறுமலரை யொப்ப நன்னிறம் கொள்ளுமாறு மேனியில் தோன்றிய மாசற்ற சுணங்கினள் - சுணங்கினை யுடையவள் - ஆய மாயோள் மேகம் முழங்குந்தோறும் கையற்று ஒடுங்கி எந்நிலையடை வாளோ என்று தலைவன் பாசறையிடத்திருந்து தலைவியை எண்ணி வருத்தமுற்றான (அகம். 174: 6-14).

**சுணங்கினாய் - சுணங்கினையுடையாய்** (விளி). பொதியின் மலையிடத்துள்ள, வேங்கையின் மலரை யொத்த சுணங்கினாய் - சுணங்கினையுடையாய் - எனத் தலைவி விளிக்கப் பெறல் (கலி. 57:16,17).

**சுணங்கு - தேமல்.** தலைவி பலவாகிய சுணங்கு - தேமல் - பரந்த இள வன முலைகளையுடையவள் (புறம். 337:21,22). தலைவி சுணங்கணிந்த வன முலையள் (புறம். 341:11). இளையோளின் அழகிய மார்பின்கண் சுணங்கு தோன்றிப் பரந்தன வாகலின் அவளை மணஞ் செய்தற்கு வேந்தர் நெடுநிலை வாயிலில் சுற்றித் திரிகின்றனர்; காவல் வலியற்ற இவ்வூர் இனி என்னாகுமோ எனப் புலவர் மகண் மறுத்தல் காரணமாக ஊருக்கு ஏற்படும் அழிவுக்கு வருந்தினார் (புறம். 350). தலைவி கொத்தாய்ப் பூத்துள்ள வேங்கை மரத்தினைப் போலக் கதிர்விட்டு ஒளி செய்யும் நுண்ணிய பல வாகிய சுணங்கு பரந்த முலையினையுடையவள் (புறம். 352:12-14). சுணங்கு பரந்து உயர்ந்த இளமுலையுடையவள் மடந்தை (புறம் 354:8,9). பாடினி, சுணங்கணிந்த மார்பிடத்துள்ள, இள வன முலையள் (பொரு. 35,36). வேங்கையின் நாண் மலர் என்று விரும்பிச் சுரும்புகள் ஆரவாரிக்கின்ற சுணங்குகளையும் தம்மிடத்தே பொருந்திய அச்சுணங்குகள் சிதறிக் கிடக்கப் பெற்றுக் கோங்கின் முகையை இகழும் முலையினையும் உடையவள் விறலி (சிறு. 24-26). மகளிர் சுணங்கு தோற்றிய இளமுலையர் (மது. 416). மெல்லியல் மகளிர் பரந்த சுணங்கினையுடையவர் (நெடு. 148,151). தலைவி மார்பிலுள்ள அழகிய முலைகளில் அரும்பிய சுணங்கினை உடையவள் (அகம். 6:12). நம் காதலியின் சுணங்கணிந்த வனமுலையின் நலம் பாராட்டித் தோளினை அணைந்து இனி உவப்பாயாக என வினைமுற்றி மீளும் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 87:14-16). அன்னை, தலைவியின் கூந்தலையும் பொன் போல் மார்பில் தோன்றிய சுணங்கையும் முலையையும் நோக்கி, 'நீ பெரிதும் அழகுடையை' எனக் கூறி அவளை அருங்காவற் படுத்தினாள் (அகம். 150:1-6). தலைவன் பிரிவினையுணர்ந்த தலைவி, சுணங்கு படர்ந்த மார்பிடத்துள்ள இளமுலைகள் நனைய அழுதனள் (அகம். 161:11-14). ஆகத்தில் அழகு பெற அரும்பிய அணங்குடைய நின் வனமுலையிற் பரந்த சுணங்கினிடையே தொய்யில் எழுதுதலை நினைத்துத் தலைவர் விரைந்து வருவர் என்று பிரிவிடை வேறுபட்ட தலைவியிடம் தோழி கூறினாள் (அகம். 177:13,18-20). குறுமகள் மென்மையவாகிய அரும்பிய சுணங்கினையுடையவள் (அகம். 230:4,5). ஒள்ளிழை மகளிர், புள்ளி வடிவாக எழுதப்பட்ட கோலத்தினையும் பொறிகள் பொருந்திய சுணங்கினையும் உடையவர் (அகம். 239:8,9). தலைவி அரும்பிய சுணங்கினள் (அகம். 253:22). பொன்னென விளங்கும் சுணங்கோடு நெருங்கி வளர்ந்த மென்முலையினை யுடையவள் தலைவி (அகம். 279: 4,5). தலைவி சிலவாகிய சுணங்கணிந்த செறிந்து வீங்கு இளமுலையள் (அகம். 302:13). வேங்கையின் புதுமலரை யொப்பச் சுணங்கணிந்த நல்ல மார்பின்கண் எழுந்த வனமுலையினள் தலைவி (அகம. 319:8,9). தலைவி சிலவாகிய சுணங்கணிந்த மென்முலையினை யுடையவள் (அகம். 343:2). சுணங்கு பரவிய முலையிடத்திற் கிடக்கும் முத்து மாலை போலத் திங்களின் கதிர்கள் மலையிடத்தே

பரவின (அகம். 362:12,15). கானவர் பெற்ற மகள் அரும்பிய சுணங்கினையுடைய இள முலையள (குறு. 71:2,4). 'நகிலகள் அரும்பின; சுணங்கும் சில வெளிப்பட்டன; அவள் அணங்கும தன்மையை யானறிவேன்; அவள அதனை அறியலள்' எனத தலைவன் தோழியிடம் இரந்து பின்னின்று தன குறையைக் கூறினான் (குறு. 337). தலைவி, புன் கின ஒண்டளிரைச் சுணங்கணிந்த வனமுலையில அணங்கு சிறப்போடிருக்குமாறு அப்பினாள் (நற். 9:5,6). விளங்கும் பூணகளுடனே சுணங்கு அணியப் பெற்றவளாய்ச் சென்ற பரத்தையைக கண்டேம் என்று பரத்தைமைத் தலைவனிடம் தலைவி கூறினாள (நற். 20:7,8). தலைவி, பொன்னைப் பொதிந்து வைத்தாற போன்ற சுணங்கினை யுடையவள் (நற் 26:8,9). யாம தலைவியின சுணங்கணிந்த ஆகத்தை ஒரு சேர அணைததுக கொணடு அவள் கையால் அணைததிருததலின்ின றும நீங்கேம' என்று பொருளவயிற பிரிய எணணிய நெஞ்சிடம தலைவன கூறினான் (நற். 52:3-5). வனமுலையின மேல அள்ளித் தெளித் தாற் போன்ற அழகிய நுணணிய சுணங்கினை யுடையவள் தலைவி (நற். 160:4,5). ஞாழலின் பூங்கொத்துககள், மகளிரிழைத்த வணடற பாவை யின வனமுலையிடத்து ஒள்ளிய வரியையுடைய சுணங்குபோல மெல்லிதாகப் படுமாறு பரவின (நற் 191:1 4). தலைவி அருமபிய சுணங்கினள (நற். 262:6). குறுமகளின சுணங்கணி வனமுலையை முயஙகுதல கருதி யான கண துஞ்சிலேன என்று காபபு மிகுதிககண் தலைவன ஆறறாது வருந்திக கூறினான் (நற். 319:8-11) பரததை வேங்கைப் பூப போன்ற சுணங்கினையுடையவள் (ஐங். 76: 1,3). தலைவி ஞாழற் பூவினைப் போன்ற சுணங்கு படாந்த இளமுலையினள் (ஐங். 149:1,2). குன்றக குறவனின காதன மடமகள் சுணங்கு படர்நத மார்பினை யுடையவள் (ஐங. 255:1,4). தலைவி வேங்கைப பூவினை வெனற சுணங்கினள் (ஐங். 324:4) 'நின முலையிடத்துள்ளதைச சுணங்கென நீ நினைக்கினறனை; அதனால் வருததமுறும் என் னெஞ்சோ அதனை அணஙகென நினையும்' எனத் தலைவன தலைவியிடம கூறினான (ஐங் 363·2-4). 'நுணணெழிலையும மாமை நிறத்தையும உடைய சுணங்கு படாந்த மார்பைத தன கண்ணோடு ஒனறாகப் பிணிதது வைததாற் போல இமை யாமற் பாாத்தும அமையாராய என ஒணணு தலை நீவுவா' எனறு தலைவன செயல் குறிததுத் தலைவி தோழியிடம கூறினாள் (கலி. 4 17-19). 'தலைவி மாாபில நினனை வலியாகவுடைய சுணங்கின அழகைக் கைவிடல ஒலலுமாயின நீ பொருள்வயிற் பிரிதலை நினைத்துபபார்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 18:3,4). கரிய நிறததையுடையவள் மேனி போல மரஙகள இளநதளிாகளை ஈன, அநநிறததிற் பரநத சுணங்குபோல அததளிாகளின் மேல தாதுககள் வீழநது பரவின (கலி. 35:3,4). தலைவி சுணங் கணிநத வனமுலையள் (கலி. 60.1). 'நீ முன்புறற பசப்பு இனி ஒருகாலமும் உறாதபடி வேங்கைப் பூவின முறறெழிலைக கொணட சுணங்கணிநத ஆகததாலே பொய்ததாகிலும் ஒருமுறை முயஙகிச செல்வாயாக' என்று தலைவன தலைவியிடம் கூறி னான் (கலி. 64:26-30). 'மாதராய, வியக்கத்தக்க சிதறின சுணங்கு அணிநத மென்முலைமேற் தொய்யில எழுதவோ' எனத தலைவன் தலைவியை வினவினான (கலி. 111:15-17). தலைவி பரநத சுணங்கினையுடையவள (கலி. 141 16).

**சுதை - சுண்ணச்சாந்து** புதுபபிற்ற போனற வெள் ளிய சுதையால - சுண்ணசசாநதால-செயயபபட்ட மாடததையுடைய நெடும் பெருமனையையுடைய வன சோழன இளஞ்சேட் சென்னி (புறம 378.5-9). அரசமாதேவி உறையும நலலில, வெள்ளியை ஒதத விளஙகுகினற சுதையினால நெடுஞ்சுவரின பல இடங்கள்தோறும் வடிவழகுடைய பல பூசகளை யுடைய கொடிகளை எழுதிக காடசிககு இனிதாய அமைககபபட்டது (நெடு. 110-114). வெண கடப்ப மரம வெளளிய சுதை பரநதிருந்தாற போனற பலவாய பூககளை யுடைடது (அகம. 211 1,2). கொககு மாரிககாலததே இறபபின மேலுள்ள சுதை பூசிய குளிாந்த மேலிடததை யொதத இற கினையுடையது (அகம. 346:1-3). அழகினையுடைய சுதை பூசிய மாடம' (கலி. 96:19).

**சும்மை - ஆரவாரம்.** குற்றுதல அமையாத உலகதை யொலியுடனே மிகக சுமமை-ஆரவாரம-உடைய அகனறவிடததே சினமாநதர் வெறியாடுதல (புறம. 22.18-23). மிகக சுமமையை உடையது கடறகரை (புறம. 343,4). அகல முடைததாகிய மதில இழும என்னும் சுமமையை உடையது (பொரு. 64,65). மேகம தஙகும தணபரஙகுனறில விழாக கொணடாடுதலின சுமமை எழுநதது (மது 262-264). முழைஞ்சிடஙகளைச சூறாவளி சூழநது கொள்ளுதலின காறறு மிகுநத கடல போல ஒலிக்கும சுமமையுடையது வேனிறகுனறம (மது. 308,309,313). இயஙகளின இசையைக கேடடு மகிழநதவா ஆடும செருககினைக கொணட சுமமை யினையுடையது அகனெடுநதெரு (மது. 359,363, 364). விழா எனறு கூறுமபடி மாநதர் பொருநதிக

கடலெனக் காரென ஒலிக்கும் சும்மையோடு திரிதற்கு அகன்ற இடம் பெறாத பெரிய அங்காடித் தெருவினையுடையது மூதூர் (மலை. 479-483). மேகம் கடலின்கண் நீரை முகந்து எழுந்ததாலாய சும்மையொடு திரண்டு துளிகளைச் சிதறிப் பெய்யத் தொடங்கியது (அகம். 334 3-9). ஊர் தழைத்து வரும் சும்மையோடு நிறைந்து ஒருசேரக் கூடி ஓசைமிக்க தெருவெங்கும் திருவிழாவைக் கொண்டாடியது (நற். 348.3,4). 'ஒலிகொண்ட சும்மையோடு நீ மணஞ்செய்கின்ற மனையாகக் கருதி எம்மனையிலே பொலிக பொலிக என்று கூறிப் புகுந்த நின் புலைத்தொழில் பாணனை யாங்கள் கண்டேம்' எனப் பரத்தைமைத் தலைவனிடம் காமக்கிழத்தி கூறினாள் (கலி. 68.18,19).

**சும்மையர்** - ஆரவாரத்தையுடையவர். வதுவை நன்மணம் கழிந்த பின்பு கல்லென்ற சும்மையர் - ஆரவாரத்தையுடையவர் - விரைந்து வந்த பெரிய மனைக்கிழத்தி ஆவாய் எனத் தலைவியை வாழ்த்தினர் (அகம். 86:17-19).

**சுமடு** - 1. சும்மாடு. ஆய்மகள் தலைமேல் வைத்த, பூவாற் செய்த சுமட்டின் - சும்மாட்டின் - மேலே மோர்ப்பானையை வைத்துக் குறிஞ்சி நிலத்தைக் கடந்து போய நாட்காலையில் மோரை விற்றனள் (பெரு. 155-162)

2. சுமை. தலைவி தன் அழகிற்கு ஏலாத சுமட்டினளாய் - சுமையுடையவளாய் - வட்டியை ஒரு கையால் தழுவிக்கொண்டு மற்றைத் தோளைச் செருக்கோடு வீசி நடந்து வந்தாள் (கலி 109: 13,14).

**சுரபுன்னை** - புன்னை வகை. சைய மலைக்கண் மழை பொழிய, மலையிலுள்ள புன்னை, கரையிலுள்ள சுரபுன்னை முதலியவற்றின் மலர்களைச் சாரலிற் சோலைக்கண்ணே அருவி கொண்டு வந்து சொரிய அவற்றைத் திரை தள்ளிக்கொண்டு வந்து திருமருதத் துறைக்கண்ணே தந்தது (பரி. 11:14-24) வையை வெள்ளம், மல்லிகை, சுரபுன்னை முதலான பல மலர்களும் மணம் பரப்பும் இரு கரைகளினிடையே சென்றது (பரி. 12:77-81)

**சுரம்/சுரன்** - 1. கடத்தற்கரிய நிலம். இரவலர், வண்மையுடையோரை நினைத்துப் பழுமரந்தேரும் பறவை போல, நெடியவென்று கருதாது சுரம் - கடத்தற்கரிய நிலம் - பல கடந்து சென்று அவரைப் பாடிப் பரிசில் பெறுவர் (புறம். 47:1-4). சுரத்தின்கண் நின்ற விறலியும் யானும் உவாமதியைக் கண்டு 'இது எங்கோன் வெண் குடையை ஒக்கும்' எனக் கருதிப் பலகால் தொழுதேம் என உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாணன் கூற்றாக, சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனைப் போற்றுவர் (புறம். 60.3-12). இடுவோரின்மையின் கவிழ்ந்த என் மண்டையை (இரவல் பாத்திரத்தை) மலர்த்த வல்லார் யாரெனச் சொல்லிச் சுரனிடையே இருந்த சில்வளை விறலி, என்று விறலி விளிக்கப்பட்டு அதியமானிடம் ஆற்றுப்படுத்தப் பெறுகிறாள் (புறம். 103:1-4). 'நின்பெயரேத்தி நின்னுடைய புகழை நம்பி, ஞாயிறு காய்ந்த சுரத்தினைக் கடந்தேறி இவ்விடத்து வந்தேன்' எனப் பாணன் ஆய்அயிடம் கூறிப் பொருள் வேண்டினான் (புறம். 136:16-19). 'ஊரின்கண் இருந்தீர் போலச் சுரத்திடை யிருந்தீர், நீயாரீரோ' என்று பேகனிடம் பரிசிற் பெற்று மீளும் பாணனை இரவலன் வினவினான் (புறம். 141.4-6). 'நேற்றுச் சுரனில் நடந்து வருந்திய எனது சுற்றம் பசித்தென நின் வாயிலில் தோன்றி வாழ்த்தி நின்று நின்னையும் நின் மலையையும் பாடக் கேட்டுக் குழல் இனைவது போல அழுதனள்; அவவளிக்கத் தக்காள் யார் கொல்' எனக் கபிலர் பேகனை வினவினார் (புறம். 143:7-15). வல்விலோரி கூத்தச் சுற்றத்தைச் சுரத்திடத்தே கண்டு, மான் தசைப் புழுக்குடன் மதுவையும் தந்து, பரிசில் அளித்தான் (புறம். 152:26-30). 'ஆறலை கள்வர், கொன்று வழியிலே பறித்ததால் கடைபோகச் சென்று முடியும் இயல்பு இல்லாததும் தம்முயிர் மேல் அன்பின்றிக் கலைமான் கிடந்து அசையிடுவதுமாகிய அருஞ்சுரத்தின்கண்ணே அன்பின்றிப் பிரிந்து சென்றவர்க்கு இன்றுடன் ஓராண்டு கழிக எனச் சொல்லி என் மனைவி வலிகுன்றித் துன்புறுவாள்' என்று பெருஞ்சித்திரனார் தன் மனைவி நிலை கூறிக் குமணனிடம் பரிசில் வேண்டினார் (புறம். 161:9-14). 'யான் எடுப்பவும் எழாயாய் நின் மார்பம் நிலத்தைப் பொருந்த இடைச் சுரத்தே மேம்பட வீழ்ந்த இளையோய்' என்று போரில் பட்ட மறவனை அவன் மனைவி விளித்துப் புலம்பினாள் (புறம். 254:2,3). வண்டிச்சக்கரத்தின் ஆரத்தைப் பொருந்தி வந்த பல்லி போலக் கொழுநனோடு ஒன்றிச் சுரம் பல கடந்து வந்த எமக்கும்சேர்த்து ஈமத்தாழியை அகலியதாக வனைவாயாக என்று கணவனை இழந்த மனைவி கலம் வனையும் வேட்கோவை வேண்டினாள் (புறம். 256). கிணைப்பொருநன், நண்பகலில் சுரனிடத்தே நடந்து வருந்தி மாலைப் பொழுதில் பெருஞ்சாத்தனுடைய அரண்மனை வாயிலில் தோன்றிப் பரிசில் வேண்டினான் (புறம். 395:22-

25). சுரங்கள் பலவறறிலும் செலுத்தபபடும தேராழி, எண்ணிலடங்கா மறவர்தம தலைகள் கீழே அகப்பட்டு நசுங்குமாறு ஊாநது செல்லும் (பதி. 46:8,9). குளிர்மிகக திங்களில் பனிமிக்க சுரங்களைக் கடநது செலலும பாணன உவக்கு மாறு இருள் அகல ஞாயிறு தன் பலகதிர்களையும பரபபியது (பதி. 59·1-6). வேல்காயநதாற் போன்று பருக்கைக் கறகள் அடியைக கிழித்தலின், பாணர் சுரனிடத்துள்ள கடம்பின் நிழலில இளைப பாறிச சென்றனர் (சிறு. 7-12). பல அரசரையும அமர் கடந்து அவா சுரங்களைப் பிளவுபடுததிய இகலாற்றலை யுடையவன் நெடுஞ்செழியன் (மது. 57-61). மலையிடத்தேயுள்ள காடடின முழைஞ்சு களைச சூறாவளி சூழநது கொள்ளுதலின கடல போல ஒலிபபதும; வனசொல இளைஞர்களால் வழிகளில ஆறலை கள்வர் வாராமற் காக்கப்படு வதும்; நிழலறறு உலர்நது முதுவேனிற் பருவத்தை யுடையதுமாகிய மலைசசார்பிலுளளது சுரம (மது. 307-314). கலலை இடித்துச் சுரத்தில் உயர்நத வழியைப் போதற்கரிய வழியென்று கருதாது கூத் தர் சென்றனர் (மலை. 20). பலாப்பழங்கள், மழை யினை ஏற்றுச் சுரத்தின்கண செலகின்ற கூதத ருடைய முழவு போலக கீழும் மேலும் தொங்கி முறறித் தாழ்நதன (மலை. 142-144). நன்னனைப் பொருந்தாதே நீங்கிய அவன ஏவலுக்குப் பொருந் தாத பகைவர் இருககும சுரங்கள் மிகப்பலவாகும் (மலை. 397, 398). வழிச்செல்வார் இனமையின் ஆறலைப்போரும வறுமையால் மெலிய, சுரம் பொலிவறற நெறியினையுடையது (அகம. 11:4,51) தலைவி விடலையாகிய தலைவனோடு சுரததினைக் கடநது சென்றாள் (அகம. 7: 12,13). 'வழிகள் செலல முடியாதபடி பின்னிக் கிடககும் இச்சுரத தினை நீவிர் முனபு அறிதலும் செயதீரோ எனறு பரிவுற்று வினவுவாரைப் பெறின், தலைவர் நாட் டிடததுச் செலலுதல் நமககு அரியவல்ல' எனறு தலைவி தோழியிடம கூறினாள் (அகம. 8:5,17,18). யாமரங்கள் நிறைந்த அருஞ்சுரததின்கவாத்த நெறிகள் பொருந்திய பக்கங்களில, இலவ மலர்கள் காற்றுப பொர வீழ்நது விடியறகாலதது மீன போலச் சிலவாய்த தோனறும (அகம. 17.16-21). மரா மரததை மலர்கள் உதிரத தாககி அலைக்கும் தெனறல, அமமலர்களைச் சுரததில செல்லும மள்ளரது மயிரில சொரியும (அகம. 21:12,13). மற வரது நடுகல்லை வழிபடறகு அதில பீலி சூட்டித் துடியடித்துக் கள்ளொடு மறியையும் பலிகொடுக கும் வழிபபோதறகு இயலாத கலர்தத வழி களையுடையது புலால நாறும அருஞ்சுரம் (அகம. 35:4-10). தீ, மலைபபககங்களிற பரததலின மூஙகிற் கணுக்கள் வெடிததலால எழும் ஒலி கலை மான கூட்டததைத் துரத்தும வெமமுனைகளை யுடையது அருஞ்சுரம (அகம். 47.4-8). ஆள் வழக கறறது சுரம (அகம். 51:1). 'மறவர் விலலிட வீழந தோரது நடுகலலின இனனிழலில் செந்நாய தன பிணவோடு வதியும அருஞ்சுர நெறியினைக் கடநது செனற தலைவரின விருபபம பொருளே ஆகும; ஆனால நீயோ நம்பால அருளே என்று கூறுவை, எனத் தலைவி தோழியிடம கூறினாள் (அகம. 53.6,10-16). 'களிறு வழிகளைக காவல் பூண டிருததற்குரிய அருஞ்சுரம மகளிாககு அரிய வாகும என்று அழுங்கிய செலவை இன்று செலலு தற்கு உடனபட்டனர்' எனத தலைவன் உடன போககு வலித்தமையைத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 65:15-20). யானைக கனறின் காலகளை இழுததுச செலலும வெள்ளததில பிடி களின பூசலகளுடன களிறுகள் தாம் அழைக்கும ஒலியும் சேரப் பாம்புச் செடிகளையுடைய பகற் போதிலும் அஞ்சப்படும் மிக்க நடுககததினைச செய்யும் தன்மையுடையது சுரன் (அகம். 68.17-21). கொடுவில் எயினா பகைவரை அகபபடுததும் சுரத தின்கண் செலலப் பருநதுப் பேடை தன துணையை நோககி நெடுவிளி பயிறறும் (அகம. 79: 12-15). வெணகடமபின காயநத கிளையிலேறிப பருந்து தனிமை கொள வருநதும வெபபம மிகக நீணட இடங்களாய வெமமுனைகளையுடையது அருஞ்சுரம (அகம. 81.7-10). கலலா இளையா, சுர மெங்கும கமழும வெணகடமபின் மலாகளைத் தம் தலையிற பொலியச சூடினா (அகம. 83.1,2). கடுங்கண மறவரது காட்டரணகளில எழுநத தண ணுமையொலி, அருஞ்சுரம செலவோர் நெஞ்சு நடுககுற ஒலிககும (அகம. 87 7·9). 'ஆறுசெல வம பலர் அஞ்சிப போககினைத தவிருமாறு கரடிக கூட்டம் இருபபையின பூககளைக கவாநதுணணு கினற சுரம பல கடநது தலைவர் சென்றாா (அகம். 95:6-12). 'கலைமானைப பறறித தின்று புலி விடடுச சென்ற முடை நாற்றததினையுடைய தசையினகண, கொலைவில ஆடவர்போலக கழுக ளோடு பருநதுகள் பலவும் ஒருஙகே வநது சூழந திருககும அருஞ்சுரததைத தலைவா கடநதார் (அகம. 97). புலலூறறினால எறறுதல குறிககப பட்ட குறுமபூழசசேவல பாதுகாவலான இடத்தில தங்க எணணித தானிருநத சிறுதூறு தனிததொழி யப போய வனனிலததுப பெருமனறிலே, ஆற லைக்கத தங்கியிருககும, பசுககள் நிறைநத சீறு ரினகண, உறைவோா விட்டுச சென்ற பெரு மனையின இறபபு நிழலில தஙகித தனிமை கொணடிருககும வெமமுனைகளையுடைய அருஞ

சுரததினைக் கடந்து தலைவன் பொருளீட்டச் செனறான (அகம். 103:1-11). யானைக் கூட்டம் பரந்த சோலையிலுள்ள மூங்கில வளாநத அகன்ற விடததே அம்புபட வீழநதோரின் எணணுவரம்பு அறியாத தழையிட்டு மூடிய பதுககைகளையுடைய சுரததிற் பொருநதிய கவர்தத நெறிகள், ஆறலைககும இடமாதலின வழிபபோவோர் போககொழிந்தனர் (அகம. 109:4-10). உப்பு வணிகர் விட்டுச செனற கலவடுப்பில் மழவர் ஊனைப் புழுக்கி உணணும் இடங்களையுடையது சுரன (அகம. 119:8-10). 'போர் நிகழும் இடங்களையுடைய சீறூரார் கையைத் தலைமீது வைத்து அலற, ஆககளைக கவர்நது செனறு கொனறு தினற மழவர் சுனை நீரை மிகுதியாகப் பருகும் அருஞ்சுரம தலைவியோடு செலறகு அரியவல்ல' எனத தலைவன தோழியிடம் கூறினான (அகம. 129:11-14) மழவர், விடியற்காலையில் ஆக்களைக கவர்ந்து கொணடு போன, அச்சந்தரும் கொடுஞ்சுரத்தினகண நெடுந்தூரம் கடநது வருதலின நடை ஓயநத கன்றின கடைககண உகுதத நீரினைத் துடைத்தனர் (அகம். 131:6-9). பக்கமலையிடத்துக காற்றினால் வளாந்த தீச்சுடர் மேலே எழுந்து மலைசகுகைகளில் முழங்கும வெபபம் மிகக மலையைச் சார்நத அருஞ்சுரததினைககடந்து போவேம் என்று தலைவன கூறிய அளவிலேயே தலைவியின கணகள் கலுழ்ந்தன (அகம். 143.5-9, 16). அகன்ற காட்டிடததே ஆள் வழங்காத நெறியினகண புலியுடன பொருதமையான புணமிகக யானைகள் நெடுஞ்சிகரததில் இடியென முழங்கும் அருஞசுரததின்கண தலைவி தலைவனுடன போயினாள (அகம். 145.5-10). புலி தொலைத்து உண்டு எஞ்சிய யானையின ஊனில ஆறலைப்போர் கோலிற் கோத்துக் கொண்டேகியது போக எஞசியதை, உமணர்ககூட்டம் சிறுதீயில வதக்கிச் சுனைநீராகிய சோறறுலையில கூட்டியாக்கும தனமையது சுரம் (அகம. 169:3-8). சீறூர் மககள் கரடியேற்றின் ஒலியினை உணர்வாராய விலலையும் அம்பையும உடனகொண்டு பரவி வருதலின அக்கரடிகள் தரையிற் கிடக்கும் உணவினை உணணாவாயப பூககளை உண்ணுதற்கு இருபபை மரததின மேலேறும சுரன் கடநது தலைவன் சென்றான (அகம. 171:8-15). வன்கண ஆடவர் எயயும் அமபு, ஆறுசெல வம்பலர் உயிரைப் போககுதலால், பருநது தன கிளையினை அழைததுப் புலாலை உணணும கொடிய சுரத்தினைத தலைவன கடநது செனறான (அகம். 175: 2-6). உமணரது வண்டிகளை இழுத்து, அருஞ்சுரததைக் கடநது வநத எருதுகளின மணியொலி அவரது சீழ்க்கையொலியோடு விரைந்து செனறு ஓமையம பெருஙகாட்டில் வரும் புதியவர்க்கு ஏமம செப்பும (அகம. 191:4-10). கழுகுச சேவல, யாமரததின கிளைகளிலுள்ள தன் பிள்ளைகளை உணபிகக விரைதலினாலே அபபிள்ளைகளின் வாயினினறும் தவறி வீழ்ந்த ஊன்தடி முதுநரிககு உணவாகும தனமையுடையது சுரன் (அகம. 193:6-11). அருஞ்சுரம் கடந்து செனற குறுமகள தன் தலைவனோடு வருமெனத தலைவனின தாய தன்மனையைக் கோலஞ் செய்தாள் (அகம். 195:1-5). பிடியினைத் தழுவிக் கிடந்த களிறு, கன்று தம் மீது ஏறி இறங்கப படுத்திருக்கும் நடுக்கத்தினைத தரும் சுரததினைக கடநது தலைவன செனறான (அகம. 197:13-15). கரடியேறறை தன் குருளையுடனும் பிணவோடும் மகிழ்நதிருக்கும் வெமமை மிகக சுரன கடநது தலைவன சென்றான் (அகம. 201:16-19). தலைவி இளையோனாகிய தலைவன முன்னே ஏகப் பல மலைகளையுடைய அருஞ்சுரத்தைக் கடநது சென்றாள் (அகம. 203. 10,11). 'கழுதைகளின் குளமபு உதைததலால் பரற்கற்கள் பிறழ்நது கிடககும் வழியாகிய, கொடிய சுரத்தினை ஊடறுத்துச செலலும அச்சநதோனறும கவர்த்த நெறியில, நீர் வேணடி யானை துழாவிய கிணறறைத் தலைவன் தோணட ஊறிய நீரினை என மகள் உணடனளோ' என மகட்போககிய தாய் வருந்தினாள் (அகம். 207:4-13). 'தலைவி பெறுதற்கு அரியள் என்று எணணாயாகி நாடோறும் இனனாமையையுடைய அரிய சுரததைக் கடந்து நீ எனனை இன்னல் படுத்தினை' என்று அல்லகுறிப்பட்ட தலைவன தனனெஞ்சிற்குக் கூறினான (அகம. 212:10-12). வேஙகட மலைக்கு அப்பால வடுகர் தேயத்தேயுள்ள, நிழலின அழகையிழநத, நீரிலலாத நீணட இடததினையுடைய, தீயின வெபபம் விளஙகும் அருஞ்சுரததை நெடிய என்று கருதாது தலைவன் தலைவியைப பிரிநது செலலத் துணிந்தான (அகம. 213:3-11). 'களிறறிரை தபபியமையின் புலி சினஞ்சிறந்து முழங்கும் ஒலிக்கு அஞ்சி இரும்பிடிகள் கெட்டோடும காட்டினையுடைய அருஞ்சுரததில் நீ தலைவனொடு செல்லுதலை யான உடனபட்டேன்' எனத தோழி தலைவியிடம் போக்குடமபடக் கூறினாள் (அகம். 221:11-14). மூஙகிலில் வணடு துளைதத துளை வழியே மேற காற்றுப் புகுந்து வருதலின எழும் ஒலி ஆனிரைக்குப பின வரும கோவலரது குழலிசையென அழகிதாக வந்திசைககும சோலை நிறைநத காடுகள் ஓங்கப பெற்றது அருஞ்சுரம் (அகம. 225:5-9). உதியன சேரல தன முன்னோர்க்குப் பெருஞ்சோறறினைப

பலியாகக் கொடுத்த காலத்தே அதனை உண் பதறகுப பேய்ச் சுற்றங்கள் கூடியிருநதாற்போலக் குறியவும் நெடியவுமான குன்றுகளையுடைய சுரன் கடந்து தலைவன் சென்றான் (அகம். 233' 8-12). செங்கண் ஆடவர், தீக்கொள்ளியோடு பிடித்த அமபினராயச் சென்று மாற்றார் ஊரி னைத் தொலைத்து ஆனினங்களைக் கவர்ந்தமை யான உண்டான விளிபடு பூசல கொடுஞ்சுரததே மாறி மாறி ஒலிக்கும (அகம். 239:3-6). 'வேனிற காலத்தின பகறபொழுதில, பாதிரிபபூக்களின வாடல நாறுகின்ற சுரத்தின் கணணே, நினசீறடி சிவப்ப எம்மொடு ஒரு நெறியில் பொருந்தி வருதற் குப் பெரிதும் வனமையுடையை ஆயினை' எனத் தலைவன உடன் போககினகண் தலைவியிடம் கூறினான (அகம. 257'1-4, 12). நின சிறுபுறம் காணடற்குச் சிறிது முன்னே நடப்பாயாக என்று யாம கூற அது கேட்டு முனனே செலலுதலை நாணித் தலையிறைஞ்சினள்; அதனைக் கண்டு யாம முன்னே செலலாது அரிய சுரமாய அவ் விடததே தங்கினேம் என்று உடன்போய மீண்டு வந்த தலைவன தோழியிடம கூறினான (அகம. 261: 7-12). வேங்கடமலையைப் பொருநதியுள்ள வெவ் வியமுனையிருப்புக்களையுடைய அருஞ்சுரத்தினைத் தாண்டித தலைவன பொருள் தேடச சென்றான (அகம. 265:21, 22). கோடைககாற்று உதிர்த்த இருப்பையின பூககளைக் கரடியினம் கவாந் துணணுவதும் கடுவன மூங்கிலிற பாய்தலின் மூங் கில நெற்றுககள் பாறையில உதிர்நது பொரிவது மான, உயர்மலைகளையடுத்த சுரம பலவறறையும கடநது தலைவன சென்றான் (அகம. 267:5-13). மறவரது நலலிசையை நிலை நிறுததுமாறு, நெடுங கலலைச செதுககி இயறறி நீராட்டி மஞசள் பூசிக கரநதைக் கணணி சூடி வீரர் தம பதிககண் மீளும அரிய சுரததைக கடநது சென்ற தலைவா நின கண்பனியைத துடைததறகு விரைநது வநத னா எனத தோழி தலைவியிடம கூறினாள் (அகம். 269:5-13, 25). நெல்லிககாயகள, குனறுகளின் பககததிலுள்ள ஊறு பொருநதிய சுரத்தினைக கடநது வநத, நீர் வேட்கை மிக்க வமபலரின போகும உயிரைப் போககாது நிறுததின (அகம. 271:5-7). வேங்கை தன பெண்புலியின பசியினைப பொறாது பனறியின வருதிறததைப பார்ததிருக் கும் காட்டுப் பரப்பாகிய அகனற இடததிலே மரஙகளின புள்ளி நீழலில ஆறுசெல வமபலர் தளர்ந்து தஙகியிருக்கும ஈரமறற வெவ்விய சுரததைக கடநது தலைவன் சென்றான (அகம. 277:5-12). கணையால் வீழநதிறந்த புதியர்களின் உடலை மூடிய கற்குவியலகளில ஏறிபபடர்ந்த

காட்டுமல்லிகைப் பூக்கள் நடுகலலின காலைப பலிககுப் கூட்டபபெறுதற்கு இடனாயது சுரம (அகம. 289:1-4). ஆறலைபபோர் பொருள் வவ்வ லின வணிகச சாததர் நெறியிடையே இயங்குதல அறறதும நெறியில் உதிாநத நெல்லிககாயகளைப பிணைமான் உணண நினைநது தம இளங்கோடு அதிரக் கலைமான கூவியழைப்பதுமாகிய ஞாயிறு தெறுதலால வருததமுறற அருஞசுரததைக கடநது வந்து தலைவியை உளளினை எனத தலைவன இடைச்சுரததே தனனெஞசிடம கூறினான (அகம. 291'14-22). கூததா சுரததிடததே வநத வெம்மை யாலாய வருததததை மரத்தடியில் தஙகிப் போக்குவர் (அகம. 301'9). வறறல மரத்திலுள்ள சிள்வீடு எனனும வணடுகள் உமணா எருதுகளின மணியோசை போல ஒலிககும் தனமையுடையது சுரன (அகம். 303.17,18). 'தலைவர் புலலியின வேங்கட நாட்டிறகு அப்பாலுள்ள கடததற கரிய சுரததைக் கடநது சென்றிருபபினும தாழ்ககாது விரைந்து வருவா' எனத தோழி தலைவியிடம் கூறினாள (அகம. 311.12,13). 'தலை வியை நீங்கிச செல்லும், இனனாமையையுடைய வெஞ்சுரத்தில பொருள வேட்கை செலுதத நீ சென்று சேர்தலும தகுமோ' என்று பொருள் கடைககூட்டிய நெஞ்சினைத் தலைவன வினவி னான (அகம. 327.4-6). 'திறியன வேளிரொடு போர் செயற்கு உருவிய வாளின வாயினை யொதத கொடுமையுடைய வறணட சுரததினைக் கடநது சென்ற தலைவா நமபால சிறிதும அனபு இலலாதவராவாா' எனத தலைவி தோழியிடம கூறினாள (அகம. 331:12-14). களிறறியானை தன கோடு ஒடிநதிடப பாயநது யாமரததின பட்டைகளைப பிளநது தன துணைணை உண ணுமபடி ஊட்டும் வருததம குடிகொணடுளள, நிலம் பிளநத வெஞசுரம தலைவியைக கொணடு செலலுதற்கு அரியவலல எனத தலைவன தன னெஞசிற்குக கூறனான் (அகம. 335:4-9). மூஙகிற தணடினைத தாககி ஞெமையின இலைகளை யுதிர்தத கோடைககாறறு, களா நிலததுள்ள புழுதியை முகநது சுழனறிட, வெஙகாட்டில பிணையைத் தழுவிய கலைமான நீாவேட்ட வருத்தத்தால் தழையை மறநது வறறிய கயததினை நோககி நீரினமையின தளர, மரஙகள் நிழலற்ற நெறியினையுடைய சுரன கடநது சென்று தலைவி யின் குணததினை உள்ளுவை யலலையோ எனப பொருள் வேட்கையுறற நெஞசினைத தலைவன வினவினான (அகம. 353.7-16,22). அரிய சுரத தின் கவர்த்த நெறிகளில தஙகிய கூததரது இசையொலி பெருமலையின உசசியில தோனறி

ஒலித்தல் (அகம் 359:7-11). பல மலைகளையும் வெவ்விய பாறைகளையுமுடைய அகன்ற சுரத்தைத் தலைவன் கடந்து சென்றான் (அகம். 361: 14-16). கொடுந்தொழில மறவர் ஆறுசெல் மாக்களின் மார்பிலே எறிந்த வேலால் புண்ணுற்றுப் பட்டோரது ஊனை உணணுறச் சேவற் பருந்து தன் கிளையினை அழைக்கும் இன்னாமையினையுடையது வெஞ்சுரம் (அகம. 363:10-15). காட்டு நெறியிலுள்ள நடுகல்லை ஆளென உதைத்த காட்டு யானையின் நகம், பனை நுங்கின் தோடு போல உடைந்திடும் அவ்விடத்துக் கடுங்கண் ஆடவர் அம்பெய்யப் பதுங்கியிருந்தும் வழிப்போவார் இன்மையின் தம்வறுமை களைவோரைக் காணாது வருந்தும் வெப்பம் மிக்கது கொடுஞ்சுரம் (அகம. 365.4-9). தலைவன், விட்டம் வீழ்ந்த முதிய தூண்களையுடைய அம்பலத்தில் அருஞ்சுரத்தைக் கடந்து வந்த வருத்தத்தால் கையற்றுத் தங்கினான் (அகம. 373:4,5). எருவைச் சேவல் தங்கியிருக்கும் யாமரத்தின் திரண்ட கொம்பு, இளம்பெருஞ்சென்னி பாழியெனனும் அரணையழித்து வடுகரது தலையைத் தறித்துக் கொன்ற யானைகளின் கொம்பு போலத் தோன்றும் அச்சம் வரும் இயல்பினையுடையது வெஞ்சுரம் (அகம. 375.8-16). வடுகர் விற்சினந் தணிந்த, அச்சம் வரும் கவர்த்த நெறிகளில் எருவைச் சேவற் கூட்டம் பசுஞ் மிகுதியைத் தெரிவித்துப் பறந்தெழுந்து செக்கர் வானம் போல விசும்பினை அணி செய்யும் தன்மையது அருஞ்சுரம் (அகம். 381:7-13). மதக் களிறானது, மணணில் ஊன்றிய வெண்கொம்பினைப் பெயர்க்கவியலாது தன் வாயிற் புகுத்திய துதிக்கை, மலைமுழைஞ்சினுள் நுழையும் பாம்பு போலத் தோன்றும் வெப்பம் மிக்க இடங்களையுடைய சுரன் கடந்து தலைவன் சென்றான் (அகம. 391:10-14). கலைமான் பேய்த்தேரினை நீரென விரும்பியோடிக் கலங்கிய உள்ளத்தோடு பிணையை அழைக்கும் துன்பந் தரும் குரலை, அருஞ்சுரம் செல்வோர் ஆளின் குரலென ஓர்ப்பர் (அகம. 395:8-12). தலைவன் சென்ற வழியானது கடுவளி மரக்கிளையிலே வீசுதலின் வாகையின் நெற்றுக்கள் ஒலித்தற்கு இடமாகிய மலைகளையுடைய கடத்தற்கரிய சுரமாகும் (குறு 39). 'பல நாள் நின்று முயற்சிகளைச் செய்தாலும் சுரம் பல குறுக்கிட்ட அரும்பொருள் முற்ற நிரம்பா வாதலின், முற்றும் பெற்றே மீள்வேம் என்று தலைவர் நீட்டித்திரார்' என்று தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 59: 4-6). வெஞ்சுரத்தில் இறந்த வழிப்போக்கருடைய உடலை மறைத்துத் தழையை இட்ட குவியலானது யானைக்கு நிழல் தரும் பொருளாகப் பயன்படும் (குறு. 77:2-4). ஆண் ஒந்தி ஆறுசெல்லும் மாக்கள் நிமித்தங் கொள்ளும்படி தங்குகின்ற தன்மையுடையது சுரன் (குறு. 140:1-3). 'நும்மொடு மகிழ்ந்து சிரித்த எம் பற்கள், சுரத்தில் செல்லும் யானையின் மலையைக் குத்திய கொம்பு போல முறிவனவாக' எனத் தலைவி பரத்தைமைத் தலைவனிடம் கூறினாள் (குறு. 169:1-3). 'ஒற்றை மூங்கில் ஓங்கிய சுரன் கடந்த தலைவர் பொருளை எய்தினரோ' எனத் தோழி தலைவியை வினவினாள் (குறு. 180:2-4). வேனிலால் வெம்பிய மராமரத்தினது கிளையின்கண் வேனிற்காலத்து மலர்ந்த ஒற்றைப் பூங்கொத்தை வண்டோடு ஊதி வறிதே பெயரும் தும்பிகளையுடைய நீரில்லாத இடங்களையுடையது சுரன் (குறு. 211:4-7). களிறுகள் பாறைகளுக்கு அருகில் தம் பிடிகளைத் தழுவிப் புலியின் தாக்குதலினின்றும் காக்கின்ற உயர்ந்த மலைப் பக்கத்திலுள்ள சுரன் கடந்தோராகிய தலைவர் இன்று வருவர் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 215:2-7). தொண்டைமான்களுக்குரிய சுரபுன்னைகள் நெருங்கிய மலைப்பக்கத்திலுள்ளதும் கன்றிலலாத ஒற்றைப் பசுவை நிழலினால் தம்பால் வரச்செய்த ஓமை மரங்களையுடையதுமாகிய சுரன் கடந்து சென்ற தலைவர் வருவர் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 260:4-8). துன்பத்தைச் செய்யும் இடங்களையுடையது சுரன் (குறு. 314:6). இருப்பையின் வெண்பூக்களைக் காற்றால் அலைக்கப்படும் கிளைகள் உதிர்ப்பதனால், அவை காம்பு கழன்று களிறு செல்லும் வழி மறையும்படி பரக்கின்ற மலைகளையுடையது அருஞ்சுரம் (குறு. 329:1-4). முன்பு நீர் மல்கிய சுனை பின்பு வற்றுதலினால் வறுமையுற்ற சுரத்திலுள்ள வாகைமலர் மயிலினது உச்சிக் கொண்டை போலத் தோன்றும் (குறு. 347:1-3). இன்றுணை பிரிந்த மலையெருது அறுகினைத் தின்னும் மலைப் பசுவைப் பார்த்து வெய்துற்று உகாய் மரத்தின் புள்ளி நீழலில் வதியும் இன்னாத் தன்மையுடையது அருஞ்சுரம் (குறு. 363). தலைவனோடு தலைவி போகிய சுரன், ஞாயிறு காயாது மர நிழல் பொருந்தித் சிறுநெறியின்கண் மணல் பரவப் பெற்று மழை பெய்து இனியதாகுக என மகட்போக்கிய செவிலி வேண்டினாள் (குறு. 378). புலிக்குட்டிகள் மாலைப்பொழுதில் தாம் பதுங்கியிருக்கும் மரலின் தூறுகளை நிமிர்ந்து நோக்குவதும் இணடங்கொடியுடன் ஒருசேரப் படர்கின்ற ஈங்கைக் கொடிகளை உடையதுமாகிய சுரன் கடந்து தலைவியைக் கொண்டு சென்ற தலைவனது உள்ளம் உருமினும் கொடியது (நற். 2). வேம்பின் புள்ளி நீழற்கண்ணே சிறார் வட்டரங்கு அமைத்து நெல்லிக்காயைக்

கொண்டு வட்டாடும் வில்லேர் உழவரது வெவ்விய குடியிருப்பினையுடைய சீறூர்களையுடையது சுரன் (நற். 3:2-6). யானை, சுரன கடநது வந்து வருந்திய வருததததினை சிறுகிணற்றிற் சென்று தணித்துக் கொள்ளும (நற். 41:1-4). பசிமிகக செந்நாய மரை யாவைத தொலைத்துத தினறொழிதத மிசசில, நெடுந்தொலைவிலுள்ள வேறறுநாட்டு அருஞ்சுரத்தின் கண்ணே செலவோர்க்கு உணவாகும (நற். 43:3-5). கொன்றையின் தீஙகனி, பாறையில விழுமாறு கிளைகள் துவண்டாடக் கொடுங்காறறு வீசுகின்ற மூஙகில் நிறைந்த இடததையுடைய துன்பம் மிக்கது அருஞ்சுரம் (நற். 46:6-9). வேட்டுவச் சீறூரிலுள்ள கிணற்றினின்று ஆனிரையுண்ணுமாறு எடுத்து வைதத நீர்ப்பத்தரில் உள்ள நீரினைப் பிடியுண்ணுமாறு அப்பத்தரின வாயை மூடிய விற்பொறியை முறித்து உண்பிக்கும களிறுகளையுடையது சுரன (நற் 92:5-9). நீர் அறுமாறு வறட்சியுற்ற நீண்ட நெறியில், வெயில் வீசுகின்ற வெம்மையாலே நோக்குவார் அஞ்சும்படி நடுககத்தைச் செய்யும் அருஞ்சுரத்தைக் கடந்து தலைவன் சென்றான் (நற். 99:1-3). இலவ மரத்தின்கிளைகள் நடுங்கும்படி வீசி அவை முறியுமாறு கடுங்காற்று மோதியடிக்கினற, மூங்கிற் புதர் நெருங்கிய இடங்களில் கடுநடையானை தன் கன்றோடு வருந்திநிற்க நெடுநெறி முழுதும் நீரிலலாதொழிந்த, நிழலற்ற அருஞ்சுரததிலுள்ள வழிகளை அத்தன்மைய என்றெண்ணாயாய்த் தலைவி வருந்துமாறு நீ நெடுந்தூரம் வநதுற்றனை என்று இடைச்சுரத்தின்கண் தலைவன் தனனெஞ்சிடம் கூறினான் (நற். 105:1-7). களிற்றியானை ஆட்களைக் கொல்லுதற்கு விரும்பி, விடியற்காலத்தில சுரத்தின்கண்ணே குறுக்கிட்டுச் சென்று அங்கு வருவாரைக் காணாது சினமிக்குப் பனைமரத்தை மோதிச் சினந்தணியும் (நற். 126: 3-8). 'புரவிகள், குளிர்ச்சி பொருந்திய பலவாய சுரங்களைக் கடந்து வந்தன (நற். 135:6,8). யானையின் விலா உரிஞ்சுதலான் பொரிந்த அடியினையுடைய கொனறை மரங்கள் குன்றின்கண்ணே உறைகின்ற தவசியர் போல, வெயில் நிலைபெற்ற நீளிடையில் பொலியத் தோனறும தனமையினையுடையது அருஞ்சுரம (நற். 141:5-7). 'பிணவுப புலியின புனிறுப பசி நீங்க, இருமபுலி சினஞ்சிறந்து களிற்றியானையின புகர் முகததே பாயும அருஞ்சுரததில தலைவா செலவர்; அதன பொருட்டு யான வருந்துவேனலலேன்; அவர் செலவு கைகூடுவதாக' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 148:7,12). தலைவி, தலைவனின பொய்ம மொழிகளை நமபித தன எயிறுகளில் நகையைத தோற்றுவித்து அருஞ்சுரததைக கடந்து சென்றனள் (நற். 179:8-10). 'கரடிகள் நிரம்பிய மலைகள் பொருநதிய சுரததின நீணட வழியில நீ என்னை விருமபி வருதல எனனையோ' எனத் தலைவி தலைவனிடம புலநது கூறிக் கலுழநதாள் (நற. 192:5,6). வேட்டுவன அமைத்த வலையை வெருவிக கணநதுள் பறவை எழுபபிய புலமபு கொள் ஓசை, சுரததில செலலும கூத்தா இசைக்கும யாழோசையோடு சோநதொலிககும (நற். 212: 1-4). குளஙகளில நீர்வறறச செவவியழிநது காயநத நெடுநெறிகளையுடைய, மறததொழில நெருஙகின கவாதத வழிகள் குறுககிட்ட வெம்முனைகளையுடையது அருஞசுரம (நற். 224.8 11). தலைவன வலிமைமிகக உள்ளததோடு பொருளீட்டச சுரம்பல கடநது சென்றான (நற. 246: 5,6). விடியறகாலையில சுரத்திற சென்று வருந்திய, புலியோடு பொருத யானையின புணமிகக காலபோல பிடியானை உதைதத ஓமையின சிவந்த அடிமரம் தோனறும (நற. 279.5-7). வம்பலர் வருதிறம நோககி அம்பெய்த ஆறலைகள்வரின தணணுமையொலி கேட்டு எருவைச்சேவல தன சுறறததினிடததே செலலும் அருஞ்சுரத்திலுள்ள கவர்தத வழிகளையுடைய, வெருவச் செயயும் அகனறயிடததையுடைய, குனறு பலவறறை உள்ளியும தலைவியின பணைத்தோளை நோககியும் ஒரு நெறியில ஒழுகுவாயலலை எனத் தலைவன் தனனெஞசிடம கூறினான (நற். 298:1-8). மலைவழியின சிறுநெறியிலுள்ள பள்ளததில ஏறும் சிறிய அளவான நீரினைப புலி, யானையோடு பொருது உண்ணும் தனமையுடையது சுரன (நற். 333:2-5). அருஞசுரததிலுள்ள கவாதத வழிகளில, ஆறலைகள்வா அலைத்தலாலே இறநது கிடநத புதியோரது பிணங்களைக கழுகு தினனாதவாறு முதுநரி வெருட்டும (நற். 352.2-5). மழவர் அம்பினை வில்லினின்றும் விடுதலானே அஞசியாரும நெருங்குதறகரிய கவாத்த வழிகளையுடைய அருஞ்சுரததைக கடந்து சென்ற தலைவா விரைநது வருவா என்று தோழி தலைவியிடம கூறினாள (நற. 387:3-6). சுரததினிடையே மேகம எழுநது உலவியதென மாாபில பூசிய சாநதமொடு நறுநதணணியனாயத தலைவன மீணடான (நற். 394.7-9). அருஞ்சுரததில செலவோர் வெள்ளோததிரததின பூஙகொததைச் சென்னியில சூடுவர் (ஐங. 301:1,2). புதுமட்கலம போனற பழஙகளையுடைய ஆலமரம, செலலும் பறவைகளைச செலலவிடாது தடுககும வேனிற பருவதது அருஞசுரமானது தணிநது இனிதாக ஆகும பொருட்டு எமமையும உடனழைதது செலவாயாக என்று தோழி தலைவனிடம்

கூறினாள் (ஐங். 303). 'குருசிலே, நீ பெரிய சுரன் கடந்து செல்லின், தலைவி அழுது இரங்குவாள்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 306). மூங்கில் உராய்தலால் தோன்றிய தீயினைப் புலி வெருவும் குன்றுகளையுடையது அருஞ்சுரம் (ஐங். 307:1,2). வேனில் திங்களில் வெஞ்சுரத்தைக் கடந்து தலைவன் செலவினை மேற்கொண்டான் (ஐங். 309) 'தலைவர் பொருள் தேடிச் சென்ற நெறி, கழுது உணவருந்தக் காக்கையொடு கழுகு விசும்பில் அகவ யானை ஆறுசெல்வோரை வீழ்த்தித் திரிதரும் நீண்ட வழிகளையுடைய அருஞ்சுரம் என்று கண்டோர் கூறுவர்' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 314). இலவ மலர்கள், தீத்தன்மை மிக்க காற்று வீசுதலின், வானத்தில் இடியிற்பட்ட தீயைப்போல நிலத்தில் உதிரும் கவர்த்த நெறிகளையுடைய அருஞ்சுரத்தைக் கடந்து தலைவன் சென்றான் (ஐங். 320). சுரத்திடையே உள்ள வழிகள், மூங்கில் உலர வேனில் நீடி ஞாயிறு பாறைகள் பிளக்கத் தெறுதலின் முன்னர் வெய்யவாயின; இனியே தலைவியை உள்ளுதலின் தண்ணியவாயின எனத் தலைவன் இடைச் சுரத்தில் தலைவியை நினைத்துக் கூறினான் (ஐங். 322). செந்நாய் ஏற்றைத் தன் வயவுப் பிணவிற்காகக் கள்ளிக்காட்டிடையே கேழற் பன்றியினைப் பார்த்திருக்கும் வெஞ்சுர வழிகளைக் கடந்து, நீ நயந்தோளின் பண்புகள் வந்தன எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான் (ஐங். 323). காதலியின் பண்புகளைத் துணையாகப் பெறின், அரையமரத்தின் இலையொலியை வெருவிய போகிற்பறவை உணவு உண்ணாது பிறிது புலம் படரும் கொதித்தலையுடைய அருஞ்சுரங்கள் வருத்தா என்பது தலைவன கூற்று (ஐங். 325). வெப்பம் மிக்க பரப்பின்கண் நிழலிடம் பெறாது மான் பிணை தன் குட்டிகளோடு வருந்த, நீர் பக்கங்களை அறுத்தமையான் தேய்ந்த சிறுவழிகளையுடைய சுரங்கள் தேற்றமாக இன்னாதன; தலைவியின் பண்புகள் தேற்றமாக இனியன எனத் தலைவன் தன்நெஞ்சிற்குக் கூறினான் (ஐங். 326). துதிக்கை சுடுதலை அஞ்சி யானை நிலத்தைத் தொட்டுச் செல்லாத, வெயிலால் உலர்ந்த சோலைகளையுடையது மூங்கில் உயர்ந்த சுரன் (ஐங். 327: 1-4). ஆள் இயக்கமற்ற, பாழ்பட்ட அகன்ற இடத்தையுடைய வெம்முனைகளையுடையது அருஞ்சுரம் (ஐங். 329:1,2) காதலியின் நெஞ்சத்திலுள்ள தனிமை நினைவு அவள் ஆய்நலம் சிதையும்படி ஞாயிறு காயும் வெஞ்சுரத்தை நினைப்பித்து வருத்துமாகலின் செலவினைத் தவிர்வேமாக எனத் தலைவன் தன்னெஞ்சிற்குரைத்தான் (ஐங். 330). அருஞ்சுரத்தைக் கடந்து செல்லுவோர் தம் துணைவியரை நினைந்து செலவழுங்குமாறு மராமரத்தின் வெள்ளிய மலர்கள் மணம் பரப்பும் (ஐங். 331:2-4). என்றூழ் (வெயில்) மிக்கது சுரன் (ஐங். 336:4). இலையிலவாக மலர்ந்த இலவ மரம், மலையில் தோன்றிய தீப்போலச் சுரத்திடத்தே தோன்றும் (ஐங். 338:2, 3). வழியிலுள்ள பலாவின் உலர்ந்த சிறுகாயை அருஞ்சுரத்தைக் கடந்து செல்லுவோர் உண்டு செல்வர் (ஐங். 351:1, 2). பெருங்கை யானை சினம் மிகுதற்கிடனானது வெஞ்சுரம் (ஐங். 352:3, 4). அரிய சுரனிடத்தே பிணவினைப் புணர்ந்த செந்நாய் ஏற்றை, குட்டியுடைய மான் பிணையைக் கொள்ளாது கழியும் (ஐங். 354:1-3). ஒள்ளிய தீயாற் சுடப்பட்டது சுரம் (ஐங். 356:3). தலைவன் அரும்பொருள் வேட்கையனாய்த் தலைவியைப் பிரிந்து சென்ற காலத்துச் சுரத்திடை வழிகள் நெடியவாயின; அவையே தலைவியை யுள்ளித் திரும்பி வருதலின் அணியவாயின (ஐங். 359). என் குறுமகள் தன் தலைவனோடு சென்ற சுரனிடத்துள்ள மலைகளில் வம்பமாரி பெய்து வழிகள் மிகவும் குளிர்ந்து இனிமை பயப்பனவாகுக என மகட்போக்கிய தாய் வேண்டினாள் (ஐங். 371). புலியால் கொள்ளப்படுதலினின்றும் பிழைத்த கலைமான் தன் பிணையைச் சேரவேண்டி ஆண்குரல் தோன்ற விளிக்கும் வெஞ்சுரத்தில் என் மகளைக் கொண்டு போன விடலையின் தாய் நினைக்குந்தோறும் அழுகின்ற துன்பத்தை அடைவாளாக என மகட்போக்கிய தாய் புலம்பினாள் (ஐங். 373). தலைவி காளையாகிய தலைவனோடு அருஞ்சுரத்தைக் கடந்து சென்றாள் (ஐங். 382:1,2). தலைவி, சுரத்தில் வளர்ந்த மராமரத்தின் குறுஞ்சினையை வளைத்துப் பிடித்துச் சுரும்பரற்றும் மலர்களைத் தனக்கும் பைஞ்சாய்ப் பாவைக்குமாய் ஆய்ந்து பறித்தனள் (ஐங். 383). தலைவி காளையாகிய தலைவனோடு புலிகள் நிறைந்த மலைகள் பிற்பட்டொழிய, வேறு வேறாகிய அருஞ்சுரம் பலவற்றையும் கடந்து சென்றாள் (ஐங். 385:1-3). ஒண்டொடியாகிய தலைவியை வினவும் பேதைப்பெண்ணே, சுரத்திடையே அவளைக் கண்டேம் எனச் செவிலியிடம் அந்தணர் கூறினர் (ஐங். 387:3, 4). ஞாயிற்றின் வெயில் கொடுமை தணிய யாமரத்தின் வரிநிழலில் தங்கி இவ்விடத்தினின்றும் சிறிது தொலைவு செல்வையாயின் நின்மகளோடு விடலையாகிய தலைவர் கடந்த சுரனைக் காண்குவை எனச் செவிலியிடம் இடைச்சுரத்தார் கூறினார் (ஐங். 388). நல்லோர் பலரையும் கைதொழுது, அறிவு சுழன்று, வினவுகின்றவளே, காளையாகிய தலை

வனோடு சுரத்திடையே அவளைக் கண்டேம் எனத் தலைவியைத் தேடிச் சென்ற செவிலியிடம் இடைச்சுரத்தார் கூறினர் (ஐங். 390). தலைவி அருஞ் சுரத்தைக் கடந்து சென்றாள் (ஐங். 394:3). காய்ந்த மூங்கிலில் தோன்றிய எரிசுடர் வெடிப்பை யுடைய குகைகளில் முழங்கும் இன்னாத தன்மை யுடையது அருஞ்சுரம் (ஐங். 395:1-3). வேங்கை மலர்களைக் கொய்து நின் கதுப்பில் சூட்டுந் துணையும் சுரத்திடையே நடந்ததால் உண்டான வருத்தத்தை ஆற்றுவாயாக என்று தலைவன் தலைவியிடம் கூறினான் (ஐங். 396:1-3). செந் நாய் ஏற்றை பன்றிக் குருளையைக் கொள்ளாது கழியும் தன்மையுடையது சுரம் (ஐங். 397:1-3). பறவைகளும் அறியாத பல பழங்களும் நிறைந்து, மான்களும் அறியாத பெரிய நீர்களும் நிலை பெற்றுச் சுரம் இனியவாகுக என்று நினையுந் தோறும் கலிழும் என்னைக் காட்டிலும் நம்மூர் மிகவும் புலம்பிற்று என உடன்போய மீண்டு வந்த தலைவியிடம் தோழி கூறினாள் (ஐங். 398). ஞாயிறு காய்தலின் நீரற்றுக் கயம் துகளாகிய வழியின் இயல்பு கெட்டு இன்னாவாயினும், காதலன் பாராட்டச் சென்ற என்மகள் போகிய சுரன் இனியவாகுக என மகட்போக்கிய செவிலித் தாய் வேண்டினாள் (ஐங். தி. 7). யானைத் திரள்களோடு மற்ற விலங்கின் நிரைகளும் மற வரும் மயங்குகையினால் தூறுகள் வழியிறப்பட்டு நெறிகள் கெட்ட தன்மையுடையது அருஞ்சுரம் (கலி. 5:1-3). மலை வளர்ந்து போதற்கரிய சுரத் திடத்து அரிய வழியிற் செல்வாரமேல் மறவர் அம்பு பாய்தலினால், உலர்ச்சியால் வாடும் அவர் நாவிற்கு நீர் பெறாத வருத்தத்தை அவர்தம் கண் ணீர் நனைத்துப் போக்கும் (கலி. 6:2-6). யானை கள் ஈரமற்ற நிலத்தை உழுகின்ற கலப்பைகள் போலக் கொம்புகளை ஊன்றிக் கையை நிமிர்த்து நிலத்தில் கிடக்க, மலைகளும் வெம்மையால வெம்புதலைச் செய்ய, போதற்கரிய தன்மையுடை யது வெஞ்சுரம் (கலி. 8:4-6). தலைவனோடு அருஞ்சுரத்தைக் கடந்து சென்ற மடப்பத்தை யுடையாளது தாய் போன்றீர் நீர் எனக் கூறிய அந்தணர் செவிலியிடம் உடன்போகிய தலைவி யைப் பற்றி எடுத்துரைத்தனர் (கலி. 9:10,11). தளிர்கள் வாடின கிளைகளை யுடையனவாயச் சேர்ந்தார்க்கு நிழலின்றி வேரொடு கிளைகளும் வெம்பும்படி ஞாயிறு காய்தலின் உலர்ந்த மரங்களையுடையது வெஞ்சுரம் (கலி. 10:1-7). தீப்பரந்த கரியினையுடைய நிலத்திடத்துள்ள மான்கள் தம் ஏறுகளோடு பேய்த்தேரை நீரென்று கருதி ஓட, மரல் வாடும்படி மலைகள் கொதிக்க, மந்திகள் வருந்த, யானைகள் நீருற்று அடங்கலின் வேறு நீர்நிலை காணாது சேற்றில் ஈரத்தை யளைந்து தம் செல்லுயிரைக் காக்க, மேகம் துளித்தலைத் தவிர்ந்த, போகுதற்கரிய தன்மை களையுடையது வெஞ்சுரம் (கலி. 13.1-9). 'ஞாயிறு காய்ந்த வெஞ்சுரத்தை நீ கடந்து செல்ல நினைத் ததை அறிந்தேன்; நீ அறுதியாக மகனல்லை எனப் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவனிடம் கூறி னாள் (கலி. 19:5,6). ஞாயிறு காய்வதால் தணி யாக் கோடைகாலத்திலும் குளிர்ந்த நிலையை விரும்பிப் பெருந்திரளாய வந்தடையும் யானைக் கூட்டத்தைத் தாங்கும் சிறப்புடையதும் மாணிக்க மணிகளால் விளக்கமுறுவதுமாகிய மலையும் வெப்பத்தால் வெம்ப, மண் பிளக்க, நீர் நிலை களும் புழுதிபட வெப்பத்தை வீசும் கொடுமை யுடையது வெஞ்சுரம் (கலி. 20 2-6). ஞாயிறு காயும் தன்மையது சுரம் (கலி. 22:20). யானையை அலைப்பவர், நிலத்தினின்றும் அவ்வியானையை ஓட்டும் கவணையாலே பூஞ்சினையிலுள்ள பூக் களை உதிர்க்கும் மலைகள் வெம்பிய, போதற் கரிய தன்மையுடையது வெஞ்சுரம் (கலி. 23:1-3). மூங்கில் மிகக் உயர்ந்த மலையில் தோன்றிய அழலிடையே களிறுகள் அகப்பட்ட தலைமை யுடைய வேழம், அதனை வழியுண்டாக மிதித்துத் தன் இனத்தோடு வெளியேறும் குன்று அழலும் வெஞ்சுரத்தைத் தலைவன் கடந்து சென்றான (கலி. 25:3 12). மகளிர் தோளைச் சேர்ந்த ஆடவா அவர் வருந்தும்படி பிரிதலும் நீண்ட சுரத்தைக் கடந்து சென்றவர்கள் விரைந்து வந்து அருள் செய்தலுமாகிய இரண்டும் இரவும் பகலும் போலக் காதலரிடையே தோன்றும் (கலி. 145.13-16). ஞாயிறு தெறுதலின் மூங்கிலில் தோன்றிக் சுடுத தெழுந்த காட்டுத்தீ மலைகளில் பரவி எரிய அங்கு எழுந்த அழல் விசும்பில் உற ஓங்கி வெம்மை யைச் செய்யும், விலங்குகள் திரிதலின் மயங்கின வழிகளையுடைய, மலைகள் குறுகிக்கிடக்க கிடக் கும் போதற்கரிய தன்மைகளையுடையது வெஞ் சுரம் (கலி. 150:3-6).

2. அருவழி. மறவர், துறுகற்களையுடைய நீண்ட நெறியை அகழ்ந்து சுரனை - அருவழியை - வரை யறுத்தனர் (பதி. 19:1,2). இலவ மரத்தின் பூக்கள், காற்றுப் பொருதலால் வீழ்ந்த விடியற்காலத்து விண்மீன்கள் போலச் சிலவாயத் தோன்றும், பெருமலைகள் குறுகிகிட்டு நிற்கும் சுரனில் செல்லு தற்கு என் மகளின் சீறடிகள் வல்லுநவோ என மகட்போக்கிய செவிலித்தாய் வருந்தினாள் (அகம். 17:18-22). தலைவன், முதலையோடு சுறாமீன

இயங்கும் கரிய கழியினை அடுத்த சுரத்தினைக் கடந்து வந்தான் (அகம். 80:1-3). தேன் கமழும் நீண்ட வரைகளால் விளங்கிய வேங்கட மலையைச் சார்ந்த ஊர்களையுடைய சுரன் கடந்து தலைவன் சென்றான் (அகம். 141:27-29). கோங்கின் புதுமலர் காற்று வீசுதலின் கையினால் விடப்பெறும் சுடர்ப் பொறி போல இடமெல்லாம் கமழும்படி கழன்று வீசும், மேகம் சூழ்ந்த மலைகள் குறுக்கிட்ட சுரனில் செல்ல என் மகள் வல்லுநள் கோல்லோ என மகட் போக்கிய செவிலித்தாய் வருந்தினாள் (அகம். 153:13-19). பாழி நாட்டின் அரிய இடத்தே யானை, காலைப் பொழுதில் துயிலுமிடத்தே செயலொடுங்கி அசைந்து கொண்டிருக்கும் மலைகள் குறுக்கிட்ட சுரனில் ஆள் வழக்கற்ற இடங்களிலுள்ள மலை சார்ந்த குடிப்பாக்கத்தில் தலைவன் இரவு விருந்துண்டு பாதுகாவலாகத் தங்கிச் சென்றான் (அகம். 187: 12-24). நீர் இழிதரும் மலையுச்சியில் வேங்கையின் நறுமலர்கள் உதிர்ந்திடப் பெருங்கிளையிலேறி ஆண்குரங்குகள் தம் இனங்களைக் கூப்பிட்டுத் தாவும் குன்றிடையே செல்லும் சிறு நெறியாகிய, கற்கள் விளங்கிய, அரிய இடங்கள் குறுக்கிட்ட, மொழி வேறுபட்ட தேயங்களிலுள்ள சுரன் கடந்து தலைவன் சென்றான் (அகம். 205:18-24). கானவர் அம்புபடப் பட்டோர் வீழ்ந்து கிடக்கும், நினைப்போரையும் நடுங்கச் செய்யும், எவரும் செல்லத் துணியாத காட்டிடையே உள்ள வெஞ்சுரத்தைக் கடந்து தலைவன் பொருளீட்டச் சென்றான் (அகம். 231. 5-9). தந்தை, தலைவியின அண்ணன்மார்க்குக் கடலாகிய திரையையுடைய சுரத்தில் திரிந்து வருந்தும் படகிலுள்ள விளக்கொளியினால் பன் மீன் கூட்டத்தைக் காட்டுதல் (கடலாகிய சுரம் என. வே. வி. விளக்கும்) (அகம். 240:5-7). மாறு கொண்டு போர் செய்தலால் சீறூர் முனை பாழ்பட்ட அவ்விடத்தே ஆட்களின் வருகையை எதிர் நோக்கி யானை சுரத்தினைக் காவல் கொண்டிருக்கும் (அகம். 247:7-9). கவர்த்த வழிகளையுடைய காட்டகத்தே வழிச்செல்லும் புதியரைக் காணும் பொருட்டு ஆறலைகள்வர் யா மரத்தின் கிளைகளை இடமாகக் கொண்டு மறைந்திருக்கும் அருஞ்சுரத்தில் தலைவன் தலைவியை உடன்கொண்டு போயினான் (அகம். 263:5-9). இருப்பைப் பூக்களைக் கரடிக் கூட்டம் கவர்ந்துண்ணும் கொடுமலைகளையடுத்த அருஞ்சுரங்களையுடைய, உலகம் அஞ்சி உயிர்க்கும் இன்னாமையுடைய காட்டின்கண் தலைவி தலைவனது காதலை நம்பி உடன் சென்றனள் (அகம். 275:10-15). வெப்பம் மிக்க காட்டிடத்தே, உகாவின் பெரும்பழம் கிளைகளினின்று உதிர்ந்தொழியும் வேனிலால் வெப்ப மிக்க சுரத்தில் தலைவன் தமியனாய்ச் சென்றான் (அகம். 293: 5-10). மலையின் கவினழிந்த செறிந்த காட்டிடத்தவாகிய அருஞ்சுரங்கள் ஒருதலையாகக் கொடியன (அகம். 325:10,11). ஏழிற் குன்றத்திலுள்ள வேங்கையின் பூக்களாகிய உணவினையுண்ட களிறு தன் நெற்றியில் வைத்த வலிமை குன்றிய தடக்கை, குன்றத்தில் ஏறும் பாம்பு போலத் தோன்றும் மொழி வேறுபட்ட தேயத்திடத்தவாகிய சுரன் கடந்து சென்ற தலைவர் நம் தொல் கவின் தொலைய என்ன பொருளைக் கருதினரோ என்று தலைவி தோழியை வினவினாள் (அகம். 349:9-14). அறியாத் தேயத்தின் அருஞ்சுரத்தில் கொண்டு போன இளையானுக்குப் பொருந்திய என் மகள் வறுமையுற்ற பெண்டிரின் மனையில் சிலம்பு கழித்து மணம் பொருந்தினளோ என மகட் போக்கிய செவிலி வருந்தினாள் (அகம். 369:20-26). தேர்ச் சக்கரம் வெண்மணலிடத்தே வாய்க்காலைப் போன்ற சுவட்டினை உண்டாக்க, சேறு பரந்த இடத்தே இருண்ட நீரினையுடைய குறுகிய சுரத்தைக் கடந்து தலைவன் வந்தான் (அகம். 400:15-19). இரை வேட்டெழுந்த சேவலையுள்ளிப் பெடைப்புறா கள்ளியின் கிளையிலிருந்து தனிமை தோன்றும்படி கூவுகின்ற அரிய சுரங்களையுடைய இடமாகிய பாலை நிலத்தைக் கடந்து நெடுந் தொலைவில் உறைதல் வல்ல தலைவர் அவ்வன்மையை யாங்கறிந்தனர் எனத் தலைவி தோழியை வினவினாள் (குறு. 154:3-8). மாலைப் பொழுது வந்தது; மணிகள் குறுங்காட்டிடத்து ஒலிக்கும்படி சுரன்கடந்து மாலை விருந்து அயரத் தலைவன் தேர் வருகின்றது என்னும் உரை வந்திலது எனத் தலைவி வருந்தினாள் (குறு. 155:3-7). பாலை நிலத்திலுள்ள ஓமை மரக்கிளையிலிருந்த பருந்தின் தனிமை கொண்ட ஓசை சுரத்திற் செல்லும் மாக்கட்கு உசாத்துணையாக அமையும் (குறு. 207:2-4). பரதவர், மூங்கிற் கோலில் பொருந்திய எறியுளியைத் தாங்குதற்கரிய நீரையுடைய சுரத்தின் கண் எறிந்து மீண்டும் கைக்கொள்ளுவர் (குறு. 304:1-4). பறவைகள் வந்திருந்தால் உதிர்ந்த பூக் கலந்த சேற்றினையுடைய கழியிடத்துச் சுரத்தில் ஓடும் தேரிற்பூட்டிய குதிரைகளை அலையெழுந்து வரும் கடல் நீர் கழுவும் (நற். 63:8-10). களரையுடைய ஓமையங் காட்டகத்து வெயில் நிலைபெற்ற வெம்மையுடைய செல்லுதற்கரிய சுரத்தில் தலைவன் சென்றான் (நற். 84:8-10). பரதவச் சிறார், படகின் மேலேறிக் கடலிடத்துச் சுரத்தை நீந்திச் சுறாவொடு பிற மீன்களையும் பிடித்துத் துண்டித்து நிணம் நிரம்பிய தோணியராய் மீள்வர்

சொரிந்தன (பரி. 20:101,103) நீரொலிக்கின்ற ஆழ்ந்த சுனையில் மூழ்கி நீர் மேலெழுந்த தலைவி, கரையில் நின்ற தன் கணவனிடம் புணையாகிய மூங்கிலைத் தருமாறு வேண்டினாள் (பரி. 21.39-41).

**சுனைப்பூ** - சுனையில் மலரும் மலர். செல்வம் குறைந்தோரால் பயன் இன்மையின் அவர்பாலிருந்த பற்றினை யொழித்து நீங்கும் நயனில்லாத மக்கள் போல வண்டினம், சுனைப்பூக்களை விடுத்துச் சினைப்பூக்களை அடைந்து மொய்த்தது (அகம். 71: 1-4). தலைவி, சுனைப்பூக்களைப் பறித்து மாலையாகக் கட்டிச் சூடிப் புனத்தில் படியும் கிளிகளை ஓட்டினாள் (குறு. 142:1,2). சுனைப்பூக்களைப் பறித்து மாலையாகச் சாத்தியும் செங்காந்தளைக் கண்ணியாக அணிவித்தும் செவ்வேளுக்கு வழிபாடு நடத்தப் பெற்றது (நற். 173:1-4). சுனைமலர் காண்க.

**சுனைமலர்** - சுனையில் மலரும் மலர். வண்டினம், கண்ணனையொக்க விரிந்த, விருப்பம் மிக்க சுனை மலர்களில் சென்று ஆரவாரித்தது (முரு. 75,76). 'தலைவியின் மலர் போலும் உண்கண்கள் பசக்கும்படி நீ சிதைத்தது, நின் மலையிலுள்ள நீர் நிறைந்த சுனைமலரை அக்கண்கள் ஒக்கும் என்றதாலோ' எனத் தோழி தலைவனை வினவினாள் (கலி. 45:9-11). மகளிரும் மைந்தரும் பாய்ந்தாடுதலால் வெருவிய வண்டுகள் சுனைமலர்த் தாதினை ஊதாவாயின (பரி. 17:33-38). சுனைப் பூ காண்க.

## சூ

**சூட்டு** 1. உழவர் குறு முயல்களின் குழைத்த சூட்டோடு சுடப்பட்ட புலாலோடு - வாளை மீனைக் கொண்டு பலவாகச் செய்த அவியலைப் பழைய சோற்றோடு உண்டனர் (புறம். 395.3-5). சோழ நாட்டினர், பொரிக்கறியுடனும் சூட்டுடனும் சோற்றை உண்டனர் (புறம். 395:36,37). 'ஓய்மா னாட்டு நல்லியக் கோடனைக் காணச் செல்லுமிடையே நீவிர் எயிற்பட்டினம் சென்றால், அங்கே கிடங்கிற்கோமானைப் பாடியாடும் மகளிரொடு நீவிரும், உலர்ந்த குழல்மீனின் சூட்டுடன் பழைய கள்ளைப் பரதவர் ஊட்ட, அவற்றை இடந்தோறும் பெறுவீர்' என்றும், நீவிர் வேலூரையடைந்தால் அங்கே எயிற்றியர் அட்ட இனிய புளிஞ்சோற்றை ஆமானின் சூட்டோடு பசிகெடப் பெறுவீர்' என்றும் சிறுபாணர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (சிறு. 153-163; 173-177). 'தொண்டைமான் இளந்திரையனைக் காணச்செல்லும் இடைவழியில் நீவிர் வலைஞர் குடியிலே தங்குவீராயின், நும் இளைப்பிற்கு அங்கே உலராத மீனின் சூட்டோடு நறுங்கள்ளைப் பெறுவீர்' எனப் பெரும்பாணர்ஆற்றுப்படுத்தப் பெறுவர் (பெரு. 274-282). கூகையே, யாம் யாட்டிறைச்சியுடன் சமைத்த வெண்சோற்றை வெள்ளெலியின் சூட்டோடு நினக்கு நிரம்பக் கொடுப்போம்; நீ இரவுக் குறியிடத்தே எம் காதலர் வரவைப் பிறர்க்குப் புலப்படக் குரலெடுத்து அறிவிக்காதே' என்றாள் தோழி (நற். 83.4-9).

2. சக்கர வட்டை. கொழுத்த சூட்டு - வட்டை - பலவும் சூழ்ந்த ஆரக்கால்களையுடையது சகடம் (பெரு. 46,50). பூணைப் பதித்தாற்போன்ற பொன்னாலாகிய சூட்டினையுடையது தேர்ச்சக்கரம் (குறு. 227:1). பெரிய முல்லை நிலத்தே வலிய சூட்டினையுடைய உருள்கள் ஈரமாய மண்ணினைக் கிழித்துச் செல்ல நெடுந்தோ கடவுதல (அகம். 334: 13-15).

3. மணி. மாயோள், சிறந்த சூட்டு - மணி - பதித்த ஒளிபொருந்திய குழை காதினைக் கண் அசைய, உள்ளம் நிறைந்த மகிழ்ச்சியளாய்த் தலைப்பெய்தனள் (அகம். 86 27-29). தலைவியின் அழகிய முகத்திலுள்ள ஒளிபொருந்திய சூட்டு அமைந்த, விளங்குகின்ற காதணியாகிய குழையொடு பொருந்த பார்வையினைத் தலைவன் நினைவான் (அகம். 253:21-26).

4. ஒருவகை அணி சூட்டும் சண்ணியும் வளையமுமாகிய இவற்றால் இயன்ற அழகிய மகளிர் திரள் வையைக் கரையில் நின்றது (பரி. 20 30)

5. தலையின் உச்சி. முரசங்களையுடைய செல்வர் தம் குதிரையின் சூட்டிடத்து - தலையின் உச்சியிடத்து - இணைத்துத் தைத்த கவரியை நிமிர்த்து வைத்தாலொப்பத் தெறகதிர் தோன்றியது (அகம். 156.1-3).

**சூடா நறவு** - மது. சூடா நறவினை - மதுவினை - அருந்தி விடியற்காலத்தே மகிழ்ந்திருக்கும் உலகக் இருப்பு (பதி. 85.8). சூடா நறவு காமத்தைத் தூண்டியது (பரி. தி. 1·56).

**சூடாவாகைப் பறந்தலை** - வாகைப்பறந்தலை என்னும் போர்க்களம். பெரிய வளத்தையுடைய கரிகால் வளவனுக்கு முன்னிற்றலை ஆற்றாதவராய சூடா

வாகைப பறந்தலையின் கண்-வாகைப்பறந்தலை எனனும் போாககளததினகண - (அவன வெற்றி பெற) தம் ஒன்பது குடைகளையும பகலிலேயே போகட்டுச் சென றபெருமையில்லாத மனனர் ஒன பதினமர் (அகம். 125:18-22).

சூடு-சுடப்பட்ட புலால். மதுவை ஆமையிறைச்சியுடன் வேட்கை தீர உண்டு, ஆரலமீனாகிய கொழுஞ் சூடு - சுடபபட்டபுலாலை – வாயிலே அடககி மயககததால வைகுதொழில ஒழியும், நீங்காத விழாவினையுடையது சோழநாடு (புறம். 212:2-6). ஆட்டுககிடாயை வீழததிசசமைதத சூடும சோறும தருமபுததிரனால வேணடியோர்கரு வழங்கப பெறறன (புறம். 366:19,20). கள்ளினதெளிவுடனே 'சூடுதநது என வறுமையைப் போககினான்' என்று ஓயமான நலலியாதனைப் புறததிணை நன்னாக னார் போற்றுவர் (புறம. 376:14,15). 'சூடு கிழித்து வாடுன தின்றல' (இஙகுச் 'சூடு' எனபதறகுச சூட்டிறைசசி எனக் கொள்வதோடு, சூட்டுக்கோல் எனவும் பொருள்கொணடு, சூட்டுக்கோலால் கிழிததுச் சுடப்பட்ட ஊனைததினறல' என விளக் குவர் ஔவை. து.) (புறம். 386:4). உழவர் குறு முயல்களின குழைத்த சூட்டோடு வாளை மீனைக் கொண்டு பலவாகச் செய்த அவியலைப் பழைய சோற்றோடே உண்டனர் (புறம். 395:3-5). சோழ நாட்டினர் பொரிக்கறியுடனும் சூட்டுடனும சோற்றை உண்டனர் (புறம். 395:36,37). 'அவன் எமக்களித்தது கொழுத்த துண்டமாகிய சூடு என்று சொல்வேனோ, மட்டு என்று சொலவேனோ' என வாட்டாற்று எழினியாதனின ஈகையை வியபபர் மாங்குடி கிழார் (புறம். 396:15,16). 'இவன எமமை 'உள்ளிவநத பரிசிலன' என்று நெய மிகச சொரிநது பொரித்த தாளிததததையுடைய நெடுஞ்சூடு, கள் தெளிவு, ஆடை ஆகியவறறைக கிணைஞனுககு நலகினான சோழன குளமுறறத்துத துஞ்சிய கிள்ளி வளவன (புறம. 397.12-16). பரதவா கடல இறவின சூடு தின்றனர் (பட். 62,63).

2. நெற்சூடு. வயலிடத்தே மயில் உதிர்தத பீலியை அஙகுள்ள உழவர் சூடுகளுடன் - நெற்சூடு களுடன - திரட்டும் நாடடினன சோழன முடித தலைக்கோபபெருநறகிள்ளி (புறம. 13.10-13) விலாப் புடைகக உண்ட உழவர் கழனியிடததே சூடுகளை இடுமிடம் அறியாது தடுமாறினர் (புறம. 61:7,8). நெலலை அறுத்துச் சூடுகளை மலையாக அடுககி, நாள்தோறும கடாவிட்டுக குன்றெனனும படி திரட்டிய தொலையாத நெறபொலி (பொரு. 242-244). நெல்லரிஞர் நெலலுடன சேர்த்தறுதத பல மலர்களையும தமமில மாறுபடவைத்து வலித்துக கட்டப பட்ட, அசையும் பக்கங்களை யுடைய பெருஞ்சூடுகளைக் கள்ளுண்ட களமர் களந்தொறும் கொணடு சென்று அடுக்கினர் (அகம. 84:11-13). வெறறிடம் அறச செறிந்துள்ள நீணட கதிரினையுடைய பலசூட்டுக்கள இடபபெறற களம் (அகம். 236:5,6). வயலில் மள்ளர் அறுககும் கதிரோடு அறுபட்டு, அரிச்சூடு களததில கொணர்ந்து இடபபட்ட ஆம்பறபூ (நற். 290.1). நெறகதிர் விளைநத வயலின சேறறிலே கதிரறுககும மள்ளர் அறுதது இட்ட அரிச் சூடு பககததில வாளை மீன பிறழும ஊரன தலைவன (நற். 400:2-4). மருத நிலததில் இளநெல்லின் கண்ணும் அரிகாலசூடு கிடநதவிடததும் மிகக புனல பரந்தமையினைத் துடிகொட்டிக் கூறல (பரி. 7.27,28).

3. சூடுதல். வல்லோன் கூர்மையையுடைய ஊசி யால மான்தோலில மணிகளைப் பதிதது அழகுறச் செய்தமையால சூடு-சூடுதல-நிலைமையுற்று அத் தோல் ஒளிவிடுதல் (பதி. 74:10-14).

சூடு நறவு - நறவம்பூ. சூடு நறவொடு - நறவம்பூ வொடு - காமம் மலர்தல (பரி. தி. 1:55).

சூதர் - நின்றேத்துவார். சூதர் - நின்றேத்துவார் - வாழ்தத, மாகதர் புகழைச் சொலல இரவு நீங்கும வைகறை (மது. 670, 686).

சூது - உட்புரை. சூது - உட்புரை - பொருந்திய குறுந தொடி (ஐங். 71: 1).

சூர் - 1. அச்சம் தரும் தெய்வம். 'நினபடை. நட்பு டையார்க்கும காபபாகிப் பகைவர்க்குச் சூர் - அச் சம் தரும் தெய்வம்-தோன்றி வருததினாற் போனற தாயிருக்கினறது' எனக் களங்காய்க் கண்ணி நார் முடிசசேரலின படை சிறப்பிக்கப்படுகிறது (பதி. 31:34,35). சூர் விரும்பும் காந்தட்பூவை ஊதிய தும்பி, பறக்கும் தன்மையை 'யிழககும (பதி. 67:19-21). சூர் ஏறிய மயில் நடுங்கும (குறி. 169) தலை வனது மலைமுழைஞ்சு, தவறாது துனபம் தருகினற சூர் உறையப்பெறும் (குறி. 255,261). சூர் விரும்பியுறையும் பககமலை (மலை. 239; அகம். 359: 11). சூா உறையப் பெறற சுனை (அகம. 91:4, நற 7:1;268:1). சூர் உறையும் மலையினையுடையவன தலைவன (அகம. 98:5; ஐங். 249:4). 'சூருடைய மலையையடுதத நம தோட்டத்தில், ஒளி தங்கிய பூவைச் சூடிக்கொண்டு விருமபிய உருவத்தோடு ஒரு தெய்வம் வருத்துமுண்டு எனததோழி செவிலி யிடம் கூறினாள் (அகம். 158:7,8). அடியில் சூர்

இருக்கபபெற்ற ஓமை மரங்களையுடையது காடு (அகம் 277.11) சூா விருமபியுறையும அகன்ற இடத்தையுடையது கொல்லிமலை (அகம். 303.5,6). சூா நடுககஞ்செயவது போனற குளிர்சசி பொருநதிய பனிக் கட்டியுடனே மேகம் மழை பொழியும் (அகம். 804:1-4).மலைப்பககததேயுள்ள சூர்விரும்பப் பெற்ற வளைப் போலவாளாயத தலைவி தன கறபுககு ஏதம் வருமோ என றஞ்சி உள்ளம் நடுங்குவள் (குறு. 52:1,2). சூர் வாழும் மலைநாட்டையுடையவன தலைவன (குறு. 105:5). பொதியின மலையினது அடுக்கம சூர் உறையப் பெறறது. (குறு. 376.1,2). போர் செயயும் வரையாடுகளும் பாய்நது செல்லாத சூருடைய அடுக்கம் அமைநதது தலைவன் மலை (நற. 359:7-9). தலைவனொடு தலைவி சூருடைய சிலம்பில் அருவியாடினாள் (நற. 373:4,5). கருனைப் பொரியலுடன கூடிய செநநெல வெணசோற்றையும் சூர்ககு இடபபடும பலியையும காககை கவாநதுண்ணும (நற. 367:1-4). செவவேள் பரங்குனறு சூர் உறையப் பெறுவது (பரி. 19:23).

2. சூரபன்மா. சூரை - சூரபனமாவை-கொன்றவன் முருகன (புறம. 23:4). சூருடைய மாமரத்தினை வேருடன் வெட்டினான செவ்வேள் (பதி. 11:5, 6). கடல நிலைகுலையுமபடி உள்ளே சென்று சூராகிய தலைவனைக கொன்றது நெடிய வேற்படை (முரு. 45, 46). போர்ததொழிலில் மிகுநத வலிமையால சூர் குலத்தை அழித்தவன மதவலி முருகன் (முரு. 275, 276). 'ஒலிககின்ற கடலில சூரைத தடிந்தவனே' என முருகன விளிக்கப்பெறுவன் (முரு. வெ. 1:1). சூர் மாாபும குன்றும துளைத்தவேல முருகனுடையது (முரு. வெ. 3'3). சூரைத தடிநத கொறறவன செவ்வேள் (முரு. வெ. 4.2) கடலிலே சென்று கடிய சூரைக கொனறவன முருகன (பெரு. 457, 458). சூாச் சுறறத் தினைத தொலைதத நெடிய வேலினையுடைய சினம மிககவன முருகன (அகம. 59.10:11). கெடாத விரதததாலே குதிரை முகமும் மககள் உடலுமாகிய இரண்டு அழகுக்குப பொருநதிய சூரைககொனறவன செவ்வேலான (கலி. 93'25, 26). சூரைக கிளையோடறுதத ஒளிமிக்க வேற்படையினையுடையோய் என முருகன விளிககப பெறுவான (பரி. 14:18). 'கடறபரப்பினுள் பரநது சுற்றிய சூராகிய மாவைத தொலைதத வேலையுடையவன முருகன (பரி. 18:4).

3. அச்சம். யாறு, கருதுவோரையும நடுங்கச் செயயும சூா - அசசம் - உடைய முதலைகளைக் கொணடது (அகம. 72:78).

4. கடுமை. விருமபிய புனலாட்டணியையுடைய மெய்யீரம தீாநது வெய்தாக நுகாதறகுச சூர் - கடுமை - மிகக கள்ளை ஏநதினாள் ஒரு பெண (பரி. 7:61, 62).

**சூர்ப்பு** - 1. கடகம். சுடாவிடுகின்ற பசுமபொனனாற் செய்த அணியினையும வளைநத சூர்பபு - கடகம - அணிந்த முன்கையினையும உடையவன ஆதன ஓரி (புறம. 153'3, 4).

2. கொடுந்தொழில். பகைவரால சினத்தறகரிய கடிய வலிமையையும வெற்றி விளங்கிய சீரிய சூாபபினையும - கொடுநதொழிலினையும் - உடையராய் இட்ட அடி வாஙகிப பினபோகாதவா வீரா (மது. 32, 33, 37).

3. வளைவு. குற்றமற்ற வெள்ளியினாலாகிய சூர்பபு – வளைவு - பொருநதிய வளைகள் (அ . 142:16, 17).

**சூர்மகள்** - சூரரமகள. 'நம்மைத தழுவி மீளவோள் அரிவையலலள, ஆய அணடிரனின நாட்டின தெயவஙகளையுடைய மலையில, கவிரம என்னும பககமலையிலே மெலலிய மலாகளையுடைய நிறைசுனையில உறையும சூாமகளே-சூரர மகளே- ஆவள்' என்று தலைவியைக குறிததுத தலைவனது நெஞ்சு கருதியது (அகம. 198:11-17) குவளை மலரைபபறிதது, அவறறோடு காந்தள் மலாகளை வடிவு விளஙகக கட்டிச சூடி, பெரிய மலையின பக்கங்களெலலாம பொலிவுபெற, அருவியொலியையே இனியவாசசிய முழககஙகளாககொண்டு சூாமகள் ஆடும நாடடினையுடையவன தலைவன (நற். 34.3-5).

**சூர்மா** - சூரனாகிய மாமரம. முருகன பிணிமுகமென்னும யானையை ஊாநது கடலிற புகுநது அமருழககி, அஙகேஅசசததால நடுஙகுகின்ற சூாமாவின - சூரனாகிய மாமரததின - முதலை வேலினால வெட்டினான (பரி. 5'1-4). கடுமைமிகக சூாமாவின முதலை வெட்டியறுதத வேலினையுடைய போராளன் முருகன (பரி. 9 70).

**சூரர மகளிர்** - கொடுமையுடைய தெயவமகளிா. சூரர மகளிர் - கொடுமையுடைய தெய்வ மகளிா பலரும கூடிசசீாமை விளஙகுகினற மலையிடமெலலாம ஆரவாரிககுமபடி ஆடுதறகிடமானது சோலை (முரு. 39-41). 'தினைககதிாகளில படியும கிளிகளைக கடியுமாறு குளிர், தட்டை ஆகிய கிளிகடி கருவிகளைக கொணடு பலமுறையும புடைதது, சூரர

மகளிரபோல நினற நீ யாரோ' என்று கூறித தலைவன, தலைவியின் சிறுபுறத்தைத தழுவினான (அகம. 32:5-9). 'நெடிய மலைசசாரலில உள்ள சூரர மகளிர போலப பெறுதற்கரியவள' எனத் தலைவியைக கருதினான தலைவன (அகம. 162:24, 25). தலைவியின முனகைகளைப பற்றிககொணடு தலைவன, சூரர மகளிரைச சுட்டிககூறிய சூள் மொழிகள அவளை வருத்தின (குறு. 53:1,6,7).

**சூரல் - 1. பிரமபு.** பரணமீது ஏறியிருநது மலைப் பககதநுச் சூரலாலே - பிரமபாலே - அழகுபெறப பினனிய தழல எனனும கருவி கொண்டு கிளிகடிதல (இநதசசூரல எனபது சூரறகொடியுமாம எனபர் நசசினாாககினியர்) (குறி. 41-44). சூரறகாட்டினை உடையது சாரல பொருந்திய மலைநெறி (அகம். 228 9). இணடஞ்செடிகள் சூரலோடு நெருஙகி வளாநதுளள வெளளிய அருமபுகளையுடையது குறுஙகாடு (அகம. 357.1,2). கடுவன, சூரற் கோலைககொண்டு மழைநீாக குமிழியைப புடைத தது (ஐங. 275:1-3).

2. **சூரைப்பூ.** தலைவியும் தோழியும் பறித்துக் குவிதத மலாகளுள் சூரலும - சூரைபபூவும - ஒனறு (குறி. 71).

**சூரலங்கடுவளி - சூறாவளி.** காட்டிலே சூரலங்கடுவளி - சூறாவளி - வீசுதலால முருஙகைப் பூககள் உதிாநதன (அகம. 1:16-19).

**சூல் - கருப்பம்.** 'நின் நாட்டில் இளைய பிடி ஒரு சூலில - கருப்பத்தில - பத்துக கன்றுகளைப பெறுமோ' என்று ஆய் அணடிரனை வினவிப் பாடுவர் உறையூா ஏணிசசேரி முடமோசியார் (புறம. 130:1,2). முகிலகள் கடல குறைபட நீரை முகந்துகொணடு, வேணடுமிடததே திரணடு பெரிய மலைபோலும தோறறததையுடையன வாயச சூல முதிர்நது மின முதலாகிய தொகுதி யுடனே கூடிப பெயது வளநதரும (புறம. 161: 1-5). நிறைநத சூலினையுடையது கடல (பதி. 11:2,3). நீரைச சொரியும் மழைததொகுதியுடன உயிாகளைக காத்தல வேணடி வலமாக எழுநது முழஙகும தணணிய மழைததுளியால நிறைநத சூலகொண்டது கருமுகிற கூட்டம (பதி. 24: 26-28). முகில படிநது முகததலால் நீர் குறையா மலும ஆறுகளின வரவால நீர் நிரமபிக கரை கடவாமலும அலைகளாக அசைதலையுடைய மிக நிறைநத சூலினையுடையது கடல் (பதி. 45:19-23). உயிாகளைப பாதுகாததலைச செய்வதோடு அஞ்சு தலைச செயயும் சிறப்பினையும் கரிய நிறத்தோடு பல தொகுதிகளை உடையனவாகவும் உள்ள வள மிகக, நிறைநத சூலகொணட மேகஙகள், வானத் தினகண எலலாப பொருளும் அதிரும்படி மினனி மிக்க முழக்கததோடு வானம முழுவதும் பரநது காாகாலததைத தெரிவிககும் (பதி. 81:1-5). கட லிலே முகநததனாலுணடாகிய நிறைவினையுடைய சூலகொணட பெருமையமைநத மேகம, வானில துளிகளை முற்படச சிதறிக கார்காலத்து முதற பெயலைச சொரிநததனால காடு குளிர்நது நறு மணமபெற்றது (முரு. 7-9) சோலையிடதது நிறகும கமுகினுடைய சூலகொண்ட வயிற்றையொதத பச்சைக குப்பிகளிலுளள கள்ளை உணடல (பெரு. 380-382). தலைச் சூலையுடைய மநதி, பரிககோற் காரர் சோர்நதிருககும செவ்வியைப பார்தது யானைக் குரிய கவளங்களைக கவாந்து தின்னும (பெரு. 393-395). முதறசூல மகளிர் பலிச்சோற் றோடு மயில்களைபபோல மெனமெல நடந்து செனறு, இறைவனைத் தொழுது, தேவராடடி வாயிலாகத தம பரவுக்கடனைச செலுததுவர் (மது. 607-610). கடலை முகநதுகொணடு நிறைநத சூலினையுடைய கரிய மேகம, மின்னலுடன் வல மாக எழுந்து செனறு ஒலிதது மழை பொழியும் (அகம். 43:1-8). நிறைநத சூலினையுடைய கரிய மேகங்கள் கார்காலததைத் தநது தஙகின (அகம். 134:2). குறுந்தொடி மகளிர் நெலலின வளைநத கதிரையறுத்துப் பசிய அவலாகக் குறறும உலக் கையின் விரைந்த இடியோசைககு அஞ்சிய, நிறைநத சூலினையுடைய வெணகுருகு வாழையின மடலில தஙகாமல், மாமரததினகண் குறுகப பறந்து செலலும் (அகம. 141:16-21). நிறைநத சூலுறற யாமை, அடுமபின கொடியை இழுததுக் கழியிடததே வெள்ளிய மணல் மேட்டின் பககததில் சோரதது, அதன்கண மறைவாக முட்டையிட்டுப புதைககும் (அகம். 160:3-6). சுர நெறியில் பசிய பாகற்கொடியின் சிவநத பழததை விருமபிக காட்டிலுள்ள நிறைந்த சூலகொணட மயிற்பெடை, ஊதுகொமபுபோல ஒலிக்கும் (அகம. 177:8-11). நிறைநத சூலினையுடைய இளைய பிடியினைத் தழுவிய களிறு, தன்மீது கனறு ஏறி யிறங்குமாறு படுததிருககும (அகம். 197:13-15). இளைய பிடி யானை தனது முதறசூலினை ஈன்று மூஙகிலைத தினறிருககையில தனனிடததே விருபபம மிகக களிறறியானை தடவிக கொடுக்க பகக மலையில துயிலும (அகம. 328.11-14). மூஙகிறகுழாயின வழி யாக வநது விழும நீரினை நிறைநத சூல கொள் ளும பெரிய சாலில அசைய முகநதெடுததுக கொணடு வநது தலைவி கொடிககு ஊற்றினாள்

(அகம். 383.9-14). பச்சைப்பாம்பின் சூல்முதிர்ச்சி போன்றது, திரண்ட கரும்பின் குவிந்த அரும்பு (குறு 35:2,3). ஊர்க்குருவியின் ஆண்பறவை, சூல முதிர்ந்த தன பெண் பறவைக்குக் கருவுயிர்த்தற் குரிய இடத்தை அமைக்கும் பொருட்டுக் கரும்பின் வெண்பூவைக் கொய்துகொண்டு வரும் (குறு. 85:2-5). 'காற்றோடு சோநது வந்த நிறைந்த சூல் கொண்ட கரிய மேகமே' எனத் தலைவி மேகததை விளிததல (குறு. 158:1-4). வாளை மீனின், நிறைநத சூலுடைய மடப்பம மிக்க பெண்வாளை தேமாவின உதிாந்த இனிய பழத்தை கவ்வியுண்ணுதற் கிடமானது குனறூர் (குறு. 164:1-3). பனனிரு திங்கள் கருவினைத தாங்கி நடககமாட்டாது பசசைப்புளியின சுவையை விருமபும் முதறசூலையுடைய மகளிரைபபோல மேகங்கள் கார்ப்பருவததே எழுந்தன (குறு. 287:3-8). பனைமடலில கட்டபபட்ட கூட்டிலிருநது முதற்சூலையுடைய அன்றிற பேடை பாதியிரவில துணையை அழைத்தல (குறு. 301:1-4). வானததிலே, நீர் மிகுநத நிறைநத சூலோடு தண்ணிய முழக்கத்தையுடைய மேகம் மினனொளியை வீசி மாலையில மழை பொழிந்தது (குறு. 314:1-3). நெடிய புன்னைக் கிளையிலிருககினற முதிர்ந்த சூலையுடைய வெண் குருகு அலையோசைக்கு வெருவும் (நற். 31:10,11). ஒழுங்குற அமைநது நிறைவுற்ற சூலையுடைய கரிய மேகம, மிக்க மழையைப பெயது ஒழிநத காாப்பருவ இறுதியில் ஓய்நதது (நற். 89:3,4). கடல நீரை உண்டதனாலாகிய நிறைநத சூலையுடைய கரிய மேகம் தான் தாங்கமாட்டாதே வளவிய மழையைப பெய்தது (நற. 99:6,7). சூல முதிர்ந்த இளமபிடி அறியாமையினால் தன வயிற்றுக்கரு அழிந்து புறமபோநது விழுமாறு, பெரிய மூங்கிலின முளைததெழுநத இலையிலலாத கொழுத்த முளையை மேயநதது (நற. 116:4,5). வானததில அதிரும இடிமுழககததுடன கதிரவனை மறைதத சூலையுடையமேகம் யாமத்தில பெரிய மழையைப பெய்தது (நற. 261:2-5). இரையை விருமபியும் நிறைநத சூலையுடைமையில் இயஙக மாட்டாத வருத்தததுடன் நெய்தல் நிலததுக் கழியை யடையாமல மருத நிலததுக் கழனியிலே தஙகியிருநத பேடைககு நாரைப போதது, கடல மீனைக கொண்டு போய்க் கொடுககும் (நற். 263:4-7). ஆணகாகை அடுமபின கொடியையுடைய வெண மணலபரப்பின் ஒருபுறம நிரமபிய சூலுடனே தஙகிய தன காதற் பேடைககு அயிரைமீனைத் தேர்நதெடுகக வேணடி, கழியின ஆழமான இடததைத துழாவும (நற. 272:1-6). தலைவி, தலைவனின சுற்றததார் சூழந்து ஓம்புகின்ற சிறந்த சூலுடையளாய மகவீனறு அவனது குடிககு உதவி, நெயயுடனே கலநதொளிரும சிறுவெணகடுகுகளை அரைத்துப் பூசிப் பாயலிலே படுத்திருநதாள் (நற் 370:1-4). நீண்ட மூஙகில உயர்நத நிழல மிகக மலையில முதிர்நத சூலினையுடைய வலிய பிடி கன்றை ஈன்று வருநதும (நற.393.1,2). 'நின்னை நயநது உறைகினற தலைவியின முதற சூலில் பிறநத சிறுவனது முறுவலைக காணடலை விடவும நீ பிரிந்து சென்று தேடும பொருள் இனிதோ' எனத தோழி தலைவனை வினவினாள் (ஐங.309). 'நின முதற சூலில தோனறிய மகள, சுரநெறியிலே தான விருமபிய காதலனோடு செனறனள்' எனத தலைமகளை இடைசசுரததுக கணடவா தாயககுக் கூறினா (ஐங. 386). யானை தன் காதறபிடிககு முதற்சூலால உண்டான வயாநோயின பொருட்டுக கருமபினை முறிககும (கலி. 40:26-28). கடுஞ்சூல கொணட பசு, தொழுவினுள கடடபபட்ட கனறுகுப பரிநது, விடிநத பினனும மேயபபோகாது சூழநது திரியும (கலி. 110:12-14). காலததில வருகினறசூல்மேகததை ஒககும திருமேனியையுடையவா திருமால (பரி. 4:7). விசுமபினிடததே பரநது காாகாலததை ஏறறுககொணட நிறைநத சூலையுடைய மேகமபோல இருணடு நீாபரநதது கடற பரபபு (பரி. 18:2,3). சூல முதிாநத மூஙகில, மலையொழுஙகைச சூழநது, அதன கல துணிபடுமாறு எறிநது, இடியினம ஆரவாரிகக மழைபெயது, புலியைக கொனற யானையின குருதி படிநத கோட்டின கறையைத தெளிவுபெறக கழுவியது (பரி.20:1-5).

2. முட்டை. 'கொடுவில எயினருடைய அரணகளிலே சென்று தஙகுவீராயின, நாய கடிததுக கொணாநத அககுமணி போலும சூல - முட்டை - உடைய உடுமபின பொரியலாலே மறைதத சோறறை மனைகள் தோறும பெறுவீா' எனப பெருமபாணர் ஆறறுபபடுததப பெறறனா (பெரு. 129-133).

**சூல்மகள் - கருப்பமுற்ற பெண்.** யானை தாககினாலும பாமபு தனமேல சென்றாலும் வலிய உருமேறு இடிததாலும சூலமகள் - கருபபமுறற பெண் அவறறிறகு அஞ்சி மீளாத மறமபூணட வாழ்ககையுடைய பாலை நிலததுக குடியினள் (பெரு. 134-137).

**சூலம் – மூவிலை வேல்.** தெளிநத ஒளியையுடைய சூலம் - மூவிலைவேல - ஏநதிய காலககடவுள் (சிவன) (பதி. க. வா. 11,12).

**சூலி** - சூலப்படை ஏந்திய கொற்றவை. 'நம்மைப் பிரிந்து தங்கியிருத்தற்கு வல்லவராகிய தலைவர் காரணமாக, பிளப்பையும் குகையையும் உடைய மலைப்பக்கத்தில் உள்ள வெற்றி பொருந்திய சூலிக்கு - சூலப்படை ஏந்திய கொற்றவைக்கு- பலிக்கடன் செலுத்துதலைச் செய்யோம்; கையில காப்பு நூலைக் கட்டோம்; புள் நிமித்தத்தையும் பாரோம்: அவரை நினைத்தலையும் செய்யோம்' எனத் தலைவி பிரிவாற்றாமல் உரைத்தாள் (குறு. 218).

**சூழ்ச்சி** - 1. **ஆராய்ச்சி**. 'பகைவர் பிழை செய்தக்கால் அப்பிழை பொறுக்குமளவல்லவாயின் அவரை யழித்தற்குச் செய்யும் சூழ்ச்சியது - ஆராய்ச்சியது- அகலம் உடையோய்' என்று பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனை விளிப்பர் முரஞ்சியூர் முடிநாகராயர் (புறம். 2:7,8). 'நின் தலைவனுடன் நீயும் இறக்கப் போ' என்று கூறாது, 'இறப்பைத் தவிர்க' என்று விலக்கும் பொல்லாத சூழ்ச்சியையுடைய பல்சான் றீரே' எனப் பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு சான்றோரை விளித்தாள் (புறம். 246:1-3). 'அன்னைக்கு' அறிவிப்பேமோ அறிவியேமோ என இருபாற்பட்டசூழ்ச்சி ஒரு முடிவுபட்டது' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 52:9-12). தலைவனுக்குப் பகற்குறியையும் இரவுக்குறியையும் மறுத்த தோழி, தலைவியிடம் வந்து, 'நன்னனது காவல் மரமான மாமரத்தை வெட்டி, அவனது நாட்டினுள் புகுந்த வஞ்சினமுடைய கோசரைப் போல வன்கண்மை அமைந்த சூழ்ச்சியும் சிறிது வேண்டும்' என்றாள் (குறு. 73:2-5).

2. **அறிவு**. நண்பர் கேடுற்ற போதும் அவரிடத்துக் கொண்ட நட்பினில் திரியாதவராய்ச் சென்று அவரது குறிப்போடு ஒழுகும் மாறுபாடில்லாத சூழ்ச்சி-அறிவு-உடைமையால கோசர், தம் நண்ப னான அகுதை என்பானைத் துன்பத்தினின்றும் காத்துக் காவல்மிக்க இடத்தே வைத்து அவனை நிலை நிறுத்தினர் (அகம். 113:1-5).

3. **நினைவு**. தனது அறிவின் ஆக்கத்திற்கு மாறா கிய கேட்டினை நினையாது ஆக்கத்தையே உணரும் சூழ்ச்சி-நினைவு-உடையவன் நன்னன் சேய் நன்னன் (மலை. 62,64).

**சூழி** - 1. **முகபடாம்**, சீரிய சூழி-முகபடாம்-உடையது யானை (மது. 43). புகரையுடைய முகம் மறையும் படி சூழியாற்பொலிவுற்ற போர்த்தொழிலிலே பயின்ற யானை (மலை. 225-228). சூழி அணிந்த யானையையுடைய நன்னன் (அகம். 15:10). அரை மலையாகிய மேகலையையும் அருவியாகிய சூழி யையும் உடைய பரங்குன்றமாகிய யானை (பரி. 21.14,15).

2. **உச்சி**. 'இவள் முலைகள் சூழியில-உச்சியில்- உள்ள மெல்லிய முகத்தால சிமிழினுடன் மாறு பட்டன' எனத் தாய், தலைவியின் பெண்மை வளர்ச்சியைக் குறித்து நோக்கினாள் (அகம். 315:-1-4).

3. **நீர் நிலை**. அசைகின்ற கதிர்கள் நிரம்பிக் கலங்கிக் கிடக்கும் சூழி-நீர்நிலை (புறம். 375:1).

**சூள்** - **ஆணை/உறுதிமொழி**. தன்னிடம் வந்த சான் றோர் அப்போது உண்ணாராயினும், 'நீவிர் உண் ணீராயின் யானும் உண்ணேன்' என்று தன் னுடனே சார்த்திச் சூள்-ஆணை-இட்டு, அவரை 'உண்மின்' என வேண்டிக்கொள்ளும் பெரிய புகழினையுடையவன் சாத்தன் (புறம். 178:3-5). அன்னை அறியினும் அறிவாளாக; அலர்கூறும் வாயினையுடைய சேரியினர் கேட்பினும் கேட் பாராக; இத்தலைவிக்கு நிகழ்ந்தது வேறொன்றும் இல்லை யென்பதை நீ அறியக்கூறி, புகாரிடத்துள்ள தெய்வத்தை நோக்கி யான நினக்குக் கடிய சூள செய்து தருவேன' எனத்தோழி, செவிலியிடம் அறத் தொடுநின்றாள் (அகம.110:1-5). கள்ளூரில இளையா ளொருத்தியின் அழகிய நலத்தைக் கவர்ந்துண்ட அறநெறியிலலாத ஒருவன், பினபுதான் அவளையறி யேன' என்று கூறிய முறையற்ற கொடிய சூளினை இருவர்க்கும் தொடர்புண்மையை உணர்ந்த சான்றாவாரை வினவியறிந்து, அவனைப் பெரிய மரத்தில இறுகப்பிணித்து, நீற்றினை அவனது தலையில பெய்த காலத்தே சிறப்புமிக்க அவையின் கண் பேராரவாரம எழுந்தது (அகம். 256:15-21). 'அழகிய மணிவிளக்கு ஒளிரும் திருச்சீரலைவாயில் அமர்ந்த போர்வன்மை மிக்க முருகனொடு பொருந்தி நீ செய்த சூளே எமக்குத் துன்பம தருவது' எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (அகம். 266.20,21). 'நீ இவளது தோள நலத்தைப் புதுவதாக நுகர்ந்த நாளில, கடலே சான்றாக நீ கூறிய சூளும பொய்யோ' என்று தோழி தலை வனை வினவி வரைவுகடாவினாள் (அகம. 320: 12-14). 'மகிழ்ந, மணலமேடுகள் பொருந்திய எம மூரில் உள்ள அகன்ற நீர்த்துறையிடத்தே நேரிய மூட்டுவாயையுடைய எம முன்கையைப் பிடித்துத் தெய்வமகளிரைச் சுட்டி நீ சொலலிய சூள எம்மைத் துன்புறுத்திற்று' என்று தலைவனிடம் தோழி

கூறினாள் (குறு. 53:5-8). 'தொண்டியன்ன எம் பெண்மை நலததைத்தந்து நின்னுடைய சூளைப் பெறறுககொண்டு செலவாயாக, எனறு தோழி பரததைமைத் தலைவனுக்கு வாயில் மறுததாள் (குறு. 238:4,5). 'பரத்தையரது பெண்மை நலததை நுகர்ந்து, அவரை விட்டு இங்கு வருவாயானால, அவா மகிழும் வண்ணம் நீ செயத சூள் மிக நனறா யிருக்கினறது' எனத் தோழி தலைவனை நகை யாடி அவனுக்கு வாயில மறுத்தாள் (குறு. 384). தலைவன தெயவததைச் சுட்டி அருஞ்சூள் செய்து தருவேன' என்றல் (நற. 386:5,6). யான நினனை விரைவில்மணந்து கொள்வேன்'என்று தலைவியிடம் தலைவன், தெயவத்தைச் சுட்டிக கூறும சூள் பலித் திடுக எனத் தோழியர் விரும்புவர் (ஐங். 8:3-6). தோழி, நமமூர் மருதப் பெருநதுறைக்கண் தலைவன நம ஆயததாரொடு செயத சூளினைக் கடனன்று என மறுபபானோ' என்று தலைவி தோழியை வின வினள் (ஐங். 31). காதற்பரத்தை தலைவனைச் சூள் வாய்த்தல தேற்றான பொய்ததல வல்லன என்றாள் (ஐங. 37). 'பழன ஊரனே, யாமுற்ற நோய்க்குக் காரணம நீயுறற சூளே' எனத் தலைவி கூறுதல் (ஐங். 53). 'நினது நல்ல நெற்றி பசப்பவும் நறுந் தோள் மெலியவும் பிரிந்து யாம் பொறுத்திருகக மாட்டோம' என நின்னிடததே மதிபபுறக் கூறி, நமமைப பிரிந்து நீட்டிததவராகிய தலைவர் செயத சூளை நீ மறந்து விட்டனையோ என்று தோழி தலைவனை வினவினாள் (ஐங். 227). 'தானுற்ற சூளினைக் காவாதவனாய்ப் பொய்த்த வனுடைய மலையாயிருந்தும் இது விளக்கம் மிகக அருவியை யுடையதாயிருககின்றதே' எனத் தலை வனது மலையைத தலைவி வியந்து பாடினாள் (கலி. 41:18-20). 'உன் தலைவன் தானே விருமபிச் சென்று அடைகினற பரததையர் இலலம ஏது மிலலை; இருககுமாயின அதனை உனக்கு மறை யேன' எனறு பாணன தன யாழை எடுத்து அத் தெய்வத்துடனே சார்த்திக காமக்கிழததியிடம சூளுற்றான (கலி. 71:13,14) 'பரத்தையரது முயககத் தால் வாடிய பூவோடே நீ எம மனையிடத்து வாராதே' என்று யான் ஊடியிருபபேனாயின், தன பொய்யாணைககு நாம் அஞ்சும் அச்சமே ஊட லுணர்ததும வழியாக ஊடலுணர்த்த வருபவ னுடைய பொய்ச்சூளுககு அஞ்சியான் அவனிடம் ஊடாதிருபபேன்' எனறு தலைவி தோழியிடத துரைத்தாள் (கலி. 75:18-21). 'தலைவனது பொய்ச் சூளால நமககு வருத்தம் வருமெனறு யான் அஞ்சு தலால் எனனெஞ்சு அவனிடத்துப புலவியை முழுதும் தாங்காது' எனபது தலைவியின் கூற்று (கலி. 75:27-29). நுந்தை வாயின் மாயச்சூளை மெய யெனத் தெளிநது கண்களில நீர் பரக்கும படியாக மயஙகுகினற நோய மிகுதலால், அககணகள் துயி லாத தாயமாககுரிய சில பகுதியை உண்பாய' என மகனைக கையிலே கொண்டு தலைவிபாலூட்டு வாள் (கலி. 85:26-28). 'பரத்தையருடைய மாலையை நின மாலையாக நினைந்து நீ அணிந்து வநத தப்பிறகு அஞ்சி யாம ஊடியதற்குக் கலங்கி நீ செய்யும் பொய்ச் சூள் வருததத்தைச செயயுமாயின அது தான் எமமேலனறிப பின் யாரமேல் வரும எனத தலைவி தலைவனிடம ஊடல தீர்நது கூறினாள் (கலி. 88:19-21). நின் பரத்தைமையை யாம நுண்மையாகக் கண்டமையால நீ செய்கினற பொயசசூள், நினக்குப் பண்டுபோல பயனதருவ தனறு' எனக் காமககிழததி தலைவனிடம கூறினாள் (கலி. 90:24). 'யான நீ நீஙகிய பின்னர், நீ செய்த செயகையும் அறிவேன்; நின சூள பொயயாதலும அறிவேன; இனி, அப்பரததையரிடமே செலவாய' எனறு தலைவனைக் காமக்கிழத்தி மறுததாள் (கலி. 91:9,15). 'மாயோளே, யான விருமபுதறகுரிய ராய் நினனைக காட்டிலும் சிறந்த மகளிர இம மண்ணுலகில இல்லாமையை நீ தெளிவாய்; திருமா லடியைத தலையினாலே வணஙகிக் கையினாலே தொட்டுச் சூளுறறேன' என்று முலலைத தலைவன தலைவிக்கு மொழிநதான் (கலி. 108:53-56). 'பலவும சூளுரைததுத தேறறித் தெளிவிததவன எனனை அணைதது முயங்கினான்; பினனர், அததெளிவு பொய்யாகுமபடி கைவிட்டான' என்பது பிரி வாறறாத தலைவியின கலககமொழி (கலி. 147:23-25). காணகினறவர் மனம கொள்ளும்படி சூளுறற மனததையுடையவன, அதனை முடிவு போககாது பொயதது விடுவானாயின தானே தேய்வான்; அனறியும அததீவினை மறுமையில தொடர்நது வாளின வாயபோல கூர்மையுடையதாய் அவனை நுகாவிககாமல் ஒழியாது' எனத தோழி தலைவ னிடம கூறி வரைவு கடாவினாள் (கலி. 149:10,11). 'காதலையுடையகாமம எப்பொழுதும ஒருதனமை யிலே நிறகுமோ? சிலர்பால விரைந்து சுருஙகுத லாலும சிலர்பால விரைநது பெருகுதலாலும அது வையைப் பெருக்குப போனறதனறோ? அதுபறறி நீ வேண்டாதே ஆணையிட்டுப பிழையை உடையை யானாய; இனிச் சூளுறாதே' என்று காதறபரததை தலைவனிடம கூறினாள் (பரி. 6:71-74). பரததைய ரிடததுச் சென்று மீண்ட தலைவனொருவன தலை வியை நெருங்கியபோது 'அவள் ஊடலுறறு, இப்பொழுது நீ அயலமகளிர் மணம் வீச வநதிருக கின்றாய்; முனனர் எனபால் செயத பழைய சூளினை இனி நீ தவிர்' என்றாள். அதுகேட்ட அவன பல ஆணைகளையும செய்ய அவறறை

யெலலாம ஏலாது அவள், 'நீ நின சூளை விடு' என மறுததாள். உடனிருந்த தோழி இடையிட்டு நீ முருகனமேல சூளைச் சூளுறுவாயாயின நின்னை அருளில்லாத தெய்வமும் அம முருகனின வேலும வருததும்; அதுவேயுமன்றிப பார்ப்பாரது அடியைத தொட்டு ஆணையிடினும முருகனுடைய மயிலையும வேலையும் நோககிச சூளுறாதே ஐயனே, சூளுறல வேணடினால, வணஙகப்படும் குனறோடு வையைமணலையும் குறித்துச் சூளுறா தொழிவாயாக' எனறாள். அதற்கு அவன் 'இரு தலைப பறவையின ஓருயிர் போன்ற எமக்குள் பிரிவும கூட்டமும ஏது? நீ அததனைக கருதாமல் எனனை மறுதது, 'நீர் உரைபபது இயலபலலாத கடுஞ்சூள் எனகினறாய். அதன காரணமாக இறைவன என்னை வருத்தாதிருக்க நீ சென்று அவ னடியை வணஙகி ஆறறுவாயாக' என்றான். உடனே தோழி, 'ஆற்றுதறகு எனனைச செலலச் சொலகினறாய; இதனால நின பொய்ச்சூள் தரும் துனபம நின்னை வருத்துதலை யாம அறிந்தோம; முருகன சினங்கொள்ளுமுன் என்தோழி கோயில் மணியின நாவையசைத்துத் தலைவணங்கி நின் பொயச சூளால வரும் துனபததைத தன அருள் மொழியால ஆறறுதலைக காண்பாயாக' எனறாள் (பரி. 8:47-89). வையைப் புனலாட்டில தலை வனை வேறொருததி பார்ககககணட தலைவி அவனிடம் ஊடலுறறு, 'உனனை ஒருததி பார்த் தாள்; அவள உனனால பொய்ச்சூள் கூறப்பட்ட வள்' எனறாள். அதறகு 'எனனைப பார்த்தவளை யானறியேன்' எனறு பணிந்து மெய்ச்சூள் செயயும் தலைவனை அததலைவி, 'இதுவும் பொய்ச்சூளே' எனறு குற்றப்படுமாறு கூறினாள (பரி. 12.62-65).

**சூளினன்** - சூளுரைப்போன். 'ஊரனே, நினனைக் காட்டிலும நின் பாணன் பொயயன்; பல சூளினன - சூளுரைபபோன்' - எனத் தலைவி தலைவனிடம கூறினாள் (ஐங. 43:3,4).

**சூளை** - மட்பாண்டம் சுடப்படும் காளவாய். இருள் ஓரிடத்தே செறிந்து நினறாறபோனற நிறமுடைய திரண்ட புகை விசுமபினகண தங்கும சூளையை - காளவாயை - உடையவன கலம் வனையும வேட் கோ (புறம். 228:2-4)

## செ

**செக்கர்** - செந்நிறம். விளககமுண்டாக இடப்பட்ட நாடுசுடு நெருப்பினது ஒளி, கதிரையுடைய ஞாயிற் றினது செக்கர் - செந்நிறம் - போலத தோன்றுதல (புறம். 16:7, 8). வெயிலை உடைய கதிர்கள் ஒளி மழுங்கிய ஞாயிற்றை உடைய செக்கர் வானததை ஒதத, சிவந்த ஒள்ளிய பூத்தொழிலையுடைய சேலைகள் (மது. 431-433). செக்கர் நண்டின ஆழ மான வளைகளைத் தோண்டி விளையாடித தலைவி தலைவனோடு தங்கினாள் (அகம். 20 4, 10). கதிர் வெப்பம் குறைநத, செந்நிறத்தினதாய ஞாயிற்றையுடைய செககர் வானம பரவிய காலததே வினைமுற்றித் தலைவன் மீண்டான் (அகம். 184:15-19). அலைகள் ஒலியடங்கவும் மீன் படகுகள் வேட்டமொழியவும செக்கர் (செவ் வானம்) தோன்றியது (அகம். 260:5, 6). குருதி படிநத புலால நாறும பெரிய சிறகினை உடைய ஆண் பருந்தினது, கிளையுடன் கூடிய கூட்டம், பசிய ஊனின மிகுதியைத் தெரிவிததுப பறந் தெழுந்து, செக்கா வானம் போல விசும்பினை அழகு செய்யும (அகம். 381:10-13). 'மாலையே! நீ தான், ஊழிமுடிவாகிய காலததிலே கூறறுவன் விளக்கம் அமைந்த செககா வானிடததுத தோன்றிய நுதியையுடைய பிறையைத் தனக்கு எயி றாககிகொண்டு, பலவுயிரையும சேரக் கோடற்குச் சிரித்தாற்போலும், அஞசததக்க கடிய மாலையா யிருந்தாய' எனபது தலைவி கூற்று (கலி. 120:7-9). உலகம கொண்டாடும்படியாகத தகைமையினை உடைய மதி தோனறச் செககர் வானத்தைக் கொண்ட அந்திக்காலம தோனறியது (கலி. 126:2, 3). செககரோடு அழகிய புள்ளிகளையும உடைய தேர் உருள் போனறது ஆண அலவன் (கலி. 146: 23).

**செகில்** - 1. தோள். ஏனையோர் நாடுகளினும் சிறந்த நன்னாட்டைச் செகில் - தோள் - இடததே கொணடு கரிகாலன் நாள்தோறும வளர்ததான (பொரு. 137, 138).

2. ஏறு. சென்று தழுவுவாரைக் கோட்டிடத்தே சாமபடிக் குததிப் பின்பு தழுவுவாரைப் பெறாமல் நினற சிவநத நிறத்தையுடைய செகில் - ஏறு - உயிர் குறைகினற நாளிடத்தே ஒருவர் பினனே சென்று அவரது உயிரை உண்ணும் கூற்றுவனை ஒக்கும் (கலி. 105:35-38).

**செங்கட்காரி** - வாசுதேவன். திருமாலைச் செங்கட் காரி - வாசுதேவனே - என விளித்துப் பராவுதல் (பரி. 3:81).

**செங்கட்செல்வ** - சிவந்த கண்ணையுடைய செல்வனே, சினத்தாலனறி இயலபாகவே செங்கட் செல்வ -

செங்கண்ணினையுடைய செல்வ - எனத் திருமாலைப் பாடுவர் (பரி. 4:10).

**செங்கதிர்ச் செல்வன் - சிவந்த கதிர்களையுடைய கதிரவன்.** மழை பெய்யாதொழிந்த பாலை நிலத்தின் கண் அந்நிலத்தின தெய்வமாகிய செங்கதிர்ச் செல்வன்-சிவந்த கதிர்களையுடைய கதிரவன்-காய்தலானே நிலம் பிளவுபட அதனால் உலகம் மிக வருந்தித் துன்புற்றது (நற். 164:1-3)

**செங்கழுநீர் - குவளை.** மகளிர் கண்ணைப்போலும் ஒளிபொருந்திய அழகிய செங்கழுநீர் - குவளை - பூக்களை, ஊசியால் கோத்துச் சுற்றிக் கட்டிய மாலையன் தலைவன் (அகம். 48:8,9) வயலில் அரும்பு வாயவிழ்ந்த ஒள்ளிய செங்கழுநீர் மலர் போன்றது கண் (அகம். 269:23-25),

**செங்களம் - (குருதியால் சிவந்த) போர்க்களம்.** 'நின் மகன் புறம்கொடுத்து மாண்டான்' என்று அறியாதார் கூற, 'அஃதுண்மையாயின், அவன் வாயவைத்துண்ட என் முலையை அறுத்திடுவேன்' என்று வஞ்சினமுரைத்த மறக்குடித்தாய வாளைக் கையிலேந்திச் செங்களத்தே - போர்க்களத்தே - சென்று பிணங்களைப் பார்த்தவாறு வருபவள், விழுப்புண் பட்டுச் சிதைந்து கிடந்த மகனைக் கண்டு ஈன்ற பொழுதிலும் பெரிதுவந்தனள் (புறம். 278). செங்களம் புகும் விருப்பினால், செந்தினையைக் குருதியொடு கலந்து தூவிப் பலியிட்டு, முரசத்தின் கண்ணில் குருதி பூசி வீரர் முரசுமுழக்குவர் (பதி. 19:5-8). களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் செருப்பல செய்து, செங்களம் வேட்டார் (பதி. ப. 4:11). யானையுடன், புலி பொருதலால், குருதியால் குழைவுற்ற செங்களத்தின் புலால் நாற்றத்தை, வேங்கை மலர்களின் நாற்றம் காட்டு மல்லிகை மலர் நாற்றத்தோடு கூடி மாற்றும் (அகம். 268:1-5). முருகன் செங்களத்தே எதிர்த்த அவுணர்கள் சாயுமாறு கொன்று வீழ்த்தி அவரைத் தரையோடு தேய்த்து இல்லையாம்படி அழித்தார் (குறு. 1).

**செங்கண்ணனார்-புலவர்.** சிவந்தகண்களையுடையவர் என்ற முறையில் இவர் செங்கண்ணனார் எனப் பெயர் பெற்றாரேனும். வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பும் இவரை உறுப்பால் பெயர்பெற்றவர் வரிசையிலேயே காட்டுகின்றது (புலவர்களின் பெயர்வகை). இவர் பாடியதாக நற்றிணையில் 122 - ஆம் பாடலொன்றே காணப்படுகின்றது. மற்று, மதுரைச் செங்கண்ணனார் என்ற பெயரோடே காணப்படுகின்ற அகப்பாடலையும் (39) இச்செங்கண்ணனார் பாடலாகக்கொண்டு அப்பெயரால் கூறப்படுபவரும் இவரே என்பர் பி.நா. அவர் கருத்தைப்பின்பற்றி அவ்வகப்பாடலையும் இவர் பாடலாகுவர் வையாபுரிப் பிள்ளை (ச. இ). ஆயினும்,இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார், காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார், தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் என்று வேறு மூவரும் இருக்க, மதுரைச் செங்கண்ணனார் ஒருவரை மட்டும் இவராகக் கொள்வதற்குத் தகுந்த ஏது காணப்படவில்லை. சிறைப்புறத் தலைவன் கேட்கும் நிலையில் தோழி தலைவிக்கு உரைப்பதாய் அமைந்துள்ள இவரது பாடல் (நற். 122). வரைவு கடாவலுக்கு நயமான காட்டாகும். தினையறுவடையைக் கூறிப் பகற்குறியையும் இடி முழங்கும் நள்ளிருளைச் கூறி இரவுக்குறியையும் மறுத்து அலரெழுச்சியையும் அன்னையின் மதியொடு கூடிய செய்கையையும் கூறிக்களவு வெளிப்பாட்டை உணர்த்தும் தோழி, முல்லை மலருகின்ற கார்காலத்தைக் கூறி வரையும் பருவத்தையும் குறிப்பிக்கும் திறமை இவர் பாடலில் அழகுற அமைந்துள்ளது. 'இவற்றின் மேலும், இனிக் களவொழுக்கம் பொருந்துமோ என்பதை நீயே ஆராய்ந்து கொள்' எனத் தலைவியிடம் கூறுவது போலத் தோழி, தலைவனிடம் கூறும் நுட்பமும் இவர் பாடலின் ஒட்பமாகும்.

**செங்காந்தள் - சிவந்த கோடற்பூ.** பெரிய இதழையுடைய ஒள்ளிய - செங்காந்தள் பூவையும்- சிவந்த கோடற்பூவையும் - பிறவற்றையும் தலைவியும் தோழியும் பாறையிலே குவித்தனர் (குறி. 61,62). நெருப்பினை ஒத்த ஒளிரிய செங்காந்தளினது, புதிய முகையைத் தசையாகக் கருதி எடுத்த பருந்து தசையில்லாத படியாலே தின்னாமல் சிந்திய பல இதழ்கள் பரந்த பாறைகள் வெறியாடுகின்ற களத்தை ஒக்கும் (மலை.145-150). நாளை பகற்கண், மந்திகளும் ஏறி அறியமாட்டாத மரங்கள் செறிந்த காட்டில், ஒள்ளியசெங்காந்தள் மலர்ந்த அவ்விடத்தே, தலைவியோடு இன்புறும் துயிலைப் பெறுவாய்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 92:7-9, 12,13). பாம்பினது படம் ஒடுங்கியது போலக் குவிந்து, கீழ் காற்றினால் வீழ்த்தப்பெற்றுக் கிடக்கிற ஒளிபடைத்த செங்காந்தள் மலர்கள், பாறையின்மேல் குவிந்து கிடக்கும் (குறு. 185: 4-7). போரிட்ட யானையினது புள்ளிகளைக் கொண்ட முகத்தைப்போல மன்றத்திலுள்ள பொற்றைக் கல்லின் மேலே காணும் ஒள்ளிய

செங்காந்தள் மலர்கள் பல ஒருங்கே உதிர்ந்து கிடக்கும் (குறு284:1-3). மலையிலுள்ள செங்காந்தள் மலர்களைக் கொய்து முருகவேள் போர்க்குச் சூடும் கண்ணியாக அமைத்துச் சார்த்தி அவனை வழிபாடு செய்தல் (நற். 173:2,3). யானையின் முகத்திலுள்ள கோடுபோல, அரும்புகள் பொதிந் தனவெல்லாம் மலர்ந்த ஒள்ளிய செங்காந்தள், வாழையையுடைய சிலம்பின்கண் மணம் கமழ்ந் தது. (நற். 176:5-10).

**செங்காய்** - பழுக்கும் பருவத்துள்ள காய். வன்னிலத்தில் பசிய குலைகளையுடைய ஈந்தினின்றும் அறுபட்டு உதிர்ந்த செங்காய்களின் - பழுக்கும் பருவத்துள்ள காய்களின் - வித்துக்களுடன் கூடிக் கிடந்தன (அகம். 21:19-21). களரி நிலத்தில் மேலிடமெல் லாம் பசுங்காய் நிறமாறிச் செங்காயாகிப் பின்னர் கருங்களியாய் உதிர்கின்ற, கனியை உடைய ஈத்த மரங்கள் உள்ளன (நற். 126:1,2). ஈந்தினது சிலம்பி நூலால் மூடப்பட்ட செங்காய் துகில்பொதி பவளம் போன்றது (ஐங். இ. 2).

**செங்காரி** - சிவந்த கரிய ஏறு. செங்காரி - சிவந்த கரிய ஏறு-தன் கொம்புகள் படுதலை மார்பிலே ஏற்றவர் களை, கொம்புகளாலே படும்படி குத்தி மேனோக்கி நிற்றல் (கலி. 105:39,40). 'ஒள்ளிழாய், தன்மேல் மிக்குச்சென்ற, செங்காரிக் கோட்டிடையே, இற்றை நாள் தலைவன் செல்ல, என் நெஞ்சும் உடன் சென்றது' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 105:67-69).

**செங்குணக்கு** - நேர்கிழக்கு. செங்குணக்காக - நேர் கிழக்காக - ஓடும், கலங்கலாகிய நிறைந்த வெள் ளத்தை உடையது காவிரி (பதி. 50:5,6). செங் குணக்கு ஒழுகும் அந்தண் காவிரி (அகம். 76:11,12).

**செங்குரலி** - கருந்தாமக்கொடி. ஒளி பொருந்திய செங்குரலியோடு - கருந்தாமக்கொடியோடு - கூடிய நீர்நிலை கலங்குமாறு பாய்ந்து நீர்நாய் வாளை மீனைக் கவர்ந்தது (புறம். 283:1, 2). தலைவியும் தோழியும் பறித்துக் குவித்த மலர்களுள் சிறிய செங்குரலியும் ஒன்று (குறி. 82).

**செங்குவளை** - குவளை. ஆடுகோட்பாட்டுச் சேரலா தனின் தேவி ஊடலால் அவன்மேல் எறிவதற்கு ஓக்கிய சிறிய செங்குவளை - குவளை - மலரை அவன், 'ஈ' என இரப்பவும் ஈயாளாய், ஊடல் தணியாமல், நீ எம்பால் அன்புடையை அல்லை' எனக் கூறிப் பெயர்ந்தனள் (பதி. 52:21-24).

**செங்கொடுவேரி** - செங்கொடு வேரிப்பூ. தலைவியும் தோழியும் பறித்துக் குவித்த மலர்களுள் செங் கொடுவேரியும் ஒன்றாகும் (குறி. 64).

**செங்கோல்** - 1. செவ்விய அரசாட்சி. அம்பு தங்கும் காவலையுடைய அரணுடனே அறந்தங்கும் செங் கோலை - செவ்விய அரசாட்சியை - உடையவன் மாந்தரஞ்சேரல் இரும்பொறை (புறம். 20:16,17). அறக்கடவுள் மேவி ஆராய்ந்தாற்போன்ற செங் கோலான் ஆராயும் ஆராய்ச்சியை உடைய நீதியை வேண்டுங்காலத்துச் செவ்வி எளியோர், இவ் விடத்துத் துளி வேண்டுங்காலத்து மழை பெற்றவ ராவர் எனக் கிள்ளிவளவனுக்கு வெள்ளைக்குடி நாகனார் அறிவுறுத்துவர் (புறம். 35:12-16). புலி பாதுகாக்கும் குட்டிபோலக் குறைவில்லாத செங் கோலால் குடியைக் காப்பவன் கிள்ளிவளவன் (புறம். 42:10,11). கன்றை மேவிய ஆனிரை தாம் மேய்ந்த காட்டிடத்தே பிறிதொன்றால் ஏதமின்றிக் கிடப்பவும், பாலை வழிப்போவார் தாம் வேண்டிய இடத்தே தங்கவும், களத்தின்கண் நிறைந்த நெற் பொலி காவலின்றியே கிடப்பவும், எதிரில் நின்று தடுக்கும் பகையைத் துரந்த நிலம் கலங்காத செங் கோலினை உடையவன் அதியமான் எழினி (புறம். 230:1-6). சதுக்கப் பூதரைத் தந்து நிறுவிச் சாந்தி வேட்டதோடு, மன்னுயிர்களைக் காத்த, மறுவில் லாத செங்கோலினையுடையவன் இளஞ்சேரல் இரும்பொறை (பதி.ப. 9:13-17). குற்றமின்றி, அறத் தோடு கூடிய வழியை உலகம் அறிதற்குக் காரண மான செங்கோலையுடையவன் சோழன் கரிகாற் பெருவளத்தான் (பொரு. 230-231). மறத்தைப் போக்கி அறத்தை விரும்பின செங்கோலினை யுடையவன் பல்வேல் திரையன் (பெரு. 36). வீரம் மிக்க படை களையுடைய பேரரசருள்ளும், அறத்தினைக் கைக் கொண்ட செங்கோலாட்சியுடையவன் பசும்பூண் பாண்டியன் (அகம். 338:2-5) 'முறையுடைய அரசனது செங்கோன்மையுடைய அறங்கூறவையத்தில், யான் தலைவியைக் குறித்து வினவினால் இத்தோழியின் மறுப்பெல்லாம் எவ்வாறாகுமோ' எனத் தலைவன் குறைமறுத்த தோழி கேட்பக் கூறினான் (குறு. 276:5,6). செங்கோல் முறைப்படி ஆட்சி செய்தவன் குட்டுவன் (ஐங். 178:2,3). தலைவன் அறத்தை விரும்பிய செங்கோல் மன்னனாவன் (ஐங். 290:1). 'நினது செங்கோலினுடைய உயர்ந்த நடுவு நிலைமை தப்பாமையை உலகம் புகழ்ந்து கூறும்; அச்செங்கோலினுடைய இனிய செய்தொழிலுக்கு வேறாகிய கொடுந்தொழிலின்கண்ணே இவள் அகப்பட்டாளோ எனத் தோழி தலைவனிடம் தலைவியைக் குறித்துக் கூறினாள் (கலி. 99:11-13).

குடிமக்களைப் பாதுகாக்கும் செங்கோலான் படை விடவிடப் பகைவர் நீங்குதல (கலி. 130:19,20).

2. நேரிய கோல். செங்கோல் - நேரிய கோல் (அகம். 60:2;220:16, 337:13; குறு. 1.2,272:6, நற். 164.6;303:9).

3. சிவந்த தண்டு. செங்கோல்-சிவந்த தண்டு (அகம். 34.5;121:7;127:2: குறு. 363:12; நற். 57.8).

**செச்சை - 1. ஆட்டுக் கிடாய்.** வெள்யாட்டுச்செச்சை-கிடாய் - போல இளையர் இருத்தல் (புறம. 286:1,2).

2. வெட்சி. முருகன் செச்சை - வெட்சி - மலர்களா லான கண்ணியனாவன (முரு. 208). ஒரு பக்கத்தே, செச்சைக் கண்ணியனாகத் தலைமகன் வந்தான் (அகம். 48:10).

**செஞ்சாந்து - சிவந்த சந்தனம்.** பொன்னாற்செய்த தொடியினை உடைய பிள்ளைகள் ஓடிவந்து ஏறி விளையாடுகையினாலும், மெய்ம் முழுதுமணிந்த அணிகலன்களையுடைய மகளிருடைய தாமரை முகைபோலும் முலைகள் புணாதலாலும செஞ் சாந்து - சிவந்த சந்தனம - அழிந்த மார்பினை யுடையவன திருமாவளவன் (பட். 295-299). மகளிர் முலைகள் பாய்தற்குரிய மார்பில செஞ் சாந்து பூசி, வரிந்து புனைந்த விலலை உடைய னாய்த் தலைவன தோன்றினான (அகம். 48:11-14). தலைவன மலையிலிருந்து பெற்ற செஞ்சாந்தினை அணிந்தவன (குறு.321:1).

**செஞ்சோற்றுப்பலி - குருதி கலந்த சோற்றுப் பலி.** மரச் சோலைகளில இருக்கின்ற குடிமக்களிடத்தில செஞ் சோற்றுப பலியை - குருதி கலந்த சோற்றுப் பலியை - கருங்காக்கை பெற்று வெறுத்தது (பொரு. 181-184).

**செஞ்ஞாயிறு - செங்கதிரோன்.** 'நீயே, கரிய கடலின் கணணே ஓங்கி எழுகின்ற செஞ்ஞாயிற்றினது ஒளியை உடையை' என இளஞ்சேட்சென்னியைப் பரணர் புகழ்வா (புறம. 4:15,16). 'சோற்றை ஆக்கும நெருப்புடனே, செஞ்ஞாயிற்றினது வெம்மையயல்லது, வேறு வெம்மையறியார் நின குடைநிழற்கண வாழ்வோா' என யானைக்கட்சேய மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் குறுங்கோழியூர் கிழார் போற்றுவர் (புறம. 20:7-9). நெல்லை அரியும பெரிய உழவா, செஞ்ஞாயிற்றினது வெயிலை வெறுப்பின தெளிந்த கடலதிரையின் மேலே பாய்வர் (புறம. 24:1-3). செஞ்ஞாயிற்றினது வீதி யும, அஞ்ஞாயிற்றினது இயக்கமும் அவ்வியக்கத் தாற் சூழப்படும பார்வட்டமும இவற்றை ஆங் காங்குப் போய அளந்து அறிந்தவா போல, நாளும இத்துணை அளவையுடையனவென்று சொலலும் கலவியுடையோரும உளா (புறம. 30:1-6). செஞ்ஞாயிற்றிடத்தே நிலவு வேணடினும், வெண திங்களுள் வெயில வேண்டினும வேண்டியது விளைக்கும ஆற்றலை உடையவன சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (புறம. 38:6-8). பகலைச் செய்யும் செஞ்ஞாயிறும், இராப பொழுதைச் செய்யும் வெண திங்களும் குற்றமற்றுத் தோன்றி விளங்க உலகம ஆண்ட உயர்ந்தோா மருகன் தலையாலங்கானத்துச செருவென்ற பாண்டியன நெடுஞ்செழியன (மது. 7-9,23).

**செண் - கொண்டை.** 'பெரிய ஒப்பனையாற பொலி வுற்ற செண் - கொண்டை - அசைதலையுடைய முதுகினைத் தாம பாராட்டிய காலத்தினையும தலைவர் நினைக்கவிலலை' என்பது தோழியின கூற்று. (அகம. 59.13-15).

**செண்ணிகைக்கோதை - தலைக்குச் சூட்டும மாலை.** இடுசுடர் பரந்த கொடி மினனுப்போல, கண ணிறகு ஒளிவீசித் திகழும பொற்றகட்டினை இடை யிடையே இழைத்தியாத்த செண்ணிகைக் கோதை-தலைக்குச் சூட்டும மாலை-கூந்தலோடு அசைந்தது (பரி. 21:54-56).

**செதுக்கண் - ஒளிமழுங்கின கண்.** 'நெய காயகின்ற உலையின்கண் சொரியப்பட்ட ஆட்டிறைச்சியினது பொரியலைப் புது மாந்தருடைய செதுக்கண - ஒளி மழுங்கின கண - நிறையுமாறு முனபு உணடாக்கினாய்; இப்போது அது கழிந்ததே' எனத் தலைவன மறைந்தபோது அவன மனையை நோக்கி ஆலூா மூலங்கிழாா் கையறுப பாடினாா (புறம. 261:1,8-10).

**செதுக்கு - வாடற்பூ.** தெய்வத்திற்குத் தூவின செதுக்கு - வாடற்பூவை - உடையது முற்றம (பெரு. 338).

**செதுக்கை நீழல் - குறைந்த நிழல்.** செதுக்கை நீழலை - குறைந்த நிழலை - உடையது கள்ளியின அடி (அகம. 151:10-12).

**செதுகால் - சோர்ந்த கால்.** முதுமை வாய்த்தலை யுடைய பெணடின குடில செது காலினை - சோர்ந்த காலினை - உடையது (அகம. 63:14).

**செதுகாழ் - சோர்ந்த விட்டம்.** முதிய தூண்களை யுடைய அம்பலத்தில் புகுந்த பருத்த காலினை யுடைய யானையின் முதுத உராய்தலால செது காழ் - சோர்ந்த விட்டம் - வீழ்ந்தது (அகம். 373: 3, 4).

**செதும்பல் - சேற்று நிலம்.** பாலைநில வழியில் பெரிய களிறு மிதித்தேகிய அடிச்சுவட்டில் புலிகள் அடி வைத்து நடந்துசென்ற செதும்பல - சேற்றுநிலம் - ஆய ஈரமுடைய வழிகள் காணப்பட்டன (அகம். 155.11, 12).

**செதும்பு - சின்னீர்.** இளவேனிற்காலத்தே நுரைகளை யுடைய இனிய செதும்பு - சின்னீர் - வந்து ஆர வாரிக்கும (கலி. 48:18).

**செதுமொழி - பொல்லாத சொற்கள்.** நூல்வல்ல ஆசிரிய ராலே செதுமொழி - பொல்லாத சொற்கள் - செவிகளில் புகுதாமற் போக்கப்பட்டன (கலி. 68·2, 3).

**செந்திமுதல்வன் - செந்தில் முதல்வன் (முருகன்).** 'செந்தி முதல்வனே' என முருகனைப் போற்றுவா (முரு. வெ. 7:1).

**செந்திவாழ்வு - செந்தில் வாழும் முருகன்.** 'வானோர் களுடைய கொடிய வினையைத் தீர்த்தருளும செந்திவாழ்வே' என முருகனைப் பாடுவர் (முரு. வெ. 5:3, 4).

**செந்தில் - திருச்சீரலைவாய்.** தாழ்ந்த நீரை உடைய கடலின்கண் வெளிய தலையை உடைய திரை யலைக்கும் செந்திலிடத்து-திருச்சீரலைவாயிடத்து- நெடிய முருகவேள் நிலைபெற்றுள்ளார் (புறம். 58: 17-19).

**செந்தினை - தினைவகை.** சிவந்த போர்க்களத்தே செல்லும் விருப்பத்தால கூலங்களுள் ஒன்றாக நிரம்பிய நிறம்பொருந்திய செந்தினையை - தினைவகையை - குருதியொடு கலந்து பலி யிட்டனர் (பதி. 19:5,6). சிவந்த நிறத்தினை யுடைய பூக்களையும தூவி அச்சம வரும்படி குருதி அளைந்த செந்தினையினையும் பரப்பி, குறமகள் முருகாற்றுப்படுத்தினள் (முரு. 241-244). அழகிய செந்தினையினைக குருதியொடு தூவி முருகாற்றுப் படுத்துதல் (அகம். 22:10,11). பழங்கொல்லையாகிய மேட்டு நிலத்தில தழைத்த கொழுத்த செந்தினையின உயர்ந்து வளைந்த பெரிய கதிரை உண்ணப் பன்றி நெருங்கியது (அகம. 88:1-4). பசிய தாளினையுடைய செந்தினை யின் வளைந்த கதிர்களையுடைய பெரிய கொல்லை யில கிளியைத் தலைவனும் தலைவியோடு சேர்ந்து ஓட்டினான் (அகம. 242:4,5). அன்னை நல்ல நிறம் வாய்ந்த செந்தினையை நீரொடு தூவி முருகனைப் பராவினள் (அகம். 272:14,15). செந்தினையின் நீண்டு வளைந்தாற்போன்ற, வளைந்த தலையினை யுடையது குதிரை (அகம. 400:8,9). கருமையைப் போன்று விளங்கும் அடித்தண்டையும்-பசிய தாள் களையுமுடைய செந்தினையின், பெண்யானையின் வளைந்த கைபோன்ற, பால் நிரமபிய, குறட்டைப் போல வளைந்த, மணிகள் நிறைந்த, பசிய கதிர்க் குலைகளில கிளிகள் படிந்தன (குறு 198:2-5) மக ளிர், பாறையிடத்துச் செந்தினையைப் பரப்பிச் சுனையிடத்து நீராடுகையில, குரங்குள் அத்தினை யைக கவர்ந்தன. (குறு. 335·1-4). ஏனலாகிய செந் தினையின் பால் நிரம்பிய கதிர்களைக் கிளிகள் கவரும் (நற். 288.8,9). குறமாக்கள் எறிந்த தொண டகச் சிறுபறையின் ஓசை, பக்கத்தே உள்ள பசிய அடித்தண்டினையுடைய செந்தினையில் வந்து படியும கிளியினை ஓட்டும் (நற். 104:4-6). பெரிய மலையின பக்கத்தில், தலைவியின ஐயன மார் உழுது விதைத்த கரிய அடித் தண்டினையு டைய செந்தினையின கதிர்கள் கொய்யப்பட்டன (நற. 122.1,2). புலி, களிற்றினைத் தொலைத்து முழங்கும் ஒலியினைக் கேட்டு முகிலின இடிமுழக்கம் என்றெண்ணிக் கானவர் புலர்த்தப் போகட்ட செந்தினையினைத் தொகுப்பர் (நற். 344:9-11). யானையினது கைபோல வளைந்து தலைசாய்ந்த கதிர்களையும் பசிய அடித்தண்டினையும உடைய செந்தினையைக் கிளியின் கூட்டம் நெருங்கி வந்து உண்ணும் (நற். 376:1-4).

**செந்தொடை - செவ்விய அம்பு** (குறிபிழையாத அம்பு) செந்தொடை - செவ்விய அம்பு - பிழையாத தறு கண்மையை உடையவர் மறவர் (புறம். 3:20). ஆண்குரங்குகள் சிலை மரத்தால செய்த வில்லை யுடைய கானவரது செந்தொடைக்கு அஞ்சி, மலைச் சாரலிலே பாய்ந்து செல்லும் (குறு. 385:1-4). துவராடையினையும செந்தொடையினையும உடையவர் மறவர் (நற். 33:6). தமதொழிலன்றிப் பிறவற்றைக கல்லாத வீரர் பயிலாது ஏந்திய செந் தொடையினை விலலினின்றும விடுதலானே சுர வழி அச்சந்தரும (நற். 387:3-6).

**செந்தீ - 1.** நெருப்பு. கானப்பேர் என்னும அரண், வலிய கையையுடைய கொல்லனால, செந்தீயின்

கண்ணே நெருப்பின்கண்ணே - மாட்டப்பட்ட இருமபுணட நீரினும் மீட்டறகரிது (புறம. 21'6-8). ஆட்டுககிடாயினைச செநதீயிலே சேர்த்துச் சுட்டு இறைசசியைப பதபபடுததுவர் (புறம். 364:4,5). திரை கொணர்ந்த அகிலாகிய விறகாலே, கருமபு கையினை வெளிபபடுததும செநதீமாட்டி, நுளை மகளிர் தேறல் அரிபபர் (சிறு. 155-159). செநதீயினை உடைய கடைக்கொள்ளியால துளையிட்ட கரிய துளையினையுடைய குழலில பாலைபபண்எழுபபப் பெற்றது (பெரு. 179,180). அசோகினுடைய ஒண பூ சுருமபுகள் படியும செந்தீபபோல தோன்றியது (மது. 700,701). தலைவன் செநதீபபோலும ஒளிரிய பூககளை உடைய அசோகினது தளிரை ஒரு காதிலே செருகியிருநதான (குறி. 118-120). செறிநத வலிய செந்தீயில வளமபொருநதிய நிணம் சுடப பட்டது (அகம. 237:8,9). அநதணர் தாம் செய்யும தொழிலகளைச செய்து அநதிக காலததை எதிர்கொள்ள மகளிர் செநதீயால் உண்டான விளககை ஏற்றினா (கலி. 119.12,13). வானத்தினின்று எலலாப் பொருள்களையும் சலிபபிககும், காற்றுத் தோன்றிய முறை முறையாகிய ஊழிகளும, அககாற்றினினறும செநதீத தோன்றிய ஊழிகளும, அத்தீயினினறும் தோனறிபபனியும் மழையும பெயத ஊழிகளும் முதலாகிய அளவில்லாத காலம் கழிந்த பின உயிர்கள் உளவாதற் பொருட்டுத் திருமால வராகக் கோலங் கொண்டு நிலத்தினை எடுத்தார் (பரி. 2:7-17).

2. **வேளவித்தீ.** முன்னைய மள்ளன் காட்டு யானை கொண்டு வந்த விறகால் செநதீயை - வேள்விததீயை - இப்பொழுது வேட்டனன (புறம. 251:5, 6). முறறததிடத்தே செந்தீ பேணிய முனிவர், களிறு முறிததுக கொண்டு வநத விறகினால வேள்வி செயதல (பெரு. 498,499).

**செந்நா - 1. செவ்விய நா.** 'நின்னைப் பாடிய, விளங்கிய செநநா-செவ்விய நா - பின்னைப் பிறருடைய புகழைச சொலலாதவாறு கொடுககும் வலியை உடைய எங்கோவே' என மாநதரஞ்சேரலிரும்பொறையைப பாராட்டுவர் குறுஙகோழியூர் கிழார் (புறம. 22.31-33). பல பொருளையும அடக்கிய செயயுளைச் செயயும செநநாவினை உடையவர் கபிலா (புறம. 53'10-12). 'பிறர்ககீயும பெருமையிலலாத அரசரைப் புகழும புகழசசியை விருமபி அவ்வரசர் செய்யாதனவறறைச சொலலி, அவா குணஙகளைக கூறுதலை அறியாததாயிறறு எம சிறு செந்நா' எனபது வனபரணர் கூற்று (புறம. 148:5-7). 'உலகத்தெலலையுள் தமிழநாடு கேட்கப பொய்யாத செநநா வருந்துமபடி நினனை வாழ்த்திபபாடுவர் எனறு சொலலுவர் பரிசிலர்' எனப் பிட்டஙகொறறனைப பற்றிக் கருவூரக கதபபிள்ளைச சாததனார் கூறுவர் (புறம். 168'18-20). நீ நாணுமாறு என் நுணணிய (ஆராயசசியை உடைய) செந்நா வருந்தப புகழநது யான நாள் தோறும் பாடபபாடப பினனரும பாடவேண்டுகிற புகழை ஏற்றுக்கொணட நினது வெறறி பொருந்திய அகனற மார்பை வணங்கி வாழததிப் போவேன் எனப பெருஙகுனறூர கிழார் சேரமான குடக்கோச் சேரல இருமபொறையிடம் கூறினார் (புறம. 211:13-16). 'தாம கூறும் சொறகள' பொயயாதலை எனறும அறியாமையால விளக்கம அமைந்த செநநாவினையுடைய வீரராகிய சானறோாககு மெயமமறை,யாவான் ஆடுகோட்பாட்டுச சேரலாதன (பதி. 58'9-11). மெயமமொழியால விளககம் பொருந்திய செநநாவினை உடைய வேநதன் பெருஞ்சேரலிரும்பொறை (பதி. 79. 5-7). விளங்குகின்ற செநநாவினையுடையவா கபிலா (பதி. 85'10,13). இலவமலர் போனற அழகிய செநநாவினால், புலமையுற உயர்ததிக் கூறபபெறுமமேலோா புகழப பலரினும மேமபடட, கொடுததலாற கவிநதகையினையுடைய வள்ளல மாநதரஞ்சேரலிரும பொறை (அகம. 142:1-3)

2. **சிவந்த நா.** நுணங்கு செநநா - சிவந்த நாவும்- நுண்பல பொறியு முடையது குறுமபூழச சேவல (அகம. 103:2,3). (அகம. 161:13; குறு. 14.1; நற. 364.7).

**செந்நாப்புலவர்** - செவவிய நாவினையுடைய புலவா. பாரி, பாரி, எனறு சொலலி அவன பல புகழையும வாழததி அவவொருவனையே புகழவா செநநாப புலவர் (புறம. 107.1,2).

**செந்நாப்புலவீர்** - செவவிய நாவினையுடைய புலவீர் (விளி). அரிசி வேணடியதறகு யானையைப பரிசில தநத நாஞ்சில வள்ளுவனது கொடை மடம குறிதது, 'செநநாபபுலவீா - செவவிய நாவினையுடைய புலவீா - நாஞசிற பொருநன நிசசயமாக மடவன' எனப புலவரை விளிததுக கூறினாா ஔவையார் (புறம. 140.1,2).

**செந்நாய் - நாய் வகை.** மலை முழைஞசிடதது, ஈனறு காவற்பட்ட, மெனமையையும ஈனறணிமையையும உடைய அழகிய பெண நாய் பசிததாக, பசிய கணகளையுடைய செநநாய ஏறு ஆணபனறியினைத தாககும (அகம. 21:16-18). கூரிய பறகளை

யுடைய செந்நாய், பசியால் வருந்தும் தன் பிணவோடு அருஞ்சுரக் கவலையிடத்தே நடுகல்லின் இன்னிழலில் வதியும் (அகம். 53:6,11,12). காட்டி லுள்ள ஆண் பன்றியினைக் கொன்ற, இரையினை நன்கு பற்றிக்கொள்ளும் திறனுடைய செந்நாய் ஏற்றை அப்பன்றியை விரைவாக இழுத்து வரும் (அகம். 111:10,11). அரத்தால் அராவப்பட்ட ஊசி யின் திரண்ட முனையை ஒத்த உறுதி பொருந்திய பற்களையுடைய செந்நாய் தாக்கலின் மான் கூட்டம் அலறி ஓடியது (அகம். 199:9-11). பொன் னைக் கம்பியாக இழுத்தால் ஒத்த கூரிய வெள்ளிய பற்களையுடைய செந்நாயினை அஞ்சிய கலை மான், காப்பிடம் தேடிச் செல்லும் (அகம். 219: 12-16). ஊனை விரும்பும் பெண்நாயின் மிக்க பசியினைப் போக்குதற்கு, பெண்மான் கதற ஆண்மானின் தொடையினைச் சிதைத்த செந் நாய் ஏற்றை வெப்பம் மிக்க காட்டு நெறியில் வெய்யிலை வெறுத்து மெலியும் (அகம். 285:4-7,13). வேட்டை மேற்செல்லும் செந்நாய், தோண்டி உண்டு எஞ்சிய நீர் சிறிதளவாகக் காணப்படும் (குறு. 56:1,2). மலைச்சாரலில் யானையினது கடும் பகை ஏதுவாக வருந்திய, பெரிய ஆண்புலி இறக் கின்ற செவ்வியைப் பசுமையான கண்ணையுடைய செந்நாய் எதிர்பார்த்திருக்கும் (குறு. 141:4-8). கோடை நீடிய மலைப்பக்கத்தில் பசியை உடைய செந்நாய் வாடிய மரையாவைக் கொன்று தின் றொழித்த மிச்சில், வேற்று நாட்டினின்றும் அருஞ்சுரம் செல்வோர்க்கு உணவாகும் (நற். 43: 2-5). களிற்றியானை நின்று கழித்தகன்ற இழிந்த நீரினாலாய ஈரத்தே பால் வற்றிய முலையை யுடைய வயிற்றைப் பொருத்திப் பசி வருத்துத லானே வருந்தி முடங்கிக் கிடந்த பசிய கண்ணை யுடைய செந்நாய்ப் பிணவினது, வேட்டைமேற் சென்ற ஆண்நாய் தன் பிணவை முன்பு புணர்ந்த தன்மையைக் கருதி வருந்தும் (நற். 103:4-8). கவர்த்த நெறிகளையுடைய சுரத்தின் கள்ளிகள் நிறைந்த கடத்திடைக் கூர்மையான பற்களை யுடைய செந்நாய் வயா நோவுற்ற தனது பெட்டைக்கு உணவாகப் பன்றியை எதிர்பார்த் திருக்கும் (ஐங். 323:1-3). அன்புடைய பெட்டையைக் கூடிய செந்நாய் ஏற்றை, குட்டிகளையுடைய பெண் மானைப் பற்றாமல் செல்லும் (ஐங். 354:1,2). கவிழ்ந்த மயிர் பொருந்திய கழுத்தையுடைய செந் நாய் ஏற்றை பன்றிக் குட்டியை உணவுக்காகக் கொள்ளாது போகும் (ஐங். 397:1,2).

**செங்நிலப்புறவு** – செம்மண் நிலமாகிய காடு. முல்லையி னின்றும் உதிர்ந்த பல பூக்களும் பரந்து கிடத்தலால் செந்நிலப்புறவு - செம்மண் நிலமாகிய காடு– வல்லோன் செய்த ஓவியம் போன்று விளங்கியது (அகம். 134:5,6). செந்நிலப்புறவிலே ஆடுகள், தாம் மேய்வதை ஒழித்துத் தொழுவம் புகுமாறு மாலைக் காலம் வந்தது (நற். 321:1,2).

**செங்நிலம்** - செம்மண் நிலம். காடு தழைத்த செந் நிலத்து - செம்மண் நிலத்து - பெரு வழியிலே (முன்பனி தொடங்கும் திங்களிலே) வரகிடத்தே, புல்வாய்க் கலையோடே மடப்பத்தையுடைய மான் தாவிச் செல்லும் (முல்லை. 97-100). அரக்கைப் பரப்பினால் ஒத்த செந்நில மருங்கில் சுக்கான் கல் லில் உடும்பின் ஏறு தவழ்ந்து செல்லும் (மலை. 507,508) செவ்வரக்கினை ஒத்த செந்நிலப் பெரு நெறியில் காயாம்பூ வாடல்கள் பரவிக் கிடந்தன (அகம். 14:1,2). ஓவியம் போன்ற இந்திர கோபத்தை யுடைய செந்நிலத்தே, தேரினைப் பாகன் செலுத் தினான் (அகம். 54:3-6). மழையினுடைய கடுகிய நீர் வரிவரியாக இழைத்த செந்நில மருங்கின், தேர் விடும் நெறியிலுள்ள ஈரமணலைக் கானங்கோழி கிளறியது (அகம். 64:7-9). பசுக்கள் வன்னிலம் துணிபடச்சென்று கிளப்பிய செந்நிலத்தின் புழுதி வானத்திடத்தே மிகுத் தோன்றியது (அகம். 79: 7,8). பிடவின் மலர்கள், செந்நில மருங்கில் நுண் ணிய மணலில் உதிர்ந்து கோலம் செய்யும் (அகம். 154:4,5). இருப்பையின் பூங்கொத்துக்கள் நூலி னின்று கழன்று விழும் துளைபொருந்திய முத்தைப் போலச் செந்நிலத்தே உதிர்ந்தன (அகம். 225: 10-12). வேங்கையின் அடிமரத்தில் பாய்ந்திட்ட களிறு செந்நிலத்தில் பொருந்திய புழுதியை அளைந்து, போர்புரிந்து களத்தில் வெற்றி கொண்ட வீரர்போல் முழங்கும் (அகம். 227:9-11). செவ்வண்ணம் தீட்டி வைத்தாற் போன்ற செந் நிலத்தே, தேக்கிவைத்தாற்போன்ற தெளிந்த அறல் பட்டநீரைக் குடித்துச் சிறிய குட்டியைத் தழுவிக் கொண்ட பெண்மான், கலைமானோடு குருந்த மரநிழலில் தங்கியது (அகம். 304:6-10). செந்நில மருங்கில் பலமலர்களும் பரந்தமையால் காடுகள் தனிமைத் துன்பம் தீர்ந்து இனியவாயின (ஐங். 495: 1,2).

**செங்நிலன்** - செம்மண்நிலன். பாடினி, சாதிலிங்கத்தை உருக்கிய தன்மையை ஒத்த செந்நிலன் - செம்மண் - இடத்தே நடக்கையினாலே, சுக்கான் கல்லாகிய பகை வருத்தியது (பொரு. 43,44).

**செங்நிலை** - நேர்நிலை. செந்நிலை - நேர்நிலை - வாய்ந்தது கழுமரம் (பெரு. 127,128). தளிர்கள் இழந்த கிளைகளையுடைய யாமரம் செந்நிலை -

செருவினை விருமபுவர் படைத்தலைவர் (மது. 725, 726). காவிரிபபூம்படடினததே போர்வலிமை யுடையோா பெரிய சினத்தாலே, மணலமேட்டில முதுகுகொடாமல கையாறகுத்தியும் படைககலங் களாலே வெடடியும் ஒருவர் மெயயோடு ஒருவர் மெய் உறும்படி கலநது செருசசெயவர் (பட். 70-72) பகைவரைப் பொறாமல பொரும செருவினை யுடையவன் நன்னன (மலை. 163,164). செருசசெய் கினற முன்பினையுடையவன குருசில (மலை. 186). மாட்சிமைபபட்ட (வஞ்சி முதலிய) செருததொழில் மிககு நடத்தலாலே உலகம புகழும் திருமகள் நிறைந்திருநத மார்பினையுடையவன நன்னன (மலை. 355,356) பகைவர் பொறுததலாறறாத செருவினையுடைய தலைவாசலிலே மழை முழககத திறகு எதிராக முழஙகும பணணையுடைய முழ வின கணகள் ஒலிததன (மலை 529,532) தலைவன விலலினைக கையிறபறறி, அமபினை ஆயநது கொணடு, செருசசெயத (தன்னால அம்பு எயயப பெற்ற) யானை சென்ற நெறியினை வினவித தினைப் புனததின வாயிலின பக்கததே நின்றான் (அகம. 82:11-15). எவ்வி எனபான் வீழநத செருவில (செருககளததில) பாணர், கையால் தொழும் முறைமையோடு முன்பெலலாம பராவிய (யாழின) கோட்டினை ஒடித்தனர் (அகம. 115:7-9) கள்ளின் வணடலை நிறையக் குடித்து, செருவினை விரும்பி ஆரவாரிககும் சிவந்த கணணையுடையவர் வீரா (அகம. 157:3,4). ஆய எயினன முருகனை ஒதத வலிமையோடு நின்று, பகைவர் பாதுகாக்கும அரண்களை வெனறு போர் அடுதல வல்ல மிஞிலி என்பானின செருவின கண், களம் சிவப்பப பொருது பின தோறறு வீழந்தனன் (அகம. 181:3-7). பெருநதுறை எனனும் இடததில நிகழ்ந்த செருவில நனனன் களங காயககண்ணி நார்முடிச சேரலோடு பொருது களததில் மடிநதான் (அகம். 199.18-20). வெளியன் வேணமான ஆஅய எயினன், பாழி எனனும போர்க்களததே மிஞிலி எனபானோடு நன பகற் பொழுது செயத செருவில், வாட்படை மயஙகிய போரிலே புண்மிக்கு வீழ்நதான (அகம். 208:5-9). குட்டுவன, தனனுடன பொரும பகையை நில எலலைககுள் காணாமையின் பொஙகி எழும் சினம மிககு, செருவினைச செயயும வலியால் கடலை வளைதது அதனைப பிறககிடுமபடி ஓட்டி மாணபுறறான (அகம. 212.16-19). சுரநெறியில களிறு, செமமண் நிலததில பொருநதி, புழுதியை அளைநது செருமலைந்து களததில வெற்றி கொண்ட வீராபோல முழங்கும் (அகம. 227.9-11) செருத்திறம் வாய்ந்த குதிரையையுடையவன திதியன (அகம். 262:10). திருச்சீரலைவாயமர்ந்த செருமிகுசேய முருகன (அகம. 266:20,21). தெனனன பகைவரது அரணகளை அழிதத வலிமையுடன பகைவரது பல செருக்களையும வெனற இடியுடன மாறுபடும் பெரிய கையினன் (அகம. 342.7-10). கடற்பரப்பில் உள்ள நுளையர், இனிமைமிகக வெள்ளுப்பு நெல் தூறறிய துருமபு படிநது கெட்ட மையின சினந்து, வயல உழவரொடு மாறுபட்டு எதிாததுக கைகலநது சேறறுக் குழம்பினை எறிநது செருச் செய்தனா (அகம். 366:6-9). 'இளமையில இவன இவளுடைய கூநதலைப்பற்றி இழுககவும், இவள் இவனது தலைமயிரைப பிடிதது வளைதது இழுப்பவளாய ஓடவும, இவவிருவர் மோதலை அனபுடைய செவிலிததாயர் தடுககவும் நிலலாமல அயனமையை உடைய சிறு செருவினைச் செயவா'' என, உடன போகும தலைவன தலைவி யரை இடைவழியில கண்டோா தமமுளளே கூறினர் (குறு. 229:1-4). பலாமரததில தொஙகும பழததை உணட திரளான ஆணகுரஙகுகள், சிலை மரததாலான விலலையுடைய வேட்டுவன குறி பிழையாது எயயும அமபுகளுககுப பயநது, செருக களததை உறற குதிரையைப போலப பொஙகி எழுநது மலைச் சாரலில பாயந்து செலலும (குறு 385 1-6). தலைவன செருவினகண மிகக வலிமை யினையுடைய காளையாவன (நற். 184.2). செரு வெனறு தலையாலஙகானததுச சென்று தஙகிய வேற்படை பொருநதிய சேனைகளையுடையவன பாணடியன நெடுஞ்செழியன (நற. 387.6-8). செரு வினை விரும்பும தலைவன பகை தணிநதனன. (ஐங 465:5). தானை பகைவர் செயத அரணைச் சிதைததுச் செருவிலே மிககு நிறகும (ஐங. 474.1,2) செருத தொழிலிலே மிகுகினற சினததையுடைய அரசன சினநது படையுடன சென்று தஙகிய பகைப புலததை நெருப்புத தினறது (கலி 13.1,2). தலைவன, பொரும யானையை உடையவனாயப போர் செயதறகு மாறுபட்டு எதிா வந்தவருடைய செருவிடததே வெனறு மேமபட்டான (கலி. 26: 22-24). 'பரத்தையருடைய முயககததாலே, பூசின பாடழிநத சிதறுதல பட்ட சநதனததையுமுடைய நின்வடிவைககணடு யானும நினனோடு செரு (ஊடுதல) ஒழிநதேன; இனி அபபரததையரிடததே செலவாய' எனறு தலைவி தலைவனிடம கூறினாள் (கலி. 91.12-15). வணடுகள மொய்தத செருவிலே ஒருததியுடைய பூமாலையும முததமாலையும வேறொருததியுடைய தொடியோடே, சிககிக கொண்டன (கலி. 92.33,34). 'உனனோடு பொருவேம எனக கூறிவநதவர் செருககை அழித துச்செருவிடததே மேமபட்ட, குறறம தீாநத

அண்ணலே' எனத் திருமாலை விளிப்பர் (பரி 1: 26,27). புனல் விளையாட்டில் ஊடல் கொண்ட ஒருத்தி, தன் மேனியழகைப் பாராட்டிய காதலன் தன் ஊடலைத் தணிக்குமாறு வணங்கவும் ஊடல் தணியாது அவன் சிரத்தை மிதித்துப் பின்னும் வெகுளி தீராமையால் செருவுற்றாள் (ஊடினாள்) (பரி. 7 73-76). செருவின் மேம்பட்ட திகிரியாற்செய்யும் வெல்போரை உடையவர் திருமால் (பரி. 13 58). செருவேல் தானைச் செல்வன் முருகன் (பரி. 18.54). சீற்றத்தலையாயச் செருச்செய்த வாளிகளை ஒத்த கண்ணை யுடையவா மகளிர் (பரி. 20.37,38).

2. சினம். தலைவியின் புதல்வன் தன்னிடத்தே செரு-சினம் செய்யக் கருதியோரைத் தன் பிள்ளை யாட்டத்தால் மகிழச் செய்து உவகையாகிய கூத் தாட்டுவிப்பான் (கலி. 85.34,35).

**செருக்கம் - களிப்பு** கள்ளுண்டார்க்குக் கள் முடியும் காலத்துப் பிறந்த செருக்கத்தை - களிப்பை - ஒத்தது காம மயக்கம் (நற். 35.10-12).

**செருக்காளர்-(கள்ளுண்ட)களிப்பினையுடையார்** மதுரை யில் இராக்காலத்தே கள்ளையுண்டு, களிப்பினைத் தம்மிடத்தே தடுத்துக்கொண்ட, மழலைச்சொல் கொண்ட நாவினையுடைய பழைய செருக்காளர்- களிப்பினையுடையார் - முழங்குகின்ற குரல்கள் கலந்து ஒலிக்கும் (மது. 668,669).

**செருக்கு - 1. (கள்ளுண்ட) களிப்பு.** தலைவன் விடியற் காலத்துச் செருக்கால - (கள்ளைக் குடித்த) களிப்பினால் தூங்குதல் (புறம். 316:3). சோழன் கரிகாற் பெருவளத்தானிடம் சென்ற பொருநன், உண்டார் மயங்குதலைச் செய்யும் கள்ளை, மழை என்னும்படி மாடத்திடத்தே மகளிர் பலகாலும் வார்த்து, வட்டில் நிறையத் தரத்தர வழிச்சென்ற வருத்தம் போம்படி நிறையவுண்டு, நெஞ்சிற்கிடந்த பெரிய வருத்தத்தையும் போக்கிச் செருக்கொடு நின்றான் (பொரு. 84-89). மூங்கிற் குழாய்க்குள்ளே பெய்த முற்றிய தேனாற் செய்த கள்ளின் தெளிவை நிரம்ப உண்டு, பின்னர் நெல்லாற் செய்த கள்ளை யுமுண்டு மகிழ்ந்து விடியற்காலத்துச் செருக்குற் றனர் (மலை. 171-173). உழவர் தொழிற்செருக்கால் வந்த மயக்கம் நீங்க மாங்காயின் புளிப்பதன் அமைந்த சாற்றைப் பருகினர் (அகம். 37:69).

2. மேம்பாடு. 'இவள் தனக்கென ஒரு நெஞ்சுடை யளல்லள் என்று கருதிச் செருக்கினால் - மேம் பாட்டினால்-இவ்விடத்து வந்து, பரத்தையாகக்குக் கூறும் பயன்படு சொற்களை வீணே சொல்லக் கடவையோ' எனக் காமக் கிழத்தி ஊடல் தீரு முகமாகத் தலைவனிடம் கூறினாள் (கலி. 69.18, 19).

3. பெருமிதம். கடல் ஆர்ப்பதற்குக் காரணம் திரையனை யான் பயந்தேன் என்னும் செருக்கு- பெருமிதம் (பெரு. வெ).

**செருத்தல் 1. பாலமடி.** அறுகம்புல்லாய உணவினை அருந்திய நல்ல ஆனினங்களின் பருத்த மாண்புற்ற செருத்தல் – பாலமடி - இனிய பாலைச் சொரிந்தது (அகம். 14:9,10).

**2. பால்மடியுடைய பசு** (ஆகுபெயர்). நிலத்தளவும் தொங்குகின்ற தாடியை யுடையனவும் பருத்த முலைக் காம்பை யுடையனவுமான செருத்தல் – பாலமடியையுடைய பசு - பலவும் மேய்ச்சல் புலத்திலே தம் கன்றுகளை நினைந்து பாலை ஒழுகவிட்டவாறே மந்தையைவிட்டு நீங்கி மாலைப் பொழுதிலே ஊர்க்குத் திரும்பும் (குறு 344:3-6).

**செருந்தி - மரவகை.** அரும்பவிழ்ந்த செருந்தியின் - மரத்தின் - நெடிய காம்பமைந்த மலர் அரண்மனை முற்றத்தே மணம் கமழ்ந்தது (புறம். 390:3,4) இள வேனிற்காலம் தொடங்குகின்ற நாளிலே செருந்தி, தன்னைக் கண்டார் பொன் என்று மருளும் படி பூத்தது (சிறு. 147). தலைவியும் தோழியும் செருந்தி, அதிரல், சண்பகம் போன்ற மலர்களைப் பறித்துப் பாறையில் குவித்தனர் (குறி. 75,98). கானிடத்தே அரும்பிய செருந்தியின் போதுகள் விடியற்காலத்தே வாயவிழ்ந்து மலரும் (அகம். 150: 9-12). 'நீ, தலைவியின் ஆகத்தே இனிய துயிலை விரும்பினாய் ஆயின், அங்ஙனம் அவளைக் கூடிச் செல்லுதற்கு, மலர்ந்த செருந்திமரம் பொருந்திய வெள்ளிய மணல் மிக்க முடுக்கில், புன்னை மரங் களையுடைய சோலைக்கண் வருவாயாக' எனத் தோழி தலைவனுக்குப் பகற்குறி நேர்ந்தாள் (அகம். 240·9 5) தலைவி, பொற்பூக்கள் நெருங்கிஇருந்தாற் போன்ற, ஒளிபொருந்திய கொத்துக்களையுடைய செருந்தியின் பல பூக்களைச் சூடிய அழகு பொருந்திய கூந்தலினள் (அகம். 280:1,2). பசிய இலையினையுடைய செருந்தி மரம் பரவியுள்ள இருங்கழிச் சேர்ப்பினையுடையவன் தலைவன் (ஐங். 112:1,2). மணல்மேட்டிலுள்ள சுரபுன்னையின் மலர், செருந்தி மலரோடு கமழும் (ஐங். 141). தலைவன் நெய்தல் மலரைச் செருந்திப் பூவோடு கலந்து

கட்டிய மாலையினை அணிநதவன (ஐங. 182:1,2). பருதியாகிய அழகிய செலவனைப போல செருநதி அருமபுகள் அலர்நதன (கலி. 26:2). தலைவன நாட்டுக் கடற்கரையில் தளையவிழ்ந்த செருநதியின பூககள் பிற பூககளுடன மிஞிறு சிறிதே ஒலிதது மிக ஆரவாரிப்பக கரிய துமபிகள் தமமில இயைந்து தேனையூதச சூழநது கிடக்கும (கலி. 127:2-5).

2. கோரை (வாட்கோரை: நெட்டிக்கோரையுமாம்). செஙகழுநீர் மிகக பொய்கைகளிடததே யானையும மறையுமபடியாக வளர்நத செருநதியுடனே - வாட் கோரையுடனே-சண்பஙகோரையும் நெருஙகியிருந தன (மது. 171,172) பகைவா நாட்டின வயலகளும் வாவிகளும நீரறறுத தமமில ஒன்றாகி அறுகமபுல லுடன செருநதி வளாநது பாழபடுமாறு கரிகாற பெருவளததான அநநாடுகளையழித்தான (பட். 243-245,270). தலைவனூராக கழனிகளில பெரிய பஞ்சாய்க கோரையை யொதத செருநதியொடு கொறுககைசசி கருமபுபோல வளாநது சுழன றாடும (ஐங. 18.1-2).

செருப்பு: - 1. மிதியடி. போரிலே பகைவர்க்குத் துனபம தருமமறவ னொருவன செருப்பிடை-மிதியடியிடை-பட்ட சிறுபரல் போனறவன் (புறம. 257:1). கூர்ம் படை மழவர் அடிகளிலே செருப்பினைப் பூணடி ருந்தனர் (அகம. 129.12-14).

2. ஒரு மலை. 'மிதியடியல்லாத செருப்பு என்னும மலையையுடைய பூழி நாட்டவர்கு வேநதே' எனப் பலயானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக கௌதமனார் குறிப்பிடுவர் (பதி. 21·23).

செருவம் - 1. போர். 'பழைய ஊரினுள்ளே, கசசணிந்த யானையையுடைய அரசுணடாகலின அவறறை நல்லவென்று பாராமல் செருவததிலே - போரிலே-அழித்தல் வலலையாய் இருநதாய, எனச சோழன குளமுறறததுத துஞசிய கிள்ளிவளவனை மாறோக் கததது நபபசலையார் குறிப்பிடுவர் (புறம் .37:11-14). செருவததிலே சிறப்புடைய தன செஙகண சிவக்கக் கேடகமாகிய தோலையே தனக்குத் துணையாககு கொண்டு தனனை மறைததுப் போரிடும் தலைவ னொருவனுககு வேறு ஒருவரும் துணையிலலை (புறம. 311:4-7).

2. மாறுபாடு. 'நின் பொயசசூள் குறித்து முருகன திருவுளம செருவம்-மாறுபாடு- செயதற்கு முனனே தலைவி, மணியின் நாவையசைத்துத் தலைவணஙகி அமமுருகனமுன, நின் பொயசசூளால வரும ஏததகை மாறறுவதைக காணபாயாக' என்று தலைவனிடம தோழி கூறினாள. (பரி. 8.84-89).

செருவிளை - வெண்காக்கணம் பூ. தலைவியும தோழி யும செருவிளையோடு-வெணகாககணம் பூவோடு -பிற பூக்களையும பறிததுப் பாறையில குவிததனர் (குறி. 68,98).

செல் - இடி. 'நலல போர்களை வஞ்சியாது செய்து மேமபட்ட, நின செல - இடி - போலும தடககை, இரபபோர்க்கு ஈதற்பொருடடுக் கவியுமேயனறி, இரததறபொருட்டு மலாதலை அறியாது' என ஆடு கோட்பாட்டுச சேரலாதனின வணமையைக காககை பாடினியார் நசசெள்ளையாா, சிறபபிப்பர் (பதி. 52:10-12). செல ஒதத மறவர், கொலலுகினற படையை ஏநதிவருவா (பதி. 58.4). அழிததற்குரியாரை அழிதத செயலோடு மாறுபடட பெருமையமைநத கையினையுடையவா செவவேள் (முரு. 5). பலபோரை வெனற, செலலுடன மாறு படும் பெரியகையினன தெனனன (அகம. 342.9,10). 'திருமாலின சினமொழி வான முழககையும செல முழககததையும ஒககும்' (பரி. 13 44).

செல்லல் - துன்பம் / வருத்தம. தலைவியைத தலை வனது மணம் கமழும அகனற மாாபு வருததிய செலலல் - வருததம - இதனாலுணடாயது என அறியாத காலததே, நெடுவேளைப போற றினால தணியும என முதுவாயப பெணடிர் கூறினர் (அகம 22:3-7). 'நம தலைவர் உறுவிதத ஐவவலலைத தெரிநதருளுதலின, மணம கமழும நெடுவேள் நம முனனை அழகினைத தநதருள்வன எனின, 'தலைவி உறற செலலல நமமிடததுக் காதலாலனறிப பிறிதொனறான எயதியது' என நம தலைவர் கேடடறிவா; அவா அவவாறு அறிநதால பினனாயான உயிா வாழதல இலலை' எனத தலைமகள் தோழிககுக கூறினாள (அகம. 98.26-30) 'குவளைப பூவை ஒதத எனது மையுணட கணகளில தெளிநத நீர் ததும்ப, யான சிறிது வருநதிய செலலறகு அனனை, இது தெய வததாலாயதோ எனப பிறிதோர் ஐயமுறறனள்' எனத தலைமகள கூறினாள் (அகம. 138:2-4). 'பலசுரநெறிகளையும கடநது வநதுள்ள நம மிடத்துத தன உள்ளம் படாதலால நம தலைவி, மாலைககாலததே பசலை பாயநத மேனியளாக நமமை நீள நினைந்து, மெலலிய விரலகளைச சோததிய நெற்றியினளாய், கயலமீன் உமிழும நீர் போலக கணகளில நீர் நிறைநது ஒழுக, பெரிய

தோள் மெலிந்ததாலாய செல்லலுடன் வருந்துவள்' எனத் தலைவன் இடைச்சுரத்துத் தன்னெஞ்சிற்குக் கூறினன் (அகம். 169:8-14). 'செறிந்த அணிகள் நெகிழ்ந்து விழ மெலிந்து, செல்லலுடன் நினைவு மிகும் நம் அரிய துயரினைத் தூதுவர் வாயிலாய்க் கேட்பின் தலைவர் நந்தன் வெறுக்கை எய்தினும் அங்கே தங்கமாட்டார்' எனத் தலைமகள் வேறு பாடு கண்டு தோழி கூறினாள் (அகம். 251:3-6). 'நமது ஒள்ளிய வளை நெகிழ்ந்து வீழ மெலிந்து, செல்லலுடன் கண்ணீர் சொரிந்து யாம் இங்கே இருக்கத் தலைவர் அரும் சுரம் சென்றார்' எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம். 265:10, 11,22). 'வளை நெகிழ்தற்கு ஏதுவாய செல்லல் கண்டு, அன்னையும் இது பிறிதொன்றானாயது என உணர்ந்து மனம் சுழல்வாள்' எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம். 292:1,2,7). 'பகைவர் கூறும் சிறிய புல்லிய இழிசொல்லாகிய செல்லல் அழியவும் தம்பால் நல்ல புகழினை நிறுத்தவும் தலைவர் பொருள்தேடி மலை வழிகளைக் கடந்து சென்றார்' (அகம். 389:13-15,24). 'தோழி, நின் மெல்லிய தோள்களை மெலியச் செய்த தாகிய செல்லல் கண்டு, வேலன் முருகக்கடவுளால் நேர்ந்ததென்று கூறுவான்' எனத் தோழி தலைவியிடம் கூறினள் (குறு. 111:1,2). 'என் தோழி யின் பெரிய தோள்களை மெலியச் செய்த பிரிவு நோயாகிய செல்லலைப் போக்கும் பொருட்டு நீ வருமாறு கரைந்த காக்கைக்குரிய பலிச் சோறு ஏழு கலங்களில் இட்டளிப்பினும் அது சிறிய அளவின தேயாகும்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (குறு. 210:3-6). "என்னுள்ளத்தைப் பிணித் துப் பற்றிக் கொண்டவளிடத்து யாம் செல்வோம்; சென்று அவளுடைய செல்லலைத் தீர்ப்போம், என்று என் நெஞ்சம் கூறுகின்றது" எனத் தலை மகன் ஆற்றானாகிக் கூறினான் (நற். 284:1-4). 'நின் மார்பினால் வருத்தப்பெற்ற தலைவியின் செல்லலாகிய அருநோயை யாரிடத்து நொந்து கூறுவேன்' எனத் தோழி தலைமகனிடத்து வரைவு கடாவுவள் (நற். 396:8,9). கழனியூரன் மார்பு பலர்க்கும் இழை நெகிழ்த்தற்குக் காரணமான செல்லலைத் தரும் (ஐங். 25:3,4). தலைமகன் இழை நெகிழ்தற்குக் காரணமான செல்லலைத் தந்து பிரிந் தான் (ஐங். 315:3,4). 'செல்லல் உடைய தலைவ னோடு நீ கூடும் கூட்டத்தை விரும்பி யான் நின்னை அவனிடம் அழைத்துப் போய் விடுவேன்' எனத் தோழி அதற்குரிய முறைகளைத் தலை விக்குக் கூறினாள் (கலி. 63:6,7). 'நின்னை நுகர்ந் தோருடைய நெஞ்சம் அழிந்து செட்டுப் போம்படி யாக அவரைக் கைவிடுவையாயின், அது வருந்திய செல்லல் போக்கும் மருந்தின் திறத்தை அறிந்த ஒருவன், அம்மருந்தை அறியேன் என்று வஞ்சித்து, அம்மருந்தின் காரியத்தைக் கெடுக்குமதிலும் கொடிதுகாண்' எனத் தோழி தலைவனுக்குக் கூறினாள் (கலி. 129:23-25). தம் கணவர் மார்பின் கண் வழிவந்த செல்லலைச் செந்தளிர் மேனியார் தீர்ப்பர் (பரி. 8:122,123).

**செல்லிக்கோமான் - செல்லூர் மன்னன்** (ஆதன் எழினி). கடலாடு மகளிர் கொய்து கொணர்ந்த ஞாழற்பூக்களையும் கழனியுழவர் கொய்து கொணர்ந்த குவளைப் பூக்களையும் காவற்காட்டு முல்லை நிலத்திற் பூத்த முல்லைப் பூக்களோடு சேர்த்து இளங்கோசர் பலரும் கண்ணியாகக் கட்டி விளையாடும் பெரிய வளமும் புதுவருவாயும் உடையது செல்லி எனப்படும் செல்லூர்; அச் செல்லிக் கோமான் – செல்லூர் மன்னன்-ஆகிய ஆதன் எழினி, வேலால் யானையை எய்து வீழ்த்தும் வன்மையாளன் (அகம். 216:8-15).

**செல்லூர் - ஓர் ஊர்.** அரிய வலிமை கொண்ட கடவுளர் உறையும் சிறப்புமிக்கது செல்லூர்; அதன் கிழக்கே பெரிய கடல்போலும் ஆரவாரத்தை யுடைய கோசர் வாழும் ஊராகிய நியமம் இருந்தது (அகம். 90:9-12). எதிர்த்த மதயானைகளின் கூட்டம் போர்முனையிலே அழியுமாறு மன்னர் மரபினை யறுத்த மழுவாள் நெடியோன் (பரசுராமன்) என்றும் நீங்காத வேள்வித்தீயினையுடைய அழகு விளங்கும் செல்லூரின்கண் அரிதில் முயன்று முடித்த வேள்விக்களத்தில் யாவரும் காணுதற் கரிய தூண் நாட்டினன் (அகம். 220:3-9).

**செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனார்.** புலவர். செல்லூர் என்பது சங்கப் பாடல்களிலேயே சிறப்பித்துக் கூறப்பெற்ற வளம் மிக்கதோர் ஊர். கடவுளர் பலரும் உறையும் சிறப்புமிக்க இச் செல்லூர், கோசரது ஆரவாரமுடைய ஊராகிய நியமம் என்பதன் மேற்கே அமைந்தது; நெய்தல், மருதம், முல்லை ஆகிய மூவகை நிலவளமும் சான்றது; ஆதன் எழினி என்பானால் ஒரு காலத்தே ஆளப்பட்டது; மன்னர் மரபினை யறுத்த மழுவாள் நெடியோனாகிய பரசுராமன் என்றும் அவியாத வேள்வித்தீயினையுடைய அழகு விளங்கும் இவ்வூரிலிருந்து அரிதில் முயன்று முடித்தவேள்விக் களத்தில் யாவரும் காணுதற்கரிய தூணொன்றை நாட்டினன். அத்தகைய மேன்மை பொருந்திய இச் செல்லூரின்கண் வாழ்ந்து புகழ் படைத்த கிழார் ஒருவர்க்கு மகனாவார் இப்புலவர்

பெரும்பூதங்கொறறனார். இவரது இமமுழுப் பெயரோடு அகநானூற்றில் மட்டும ஒரு பாடல (250) காணப்படுகினறது. ஆயின், (குறு 218, 358, 363; நற். 30). ஆகிய வேறு நான்கு பாடல களையும சேர்தது இவருடையனவாக வையா புரிபபிள்ளையின் சங்க இலக்கியப பதிபபு காட்டுகினறது. அவற்றுள் குறு. 363-ஆம் பாடலின் ஆசிரியர் பெயர் செல்லூர்க் கொறற னார் (உ. வே. சா.) ஆகலின், அவரை மட்டும் இப்புலவராகக் கொள்ளும் வாய்ப்புணடு. மற்று, (குறு. 218, 358; நற். 30) ஆகிய மூன்று பாடல் களின ஆசிரியர் பெயா கொற்றன் (உ. வே. சா.) எனறும், கொற்றனார் (பி நா) எனறுமே அவ்விரு தொகை நூல்களிலும் உள்ளன. 'ஆர' என்னும சிறபபு விகுதியே வேறுபாடு ஆகலின் இவ்விரு பெயர்களையும பொதுபபடக கொற்றனார் என ஒன்றாகவே கொள்ளலாம். வேறு எந்த அடையு மிலலாத இபபெயரை, இடையன் சேநதங்கொற்ற னாா முதலாக அடையடுத்த கொற்றனார் பெயர்கள் பல இருக்கையில, செல்லூராகிழாா் மகனாா பெருமபூதங்கொற்றனாா ஒருவருடன் மட்டும் தொடர்புபடுத்தத் தகுநத ஏதுவேண்டும். அவை கிடைககாத நிலையில வேறு வேறு புலவர் பெயர்களாகக் கொள்வதே சாலும் (உ. வே. சா.) இம்மூனறு பாடலகளைப் பாடிய கொற்றனாரை யும செலலூர்க் கொறறனாரையும் வேறுபடுத்தியே குறுந்தொகையில பாடினோா வரலாறு கூறுவர். அவர் செல்லூர்க் கொற்றனாரைக் கூடச செலலூர் கிழார் மகனாரான பெரும்பூதங் கொற்றனா ரொடு தொடர்புறுததாமை அறியததகும். ஆயினும், ஊர்ப்பெயர் ஒட்டினைக் கருதி இவை யிரணடு பெயர்களையும் இணைத்துக காணலாம். ஆகவே, செலலூர் கிழார் மகனாரான பெரும் பூதங் கொற்றனாரே செல்லூாக கொறறனார் எனச சுருககமாகக் குறிககப பெறறார் எனக் கருத லாம. இவ்வாற்றால, (அகம். 250; குறு. 363). ஆகிய இரு பாடலகள் இவருடையனவாம. அவறறை முறையே நெய்தல, பாலை எனற இருதிணைகளில இவர் பாடியுள்ளார். தலை மகனுககுக குறை நேர்ந்த தோழி தலைமகளிடத்தே சென்று அவள் குறை நயக்குமாறு படைத்து மொழிவதனை இவரது முதற் பாடலில நயமுறக் காணலாம்; 'நாம தோழியர் கூட்டத்துடன் மணலவீடு கட்டி விளையாடியிருக்கையில அங்கு வநத தலைவன அமமணல வீட்டினைப் புகழநது பேசி மறுமொழி பெறாது சென்றனன; அனறு முதல், துன்பத்தோடு தோள் மெலிந்து அலரால வருந்தி வளைநெகிழந்த நம்முடனே, நாம் முன்பு விளையாடிய துறையும் துயிலொழிநததுகாண்' என்ற தோழியின் கூறறு அறிநதினபுறததகும. பிரிவுணர்ததிய தலைவனிடம தோழி அப்பிரிவின கொடுமையுரைபபதாக இவரது குறுநதொகைபபாடல அமைந்துள்ளது. 'தன னுடனே இனபுறுதலின்றி அறுகம்புல்லை மேய்ந் திருக்கும் மலைப்பசுவைக் கணடு மலையெருது விருப்பத்தினால் பெருமூசசெறிநது, உகாய்மர நிழலிலே தங்கும்படியான சுரநெறியில் நீ நின காதலியை இன்றிப பிரிநது செலலுதல் இனிதோ' எனறு தோழி தலைவனை வினவுவதாக இவர் அப்பாடலை அமைத்துள்ளார்.

**செல்லூர்க் கொற்றனார்** - புலவர். 'செல்லூா கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனாா' காண்க.

**செல்லூர்க் கோசிகன் கண்ணனார்** - புலவர். செல்லூா என்னும் ஊரினர்; கோசிக கோததிரத்தினா; கண்ணனார் எனனும் இயறபெயரினர். இவருடைய தாக அகநானூற்றில 66-ஆம் பாடலொனறே யுள்ளது. அதனகீழ இவர் பெயர் செயலூர்க கோசங் கண்ணனார் எனற பாட வேறுபாட்டுடன காணப்படுகின்றது. இவர் தம் பாடலை மருதத் திணையில், பரததையிற்பிரிநத தலைவன் விடுத்த வாயிலாய் வந்த தோழிக்குத் தலைவி கூறியதாகப பாடியுள்ளார். தலைவியை விடுத்துத் தலைவன புதுவோள் ஒருததியை மணககுமுகததான, தெரு வழியே தேரில போகையில், அவனது தேர்க குதிரையின் மணியோசை கேட்டுக காணும விருப போடு மனைக்குள்ளிருநது தளர்நடையிட்டு ஓடி வந்த புதல்வனை நோககிய அவன, தேரை நிறுததி இறங்கி, அப்புதல்வனையெடுத்து அணைதது விடுக்கவும் தனனை விடாது அழுத புதலவனால தடையுண்டு மனைபபுகுநது தலைவியொடு அவன தங்கியதை இவா அழகுறப புனைநதுள்ளாா. தலை வனின் வேறறு மணததைத தடுதத புதலவனைக் குறித்து உவநத உள்ளததளான தலைவி, பகைவரும விருமபும் குறறமறற அழகினையுடைய சிறுவரைப பெற்ற செமமலோா, இமமையுலகத்தும் புகழொடு விளங்கி மறுமையுலகததையும மறு வின்றி எய்துவர் எனப பலரும் கூறும பழ மொழியின வாய்மை கணடு மொழிவதைப் பாடிய முறையில இவர் புதல்வர்ப் பேறறின சிறபபினைக் காட்டியுள்ளமை கருதத்தகும்.

**செல்வக்கடுங்கோ** - சேரவேந்தன். இவன அநதுவஞ் சேரலுககும் ஒருததநதை எனபான மகளாகிய பொறையன பெருநதேவிககும் மகனாவான (பதி. ப. 7). இவன் பெயர் சேரமான் கடுங்கோ வாழியாதன

(புறம். 8-அடிக). சேரமான செலவககடுஙகோ வாழி யாதன (புறம். 14-அடிக). சேரமான சிககற பளளித துஞசிய செலவக கடுஙகோ வாழியாதன (புறம். 387-அடிக) என மேனமேல நீணடு வழங்கும். அனறியும செலவக கோமான (பதி. 67,23). செலவககோ (பதி. 63 16) எனச சுருங்கியும பாடலகளில பயினறு வரும். செலவக கடுஙகோ வாழியாதன என்ற இவனது இயறபெயர் முழுதுமே இவனைப பற்றிய குணடுகட பாலியாதனாருடைய பாடலில (புறம். 387:30). பயினறு வநதுள்ளது. சேரலாதன என்ற குடிபபெயரளவோடும இவன கபிலரால குறிக்கப பெறுகினறான (புறம். 8:5). இச செலவக்கடுங்கோ வாழியாதனைக கபிலர் பனனிரு பாடலகளாலும (புறம். 8:14; பதி. 61-70). குணடுகட் பாலியாதனார் ஒரு பாடலாலும (புறம் 387). சிறப்பிததுப பாடியுள்ளனர். அவறறால இவன பணபுகள் பலவும் புலனாகினறன. இவன ாதல குறிதது, இரககமோ மகிழசசியோ எதுவுமினறி ஒதத நிலையில ஈயுந தோறும மிகுததது வழங்குவான எனனும நறபுகழ நாடெலலாம பரவத திசழநதான (பதி 61:12-14). 'பார்பபாராக கல்லது பணிநதறியாய; நட்புடையோர்க்கல்லது கணணோடி அஞ்சாய்; நிலவுலகே புடைபெயருங காலமாயினும நீ சொனன சொலலைமாறறிப பொயததலறியாய்' எனக கபிலராலும இவன பணபுகள் பாராட்டப் பெறறன (பதி. 63:1-7). இவன தனனை ஏனையரசா வழிமொழிநதொழுக நுகரும இனபததை விருமபி உலகம பிறர்ககும் பொதுவெனும சொலலைப பொறுத்துக கொள்ளுதலினறிப பிற நாடுகளை வெனறு தனனெல்லையைப பெருககும மடியாத ஊககமும பொருள்களைத தனககெனக் காவாத ஈகையும பகைவரை வஞ்சியாது எதிர்நின்று கொலலும படையுமுடையவன (புறம். 8). காம வேட்கையால மாறாத வெறறி வேட்கை வாய்ந்தவன (பதி. 68). பிணமபடப் பகைவரை அழிதத பின அப்பகை நாடடினுள் கெட்ட குடிகளை அஙகேயே பயினறு வாழுமாறு செய்யும் பண்பு இவனிடத்தே சிறபபாகக காணபபடுவதாம் (பதி. 69:9,10). இவனது வெற்றிகளில ஏனை வேந்தராகிய சோழ பாண்டியரை ஓட்டியது விதநதெடுததுக குறிககப பெறறுள்ளது (பதி. 63:8-12). காஞசிப பொருளாகிய நிலையாமையையுணாநத வீரர்ககுப் பெருமகனாகவும விலலோர்ககுக் கவசமாகவும் சோநதோாககுச செலவனாகவும பாணர்ககுப புரவலனாகவும பரிசிலர்ககுச செலவமாகவும் இவன குறிககப பெறுவான (பதி. 65). இவன தன அரசியல சுறறம சூழ அமர்நது வேளவிகளை இயற்றிக கடவுளரை உணபித்தான்; கேள்வியாகிய மறைகளை ஓதி உயாநிலையுலகத்து மேலோரை இனபுறுத்தினான (பதி. 70:17-19). பதிறறுப பததினுள தனனைப் பததுப பாடலகளால (61-70) பாடிய கபிலாககுப பரிசிலாகச சிறுகொடையென நூறாயிரம பொற்காசுகளைக கொடுதது, 'நனறா' எனனும குனறேறி நினறு தன கணணிறகணட நாடுகளையெலலாமும இவன காட்டிக் கொடுத்தான எனறு அப்பத்தின பதிகம் கூறும். வாயிலில வநது நினறு தனனை வாழ்த்திப் பாடிய கிணைஞுனுககு, அவனது சிறுமையை நோககாது தன பெருமையை நோககிக களிறுகளையும புரவிகளையும, ஆனிரைகளையும ஆட்களையும் கனவென மருளுமாறு நனவிலே நலகிய இவனது கொடைத திறததை அககிணைஞன் கூற்றிலேயே வைததுக குணடுகட் பாலியாதனார் பாடியுள்ளதும (புறம். 387). காணததகும். இசசெலவககடுஙகோவுககு வேளாவிக கோமானாகிய பதுமனின மகள் வயிற்றிற பிறநதவனே தகடூரெறிந்த பெருஞசேரலிருமபொறை. முடிவில இவன சிககறபள்ளி எனனுமிடத்தே இறந்தமையால சிககற பள்ளித துஞசிய செல்வககடுஙகோ வாழியாதன் எனக குறிக்கப் பெறறான.

**செல்வக்கடுங்கோ வாழியாதன்** - சேர வேந்தன். 'செல்வக் கடுங்கோ' காணக.

**செல்வக்கோ** – சேரவேந்தன். செலவககடுங்கோ வாழியாதனைச 'செலவககோவே' என விளிததுப பாடுவர் கபிலர் (பதி. 63:16). செலவக்கடுங்கோ' காண்க.

**செல்வக்கோமான்** - சேரவேந்தன். 'பாணனே, நீ நின் சுற்றததோடே கூடிச் சான்றோர் பெருமகனும் நேரிமலைத் தலைவனுமான செலவக் கோமானைப் பாடிச் சென்றால், பந்தர் எனனும் மூதூரிடததுக் கடலினினறு கிடைத்த முத்தமொடு, கொடுமணம எனனும் ஊரில செயயப்பட்ட நலலணிகலன்களைப் பரிசிலாகப் பெறுவாய்' என்று பாணனைச் செலவக்கடுஙகோ வாழியாதனிடம ஆற்றுபபடுத்தும் முறையில கபிலர் பாடியுள்ளாா (பதி. 67). செலவககடுஙகோ, காணக.

**செல்வங்கள்** - பொருள முதலியவற்றால் வரும் வளஙகள். சேர்ந்து வாழும் சுற்றததாருடைய நெஞ்சு வருந்துமபடி தனனோடே கெழுமுதலுறற செலவஙகளை - வளங்களை - மேலே வளாககும முயறசிதானும் இலலாதவனுடைய குடி நாள தோறும தேயும் (கலி. 149:8,9).

செல்வம் - பொருள் முதலியவற்றால வரும் வளம்|மேம் பாடு 'மறுமை உலகததினகண நுகரும செலவத்தை விரும்பின நீர்நிலை பெருகச செயதல வேணடும்' எனப்பாண்டியன நெடுஞ்செழியனுக்குக குடபுல வியனார் அறிவுரை கூறுவா (புறம. 18:13,28). 'பெருமானே, நின செல்வம அறனும் பொருளும இன்பமும மூனறும் ஆற்றும' எனச சோழன நலங் கிள்ளியை, உறையூர் முதுகண்ணன சாததனார் பாடுவர் (புறம். 28:15,16). பாணர்க்கு நீஙகாத செல்வம் எல்லாவற்றையும் செய்தவன வளவன (புறம். 34:14,15). 'நாடு பொருந்திய செல்வத்தை யுடைய பெருமைபொருநதிய வேநதே' எனச சோழன் குளமுற்றததுத துஞ்சிய கிள்ளி வளவன பாராடடபபடுகினறான (புறம. 35.12). உயாந்த புகழ்பொருநதிய நிலமாளும் செலவம எயதியவன் நெடுங்கிளளி (புறம. 47:6-11). புலவரது ஓய்நத செலவான உளதாகிய வருத்தத்தைப் பார்தது, மானினது திரளைத தொலைத்த, செல்வததையுடைய தலைவனாகிய வல்வில வேட்டு வன் (புறம. 150:4-7). 'புதலவன் பசி போககுதற்கு வழியறியாது நனவினகணணும துயரம் உறுவோள் வளப்பம் மிகுமாறு, தொலையாத செல்வத்தைப் பரிசில் தநது விடுத்தலை விருமபுவேன்' எனக் குமணனைப் பெருஞ்சிததிரனார் பாடுவர் (புறம். 160:25-28). 'வலிகெட்டுப் பொறுத்தற்கரிய துனப முறும, எனது பெரிய வறிய நிலையிலுள்ள மனைவி நினது முயறசியாலுணடாகிய செல்வத்தைக காண தொறும மருள, யான் களிற்றின் மீது ஏறிச செம் மாநது செலலவிருமபினேன' எனக் குமணனிடம் பெருஞ்சிததிரனாா கூறினார். (புறம். 161:14-20). 'போரினகணணே உழக்கபபட்ட நினது படையை யும் நினது சீர்மிக்க செல்வத்தையும் பலபடப் புகழ்வேம' என்று குமணனைப பெருஞ்சிததிரனார் பாடினார் (புறம 161.30-32). ஈர்நதூர் கிழான தோயன் மாறன, நாள்தோறும தொடர்நது கொடுக்கும் செல்வமும உடையானலலன; இரந தோாக்கு இல்லை எனச சொலலி மறுக்கும புன்மையுமுடையனலலன (புறம 180:1,2) 'செல்வத துப் பயன ஈதல; யாமே நுகாவேம என்று கருதின தவறுவனபல' என அறங் கூறுவர் நககீரனார் (புறம. 189:7,8). 'அரசர் வெணகொறறக குடை நிழறறப்படும செலவததை யாம் வியததல இலலை; எமமால் வியககபபடுவோர் சீறூா மனனராயினும எம முறைமை அறிநது நடபபோா' எனச சோழன் பரிசில நீட்டிததபோது கோனாட்டு எறிச்சிலூர் மாடலன மதுரைக குமரனார் மொழிநதார் (புறம. 197:7,8). 'நின்னைப புகழநது, பரிசினமேல அன்பு பெரிதாகலின கனவின் கண்ணும நின புகழையே கூறும் எனது விருபபததையுடைய நெஞ்சம் இனபுறறு மகிழ, ஆலிலையினகண மேவிய திருமால போலும நின செலவததை யெலலாம் கண்டேன்; ஆதலின் விடையும கொண்டேன்; நீயும விருமபிய செலவததுடனே, புகழும் இனிதாக விளங்கி நெடுங்காலம் வாழக' எனப பாணடியன இலவநதிகைப் பள்ளிததுஞ்சிய நனமாறனை, வடம வணணககனபேரிசாததனாா வாழ்ததுவர் (புறம. 198:7-10, 21-23). 'நிலைபெற்ற வலியோடு நினனைக் கருதிப் போா செயதறகு எழுநதிருந்த நின் புதலவர் தோற்பின் நினது பெரிய செலவத்தை, அவர்க்கொழிய யாவர்ககுக கொடுப்பை' எனக் கோபபெருஞ்சோழன மககள் மேலபடைகொணடு சென்ற நிலையில புலலாறறூர் எயிறறியனார் அமமன்னனை வினவினாா (புறம். 213:14-16). 'என்னுயிரைப் பாதுகாபபோனைப் பிசிர் என்னும் ஊரிடத்தான் எனபர்; அவன எமக்குச் செலவம உடைய காலதது நிறபினும, யாம இனனாமை உறுஙகாலதது ஆணடு நிலலான்' என்று, கோபபெருஞ்சோழன வடககிருநதபோது கூறினான (புறம. 215:7-9). 'இடியேறு போனற நினனுடைய தாள் நிழறகண் வாழும் வாழககையை யுடைய பரிசிலா செலவமே யனறியும களிறறியானைகளையுடைய வேந்தரது மடியாத வென்றியும நினனொடு கழிய நீ கலலா யினையே' என நடுகலலாகிவிட்ட வீரனைப பாாததுச சிறுகருந்துமபியாா கூறினாா (புறம. 265.6-9). தலைவியின அணணனமாராகிய உடன பிறநதோர், தமமோடு ஒவவாதவாககு அவளைத தருவதிலலை எனறு சொலலி, மகள் வேணடி னோா தரும செலவததை விழையாராயப போர் செயவதையே விருமபினா (புறம. 345:12-15). 'பலர்ககும பயன உணடாகத்தகக செயலகளைச செய்து இவவுலகம இனபநிலையடைய ஆணட வேந்தர் சிலராவா; அஃதறியாதோா பலா; அனனோர் செலவமும மனனி நிலலாது' எனத தநதுமாறனுககுச சங்க வருணர் எனனும நாகரையா அறிவுரை கூறினாா (புறம. 360:7-11). முடகள் கலநத கொடிகள பினனிக் கிடககும புதரிடையே நினறு வறறும முதிய பாழிடததின கண மழை பெயதாறபோனறது ஈயாமனனா செலவம் (புறம். 381:9,10). 'பகனறையின புதுபபூப் போனற, அகல மடிககபபட்ட ஆடை கொடுதது உடுபபிததுச் செல்வததையும குறையா அளவிற கொடுபபாயாக' எனச சோழன குளமுறறததுத துஞ்சிய கிள்ளிவளவனிடம நலலிறையனாா கூறினார் (புறம. 393:16-19). 'யானையின பொன னரி மாலையணிநத பிடரினமேல ஏறியிருநது

சிறக்கும், நினது பலரும் புகழும் செல்வச் சிறப்பினை இனிது காண்கின்றோம்; நீ வாழ்க' எனச் சேரலாதனைக் குமட்டூர்க்கண்ணனார் வாழ்த்துவர் (பதி. 11:16-20). நிலவுலகத்தில், புகழை நிலை நாட்டின, பல்வேறு வகையினைக் கொண்ட செல்வங்களை உடையன் ஆதலால் 'வண்டன்' என்னும் வள்ளலை நீ பெரிதும் ஒத்திருக்கின்றாய்' எனக் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் குறிப்பர் (பதி. 31: 21-23). பல நாட்கள் பாசறையிடத்தே இருத்தலால், சங்கு முழங்கும் முழக்கமும் பிற கருவிகள் இசைக்கும் ஒலியும் எழுப்பும், பெருமை பொருந்திய படைச்செல்வத்தின்கண் பொருந்தியவன் சேரன் (பதி. 50:22-26). 'பாடி வருவோர்க்கு வரையாது வழங்குதலின், பலகாலும் பிறர் கொண்ட வழியும் குறையாத செல்வத்தை உடைய நெடியோன் இளஞ்சேரல் இரும்பொறை (பதி. 82: 12,13). (ஆகவனீயம், தக்கிணாக்கினி, காருகபத்தியம் என்னும்) முத்தீயால் உண்டாகிய செல்வத்தினையுடையவர் அந்தணர் (முரு.181,182). உலகத்துத் தொழில்களில் மேலாகச் சொல்லும் உழவு, வாணிகம் என்கின்ற இரண்டு கூற்றாலே பொருந்துதலையுடைய சீரிய செல்வத்தாலே புகழ் நிறைந்தவர் குடிமக்கள் (மது. 119-123). 'மாளிகையிடத்தேயுள்ள எமது பெரிய செல்வத்தையும் நினையாளாய் வேனிற்காலத்தே உடன்போக்கு மேவ எங்ஙனம் வல்லள் ஆயினளோ' என மகட்போக்கிய தாய் கூறினாள் (அகம். 105:4-17). 'அறிய வேண்டுவனவற்றையெல்லாம் ஆராய்ந்தறிந்து போரினை வென்ற செல்வத்தை நம சுற்றத்தார் விரைந்து சென்றுரைக்கும்போது தலைவி மகிழ்வள்' என வினை முற்றிய தலைமகன் கூறினன் (அகம். 144:12,18,19). பாவ நெறியிற் செல்லாத வாழ்க்கையும், பிறன் மனைவாயிலிற் சென்று நில்லாத செல்வமும் ஆய இரண்டும் பொருளான் ஆகும் (அகம். 155:1,2). பேரரசர் இருவர் மாறுபாடு கொண்டு பொரும் போர்க்களத்தே தமது ஒப்பற்ற படைக்கலத்தைக் கொண்டு எதிர்வரும் படைகளைப் பிறக்கிடச் செய்யும் செல்வம் (வெற்றிச் செல்வம்) உடையோர்க்குப் பெருமை நின்றது (அகம். 174:1-3). 'இனிமை நிறைந்த பலா மரங்களையுடைய அழகுமிக்க செல்வத்தை உடைய நம் தந்தையும் நின்னைத் தலைவனுக்குக் கொடுத்தலை ஏற்றுக் கொண்டான்' எனத் தோழி தலைமகட்குக் கூறினள் (அகம். 282:11,12). தமையன் கொண்டு வந்த தறுகண்மையை உடைய மீன்களைத் தழையணியினை அணிந்த அல்குலையுடைய செல்வமிக்க தங்கைமார் விழாச் செய்யும் தெருக்களில் விலை பகர்ந்தனர் (அகம். 320:2-4). செல்வச் சிறாரது சீறடியில் பொன்னாலாகிய கிண்கிணி விளங்கின (குறு. 148:1-3) இவ்வுலக முழுவதும் பிறர்க்குப் பொது இல்லையாகத் திகிரி உருட்டும் செல்வமானது உண்மையாகவே கைகூடியதாயினும் அதன்போக்கு கனவில் தோன்றி மறையும் அத்தன்மையது (அகம். 379:6-9). 'நம்மைப் புறங்காக்கின்ற சிறந்த செல்வத்து (மேம்பாட்டினை உடைய) அன்னையும் துஞ்சினள்' எனத்தோழி கூறினாள் (நற். 182:2-4). அரசராலே மாராயம் பெறப்படுதலும் அவர் முன்பாக குதிரை, தேர், யானை முதலிய வற்றின் மீது ஏறிச்செலுத்துதலும் செல்வம் அன்று; அவை முன்பு செய்த செய்வினைப் பயனே; சான்றோராலே செல்வம் என்று உயர்த்துச் சொல்லப்படுவது, தம்மை அடைக்கலமாகச் சேர்ந்தோருடைய துன்பத்தை அஞ்சி, அதனைப் போக்கும் இயல்புடனே, இனிய தன்மையனாயிருக்கும் அருட்செல்வமேயாம் (நற். 210:5-9). புகழ்மிகும்படி வாழ்கின்றவருடைய செல்வம் பொலிவடைதல் போலக் காணுந்தோறும் களிற்றியானை பொலிந்து தோன்றும் (நற். 217:1,2). 'எம்முன்னே வருந்தி அழகழிந்த தன்மை ஒன்றல்லாது நின்னை வசமாக்கு தலைத் தெளியாத பெரிய தோளாகிய செல்வத்தையுடைய இவளினும் என்னைப் பெரிதும் அன்பு செய்து ஒழுகினாய்' என வாயில் நேரும் முகமாகத் தோழி தலைவனை நெருங்கிக் கூறினள் (நற். 270:4-7). 'மணம் முடிக்கும்போது சிலம்பினைக் கழற்றுதற்குச் செய்யும் செல்வத்தை (விழாச் சிறப்பினை யான் கண்டு மகிழாது பிறர் கண்டு மகிழும்படி சென்றொழிந்த என் புதல்வியின் அடிகள் பாலையின் அருஞ்சுர நெறியில் சென்று வருந்து கின்றனவோ' என மகட்போக்கிய தாய் **கூறினள்** (நற். 279:9-11). யானை தனது காட்டில் நிறையப் பெருகியதால் அத்தகைய செல்வமுடைய, வேற் படை ஏந்தியவன் தலைவியின் தந்தை (நற். 324:4-6). 'ஊரனே, நின்னைச் சார்ந்தோர்க்கு நீ அருள் செய்து காவாயாதலால் நின் துணையோர் செல்வமும் குன்றும்; யாமும் வருந்துகின்றோம்' எனத் தலைவனிடம் தோழி கூறினாள் (ஐங். 50:1). தலைவன் இயல் தேர்ச் செல்வக் கொண்கன் (ஐங். 104:4). கொடுத்தற்கு மனம் சிறியவனது செல்வம, தன்னைச் சேர்ந்தவரைக் காவாது (கலி. 10:2,7). 'இவளுடைய நிறம் பசலை நிறத்தாலே கைக்கொள்ளப்பட்டுப் பண்டை நீர்மை போனக்கால், நீ போக்கு எண்ணுகையினாலே புதிதாகத் திரண்டு பெருத்த செல்வத்தினால் அவளழகை மீட்டல் பொருந்துமோ' எனப்பிரிவுணர்த்தியதலைமகற்குத் தோழி கூறினாள் (கலி. 15:10-13). அறிவற்றவர்

உறவு, ஒருவர்க்குச் செல்வமுண்டான இடத்து நீங்காதிருந்து அவருடைய செல்வத்தை நுகர்ந்து பின்னை அவர் வறுமையுற்ற காலத்து அவர்க்கு ஒன்றை உதவாது (கலி. 25:19,20). கொடுத்தல் தொழிலிடத்துப் பொருட்குறை காட்டாமல் கொடுத்து, இல்லறம் நிகழ்த்தும் முறைமையை அறிந்து நிகழ்த்திய தீவினை இல்லாதவனுடைய செல்வம் மிகுமாறு போல, மரங்கள் தழைத்தன (கலி. 27:1,2). உள்ளம் மடிந்திருத்தல் இல்லாதவனுடைய செல்வம் பெருகுமாறு போல மரங்கள் பூப் பெருக்க, அங்ஙனம் முயன்று பெற்ற செல்வத்தைத் தான் வருந்தாமல் பாடிப்பெற்று உண்பாரது நுகர்ச்சி போல, அம்மரங்களின் கொம்புகளிலே தேனையுண்டு மிஞிறுகள் ஆரவாரித்தன (கலி. 35:1,2).'நின்னிடத்துத் தப்பில்லையாயினும், உயிரை வாங்கும் நின் வடிவை அறிந்து வைத்தும், அதற்கு மேலே அணிசெய்து, தம் செல்வச் செருக்காலே புறப்படவிட்ட நும்முடைய சுற்றத்தாரைத் தவறுடையரல்லர் என்று கூறலாமாகிற கூறு' எனத் தலைவன், காமஞ்சாலா இளையோளிடம் தருக்கிக் கூறினான் (கலி. 58:15-18). அறிவுடையோர், தம்முடைய செல்வம் முடிவை அடைகையினாலே வறுமையுற்றுத் தம்முடைய வருத்தத்தைக் களைதல் தக்க உறவினரிடத்திலே சென்று தம் முறையை அவர்க்கு வாய்விட்டுச் சொல்லத் தொடங்கிப் பின்னை அதனை முடியச் சொல்ல மாட்டாது தயங்குவர் (கலி 61:2-4). 'எம்முடைய தோழீ, இவளுடைய் கணவன் கொல்லுகின்ற ஏற்றைத் தழுவினான் என்று ஊரார் புகழ்ந்து சொல்லுகின்ற இச்சொல்லைக் கேட்டு, மோரை விற்று யாம்வரும் செல்வத்தை எங்கணவன் தருமோ' எனத் தலைவி கூறினாள் (கலி. 106:43-45). இவனாலே விளங்கிய கலந்த உறவும், உண்மை கூறலும் நடுவு நிலைமையும் இனி விளக்கமின்றிப் போயின என்று தனக்குப் பின்பு உலகத்தார் இரங்கும்படியாக, அவற்றிற்கு உயர்ச்சி மிகும்படி ஆராய்ந்து, பொய்யைக் கெடுத்து நன்றாக ஆண்ட அரசனோடே சேரக்கெட்ட, நல்ல ஊழால் உண்டாகிய செல்வம்போலே வரிசைப்பட்ட கதிரையுடைய ஞாயிறு மறைந்தது (கலி. 120.1-5). முருகனை நம சேனைக்குத் தலைவன், எனக்கருதி, அங்கி (நெருப்புக் கடவுள்) செல்வத்தினையுடைய கோழியை அவனுக்குப் பரிசாகக் கொடுத்தான் (பரி. 5:57,58). திருமால் மலர்ந்த துழாய் மாலையையும், அளவற்ற செல்வத்தினையும் கருடன் எழுதப்பட்ட கொடியையுமுடையவா (பரி. 8:1,2). 'தண்பரங்குன்றமே மழை வறந்ததாயினும், நெறி நீர் அருவி, இடையறாது ஒழுகும் செல்வம் நினக்கு நிலைப்பதாக' எனச் செவ்வேளை நல்லந்துவனார் வேண்டுவா (பரி. 8 128-130).

**செல்வமகள்** - செல்லமகள். 'தலைவி பலாவின் பழம் வீழ்ந்து கிடந்த பாறையிடத்தே எடுத்துக்கொண்டு உண்ணும் ஊணினையும் பெருஞ்சோற்றுத் திரளையும் உடைய சிறிய குடியிலிருக்கும் பிள்ளையான மிடிப்பட்டாருடைய செல்வமகளாவாள்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 50: 11-14). 'கொடிபோன்ற நுடக்கத்தினையும், எண் கோவையாகிய மேகலையையும் பூத்தொழிலையுடைய கலிங்கத்தையும் உடையள் ஆதலால் இவள் இவ்வூரிடத்தே பிள்ளையால மிடிப்பட்டாருடைய 'நல்கூர்ந்தார்' செல்வமகள் என்று, காமஞ்சாலா இளமையளாய தலைவியைக் குறித்துத் தலைவன் தனக்குள் நினைந்தான் (கலி 56.10-12).

**செல்வர்** - செல்வத்தினையுடையவர். முக்கட் செல்வர் நகர் (புறம.6:18). பிறர்க்கு உதவலின்றித் தம்முடைய வயிற்றையே நிறைத்து, சொல்லுதற்கமைந்த மேம்பட்ட புகழை நீங்கிய, முரசு பொருந்திய செல்வர் நகர் ஆய் கோயிலை ஒவ்வாது (புறம். 127 8-10). நணுகுதற்கரிய தலைமையையுடைய மிக்க செல்வர், வறுமையால் இரப்போர்க்குக் கொடாமையின் பழைய வண்மையுடைய மாக்கள் போலப் பின்னும் தம் பெயரை நிறுத்தி உலகோடு தொடர்பு கொள்ளுதலை அறியார் (புறம். 165 3-5) படைப்புப் பல படைத்து, பலரோடு உண்ணும் உடைமை மிக்க செல்வர் ஆயினும் மக்களை இல்லோர்க்குப் பயக்குறை இல்லை (புறம். 188) சோணாட்டு அண்ணல். மணணாள செல்வர் ஆயினும் பாடிச் சென்றோர்க்கு ஈதல் ஆனா இயல்பினை (புறம். 337:1-5). 'உலகத்தில் வாழ்பவருள் செல்வர் பலர்; அவர் எல்லோரும் பெற்றுள்ள புகழ்களுள் நினது நல்ல புகழே மேம்பட்டு நிற்கும்' எனக் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடுவர் (பதி 38: 1,2). காந்தளம் கண்ணியணிந்த செழுங்குடிச் செல்வர் மகிழ்ச்சியை உடையவராகி இரப்போர்க்குக் கொடுத்தனர் (பதி. 81.22,23). நாட்காலத்து மகிழ்ந்திருக்கின்ற இருப்பிலே மேகம்போல வரையாமற் கொடுக்கும், வண்மையினையுடைய வளப்பம் பொருந்தியவர் செல்வர் (மது. 442,443). இளைய செல்வர் புறமண்டலத்தாரும் உள்ளூரிலுள்ளாருமாய்ப் பரத்தையர் தம் வடிவழகை விரும்பிச் சென்றனர் (மது 572). பழமரமுள்ள இடந்தேடிச்சென்று, அவற்றின் பழத்தை நுகர்தலைத் தமக்குத் தொழிலாகவுடைய புள்ளினம

போல, வளவிய குடியிற் பிறந்த செலவரும், அவர் களால தோனறிய பிறரும நனறாகிய அகஙகளில நலல மகளிரை வரைநது மகிழ்வர் (மது. 576-579). 'முழுமுதல் அரணததைத நினறு வருநதினசெலவரைக் கொணாமின' என அழைத்து அவாகருப் பாணடியன சிறபபுச செய்தான (மது. 730,731). அரசா முரசங்களையுடைய செலவர் (அகம். 156.1). செலவர் விரைநது செலலும் தேர்களையுடையவர் (அகம. 326 3,4) செல்வர் பொற்காசு இட்டு வைக் கும பெட்டியை உடையவர் (குறு. 233:2). தலைவி, பெருமுது செலவரது மடமகள் (குறு. 337:7). தவஞ் செயது பிறந்தவர் முதுசெலவருடைய புதலவா (நற. 58'1). செலவர் பல கட்டுககள் அமைந்த வீடு களையுடையவர் (நற. 71.6,7). செல்வர், பொன புனைக கயிறறால யானையை பிணிததனர் (ஐங. 356:1). பிறர்ககு இமமண்ணுலகம பொது என்னும் மொழி இனறி மண்ணுலகம முழுவதையும செல்வர் தனித்து ஆண்டனர் (கலி. 68:1).

**செல்வர் செல்வ - செல்வர்க்குச் செல்வன்.** வீறும் பெருங் கொறறமுமுடைய செல்வர் செலவ - செல்வர்க்குச் செல்வனே - என ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் புகழப படுகிறான் (பதி. 59:9,10). செல்வர் செல்வ எனத தொணடைமான இளநதிரையன் சிறபபிககபபடுகினறான (பெரு. 456).

**செல்வ / செல்வன் - 1. செல்வத்தினையுடையவன்.** 'போரை விருமபிய செலவ – செல்வத்தை உடையவ – நீ நின புதல்வர்சகுத தோற்பின, நின்னை இகழும பகைவர் உவப்பப பழியை உலகததே நிறுததுவை' என்று கூறிக் கோபபெருஞ்சோழன் மககள் மேல பொரச சென்றபோது புலவாற்றூர் எயிற்றியனார் தடுதது நிறுததினார் (புறம். 213: 17,18). 'புதலவனைத தந்த செலவன (கணவன) ஊரும மா வாராதே' எனப் போர்க்களததில மறவன் பட்டமையினை நினைநது அவன மனைவி இரங்கிக் கூறினாள் (புறம். 273:3,4). உண்ணா நோன்பினர் நீர்த்துறையில படிநது, திருவீற்றிருக் கும் மார்பினகண் அணியப் பெறறுள்ள துளசி மாலையும ஆழிப்படையுமுடைய செல்வனான திருமாலின் அடியைப பரவினர் (பதி 31.6-9). 'வடுப் பொருநதின மார்பை உடைய குற்றமில்லாத செல்வ! வானவரமப' எனக் களஙகாயக்கண்ணி நார்முடிச் சேரல சிறபபிக்கப்படுகின்றான் (பதி. 38 11,12). 'வில வீரராகிய சானறோாககு மெய புகு கருவி போனறவனே! அடைநதோாக்குச செலவ' எனக் கபிலர் செலவக் கடுஙகோ வாழி யாதனைப பாராட்டுவர் (பதி 65:5). 'காவிரி யாற்றின் நீர் மிக்குள்ள, நெடுந்தொலைவி லேயே விரிநது தோன்றும் அழகினையுடைய புகாா நகரததையுடைய செலவனே! எனப பெருஞ் சேரல் இருமபொறைவிளிககப் பெறறான (பதி. 73: 8,9). வளைநத சிறகினையுடைய கருடனை யணிந்த நீணட கொடியினையுடைய செல்வன திருமால (முரு. 151). ஏறறினை வெற்றிக் கொடி யாக எடுதத உமையை ஒரு பாகததே கொண்ட, பலரும் புகழ்கின்ற தோளினையும இமையாத மூனறு கணணினையும் உடைய, முபபுரததை எரிதத மாறுபாடு மிகக செலவன (சிவன) (முரு. 151-154). எலலோரானும உயாததுச சொலலப் படுகினற யானையின் புறககழுததிலே ஏறிய திரு மகள் விளங்கும் செல்வன (இநதிரன) (முரு. 158, 159). அருந்ததி ஒழிநத அறுவராலே பெறபபட்ட ஆறு வடிவு பொருநதிய செலவ (முருக) (முரு. 255). வேல பொருந்திய பெருமையை உடைய கையான மைந்த பெரிய செலவ (முருக) (முரு. 265). 'பகை வரைத திறை கொள்ளும கூறுபாடுகள் எல்லாம் முடியப் போன செலவ' எனக கரிகாலன சிறப் பிக்கப் படுகிறான (பொரு 120,121). பாமபு ஈனறு கொடுத்த ஒளிவிளங்கும் நீல நிறததினையுடைய உடையினை ஆலமர் செல்வறகு விருமபிக் கொடுத் தவன் ஆய அணடிரன (சிறு 95-97) எரிகினற சினததையுடைய கதிர்களையுடைய செலவன் (கதிரவன) (பட். 122). திதியன், பொதியின் மலைககுரிய செலவன் ஆவான (அகம. 25:20). 'இதோ, இந்தச செலவனுககு நாங்கள் பொருந்திய வாகள ஆவோம் எனறு கூறி மெல்ல என மகனி டததுச் சென்றேன' எனத தலைவி உரைததாள் (அகம. 26:19-21). செலவன (முருகன்) பெரும பெயர் ஏததி வேலன வெறியாடல் (அகம். 98: 18,19). நிரமபிய கதிர்களின் ஒழுஙகினைக் கொணட ஆழியையுடைய செலவனின (திரு மாலின) பகைவர் போர் ஒழிதற்குக காரணமாய் மாாபினிடத்தே தஙகிய மாலைபோல மேகம் அழகிய விலலை விசுமபிடததே வளைததது (அகம. 175:15,16). நானகு வேதஙகளாய பழைய நூலை அருளியவன் முககட்செலவன் (அகம. 181.16). 'நீதானும கடைததெருககளையுடைய பழைய ஊரினகண் உள்ள, தேரையுடைய செலவனது (செலவ மனனனது) காதலிற் பெற்று வளர்தத மகனாயுள்ளாய்' எனக் கூறித தோழி தலைவனைச் சேட்படுத்தினாள் (நற் 45.4,5). 'செல்வன் (காதலன) தமரோடுறையும தனனூாககுச செல வான் கொலலோ' எனத தோழி கூறினாள் (நற். 344 8,17). கண்டல் மரஙகளை வேலியாகவுடைய, புறததே கழி சூழ்நத கொலலைகளையுடைய

கடல் நாட்டுச் செல்வன் தலைவன் (நற். 368:1,2). செல்வக் கொண்கன் செல்வன் (புதல்வன்) ஊர் அஃது (ஐங். 104:4). 'மூன்று முரசமும் கெழுமும் முதிய குடியிற் பிறந்த மாறுபாடு மிகுகின்ற செல்வனுக்கு (பாண்டியனுக்கு) உரிய அனைத்தும் தீதின்றிப் பொலிக' என விழா எடுத்தல் (கலி. 105: 2-6). அன்பர் மார்பு மலையோடு ஒப்பமைந்த செல்வன் (திருமால்) அடியைத் தலையினாலே வணங்கிக் கையினாலே தொட்டுச் சூளுறறனர் (கலி. 108:55,56). 'வளவிய விரைந்த நடை பயின்ற வலிமிக்க குதிரையை உடைய செல்வனே' என்த தோழி தலைவனைக் குறிப்பிட்டாள் (கலி. 125'5). 'வனமாலையணிந்த செல்வனே' எனத் திருமாலைச் சுட்டுவர் (பரி 3'87). 'கோபத்தாலன்றி இயல்பாகவே சிவந்த கண்ணினை உடைய செல்வ, எனத் திருமாலைக் கூறுவர் (பரி 4:10) முருகனை என்றபோது, அரிய போரிலே சிறப்புடைய அமரர் செல்வன் (இந்திரன்) நெருப்பை உமிழ்கின்ற வச்சிரம் கொண்டு எறிந்தனன் (பரி. 5'50-52). வானத்திடத்தே வளமிக்க செல்வன் (இந்திரன்) தன் மெய்யிற் பிரித்துப்பொறி விளங்கும் தோகையினை யுடைய அழகிய மயிலினை முருகற்குக் கொடுத்தான் (பரி. 5:58-60) குற்றமில்லாத துறக்கத்தை ஆளும அமரர் செல்வன் (இந்திரன்) (பரி. 5:69). தம்முட் பிரியாத மகளிரும் மைந்தரும், அல்லாத வரம வேண்டுவோரும் கூடி, மறுமிடற்று அண்ணற்கு மாசிலோன தந்த, கடம்பமர் செல்வன் நகரை வழி பட்டனர் (பரி. 8:125-127). 'பாம்புப் பகையாகிய கருடனைக் கொடியாகக் கொண்ட கோடாத செல்வனே' எனத் திருமாலைச் சுட்டுவர் (பரி 13:38, 39) 'கருடச சேவலைக் கொடியாக உயர்த்திய செல்வ! நீ ஓதுதற்கு இனிய வேதத்தாற் சொல்லப் படுகின்ற நல்ல புகழை உடையை' எனத் திருமாலைக் குறிப்பிடுவர். (பரி 13:40,41). 'நீங்காத வலியினை யும் சினவா திருக்கும் போதே சிவந்த கண்ணினை யும், செருவின் மேம்பட்ட திகிரியாற் செய்யும் வெல்போரையும உடைய செல்வ' எனத் திருமாலைக் குறிப்பிடுவர் (பரி. 13.57,58). 'செருவேல தானைச் செல்வ' எனச் செவ்வேளை விளிப்பர் (பரி. 18:54). 'வெற்றிக்கொடி உயர்த்தியசெல்வனே' என முருகனைப் போற்றினர் (பரி.21:16,17). 'பகை வரைத் தேயத்தொழித்த செல்வனே, நின்னைத் தொழுது எமக்கு விருமபின சுற்றத்தோடு நின் அடிக்கீழ் உறைதல் இன்றுபோல என்றும் இயைக' என முருகனை வேண்டினர் (பரி. 21:68-70). 'இருந்தையூர் அமர்ந்த செல்வ, நின் திருந்தடி தலையுறப் பணிகுவம்' எனத் திருமாலைப் பரவினர் (பரி. தி 1.5,6). அசைதலில்லாத மேலான புகழை யுடைய, துறக்கத்தை ஒக்கும், இரண்டு படப் பொறியையணிந்தவன வரைகெழு செல்வன (ஆதி சேடன) (பரி. தி.1:47-49).

2. திங்கள். ஞாயிற்றோடே மாறுபாடு மிகுந்த தலைமையினையுடைய செல்வன-திங்கள் (நெடு 161,162).

3. புதல்வன். செல்வக் கொண்கன செல்வன-புதல் வன- ஊா அஃது (ஐங். 104:4).

செல்வி - தலைவி (அரசி, இறைவி). 'விசும்பிடத்தே விளங்குகின்ற மகளிருள்ளே சிறந்த அருந்ததியை ஒத்தவள், நின தொன்னகாச செல்வி' எனக் களங் காய்க்கண்ணி நார்முடிச் சேரலின துணைவியைச் சிறப்பித்துக் கூறுவர் (பதி. 31.27,28). பேய்கள் ஆடும துணங்கைக் கூத்தினையும் அழகினையும் உடைய செல்விக்கு (இறைவிக்கு) பேயமகள் நொடி கூறினாள (பெரு. 459). மிக்க புகழ வாய்ந்தவள் கானகச் செல்வி (கொற்றவை) (அகம. 345'3,4). புலிநகக் கொன்றையினது மலர்க்கண்ணியுடன நெய்தலின மலர்மாலை அசைய அந்திககாலத்தே கடல்கெழுசெல்வி (கடல தெய்வம்) கடறகரையில தனித்து நிற்பது போல் தலைவி தனித்து நின்றாள் (அகம. 370:9-13).

செலவு – 1. அக ஒழுக்கத்தில் பிரிவு. 'தலைவி, புதல வன துபுலலிய தலையிலுள்ள செங்கழுநீர் மாலையை மோந்து பெருமூச்சு எய்திய காலத்தே அச்சிறந்த மலர் பவளமபோலும உருவினை இழந்த பொலி வற்ற காட்சியைக் கண்டு செலவினை - பிரிவினை - தவிர்ந்தோமன்றோ' எனத் தலைவன் தன்னெஞ் சிற்குக் கூறிச் செலவழுங்கினான (அகம. 5:22-26). 'அரிய சுரநெறிகள, செலவு அரிய என அப்போது கூறாது இப்போது ஒழியச் சூழ்ந்தனையாயின சிரிக் கத்தக்க இகழச்சியை அடையமாட்டாயா' எனத் தலைவன இடைச்சுரத்துத தன்னெஞ்சிற்குச் சொன் னான (அகம. 33 7-20). தலைவியை நினைந்து, நினைந்து செலவு ஆற்றாத, அரிய வழியில, தலைவன கனவு கண்டான (அகம். 39:14-23). 'பகை வருடன பொருதல கூடிய பலவாகிய நெறிகளில, மலை முழைஞ்சுகள் வெடித்தறகேதுவாகிய வேனிற காலத்தே செலவினை எங்ஙனம் வல்லளாயினளோ' என மகட்போக்கிய தாய் கூறுவள் (அகம். 105.4,16, 17). 'நீ செலவு அயர என தோழியும, இன துணை யாகி நின்னொடுவரும்' எனத் தோழி கூறினாள் (அகம். 107.1,22). கவர்த்த நெறிகள் பொருந் திய, செல்லத் தொலையாத நீண்ட காட்டிலே தன

கணவனைத் தேடிச் சென்ற வெள்ளி வீதியைப் போன்று, செலவு அயர்ந்தேன் எனச் செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் கூறினள் (அகம். 147:8-10). 'நெஞ்சே, கடல் போல அகன்ற காடு பின்னே போக, அயலாரைப் போல நம்தலைவியைப் பிரிந்து செலவேமாயின் எமது செலவு நன்றாகும் என்றெண்ணும் பொருளாசையுற்ற நின் உள்ளம் தளாதலின்றிச் செலுத்த நீ செல்லுதற்குரியை ஆவாய் எனத் தலைமகன் தன்நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 199:13-16) 'தனது மென்மை வாய்ந்த மார்பில் யாம் கண்துயிலுதலை அகற்றித் தாழையின் தாழ்ந்த கிளைகளால தனது கடியதேர் தடைபடுதலால், தலைவன் செலவு அரிதென்று கூறுவள்' எனத் தோழி கூறினள் (அகம 210:11-13). 'தலைவியின் கூந்தலோடு பெரிய தோளினைத் தடவிய நின்னை ஒழிந்து இங்குத் தங்கியிருத்தலை அஞ்சும் என்னைக் காட்டிலும் செலவு (உடன்போக்கு) மேற்கொண்ட தலைவி, நின்னுடன போதற்குக் கானம் இனியவாகுக' எனத் தோழி கூறுவள் (அகம். 283:1-3,16) 'நுமது செலவு கூறுபாடு மாட்சியுற்றுச் செப்பமுறுக' எனக் கூறித் தலைவனிடம் தலைவி வெய்துயிர்த்தாள் (அகம். 299.10,19). சோலையின் இனிய நிழலில் பொழுதைக் கழித்து, மாலைபபொழுது வர, அதனை மயக்கம் தோன்றப் பார்த்து, நின் பாகன் தேரினைப் பூட்டுதலை ஆராய்ந்து அழகிய அததேரினைச் செலுத்த, நீயும் செலவு விருப்புறுதல் ஒழிக' எனத் தோழி தலைமகற்குக் கூறுவள் (அகம். 340: 2-5). 'தலைவர், சுரநெறியில் பொருந்திய வெயிற்காக நிழலின்கண் தங்கினராகிச் செலவு மேற்கொள்ளக காடு கவின்பெறுக' எனத் தலைமகள் கூறுவள் (அகம. 345:18-21). 'நெஞ்சே, முதிய தூண்களையுடைய அம்பலத்தே, அரிய சுரத்தைக் கடந்து வந்த வருத்தத்தால் செயலற்று, மாலைக் காலத்தே தனிமை வந்தடைய, திண்மையை உடைய நம உள்ளம செலவினை வற்புறுத்த, முழந்தாள்களைக் கையாற் பூட்டிய தனித்த நிலையினதாகிய இருப்புடன் தனது நிலையினையே எண்ணியிருக்கும் நமது இயலபினைத் தலைவி அறியாள்' எனத் தலைமகன் இடைச்சுரத்துத் தனனெஞ்சிற்குக் கூறினான (அகம். 373:4-9). 'நீ நின்பலவாய பொருள் விருப்பால என சொலலின் அளவைக் கடந்து செலவு வலியுறுத்துவை' எனத் தலைவன தன் நெஞ்சிற்குரைததான் (அகம. 379: 16-18). 'நீ இங்கே தனியாகத் தங்கியிருக்க நின்னைப் பிரிந்து செலலும ஆற்றல உடையவர் யாவர்; அவருடைய செலவு நினனோடேயே ஆகும்' எனறு தலைவியிடம் தோழி கூறினாள் (குறு. 22:1,2,5).

'தோழி அழுதலை ஒழிவாயாக; தலைவர் செலவு அழுங்குவர்' எனத் தோழி தலைவியிடம் மொழிந்தாள் (குறு. 135:4). தலைவியின் நெஞ்சம் செல்லுதற்கரிய நிறைந்த இருளையுடைய இரவிலே, தலைவனிடத்திற்கு மலைச் சாரலில் உள்ள நீண்ட வழியில செலவு நீங்காது (குறு. 153:4,5). 'தலைவியின் சிற்றூரிடத்தே செலவினைத் தவிர்க' எனத் தலைவன கூறினான் (குறு. 184:2). 'தாம் பிரிய இருப்பதைத் தலைவியிடம் சொல்லிச் செல்வதனால் செலவு அரிதாகும்' எனறுஎண்ணித் தலைவன் சொல்லாது சென்றான் (குறு. 207:1) 'செலவேம் செல்வேம் என்று தலைவர் பலகாலம் சொலலிக் கொண்டிருந்தமையினாலே, முன்பு கூறி வருகிற படி பொய்ச் செலவாக எண்ணி நிலையாகப் போய்விடுக' என்றேன் எனத் தோழியிடம் தலைவி கூறினாள் (குறு. 325:1-3). 'பக்க மலையிலேயே மேகம் முழங்குகின்ற முழக்கத்தை உற்றுக் கேட்கும் மூங்கில்கள் உலர்ந்து சுருங்கிய அரியவழியில் அத்தலைவனுடன் செலவினை எளிமையுடையது என அறிந்தாள்போலும்' என மகட்போகிய தாய் கூறினாள் (குறு. 396:3-7). 'சொல்லாதிருப்பின் அவர் அகன்று போக, என் உயிருக்கு ஏதம் வந்துறும். ஆதலின் நாம் நேரிற்கூறி நிறுத்துவதன்றி நமது காதலருடைய செலவை வேறெத்தகைய சூழசசியாலே தவிர்ப்போம்' எனத் தலைமகள தோழியை வினவினாள். (நற். 79:8-10). 'செல்லுதற்கரிய சுரத்தின் கண்ணே தலைவர் செல்வர். அதற்கு யான சிறிதும் வருந்துவேனல்லேன்; அவர் செலவு (செல்லும் காரியம்) கைகூடுவதாக' எனத் தோழி உரைததாள் (நற். 148:9-12). 'நள்ளிருளில் வருகின்ற தேரையுடைய கொண்கனொடு உன் செலவினை யான் உடன்பட்டேன்; நீ எழுவாயாக' எனத் தோழி தலைவியிடம் மொழிந்தாள் (நற். 149:8,9). 'வெப்பம மிகுந்த காட்டில் நின்னை உடன் கொண்டு சேறல் இயையாமையின் நின்னுடன் தண்படு கானமும் செலவு தவிர்நதனம்' எனத் தலைமகன் கூறினான் (நற். 256:5,11). 'இவள் பூப்போன்ற கண்கள் நீர்வாரப் பிரிதல் தகுமோ; நும் செலவு தவிர்க' எனத தோழி தலைவனைச் செலவழுங்குவித்தாள் (நற. 325:6-9). 'மடந்தாய நீ அழாதே; தலைவர் செலவு அழுங்குவர்' எனத தோழி கூறினாள் (நற். 391:1). 'குறுமகள் வருந்தும் நிலையில் நின் செலவு என்ன பயனைச் செய்யும்' எனத் தலைமகற்குத் தோழி உரைத்தாள் (ஐங். 305:4). 'அரிய சுரத்திடத்தே செலவு அயர்ந்தனை; துணையைப் பிரிந்து பெறும நின் பொருள் நன்று இல்' என்பது தோழி கூற்று (ஐங 307:2,3). 'வேனில திங்களில், கொடிய சுரநெறியைக் கடந்து

செலவு அயர்ந்தனை; சிறுவன் முறுவல் காண்டலின இனிதோ, நீ பிரிந்து செய்யும் பொருள்' எனத தோழி வினவினாள் (ஐங். 309). 'பாலை நிலத்தைக் கடநது வநதோமாயினும், இனிச் செலவு ஒழிக' எனத தலைமகன் தன் நெஞ்சிற்கு இடைச் சுரததுக் கூறினான் (ஐங். 330). 'இனி, செய்பொருட் செலவு அழுங்குக, எனறு நின்னை விரும்பி நம் காதலர் வநதனர்' எனத தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங் 357). 'தலைவனைப் புணர்ந்து உடன் செல்லும செலவு இனிதாங்கொலலோ' எனத் தாய் கேட்டாள் (ஐங் 379). மடமகளது தோள் தலைவன் செலவைத தடுத்தன (ஐங். 421). 'மேகம் இடியுடன் நீர்த்துளியைச் சொரிநதுள்ளது; இந்நிலையில தலைவியின் மேனி பசபப நீ செலவயர்நதனையே' எனத்தோழி, தலைமகற்குத் தலைமகளது ஆற்றாமைகூறிச் செலவழுங்குவிததாள் (ஐங். 423). வேந்தன் போர்த்தொழிலைத் துறநது, யான் செலவு ஒழிநதனன் என வினை முடித்து வந்த தலைவன கூறினன் (ஐங். 426) 'போருடை வேந்தன் பாசறையிலே பகைவன் வாரான்' எனத்தலைவன் செலவு அழுங்கினன் (ஐங, 427). 'கான்கெழுநாடன மகளே, அழாதே; நான் செலவழுங்குவேன்' என்பது தலைவன் கூற்று (ஐங. 430). 'தலைவனை நினைநது நீ செலவு நயநதனை ஆயின் பாணனே, தலைவனைப் போல எம்மை மறந்து விடாதே' எனத தலைவி கூறினாள் (ஐங். 473). 'யாம் கூறவும் எம் கூற்றுக் களைக் கொள்ளாயாய்ச் செல்லின, உனக்கு மேலாய் நின்று உண்மை கூறிக் கழறும் கேளிரைப் போல, நின் செலவைத் தடுப்பது நீ செல்லும் காடு' எனத் தோழி உரைத்தாள (கலி. 3: 19-22). 'ஒரு நாள் ஒருபொழுது கூட்டம இடையீடுபட நீர் பிரிவீராயின இவள் உயிா வாழவாளோ; பெரும, நினனுடைய பொருளிடத்து நெஞ்சு பிணித்தலாற் செல்லும் செலவைத் தவிாவாயாக' எனத் தோழி தலைவனிடம கூறினாள் (கலி. 4:23-25). 'ஐயனே! நீ செய்கின்ற காரியத திடத்தே செலவயாந்து, நின் கையாலே விலலின நாணைத் தடவினாய, எனத் தலைவனிடம் தோழி உரைத்தாள் (கலி. 7:5,6). 'பெரும, பொருளை நச்சுதல் நினக்குப் பொருந்தாது, இச செலவை நீ தவிர்தலை யான் விருமபுவேன்' எனத தோழி தலைவனிடம் உரைததாள் (கலி. 8:19,20). 'நின பிரிவாறறாமையை யான சொல்ல நெடுநதகை செலவு தவிர்ந்தனன்; இனி நின் வளை கழலா திருப்பனவாக' எனத் தலைவியிடம தோழி கூறினாள் (கலி. 10:22 24). 'யான் கூறிய சொல், நல்ல மருநதாகித் தன மனம் மகிழுகையினாலே தலைவன செலவு தவிர்ந்தான்' என்பது தோழி கூற்று (கலி. 17:18-21). 'நீ தெய்வத்தாலே பிரியேன எனறு தெளிவிகக, அபபிரிவினமை அறிதெனறு கருதாளாய அதை உண்மை எனறு துணிநதவள், இழநத நலம் பணடுபோல ஆமபடி, கலிமாபபூண்ட தேரைச செலுத்தி எம்மனையிடததுச் செலலும் நின செலவை விரைவாயாக' எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாவினாள் (கலி. 124:18-21).

2. செல்லுதல். செலவு - செலலுதல - செஞுாயிறறுச செலவு (புறம. 30·1). (புறம. 41:17 98 6; 199:13;265:9,332:10; பதி. 77.11;83.5; முரு. 51:64; பொரு. 172; சிறு.259; முலலை. 5; மது. 392; அகம். 17:11; 64:7;353:4; 400:8; குறு. 92:5; 189:5; நற் 147·12; கலி. 43:21; 46:14; 94:29,34; பரி. 6:51;7.5).

**செவ்வரக்கு - சாதிலிங்கம்.** ஆணிகளும பட்டங்களுமாகிய பரிய இரும்பாலே கட்டிச் செவ்வரககு – சாதிலிங்கம - வழித்துத தாழ்போடே சேரப் பணணின இரண்டாய் மாட்சிமைபபடட கதவைச சோத்திச செய்யபபெறறது நெடுநிலை (நெடு. 80-86).

**செவ்வரி - 1. நாரைவகை.** அடைகரையில் சங்கு நாரைகளோடு செவ்வரி - நாரை - உகளுதல (பதி. 23:21,22).

2. சிவந்தவரி. பொயகைமேய்ந்தது செவ்வரி-சிவநத வரி - உடைய நாரை (புறம். 351 9; பெரு 270; நெடு. 17; நற். 25:2).

3. செவவிதாக ஒலித்தல். சிறுதோட்கோத்த பறை செவ்வரி - செவ்விதாக ஒலித்தல-உடையது (நற். 58:2).

4. செவ்விய மெனமை. மயிா செவவரி - செவ்விய மெனமை - உடையது (நற. 73 5,6).

**செவ்வழல் – விளக்கு.** அநதிக் காலததில மகளிர் செந்தீயால உணடான செவ்வழலை-விளககை-ஏற்றத் தொடங்கினா (கலி. 119 13).

**செவ்வழி – பண்.** 'சிறிய யாழை, இரங்கறபணணாகிய செவவழி எனனும் பணணிலே வாசிககுமபடி பணணி, நினது காடடைப பாடினேம' எனப பேகனைப பாணர் பாடுவா (புறம. 144.23). 'சீறியாழில செவ்வழிப்பணணை வாசிதது நின மலை நாட்டைப பாடினேம' எனப பேகனை அரிசில கிழாா் பாடுவா (புறம. 146:3,4). 'பல மலைகளையும கடநது, சீறியாழில செவவழிபபண்ணை

வாசித்தவாறு வந்தேன்' எனப் பேகனிடம் பெருங்குன்றூர்கிழார் கூறினார் (புறம். 147:1,2). நள்ளியின் கைவண்மையால் மாலைப் பொழுதின்கண்ணே மருதம் என்கின்ற பண்ணை வாசித்துக் காலைப் பொழுதின்கண் கைவழியாகிய யாழின்கண் செவ்வழி என்னும் பண்ணை வாசித்து வரலாற்று முறைமையைப் பாணர் மறந்தனர் (புறம். 149:2-4). 'யாழில் நல்ல செவ்வழிப் பண்ணை மெல்ல இசைத்துக் கடவுளை வாழ்த்தித் துயரினைக் கொண்ட மெய்யினனாய தலைவன் மாட்டுச் செல்வேன்' எனப் பாணன் கூறினான் (அகம் 14: 15-17) யாழ்வல்லோன் இயக்கும் நல்லயாழின் செவ்வழிப் பண்ணின் இசையைக் கேட்டாற் போன்றது இனிய சொல் (அகம். 212 6,7). ஆக்களை மீட்டுவரும் கோவலர் புல்லாங்குழலுடன் பொருந்தப் பிரிந்தார்க்குத் துன்பினைத் தரும் நல்ல யாழின்கண்ணே செவ்வழிப்பண்ணைப் பாடினா (அகம். 214:12,13). 'பாணனே, இனிய நரம்புத் தொடையினையுடைய நல்லயாழில் வருத்தத்தைத் தரும் செவ்வழிப்பண் தோன்ற, இத்தகைய மாலைப் பொழுதில் வந்து சேராராயின அவர்தம் நிலை யாதாகுமோ' எனத் தலைவி அவனைக் கேட்டாள் (அகம். 314:11-14). தங்கணவர் பிரிந்த காலத்துச் செவ்வழி என்னும் பண்ணையுடைய யாழினது நரம்போசை போல வருந்திக் கூறும் மொழியினையுடையவர் மகளிர் (கலி. 118:15). மாலைப் பொழுதில், தலைவியின் அலைவு பெற்ற மொழிகள் போல வண்டுகளின் செவ்வழிப்பாட்டு அடங்கின (கலி. 143 38).

**செவ்வான்/செவ்வானம் –** செக்கர் வானம். வாள், வெற்றியைத் தருதலால் குருதிக்கறை பட்டுச் செவ்வானத்து - செக்கர் வானத்து - வனப்புப் போன்று காட்சியளித்தது (புறம். 4:1,2). செவ்வானை ஒத்த திருமேனியினையும் அவ்வானில் விளங்கும் பிறையை ஒத்த, வளைந்த வெள்ளிய கூரிய எயிற்றினையும் உடையவர் சிவன் (அகம். க. வா. 8,9). முல்லை நிலத்தில் பசிய இலைகளையுடைய முல்லையினது குற்றமில்லா வெண்ணிற மலர்கள், செவ்வானின் அழகைக் கொண்டன (குறு. 108.2-4).

**செவ்வி - 1. காலம்.** 'நும் படை பகைவர்மேல் போகும்போது அவரது வேல் முதலியவற்றை ஒகிகியெறியும் படைக்கு முன்னிற்பாய் ஆதலாலும், அவர் படை அடர்த்து வரும்போது நும் படையின் அணியைத் தாங்கவேண்டி அதனைத் தடுத்து நிற்பாய் ஆதலாலும் பெருமானே, நின்னைக் காணும் செவ்வி – காலம் - அரிது' எனப் பிட்டங்கொற்றனிடம் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் கூறினார் (புறம். 169:1-6). 'மேற்கு மலையிலே ஞாயிறு மறைந்து வெயிற்கதிர் மாறிய, செவ்விநோக்கி, நீவிர் நல்லியக்கோடனது வேலூரையடைந்தால் எயிற்றியர் சமைத்த இனிய புளிங்கறி இடப்பட்ட சோற்றை நும் பசிகெடப் பெறுவீர்' என்று சிறுபாணர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (சிறு. 170-177). 'பூக்கள் நிறைந்த பெருந்துறையிடத்தே இளவேனிலாகிய செவ்வியை நுகர்வாரோடு தங்கி நீவிரும் இளைப்பாறிச் செல்வீராக' என்று பெரும்பாணர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (பெரு. 389-392). தொண்டைமான் இளந்திரையனிடத்தே நட்புக்கொள்ளுதலை வேண்டி அவனை விரும்பியோரும் அவனது துணையைப் பெற வேண்டிய வேறு துணையில்லாதோரும் குறையாத செல்வங்களோடே அவனது முற்றத்திலே நெருங்கித் திரண்டு அவனைக் காணும் செவ்வி பார்த்திருப்பர் (பெரு. 425-435). குருவிச் சேவல் வேற்றுப் புலத்தே வேறு பெடையொடு புணர்ந்து தங்கி வந்த செவ்வி நோக்கி அதன் உரிமைப்பெடை அதனைக் கூட்டினுள் புகாதபடி தன் பிள்ளையொடும் சேர்ந்து தடுத்தது (நற். 181:1 5). 'வெண்கடம்பின் உயரிய கிளைகளிடத்தே மயில்கள் தங்க, வண்டுகளும் சுரும்புகளும் வடித்த நரம்புகளைப் போல் ஆரவாரிக்க, தும்பிகள் விறலியரது இசையெழுச்சிபோல ஒலிக்க, தேனீக்கள் இள மரக்காவில் வாசியம்போல் இம்மெனும் இசையெழுப்பி மணம் மிக்க மலர்களையூத, மரங்கள் சூடுதற்குரியோரை மணத்தினால் அழைப்பன போல மலர்கள், மலர, குயில்கள் கூவ, நீர்த்துறைகள் பூக்களால் அழகு பெற, காமனுக்கு நிகழத்தப் பெறும் விழாவை எதிர்கொள்ளும் இளவேனிலாகிய செவ்வியும் வந்தது; இப்போது வருவதற்குரிய நம் காதலர் இன்னும் வந்திலா' என்று தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 36:1-11). நுரைகளையுடைய இனிய சின்னீர் இளவேனிற் செவ்வியின்கண் வந்து ஆரவாரிக்கும் (கலி. 48: 18). 'தலைவன் என்னைக் கண்டவுடன் நிறுத்தி என்னுறுப்புக்கள் பலவற்றையும் பொய்யாகப் பாராட்டி, வலையர் விலங்குகளின் சோர்வைப் பார்க்குமாறு போல என் நெஞ்சழிந்த செவ்வியைப் பார்த்து, புலையர் நோக்குமாறு போல வருத்த முண்டாக நோக்கி என்னைத் தொழுதான்' என்று தலைவி அவன் நிலைகளைத் தோழியிடம் கூறினாள் (கலி. 55:16-20). 'இத்துணைச் செவ்வியில் இம்மாலை இவளிடத்தே போகுமெனக் கணித்தறிந்து வையைப் புனல் எம் தலைவனது மாலையை

நின்னிடத்தே சேர்த்தது பெரிதும் வியப்பு' என்று தலைவி, பரததையைப் பழிததுரைத்தாள் (பரி. தி. 2:38-40).

2. **பதம்.** உழுது வித்தித் தாளியடிக்கப்பட்ட பல கிளைகளையுடைய செவ்வியில் - பதத்தில் - களை களை அடியினின்றும களைதலால் வரகு இலை தழைததுப்பெருகி வளர்நதது (புறம். 120:3-5,9). ஈரச் செவ்வியில் உழுதற்குப பலவெருதுகளும் உதவின வாயினும அவறறுள்ளும் நல்லெருதினை உழவன் வேறுபடுத்தி ஆராயவான் (புறம். 289:1-3). குறும் பூழ்பபறவை வெள்ளிய எள்ளை உணங்கறசெவ்வி யறிந்து கவர்ந்து உண்ணும் (புறம். 321:1-3). பூந்தட்டிலே இட்டு வைத்த பிசசியின் அலரும் செவ்வியுடைய அருமபின இதழகள் அந்தியில விரியும் (நெடு. 39-41). ஈரம் பொருநதிய செவ்வி யமைநத பைம்புனத்தையுடைய ஓரேருழவன் அதனைப் பண்படுத்துதறகுப பெரிதும் விரைவான (குறு. 13:4-6). செம்மண் மேட்டு நிலததே செவ்வி யமைந்த வரகு தழைததிருக்கும் (குறு. 282:1).

3. **அழகு.** மாமரங்களும் அழகிய தளிர்களை ஈன்றன; குயிலகளும் அமமாமரக் கொம்புகளி லிருந்து மிக இனிய குரலால பன்முறையும கூவும்; முதிர்ந்த இலைகளையுதிர்த்த மலாகள் விரிந்த பெரிய கிளைகளில் வண்டினம் ஒலிக்கும்படியான, பூந்துகள் உதிரும் குளிர்ந்த சோலைகளில் உளள தூய மணல் மேட்டில தங்கிக் காதலர் தமது வள மனையை மறந்திருக்கும செவ்வி - அழகு - அமைந்த வேனில் இவ்வாறாக வந்தது (அகம. 355:1-9). ஞாழல் மரததின சிறுமலர்கள் செவ்வியமைந்த மருதமரத்தின வாடிய பூககளுடன் உதிர்ந்து நீர்த துறையை அணிசெய்தன (குறு. 50:1-3). செம்மண் நிலமான காட்டு நிலத்திலே பூத்த முலலைப்பூக களின பரபபு செககர் வானததின செவ்வியைக கொண்டது (குறு. 108:2-4). செவ்வியமைநத புள்ளிகள் பொருநதிய அடியையுடையது நெற்கூடு (நற். 26:2, 3). பரததை தலைவனுடன் முயங் குதற்கு அவளுடைய செவ்வி முலைகள் அவளுக்குத் துணைக காரணமாய அமைநதன (பரி.தி. 2:43, 44).

**செவ்வி காட்டுதல் - (சிறுவர்) அழகு காட்டுதல்.** புதல் வனது பசி தீர்கக மாட்டாத வறுமை நிலையில பெருஞ்சித்திரனாரின் மனைவி அவனது கருத்தை மாறறுதற்கு, 'நுந்தையை நினைந்து வெறுத்த நின் முகததில் செவ்விகாட்டு, - அழகு காட்டு -' என் றாள் (புறம். 160:18-25).

**செவ்வியோர் - நடுநிலையோர்.** 'தீயோரைத் தண்டம் செயதலும் செவ்வியோர்கரு - நடுநிலையோர்க்கு - அருள் பண்ணுதலுமாகிய இடையறாத முறைமை யால சோம்புதல் இன்றி விளங்குக' எனச சோழன நலங்கிள்ளியிடம் உறையூர் முதுகண்ணன சாததனார் கூறினார் (புறம. 29.9-12).

**செவ்வேலான் - முருகன்.** 'சூரபனமாவைக் கொனற செவ்வேலானை - முருகனை - பாடி, காம வேட்கை யால் திருப்பரங்குனறினிடத்தே நின்னோடே மாரிக காலத்தே பலநாளும் தங்கின கடவுளரைக் கண்டாயோ' எனக கூறித் தலைவனோடு தலைவி புலந்தாள (கலி. 93:26-28).

**செவ்வேள் - முருகன்.** செவ்வேளின் - முருகனின் - திருக்கை வேலே துணை (முரு. வெ. 3.2). வெறியாடுதற்குரிய செவவேளுககும பிற கட வுளுக்கும இசை முழங்க எடுக்கும விழா நீங்காத அங்காடியினையுடையது பட்டினம் (பட். 154,155). 'உலகததை அழிக்கும் கடவுட்கு மகனே, செவ் வேளே, சாலபினை உடையாய்' என முருகனை வேலன வெறியாட்டினுள் விளித்துப் பாடினன (பரி. 5:13-15). செவ்வேள் பரஙகுனறில வாழவாரே வாழ்வார் எனபபடுவார் (பரி. தி. 11).

**செவி - 1. காது.** கேட்டறிவாா சிலராதலின சிலா செவிககண்ணதாகிய யாழைப பாணசாதியது உணவிற்கு முதலாகப பெறற பரிசு எனனெனறு பாணன் வெறுத்துறைநதான (புறம. 68.3,4) 'ஆய புகழ அனறிப பிறா புகழைக் கூறககேட்ட தன செவியும பாழபட்ட ஊரிகைண கிணறு போலத தூாவதாக' என ஏணிசசேரி முடமோசியாா குறிப்பிட்டுள்ளார் (புறம. 132 3). விறலி, ஆய வள்ளலின் புகழைச செவியாற கேடபினலலது அவன் வடிவைக காண்டலறியாள் (புறம. 133:1,2). 'நின்பகைவர், நின்னைக காணிற் புறம்தருதலின புணணறியாத உடம்பாகிய வடிவுடனே கண் ணுக்கு இனியா; செவிககு இன்னார்' என ஏனாதி திருககிள்ளியின வீரததைக கோனாட்டு எறிசசி லூா மாடலன மதுரைக் குமரனார் குறிபபிற புகழவர் (புறம. 167:5-7). வள்ளியோர் செவி யிடததே விளங்கிய சொற்களை விதைதது இரவலர் நினைததை முடிப்பர் (புறம். 206:2,3). பொய கூறுதலையறியாத அறிவையுடையோனது செவி யிடதது நலலோர் விளைத்த கேளவியாகிய பயிா நனறாக விளையும (புறம். 237:4,5). செவி சிவநத கழுகின சேவலும் கோட்டானும் பேயினததுடனே சுடுகாட்டில இயங்கும (புறம். 238:2-5). கோஙகினை

மொட்டுப போன்ற வளைநத செவியினையுடையது எலி (புறம். 326:4,5). மறவன, செவியிறந்து முனனே தாழந்த கதுபபினை உடையன (புறம். 257.4). பெரிய செவியினையுடையது குறுமுயல் (புறம். 333 3). நெடிய செவியினையுடையது குறு முயல் (புறம். 334:2). நெடிய செவியினையுடையது குறுமுயல (புறம். 339.4). சிவந்த செவியினை யுடையது எருவை (புறம். 370:26;373:38). வறுமையில வாடிய பரிசிலர், கொடைபபொருளைக் கணடு ஆர்வததோடு விரலில் அணியததகுவன வறறைச் செவியிலும், செவியில அணியத்தகுவன வறறை விரலிலும் முறைமாறி அணிந்தனர் (புறம். 378:14,15). எஃகுச் செவியாலே சுருதியையளந்து நரமபைக் கட்டின,சுற்றுதலுறும் வார்ககட்டினை யுடையது யாழ (முரு. 140,141). உமணர் நெட்டியால செய்த பூமாலையைக் குரஙகின் செவியடியிலே நெற்றி மாலையாகக கட்டினர் (சிறு. 54). விழியாத கணணையும வளைந்த செவியினையும் உடையது நாய்க்குட்டி (சிறு. 130). வடுவழுந்தின வலியினையுடைய முதுகினையும் எடுதத செவியினையும் உடையது கழுதை (பெரு. 80) குறு முயல் தாமரையினது புறவிதழை ஒககும நெடிய செவியினையுடையது (பெரு 114,115). பககரைகளை யறுததுக கூரிய முனையினையுடைய அம்புகள் வநது அழுந்துகையினாலே குதிரைகள் செவி சாய்த்துப புலலுண்ணாதே வருந்தின (முல்லை. 72-74) மடப்பததை உடைய கண்ணினையுடைய மரையானின் குழவி பெரிய செவியினையுடையது (மலை 505,506). சிவநத செவியினையுடையதுஎருவை (அகம. 3:5). கறவைமாடுகள், கன்றுகளைக் காணாமையின் பொலிவற்ற கண்ணினவாயச செவிகளைச் சாயத்துத் துன்புறறன (அகம. 63:10-12). 'சிலர் செவிபபட்ட புணர்ச்சி அலராகி எங்கும் பரநதது' எனத தோழி தலைவனிடம் உரைததாள் (அகம 90:4). வழியெலாம ஒழுகிய குருதியினைப் பருகும் பருந்தின் சிவந்த செவிகள் போர்க்களப் பரப்பில் இராப்பொழுதில் கைக்கொண்ட வீரர் களது மருமத்துப்புண்களை ஆராயும விளக்குகளைப் போனறு தோனறின (அகம. 111'12-14). நிமிர்ந்த கொமபினையும் தொங்கும் செவியினையும உடையது வெள்ளாட்டுக கிடாய (அகம. 156: 14). சிவநத செவியினையுடையது எருவைச் சேவல் (அகம 161:5,6) களிற்றின செவிபோன்றது தாமரை இலை (அகம். 176:4). நீர் நிலையில், தழைதத தாமரையின நீர் மீது உயர்நத நெடிய காம்பினை யுடைய அகன்ற இலையை, பெரிய குளம் அலையக காறறு அடிக்குந்தோறும் பெரிய களிறறி யானையின் செவிபோல அசைவிக்கும் (அகம. 186: 3-6) செய்து சூட்டியது போலும் செஞ்செவியினை யுடையது கழுகு (அகம். 193 6). முயல்கள் வளைந்த அழகிய செவியின (அகம். 284:2,4). கோவலர் இளைய எருதுகளின கழுத்தில கட்டியுள்ள மூஙகில குழாயிலுள்ள இனிய புளிச் சோற்றை வம்பலர்தம் பசியால் வந்த செவியடைப்பு நீங்கத் தேக்கின இலையில பகிர்ந்தளித்தனர் (அகம். 311:9-11). நெடுஞ் செவிக் கழுதை (அகம. 343: 12). 'வருந்தும் தோளின வருத்தத்தைப் போக்கும் மருந்து இது என, நினைக்கும்தோறும், ஒலிக்கும் பலவியானது நிமித்தத்தைத் தொழுது உறையும் தலைவியின் செவியகததே அறிவுறுததுமோ' எனத் தலைமகன் தனனெஞ்சிற்குக கூறினான் (அகம். 351: 5,15-17). தாயர் வரிகள் பொருந்திய பருத்த தோள்களையும், நீண்ட செவிகளையும் உடையவர் (அகம். 393: 8). மலைப் பக்கத்தில உள்ள சேம்பின் அசைதலையுடைய வளப்பமான இலை, பெரிய ஆண் யானையின் செவியைப் போலத் தோன்றும் (குறு. 76:3,4). ஆண் யானையின் செவியை ஒததது பசிய இலை (குறு. 246:2). 'எம் செவி தலைவன சொன்ன சொற்களைக் கேட்டன' எனக் கிழத்தி கூறினாள் (குறு. 299:5,6) தலைவன் தேர் வாராதிருப்பினும் வருவதுபோல் தலைவியின செவிகளில் ஒலிததது (குறு. 301:5-7). துடிபபுடைய கண்களைக் கொண்டுள்ள காட்டுப பசுவின் கன்று அழகிய செவிகளையுடையது (குறு. 322:1). நெயதலின் பசிய இலையை ஒதத அழகிய செவியையுடையது யானைக்கனறு (நற. 47:3,4). பிடியானையின் செவிபோன்றது ஆமபல இலை (நற. 230:1) கரிய எருமையின் கன்று பெரிய செவியையுடையது (நற். 271:1). களிற்றின் செவி போன்றது தாமரை இலை (நற். 310:2). அழல் போன்ற சிவந்த செவியுடையது கழுகின் சேவல் (நற். 352:4). 'நின் பரத்தைமையினைச் செவியினால் கேட்டாலும் சொறகு அடஙகாதபடி சினம கொள்பவள் தலைவி' எனத தோழி தலைவற்குரைததாள் (ஐங். 84:1). குருதி போன்ற செவியை உடையது எருவைச்சேவல் (ஐங. 335:2). அழகிய செவிகளையும் பெருமை உடைய தாள் களையும உடையது யானைத்திரள் (கலி. 5:1,2). மானினுடைய செவியைப் போல மூங்கில முளையினது கணணைப பொதிநத பாளைதோனறும (கலி. 43:16,17). நொச்சிப்பூ விழுகின்ற ஓசையைத் தலைவன் குறியோ எனறு கருதும செவியோடே தலைவி வருததமடைவாள் (கலி. 46:12,13). முறம் போலும் செவி மறைப்பிடமாக வந்து பாயந்து மாறுபாடு செய்த புலியை யானை சினந்தழிக்கும் (கலி. 52:1) நூலவலல ஆசிரியராலே பொலலாத

சொற்கள் இடையிற் புகுதாமல் போககபபட்ட தம் செவிகள் செய்யாக, சான்றோர் செயயுட்கள் தம சொல்லை வளர்க்கும் நீராக, அறிவினையுடைய நாவாகிய ஏராலே உழுதுண்பவர் புலவர் (கலி. 68:1-5).உழிஞையான் செவியிடத்தே படைகொண்டு வந்தவனுடைய பள்ளி எழுசசி முரசுபோல மணி ஓசை முதலியன தலைவியின் துயிலைப் போககும (கலி. 70:20,21). 'கொடையினது பெருமையைப் பாடிப பாணன், தனனுடைய யாழோசையாலே முன்பு தாழ்க்கபபட்ட செவிகளை, அவன கூறு கின்றவற்றைக் கேட்டற்கு அவர் சாய்ககையினாலே இப்பொழுது அக்கூற்றாலே புதிதாக அகபபட்டன வாகிய யூழினுடைய புதிய போர்களைக கண்டா யும் போலே இருந்தாய' எனத தலைவி பரத்தை யரைப் பூழாக்கிக கூறினாள் (கலி. 95.9-12). செவி மறுவாயிருககினற விளங்கும் நுணணிய சிவந்த பொறிசளையுடைய வெள்ளை எருத்தினது கோபத்தை அஞ்சானாய், அதன மேலே பொதுவன பாய்நதான் (கலி. 10:27,28) தன மேலே செனற சிவநத ஏற்றைச் செவியடியிற் கொமபுகளைப் பிடிததுக் கொண்டு பொதுவன் தழுவினான (கலி. 103:50-52). தொழுவிடததுச் சிலுவைக் குணததை யுடைய செவி மறையாயிருககினற ஏறறினை ஆயன தழுவினான் (கலி. 107:5,6) நரமபை வீககு தலைச் செயய, அதனிடததே நின்ற பண்ணினுள் தோன்றிய இனிமையைக கேட்போர் செவி கொணடு இனபுறுதற்கு முன்னே, நரமபு அறு பட்டது (கலி. 142:3,4). செவிகள் செவிடுபடச் சங்கு முழங்கும (பரி. 2:38,40). 'எம கணவர் செய்பொருள் வாயகக' எனறு முருகன் திருச்செவிக்கண் சேரக் கூறி மகளிா வழிபடுவர் (பரி.8:107). தாளம அமைநத பாடல இனபத்தால கேட்டோர் செவியை நிறைததது (பரி. 11:69). குழைக்காதினையுடைய கோலச் செவிக்கண் குவளையைச் செருகினர் (பரி. 11:97,98). 'குறப்பெண்ணாகிய வள்ளியை மணநதோய, எம வாழ்த்தினை நின்செவிக்குச சிறபபுணவாகக கேட்டல வேண்டும' எனறு அடியார் முருகனை வழி பட்டனர் (பரி. 19:95,96).

2. செவ்வி. ஆறலைப்போரால் வருந்திய வழிச் செலவோர் உயர்மரககிளையிலேறி, உணவினை வேட்டெழுந்த பருந்தானது வானததினகண் அசை யும் செவியை - செவ்வியை - பாரததிருபபர் (அகம். 285:9-12). (செவி - தொகுததல விகாரம)

**செவிடு** - காது கேளாமை. செவிடு, பிறபபொடு கூடாத எணவகை எச்சங்களுள் ஒனறு (புறம்.28:1-4). சங்கு செவிகள் செவிடுபட முழஙகும் (பரி. 2:38,40).

**செவிலி** - **செவிலித்தாய்.** புதல்வர், பால சுரந்த முலையினையுடைய செவிலியைத தழுவிப பாலை உண்டு படுக்கையில் துயில கொளளும (பெரு. 249-252). 'முன்பு அணைத்தலை விடாத அவரது கைகள் இனறு நெகிழநதமை கணடு, செவிலியின கையிலிருநத என புதலவனை நோககி, இச் செல வற்கு ஒததனம் யாம் என என மகனிடம பெயர்ந தேன' எனத தலைவி கூறினாள் (அகம். 26:16-21). செவிலியுடனே, மெலலிய அணைமீது ஈனற அணிமை விளங்கும் புதலவன துயினறான் (நற். 40.5,6).

**செவிலியர்** - **செவிலித்தாயர்.** நரை கலந்த நறிய மெலலிய மயிரினையுடைய, சிவநத முகத்தை யுடைய செவிலியர், தலைவி ஆற்றா ஒழுககம மிகுகையினாலே திரண்டு, 'தலைவா இனனே வருகுவா' எனத் தேறறினர் (நெடு. 152-155). நரைமயிர் கலப்புற்ற நறிய மெலலிய கூநதலை யுடைய செவ்விய முதிய செவிலியர் பலவாகப பாராட்டிக கூறித் தலைவி ஆயததோடு விளை யாடினா (அகம. 254:1, 2, 7). இளமபருவததே தம் பிணக்கை அனபுடைய செவிலியர் இடை மறிததுத் தடுக்கவும விடடுச செலலாமல சிறு பூசலைப் புரிபவர்களாயத் தலைவனும தலைவியும இருந்தனர் (குறு. 229.3, 4). பாலுணவைப் பொற் கலததிட்டு ஒரு கையில் ஏநதியவாறு, சிறிய கோலை ஓங்கி நீ உண்ணுவாய என்று எறிதலும, சிலம்பு ஒலிககுமாறு பாயநது மெல்லிய நரைதத கூந்தலையுடைய செவ்விய முதுமையடைநத செவி லியா பின் தொடர்நது ஓடிப் பற்ற முடியாதபடி தலைவி முனறிலினகண் உள்ள பநதர்ககு ஓடி னாள் (நற். 110.1-8).

**செழியன்** - 1. **பாணடியன்.** கொற்கைக கோமானும தென்புலங் காவலர் மரபினோனும் பகைவர் நாடு களை மாறுபாட்டினால கவாநது கொண்டோ னும் முததுமாலையணிநத கொறறக்குடையினை யும் கண்ணுக்கு அழகு நிறைநத கணணியினையும் கடுநதேரினையும உடையோனுமாகிய செழியனது - பாண்டியனது - மதுரை (சிறு. 62-67). பகைவர் தம களிறுகளையுடைய அரிய போாகளைச சிதையு மாறு மோதியழிககும, ஒளி வீசும வாட்படை களையுடைய கொற்றச செழியனுககுரியது அள்ளூ (அகம. 46:11-14). ஒளி வீசும வாட்படை களையுடைய கொறறச்செழியன, குற்றமிலலாத படைப்பயிறசியொடு கூடிய நெருங்கிய போரில வெலலுந்தோறும யானைகளைப பரிசிலாகப பெறும பாணன் மத்தளம் அடிப்பான (அகம். 106:

10-13). துளையிடபபடாத புது முத்துக்கள் விளையும் கடலையுடைய போராளியாகிய திண்தேரினையுடைய செழியனது (பொதியில்) மலையின பக்கங்களில வளா நதிருநத நெடிய மூங்கில்கள் நலலெழில வாய்நதவை (அகம. 137 13-15). கொறகை நகரையுடைய போராளியாகிய, வெற்றிவேலையும் கடிய களிற்றியானையையும நெடிய தேரினையுமுடைய செழியனது மலைபோலும மாடங்களமைந்த நெடுநகராகிய கூடலில எழுந்த வெறறியாரவாரம போல் தலைவனது பரததைமையொழுககம் அலராகியது (அகம. 269:10-14). மலர்த்தாரினையும வெற்றி பொருந்திய முரசினையும வெலலும் போரினையுமுடைய செழியனுடையது மாடமூதூா (மதுரை) (அகம. 335:9-11). பகைவர் அரண் மிகக தம் மதிலகததில இருககும்போதே அவரையெதிாதது வென்று அவரது முரசினைக் கைப்பற்றிகொணடு, அவரால பாதுகாக்கப்பட்ட அரணையும் கவர்ந்து கொண்ட, கொலலும்போர் வலல செழியனுககுரியது பெருமபுகழமைநத கூடல் மாநகர் (நற். 39:7-10). நலல மாலையணிந்த பொனனாலாகிய தேரையுடைய செழியனுககுரியது கூடல் (நற. 298:8, 9).

2. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன. 'தலையாலங்கானததுச் செருவெனற பாண்டியன நெடுஞ்செழியன' காணக.

**செற்றம் - சினம்.** முனிவர், மாறுபாட்டோடே நெடுங் காலம நிற்கும் செற்றத்தினையும் - சினததினையும் - போக்கிய மனததினையுடையவா (முரு. 131, 132). ஒரு கூற்றில செற்றம் செய்யாது, ஒரு கூற்றில உவகை செயயாமல நெஞ்சினைப பாதுகாக்கும் அறங்கூறவையம (மது. 490, 492).

**செற்றவர் - பகைவர்.** 'நின்னுடன் நட்புக் கொண்டவருடைய குடியை உயர்ததலைச் செய்வை; செற்றவர் - பகைவர் - அரசுரிமையை வாங்கிக் கோடலைச் செய்வை' எனத் தலையாலஙகானத்துச் செருவென்ற பாண்டியன நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் பாடுவர் (மது. 131,132).

**செற்றார் - பகைவர்.** 'செற்றாரது - பகைவரது - அரணத்தை அழித்து வேந்தனது பகையை வெலவதற்குச் செலவேம' எனத் தலைமகன் கூறல (ஐங. 429) 'பாண்டியனுடைய செற்றார் மருமததே தைதத அமபினும் நோவைச் செயதல உலகிற கொடுமைகளின் மிகக கொடுமையனறோ' எனத தலைவன காமஞ்சாலா இளமையோளிடம சொலலி இன்புறறான் (கலி. 57·14,15). 'செற்றார் (பகைத்து அவர் கூறுகினற மகளிர்) நமமை இகழந்து பாாக்கும் கணகள், இகழ்நது பாராதிருககும் படியாக யான் தலைவன மாாபைச சாராமல் அமைந்திரேன' எனத் தலைவி கூறினாள் (கலி. 104:65,66).

**செற்றை - சிறுதூறு/குப்பை.** பருததிப்பெணடு, பக்கங்களையும், செற்றையினையும் - குப்பையினையும்- புடைத்து நீக்கினாள் (புறம். 326:4,5). செற்றையினையுடைய வாயிலமைநதது குரம்பை (பெரு. 148, 614).

**செற்றோர் - பகைவர்** 'நம்பி நெடுஞ்செழியன செற்றோரை-பகைவரை - கிளையொடும் கெடுத்தான்' எனப பேரெயில் முறுவலார் பாடுவர் (புறம. 239:4). 'செறறோர், போரிடத்தே கொலலக் கொலலக் குறைபடாத தானையுடையோன' என இளஞ்சேரல இரும்பொறையைப் பெருங்குனறூா கிழாா் பாடுவர் (பதி. 82:12,13). செற்றோருடைய, காவலையுடைய அரண்களை யானை இடித்தது (பட். 228, 229,231).

**செறல் - வெகுட்சி.** களிறு செறல் - வெகுட்சி - பொருந்திய பார்வையினையுடையது (புறம. 15: 8,9). செறல் நோககினையுடையது மழகளிறு (புறம். 22:3,8) திருமாலின் அருள் மொழி வலமபுரி முழககையும் வேதமுழககையும் ஒக்கும்; அவர் தம செறல மொழி வானமுழக்கையும் உருமேற்றின முழக்கையும ஒக்கும (பரி. 13:44,45).

**செறிவு - 1. நெருக்கம்/உறவு.** உடைவாள் செருகப்பட்ட செறிவு - நெருககம் - உடையது உடை (பெரு 73). புரவியை அடிககின்ற சமமட்டி மறையும்படி வடிமபு தாழ்ந்து பெருக்கும செறிவுடையது உடை (முலலை. 59). கரிகாலன, பகைவரது செறிவுடைய வாட்படையை ஓட்டினான் (பட். 225,226). 'என உள்ளச செறிவும நெடுந்தொலைவிற்கு நீங்கிச் சென்றுள்ளது' எனத் தலைவி கூறினாள் (குறு. 219·3). ஒருவரோடு ஒருவாக்குச் செறிவு - உறவு - கூறபபெறுவது கூறியதொன்றைத தாம மறுக்காதிருததல (கலி. 133.11). 'செறிவினால் நிகழத்தும் நலல தொழில்கள் பலவற்றையும் வலலன' எனத தலைவனைக் குறிப்பிடுதல (கலி. 143·34) சோலைகளும் சுனைகளும பூவணிந்த செறிவால அழகு கொள்ளும (பரி. 18:31-33).

2. **அடக்கம்.** 'பெரியோர் அறியும் அறிவாலும் அறியாத செறிவினை - அடககத்தை - உடையை

எனச் சோழன் நலங்கிள்ளியை உறையூர் முது கண்ணன் சாத்தனார் புகழவர் (புறம். 30:6,7).

**செறு - 1. செய்/செய்யிலுள்ள சேறு** கடைசியர் மாட்சிமையுடைய நெய்தலை ஆம்பலுடனே களையும், மலங்கு பிறழ்கின்ற செறுவினகண்ணே – செய்யின கண்ணே - தளம்பினால் வாளையினைத் துணித்தனர் (புறம். 61:2-4). நூறு செறுவாயினும் யானை தனித்துப்புக்கு உண்ணுமாயின் அதன வாயினகண்புகுந்த நெல்லினும் கால மிகவும் கெடுக்கும் (புறம். 184.3,4). நீர் பரந்த செறுவினை யுடையது போநதை ஊர் (புறம் 338:1,4). செறு விடத்தே, நெருங்கிய பைந்தழை துயல்வரும் (புறம். 339.9). யானைகள் கரந்தைக் கொடி படர்ந்த செறுவின்கண்ணே பொருது வீழ்த்தப்பெற்றன (புறம். 340:8). குருதி படிந்து ஈரமாகிய செறுவயின் (போர்க்களமாகிய வயலில்) தேர்கள் ஏர்களாகச் சென்றன (புறம். 369:10). செறுவில் பூதத செந்தாமரை, அறுவகைத் தொழிலகளையுடைய அந்தணர்கள் அறததை விரும்பி எடுத்த தீப்போல் விளங்கும் (புறம் 397:19-21). மீன் இறைச்சிகளோடு, செறுவில் படர்ந்த வள்ளைக்கீரையும், சிறுகொடியாகிய பாகற்காயும் சேர்ததுச சோறு சமைத்தனர் (புறம். 399:5,6,9) ஏறு தம்முட்பொருதமையினாலே செறு, சேறுபட்டு உழ வேண்டாதன வாயின (பதி. 13:2). நெலலினையுடைய செறுவில் நெயதல் பூப்ப, நெறறாளின பருமையாலே கொய்யும் அரிவாட்கள் தங்கள் வாய் மடிய நல்ல வாயிருந்தன (பதி. 19:20-22,25). நெய்தல் இடையறாது பூக்கும் மரபினையும் நிரைதத வண்டினையுமுடையது செறு (பதி. 27:10). வளப்பத்தையுடைய செறுவில் விளைந்த பயிர்களினின்றும உதிர்ந்த, களததில் கடாவிடுதல் இல்லாத தூற்றாப் பொலியைக் காஞ்சி மரததின் நிழலில தொகுததனர் (பதி. 62:14,15). நீங்காத புதுவருவாயையுடைய அகனறஇடத்தையுடைய செறுவில் நீரிலே நின்ற ஆமபலோடும் நெய்தற பூவோடும நெல்லையறுத்துச செறுவில மகளிர், தொழில புரிநதனர் (பதி. 71:1-3). கரிய கடாககள் தமமில் பொருத இடமகன்ற செறுவினகண், தாம் உழப்படாத அநத நுண்ணிய சேற்றை ஒககமிதித்த உழவர், முடியாகக் கிடக்கினற நாற்றை நட்ட நெடிய நீரையுடைய செறுவில களைகளைப பறிப்பவர் பறித்து ஏறட்ட நெய்தற்பூவை வெறுத்தனர் (பெரு. 209,214). நீரையுடைய செறுவின்கண் நினற நீண்ட நெயதற்பூ ஆலைத் தீயினால் வாடியது (பட். 11,12). செறுவும் வாவிகளும் நீரற்றுத் தம்மில் ஒனறாய் மயங்க அங்கே பூளைகளோடு அறுகும் கோரையும் வளர்ந்தமையின் இரலையும பிணையும துள்ளியாடின (பட். 243-246). வெள்ளிய அரிதாள்களையுடைய செறுவில, ஐவன நெலலும் வெணணெலலும் பாலகட்டிச் சிறிது முறறிப் பலவாயக் கவர்தத காற்று ஊடறுககப பட்டு நன்றாக விளைநதன (மலை. 114,115,123). ஞெண்டுகள் ஆடித்திரியும செறுவின் அருகில், மேட்டு நிலததேயிட்ட மலையை ஒதத போர்களைக் கடாவிட்டு வளப்பததை உண்டாக்கும் உழவர் நெல்லை முகந்து குவித்தனர் (மலை. 460-462). வளம் மிகக வயலில தீயின கொழுந்தினை ஒத்த தோடுகளை ஈன்ற வயல் நெல்லின பலவாகக் கிளைதத முதலிலிருந்து தோன்றிய நெறகதிர் நிரமபிய அகனற செறுவிடத்து, வரபபுக்களை அணையாகக் கொண்டு அலைய வாடை வநதது (அகம். 13:17-21). புதிய கள் கமழும் நெயதலஞசெறுவின வளம் பொருந்தியது நாடு (அகம். 113:6,7) குறுந்தொடி மகளிர், புனல விளையாட்டை வெறுபபின், பொய்கையிலுள்ள கோரைகளைக கோதிக கழனியாகிய கரந்தையையுடைய செறுவினகண் நாரையை ஓட்டுவர் (அகம. 226:4-6). நாரை, உப்பங்கழியிலுள்ள சிறு மீனகளை உண்ணுதலை வெறுத்ததாயின செறுவில தேன மணககும் நெயதற் பூக்களைக் நெற்கதிரோடு சேர்த்து உண்ண விரும்பும் (குறு. 296:2-4). 'வாடுமபடி பறித்து விட்டாலும், இவ்வுழவர் கொடியராதலின இந நிலத்தைவிட்டு நீங்கி வாழவேம என்று கருதாது மீட்டும் தம்மை நீககிய செறுவில பூககும நெய்தற பூவை ஒதத தனமை உடையேம' எனத் தோழி வாயில மறுககு முகமாகக கூறினாள் (குறு. 309:3-6). 'நீர் மிகக செறுவில நாற்று முடிகளை நடுதற்கு நின உழத்தியரோடு உடன் செலலுவையாயின் நீஉழுகினற வயலிலுள்ள வளமிகக கோரைகளையும் நெய்தல்களையும களையெனக் களையாது பாதுகாபபாய' எனத் தோழி கூறினாள் (நற். 60:7-9). திரட்சியை உடையனவாய வளைந்த செந்நெறகதிர்களையுடைய செறுவில அனனப பறவை துஞ்சும (நற். 73 6-8). நெல அறுத்து நீங்கப பெறற அழகிய இடமகனற வயலின கண்ணே மறுபடி உழுத ஈரமுடைய செறுவில விதைககும் வணணம விதை கொண்டு சென்ற கடகபபெட்டியில மிகப பலவாகிய மீன்களைப பிடிதது வருகினற புது வருவாயினையுடையவன ஊரன (நற். 210.1-4). 'கோடையாலே மிகத் துன்பப்பட்ட காலை, அக்கோடை வெப்பம நீங்குமாறு புதுவதாக வறறிககாயந்து வெடிபபுமிக்க செறுவில குளிரசசியுற நிறைநத புது நீர் வெள்ளம் பரவினாறபோல நினனைக் காணும

பொழுதெல்லாம் இனிமையாகவே இருந்தது' எனத் தோழி கூறினாள் (நற் 230:7-10). வாழையின மெல்லிய தாற்றின நுனியில தொங்கும பூவை நிலத்தில நின்று ஓங்கி வளர்ந்துற்று அசையச் செய்கின்ற நெற்கதிர் விளையும் வயலிலே கணணுக்கினிய செறுவில (சேற்றில்) கதிர் அறுக்கும் மள்ளர் அறுத்துப் போகட்ட அரிச்சூட்டின் பக்கத்தில வாளை மீன பிறழந்தது (நற். 400:1-4). கரந்தையையுடைய செறுவில, பெண் நண்டைத் துறந்து ஆண நணடு, வள்ளைக் கொடியின் மெல்லிய தண்டை அறுக்கும் (ஐங். 26:1,2). செந்நெலினை உடைய அழகிய செறுவில நணடு நெற்கதிரைக் கொணடு மணணாலாகிய வளையிற செல்லும (ஐங். 27:1,2). ஆமபல மலர்கள் வளரப்பெற்றுள்ள அழகிய செறுவினையுடையது தேனூர் (ஐங். 57:2). தலைவன நாட்டில கேழல உழுததாக, பைஞ்சாயக்கோரை, நெலவிளைந்த செறுப்போலத் தோன்றும (ஐங். 269:1,2) பொலலாவாகிய சொற்கள் இடையில புகுதாமல போக்கப்பட்ட செவிகள் செறுவாக, சான்றோர் செய்யுட்கள் தம் சொல்லை வளர்க்கும நீராக அறிவினையுடைய நாவாகிய ஏரால் புலவர் உழுதுண்பர் (கலி. 8:12-5). நீர் நிறைந்த செறுவில, நெய்தற்பூவோடே ஆமபற் பூக்கள் வளர்ந்துள்ளன (கலி. 75:1,2). செறு, அவிழந்த மலர்களைச் சுமந்து, பொலிந்த நீர் நிறைந்து, தோன்றும் (பரி. 16:11). மலைக்கண இழியும வெள்ளருவி உழவரது வயலின்கண பரக்கும்; விளையாடு மகளிர் இயங்குதலால் அவர் பூணினின்றும வீழந்த மணிநீலம செறுவினைச் சிதைக்கும (பரி. 17:40,41).

2. பாத்தி/உப்புப்பாத்தி. கழியிடத்துள்ள பெருஞ் செறுவில வெள்ளுப்பை எடுக்கும அளவர் ஆரவாரித்தனர் (மது. 117). கரிய கழியிடத்துச் செறுவில் வெள்ளுப்பு விளையும் (மது. 318). பெரிய உப்பங் கழியாய செறுவில் உழாமலேயே வெணகலலுப்பு விளையும் (அகம். 140:2,3). தெய்வத்தையுடைய கடல்நீர் பரவிய உப்பு விளையும் செறுவில நீர் காய்ந்த தன்மையால வெள்ளுப்பு வேறாகும (அகம். 207:1,2). கடல்நீர் ஓடிப்பரந்த, உப்புப் படுதலையுடையது செறு (நற். 211:1-5). மழை பெய்யாது வறந்துவிட்டால கழிநீரிடத்து முள்ளியின மலர் உதிர்ந்து பரந்து சேறெலலாம ஒரு சேரக் காய்ந்து கழிச்செறுவின இடமெங்கும் வெள்ளுப்பு விளையும (நற் 311:1-5).

**செறுநர்** - பகைவர். முன்னமே போர் செய்து பழகிய யானைகள், வனமையினால் செறுநர்தம - பகைவாதம் - மிகச்செல்கின்ற போர்களைத் தொலைக்கும (பதி. 82:3,4). செறுநரைத் தொலைத்த, இடியை மாறுபட்ட பெருமையினையுடையது முருகன் கை (முரு. 5). முருகனுடைய ஒரு முகம, செறுநரைத் தேயத்துச் செலகின்ற நடுவுநிலைமையைக் கெடுத்துக் கறுவுதல் கொண்ட உள்ளத்தோடே, களவேள்வியை வேட்டது (முரு. 98-100). செழியன் தொன்றுதொட்டு வந்த செறுநர் நிலத்தே புக்கு, அவர் காவலையுடைய பொழில்களின நிற்கின்ற நிலைகளைக் கெடுத்தான் (மது. 152, 153). செழியன செறுநரது யானைகளைக்கொணட அரிய போரினைச் சிதைத்தழிப்பான (அகம. 46:11-13). புதலவர் செறுநரும விருமபும குற்றமற்ற அழகினையுடையவர் (அகம. 66:3,4). தலைவன செறுநரும் விழையும செம்மாப்புடையவன (நற். 50:9). 'நீராடியவர், செறுநர் விழையாத பிணைந்த கேண்மை மறுபிறப்பிலும் இயைக' என வையையை வேணடினர் (பரி. தி. 3:3,4).

**செறும்பு** - சிறாம்பு. கரிய பனையின் செறும்பினை-சிறாமபினை- போன்ற தடித்த மயிரினையும் சிறிய கணணினையும உடையது பன்றி (அகம. 277:7,8).

**செறுவர்** - பகைவர். 'செறுவரை - பகைவரை- வெகுண்டு பார்த்த அதியனின் கணகள் தன் சிறுவனைப் பார்த்தும சிவப்பு அமையாவாயின' என அவன வீரத்தை ஔவையார் சிறப்பிப்பர் (புறம். 100:10,11). கோடைப் பொருநனாய கடிய நெடுவேட்டுவன செறுவர்தம முயற்சியையுடைய கிளர்ந்த உள்ளத்தைக் கெடுத்த வாடபோரின மிக்க படையுடையவன் (புறம. 205:4-6) 'செறுவர்க்குப் பெருமகிழச்சி பிறக்கும வகையிலும எமக்குத் துன்பம வரும் வகையிலும் எவரேனும் இங்ஙனம வருவரோ' எனக் கூறித் தோழி தலைவனிடம் இரவுக் குறி மறுத்தாள (குறு. 336:1,2).

**செறுவோர்** - பகைவர். செறுவோர்தம் - பகைவர்தம்- செருக்கினை ஒழித்தலும தமமைச் சேர்ந்தோர்க்கு ஓர் ஊறு எயதுமிடத்து உதவி செய்தலாய ஆண்மையும இலலின்கண்ணே சோம்பியிருப்போர்க்கு இல்லை (அகம் 231:1,3).

**சென்னி** - 1. தலை/முடி. 'நினது சென்னி-தலை- நான்கு வேதத்தினையுடைய அந்தணர் நின்னை நீடு வாழக என்றெடுத்த கையின முன்னே வணங்குக' என்று முதுகுடுமிப் பெருவழுதியிடம காரிகிழார் கூறினார் (புறம். 6:19,20). தேனழிந்த மலை போலத் தேனீ ஒலிக்கும் மணம்நாறும்

மதத்துடனே புண்வழலை வடியும் பெரிய சென்னியையுடையது யானை (புறம். 22 5-7). கறை மிடற்றணணல தம் அழகிய செனனிப் பககத்தே பிறை அணிந்துள்ளார் (புறம். 55:4,5) பால்போலும் பிறை நுதல்போலப் பொலிந்த சென்னியினையும் நீலமணி போலும் கரிய திருமிடற்றினையும் உடையவர் சிவபெருமான் (புறம். 91:5,6). 'பகைவருடைய யானையினது பட்டத்தின் பொன்னைக் கொண்டு பாணரது சென்னி பொலியும்படி வாடாத பொறறாமரையைச் சூட்டிய உரவோன் மருகன் மலையமான் திருமுடிக்காரி (புறம். 126:1-4). 'ஒளியையுடைய அழகிய நீலமணி விளங்கும் சென்னியை உடைய செலவததோன்றல்' கண்டீரக்கோப் பெருநள்ளி (புறம். 150:6-7). பாணருடைய சென்னியும் வண்டுகள் படிந்து தாதூதுவ தொழிநதன (புறம். 244:1). 'நொசசியே, காவலையுடைய எயிலிடததே நின்று, கோடல கருதி வருவாரை அடர்த்து அவர்கள் மாறு பாட்டை அழிப்பதால் ஊர்பபுறத்தைக்கைவிடாது காக்கும் நெடுந்தகையினுடைய பெருமை பொருந்திய சென்னியில் அணியப்படும் உரிமையும் நினனுடையதாம்' என மோசி சாத்தனார் நொச்சியின சிறபபைப பாராடடுவர் (புறம். 272:6-8). மறவன வாடியமாலை மலைந்த செனனியன் (புறம். 285:6). 'வாளால் வடுப்பட்டு விளங்கிய சென்னியையுடைய செருவினை விரும்பும் குருசில்' எனத் தலைவன் ஒருவனைச் சிறப்பிப்பர் உறையூர் மருத்துவன் தாமோதரனார்! (புறம. 321:9,10). வேப்பமாலையும் ஆத்தி மாலையும் போந்தைமாலையும் சூடிய செனனியர் மூவேந்தர் (புறம். 338:6-8) பாணன் தன் சென்னியின்கண் நீர்நிலையிற் பூவாத எரி போலும பெரிய பொற்றாமரைப் பூவணிந்து விளங்கினான (புறம. 364:2,3). புலவாயின் (ஆண மானின்) நெறறி மயிர்போல இளைஞனின் பொறறாமரை விளங்கும செனனியில தலைமயிர் சிதறிக கிடநதது (புறம். 374:2,3). மதத்தைச் சென்னியிலே யுடைய களிறு வன்கண்மையுடையது (பதி. 25:2). உழவர் சுழிநத மயிரைக் கொண்ட சென்னியை உடையவர் (பதி 27:4,5) களிறு, வேங்கையினது கிளையை வளைததுப பிளநது, தன் கரிய பெரிய செனனியில அழகு பெறச் சூடியது (பதி. 41:8-11). உழவர், ஆமபற்பூவைச சென்னியின கணணே சூடினா (பதி. 62:16,17). யானை மதம் மிக்கு மிகுதியான கோபம் மூண்டு, வண்டுகள் ஒலிககினற சென்னியை உடையதாய பிடி புணர்ந்து செனறது (பதி. 82:4-6). சுருமபும மூசாத நெருபபுபபோலும் பூவினையுடைய செங்காந்தளினது கண்ணி சூடிய சென்னியன முருகன (முரு. 43,44). ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடைய, முடிக்குச் செய்யும தொழில எல்லாம் முற்றுப் பெற்ற, முடியோடே கூடி விளங்கிய ஒனறற்கொன்று மாறுபாடு மிகும் அழகினையுடைய மணி, மினனோடேமாறுபடுகினற விளக்கததோடே முருகன் செனனியிலே பொலிவுபெற விளங்கியது (முரு. 83-85). பனையாலும் வேமபாலுமாகிய மாலைகளைப்பெரிய செனனியில சூடிய இருபெருவேநதரும் படும்படி கரிகாலன வெனறான (பொரு. 143-146). கமழுகினற மதததாலே சேறுணடான நறிய சென்னியையுடையன யானைகள் (மது. 44,45,47). பலகாலும் எண்ணெய வார்த்த நனமை பெற்றது செனனி (குறி. 107,116). நெருபபு, கபபுவிட்டு எரிந்தாலொதத் விட்டுவிளஙகும முறுககுணட சடை இளம் பிறையுடன ஒளிரும் செனனியினையுடையவன மணிமிடறறநதணன் (சிவன) (அகம. க. வா. 10,11;15). பெரிய செனனியினையும் சிவநத நாவினையும் உடையது குறுமபூழசேவல (அகம். 103.2,4). புலியுடன பொருது உழநதமையால துண்டமாகப பிளவுபடட சென்னியினகண உறற நோயாலாய வருததத்துடன் யானை செனறது (அகம. 119:16,18) எருககினது நெருங்கிய பூககளாலாய கணணி ஆடவர் செனனியை அழகுறுததியது (அகம. 301: 11,12). நெருங்கிய மயிரினையுடைய கழுததினையும் நிமிநத செனனியினகணணே முருககம பூவினையொதத சூட்டினையுமுடையது கோழிச சேவல (அகம. 367:10-12). இடையன செனனியில சூடிக கொண்டனவெலலாம முலலையரும்புகளேயாகும் (குறு. 221:4,5). வழிச செலலும மககளுடைய செனனியை மோதியதனாலே குருதி படிநத சிவந்த மறுபபட்ட தலையையுடையன புலிக குட்டிகள் (நற. 2:3-5). 'கடறகரைச சோலையில எனது சென்னியை இறைமகளின சிவநத அடிகளிலே சோதது வணஙகினால தலைவா செயல இபபொழுது எபபடியிருககினறதோ எனறு எனனை வினவலும உணடாகும்' எனத தோழி தனனுளளே கூறிக கொண்டாள (நற. 342.7-10). அருஞசுரம செலவோா பாலை நில மரததின பூஙகொததைச செனனியிலே சூடிச செலவா (ஐங. 301:1,2). 'எம புதலவனை எடாதேகொள்; அவன நின செனனியில உள்ள வணடுகள் ஒலிககினற பூஙகொததிற பூக்களை வாஙகி, அறுபபான. எனத் தலைவி தலைவனிடம கூறினாள (கலி. 79.15,16). புதல்வன கமழும் செனனியில, பொனனால செய்த பிறை அணிநதிருநதான (கலி. 81: 4,5). பட்டததையுடைய இளைய களிறறினது கருமையையுடைய சென்னியில மூனறு வடம்

தொங்குதல (கலி 86:1). 'ஏற்றைத் தழுவினவ னுடைய செனனியிறகிடந்த கணணியைக கொம பிலே எடுததுககொண்டு புகரேறு துள்ளுகையி னாலே அபபூ வநது என் மயிருக்குள்ளே வீழந்தது' எனத தலைவி உரைத்தாள் (கலி. 107:6-9). தலைவன் பொயச் சூளால் முருகன்மாறுபடுவதற்கு முனனே தலைவி தன செனனியால முருகனை வணஙகி, இருஞ்சூளான வரும ஏதத்தை அருட் கூற்றான் ஆறறினாள் (பரி. 8:87-89). தோட்டிப் புண்ணாலமெனமைபட்ட செனனியை உடையது களிறு (பரி. 9:50). செவவேளின் குனறிலுள்ள யானையினது சென்னியின (குமபததின்) நிறததைக் குஙகுமததால் அணி செயதனர் (பரி. 19:85). யானை விளக்கததால் எரியை ஒதத ஓடை, நடுவே கிடநது விளங்கும் சென்னியை யுடையது (பரி. 21: 1,2).

2. மலைச் சிகரம். உருமேறு தான ஏறுதற்காக இடிதது வழியாக்கிய செனனியை - மலைச சிகரததை - உடையது மலை (சிறு. 265,266). விண் ணைத் தீணடுகினற செனனியிலே செஙகாந்தள் கிளைததது (குறி. 196). மேகம தவழும் சென்னியை யுடையது மலை (அகம் 108:16-18). நீர் ஊாந்து இறங்கும் அழகிய செனனியில வேங்கை யின நறும்பூக்கள் உதிர்ந்தன (அகம. 205:18,20). மேகங்கள் தவழ்கினற சென்னியினையுடைய, வானளாவ உயாந்த விளக்கத்தையுடையது மலை (குறு. 144:6,7). விசும்பினகண் ஓடுகினற முகிலைக் கிழிககும சென்னியையுடையது மலை (நற். 28:7-9). மலை அழகுபெறற மேகம் உணடாகினற செனனியையுடையது (கலி. 43:5,6). விடைப் பாகன் (சிவன்) திரிபுரம் செறறபோது உயர்ந்த சென்னி யுடைய இமயம் வில்லாயிற்று (பரி. தி. 1:76,77).

3. உச்சி. ஏணியாலும் ஏறுதற்கரிய சென்னியை - உச்சியை - உடையது மாடம (பெரு. 347,348). மலைச்சாரலில் உள்ள, வணடுகள் ஆர்க்கும் கொத் துககளையுடைய கோங்கினது உயர்ந்த சென்னி யில் மலர்கள் சுடர்ப்பொறி போலத தோன்றும (அகம.153:14-18). பழனததிடத்தே மீன்களை அருந் திய நாரை, கழனியிலுள்ள மருதமரத்தின செனனியில சென்று தங்கும் (ஐங். 70.1,2).

4. சோழன். 'நன்னாட்டிறகு வேந்தனாகிய, வேல விளங்கும் பெரிய கையினையும் தேரினையும உடைய சென்னியின் மார்போடு மாறுபடுவோருள ராயின தமக்குறுதியைத் தாம அறிவர்; அவன தோளோடு மாறுபட்டோர் வாழக் கண்டதும் இலம்; அவன் திருவடியை அடைந்தோர் வருந்தக் காண்டல அதனினும இலம்' எனறு இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேடசெனனியை மாடலன மதுரைக் குமரனார் பாடுவர் (புறம். 61:12-19). 'வானைப் பொருந்தும குடையினை யும் வலிய குதிரையினையுமுடைய சென்னி' என உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னியைப் பெருங் குன்றூர் கிழார் சுட்டுவர் (புறம். 266:7). ஆத்தி மாலையணிநத மாாபையுடைய, சிலவாகிய ஊர் களை ஆட்சி கொண்ட செங்கோலையுடைய செனனியின ஆரேறு போனறவள் தலைவி (நற். 265:5,6).

**சென்னியர்** – 1. பாணர். 'விறபடை இருக்கின்ற ஊர்களிலே செனறு, யாம் செவ்வரை நாட னுடைய செனனியேம் - பாணச் சாதியேம - எனறு கூறுவீர் ஆயின எயிற்றியர் புழுக்கலையும் வாடு னையும தேககிலையில குவித்துததர நும் சுற்றத் தோடு பெற்றுண்ணுவீர்' எனப பாணர் ஆற்றுப படுததப பெறறனர் (பெரு. 103-105). செனனியர், தெறலருங் கடவுள் முன்னர், சீறியாழ் வாசிததனர் (நற் 189:2–4). முழவு முதலியன ஆர்ப்பத் தலைக கோல . மகளிரும செனனியரும ஆடலைத் தொடங்கினர் (பரி.7:79,80).

2. தலையையுடையவர். மூவேந்தர் வேம்பும் ஆரும போந்தையும் மூனறும் மலைநத சென்னியர் - தலையையுடையவா (புறம். 338:5-7; பதி. 62:17;85.3).

3. சோழர். ஒனனாப பூட்கைச் சென்னியர் - சோழர் - பெருமான இளஞ்சேரல இரும பொறை யிடம தோற்றான் (பதி. 85.3,4).

**சென்னியர் பெருமான்** - சோழர் தலைவன். பொன் னாற் செயத பேரணிகலங்களை அணிநத, சேரனோடு பொருந்தாத மேற்கோளையுடைய சென்னியர் பெருமானின - சோழர் தலைவனின - படையாளர், சேரன படையாளரிடம தோறறுப் போட்ட வேல்கள், கபிலன பெற்ற ஊர்களினும் பலவாகும் (பதி. 85).

# சே

**சே** - காளை. இனமாகிய, மிகக, வெவ்விய சேக் களை - காளைகளை-தொழுவோடே வேண்டினும் அறஞ்செய்யும் தகுதி உடையான் பிட்டங்

கொற்றன் (புறம். 171:8,11). வராஅல் இரும் போத்து, தூண்டிலிட்ட வேட்டுவன் இழுக்கவும வாராமல, கயிறிட்டுப் பிடிக்கும சினமமிக்க சேபபோல மதம்மிக்குக குளங்களைக் கலககியது (அகம. 36:1,6-8).

**சேஎ - காளை.** ஒழியாத கோபத்தோடே செவவி தாய்த தன் மேலே சென்ற சேஎயின் - காளையின - செவியடியிற் கொம்புகளைப் பிடித்துக் கொண்டு, அதனைப் பொதுவன தழுவுவான (கலி. 103:50-52).

**சேஎய் – 1. முருகன்.** பெண்டிர்க்கு ஆற்றுதற்கரிய வருத்தமாகிய மார்பினையும் பொருவார்க்குத் துளக்கப்படாமையிற பெரிய நிலம்போன்ற வலி யினையும உடைய, போரினகண்ணே மிகக சேஎயை – முருகனை - ஒப்பாய் எனச் சேரமான் செல்வக் கடுஙகோவாழியாதனைக் கபிலர் பாடுவர் (புறம். 14:16-19). 'பகைவரது புறககொடுததோடும் வீரக்கழலினது ஆரவாரததைக் கேட்டு நாணிப் பின் செலலாது கண்டு நின்ற, போரை விரும்பிய, சேஎயை ஒககும வென்றியை உடையவன, வேள் பாரி (புறம். 120:19-21). 'பெரிய மழைககு இருப்பிட மாதறகமைந்த உயர்ந்த மலையை யுடைய திருத் தக்கசேஎயை ஒபபாய்'எனத தேர்வண் மலையனை, வடமவண ணககன் பெருஞ்சாத்தனார் பாடுவர் (புறம். 125.18-20). 'மகளிர், ஒருவரின் ஒருவா புணர்தற்குக் காலம் பார்க்கும பெரிய மலை போலும் மார்பினை உடையபோரை விருமபும் சேஎயை ஒப்பவன் மூவன் (புறம். 209:17-19). 'மாமரததை வெட்டின, வெற்றியினையும், ஒருவ ராலும அளநதறியவொண்ணாத நலலபுகழினை யும் உடைய சிவந்த வேலையுடைய சேஎயின் சேவடியிற செலலும உள்ளததுடன நீ அசசெலவை விருமபினையாயின் இப்பொழுதே நீ கருதியதைப் பெறுவாய' என்று முருகனிடம அன்பன ஆற்றுப் படுத்தப் பெற்றான் (முரு. 59-66). 'பிறரால் இடுக் கண்பட்டு வருந்துவோர்க்கு அருள் பண்ணும் சேஎய்' எனறு முருகனைப் போற்றுவர் (முரு. 271, 272). கடலிலே சென்று கடியசூரனைக் கொன்ற பூணினையுடையவன் சேஎய (பெரு. 457,458). இனிய ஓசையையுடைய முரசினையும் அணிகலன களையும உடைய சேஎய், அசுரரைக கொல்லுதற்கு எடுதத வேலபோல மேகம் மின்னியது (குறி. 50-53). வெல்லும் போரைவல்ல சேஎயைப் போன்றவன் நன்னன் (மலை. 493). அழகிய மணி விளக்கு ஒளிரும் திருச்சீரலைவாயமாநத போர் வன்மைமிகக சேஎயொடு பொருநதித் தலைவன செய்த சூளுறவே எமக்குத் துன்பம் தருவது எனத் தலைமகள் கூறினள் (அகம். 266:20,21). போர்க களததில் எதிர்தத அவுணர்கள் சாயுமாறு கொன்று வீழததி, தேய்த்தொழிதத சிவநத நேரான அம்பினையும், செந்நிறம் படிந்த கொமபு களையுடைய யானையையும், கழல இடப்பட்ட வீர வளையினையும் உடைய சேஎயக்குரியது குனறம் (குறு. 1:1-3). ஓங்கிய வெற்றியினை யுடையவன சேஎய் (பரி. 5:54). 'வையையில் புதுப்புனல் வருகை அழகிய பெருக்கனறோ? அதனிடைப் புணையேற வேண்டுகையாலே பொழுது தாழ்ததது, அதனால் இத்தளிர்கள் வையை நீர் காரணமாகத துவண்டன; சேஎய குனறதது ஆணை' எனறு தலைவன காதற பரததையிடம சூளுரைத்தான் (பரி. 6.68–70). 'பசும்பூட் சேஎய்! இடையறாது ஒழுகும் அருவி விடரினகண்ணே பரநத நினகுனறம பல்வகை மணம உடையது' என முருகனைப் பாடுவர் (பரி. 21:52-53).

**2. மகன்.** உலகத்தை அழிக்கும் கடவுட்குச் சேஎய்- மகன – செவ்வேள் (பரி. 5:13).

**3. சேரவேந்தன்.** 'கோச்சேரமான யானைககட் சேஎய் மாந்தரஞ்சேரலிரும பொறை' காணக.

**4. ஏறு.** வெய்ய வலியினையுடைய சேஎயின - ஏற்றின - சினததை அஞ்சாது பொதுவன அதனைத தழுவினான (கலி. 104.25).

**சேக்கை - கட்டில்.** அசசம பொருநதிய வீரமுரசம நீராடிவருவதன முன், மெல்லிய பூவையுடைய சேககைககண - கட்டிற்கண் - முரசுகட்டில் எனப தறியாது மோசிகீரனார் ஏறிப படுததுறங்கினார. அது கணடு சினந்து இருகூறாககும் தனனுடைய வாளின் வாயை மாறறியதாகிய அதுவும அமையும நலல தமிழ் முழுதும் அறிநதமைககு' எனத் தனககுக கவரி வீசிய தகடூரெறிந்த பெருஞ்சேரல இரும்பொறையிடம் தன முரசு கட்டிலில அறியா தேறிய அமமோசிகீரனார் கூறினார் (புறம்.50.5-10). அதிசயம அமைந்த நறிய பூக்களைச் சூழவுடைய சேககை (அமணபபள்ளி) (மது. 487). ஆயதொடி மகளிர் நறியதோளை முயஙகித தூக்கு மாலை களால பொலிவுற்ற சேககையில துயிலகொள்வர் (மது. 712, 713). மெல்லிதாக விரிநத இணைத வணைநத சேக்கைககு மேலாக அனனச சேவலின சூட்டாகிய மயிர்பரப்பபபட்டு, அததூவிக்கு மேலாக அணைகளும இட்டு வைத்துத் துகிலினை மடித்து விரிததுச் செஙகழுநீர் முதலியவறறின

இதழ்கள் பொருந்தப்பெற்றது சேக்கை (நெடு. 131-135). 'மெல்லிய தலைமயிரினை உடைய சேணமிட்ட சேக்கையை ஒத்த ஆட்டுத்தோற் படுக்கையிலே கொடிய விலங்குகள் வராதபடி, இடையர் ஏற்றிய நெருப்புத் துணையாகத் தங்கிப்போவீர்' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 418-420). 'இவளைப்பிரிந்து உறையின், தக்க இடத்தே குற்றமற்ற தூய அறுவை விரிக்கப்பெற்ற சேக்கைக் கண் முயங்கும் இன்பம் உறாமல் கழியினும் கழிக; நீ தேடுகின்ற பொருட்கு எக்குறையும் நேராதொழிவதாக' எனக் கூறி, தோழி தலைவனைச் செலவழுங்குவித்தாள் (அகம். 13:14-17). குறத்தியர் தந்தைமார் காட்டில் விலங்குகளை ஆராயும் வேட்டையில் துயிலும் இடம் பெறாமல் கூதிர்க் காலத்தில் புலித்தோலை விரித்துள்ள சேக்கையில், இல்லிலே வந்து தங்குவர் (அகம். 58.3-6). 'மாமை நிறத்தளாய நம் தலைவியுடன் நீண்ட மனையின் கண்ணே நுரையை முகந்துவைத்தாற்போன்ற மெல்லிய பூக்களாலாய சேக்கையை (படுக்கையை) உடைய கட்டிலினிடத்து விளக்கின் ஒளியிலே நம் மார்பிலே தலைவியின் மார்பகத்துப் பூண்கள் வடுக்களைச் செய்ய முயங்கச் செல்வோம்' எனமீளலுற்ற தலைவன் இடைச்சுரத்தே தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம. 93:10-16). 'மாடங்களால் மாண்புற்ற நமது மாளிகையில், பெருமை அமைந்த சேக்கையின்கண் உள்ள வெறுப்பற்ற கொள்கையினையுடைய நம் காதலி இனிமை உறவும் நமக்குப் பாசறைக்கண் மேவிய வருத்தம் ஒழியவும் பாகனே, புரவியைச் செலுத்துக' எனத் தலைமகன் தேர்ப்பாகற்கு உரைத்தான் (அகம். 124:6-14). 'நம் தலைவியுடன் நீண்ட மாளிகையில் அழகிய வேலைப்பாடமைந்த, புனையப்பெற்ற பூக்களையுடைய சேக்கைக்கண் தங்குதலானே இன்றைப்போழ்து முழுதும் இனிதாகக் கழிந்தது' எனத் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கினான் (அகம். 167:2-5) 'உடனுறையப் பெறாமையை நினைந்து கண்ணீர் சிந்த, குற்றமற்ற அகன்ற படுத்தல் அமைந்த சேக்கையில் அழகிய மெல்லிய அன்னத்தின் சிறகாலாய அணையினைச்சேர்ந்து தங்கி, மயக்கம் கொண்டமையின் வலியற்ற இருக்கையளாகித் தலைவி மாலைக் காலத்தில் மாறுபடுவளோ' எனத் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம் 289:10-17). வாடைக்காற்றால் நடுக்கம் மிகும் பாதி இரவில், பல அடுக்கு மெத்தைகளால் உயர்ந்த வளம் மிக்க சேக்கையின்கண் பருகுதலை ஒத்த காதலுடன் மாறி ஒருவர் மெய்யில் ஒருவர் புகுவதுபோலும் கைவிரும்பும் முயக்கத்தால் ஈர்உடம்பிற்கு ஓர் உயிர் எனத்தகும் காதலர்களும் வருந்துவர் எனத் தோழி கூறினாள் (அகம. 305.4-8). மகிழ்ச்சியினை அணிபெறக்கொண்ட புன்னகையுடன், மாண்புற்ற சேக்கையின்கண் இருந்து, நம்முடன் நல்லமொழிகளைக் கூறும் தலைவியின் குணங்களை நினைந்து நீமயங்குவாய் அல்லையோ எனத் தலைவன் பொருள் கடாவின நெஞ்சிற்குரைத்தான் (அகம. 353:21-23). 'என்னைப் பலவாகப் பாதுகாத்தும் நின்னைப் பாராட்டிப் பேசியும் பல மலர்களைப் பரப்பிய சேக்கையில் பகற்போழ்தும் நீங்காராகி நம் மனைக்கண் தங்கியிருப்பவர் நம் தலைவர்' எனத் தலைமகள் தோழிக்குக் கூறினாள் (அகம். 389:8-10). 'அவரோ பொருள் தேடித் தருதற்குக் காட்டைக் கடந்து சென்றார்; யானோ, ஒளி படைத்த வளைகள் நெகிழும்படி, ஒவ்வொரு நாளும் படுத்தற்கு அமைந்த சேக்கையிலே கிடந்து மிகவும் துன்பமுறுகின்றேன்' என்று பருவம் கண்டு தலைவி வருந்தி மொழிந்தாள் (குறு. 216:1-4). தலைவன் மாலைக்காலத்தில் நிலாவொளியில் குறுகிய கால்களையுடைய கட்டிலிடத்தேயுள்ள நறுமணமுள்ள பூஞ்சேக்கையில் பெருமூச்சு விட்டவாறு விருப்பத்தால் தன் மகனைத் தழுவினான், அம்மகனது தாய் அத்தலைவனது முதுகைத் தழுவிக் கொண்டாள் (குறு. 359). 'இராப்பொழுதில், நல்ல மாளிகையின்கண்ணே துயிலுமாறு மலர்களாலமைந்த சேக்கையின் பக்கத்திலும் மாட்சிமைப்பட்ட சிறைப்படுத்திய நல்ல காவல் உண்டு' என காப்புமிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைவிக்குத் தோழி கூறினாள் (நற். 132:5-7). 'பல மாட்சிமைப் பட்ட சேக்கையைப் பகையாகக் கருதிக் கொண்டு கட்குடியான மயங்கினாற் போலாயினை' எனக் கூறி, தோழி தலைமகளை அறத்தொடு நிற்க உடன்படுத்தினாள் (நற். 297:3,4). 'பதம்படுத்தல் பொருந்திய சேக்கையில் துயிலிடத்து நீ அவள் வருத்தமறியாது அவள் முயங்கிய கையைவிட்டு நீங்கினும் தனிமை கொண்டு வருந்துபவள் தலைவி' எனத்தோழி கூறித் தலைவனைச் செலவழுங்குவித்தாள் (கலி. 10:10,11). சிங்கக்கால் மேல்தைத்த தூங்கு கட்டிலின் இலங்கும் மாட்சிமை விளங்கும் அன்னத் தூவியாற் செய்த மெல்லிய சேக்கையிடத்தே உறங்குபவள் தலைவி (கலி. 13:15,16). ஐந்து வகையாகப் பூட்டின, மாசில்லாத வளமையையுடைய சேக்கையில் புணர்ந்த புணர்ச்சியிடத்தே தலைவன் தலைவியின் தோளில் துயில் கொண்டு கனாக் கண்டான் (கலி. 24 6,7). ஐந்து வகைப் படப் படுத்தலால் உயர்ந்த நீலப்பட்டாற் செய்த மெல்லிய சேக்கையிடத்து, அன்னத்தின் தூவியாற் செய்த மெல்லிய அணை கிடந்தது (கலி.

72:1,2). வரைவு நீடலால் ஆற்றாத தலைவி பீலி உதிர்ந்த மயிலபோலே பொலிவழிநத நாணததால நடுங்கிச் சேக்கையிலே கிடந்து, உடம்பு உலமரக காமத் தீயினால் வருந்தினாள் (கலி. 137:5-7). இராக்காலத்தே தலைவன, அன்னத தூவியாற செய்த மெலலிதாகிய சேக்கையிலே தலைவியைக கூடி அவளது எயிற்றினீரை நுகர்ந்து குற்றம் தீரத் தலையளி செய்தான் (கலி.146.4,5). திருமால் தன் நீல நிறததோடு மாறுபடும் வெண்மை நிறத்தினையுடைய பாற்கடல நடுவே மின்னை ஒத்து அவிாகின்ற சுடர்மணியொடு விரித்த தலையாயிரததினையுடைய சேககைககண அறிதுயில கொள்வர் (பரி. 13:26-29).

2. புணர்ச்சி. சேககைக்கண - புணர்சசிக்கண் - இனிய பரத்தையர்பாற் சென்றமர்வானைச செல் லாமற் காத்தலும சென்றான் என்று நீங்கி ஒழுக லும் மனைவியால முடியாது (பரி. 20:86,87).

3. தங்குதல். செங்குத்தான மலைபபகககத்தில் சேக்கை - தங்குதல் - அமைந்தது வருடைமான் (குறு. 187:1).

**சேக்கோள்** – ஆனிரை கவர்தல். வேட்டக் கள்வர் சேககோள் - ஆனிரை கவர்தல் - பொருட்டு, வாரினை இழுத்துக கட்டப் பெற்ற கடிய கண்ணையுடைய தண்ணுமை அறைவர் (அகம். 63:17,18).

**சேக்கோள் தண்ணுமை** – ஆனிரை கவருங்கால் அறையும் பறை. காட்டின்கண் சிறுகுடி மறவரது சேக்கோள தண்ணுமையின - ஆனிரை கவருங்கால் அறையும் பறையின - ஒலி கேட்டுப் பருந்தின சேவல பறநது செல்லும் (அகம். 297:16,17).

**சேகம் பூதனார்** – புலவர். 'சேநதன் பூதனார்' காண்க.

**சேகா** - சேவகா (குறுக்கல் விகாரம்;விளி). பரததை யிற் பிரிநது மீணட தலைவன குதிரையேறிவிட்டு வந்தானாகக கூறியது கேட்ட தலைவி அவனைச் சேகா - சேவகா - என விளிததுப் பேசினாள் (கலி. 96:22).

**சேட்சென்னி நலங்கிள்ளி** - சோழன் நலங்கிள்ளி. இச சோழ வேநதனை, 'சேட்சென்னி நலங்கிள்ளி' என விளித்துப் பாடுவர் உறையூர் முது கணணன சாத்தனார் (புறம். 27:10). இச்சோழன உயிருட னிருநத காலத்தில், 'சேட்சென்னி நலங்கிள்ளி கேட்பான் கொலலோ' என அஞ்சி ஏனை வேந்தர் தம் வலம்புரிச் சங்கினால் வெற்றி முழக்கமிடாது அதனைத் தூககணங்குருவிக் கூட்டினைப் போல வாயிலின் ஒரு பககததே தொங்கவிட்டிருநதனா (புறம். 225:9-13). 'சோழன் நலங்கிள்ளி' காண்க.

**சேட்புலம்** – நெடுந்தொலைவு/உயர்ந்த இடம். தம கணவன் சேட்புலம - நெடுநதொலைவு - செலவின, ஆபரணத்தையணிந்து பிடியைப பரிசிலாக அவா பெண்டிரும் தம் தரததிலே கொடுக்கும் வள்ளிய புகழையுடையவன் கண்டீரக்கோன் (புறம். 151: 2-6). லேட்டுவருடைய சிறுவர் சேட்புலம செல்லாது மடுககரையில பிடிததுக் கொண்டுவந்த உடும்புத தசை பெய்து சமைககபபட்ட தயிரோடு கூடிய கூழையும் புதியவாய் வந்த வேறு நலல உணவுப பொருளையும் பாணருககும் அவரொடு வநத ஏனை விருநதினர்ககும ஒரு சேரக கொடுதது உண்பிக்கும் விருப்பமுடையவள் மறககுடி மனைவி (புறம். 326:7-12). முழவு தனனிடத்தே பூசிய மார்ச்சனை மணகாயவும பரிசிலர் துனபமடையவும பாரி மீணடு வராத சேட்புலம் சென்றான (பதி. 61:8-10). அம்பலங்களில் சேட்புலங்களினினறும் வநத கூததா முதலியோர் தங்குவர் (மலை. 492). ஊக்கததினை வெற்றியுறுவிக்கச சேட்புலம் படாந தோர் எனப பிரிநது செனற தலைவனைத் தோழி குறிப்பிடுவள் (அகம. 61 3). ஆண்புறா தனது பெடையுடன சேட்புலம் சென்றது (அகம. 271:1,2). சிறிய ஊர்களிலுள்ள பெண்கள் திரியுமிடததே சேட்புலத்திடததிருநது ஒலிக்கும் பேராநதையின மெல்லிய குரல வருததம தரும (அகம். 283: 5-7). உவர் நிலததே விளைநத உபபினது விலையைக கூறி, உமணர் சேட்புலததே செல்வர் (அகம். 390: 1-3). சேட்புலம் கருதிய அசைநத நடையை உடையவர் அநதணர் (ஐங. 384:1).

**சேடல்** - பவழமல்லிகை. தலைவியும தோழியும் சேடல முதலிய பூககளைப பறிததுப பாறையில குவிததனர் (குறி. 82,98).

**சேடு** - 1. திரட்சி. ஈனற பெண் கரடிகளின சேடு - திரட்சி - மிகக கிளைகளில ஏறிச சென்று உணடு எஞ்சிய இருபபைப் பூககளை எயினர் மகளிர் மூஙகிற் குழாயிற் பெயது விறபர் (அகம். 331:3-7).

2. பெருமை. சேடு - பெருமை - அமைநதது வெளளி வட்டில (கலி. 72:3).

**சேணன்** - நெடுந்தூரத்தில உள்ளவன். அறுகை எனனும் குறுநிலமனனன சேணன - நெடுநதூரத்

திலுள்ளவன - ஆயினும சேரனுககு நண்பனாக இருநதான (பதி. 44:10,11).

**சேணிடையர்** - நெடுந்தொலைவில் உள்ளவர். 'தலைவர், அருள்செய்யாராய நமமைப பிரிநது, அருநெறி களையுடைய பாலையைக கடந்து சேணிடையர் - நெடுநதொலைவில உள்ளவர் - ஆயினும் தாழக் காது வருவர், எனத தலைமகள் கூறினாள் (அகம. 183 3-5).

**சேணோர்** - நெடுந்தொலைவில் உள்ளோர். எருமை யின முதுகில சிறுவர் ஏறி, சேணோர்ககு - நெடுந் தொலைவில உள்ளோாககு - உருணடைக கல்லின மீதுள்ள மநதிபோல தோனறுவா (அகம 206:3-6)

**சேணோன்** - நெடுந்தொலைவில உளளோன். 'விறலி' நீ செலவையாயின் அதிகமான் சேணோன - நெடுநதொலைவில் உள்ளோன் - அலலன' என ஔவையார் விறலியை ஆற்றுப்படுததினார் (புறம. 103'5). சேணோன (மலைமிசை உறையும் குறவன்) அகழந்த மூடின வாயையுடைய பொய்க்குழியிலே வீழநத ஆணபனறியைக் கொன்றான் (மது. 294, 295). ஆரவாரம் பொருநதின மரததின உச்சியிலே இராக்காலததே, சேணோன் புலி அஞ்சுகைக்குக காரணமான பரண் அமைத்திருந்தான் (குறி. 40,41) பரணின மேலிருந்த சேணோன எய்த மருமத்திற புண மிகுதறகுக காரணமான அம்போடேகி, பனறி நெறிகெடக் கிடநதது (மலை. 243-247). அரி யேற்றின வலியினையுடைய, தினையைச் காககும் சேணோன (பரணமேலுள்ளவன்) கையின கண உள்ளதும், தீவாய்ததலை உடையதுமாய கொள்ளிக் கோல சுடரப பொறிகள் விடும் (அகம் 73.13-16). இரவில் தினையை மேய்ந்த யானையின கூட்டம் நிலை கெட்டு ஓட, மலையிடததுது உயர்ந்த பரணி லிருந்து சேணோன் எறிந்த கவண கலலின் கடிய ஓசை ஒலலெனறொலிக்க, அது கேட்டுப் புலி, யானை எலலாம் கதற, மயில் ஆட மலை முழுதும் அஞ்சும் (அகம். 392:12-18). சேணோன் (பரணின மேலிருககும் குறவன்) கொளுத்திய நறுமணமுள்ள கொள்ளி, வானதது மீன போன்று இடந்தோறும் விட்டுவிட்டு ஒளிவீசும். (குறு. 150.1,2). தினையைக் காககின்ற சேணோன (பரணிடததுள்ள குறவன) கொள்ளிக கட்டை கணடு யானை அஞ்சி ஓடியது (குறு. 357:5-7). சேணோன (தினைக காவலன) அமைதத கடடுப பரணைக காட்டில இருககினற மயிலகள் இருககையாகக கொணடு தங்கும் (நற். 276'5,6)

**சேதா/சேதான்** - செவ்விய ஆக்களா. மிக்க உவரை யுடைய கிணற்றில், பாரினை உடைதத பககத்தே ஊறிய நீரை உண்ணவேண்டிக் கலிததுச செல்லும் கொஙகரது ஒலிக்கும் மணி பூணட ஆயமாகிய சேதா - செவ்விய ஆக்கள் - வனனிலங்கள் துணி படச் செனறு கிளப்பிய செம்மண்புழுதி வானின் மிக்குத தோனறும் (அகம். 79:3-8). இனிய புளிப்பு வாய்ந்த விருபபம் தரும் சோற்றில்|சேதான் வெணணெய், உருக அதன் மேற்பெயது இளையர் உண்பர் (அகம். 394:5-7). பலாமரததின் கொழுவிய சுளையையுடைய பழத்தை அவ்விளங்கனறை யுடைய சேதா தினறு பக்கததிலுள்ளதாகிய சிறு மலையின்கண் உள்ள குளிர்நத நீரைப் பருகும் (நற. 213:2-5). மலையில மேய்ந்த சிறிய கொமபையுடைய சேதா,காந்தளை த தீணட, அககாந்தள் மலரிலுள்ள தாதுககள் தனமேலே உதிரப்பெற்றதனாலே நிறம் வேறுபாடுடைமை நோககி அதன்கனறு தன தாயென்றறியாமல் மயங்கும் (நற். 359:1-3).

**சேதிகை** – குதிரையுடலில் குத்தும் வண்ணத் தொழில். மூங்கில் உழக்காலும் நாழியாலும் சேதிகை என்னும் பெயரையுடைய தொழிலகளாக வண்ணங் களைத் தோய்த்துக் குதிரையுடலில் குத்துவர் (கலி. 96:27,28).

**சேந்தங்கண்ணனார்** - புலவர். சேந்தன் என்பார்கரு மகனாராகிய கண்ணனார் என இவர் பெயர் விரியும. இப்பெயர் சேந்தன் கண்ணனார் என இயல்பாகவும (அகம். 350) சேந்தங்கண்ணனார் எனப் புணர்ச்சியில திரிந்தும் (நற். 54). காணப் படுகினறது. இப்புலவர் அகத்தில ஒன்றும் (350) நற்றிணையில் ஒன்றும் (54) ஆக இரு பாடல்கள் பாடியுள்ளார். இரண்டிலும் இவர் நெய்தல் திணையையே புனைந்துள்ளார். எறபாடும் மாலையுமாகிய பொழுதுகள் சிறப்புற இவரால் புனைவு பெறுகின்றன. பகற்குறி வந்து நீங்கும் தலைவனைத் தோழி தடுத்துத் தம்மூர்ககு வந்து தலைவியுடன் தங்கிப் போகுமாறு கூறுவதுபோல் குறிப்பாக அவனை வரைவு கடாவுதலை அகப் பாடலின் பொருளாகவும் மாலைக்காலத்தே தலை வனிடம நாரையைத் தூது போக வேண்டுகின்ற தலைவியின் காமம் மிகக கழிபடர் கிளவியை நற்றிணைப் பாடலின் பொருளாகவும் இவர் அமைத்துள்ளார். இவர் பாடலில் தலைவி நாரை யைத் தூது வேண்டும் திறம் நயமுறவுள்ளது. கொற்கை நகர் பறறிய குறிபபினை இவர் அகப் பாடலில காணலாம்.

**சேந்தங்கீரனார்** - புலவர். சேநதன் எனபார் மகனா ராகிய கீரனார் சேந்தஙகீரனாா் எனப்பெற்றார்

(ப.மு பக். 391). இவர் பாடியதாகக் குறுந்தொகை 311-ஆம் பாடலொன்றே உள்ளது. அதனகீழ இவர் பெயர் சேந்தன கீரன எனறே காணப்படு கின்றது. ஆயினும், சேந்தன் கண்ணனார் எனனும் பெயர் புணர்ச்சித் திரிபுடன சேந்தங்கண்ணனார் என்று அமைந்த முறையினால் இபபெயரும் சேநதங்கீரனார் என அழைககப்பெற்றது. இக் கீரனார் அலரஞ்சிய தலைமகள் சிறைப்புறத் தலை மகன் கேட்குமாறு தோழிக்கு அவ்வலர் மிகுதியை உரைப்பதுபோல் தம் பாடலை அமைத்துள்ளார். 'பாகன் தாஙகிப் பிடிததுச் செலுத்தவும் நில்லாது விரைந்து சென்ற தலைவன தேரை யான் கண்டேனோ இல்லையோ, மலர் கொயத ஆயததா ரெல்லாரும் அதனை ஒருங்கே கண்டு கொண்ட னர்; ஆகலின, அலர் எவ்வாறு ஒழியும்' எனறு தலைவியின் கூற்றை இவர் நயமுறப் பாடியுள்ளார். தலைவனது தேரையும் அவனையும் தான் இடை விடாது காண விரும்பும் தலைவியின விருப்பத்தை இவர் குறிப்பாக அமைத்துள்ள நயமும் உணரத் தகும்.

**சேந்தம்பூதன் - புலவர்.** 'சேந்தம் பூதனார்' காண்க.

**சேந்தம்பூதனார் – புலவர்.** சேந்தன் என்பது தந்தை பெயா; பூதனார் எனபதே இப்புலவர் பெயர் இம்முழுப் பெயர் சேந்தன பூதனார் என இயல் பாகவும் (நற். 261). சேநதம் பூதனார் எனப் புணர்ச்சியில திரிந்தும் (அகம். 207) வழங்கும். மற்று, நற்றிணை 69-ஆம் பாடலாசிரியர் பெயராகக் காணப்படும் சேகம்பூதனார் என்பதும் இச்சேந்தம் பூதனார் பெயரின் திரிபே எனப் பி.நா. முதலிய பதிப்பாசிரியர் பலரும கொள்வர் இப்புலவர் பெயர்முன் 'மதுரை எழுததாளன்' என்னும் அடை மொழி காணப்படுதலால் (அகம். 207, குறு. 90,226) இவர் மதுரைப் பதியினரெனபதும் ஏடெழுதும் தொழிலினரெனபதும் விளங்கும். பெயரேயின்றி மதுரை எழுத்தாளன என்று மட்டுமே குறிக்கப் பெறுமளவு (அகம். 84) இவர் அப்பதியிலும் அத் தொழிலிலும் சிறநது புகழுடன் விளங்கினர் எனக் கொள்ளலாம். இவருடையனவாக அகநானூற்றில் இரணடும் (84,207), குறுநதொகையில மூனறும் (90,226,247), நற்றிணையில இரண்டும் (69,261). ஆக ஏழு பாடலகள உள்ளன. அவறறை இவர் மருதமொழிந்த ஏனைத் திணைகள் நான்கிலும் அமைததுப பாடியுள்ளார். மழையினையேற்ற முல்லை நிலததையும் (அகம். 84) பகலினைப் போக்கிய மாலைப பொழுதையும் (நற். 69) இவர் புனையும் அழகு பாராட்டததகும். உமணர் கழுதைமேல் உப்புப் பொதிகளையேற்றிக் கொண்டு குடபுலம் செல்லும குறிப்பினை இவர் ஒரு பாடலில (அகம். 207) தருவர். வயலகள் சூழநத கொடியசையும அரண்மனையைப் பகைவா திறை யாகக கொடுப்பவும அதனைக் கொள்ளாத சினம மிக்கவன் தன் வேநதன என, அவனுககுத் துணை யாகிப போர்வயிற பிரிநது பாசறையிலிருககும தலைவன் கூற்றாக (அகம். 84) இவர் கூறும் மேம் பாடு குறிப்பிடத்தககது. 'தலைவனொடு நகைதது நட்புககொள்ளுமுன் பூவோடொககும கணணும வேயோடொககும் தோளும பிறையோடொககும் நுதலும் நமக்கு நலலவாகவே இருநதன' எனறு, தலைவன் மணம நீட்டிததலால அழுகிழநத தலைவி கூற்றில் இவா பேசும் நயம மிக நனறு.

**சேந்தன் - ஆர்க்காட்டு இளவரசன.** காவிரியில பலரும் நீராடுகினற பெரிய நீர்த்துறையினகண வளாநத மருத மரததில் கட்டப்பெற்ற களிறறியானைகளை யுடையவன்; பகைவருடைய புகுதறகரிய அரண களை வெனறு கைபபறறியவன; மழைபோலும கைவணமை அமைந்தவன; நிறைநத கள்ளுணவை யும் மாற்றாரின குருதிககறை படிநத வேலினை யுமுடையவன். இவன தநதையாகிய அழிசிககுரியது ஆர்ககாடு (குறு. 258, நற். 190).

**சேந்தன் கண்ணனார் - புலவர்.** 'சேந்தங் கணணனாா' காண்க.

**சேந்தன் கீரன் - புலவர்.** 'சேநதஙகீரனாா' காணக.

**சேந்தன் பூதனார் - புலவர்.** 'சேநதம் பூதனாா' காணக.

**சேப்பு - 1. வயல்.** சேபபினுள் - வயலினுள் - பசிய இலையினையுடைய தாமரை மலாதல (கலி. 74.2,3).

**2. சிவப்பு.** தனனைக கூட வரும் ஒருத்தியைக கண்ட தலைவன் தலைவியைச சோநது நடுககமுற, நறவுணடு சிவநத தலைவியினகண, முன, குறை கிடநத ஊடலின்மேல விளைநது இதனாலும் சேபபு - சிவப்பு - மிகுநதது (பரி. 7·67-70).

**சேமபு - செடிவகை.** மடாவில இலையையுடைய சேம்பு (தணடும கிழஙகும) மேலெழுநது வருமாறு சமைககப பெறறது (பதி. 24.20). 'பனையினது நுஙகோடே வேறு இனிய பல பணடஙகளையும வெறுககின் முளையை இடததே உடைய சேமபினது இலையோடே முறறிய வள்ளி முதலிய கிழஙகுகளை தினபீர' எனப பாணன ஆறறுபபடுததப பெற றான (பெரு. 360-362). தெஙகினையும வாழை யினையும அடிபரநத சேமபினையும உடையது

கழனி (பட். 8,16-19). சேம்பையும் மஞ்சளையும் வளர்த்தபினபு, பனறி கிழஙகுகளை அகழாமற காததனர் (மலை. 343, 344). நீலமணியை ஒதத நிறததினையுடைய அகனற இலையினையுடைய சேமபின பிண்டித்து வைத்தாறபோனற வளவிய கிழஙகினைப் பனறி தினறது (அகம. 178: 2-5). துளைபொருநதிய தண்டினையுடைய சேம்பினது கொழுவிய மடலிலுள்ள அகனற இலையுடன் கூடிய பாசியினையுடையது நீரபபரபபு (அகம. 336: 1,2). மலைபபககததிலுள்ள சேம்பின அசைதலை யுடைய வளபபமான இலை, பெரிய ஆண் யானை யின செவியைப போலத தோனறும் (குறு. 76:3,4). மூங்கிலின நெல்லைப் பாறையாகிய உரலிலே பெயது, யானைக கொம்பே உலக்கையாகக் குறறி நலலசேம்பினது இலையே சுளகாகப் புடைத்து, மகளிர் ஆடிப் பாடினர் (கலி. 41:1-3).

**சேமச் செப்பு** - (நீர்) சேமித்து வைக்கும் செப்பு. 'அறிவரே! செந்நெற் சோற்றான் ஆகிய உருண்டை யும் நெயயும் கலந்ததாய ஒரு வீட்டில் இடுகினற பிசசையை வயிறு நிரம்ப உண்டு, இநத முனபனிக் காலததிற்கு உரிததான விரும்பததக்க வெநநீரைச் சேமசசெப்பில் - சேமித்து வைக்கும் செப்பில - பெறுக' எனத தோழி அறிவரை வாழ்ததிப பருவம் வினவினாள் (குறு. 277).

**சேமத்திரை** - காவல் திரை. காமக்கணிச்சி உடைத் தலால ஊடலைவிட்டுக கணவருடன கூடுதற்குச் சேமததிரையினை - காவல திரையினை - வீழததி மகளிா அமளிசேர்ந்தனர் (பரி. 10:32-34).

**சேமம்** - காவல் தொழில். கானவன் தேனாற் சமைதத கள்தெளிவையுண்டு மகிழச்சிமிக்கு சேமம்- காவல தொழிலை - மறநதான (குறி. 155, 156). மகளிர், தாம விருமபும் காதற்கணவர் தம்மை எதிாப்பட்டுப புணர்தற் பொருட்டு நீராடல் குறிததுத தமககுச் சேமமாகிய மடநடையினை யுடைய பாட்டியரைத் தப்பிச் சென்றனர் (பரி. 10: 35-37).

**சேமவச்சு** - (வணடியின) அச்சு முறிந்துழிக் காப்பாக அமையும அச்சு. 'உபபு வாணிகர் அசசு மரத்தின கண்ணே அடுததுக கட்டபபட்ட சேமவச்சு-அச்சு முறிநதுழிக் காபபாக அமையும் அசசு-போனற புகழவிளஙகும நெடியோய, எனப பொகுட் டெழினியை ஔவையார் பாராட்டுவர் (புறம. 102: 4-6)

**சேய்** - 1. மகன. நனனன சேய் - மகன் - நன்னன் (மலை. 64). 'யாம சேய பயந்தனம்; அதனால் பேயனையம; நினபெணடிர் தூயர், நறியர்; எனவே அங்குச செலக' எனத் தலைவி தலைவ னிடம் புலந்து கூறினாள் (ஐங. 70:4,5).

2. **சிவந்த ஏறு.** இறைவன் சூடிய குழவித்திங்கள் போல வளைந்து நிறைநத கொம்பை உடைய சேய - சிவந்த ஏறு - உள்ளிட்ட பல ஏறுகளும் தழுவுதறபொருட்டுத தொழுவில் விடப்பட்டன (கலி. 103:15,16). வேலை ஏநதிய முருகனது நிறம் போல அசசம் தருவது சேய் (கலி. 104:14). முருக னுடைய உடையாயத் தாழநது விளங்குகினற வெள்ளிய துகிலை ஒப்ப நன்றாய் உயர்நத வெள்ளிய காலகளையுடையது சேய் (கலி. 105: 17,18).

3. **பாண்டியன்.** மாடக்கூடலாகிய மதுரை சேயு டையது - பாண்டியனுடையது - (பரி. தி.11:2).

4. **முருகன்.** இநதிரன் வேண்ட இறைவன் சேதித் தலால் கழிந்த சேயின் - முருகனது - யாககை ஆதற்குரிய கருவை இஃது அமரர் சேனைகத் தலைவனாம் என முனிவர் சமாதியில் உணர்ந் தனர் (பரி. 5:31-37).

**சேய்நாட்டார்** - தொலைவான நாட்டிலுள்ளார். 'சேய் நாட்டிற்கு - தொலைவான நாட்டிறகு - சென்ற தலைவர் இன்னும் நெடுநதொலைவிலேயே உள்ளார்' எனக் கிழததி ஆறறாது கூறினாள் (குறு. 64:5). 'காதலர் நனி சேய்நாட்டார்; நம்மை நினைததாரல்லர்' எனத தோழி கூறி ஆற்றாமை யைப புலப்படுத்தினள் (குறு. 380:3,4). 'தோழி! காதலர் மிக்க சேய்நாட்டார் ஆயினும் மிகப் பேரன்பினர்' எனத தோழி தலைவியைப் பருவங் காட்டி வற்புறுத்துவள் (நற. 115:7-9).

**சேய்நாடு** - தொலைவிலுள்ள நாடு. தன்னை நாடி வநத கிணைஞனைச சோழன இராசசூயமவேட்ட பெருநறகிள்ளி, 'புரவலரை நாடிச் சேயநாட்டிறகு- தொலைவிலுளள நாட்டிற்கு - செல்லும் கிணைப பொருநனே, நீ எம்மாற புரககப்படுதலையுடையை' எனக் கூறிச் சிறபபுச் செயதான் (புறம. 377:13-20). காதலர் சேய் நாட்டினின்றும் பொலஙகல வெறுக்கை தருதற்காகத தலைவியர் தோள் மெலியு மாறு காடிறநது சென்றனர் (அகம. 1:8,9,19). 'நம தலைவியின மாண்புறும் அழகு கெடச் சேய் நாட்டிற்குச் செலலாதே என்று யான சொல்லவும

உடன்படாது சென்றாய்' எனத் தலைமகன் இடைச் சுரத்துத் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 21:5,6). தலைவியின் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்டிற்குப் பொருளீட்டலை நினைந்து தலைவன் பிரிந்து சென்றான் (அகம் 59:16-18). 'நமது அழகு தொலைய நம்மைப் பிரிந்து சேய்நாட்டில் வதிதற்கேதுவாகிய பொருள் ஈட்டும் செயல் உரிய காலத்தினுள் முற்றாமையின் தலைவர் காலம் தாழ்த்திருப்பார்' எனத் தோழிக்குத் தலைமகள் கூறினாள் (அகம். 115:16-18). 'வினையின்றி இருத்தற்கு நாணிக் களவுப் புணர்ச்சியை நீங்கிச் சேய்நாட்டிலே சென்று அரிய பொருளை ஈட்டத் துணிந்தார் தலைவர்' எனத் தலைமகட்குத் தோழி கூறினாள் (அகம். 187:1-4). 'சேய்நாட்டிலே உயர்ந்த மலையின் அடிவாரத்தில் ஆண்யானையின் காலடிச் சுவட்டில் தங்கிய நீரை, அத்தலைவருடனே நெல்லிக்காயைத் தின்ற கூரிய பற்கள் விளங்கும்படி நீ உண்ணுதலை யான் நினைந்தேன்' எனத் தோழி கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்தினாள் (குறு. 262). மலைப்பக்கத்தில் பசியையுடைய செந்நாய், வாடிய மரையாவைக் கொன்று தின்றொழிந்த மிச்சில், சேய்நாட்டினின்றும் செல்லுதற்கரிய சுரத்திடைச் செல்வோர்க்கு உணவாகும் (நற் 43:2-5). சிள்வீடு ஒலிக்கும் சேய நாட்டின்கண் செல்கின்ற நெறியில் இன்னவாறு செல்லுதல் வேண்டும் என்னும் கோட்பாட்டுடன் கடந்து சென்றால் தான் பொருளீட்டவியலும் என்பது தலைவன் நெஞ்சக் கருத்து (நற். 252.2,3). 'எம்மை இங்கே ஒழியவிட்டு, தன்னுடன்வரும் தலைவனது பொய்ம்மொழியில் மயங்கி அவனது சேய்நாட்டினை அடைய விரும்பி, வழியில் நெல்லிக்காயைத் தின்றும் சுனையிலுள்ள நீரைப்பருகியும் சென்றாளே' என மகளை நினைந்து தாய் வருந்தினாள் (நற். 271:3-8). சேய்நாட்டிலே பிறர் செல்லுதற்கரிய காட்டுவழியைக் கடந்து சென்ற தலைவனை யெண்ணித் தலைவி வருந்தினாள் (நற் 302:6,10) வேற்றரசர் படையொடு வந்து பொருது பகைமுனையிலே சென்று எல்லாவற்றையும் கவர்ந்து சென்றொழிந்ததனாலே மாந்தர் யாருமின்றி முதிர்ந்த பாழ்நிலத்திலே, தானே விளைந்து உதிர்ந்த நெற்கதிர்களைப் புறாச்சேவல் தன் பேடை உண்ணும் பொருட்டுக் கொணர்ந்து கொடுக்கும் காவல் சிறிதுமில்லாத சேய்நாட்டு வழியின்கண் மலர்ந்து உதிர்ந்து கிடக்கும் வேங்கைப் பூக்களின்மேல் நடந்து வரும் தலைவியைக் கண்டு உடன்போகும் தலைவன் மகிழ்ந்து உரைத்தான் (நற். 384). 'நின்வளை கழலும்படியாக, சேய்நாட்டிலே பிரிந்திருந்து தேடும் பொருட்பிணியாலே போன தலைவர், நின் தேன்போலும் மொழியை நினைந்து நம் அரிய துயரைக் களைவாராய் வந்தார்' எனத் தோழி தலைவன் வரவுணர்ந்து தலைவியிடம் கூறினாள் (கலி. 29:23-26)

**சேய்மையன்** - நெடுந்தொலைவினன். வலியொடு எதிர்த்த பகைவர்க்கு நினைத்தற்கும் எட்டாத சேய்மையன் - நெடுந்தொலைவினன் - என நாஞ்சில் வள்ளுவனைக் கருவூர்க்கதப்பிள்ளை பாடுவர் (புறம். 380:10).

**சேயரி** - செவ்வரி. சேயரியோடு - செவ்வரியோடு - கூடிய கண்ணினையுடையவர் விறலியர் (மலை. 45, 46). ஆறலைப்போர் தாங்கள் எறிந்த படைக்கலத்தை சேயரி பரந்த நீரில் கழுவுவர் (அகம். 113: 18, 19). (சேயரி-செந்நிறத்தோடு அரித்தோடுதல் என்றும் கூறுவர்) வயலுள்ள நெல்லின் சேயரியோடு கூடிய இளங்கதிரை முதிய பசு தின்றது (அகம். 156:3,4). தடுக்கப்பட்ட நீர் உடைந்து துளித்துளியாக விழுகின்ற சேயரி படர்ந்த குளிர்ந்த கண்களை உடையவள் தலைவி (குறு. 86 1). அம்புபோன்ற சேயரி பரந்த குளிர்ச்சியையுடைய கண்ணை உடையவள் தலைவி (நற். 13 4,5). 'பெரிய நிதியைப் பெறினும், அதனை விரும்பேனாகி, இக்கனவிய குழையை உடையாளுடைய மாறுபட்ட சேயரி பரந்த குளிர்ச்சியையுடைய கண்கள் இனிதாக நோக்கும் நோக்கத்தாற் செருக்கப்பட்டேன் ஆதலின் நின்னொடு போதற்கு வாரேன்காண்' எனத் தலைவன் பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கினான் (நற். 16:8-11). 'பசிய தசையிற் பாய்ச்சியதனாலே சிவந்த அம்பைப் போன்ற, தலைவியின், சேயரி பரந்த குளிர்ந்த கண்களினுடைய பொருந்தாப் பார்வையுற்ற என் வருந்திய நெஞ்சம் உய்யும் வழி உரை' எனத் தலைமகன் தோழியிடம் வேண்டினான் (நற். 75·5-10). சேயரி பரந்த குளிர்ந்த கண்களையுடையவள் குறுமகள் (ஐங. 52:2, 3).

**சேயள்** - நெடுந்தொலைவில் உள்ளவள். 'சேயளும் - நெடுந்தொலைவில் உள்ளவளும் - அரியளுமாகிய தலைவியை நினைந்தாய்; அதனால் துன்பத்திற்குக் காரணமான தீவினை உடையாய்' எனத் தலைவன் தன்னெஞ்சொடு கூறினான் (குறு. 128:4, 5).

**சேயளைப் பள்ளி** - நெடிய முழையாகிய இருப்பிடம். சேயளைப் பள்ளியில் - நெடிய முழையாகிய இருப்பிடத்தில்-எய்ப்பன்றி தங்கும் (மலை. 300).

**சேயார்** - நெடுந்தொலைவில் உள்ளவர். 'சேயார்க்கு -

நெடுநெதொலைவில உள்ளவாககு-நம் வருத்தத்தைக் கூறி நாம் தூது விட வேணடா; நமமினும் தாம இககாலததுப பிரிநதிருததலை ஆற்றாராய விரைநது வருகுவர்' எனத் தோழி தலைவியிடம கூறினாள (கலி. 28:21-24). 'சேயார்கண சென்ற என நெஞ்சினை ஆறறி நிறுபபேன; ஆனால நான ஆற்றி நிறுததலைக கைகடககும்படி வாடை வநது அலைககினறதே' எனத தலைவி தோழியிடம கூறினாள் (கலி. 29:10-13).

**சேயாறு - 1. ஓர் ஆறு.** 'காண்பார் விரும்பும் கணணுககினிய சேயாற்றினது புதுவருவாயை யுடைய ஒரு கரையை வழியாகக கொண்டு போவீர' எனக கூததர் ஆறறுபபடுததப்பெற்றனர் (மலை. 476,477). தமபெயரை உலகில நிறுத்தாமல மாயந்தோர், நெடிய மலையினினறும் குதிககும் பெருககு நிறைநத அருவியினது கடிய வரவினை யுடைததாகிய கணணுககினிய சேயாறறின அறல வீற்றிருநத இடு மணலாகிய மணலினும் பலா (மலை. 554-556).

2. **நெடுவழி.** 'தலைவி எளிதிற்கண்டு பெறுதற குரியளாவாள் எனனும் தூதுமொழியை சேயாறு-நெடுவழி-கடந்து விரைநது சென்று கூறி உசாத துணையாவாரைப பெறறால நலலது' எனத தலைவன சிறைபபுறததானாகத தலைவி கூறினாள (குறு. 269). சேயாறு செலலோமாயின தலைவியின துனபததை நீககமாட்டோம் என்று நனமையினை விரும்பித தலைவன மனம் நினைததது (குறு. 400:1-3).

**சேயிதழ்த்தாமரை - செந்தாமரை.** கிளளிவளவன் செறு விறபூதத சேயிதழததாமரை – செநதாமரை – அநதணா வளாகதும் வேளவிததியோடு விளங் கும நாட்டினன (புறம. 397:19-21).

**சேயிழை - சிவநத அணிகளை அணிந்தவள்.** (அன மொழித்தொகை). 'குறறமற்ற கறபினையுடைய சேயிழைககு-சிவநத அணிகளை அணிநதவளுககு-தலைவன' எனப பாணடியன கருஙகை ஒளவாட் பெரும்பெயர்வழுதியை இருமபிடர்ததலையார் குறிபபிடுவா (புறம. 3 6). 'நெடுநதூரத்தே மணம் கமழகினற நலல நெறறியையுடைய சேயிழைககுக் கணவ' எனச செலவக்கடுஙகோ வாழியாதனைக் கபிலர் விளிபபா (பதி. 65·10). நெடுநதூரததே மணம் கமழகினற நலல இசையையுடைய சேயிழைககுக கணவன இளஞ்சேரல இருமபொறை (பதி. 88 36). 'சேயிழையே! நம தலைவர், மலைக ளோடு சேர்ந்த காட்டைக் கடந்து போயினர் போலும்' எனத் தோழியிடம் தலைவி கூறினாள் (குறு. 281:5,6). 'தழையுடையானது தேமலையுடைய துடையிடத்து மாறிமாறி அசையச் சேயிழை (செம் பொனனாலான அணிகளைப பூண்ட பரததை) தலைவனைக் காணும் பொருட்டு வருவாள்; ஆதலால நான இரஙகத்தக்க வளாயுள்ளேன்' எனத் தலைவி கூறினாள் (குறு. 293:5-8). 'சேயிழையே! அயலநாட்டிலே செலலுதறகரிய பாலை வழியில பொருளீட்டுதறகாக யாம் செல்வேம்' என்று தலைவன் தோழியிடம் கூறினான (நற். 24:5-7). கானலிடததே விளையாட்டயர்ந்த பின மாலைப பொழுதில தோழி தலைவியிடம் 'சேயிழாய்! யாம் முனனே செலவேம்; வாராய்' என ஊாககு அழைததாள் (நற். 398:6,7).

2. **சிவந்த அணி.** 'விறலியே! நீ பாரியைப் பாடிச் சென்றால சேயிழை-சிவநத அணி-பெறுகுவை' என வேள்பாரியிடம் விறலியை ஆற்றுப் படுததுவர் கபிலர் (புறம். 105:1-8). சேயிழை-சிவநத அணி (புறம். 198:3; பதி. 43:2; அகம. 51:12; 369:5; 373:10; ஐங. 481:2; கலி. 75:3).

**சேர்ப்பர் - நெய்தல் நிலத்தலைவர்.** 'தாழை மரங்களை யுடைய சேரப்பாககு-நெய்தல நிலததலைவாககு-நீர் எநநிலையிலுள்ளீரோ என்று கேட்டு நம் குறை தீககத தகக செவவி இதுவேயாகும்' எனத் தோழியிடம் தலைவி கூறினாள் (குறு. 219:6,7).

**சேர்ப்ப / சேர்ப்பன் - நெய்தல் நிலத்தலைவன்.** 'கோதையை நாடன் என்று சொல்வேனா, ஊரன் என்று சொல்வேனா, ஒலி முழஙகுகின்ற குளிர்ந்த கடலையுடைய சேர்பபன - நெய்தலநிலததலை வன - என்று சொலலுவேனா, எவ்வாறு சொல வேன' எனச சேரமான கோககோதை மாாபனைப் பொயகையார் குறிப்பிட்டு அவனது நாட்டுவளம் காட்டுவா (புறம். 49:1-3). 'குளிர்நத கடற்கரையை யுடையசேர்ப்பன்,கழியிடததே சுறாமீன முதலியன செருககிததிரியினும், கொடிய வாயினராய பெணடிர் அலர் தூறறினும் தேர் தாழ்த்து நிற்கப் பகறகாலததும நம்மிடததினினறும் பிரியானாகி அடுததடுதது வருவன' எனத் தோழி பாணனுக குக கூறினாள் (அகம. 50:1-6). 'தணகடறசேரப் பனே, முதலையொடு சுறாமீன வழஙகும் உப்பங கழியாய அரிய வழியைக கடந்து இரவினகண வநதுளாய்' என இரவுககுறிககண் வந்த தலை மகளிடம் தோழி கூறினாள (அகம. 80:1-3). 'கானலஞ்சோபபனது தோ இதுகாறும் இராக

காலங்களில வந்து கொண்டிருந்தது; இப்பொழுது பகலிலேயே வநதது' எனத தோழி வரைவு மலிந்து கூறினாள் (அகம. 160:8,15,18). பழைய குடிகளைக் கொண்ட சோபபன், கழியைச் சார்நத புன்னை யின் மிக்க பூக்களையுடைய சோலையில், அன்பு நீங்காத நெஞ்சமுடன தனியனாகி வந்து தலைவியைக் கலநதான் (அகம. 290:8-11). 'குன்று போலத்தோன்றும் திரண்ட மணலையுடைய சேர்ப்பனே! நீ விரைந்துசெல்லும் தேரினை ஏவலாளருடன் சேய்மைக்கண நிறுததி இங்கு வந்து நிற்கும் பெருந்தன்மையாகிய குணததினை உடையை; பிறர் வணஙகத்தக்க தோற்றத்தினை உடையை; இத்தகைய நீயும மனசசிதைவை மேற் கொண்டு பணிமொழிகளைப பல்காலும கூறு கினறாய்' எனத் தலைமகனுககுக் குறைநேர்ந்த தோழி கூறினாள் (அகம. 310:1-4,10). 'சேர்ப்ப, எம தோழியின் துனபமும் பிறர்கூறும் அலரும் நீங்க நீ அருள் செய்யாது பொய்த்தாலும், நீ இவள் தோளின நலததினைப் புதுவதாக உண்ட போது கடலானது அறியும் சான்றாகக் கூறிய சூளும் பொய்யோ' எனக் கூறி தோழி வரைவு கடாவினாள (அகம. 320:5-14). 'சேர்ப்ப எம் சிறுநல் ஊர் அங்கே தோனறுகிறது, மிக்க அழகு பொருநதிய குளிர்நத கண்ணினையுடைய இவள் காரியமாக இன்றிரவு நீ இவ்வூரில தங்கிச் செலக' எனத தலைமகனுக்குத் தோழி கூறினாள் (அகம. 350:7-9,15). 'சேர்ப்ப, புனனை மரங்கள் உள்ள நறிய சோலையிற செய்த நம் குறியிடத்திற்கு இரவின்கண் வருவாயாக' எனத் தோழி இரவுக் குறி நேர்நது கூறினாள் (அகம். 360:15-19). 'தாது முதிர்ந்த முள்ளிச் செடியையும் கரிய நீரையு முடைய சேர்ப்ப! இபபிறப்பு நீங்கி மறுபிறப்பு உணடாயினும், எனனுடைய கணவன் நீயே ஆகுக; உன மனத்துக்கு ஒத்த மனைவி யான ஆகுக' எனத் தலைமகன பள்ளியிடததானாகத் தலைமகள் கூறினாள் (குறு. 49). 'சேர்ப்பனை யானும் விரும்புகின்றேன; நம் தாயும் அவனிடம் மிகக விருபப முடையாள்; தநதையும் அவனுககே உன்னை மணம் செய்து கொடுகக விருமபுகின றார்; ஊரவரும் எனனை அவனோடு இணைததே பேசுகின்றனா' எனத் தோழி தலைமகட்கு வரைவு மலிவு கூறினாள் (குறு. 51.3-6). கானலையுடைய சேர்ப்பனது கொடுமையை நினைநது தலைவி துன்பதத்தோடு வருந்தியுரைததாள் (குறு. 145). 'மலர்நத புன்னை மலாகளையும் கரிய நீரையும் உடைய சேர்ப்பனபொருட்டு வருந் தேன்; அம்பலாகிய பழிபபுரைகள் எனன துனபத்தைச் செய்துவிடும்' எனத் தலைவி கூறினாள்.

(குறு. 175:4-7). 'சேர்ப்பன் தேர் ஏறிப பிரிந்து சென்றான; அதனைப பசலை எவ்வாறு அறிநதோ என் நெற்றியிடததே படரத் தொடஙகியுள்ளது' எனத் தலைவி கூறினாள் (குறு. 205.3-7). சோபப னொடு நகுவதற்குமுன கண்ணும் தோளும நுதலும் நல்லனவாய இருநதன எனத தலைவி உரைத்தாள் (குறு. 226). 'சேர்ப்ப நீ பிரிலதாயின, நீ நுகர்நத என் பெண்மை நலத்தை மீண்டும் தந்து செல்க' எனத் தோழி தலைவனிடம நகை யாடிக கூறினாள் (குறு. 236). 'பெரிய கடற்கரைக குரிய சேர்ப்பனை இனி நினையேன்; ஆதலால என் கண்கள் துயில கொளளுமாக' எனத தலைவி வன்புறை எதிரழிநது கூறினாள் (குறு. 243:4,5). 'எந்தையும் பெருங்கடல புக்கனன; யாயும் உப்பு விளை கழனிககுச் சென றனள்; அதனால், சோப்பன இப்பொழுது வரின் நன்று' எனத தலைமகள் சொன்னாள் (குறு. 269). 'தாழையையும் அழகிய தண்ணிய நீரையும் உடைய சேர்ப்பனோடு நாம் பகை விளைக்கும் நட்பினையே செய்து கொண் டோம்' எனத் தலைவி ஆறறாது வருநதிக கூறி னாள் (குறு. 304:7,8). 'நெஞ்சே! மெனமையுடை யனவும் இனியனவும் விரும்பத்தககனவுமாகிய சொறகளை இனிச் சொல்லமாட்டோம் எனச் சொனனாலும் சேர்பபனைக கண்டபின நீ நான கூறியவற்றை மறநது விடுகின்றாயோ' எனக கிழத்தி கூறினாள் (குறு. 306). 'மிகுநத நீர்ப பரப்புடைய சேர்பபன பிரிந்தால நாம் இழபபது ஒப்பற்ற நமது இனிய உயிரையலலது வேறொனறு யாது' எனத் தலைவி தோழிககுக் கூறினாள் (குறு. 334:4-6). 'சேர்ப்ப! நீ இனனா தவறனஈச செயயினும இனிதாகத் தலையளி செயதாலும் நினனால காக கப்படும் எலலைககுட்பட்டவள தலைவி' எனத தோழி தலைவனிடம கூறினாள (குறு. 397.3-7). 'சேர்ப்ப! பூபபோனற எமது தலைவியின நலத்தைப புதுவதாக நுகர்ந்து வைததும அறிநதனையலலை; பிறர் அலர் தூற்ற யாம நாண அழிநதோம' எனக கூறி தோழி தலைவனை வரைவு கடாவினாள் (நற் 15.3-5,10). 'சோபப! நீ தேரேறிப பிரிநது செலலின இவள் உயிர் வாழாள்' எனக கூறித் தோழி வரைவு கடாவினாள் (நற். 19.5-9). சோபப னொடு மணத்திற்குமுன, சிறிய பூவையுடைய ஞாழலந்துறையும் இனிதாயிருந்தது, அவன என்னைக கலநது கைவிட்ட பினபு அததுறையும வெறுப்புடைத்தாயிறறு' எனத தலைவி தலைவன சிறைப் புறததானாக வனபுறை எதி ரழிந்து கூறினாள (நற 31.5-7,12). 'சோபபன வாழகினற சிறிய நலல ஊரினகண சென்று, யாமும் நீ இல்லாமையால் மயககம் உடையே

மாயுளளோம் எனறு கூறி அவன கருத்தை அறியின ஏதேனும குற்றமுளதோ' எனறு தோழி தலைவியிடம் கேட்டாள் (நற். 49.7-10). 'சோபபனது தேரின நுகததிற பூட்டப்பட்ட குதிரைகள் கோலைக் கொணடிக்கத் துனபப படுவனவாக' எனத்தோழி, தம்மையும் மீறிப பிரிந்து செலலுமு தலைவனைப் பிரிவு நீககக் குதிரை மீதேற்றிக் கூறினாள் (நற். 58:4,10,11). 'சோபபனோடு அமைநத நம் தொடர்பு, பசலை யாகி அழிநதொழியககடவதுதானோ' எனத் தோழி தலைவன சிறைபபுறமாகச் செறிப்பறிவுறுததினாள் (நற். 63.7,11) 'சேர்ப்பனை நமக்கு ஏதிலாளன என்று பலரும கூறுவர்; அவனால் விரும்பப் படும் பரத்தையை இவ்வூர் அவனுககு மனைககிழுததி எனவும கூறும், ஆதலின், பாண, ாணடுவாராதே' எனத தலைவி பாணனை வாயில் மறுத்தாள் (நற். 74:5-11). 'சேர்ப்பனது மணி ஒலிககும குரலைக் கேட்பாயாக; மாலைப் பொழுதில் காம நோய மிகுதலானாகிய மிக்க துனபததினினறும் இனி உய்ந்து வாழ்வோம்' எனத் தோழி கூறினாள் (நற். 78:5-11), 'தேரின் மேல சேர்ப்பன ஆகிய நம் காதலன் பகற்பொழுதிலே பலருஙகாண இஙகு வருவதனை நீ உணர்ந்தனையோ? எனத் தோழி தலைமகனுக்கு வரைவு மலிநதுரைத்தாள் (நற் 91:1,12). 'சேர்ப்பனாகிய நம் காதலன, தனது மார்பால வருத்தமுற்ற என்னியல்பை அறியாத நிலையில் என்ன மகன் எனக் கூறப்படுவானோ' எனத தலைமகன் சிறைபபுறமாகத் தலைமகள் தோழிக் குரைத்தாள (நற். 94:6-9) 'சேர்ப்ப, எம் நலல தோள்கள் நெகிழும்படி நீயிர் எம்மை மறப்பதற்கு யாம் நும்மையினறி வேறு விளையாட்டினையும், பிரிநது சென்று தங்கியிருபபதறகுச் சோலையையும் நும்மை நினையாது வருநதும் நெஞ்சினையும் நும்மிடம ஊடுதலையும் உடையேமோ? எனத தோழி தலைவனை வினவினாள் (நற். 181:1-3,9). 'தோழி, என அழகு கெடடு உயிா இறநது படுவதாயினும், சேர்ப்பன தமியனாய வநது யான மகிழுமாறு முனபு புணாநது தலையளி செயததனால இனியும் அங்ஙனம் வருவான எனனும் கருத்தோடு சிறிதும் அவனமீது புலபபேனலலேன்' எனத தலைவி கூறினாள் (நற். 219:1-4,9,10). 'சோலையில வைத்த குறியிடத்திலே பகறபொழுது வநது நலனுகர்நது நமமுடைய உடமபின் அழகு கெடும்படி பிரிநது செனறானாயினும், குதிரைகளைச் செலுததியவாறு (தோ ஊர்நது) சேர்பபனாகிய நம் காதலன வரைவொடு வருவதனை மணலாகிய திடர் மீதேறி நினறு கணடு வருவோம்' எனத தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 235:4-10). 'யாம் மனமொதது இதுகாறும் சேர்ப்பனிட்ட தொழிலைக கேடடு அதன்படி நடந்தோமிலலை, அஙஙன மாகவும எனனை நோககி, நின முன்கையில் அணிநத வளைகள் உடையும்படி அவனை அணைதது முயங்குவாயாக என இவ்வூர் புலம்பியழுகிறது' எனத் தலைமகன் சிறைபபுறமாகத் தோழி கூறினாள் (நற். 239:8-12). 'இனிய உயிரை வெளவிய நீ யார் எனக் கேட்டுத் தேரிலே வந்து, தான நம்மை வருததுதல அறியானாய், நம்மால் தான் வருநதியது மட்டும் கூறி, சோலையின்கண் நமது நெறறியை நோக்கிச் சேர்ப்பன் கைகூப்பி வணஙகி நின்றதைக் கருதுநதோறும் நகைதான எழுகிறது' எனத தோழி கூறினாள் (நற். 245:6-12). 'சேர்ப்பனுக்காக, யான்படுகினற துனபததையும் கடநது, அவனை நினைந்து இரகக முறுவேனல்லேன்; அவனை வெறுததேனுமலலேன் அவ்வறனிலாளன் தன்னை அயலார் புகழும்படி எனனை மீட்டுபபெறுவதாயினும் அதற்கும் இயைகினறேன்' எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (நற். 275:6-9). சேர்ப்பன, அச்சம் செய்கினற முதலையின நடுக்கமுறுத்தும் பகைக்கும் அஞ்சானாகிக் காமமிகுதியால் தலைவியைக் காண வநதான (நற். 287:5-7) 'நம்மூா வருததமுறுவதாயினும் அவரே நம் தலைவர்; அச்சேர்ப்பரோடு மகிழ்ந்து கூடாத நாளில நாமிருந்தும் இல்லாதேம்; அஙஙனமாகியும் அவர் தொடர்பு கழிநதது கணடாய' எனத் தோழி தலைமகன சிறைப்புறமாகக் கூறினாள் (நற். 299.5-9). 'சேர்ப்பன் உள்ளததில் நம காதலி கன் உறங்காது காமநோய் வருததுதலானே உடம்பு மெலிநது நம்மீது வருத்தமடைவள் என்னும எணணம் உணடாகுமோ' எனத் தலைமகள் வேட்கை தாங்காது தோழிககுக் கூறினாள் (நற். 303:6-12). 'தேரிலே மணியும ஒலிக்கும்; வீரரும் ஆரவாரிபபர்; ஆதலின் சோபபன், மகளிர் கடல் நீராடுகின்ற விடத்திலே நின நலன பாராட்ட இப்பொழுதே வருவான; நம்மை இதுகாறும் வாராது வருததிய அவன, நம்மைக காணாது வருந்தும் வருததததையும் நாம் சிறிது காண்போம; புனனை மரததின பின மறைநதுகொள்வோம; வா' எனத தலைமகளிடம் தோழி கூறினாள் (நற். 307). 'சேர்ப்ப! எம்மூர் இனியது; நீ வருவதில தவறிலலை' எனத் தோழி இரவுக்குறி நேரந்தாள் (நற். 331.8-10). 'சோப்ப! நேற்றுமாலை நினனோடு தலைவி அலவனைப பிடிததாட்டியதனால, அவள் சிலம்பு உடைபட்டது; அதனைக கம்மியன் கட்டுதறகு, மண்ணெடுககும் துறையிலுள்ள மணலைக்

கொண்டு வந்து தந்துசெல்வாயாக' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 363:4-10). 'சேர்ப்ப! நீ அன்புடையை அல்லை; அன்புடையையாயிருப்பின், தலைவி உவக்கும்வண்ணம் மணம் செய்து கொள்ளுமாறு வருதல் வேண்டும்' எனத் தோழி வரைவு கடாவினாள் (நற். 375:3-9). 'மணற்சிற்றிலைச் சிதைத்து அவன் நம்பால் அன்புமிகும்படி கூறிய சூளுரையை மெய்யென விரும்பி ஏற்று நாம் சேர்ப்பனுடன் ஆராயாது கொண்ட நட்பு அயலார் அலர் தூற்றும்படி செய்துவிட்டது' எனத் தோழி வருந்திக் கூறினாள் (நற். 378:7-12). 'சேர்ப்பன் எம் தோள் துறந்தனன்; அவன் நயந்த வேறு மகளிரது தோள் எதுவோ' என, வரைவு நீட்டித்த இடத்துத் தோழி கூறினாள் (ஐங். 108). 'சேர்ப்பன் நம்மை வரைய வருதலைக் காண்போம்' எனத் தலைவி கூறினாள் (ஐங். 112:2,3). 'நலன் பசலை பாயக்கெடுதல் கொடிதே; ஆயினும் சேர்ப்பனை மறவாதே' எனத் தலைமகள் தோழிக்குக் கூறினாள் (ஐங். 117). 'எம் புதல்வன் சேர்ப்பனொடு வாராது தனித்து வந்துள்ளான்' எனத் தலைவி பரத்தையிற் பிரிந்த தலைவன் புதல்வன் வாயிலாய் வராத நிலையில் கூறினாள் (ஐங். 157: 4,5) 'சேர்ப்ப! நீ கொண்ட இவள் நலனைத் தந்துவிட்டுப்போ என இரப்பேனில்லை' என வாயில் வேண்டிவந்த தலைமகனிடம் தோழி கூறினாள் (ஐங். 159:3-5) 'சேர்ப்ப! இவளை வரைந்தருளுவாயாக' எனத் தோழி வரைவு கடாவினாள் (ஐங். 179:1). 'மாலையே! சேர்ப்பன் பிரிந்தானாக, நீ கடும்பகல் வருகின்றாய், காலையில் வரினும் என் துன்பத்தைப் போக்குவார் இல்லை' எனப் பிரிவிடை ஆற்றாத தலைவி மாலையை நோக்கிக் கூறினாள் (ஐங். 183:3-6). 'சேர்ப்ப! தலைவியை விரும்புவையாயின் நீ வரைந்து கொள்க' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 196:2-4). 'சேர்ப்ப! நலனிழந்து வருந்தும் தலைவியின் வருத்தத்தைக் களைய விரும்பின் தேரேறிச் சென்று களைதற்கு இதுவே நல்ல காலம்' எனத் தோழி வரைவு கடாவினாள் (கலி. 121:6-23). 'சேர்ப்ப! ஊரார் அலர் தூற்றவும் நீ பிரிந்து சென்றாய்; அதனால் தலைவி நலனிழந்தாள்; இயற்கைப் புணர்ச்சியின்போது நீ பிரியேன் என்று தெளிவிக்க அதனை உண்மை என்று துணிந்தவளுடைய இழந்த நலம் பண்டுபோல நன்றாம்படி விரைந்து தேரைச் செலுத்திச் செல்க' எனத் தோழி தலைவியது ஆற்றாமை கூறி வரைவு கடாவினாள் (கலி 124:4-21). 'குதிரையையுடைய செல்வனே, கொண்கனே, சேர்ப்ப, தலைவி நலனிழப்ப நீ அவளைப் புல்லாது விடுதலின் கொடியை' எனக் கூறித் தோழி வரைவு கடாவினாள் (கலி. 125:5-15). 'சேர்ப்ப! நின்னைப் பிரிந்தநிலையில் தலைவி குருகு ஒலியை நின் தேர் ஒலி எனக் கருதுவள்; மலர் நாற்றத்தினை நின்மார்பின் தாரானாற்றம் என மதிப்பாள்; நின்னை நினைந்து, சிறிது துயின்ற போது நீ தோள்மேலாய் என நினைந்து, பின் அது கனவென வருந்துவள்; இவ்வாறு பலவாக வருந்தும் என் தோழி புது நலம்பெற நீ தேரைச் செலுத்துக' எனத் தோழி தலைவனை வரைவு கடாவுவள் (கலி. 126 5-22). 'சேர்ப்ப! நீ இவளைத் துறந்தது, நீ செய்த குறியிடத்தே தப்பாமல் வந்ததாலோ, நின்தேர் வருங்காலத்தை மனத்தாலே நோக்கி எதிர்கொண்டதாலோ, நின் நள்ளிரவுக் குறியிலும் தப்பாமல் வந்ததாலோ, சேர்ப்ப, இவளுடைய பிரிவு நோய் தீரும்படி அருளுடையையாய் வரைந்து கொள்' எனத் தோழி வரைவு கடாவினள் (கலி. 127:5-22).[2] 'கானலையுடைய அழகிய சேர்ப்பனைக் கண்டு கூடி அழகினைப் பெற்றாய் என்று கூறுகின்றாய்; ஆயின் நனவில் வாராத உறவில்லாத அவன் என் கனவிலே வந்ததைக் கேள்' எனத் தோழியிடம் கூறத் தொடங்கிய தலைவி 'என்னிடம் நின்னைப் பிரிந்து உயிர் வாழேன் எனக் கூறியவனை, என் நலத்தைத் தாராய் என யான் வளைத்துக்கொள்வேன் போலவும், அவ்விடத்து நான் இழந்த நலத்தைப் பெற அவன் முயங்கி அளிப்பான் போலவும், என் மார்பிடைத் துயிலுதலையும் மறந்தாய் என யான் கூற நீ இறசெறிப்பாகிய காவலிலே அகப்பட்டுப் பெரிதும் வருந்தினாய் என்று என் அடி முன் தன் தலை உற வணங்குவான் போலவும், அவ்வாறு செய்த சேர்ப்பனை மாலையே கோலாகக் கொண்டு யான் அடிப்பேன் போலவும், அந்நிலையில் தான் தப்பிலாதவன் எனத்தெளிப்பான் போலவும் கனவு கண்டேன்; கனவில் வந்த கானலஞ்சேர்ப்பன் நனவில் வருதலும் உண்டு' எனக் கூறினாள் (கலி. (128 6-26).[3] கடலாகிய தெய்வத்தை நோக்கித் தெளித்துத் தலைவியின் தோளைக் கூடித் தலைவன் செய்த அருந்துயரை முன்வைத்து அவனை இயற்பழித்தும் இயற்பட மொழிந்தும் பாடித் தலைவியும் தோழியும் ஊசலாட, மறைந்து நின்று கேட்ட அச்சேர்ப்பன் அவ்வூசலைத் தானே வந்து ஊக்கினான் (கலி. 131).

**சேர்ப்பு - கடற்கரை.** சேரமான் கோக்கோதை மார்பனது நாட்டில் புனங்காப்போர் கிளிகடி கருவியைப் புடைப்பின் அப்புனத்திற்கு அயலாகிய வயலின் கண்ணும் மிக்க நீரையுடைய சேர்ப்பின் கண்ணும் – கடற்கரையின்கண்ணும் – உள்ள

பறவைகள் சேர எழும (புறம. 49.4-6). உப்பு வாணிகா உபபின் விலை கூறிச் செலுததும் பணடிகள் மணலில மடுதது முழஙகும் ஓசையைக கேட்டு வயலிலுள்ள நாரைகள வெருவும கரிய கழிசூழ்நதது சேர்பபு (ந. 4.7-12). சேர்பபைச சோநத குளிாநத அளையிடததே அலவனைப் பாாதது மகிழும் விளையாட்டும் இலலையாகத் தலைவி பிரிவு நோயுறறாள் (ந. 123.10,11).

2. உப்பளம். 'தலைவி பெறுதற்கரியளாயின அவள் தநதையாகிய பரதவனோடே பெரிய கடறகரையை யடுதத சேர்ப்பினகண் - உபபளத்தின்கண்-உபபுப் பொதியுடன் திரிநது வருநதிப் பனிநதொழுகினால் அவன அவளைத தனககுத தருவானோ' என்று தலைவன கருதினான (அகம். 280:4-14). கடற்கரைச் சோலையை அடுதத வெண் மணலையுடைய முனறிலினகண்ணே இரவு போனற இருண்ட நிறததையுடைய புனனையின அடிமரததிலே பிணிததுக கட்டப் பட்ட தோணியையுடைய நீர்ததுவலை தெறித்து விழும் சேர்ப்பனிடத்தே விளைநத உப்பினை ஏற்றிப பண்டிகள் நிரையாகச் சென்றன (நற். 354:1-9).

**சேரமான் அந்துவஞ்சேரலிரும்பொறை - சேர வேந்தன்.** இவன சோழன முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி யின பகைவன போலும். ஒரு கால அவன் இவனுடைய கருவூரை, முற்றுகையிட வநதபோது அவன ஏறியிருநத களிறு மதமபட்டுப பாகாககும் ஏனை மறவாககும் அடஙகாது இவனூர்ககுள வர, இவன தனனுடன வேணமாடததின மேலிருந்த புலவர் உறையூர் ஏணிசசேரி முடமோசியாரிடம் அவன யாரென வினவிச் செய்தியை யறிந்தனன (புறம. 13)

**சேரமான் இளங்குட்டுவன் - புலவர்.** சேர வேந்தர் மரபினர்; இளஙகுட்டுவன என்னும் பெயரினர். இவர் பாடியதாக அகநானூற்றில பாடலொன்று (153) உள்ளது. தலைமகனுடன போன தலை மகளைக் குறிதது அவளுடைய செவிலிததாய் இரங்கிப் பேசுவதாக இவர் அபபாடலை இயறறி யுள்ளார். தலைவியின மெனமையையும அவள் மெலலடிகட்கு ஏலாத காட்டின வனமையையும் இவர் புனைநதுள்ள நயம் பாராட்டததகும. இரவிலே மலையுசசியில பூககளுடன திகழும் கோங்க மரததிறகு விணமீனகளுடன பொலியும் வானததையும அமமரததினின்று வீழும் கோங்கம் பூவிறகு விணவீழ கொள்ளியையும் இவர் உவமை கூறியுள்ளார்.

**சேரமான் கடலோட்டிய வெல்கெழு குட்டுவன் - சேர வேந்தன்.** 'வெலகெழு குட்டுவன' எனபதறகு, 'வேல கெழுகுட்டுவன' என்றும் பாடமுணடு. 'கடல பிறககோட்டிய செங்குடடுவன' காணக.

**சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் - சேர வேந்தன்.** 'கடல பிறககோட்டிய செங்குட்டுவன' காணக.

**சேரமான் கடுங்கோ வாழியாதன் - சேர வேந்தன்.** 'செலவக் கடுங்கோ' காணக.

**சேரமான் கணைக்காலிரும்பொறை - சேர வேந்தன்.** இவன, சோழன செங்கணானொடு திருபபோர்ப் புறம் எனனுமிடததே போரிடுத் தோல்வி கணடு அவனால கட்டுணடான. கடடுண்டு குட வாயிற கோட்டததுச சிறையிலே இருந்தபோது நீர்வேட்கை பொறாது,அச்சிறைக காவலனிடததுத தணணீர் கேட்க, அவன மதிபபினறிக் காலந் தாழ்ததுக் கொடுத்த நீரைக கைக் கொண்டிருநது மானததால் உண்ணானாய் உயிர் விட்டான். அப பொழுது இவன் பாடியதொரு பாடல் (புறம். 74). இவனது மானவுணர்ச்சியை நனகு புலப்படுத்துகின் றது. 'பிள்ளை பிறநது இறபபினும் தசைப்பிண்ட மாகப் பிறபபினும் அவறறையும ஆளல்ல எனக் கருதாது வாளால பிளநது அடக்குதலில தவறா தவர் அரசராயிருககினறனா; யானோ பகைவர் வாளால படாது சங்கிலியால பிணிக்கபபட்ட நாயபோலப பிணிததுத துன்புறுததிய அப்பகை வரின உதவியால வநத நீரை இரந்துணணக் கடவேமலலேம் என்னும் மனவலிமை இன்றி வயிறறுததீயை ஆறற வேணடித தானே இரந் துணணும தாழ்ச்சியையுடையேன்; இவ்வுலகத்தின கண் என்னையும் முனகுறிதத அவவரசர் பெறு வரோ' எனற பொருளில இவன அதனைப பாடி யுள்ளான்.

**சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும் பொறை - சேர வேந்தன்.** கோபபெருஞசேரலிரும் பொறை என்பது இவனது இயறபெயராகலாம். ஒளிமிக்க வாளினையேந்தி அதனால வெறறி மேம்பாடு பெறறு 'ஒளவாள்' எனனும் சிறபபடை பெறறானபோலும். ஆயினும், 'கருவூரேறிய' எனற தொடரை இவன் அடையாகப பெற்றதன உணமைக் காரணததை உணரக கூடவிலலை. நரி வெரூஉத தலையாா தமககுற்ற மெய்வேறுபாடு, இவனைக கண்ட காட்சிச் சிறப்பினால நீஙகப் பெற்றுநல்லுடம்பெய்தினார் எனப்புறநானூறறில்

சிவனைப் பறறிய அவரது பாடலின் (5) அடிக குறிபபு அறிவிககின்றது. அவ்வாறு நலவுடம்பு பெற்ற நிலையில அவர் செவியறிவுறூஉவாக இவனை அப்பாடலால் பாடியுள்ளார்.

**சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை** - சேர வேந்தன். இவன குடக்கோ இளஞ்சேரலிருமபொறை எனவும் குறிக்கப் பெறுவான (பதி. ப. 9). பதிறறுப பத்தினுள் ஒன்பதாவதாகவுள்ள பததுப் பாடலகளில இவன பெருங்குன்றூர் கிழாரால் பாடபபெற்றான. அவர் தனனைப பாடியமைக்குப பரிசிலாக முபபததீராயிரம பொறகாசுகளை உவநதளித்து, அவரறியாமலே ஊரும் மனையும் வளமிகப் படைதது, எணணறகாகா அருங்கல வெறுககையொடு பன்னூறாயிரம பாறபட வகுத்துக காபபு மறமாகிய காவற படையினையும் கொடுததான் எனறு அபபததின பதிகம் பகர்கின்றது. மற்று, இவன தன்னைக கருதி வநத பெருங்குன்றூர் கிழாரககுப் பரிசில கொடுப்பான போலக் காட்டிக் கொடாது வஞ்சித்துத தன் கருததை முடிததானாக அவா வருநதிப பாடிய பாடல்களிரண்டு புறநானூற்றில் (210, 211) இடம் பெறறுள்ளன. குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை காணக.

**சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்** - சேர வேந்தன். 'குடககோ நெடுஞ்சேரலாதன' காண்க.

**சேரமான் குட்டுவன் கோதை** – சேர வேந்தன். கோதை எனபது இவனது இயற்பெயர். சேரநாட்டின ஒருபகுதியான குட்டநாட்டினனாதலின குட்டுவன கோதை எனப் பெற்றான். இவனுடைய பணபுகளைப் பாராட்டிக கோனாட்டு எறிச்சிலூர் மாடலன மதுரைக குமரனார் பாடியதொரு பாடல் புறநானூறறில (54) இடம் பெற்றுள்ளது. தன்னிடம் வநதோர்க்கு வானமும் நாணுமாறு வரையாது வழஙகும் வண்மையனாகிய இவன், இரவலாககு எளியவனெனறும், பகைவராகிய நெடுமொழி மனனர்ககு நினைக்கவும் அரியவனெனறும் அப்பாடலால அறியலாம்.

**சேரமான் கோக்கோதை மார்பன்** – சேர வேந்தன். இவனது இயற்பெயர் கோதை மார்பன என்பதாம். இது கோதை என்ற மட்டில் வழங்கலுமுண்டு. இவனைப பாராட்டிப பொயகையார் பாடிய இரு பாடல்களைப் புற நானூற்றில் (48, 49) காணலாம. இவன் மாாபிலணிந்த மாலையாலும் இவனைப் புணர்நத மகளிரணிந்த மாலையாலும் கழியிலே மலர்நத நெயதற் பூககளாலும் இவனுடைய கடற்கரை நகரமான தொண்டிகள்மணம வீசுமெனறும, அமமணததை நுகாநதவாறே அவவூரை அறிநது இவனிடம செலலலாமென்றும புலவரை ஆற்றுப்படுததுவதாய அமைநதது ஒரு பாடல். 'அவவூரிலே புனங்காபபார் கிளிகடி கருவியைப் புடைததால அபபுனத்தின அயலிலுள்ள நெல வயலிலும கடறகரையிலும இருககும பறவைகள் அஞ்சியகலுமாதலால் இககோதையைக குறிஞ்சி நிலமுடைமைபறறி நாடனெனபேனோ, மருத நிலமுடைமைபறறி ஊரனெனபேனோ, நெயதல நிலமுடைமைபறறிச சேர்பபனெனபேனோ' என்று புலவர் இவனது நாட்டு வளததைக கொணடு இவனைப புகழ்வதாய அமைநதது மற்றொரு பாடல. இவ்விரு பாடலகளால இவனைப பாடிய பொயகையாரே யனறி நககீரனாரும் அகப்பாடலொன்றில (346) இவன செயதியொனறைக குறிபபர். கூடல நகரை ஆணடிருநத பழையன் மாறனெனபானைப போரிலே சாயததுக கிள்ளிவளவன் அமமாறனின புரவிகள் களிறுகள் போனறவறறைக கவாநது கொணடபோது, இககோதை மாாபன பெரிதும் உவநதனன எனற அக்குறிபபினால இவன அமமாறனிடததுக கொணடிருநத காழ்ப்பு விளங்கும்.

**சேரமான் கோட்டம் பலத்துத் துஞ்சிய மாக்கோதை** - சேர வேந்தன். 'கோட்டம் பலததுத துஞ்சிய சேரமான' காணக.

**சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன்** - சேர வேநதன. 'செலவக கடுஙகோ' காணக.

**சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன்** - சேர வேநதன். 'செலவக கடுஙகோ' காணக.

**சேரமான் தகடூரெறிந்த** பெருஞ்சேரலிருமபொறை - சேர வேநதன். பெருஞசேரலிருமபொறை எனற இயற பெயரையுடைய இவன, சேரமான செலவக கடுஙகோ வாழியாதனுககு வேளாவிக கோமானாகிய பதுமனின மகள் வயிறறிற பிறநதவன். அதியமானை வெனறு அவனுடைய தகடூரை அழிதத சிறப்பினால இவன தகடூரெறிநத பெருஞசேரலிருமபொறை எனக குறிககப பெறறான. இவனைப பாராட்டி அரிசில கிழார் பாடிய பததுப் பாடலகள் பதிற்றுப பததினுள் எட்டாம பததாக அமைநதுள்ளன. அவறறால இவனுடைய பணபுகளும செயலகளும் நனகு புலனாகினறன. இவன தன பகைவர்ககு ஊழிககால வடவைததீயை ஒததவன

(பதி. 72); பிறர்க்குத் தான் உவம மாவதன்றித் தனக்குப் பிறர் உவமமாகாத ஒப்பற்ற பெரு வேந்தன்; மாந்தரது அளவிலடங்காத வளமையும் ஆண்மையும கைவண்மையுமுடையவன் (பதி 73). புலியைக் கொன்று களிறறைத் தொலைக்கும் வய மானை (சிங்கத்தை) ஒத்தவன் (பதி. 75); போரிலே தன்னுயிரையும் இரவலர் நடுவே தன் பொருளை யும் போற்றிப் பின்வாங்காதவன்; பெரியோரைப் பேணிச் சிறியோரை அருள்பவன்; தன் புகழைத் தன்னிடத்தே நிலைநிறுத்தியவன் (பதி. 79) இப் பெருஞ்சேரலிரும்பொறை ஆயர் தலைவனாகிய கழுவுள் என்பானது குறும்பையடக்கி அவனூரைத் தீக்கிரையாக்கி, அரணைக் கைப்பற்றி ஆனினங் களையும் கவர்ந்து கொண்டு தன்னை அவன்பணியு மாறு செய்தான்; மற்றும், பல பகை நாடுகளின் மேற்சென்று அவ்வந்நாடுகளின் அரசரிடத்திருந்து திறைபெற்று மீண்டான (பதி. 71). கொல்லிமலைக் குரியோனாகிய இககொடித் தேர்ப்பொறையன் சோழ, பாண்டிய நாடுகளையும் வென்று தன்னடிப் படுத்தி ஆண்டமையால் புகார்ச்செல்வ னென்றும் பூழியர் மெய்ம்மறையென்றும் குறிக்கப் பெற்றான (பதி. 73). இவன் தகடூரெறிந்த செய்தி பாட்டிலும் பதிகத்திலும் பாராட்டிப் பாடப்பட் டுள்ளது (பதி 78; ப.8). கொல்லிமலையைச் சூழ்ந்த நாட்டிடத்தே நீர்வளமிக்க மலையுச்சியில் நிகழ்ந்த போரில் அதிகமானோடு சோழ, பாண்டியராகிய ஏனை இருபெரு வேந்தரையும் ஒருங்கே வென்று அவர்தம் முரசும் குடையும் கலன்களும் முதலான வற்றைக் கவர்ந்து கொண்டு களவேள்வி செய்தா னென்றும் அதிகனின் தகடூரையழித்து அரணைக் கைப்பற்றினானென்றும் இவன் வெற்றிகளைப் பதிகம் விளக்கமாகக் கூறும். தன் மனைவியோடே இவன் முறையானதோர் வேள்வி செய்து சால்பும் செம்மையும் முதலான பண்புகளெல்லாம் வாய்ந்த வீறுசால் புதல்வனைப் பெற்றதும் தன்னிடத்தே முழுதுணர்ந்து ஒழுகிய நரை மூதாளனாகிய புரோகிதனுக்கே இவன் தவத்தின் மேன்மை யுரைத்து அதனை இயற்றுமாறு அவனை வனத் திற்குச் செலுத்தியதும் ஆகிய மேன்மைகளால் இவன் வியப்பிற்குரியவனாய் விளங்கினன் (பதி. 74). தன்னைப் பத்துப் பாடல்களால் பாடிய அரிசில் கிழார்க்குப் பரிசிலாக இவன் தன பெருங் கோயிலையும் அரசு கட்டிலையும் ஒன்பது நூறாயிரம் பொற்காசுகளையும் கொடுத்தானாக அவர், 'யான் இரப்ப இதனை நீயே ஆள்க' என்று அரசினை இவனுக்கே அளித்துத் தாம அமைச்ச ராய் உடனிருக்க இவன் மீண்டும் அரசனானான என்பதும் (பதி. ப.8) ஒரு நாள் தன் முரசு கட்டிலில் களைப்பினால் அறியாது ஏறித் துயின்ற மோசிகீரனாரை வாளால் வெட்டாது அருகில் நின்று கவரி வீசிக் களைப்பாற்றினான் என்பதும் (புறம். 50) புலவரை மதித்த இவனுடைய பெருமைப் பண்புகளையுணர்த்தும்.

**சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி** - சோழ வேந்தன். சேரமானுக்குரிய பாமு ளூரை எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி. 'சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி' காண்க.

**சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ - புலவர்.** சேர வேந்தர் பெருங்கடுங்கோ என்பதே இவரது இயற் பெயர். பாலைத் திணையைத் திறம்படப் பாடிய சிறப்புப் பற்றிப் பாலை பாடிய பெருங்கடுங்கோ என வழங்கப்பெற்றார். இவரை வேந்தர் முறை யில் பேய்மகள் இளவெயினி பாடியதொரு பாடல் புறநானூற்றில் (11) உள்ளது. பொருநையாறு பாயும் வஞ்சியையாண்ட பாடுபுகழ் வாய்ந்த இவ் வெற்றி வேந்தர் பகைவரின் அரண்களை வென்று அவரைப் புறங்கண்டு, பாடினிக்கும் பாணனுக்கும் செய்த சிறப்பினை அப்பாடலில் காணலாம் இவர் பாடியனவாய புறநானூற்றில் ஒன்றும் (282) அகநானூற்றில் பன்னிரண்டும் (5,99,111,155,185, 223,261,267,291, 313, 337, 379) குறுந்தொகையில் பத்தும் (16, 37, 124, 135,137, 209,231,262,283,398) நற்றிணையில் பத்தும் (9,48,118,202,224,256,318, 337, 384, 391) கலித்தொகையில் பாலைக் கலி முப்பத்தைந்தும் (2-36) ஆக அறுபத்தெட்டுப் பாடல்கள் உள்ளன. அவற்றில் புறப்பாட லொன்று நீங்கலான அகப்பாடல்கள் அறுபத் தேழில் ஒன்று மட்டும் (குறு. 231) மருதத் திணையில் அமைய ஏனைய வெல்லாம் பாலைத் திணையிலேயே அமைந்தனவாம். போர்க்களத் தில் எதிர்த்து வந்த படையைத் தாங்கிப் பகைவ ருடைய வேல் தன மார்பிலே பாய்ந்தமையால் மாய்ந்து, புகழ் நிறுத்திப் புலவர் வாயிலே தங்கிய பெருஞ்செயல் மறவனொருவனை இவர் புறப் பாடலில் பாராட்டியுள்ளார். அகப்பாடல்களில் பாலைத்திணை முதல், கரு, உரிப்பொருள்களை இவர் பாடியுள்ள திறம் பாராட்டுதற்குரியது. வாடிய கிளைகளுடன் நிழல் சிறிதுமின்றி வெம்பு மாறு கதிர் தெறுதலால் உலர்ந்து வறறிய மரங் களையுடைய வெஞ்சுரம் எனவும் (கலி. 10). ஞாயிறு சினங்கொண்டு காய்தலால் மலைகள் வெம்பவும் மண் பிளக்கவும் கயங்கள் வறண்டு துகளபட்ட வெயில் மிக்க வெஞ்சுரம் எனவும்

(கலி. 20) பாலை நிலத்தின் பண்புகளை இவர் தம் பாடல்களில் நேர்படப் புனைவர். பாலை நிலத்தின் வழியே தூது போகும் பார்ப்பனன் கையிலுள்ள வெள்ளோலையைக் கண்டு, 'இது பொன்னாயிருத்தலுமுண்டு' என்று அவனை வீணே கொன்று வீழ்த்தியபின் அவனது வறுமையினை யுணர்ந்து கைநொடித்துப் பெயர்வரென்றும் (அகம. 337) தாம் கவர்தற்குரிய பொருளொன்றும் இல்லாதவராயினும் புதியோராகிய வழிப்போக் கரைத் துடிப்புக்காணும் ஆசையில் கொன்று வீழ்த்துவரென்றும் (கலி. 4) அந்நிலத்து மறவ ராகிய ஆறலைகள்வரது கொடுந்தன்மைகளை இவர் காட்டுவர். 'அறநெறி மாறாத வாழ்க்கையும் அடுத்தவரை நாடாத மேம்பாடும் பொருளினால் பொருந்தும்' எனவும் (அகம. 155) 'அறவோர்க்கு அளித்தலும் பகைவரை அடக்குதலும் காதலரைச் சேர்தலும் ஆகிய இவற்றையெல்லாம் பொருளே தரும்' எனவும் (கலி. 11). இன்னும் பல வகையில் பொருளின் சிறப்பினைத் தலைவன் கூற்றாக எடுத் துரைக்கும் இவர், 'இசைக்கு மிடத்தே நரம்பறுந்து வீழும் யாழினும் நிலையிலலாதது; பிறரால் எள்ளப்படுமாறு ஒருவரைத் தனித்துவிட்டு மற்ற வரைச் சேரும் திருமகளினும் நிலையில்லாதது; தமக்குத் துணையான அமைச்சரையே பிழை கண்டவிடத்துக் கண்ணோட்டமின்றிக் கொலலும் அரசரினும் நிலையிலலாதது' என்று (கலி. 8) அப்பொருளின் நிலையாமையையும் தோழி கூற் றாக அடுக்கிக் கூறுவார். 'பொருளிலலாமையால் இரவலர்க்கு ஈயாமை இழிவு' எனவும் (கலி. 2). 'உழைத்து ஈட்டுதலின்றி உள்ள பொருளையே சிதைப்போர் உடையோர் எனப்படார்; இல்லா தோராகிய அவர் வாழ்க்கை இரவலர் வாழ்க்கை யினும் இழிந்ததாம்' எனவும் (குறு. 283). பொருள் வயிற் பிரியும் தலைவன் கூற்றில் இவர் கூறும் கருத்துக்களின் உயர்வு உணரத்தகும். உவமைகளின் வாயிலாய இவர் உலகியலறங்களையும் அரசியலறங் களையும் சிறப்புற உணர்த்துவர். 'மலையிலே பிறப் பினும் சந்தனம் தன்னைப் பூசிக் கொள்வோர்க் கன்றி அம்மலைக்கு ஒரு வகையினும் உதவாதவாறு போல நும்மகள் தன்னை விரும்பிய தலைவனுக் கன்றி நுமக்கு உதவாள்' எனவாங்கு வருவன வற்றையும் (கலி. 9). அருளிலலாத அமைச்சன் நடுநிலையைக் கைவிட்டுத் தன் மனக்கருத்தைக் கூறக் கேட்டு நாட்டு மக்கட்குக் கொடுந்தொழில் சூழ்ந்த மன்னவனது கொடுங்கோல சுடுமாறு போலக் கதிரவன் சுடுதலால் மலைகள் வெம்பிய வெஞ்சுரம்' எனவாங்கு வருவனவற்றையும் (கலி. 8). இம்முறையில் காணலாம். இவ்வாறே இன்னும் இவர் புலமை நலங்கள் பலஉள.

**சேரமான் பெருஞ்சேரலாதன்** - சேர வேந்தன். இவன் சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பகைத்து, வெண்ணிப் பறந்தலையில் அவனோடு செய்த போரில், அவன் முனபு குறித்தெறிந்த வேல தன் மார்பில் தைத்து நிலலாது முதுகினவழிச் சென்ற தாக, அதனைப் புறப்புண்ணாகக் கொண்டு நாணி, அவ்விடத்தே வாளோடு வடக்கிருந்து உயிர்துறந்தான். அதனால இவனது மறமாண பினைத் தகையுறக் கண்ட கழாத்தலையார் இவனை 'மறத்தகை மன்னன' எனக் குறித்து, இவன் வாள் வடக்கிருந்தத்தன் துனப விளைவுகளை யெல்லாம அடுக்கி மொழிந்து கையறு நிலை பாடியுள்ளார் (புறம. 65). அவரேயன்றிச் சோழன கரிகாற் பெரு வளத்தானைப் பாடிய வெண்ணிக் குயத்தியாரும், இவன் தன் மார்பிற் புண்ணையும் புறப்புண் ணாக நாணி வடக்கிருந்தமையால இவ்வுலகத்தே மிகப் புகழ் எய்திய சிறப்புக் கண்டு, அக்கரிகால னிடத்தே சென்று, வெற்றி வேந்தனாகிய அவ னினும் நலலனாக இவனையே பாராட்டிக் கூறு தல கருதத்தக்கும் (புறம. 66)

**சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன்** – சேரவேந் தன். உதியஞ் சேரலாதன் என்பது இவன் பெயர். பாரதப் போரில் பாண்டவர் ஐவருடனே சினந்து நூற்றுவரும் (துரியோதனன் முதலியோர்) போரிட்டுக் களத்திலே மடியுமளவும் இருபடைக்கும் இவன் பெருஞ்சோறு வழங்கிய சிறப்புப் பற்றிப் பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதன் எனக் குறிக்கப் பெற்றான் என்பர். இச் செய்தியை உட்படுத்தி இவனைப் பாடியவர் முரஞ்சியூர் முடிநாகராயர் (புறம். 2). பகைவர் பிழை செய்தால அப்பிழையைப் பொறுப்பதில நிலத்தையொத்தவனாகவும் அவரது பிழை பொறுக்கத்தகாததாயின அவரையழித தற்குச் சூழும் சூழ்ச்சியினது அகலத்தில் விசும்பை யொத்தவனாகவும் அவரை அழித்தற்கு வேண்டிய வலிமையில் காற்றையொத்தவனாகவும் அவரை யழிப்பதில தீயையொத்தவனாகவும் அவர் பணிந்து வழிபட்டால அவரை யருள்வதில நீரை யொத்தவனாகவும் இவன் அப்பாட்டில பாராட்டப் பெற்றுள்ளான். முற்றும், மாறுபடாத மந்திரச் சுற்றத்தோடு இமயமும் பொதியமும் போன்று நிலைபெற்று வாழவும் வாழ்த்தப் பெற்றுள்ளான பதிற்றுப் பத்தினுள் இரண்டாம பத்து, மூன்றாம் பத்து, ஆகியவற்றால பாடப்பெற்ற உடன் பிறப் பாளராகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாத

னுக்கும பல்யானைச் செலகெழு குட்டுவனுக்கும் தந்தையாகக கூறப்பெறும் உதியஞ்சேரல (பதி. ப. 2). இவனேயென றும், புறநானூற்றில, 'அறவோன மகனே' என விளிததுத தருமபுததிரனைப் பாடிய கோதமனாரே (புறம். 366) பலயானைச் செலகெழு குட்டுவனைப் பாடிய பாலைக கௌதமனா ரெனறும கொணடு இவனோடு அவ்வெல்லோ ரையும் பாரத காலத்தவராக மொழிவர் ஆ. சிங்காரவேலு முதலியார் (அ.சி.).

**சேரமான் மாநதரஞ்சேரலிரும்பொறை** - சேர வேந்தன். 'கோசசேரமான் யானைககட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை' காணக.

**சேரமான் மாரிவெண்கோ** - சேரவேந்தன். இவன பாணடியன் கானப்பேர் தந்த உககிரப் பெரு வழுதியுடனும் சோழன இராசசூயம் வேட்ட பெருநறகிள்ளியுடனும நட்புறறு ஒருங்கிருநத நிலையில் அவரொடு வைதது ஔவையாரால் வாழ்ததிப் பாடப் பெற்றவன (புறம். 367). இவன செயதியாக வேறேதும் விளங்கவிலலை.

**சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை**- சேரவேந்தன். 'கோச்சேரமான யானைககட்சேஎய் மாந்தரஞ்சேரலிருமபொறை' காணக.

**சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை.** சேரவேந்தன. 'கோச்சேரமான் யானைககட் சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை' காணக'

**சேரமான் வஞ்சன்** - சேரவேந்தன். வஞ்சன் எனபது இவனது இயற்பெயர் பாயல் மலையைச் சூழ்ந்த நாட்டிற்கு வேந்தனாகிய இவன அவ்வகையில் பாயற்கோ எனறு சுட்டப்பெறுவான. இவனை அவவாறு சுட்டிபபாடும் திருததாமனார் (புறம 398) இவனது பணபு பாராட்டுவாராய 'வாய் மொழி வஞ்சன்' எனறும் இவனைக் குறிப்பிடுவர். இவனுடைய ஊர் பெரும்புகழ வாயந்த மூதூர் எனறும் அது நணபராலனறிப பகைவரால் அணு குதற்கரிய புலிககுகை போனறதெனறும் பாடப் பெறும். இவனது ஈதற பணபினைத திருததாமனார் தடாரிப் பொருநனது கூறறில வைத்துபபாடி யுள்ளார்.

**சேரல்** - சேரன. 'ஏழு முடிகளாற் செய்யப்பெற்ற ஆரததை மார்பிககண அணிந்த சேரல்' எனக் கடல் பிறகோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடுவர் (பதி. 45:6) பாணடியன் நெடுஞ்செழியன் சேரல முதலிய எழுவர் வலம் அடங்க வென்றான் (அகம 36:13-21).

**சேரலர்** - சேரர். 'செல்வததையுடைய அரசே, சேரலர் மருகனே' எனச் செலவக் கடுஙகோ வாழியாதன் குறிப்பிடப் பெறுகின்றான் (பதி. 63:16). சுள்ளியா கிய பேரியாறு சேரலர்ககுரியது (அகம். 149:7,8). காரி, வலவில ஓரியைக கொனறு கொல்லி மலை யினைச் சேரலர்கரு உரிமையாககினான் (அகம. 209:12-15).

**சேரலர் வேந்து** - சேரர் குடியில் தோன்றிய வேந்தன். தொழிற்சிறப்பமைந்த கண்ணியையணிந்த சேரலர் வேந்தே - சேரர் குடியில் தோன்றிய வேந்தனே- எனறு களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காபபியாற்றுக் காப்பியனார் விளித்துப் பாடுவர் (பதி. 38:8).

**சேரலாத/சேரலாதன்** - 1. இமைய வரம்பன் நெடுஞ் சேரலாதன் 'போரிலே பகைவரைக் கொல்லும் படையினையுடைய சேரலாத' என்றும், 'போர் வன்மைமிக்க யானைகளையுடைய சேரலாத' என்றும் இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனை விளித்துப் பாடுவர் குமட்டூர்க் கண்ணனார் (பதி. 11:16;15:23). மணணுலகத்தைக் காத்தல் மேற் கொண்ட மழையே பெய்யாது பொய்க்குவதா யினும் இரவலர்க்கு வேண்டிய பரிசிலைத் தருதலில் சேரலாதன் பொய்க்கமாட்டான் (பதி. 18:9-12). நுகர நுகர விருப்பம் குறையாத செல்வத் தையுடைய சேரலாதனுக்கு வேளாவிக் கோமா னாகிய பதுமனின மகள் ஈன்ற மகனாவான் களங்காயக கண்ணி நார்முடிச் சேரல (பதி. ப. 4). வெற்றி தங்கிய முரசினையுடைய சேரலாதன் கடல் நடுவேயிருந்த பகைவரை ஓட்டி அவர்தம் காவலமரமாகிய கடம்பினை வெட்டித் தன் முன் னோரையொப்ப இமையமலையிலே விற்பொறி யைப் பொறித்து மீண்டு, மாந்தையென்னும் தனனூரின் மனை முற்றத்தே பகைவர் பணிந்து தந்த திறைப பொருளாகிய பெருமை பொருந்திய அணிகலனகளுடன் பொற்பாவைகளையும் வயிரங் களையும் நிறையக் குவித்து வைத்திருந்தான் (அகம். 127:3-10). நிறைந்த பெருஞ்சேனையினையுடைய சேரலாதன் கடலின கணணேயிருந்த பகைவரைத் தோறறோடச் செய்து அவருடைய காவல் மர மாகிய கடம்பினை யறுத்து முரசியற்றினான் (அகம. 347:3-5). 'இமையவரம்பன', 'குடககோ நெடுஞ்சேரலாதன்' காண்க.

2. **சேரமான் பெருஞ்சேரலாதன்.** கரிகால் வளவ னொடு வெண்ணிப பறநதலையிடததே போரிட்டுத் தன மார்பிலே பாயநத வேல முதுகைத் துளைதத புண்ணினைப புறப்புண்ணாகக் கொணடு நாணிய சேரலாதன்-சேரமான பெருஞசேரலாதன்-போரிட் டழிந்த களத்தின் பககததே வாளோடு வடக கிருந்தான் எனற துனபமிக்க அந்த இன்சொல்லைக் கேட்ட சானறோர் பலரும் அருமபெறல உலக மாகிய வானுலகத்திற்கு அவனோடே செலலுமாறு தாமும் வடக்கிருநது உயிர் துறநதனர் (அகம். 55: 10-15). 'சேரமான பெருஞசேரலாதன்' காண்க.

3. **சேரமான் செலவக் கடுஙகோ வாழியாதன.** 'ஆதித்த மண்டிலமே! நீ பகற்பொழுதை மட்டுமே நினககெனக கூறுபடுத்திக் கொள்கினறாய; திஙகள் மணடிலததிற்குத் தோற்றுப புறமுதுகிட்டுப் போகின்றாய; தெறகும வடககுமாக மாறிவருகின றாய்; மலையின பின்னே வெளிப்படாது மறை கினறாய; விசும்பிடததும் பகறபொழுதில மட்டுமே விளங்குகின்றாய்; இககுறைகளெலலாமுடைய நீ இவையிலலாதவனும ஒடுஙகாத ஊககம், தனக கெனப பொருள்களை ஓம்பாத ஈகை, வஞ்சியாது எதிர்நினறு கொல்லும் படை ஆகியவறறை உடையவனுமாகிய சேரலாதனை - சேரமான செலவக கடுங்கோ வாழியாதனை- எவவாறு ஒத்து நிறபாய' எனறு கபிலர் அவவாழியாதனைப புகழ வாா (புறம். 8) 'செலவக் கடுஙகோ' காண்க.

**சேரன் மாந்தரஞ்சேரலிரும்பொறை** - சேர வேந்தன். 'கோச்சேரமான யானைக்கட்சேஎய மாநதரஞ் சேரலிருமபொறை' காணக.

**சேரார் - பகைவர்.** 'போரில எதிர்ததோரைக கொலலு தல் வலல குருசிலே, நீ ஏநதிய ஆழிப்படை நின சேராரின - பகைவரின - தலைகளைக கொய்து அவருடைய இனிய உயிாகளை அழிக்கும்' என்று திருமால் போறறப பெறுகிறாா (பரி. 2:43-49).

**சேரி – குடியிருப்பு/தெரு.** விழுமிய தலைமையினை யும், சீரிய முததினையும் விளங்குகினற சஙகினையு முடையது பெரிய சேரி - (சங்கு குளிபபார்) குடி யிருபபு - (மது: 134-136). ஊர் மணம நாறுகினற (பரத்தையா) சேரியினையுடையது (மது 327-329). மறததைக கொணடிருககினற சேரியில (தெருவில) தம்மில் தாம் மாறாயப பொருகினற போர் (சேரிபபோர்) நிகழநதது (மது. 594,595). மனறு கள தோறும் நினற குரவைககூததும, சேரிகள தோறும் நினற புனைநதுரைகளும் பாடடுக்களும பலவகைப்பட்ட கூததுககளும கலநது நனனன பிறந்த நாளிடத்து நிகழநதன. (மது. 615-618). சேரிகளிலுள்ளாா கொண்டாடுகினற விழாவாலே ஆரவாரம எழுநதது (மது. 619). குடடிகளை யுடைய பன்றிகளையும் பல சாதியாகிய கோழி களையும் உறை வைத்த கிணறுகளையுமுடைய சேரியில இழி குலததோர் இருப்பா (பட். 75,76). பொருளினறி வருமபுதியர்களைப புரககும நற்பண பினையுடைய நெருஙகிய சேரிகளைக கொணடது மூதூர் (அகம. 15.6,7). மாாசசனை செறிநத மத்தளததோடு காணபோர் மகிழக கூததாடும் பரததையர் சேரிககுத தணணிய நீாத துறையை யுடைய ஊரனான மருதநிலததலைவன வருவான (அகம். 76:1,2). களவினை அனனை அறியினும அறிக; அலர் கூறும வாயினையுடைய மெலலிய சேரி (சேரியிலுளளோர்) கேடபினும கேடடிடுக' எனத் தோழி செவிலிததாயககு அறததொடு நினறாள் (அகம. 110:1,2). உபபு வணிகர் மகள, நெலலுககு ஒதத அளவினதே வெண கல உபபு எனச சேரியில விலை கூறி விற்றாள் (அகம. 140: 5-8). ஊரன தேர், பரததையா சேரிககண பல நாளும் இயங்கியது(அகம.146:5-7). நிலாவைபபோல விளஙகும மணல மிகக தெருவிலுளள புலால நாறுமசேரி புலலால வேயபபெறற குடிசைகளை யுடையது (அகம. 200.1,2). 'ஊரனபெணடிா வாழும சேரிககண யாம செலலின அவர் வருநதுவா' எனப பரததை செருககுடன கூறினாள (அகம. 216.5, 16) ஊரின கணணும சேரியினகணணும ஒருஙகே அலர் எழத தலைவன தேரோடு வநதான (அகம. 220 1,2). 'ஊரன எம சேரிககண பொருநத வரு வானாக' எனப பரததை கூறினாள (அகம. 276.7). மூதூரினகண்ணே பழியினைத தூறறும வாயினை யுடைய சேரி (சேரிப பெணடிா) கூறுகினற அமபலும அலரும நமமிடததே தஙகததலைவா பிரிந தனர் எனத தலைமகள தோழிககுக கூறினாள் (அகம.347:6-8). ஊரினும் சேரியினும ஒரு பெறறியே அலர் எழத தலைவனொடு தலைவி உடன சென றாள் (அகம. 383:2,3). மடவோய! யானும நின சேரியளே எனத தலைவியிடம பரததை கூறினாள் (அகம. 386:10,11). 'ஊரீரே! நெலலும உபபும விலை ஒபபாகும' எனச சேரிகள் தோறும தலைவி விற்கும (அகம. 390:8,9). 'நம தலைவா நமமோடு ஓர் ஊரிலே வாழநதாலும நாம இருககும சேரி (தெரு) வாராா; சேரிககு வரினும நனகு தழுவிக கொளளாா' எனத தோழிககுத தலைமகள் கூறி னாள் (குறு. 231 1,2). 'பெரும, எம சேரியிடதது வருதலை ஒழிக, நீா வரின பழிசசொல உணடா கினறது' எனத தோழி தலைவனிடம கூறினாள

(குறு. 258 1,8). ஊரிடத்தே பழிச்சொல உண்டாகச சேரி (சேரியிலுளளாா/தெருவிலுள்ளார்) ஆரவாரம செயய அனனை தலைவியை வருத்தினாள் (குறு 262.1,2). சேரியிடததே (தெருவிடததே) தலைவன மெலல வந்து மகிழும வண்ணம் இனிய சொறகளைச சொலலிச் செனறான (குறு. 298:1,2). 'புன்னை மரங்களையுடைய சேரிகளை (தெருக்களை) கொண்ட இவ்வூரிலுள்ளார் தம் கொடுமைக் குணததாலே வீணாக நம்மேல பழிச் சொறகளைக் கூறுகினறனர்' எனத தலைமகள் கூறினாள் (குறு. 320.7,8). 'தலைவருககு நீ உரிமையுடையாய எனபதனை நம் சுற்றத்தாரும் உடம்பட்டுக கூறினர்; ஆயின், புனனை மரங்கள் உயாநது வளர்நத புலால் நாற்றத்தையுடைய சேரியிடத்து மகளிர் கூட்டத்தினரோடு இவ்வூர் இனனும அலாதூற்றும்' எனத் தோழி கூறினாள் (குறு. 351:4-8). கடலிலே சென்று மீன்பிடித்தலில வருந்திய பரதவர், மீனகளைக் காயவைத்த புதிய மணற் பரப்பிடததுக் கல்லென ஒலிக்கும் சேரியை அடுததுப புன்னையின பூங்கொத்து மணம் கமழ்ந்தது (நற். 63:1-4) 'புன்னை மரங்களையுடைய சேரியின்கண் நடுயாமத்திலும தலைவர் தேரிலுள்ள மணியின் ஓசை ஒலிக்கும்; இனி யாதாகி முடியுமோ' எனத தோழி தலைமகன் சிறைப் புறத்தானாக வரைவு கடாவினாள் (நற் 145:9-11). 'தலைவன குதிரையைச் செலுத்தி எமது சேரியின் கண வநது கொண்டைமாலையையும் அழகுக் கிடும் கண்ணியையும் காட்டி ஒருமைப் பாட்டையுடைய எமது நெஞ்சததைக் கவர்ந்து கொணட தீவினை அவனை விடாது' எனப் பரத்தை பாணனிடம் கூறினாள் (நற. 150.7-9). 'வனபபுமிகக நம்முடைய சேரியிலே, ஊரார பழிதூற்றுதலினாலே கொண்கனது தேர் நிலலாது செனறது' எனத் தலைவி உரைத்தாள் (நற. 249:9-11). 'நீ இனிவரின தவறிலலை; சுற்றத்தார் ஒருவரை ஒருவர் அறியாத சேரியையுடையது ஆதலால் எம் நலலூரிடததே அச்சமினறி வருவாயாக' எனத தோழி தலைவனுக்கு இரவுககுறி நேர்ந்தாள் (நற. 331.9-12). 'நீ இருககினற சேரியைச் சாரவருபவாககு எககாலததும அருள் செய்யவேணடும்' எனத் தோழி கூறினாள் (நற. 342:3-5). பரததையர் சேரிககணணே தலைவன தேரேறிச செலலுவான (நற. 350:5,6). 'நாட, நீ வநதால், எம்மூர்க் கண், அம்பல அளவிலேயிருநத சேரி, அலர் கூறும் இடமாக மாறும' எனத தோழி கூறினாள் (ஐங. 279:3-5). என தோழி, காம நோய் மிகுமாறு நீ செயத அருளினமைச சேரியும் (சேரியிலுள்ளாரும்) அறியாமல மறைத்தாள் எனககூறித தோழி தலைவனை வரைவு கடாவினாள் (கலி. 44:11,12). தொழுநோயினால் பார்ப்பான ஒருவன சேரியில் (தெருவில) போகாது மறைந்து திரிந்தான் (கலி. 65:7,8). சேரிதோறும் செனறு தலைவன் சேர்ந்த இலலை வினவினனாய்ப் பாகன் தேரோடு திரிந்தான் (கலி 68:16,17). 'சேரியிலுள்ளாரின் நிறையாத முயக்கத்தாலே, பாடழிநத நின் வடிவைக் கணடு யானும் ஊடுதலைத் தவிர்த்தேன்' எனக் காமக கிழத்தி கூறினாள் (கலி. 91:12-15). 'தலைவன் தலைவியின் கையிடத்துப் பொருளை என்ன என வினாவ அவள், 'யான் இசசேரியிலுள்ள இடையர் மகள்; இது பனங்குருததினால செய்த புட்டில' என்றாள் (கலி. 117:5-8). வையையில நீராடச் செல்லும் சேரியில (புறச் சேரியில) வாழும் இளையர் நெருக்கத்தால உட்புக முடியாத நிலைமையராயினார் (பரி. 6:38,39). வையை வெள்ளம், கூத்தர்கள் உள்ள சேரியை அடைந்தது (பரி. 7:22,32).

**சேரியம் பெண்டிர்** – சேரிமகளிர். 'தலைவர் நம்மொடு ஓராங்குச் செல்லவிரும்பினர்; நாம், அன்பு பொருநதாத இயல்பினையுடைய பொயம்மொழி கூறும சேரியம் பெணடிாதம் - சேரிமகளிர் தம் – அலரினை நீஙகுவோம' எனத் தலைமகன் உடன் போக்கு வலித்தமை தோழி கூறினாள் (அகம. 65: 4,8,9). 'சேரியம் பெண்டிர் நம்மை இகழினும் இகழக, பிரிந்து சென்ற நம் காதலர் என்றும் நோயினறி இனிதிருப்பாராக' எனறு தலைமகள் கூறினாள் (அகம. 115:4,7). யானைக் கன்று, சேரியம் பெண்டிர் துணணெனும்படி பசுவின் கன்றோடு புகுந்தது (நற் 171:3-5). அன்னை, சேரியம் பெணடிர் தம் இழிந்த சொறகளை நம்பி, என மேனியைச சுடுவது போல நோக்கினாள் எனத் தலைவி உரைத்தாள (நற. 175:5-8).

**சேவடி** - சிவந்த அடி. வீரக்கழலணிந்த சேவடியாலே – சிவந்த அடியாலே - போர்ககளத்தைக் கைக் கொள்ள வேண்டி விரைநது வந்து போரைத் தடுததான் மலையன் (புறம. 125:12-14). 'மிகவும் விளங்குக அவன் சேவடி' எனச் சேரமான் சிககற பள்ளித துஞ்சிய செலவககடுங்கோ வாழியாதனைக குணடு கட் பாலியாதன் பாடுவர் (புறம். 387: 14). செல்வக கடுங்கோ வாழியாதனின திருந்து கழற சேவடி (புறம. 387:18). 'முருகனின சேவடியில செல்லுதறகுக காரணமான நலவினைகளைப் பல பிறப்புககளிலும் விரும்பி நிகழ்ததின கோட் பாட்டானே, தலைமையினை உடைய உள்ளத் தோடே செலலும் செலலை விரும்பின நீ வீடு

பேற்றைத் தபபாமல் பெறுவை' என அன்பனை முருகனிடத்தே ஆற்றுபபடுத்தினர் (முரு. 62-66). சேவடியினை உடையவர் மயிலினது இயலபோலும சாயலோர் (பட். 146,150). நறுமணம் வீசும் பூங் கொததுக்களையுடைய துளவ மாலையையணிநத திருமாலின் சேவடிகளை (திருவடிகளை) வணஙகித தம் நெஞ்சு மலிநத உவகையராய் அனபர்கள் தாம் தங்குகினற ஊாகளுககுத திரும்பிச் செல்வர் (பதி. 31:9,10) தலைவி மெனமெலச செய்யும் இயல் பினவாயநன்மைமிகக சேவடியால நிலததில் சுவடு தோன்ற, பொருள்வயிற பிரியவிருககும தலைவன பாற் சென்றாள் (அகம. 5:2-4). 'பெரிய காடுகளை நீணட தூரத்தன என்றெணணாது மெத் தென றிருககும் சேவடி வருநதச் செலலற்கு வனமை யுடையள ஆவளோ' என மகட்போககிய செவிலித தாய் கூறுவள் (அகம. 89:17-19). பாழான நாட்டிடததே தனது பொறறொடி ஒலிககக கையினை வீசியும் சேவடியில சிலம்புகள் விளங்க உலாவியும் தன மகள் தலைவனுடன சென்றமைககுச் செவிலி இரங்கினாள் (அகம். 117:7-9). செம் முதுசெவிலியா தனனைப பாராட்டிககூற, பொன்னாற செய்யப் பெற்ற சதங்கையை அணிநத அழகிய சேவடியால மணல பரந்த முற்றததே நிலம் வடுககொள்ளு மாறு தலைவி விளையாடினாள (அகம. 254:2-4,7). நலல போாத்திறம் வாயநத சேரனது திருநதிய வீரககழலணிநத சேவடியினை விரும்பிக் கூத்தர் சென்றனர் (அகம. 309.9-11). அததியெனபான, ஒள்ளிய பொறிகளையுடைய அழகிய வீரககழல சேவடியில புரள புனலாடினன (அகம். 376:7-10). தாமரை மலரை ஒதத செம்மையாகிய சேவடியினையுடையவன முருகன (குறு.க.வா. 1). பெரிய நிலம் சேவடியாகவுடையவர் திருமால (நற். க.வா. 1). 'தோழி, நின் மேனி, ஒளிமிககு வேறு வண்ணமாகத தோனறுகிறது; அனறியும் நின் சேவடிகளால மெலல நடநது இயங்கினாயுமிலலையே' எனத தோழி தலைவியை வினவினாள் (நற். 297:2). 'தலைவியின சேவடியில எனது தலையைச சேர்தது வணஙகினால், அததலைவர் நிலை எவ்வாறுள்ளது; என அவர் வினவலும் கூடும்' என்று தலைவனுககாகத் தலைவியிடம் குறையிரககும் தோழி நினைந்தாள (நற் 342:9,10) 'நின சேவடி சிவககும் படி வநதாற போலே திரும்பி நின பரததையர் மனைககண போ' எனத தலைவி பரததைமைத் தலைவனிடம் கூறினாள் (கலி. 95:3 4). 'அடிபணிந் தாரது மறு பிறபபறுக்கும் மாசிலலாத சேவடியினையும் நீலமணிபோல விளங்கிய நிறததையும் உடைய மாயோயே' எனத் திருமாலைப பரவுதல (பரி. 3:1-3). 'மிகவும் உயாநது விளங்குகினற கருடக்கொடியினையுடையோய்! நின் சேவடி தொழாரும் உளரோ' எனத் திருமாலைப பரவினர் (பரி. 3:18,19).

**சேவல் – ஆண்பறவை.** வரியை உடைத்தாகிய செம் பொறியையுடைய சேவல-காட்டுக கோழிச சேவலதினைப் புனம காபபோரைக் கூவித் துயில உணர்ததியது (புறம. 28:8,9). 'அனனச சேவல்! அன்னச் சேவல்! நீ குமரிததுறையிலே அயிரை மீனை உண்டு இமயம் நோககிச செலகுவையாயின், இடையிலே உளள சோழ நாட்டுககுச சென் றால கிள்ளியைப் பாாதது யான பிசிராநதையின அடியுறை எனக் கூறின நின பேடை அணிய நன கலன் நலகுவன்' எனக் கோபபெருஞசோழனைக் குறித்துப பிசிராநதையார் மொழிவா (புறம். 67). ஊர் மன்றததினகண பலா மரததிலவாழும மநதி, பரிசிலர் அங்கே கட்டி வைததுள்ள முழவினைப பலாபபழம் என்று கருதித தட்டின இடததுஅதன கண வாழும் அனனச சேவல, அவவோசைககு மாறாக எழுநதொலிககும் (புறம. 128: 1-4). மனையில வாழகினற கழுததில கறையினையுடைய குருவிச் சேவல, கூட்டிலே அரிசியினை உணடு தன பெடையோடு வதியும (புறம. 318.4-8). பொறிகளைப புறததேயுடைய போாவலல குறும்பூழப பறவையின் சேவல, எள் உணஙகலைக கவாந் துணடு, கொலலை வரபபில வாழும எலியினை அலைகக அவவெலி வரகின பினசென்று மறையும (புறம். 321:16). காட்டுப பூனைககு அஞ்சிய பெட்டைககோழிஉயிர்நடுககுறறு அரற்றப பருததி நூறதம் பெணடினுடைய சிறிய விளககொளியில, முருக்கம் பூவையொதத கொணடையையுடைய சேவறகோழியைக கணடு அசசம் தணியும (புறம. 326 1-6). ஒள்ளிய பொறிகளையுடைய சேவறகோழி கூவிததுயில எழசசெயயும (புறம. 383.1). போாககளததின்கண, பெடையையுயை சேவலினது இனம, தசையாகிய இரையை உணணும (பதி. 35.4,5). பொறிககப்பட்டன போனற புள்ளிகளையுடைய கழுததினையும் புலலிய புறததினையுமுடைய எருவையினது பெடையினைச சேர்நத சேவல, புலவூறு எனனும் பறவையை உடனகொணடு கீழே இறங்கும் (பதி. 36·8-10). தாமரைபபூவில தேனை நுகர்கினற நீலநிறததினையும சிவநத கண்ணினை யும் உடைய வணடின சேவல திஙகளைச சேர்நத கருமபாம்பை ஒபபத தோனறும (சிறு. 183 185). மாடததிடததுப புறவினுடைய சிவநத காலை யுடைய சேவல இனிய துயிலை நீககியது (பெரு. 438-440). வலைஞா பொயசைகளில கமபுட்சேவலின் இனிய உறககம கெடும்படி, வள்ளைக கொடி

களையும் உதவிய பசுமை தீரநத அகன்ற ஞாலம், தான ஈனற பசுமை தீர்நத புதிய அழகு தோன்ற இளவேனிற காலம வநதது (கலி. 29.3,4,9) தான விளைவிததலின வேற்று நாட்டிறகிலலாத விறமைநத ஞாலத்திடதது அகற்சியையுடைய அழகைத தான காணவேணடி, யாறு கணகளை விழிததுப பாரத்தன போலப் பககததில நினற குளஙகள் நீர் நிறைநது பூககளால் அழகு பெற்றன (கலி. 33 1,2) யாறுகள் அகனற ஞாலததிடத்துப பெருமையையுடைய உயிர்கள் எலலாம் உயிர் வாழும்படி நீரோடு எஙகும் பரநதூட்டிப் பாதுகாததன (கலி. 34:1,2). ஞாலம் வறம் தீரும்படி மழை பெயதது (கலி. 82:1). 'ஞாலததுள்ளோர் அனைவரும் வணங்கிப் புகழும் ஓசையினையுடைய முரசினை யுடையாய்' எனத தலைவனைச் சான்றோர் விளித்தனர். (கலி. 100:5,6). அகன்ற ஞாலத்தை எவ்வுயிர்ககுந் தோற்றுவிககும் கதிர் களை வாயாக உடையது சுடர் (கலி. 119:1,2). ஞாலம் மூன்றையும் தன் திருவடியிலே தாங்கியவர் திருமால் (கலி. 124:1). மிகுகின்ற நீரையுடைய ஞாலத்துள் உறைகின்ற கேள்வர் உளரல்லராயின தங்கணவர் மேலே உள்ள வேட்கையோடே இறந்துபடுதல் நலம் என்பது தலைவி கூறறு (கலி. 143:44-47). ஞாயிற்றின் ஒளி விசும்பிடத்தும் ஞாலததிடத்தும் செலலும் தனமையுடையது (கலி. 144·39 - 41). இனபம் நிலையில்லாமையான் தடுமாற்றம், ஞாலத்துக் கூடியிருந்து வாழ்வோர் களுக்கெல்லாம் உரியது (கலி. 145:16,17). ஞாலத்திலுள்ளோரால் பிறையான் இளம் பருவததே எதிர் கொள்ளப்பட்ட திங்கள் முதிர்ந்து முழுமதியாகும் (கலி. 146:38-48). ஞாயிறு, ஞாலததிடத்துப் பழைய இயல்பினையுடையதாய்ப் பொருள் களை விளககும் தொழிலிலே ஊனறி நினறு, பின காமததைத் தூண்ட காமனுக்குத் துணையாய்க் குடமலையில் மறையும் (கலி. 148:1-3). ஞாலத்தை உறையுளாக உடைய தேவரும் (முனிவர்) வானத்துத தேவரும் திருமாலை விருமபிப பாடுவர் (பதி. 3:27,28). திருமாலின் புரத்தலும (தாங்குதலும்) நோன்மையும் ஞாலத்தின கணணே உள (பரி. 4:28). பெருஙகலி ஞாலதது, இருங்குன்று (திருமாலிருஞ்சோலை மலை) என்னும் பெயர் பரவியுள்ளது (பரி. 15·35,36). மணியை ஒத்த மாமலை தோனறியஞாலததை அணிபோல் தாங்கிக் கொண்டவரும் தாமே என்று ஆயிரந தலையுடைய அருநதிறல் (ஆதிசேடன) குறிபபிடப்பட்டுள்ளது (பரி. தி.1:74,75).

ஞாழல் - புலி நககொன்றை. பூங்கொததுக்கள் சிதைந்த ஞாழல் - புலிநகக் கொன்றை - என்னும் மரத்தையுடையது பெருந்துறை (பதி. 30:1). நாரை, குவிந்த பூங்கொததுக்களையுடைய ஞாழல் மரத்தினது பெரிய கிளையிடத்தே தங்கும் (பதி. 51.4,5). நாட்டில் வாழ்வார், களமருடைய ஓசை மிகுகையினாலே, அரும்பின் ஞாழலோடே ஏனைய மரங்களும் திரணட அநநாட்டை வெறுத்தார்களாயின் முல்லைக் கொடி படர்ந்த காட்டுக்குச் செல்வர் (பொரு. 193-221). தலைவியும் தோழியும் ஞாழறபூ, பவழக்கால் மல்லிகை போன்ற பல வற்றையும் பறிததுப் பாறையிலே குவித்தனர் (குறி. 81,82,98). வளைந்த கழியிலுள்ள தாழை விழுதாலாய கயிற்றால ஞாழலின் உயர்ந்த கிளையில் கட்டித தொங்கவிட்ட ஊசலில் தலைவி ஆடுவாள் (அகம். 20:5,6). ஞாழலின் புதிய பொனனிறப் பூககளுடன புனனைப் பூக்கள் உதிர்ந்து ஓவியம் வரைநதாற் போல் கடறகரைச் சோலையை அழகு செய்யும் (அகம. 70:8-10). தாழையைச சாரநது, ஞாழலொடு பொருந்தி, தோட்டததில வளைந்த தாளையுடைய புனனை நிற்கும் (அகம். 180.11-13). கடலாடு மகளிர் கொய்த ஞாழலையும உழவர் பறிதத குவளையையும் முல்லை நிலததே பூத்த முல்லையோடு, சேர்த்து இளங்கோசர் கணணியாகக் கட்டி விளையாடுவர் (அகம. 216:8-11). சிவந்த பூவினையுடைய ஞாழலின் கரிய கொம்பின் பெரிய கிளையில தனியே இருக்கும் தன குஞ்சினை நினைத்து நாரை வரும் (அகம. 240:1,2). மீன் வேட்டம் புரிபவர் உப்பங்கழியில மலர்ந்த வளம் வாயநத இதழ்களையுடைய நீலப் பூககளை ஞாழல் பூக்களுடன சூடுவர் (அகம். 270.1-3). ஞாழலது வணடு மொயகக மலர்ந்த மலர்க் கண்ணியுடன நெயதலின மலர்மாலை அசைய அநதிக் காலததுக் கடற்றெய்வம் கரையில் நிற்பது போல் தலைவி கடற்கரையிடத்தே வந்து தனித்து நினறாள (அகம. 370:9-13). ஞாழல் மரததினுடைய வெண் சிறு கடுகைப போனற சிறிய பூக்கள், மருதமரத்தின் பழம் பூவுடனே பரநது நீர்த்துறையை அழகு செயதன (குறு. 50:1-3). பசுமையான அரும்பு களையுடைய ஞாழல மரததினது பலகிளைகள் செறிநதிருககும் ஒரு பக்கத்தில் தலைவி அழகினை இழந்து தனிதது நினறாள் (குறு. 81:1-4). தலைவன், தணணியவாய மணம் வீசுகின்ற ஞாழல மலர் களையுடைய துறைவன (குறு. 310:6, 7). கடற்கரைப் பரப்பிலே நறுமணம் கொணட ஞாழல் மலர்களோடு புனனை மலரும் பரவி வெறியாடு களம் போலத் தோன்றியது (குறு. 318:1-3). சிறிய பூககளைக் கொணட ஞாழல்மரத்தின வேரிடததில நணடின் இருப்பிடமாகிய அளை அமைந்துள்ளது

(குறு. 328:1,2). அரும்புகள் முதிர்நத ஞாழலினது தினைமணிகள் போனற திரண்ட மலர்களை நெய தலினது மலரிலே பெயதாற்போலக் குளிர்காற்று தூவியது (குறு. 397:1-3). துறையில் சிறிய பூக் களையுடைய ஞாழல் மரம் நிறகும் (நற். 31:5). தழையுடுப்பவர், கொய்தற்குரிய தளிர் தழைந்த இளைய ஞாழல் திரையின் கரிய புறத்தைத தடவும கடற்கரை கண்டல மர வேலிகளையுடையது (நற். 54:8-11). சிறிய மலரையுடைய ஞாழல் மரங் களையுடையது பெரிய கடறகரை (நற். 74:5). நறுமணம் கமழ்கினற பூவையுடைய ஞாழலின சிறந்த , மலரும புன்னையின சிறந்த மலரும் உதிர்நது பரவிய மணறபரபபின ஒருபால இயறகைப் புணர்ச்சி நிகழ்ந்தது (நற. 96:1-3). நறிய மலரையுடைய ஞாழலினது தாழ்நத அழகிய கிளையிலுள்ள பூங்கொததைக் கொயது அதனோடு இளந்தளிரையும சேரப்பிசைநது உதிர்த்த கையை யுடையளாகி, தலைவி அறிவு மயககமுற்றாள. (நற். 106:6-9). பலமாட்சிமைபபட்ட புதிய ஞாழல மலரொடு புன்னை மலரும் உதிர்நது பரவியதால கடற்கரைச சோலை மணம் கமழநதது (நற. 167: 7-9). சிறிய பூவையுடைய ஞாழலின தேன் பொருந்திய ஒள்ளிய பூங்கொததுககள சிறுமியா வணடலாட்டயரும் வழி, வணடல மண்ணாலே செய்த பாவையின கொஙகையில சுணங்கு போல மெலலிதாகப படுமாறு பரவாநிறகும் (நற். 191: 1-4). மகளிர் வெயிலிலே காயும் தினையைக கைவிரலாலே துழாவி வருதலபோல மணம வீசும் ஞாழலின உதிர்நத மலரை நண்டுகள் காலால் வரிததுக் கோலம் செயயும (நற. 267:3-5). கொழுத்த மீன சுடுபுகை தெருக்களுள்ளே கலநது, சிறியமலரையுடைய ஞாழல் மரங்கள் மிக்க துறை யும இனிதாயிருநதது (நற். 311:6,7). சிதைவுற்ற தோணியைச் சிறிய மலரையுடைய ஞாழலொடு சேர்நது ஓங்கிய புன்னையின வேரடியிலே பிணித் தனா (நற. 315:6-8). நீர்ததுறையில புன்னை மரத தோடு ஞாழல மரமும பூககும (ஐங். 103:1,2). நீர் கொணடு வநதிட்ட மணலிடததே ஞாழல மலர்கள் செருநதிபபூவோடு கலந்து மணம் வீசும் (ஐங். 141.1). நீா கொணடு வந்திட்ட மணலிடததே ஞாழலின தாழந்த பூசசினை வருநதப பறவை வதியும் (ஐங் 142:1,2). நீா கொணடு வநதிட்ட மணலிடத்தே ஞாழறகண் புள் ஒலிக்கும் (ஐங. 143: 1). எக்கரிடததே உள்ள ஞாழலின்கண பூங் கொத்துக்கள் தோனறின (ஐங. 144:1). எக்க ரிடததே உள்ள ஞாழலின் சிறிய இலைகளையுடைய பெரிய கிளையைக கடல் வளைக்கும் (ஐங. 145: 1,2). எக்கரிடததே உள்ள ஞாழலின் அரும்புகள் முதிர்ந்து மலரும் பூங்கொத்துக்கள் நன்மணம வீசும (ஐங். 146:1,2). எக்கரிடததே உள்ள ஞாழல மலர் கிடைககப் பெறாத மகளிர் அதன் தழையை விருமபுவர் (ஐங். 147). எக்கரிடத்தே உள்ள ஞாழலின் மிகபபெரிய கிளையில மலர்கள் இனிதே மணம் வீசும் (ஐங். 148:1,2). எக்கரிடததே உள்ள ஞாழறபூவினை ஒத்துத் தலைவியின முலையில் தேமல படர்ந்தது (ஐங். 149:1-2). எக்கரிடததே ஞாழலின் நறுமலர்கள் உடைய பெரிய கிளை யினைக் கடல் அலைககும் (ஐங. 150.1,2). சிறுவெண் காக்கை பொனனிறமான பூங்கொத்துக களையுடைய ஞாழலை வெறுத்தால புன்னை யில் சென்று தங்கும (ஐங். 169:1-3). கான லிடத்தேயுள்ள ஞாழலின அழகுமிகக தழை யினையுடைய தலைவி வரையர மகளிர் போனறு அரியள் எனத்தலைவன கூறினான் (ஐங். 191:3, 4). காமனதம்பி சாமனைப போல நிறம விளங்கி ஞாழலின பூக்கள் நெருங்கின (கலி. 26.4). இள மரககாவினுள் நீரோடுகின்ற காலிடததே நினற கொழுவிய நிழலையுடைய ஞாழலினது முதிர்நத கொாததுக்களைப பறித்துக் கொண்டு, தலைவி பூவும் மயிரும் தம்முள் மயஙகும்படி முடிததாள (கலி. 56:1-3). கடறகரையில மணலிடத்தே விளங்கு கினற கொததினையுடைய ஞாழற பூவும் புனனைப பூவும் செருநதிப் பூவும் உதிர்நது கிடந்தன (கலி. 127:1-5). கானலிடததே கமழ்கினற ஞாழற் பூவின நிறததை ஒபப தலைவியின மேனி பசநதது (கலி. 131.19, 20). தகரததையும் ஞாழலையும தேவ தாரததையும ஏநதிக் கொண்டு வையை வருகினற வரவு கடல, கிளர்நது வருகினறாற் போல தோன றியது (பரி. 12:6-8).

**ஞாளி - நாய்.** இரவில் கூரிய பல்லினையும வலமாகச சுரிதலுடைய வாலினையும் உடைய ஞாளி - நாய- குரைததது (அகம. 122:8).

# ஞி

**ஞிணம் - நிணம்.** குடநாட்டின்கண் மறவர் எய்து கொண்டு வந்த எயப்பனறியினது தடிநத தசை யின் செவ்வியையுடை ஞிணம்-நிணம-மிகக புதிய வெணசோற்றுக் கட்டியை வருவார்ககெலலாம கொடுதது மகிழபவன மலலிகிழான காரியாதி (புறம. 177:12-17).

**ஞிமிறு - தேனீ.** வரியையுடை ஞிமிறு-தேனீ - ஒலிககும்

மததநினையுடையது யானை (புறம். 98:12,13 அகம். 78 34). களிறு கனறோடு கூடிய பிடியைச் சுறறிய கோடுகளையுடைய ஞிமிறுகளை ஓட்டும் (பதி. 12.12,13). சேரன, பூசிய சந்தனம புலரவும் வணணம துடைககபபடவும் பல வகையான அழகு பொருநதிய கோடுகளையுடைய ஞிமிறு ஒலிககும மாாபாற பிணிககபபட்ட மகளிரது கூநதலாகிய மெலலிய படுககையிலே தங்கினான் (பதி. 50:16-19). மணலையுடைய முறறததிடததே வணடுகளும் ஞிமிறுகளும ஆரவாரிததன (மது. 684). களிறு, பெண் யானை தளிர்களை உணணறகு யாமரத் தினை வளைத்துத் தந்து மதத்தால் நனைந்த கனனததில படியும் ஞிமிறுகளை ஓட்டும் (அகம. 59:7-9). சநதனம் பூசியதலைவன மார்பின கணணே அழகிய ஞிமிறுகள் ஒலிததன் (அகம் 102 10, 11). சோப்பனது மணலிடததேயுள்ள ஞாழல், புன்னை, தாழை, செருந்தி முதலிய மலர்களில வரியினை யுடைய ஞிமிறு சிறிதே ஒலிதது ஆரவாரிபப, கரிய தும்பிகள் தேனை ஊதும (கலி. 127:1-5).

# ஞெ

**ஞெகிழம்** – சிலம்பு. 'அமைதி பிறவாத முயக்கத் தாலே அடிதளர்ந்து வந்த புததியானையாகிய பரத்தை தன தலைமை நிறைந்த ஞெகிழம-சிலம்பு-ஒலிப்பக் கோபிதது நின கதவததைப் பாய்நதது தவறாகுமோ' எனத தலைவன பரததைமை கூறிக காமககிழததி ஊடினாள் (கலி 90:10-12). 'வணடுகள் மகளிா நலஙகவாநது உணபது போன்று அவர் மீது மொயக்கையினாலே தோனறிய பூசலினால ஒருததியுடைய அல்குலின மேல் கிடந்த துகிலை வேறொருத்தியுடைய உள்ளிடு மணியமைநத ஞெகிழததில கிடநத சுறா வடிவாகிய மூட்டு வாயருமபுகள் தளைததுக் கொணடன (கலி. 92: 30, 31, 37, 38). (தலைவன பரததைமையினை மனததிறகொண்டு) 'நலலநீர்மையை யுடைய நின் ஒழுககததைதத தடுககும்படி, கனமபட வநத ஞெகிழததின ஒலியாலே ஆரவாரிககும் புதிய புனல் நினனை இழுததுச் செலலக கணடாரும் உளா' எனத தலைவி கூறினாள் (கலி. 98.24-26). ஒளி விடுகினற பொனனால் செய்த ஞெகிழத்தில முத்தாகிய அரி எஙகும ஆரவாரிபப, அடியினைத துடி யொலிககு இயையப பெயாதது ஒருத்தி ஆடினாள் (பரி. 21:18-20).

**ஞெகிழி** – 1. கடைக்கொள்ளி. புகை முறபடப பிறக்கும்படி கையாலே கடைந்து கொணட சிவந்த நெருபபினையுடைய ஞெகிழியால-கடைககொள்ளியால-கரிய துளையினையுடைய குழல் துளையிடப் பட்டது (பெரு. 177-179). பனிக்காலததே, விறகாலாககின ஞெகிழியை எரிததுப பனியைப போககிக கொணடு இனிதாகத துயில்வா (மலை. 446, 447). முகிலகள், வானில பொறிவிடுகின்ற ஞெகிழி போல மினனும் (அகம. 108.6,7). மலைநாட்டினர் சந்தன விறகாலாய ஞெகிழியில் ஊனுடன கூடிய சோறறை அட்டுண்பர் (அகம. 172:13,14). பரணின மேல இருககும் குறவன கொளுததிய நறு மணமுள்ள ஞெகிழி வானத்து மீனபோல விட்டுவிட்டு ஒளிவீசும (குறு. 150.1,2). சிறுதினையைக் காககினற பரணில்மேல் உள்ள குறவன எறிநத ஞெகிழியினால் அஞசியோடிய யானை விணமீன் வீழும் ஒளிகண்டும் அஞ்சும் (குறு. 357:5-8). தலைவி பெற்றுள்ள புது மணததைக் கண்டு ஐயுறற தாயிடம அடுபபிலிட்ட சநதன விறகின ஞெகிழியை எடுததுககாட்டி 'அனனாய! இவ்விறகினை அடுப்பிலிடுதலும் இதிலுள்ள சுரும்புகள் இவளுடைய தோளில் மொயககினறன' என்று தோழி மறைததுக் கூறினாள் (நற். 55.9-12) வேழம தினைக கதிரைக் கொய்தலால கானவன் எறிநத ஞெகிழி மலையிடமெங்கும் மினனி, விசுமபிடத்தில் தோனறி மறையும் மின்னலைபபோல ஒளிரும் (நற. 393:4-7). தலைவன இரவுக குறிவரின தினைபபுனம் காபபவா ஒளி திகழகினற ஞெகிழ்யை உடையராயக் கலலெறியும் கவணையுடையராய் வில்லினை யுடையராய்க களிறு வநததெனறு ஆரவாரிபபர் (கலி. 52:13,14).

2. தீக்கடைகோல. காட்டில் வாழவோர் விண்ணைத் தீணடுகின்ற பரணின மேல ஞெகிழியாலே-தீக் கடைக் கோலாலே-நெருபபைப பிறபபிதது எரிபபர் (குறி. 225,226).

**ஞெணடு** – நணடு. பெருஞ் சுற்றததையுடைய ஞெண்டினது - நணடினது - சிறிய பாாபபை ஒதத தினை யரிசியாலாககின சோற்றைக கோவலர் நலகுவா (பெரு. 166-168). ஞெணடுகள் செறுவில ஆடிததிரியும் (மலை. 460). சிவநத ஞெணடின ஆழமான அளைகளைத தோண்டித தலைவி விளையாடுவள் (அகம. 20:4) வயலிலுளள வேம்பின அரும்பினையொதத நீண்ட கண்ணினையுடைய நீா ஞெணடானது, இரைதேரும் குருகுககு அஞசி, விரைந்து சென்று அளையுள பதுங்கும (அகம. 176:7-12). கொககினது பார்வையைக கணடஞசிய ஈரமான உடம்பினையுடைய ஞெணடு, தாழையின

வேரிடையேயுள்ள வளைக்க இடையரால் கட்டப் பெற்ற கயிற்றையறுத்துச் செல்லும் எருது போல விரைந்து செல்லும் (குரு. 117:1-4). விளையாட்டு மகளிரைக் கண்டு அஞ்சி ஈரத்தையுடைய ஞெண்டு கடலுக்குள் ஓடும் (குறு. 401:3,4). நொச்சியின் கரிய அரும்பு போன்ற கண்ணையுடைய, எக்க ரிடத்தேயுள்ள பெரியசுற்றத்தையுடைய ஞெண்டின கூட்டம், மகளிர் வெயிலிலே காயும் தினை யைக் கைவிரலாலே துழாவி வருதல போல, ஞாழ லின உதிர்ந்த மலரைக் காலால் விரித்துக் கோலம் செய்யும் (நற். 267:1-5).

**ஞெமல்** - சருகு. தழைத்த மூங்கில் ஒன்றோடொன்று உரசித் தேய்வதால, அம்மூங்கில் சொரியும் ஒள்ளிய தீப்பொறி மிக்க ஞெமல் - சருகுகள் - மறையும்படி மூண்டது (அகம். 34:6,7).

**ஞெமன்கோல்** - துலாக்கோல். செற்றமும் உவகையும் செய்யாது காத்து ஞெமன்கோல் - துலாக்கோல் - அன்ன நடுவு நிலைமை உடைத்தாய சிறந்த கொள் கைகளோடு கூடியது அறங்கூறவையம் (மது. 490-492).

**ஞெமன்ன்தெரிகோல்** - துலாக்கோல். பொருளின் அளவையறியும் கருவியாய ஞெமன்ன் தெரிகோல்-துலாககோல - அனன குற்றமற்ற மெய்ம்மொழி யினையுடையவன நன்னன் (அகம். 349:3,4,8).

**ஞெமை** - ஞெமை மரங்கள். வெள்ளிய ஞெமை மரங் களையுடையது அகன்ற காடு (அகம். 145:5). மூங்கி லின அசையும் தண்டினைத் தாக்கி ஞெமைமரத் தின இலைகளைக் கோடைககாற்று உதிர்த்தது (அகம். 358:6-8). பெண்மானை அழைக்கும ஆண மானின குரலை ஆளின் குரல் என்று கருதுதற் கிடனான பெரும்புனக் குன்றம ஞெமை மரங்களை யுடையது (அகம். 395:11-13). ஞெமை மரத்தின உச்சி யில், ஊனை விரும்பி ஒற்றைப் பருந்து இருக்கும (குறு. 285:6-7). ஞெமைகள் வளர்ந்து உயாந்த இமையமலை உச்சியிலிருந்து அருவி இழிதரும் (நற். 369:7,8). வையையின நீர் வரவால அகில், வழை, ஞெமை, சந்தனம் முதலியன வருந்தின (பரி. 12:5,8).

**ஞெமையம்** - ஞெமை மரம். காய்ந்த தலையினை யுடைய ஞெமைய மரத்தின் மீது பின்னிய சிலம்பி யின கூடு மேல்காற்றால் அசைந்தது (அகம். 111:5, 6). வாடிய உச்சியினையுடைய ஞெமைய மரங களையுடைய வழியைச் சார்ந்திருந்தது சீறூர் (அகம். 171:7,8). நெடுந்தூரம உயர்ந்த, காய்ந்த உச்சியினையுடைய ஞெமைய மரங்களையுடையது ஆள் வழக்கற்ற அருஞ்சுரம (அகம். 187:10-12). வாடிய ஞெமையத்தின் மீதிருந்த பேராந்தை ஒலி எழுப்பும (நற். 394:2,3).

**ஞெலி** - தீக்கொள்ளி. தழைத்த மூங்கில் ஒன்றோ டொன்று உரசித்தேய்வதால் அம்மூங்கில சொரியும் ஞெலியின-தீக்கொள்ளியின-ஒள்ளிய பொறி சருகு கள் மறையும்படி மூளுதல் (அகம். 39.6,7). புலிபோல முழங்கும் சிவந்த கண்ணையுடைய மறவர் ஞெலி யுடன பிடித்த நீண்ட திரளாகிய அம்பினை யுடையர் (அகம். 239:3,4).

**ஞெலிகோல்** - தீக்கடைகோல். நெடுமானஞ்சி, வீட்டின் இறப்பில செருகப்பட்ட ஞெலிகோல-தீக்கடைகோல் - போலத் தன வலி வெளிப்பட வேண்டாத காலத்து அடங்கியிருக்கவும் வல்லன. (புறம். 315.3-5). அழகிய நுண்ணிதாய விளங்கும புகை முறபடப பிறக்கும்படி ஞெலிகோலாலே கடைந்து நெருப்புண்டாக்கினா (பெரு. 178,179). ஆறலைப்போா கோலிறகோத்துக் கொண்டது போக எஞ்சிய களிற்றூனை உப்பு வாணிகர், ஞெலிகோலால ஆக்கிய சிறு தீயில வதக்கினா (அகம். 169:3-5). மெல்லிய உறியுடனே ஞெலி கோல் முதலிய கருவிகளை இட்டுவைத்த தோற பையை முதுகிற் சுமந்து இடையன சென்றான (நற். 142:2-4).

**ஞெள்ளல்** - தெருவு. 'விரைந்த தேர் குழித்த ஞெள் ளலில-தெருவில-கழுதையாகிய புல்லிய நிரையைப பூட்டிப் பகைவர் அரண்களைப பாழ்படுத் தினவன பாண்டியன பலயாக சாலை முதுகுடுமிப பெருவழுதி (புறம. 15:1-3). அட்ட வாயில ஒன்றும ஊரில செல்வர்தம விரைந்து செல்லும தோ குழித்த ஞெள்ளிலிடத்தே நீண்ட கொடிகள அசையும் (அகம. 326.3,4).

# த

**தகடு** - 1. பூவின் புறவிதழ். வேங்கையின் கரிய தகட்டினை-புறவிதழினை-உடைய பூக்கள் துறு கலலில் பரந்து கிடந்தன (புறம. 202:18-20). மருத மலர்கள், கரிய தகட்டினையும் துய்யினையும உடையன (முரு. 27,28). தலைவி, பாதிரியின கரிய

தகட்டினையுடைய மலர்களை அதிரல் மலர்களோடு சேர்த்துக கூநதலில சூடினாள் (அகம். 261: 1-3). காட்டு மல்லிகைப பூவோடு தூய தகட்டினையுடைய பாதிரி மலரை எதிரெதிரே வைதது வேயந்த கூந்தலையுடையவள் தலைவி (நற. 52:1,2). வேஙகையின பெரிய தகட்டினையுடைய மலர்கள் பெருமபாறையினகண் கோலஞ செய்வன போல உதிாநதன (ஐங. 219:1,2).

2. உலோகத்தகடு. சாளரங்களாகத் திறக்கப்பட்ட தகடுகளை ஆணிகளாலே தைதது வட்டக்கட்டில் செயயப பெறறது (நெடு. 123-127). 'அமையாத தகடு (பொற்றகடு) போலும உருவததினையுடையாய் எனக கூனன விளிககப பெறுதல் (கலி. 94:40).

**தகடூர் - ஓரூர்.** பெருஞ்சேரலிரும்பொறை, தகடூரை வெற்றி கொண்டதனால் தகடூரெறிநத பெருஞ்சேரலிரும்பொறை எனச சிறப்புப் பெயா பெறறான (புறம. 50.அடிககுறிபபு). அதியமான் தகடூர்ப் பொருது வீழநத எழினியை அரிசில் கிழார் கையறுநிலைப பாடலொனறால சிறபபித்துள்ளார். தகடூரைத தலை நகராகக கொணட அதியமான் எழினிககும் பெருஞசேரலிரும்பொறைககும் போருண்டாயிறறு. இபபோரில் எழினி வீழ்நதான. இசசிறபபுககருதியே சேரனுக்குத் 'தகடூரெறிந்த' எனறும அதியமானுககுத 'தகடூாப பொருது வீழ்ந்த' எனறும் அடை மொழிகள் உணடாயின (புறம. 230.அடிக் குறிபபு). மெல்லியல் மகளிர், தாமரையோடு நெயதற் பூவையும் கொய்து, புனநதோறும் வநது படியும் கிளிகளை ஓபபும் விருப்பததினராய்ப பாட்டினைப பாடும் பல்வகைப் பயன்களும் நிலைபெறற காட்டிடத்துள்ள ஊர்களையும வீரர் மறமே விரும பிக் காததறறொழிலைச் செயயும விற்படை நிரம் பிய காவற் காட்டையும் உடைய தகடூரைப பெருஞ் சேரலிருமபொறை அழிததான (பதி. 78:4-9). பெருஞ்சேரலிருமபொறை, அதியமானோடு சோழ பாணடியரையும் ஒருசேர வெனறும் முரசையும் குடையையும்கலனையும கைககொணடும் அடுகளம் வேட்டும அதியமான உரிமை மகளிா இரஙக அவன வலியைக கெடுத்தும் தகடூரை எறிநது மதிலைக் கைப்பற்றினான (பதி. ப.8)

**தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை - சேரவேந்தன்.** 'சேரமான தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை' காணக.

**தகர் - 1. கிடாய்.** பட்டினத்திலுள்ள நல்ல இல்லங்களில மேழகத் தகரோடு-கிடாயோடு-நாயகளும் சுழனறு திரிந்தன (பெரு. 327,336). அகனற இடத்தையுடைய மன்றிலே மேழகத்தகரோடு சிவலையும் (ஒருவகைபபறவை) கொண்டு பொருவித்து விளையாடப் பலரும் சேரத்திரணடனர் (பட். 69,77). பணடகசாலையின் முற்றத்தினகண் ஞமலியேறறையோடு மேழகத் தகரும் குதிதது விளையாடியது (பட். 140,141). பண்டம் விறபோர் மாறறாகப பெறற கலவை நெலலின பன்னிற அரிசி போனறு, தகர் விரவிய செம்மறித திரள் வெள்யாட்டுத் திரளோடே கலந்து காட்டின கண் கடல்போல ஒலிக்கும் (மலை. 413-416). நன்னன் அரண்மனை வாயிலிடததே காணபபட்ட பலவேறு கையுறைப் பொருள்களுள் நிலத்தைக கைக்கொள்ளும் செலவினையும் வளைந்த காலினையும உடைய வருடையின வலிய தலையினையுடைய பெரிய தகரும ஒனறாகும் (மலை. 502,503). தகரின (செம்மறியாட்டுககிடாயின்) கொம்பினைப போனறு சுற்றிக கடை சுருணட தலைமயிரினையுடையவா மழவர் (அகம. 101:4,5). வேறுவேறு வகையினவாய மலையில் வாழும் வருடைகளின கொமபுகள் பொருநதிய இளைய தகாகளின் ஒலியினைக கேட்டு அஞசி மயிலகள் இரிநதோடின (அகம. 378:5-7). நீணட கொம்பையுடைய வலிமிகக தகர் நீங்கிப போயினும மீணடும வரககூடும் எனனும் ஆசையாலே பெணணாடு தங்கியிருக்கும் (ஐங. 238:1,2).

2. மேட்டுநிலம். யாற்றினது அறலையொக்கும் முதுகினையும் கொழுமடலையும் உடையதும் நெடிய தகரிலே-மேட்டு நிலததிலே-நினறதுமாகிய ாநதின் இலையாலே குடில வேயபபெறறது (பெரு. 86-88).

**தகரம் - 1. மயிர்ச்சாந்து / மயிர்ச்சந்தனம்.** குளிர்ச்சியடையும்படி தகரம-மயிர்சசாநது - தடவபபட்ட ஈரமபுலராத கூநதலையுடையவர் வதுவைமகளிர் (பதி. 89:15-17). மகளிர், கூதிர்ககாலததில தம் கூந்தலில சிலவாய மலர்கள் பெயது முடிததலை வேணடித தண்ணிய நறிய தகரமாகிய (மயிர்ச் சந்தனமாகிய) விறகிலே நெருபபையுணடாககி அதில் அகிலோடு கணட சருககரையும கூட்டிப புகைத்தனர் (நெடு. 53-56). தலைவன தன சென்னியில் தணணிய நறிய தகரததைக் கமழும்படி பூசினான (குறி. 108). 'ஆயததினை நினையாளாயும் சாநது பூசிய கூநதலைவாரி மலர்களைச சூடு தறகுத் தகரமும் பூசிககொள்ளாளாயும் ஏதிலான பொய்ம மொழிகளை நமபிச் சென்றனளே' என மகட்போகிய செவிலி வருநதினாள (அகம. 117: 2, 3, 10, 11). புதுமணப பெண், தகரம் நாறும்

தண்நறுங் கதுப்பினள் (அகம். 141:13,14). 'நல்ல சிறபபுறற மணவிழாவில் அவளுககுத் தகரத் தினைப்பூசிமற்றும் பல சிறப்புககளையும் செய்விக்க மணந்து செலலாளாய்ச செனறனளே' என மகட் போககிய செவிலி வருந்தினாள் (அகம். 385:6,7). தகரம் பூசப்பெற்ற தண் நறுங் கூந்தலையுடையவள் தலைவி ( அகம். 393:23). விறலி, தகரம் அணியப பெறற கூந்தலள் (நற். 170:1). நறிய தண்ணிய தகரமும் புழுகும் அறல்பட்ட கூந்தலில் மணககும். (கலி. 93:21,22).

2. மரம். நரந்தையையும் நறும்புல்லையும் மேய்ந்த கவரிமான், சுனை நீரைப் பருகி அயலதாகிய தகர மரத்தின் குளிர்நத நிழலில் பிணையோடு தங்கும (புறம். 132:4-7). கரையில் நிற்கும் நாகம், அகில முதலிய மரங்கள் வருந்துமாறு தகரததையும் ஞாழ லையும் தேவதாரததையும் சுமந்து வரும வையை யின் வரவு, கடல் கிளர்ந்து வருவது போல் தோன்றும் (பரி. 12:4-8).

3. சாந்து. (மார்பில் பூசப்பெறுவது). வையை யில் நீராடிய மகளிரின் மார்பினின்றும வழிந்து வீழ்ந்த தகரச் சாந்தினால் வையைமணல் சேறா கியது (பரி. 12:96,97).

**தகரன் - தகரினையுடையவன்.** தகரன் - தகரினையுடை யவன் (ஆட்டுககிடாயையுடையவன்) - மஞ்ஞை யன், சேவலங்கொடியன என வேலன் போற்றப் பெறுவான (முரு. 210).

**தகவு - தகுதி.** 'காவன மரங்களை வெட்டும் ஓசை யினைக் கேட்டும் மானமின்றி இனிதாய் இருந்த வேந்தனுடன முரசொலிப்ப நீ பொருதாய் எனபது கேட்பார்கு நாணும் தகவினை-தகுதியினை- உடைத்து' எனக்கருவூரை முற்றியிருநத கிளளி வளவனிடம் ஆலததூர்கிழார் கூறினார் (புறம். 36: 9-13). 'அறததையும் மறததையும் உடையையல் லையாகத் திறவாது அடைககபபட்ட கதவினை யுடைய மதிலின் ஒரு பககத்தே ஒதுங்கியிருததல் நாணும் தகவினை உடையது' என, நலங்கிள்ளி ஆவூரை முற்றியிருநத காலதது அடைததிருந்த நெடுங்கிள்ளியிடம் கோவூர் கிழார் கூறினார (புறம். 44:13-16). தலைவியின தமையனமார்கள் மகள் கேட்டு வந்தாருடன் போருழக்கிப் பஞ்சியும் களையாத புண்ணுடையராய்க கண்டார் அஞ்சும் தகவு உடையராயக காணபபட்டனா (புறம். 353: 14-17). செலவக்கடுங்கோ வாழியாதன, இரவலரின் சிறுமை கண்டு இகழ்ந்து நோககாது தன பெருமை யின் தகவினை நோக்கி, அவர்க்குப் பரிசில் பொருள்களைக் கனவென மருளுமாறு நனவிலே நலகுவான் (புறம். 387:20-26) பெரியோர், அற மல்லாதவற்றைத் தம் உள்ளம் மயங்கி விருமபு மாயினும தாம் கேட்ட கேள்விகள் அங்குசமாக, உள்ளமாய யானையை மீட்டு அறனும பொருளும் வழாது ஆய்ந்து, தம் தகவினை உணாந்து பினனரே தாம் கருதியதை முடிப்பா (அகம். 286:8-13) காட்டுநெறிகள், பாம்பினையும் புலியினையும் கண்டு அஞ்சும் தகவினை உடையன (அகம. 318. 3,4). 'நின நெஞ்சம் தனிமையால் வருந்த நினனைப பிரிந்து செனறவிடததே மனம பொருநதி இருப்பேனாயின, யான அவ்வாறு செல்வதற்குறற தகவினகண் (தகக வினையினகண) எனனைத துறநது இரப்போர் வாராத நாடகள் பலவாகுக' எனத தலைவன் தலைவியிடம் கூறினான (குறு. 137). 'தலைவி கலஙகுமாறு அவளைத் தலைவா பிரிந்து சென்றார்; அதனை நீ உணர்ந்திருநதும உணராதாய போனறு இபபொழுதும் 'ஆறறி யிருந்திடுக' என்னும செயதியோடு வநதனை; நினனை விடுககினற தலைவரது தகவுதான எத தனமைத்தோ' எனத தோழி பாணனை வினவி னாள் (ஐங். 471). 'எமமிடததே விருபப முறறுத தாழ்நதாய போல வநது நினறு நினககுத தகவு இலலாதவற்றைச செய்யாதே' எனக காமககிழத்தி தலைவனிடம் கூறினாள் (கலி. 69 21,22). சால் புடைமை மிககவராகிய தகவு உடைய மஙகையர், (கற்புடைய மகளிர்) தமமைக கணவர் இகழநத விடததும தாம அவரை ஏததி வணங்குவாா (பரி. 20:88,89).

**தகுதி - தகவு.** 'நீ, மறுமைசசெல்வததை, தலைவனா தலை, புகழை விரும்பினும அவவிருபபங்களுககு ஏறபச் செயயக்கடவனவற்றின் தகுதியை (தகக செயலை) கேட்பாயாக' எனப் பாணடியன நெடுஞ் செழியனைக குடபுலவியனார் விளிதது உணடி கொடுததோரே உயிர்கொடுததோர்எனபபல அறங களை வறபுறுததினாா (புறம. 18:13-17). வெளி மான துஞ்சியபின பெருஞ்சிததிரனாா, 'எல்லை யளந்தறியாத வெள்ளததினகண துனபமாகிய சுழியிறபடடுச் சுழலுவதிலும் இறநதுபடுதலே நனறு; நமககுத் தகுதியும் அதுவே' எனறு கூறி இரங்கினாா (புறம். 238:17-19). 'நம் தலைவரது தகுதி நம்மை வருத்துவதோடு அமையாது அலரை யும் உணடாககியது' எனறு தலைவி கூறினாள் (ஐங். 164:3,4). 'நின புகழ எலலாம் நினக்கு இயல்பே ஆவனவனறி வியக்கபபடுவன அல்லா மையை நனகு அறிநதனமாயினும் இங்கும அங்கு

மாக அவற்றுள் சிலவற்றை யாம் கூறிட எம் பேதைமை கருதி நீ நகைத்தலும் கூடும், அந் நகைப்பைப பெறுதலும் எமக்கு ஒரு தகுதியே ஆகும்' என அடியார் திருமாலைப் போற்றிக் கூறினர் (பரி. 4.3-5).

தகுவி - தகுதியையுடையவள். 'தன தந்தையின கண் எழிலைக கெடுத்த கோசர்களைத் திதியனது அழுந்தூரில கொன்று மாறுபாடு தீர்ந்த மிஞிலி போலக களிப்புற்று நடக்கும நின நலத்தகுவியை-தகுதியையுடையவளை (பரத்தையை) -தழுவிய நின மார்பினைக் கண்டேம்' எனத் தலைவனிடம் தலைவி கூறினாள் (அகம். 196.8-13). 'என உள்ளம் விருமபும் தகுவி!' எனத் தலைவி விளிககப பெறுதல் (அகம். 259 12). 'ஏதிலாளனது காதலை நமபி இனனாமையுடைய காட்டினகண் நேற்றுப் போய விட்ட பெரிய மடப்பத்தையுடைய தகுவியாகிய என மகள, நொசசியின கீழ இழைதத வன்டலை யும காணடிரோ' என மகடபோககிய தாய வருந்திக் கூறினாள் (அகம. 275:14-19). 'மெத் தென்ற பிணிப்பு மிக்க கை சிறிது விலகினும வருந்தும் அழகிய மடப்பமுடைய தகுவி (தலைவி), கோடிட்ட சுவரினை நோககி நினைந்து கணணீர முலைமீது தெறித்து வீழப படுககை அணையினைச சேர்ந்து தங்கிப பல்லி ஒலிக்கும்தொறும் தெய வத்தைப பரவி நனமொழி கூறுவாயாக என மனம நடுஙகி மாலைக்காலத்தோடு மாறு படுவாளோ!' எனத் தலைமகன தனனெஞ்சிறகுக் கூறினான (அகம. 289.7-17) 'அறியபபடாத தேயததிலுள்ள சுரநெறியில கொணடு சென்ற இளையானுக்குப் பொருந்திய பெரிய மடப்பததையுடைய தகுவி (தலைவி) சிறபபும சீரும் இனறி சிற்றூரிலுள்ள வறுமையுற்ற பெண்டினது வறிய மனையில் சிலம்பு கழித்து மணம் பொருந்தினளோ' என மகட் போககிய செவிலி வருந்தினாள் (அகம். 369:20-26). 'தலைவனுடைய, பொனனாலாகிய தொடி யணிந்த, பொருந்திய தகுவி (பரத்தை) என்னைப் புறஙகூறுவள் எனறு கூறுவர்' என இற்பரத்தை தன்னைப் புறங்கூறிய பரத்தையின பாங்காயினார் கேட்பக கூறினாள் (குறு. 364:2-4).

தகை - 1. அழகு. 'தாளிலே தோய்ந்த பெரிய கையினை யுடைய தகை - அழகு - மாட்சிமைப்பட்டவன பாணடியன சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன் (புறம. 59.2) தகையுடைய பெருஞ்செல்வத்தினை யுடையவன் குடுமிக கோமான (புறம். 64:5,6) மகளின தகை மிக வளர்த்தலால் தாய் மகிழ்ந்தாள் (புறம். 336:10,11). நலலியக் கோடனிடம் பரிசில் பெற்ற கிணைஞன் 'பிறர் உள்ளத்தினகண் நிகழ் வனவற்றை உளளத்தால் அளந்தறியும் புலமைத தகையினை யுடையோனாகிய யான் இனி ஒரு நாளும் இரவலரை மறுத்தலறியாத வளளன்மை யுடையோரை ஒனறு பெறுதற்கு நலம் பாராட் டேன்' எனறு கூறினான (புறம. 376:19-22). மாவடு வால் ஆகிய தகை மாட்சிமைப்பட்டது ஊறுகறி (பெரு. 309,310). மதுரை அஙகாடியில், உடம்பிற்குத தகையைக கொடுககும், கருங்காலியினைச் சீவிக் காயசசின களிகலந்த இனிய நீரினையுடைய பாக் குடனே வெற்றிலையினை விறபாரும் காணப்பட் டனர் (மது. 400,401). பரத்தையர், பெருமை தருகினற தகையினையுடைய மிகுகின்ற நலத்தினை யுடையவர் (மது. 565,583). தலைவி, மலைப் பக்கத்தில் பிரமபாலே தகைபெற இயற்றியபரணில ஏறிக கிளி கடிந்தாள் (குறி. 42). தலைவியின கணகள் குவளைபபூவின சிறந்த தகையினைக கெடுககும் (அகம. 27:13,14,17). தகை சான்ற நன் மொழி (அகம. 29:11). 'நீதான பெரிய தகையினை இழந்திட்ட கணகளையுடையையாகி மிகவும் வருந் தினை' எனப் பிரிவில் வேறுபட்ட தலைவியிடம தோழி கூறினாள் (அகம. 59:2,3). மாந்தளிரை யொத்த ஆகத்தில தகைபெற அரும்பிய அணங் குடைய வனமுலையினையுடையவள் தலைவி (அகம. 177:17-19). தலைவி, தகை மிகுமாறு மாலையை யுடைய ஆயத்தாருடன மணல மேட்டில ஏறி விளையாடினாள் (அகம். 180.1-3) 'நீர்ல்லாத நீண்ட நெறியில், தனது மடப்பத்தையுடைய தகை கெட மெலிந்து நடபபளோ' என மகடபோககிய தாய் வருந்தினாள் (அகம. 219:16-18). 'அலர் தூற்றுவோ ரது செருககுற்ற சொல அழியக காதலா வருவர் என்பது உணமையாதலை, நினது சீறடிகளால் தகை பெற நடந்து காணுதற்கு வருவாயாக' எனத் தோழி தலைவியை அழைத்தாள் (அகம. 323:1-7). தகை மிகக கமுகின் புதுப பூ விரிந்தது. (அகம. 335:18-22). ஏறுகள், காஞ்சியின பூஙகொத்துககளி னினறும் உதிரும பொன்னின் தகையுடைய தாதுக கள் மேலே உதிர்ந்திட மணல மேட்டிலே துயின்றன (அகம. 341:7-11). தலைவனது சாந்தம பொருந்திய மார்பினையும் தகையினையும் மிக விரும்பி வருந்தும தலைவியின் துன்பத்தினை உணராத அன்னை வெறியாட்டயர்ந்தாள் (அகம. 388:15-19). கார் காலத்தை ஏற்ற காடுகள் முல்லை மலர்களோடு தகை முதிர்ந்தன (குறு. 188:1,2) நனமையையும் தகையையும் உடையவள் புலைத்தி (குறு. 330:1). தலைவி அடிசில் ஆக்குதலாலே புகைபடிந்து அமர்த்த கண்களை உடையவளாய்த் தகைபெறப

பிறை நுதலில் உண்டாகிய வியர்வையைத துகிலின நுனியாலே துடைத்தாள் (நற். 120.6-8). தலைவி கூந்தலைத் தகை பெற வாரினாள் (நற். 140:3)' பொற்காசினைத் தொங்க விட்டாற்போன்ற தகையினையுடைய மலாகளையுடையது கொன்றை (நற். 221:3,4). தலைவி தகையுடைய மலர்போனற உண்கண்ணினள் (நற். 370:11). மேகம் சிதறின நீர்த்துளியாலே பிடவ மலரின் மொட்டுக்கள் தகையுடையனவாய்த் தோனறின (ஐங். 461:1) 'நின நலமிகு கூந்தல் தகை கொள்ளப் புனையுமாறு காதலர் வருவர்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங. 463.1-3). தகையுடைய வண்டுகள் தாதுணணப் போது அவிழந்தது (கலி. 17:15). அறலையுடைய மணல், உதிர்ந்ததாலும் தளிராலும் காதலனைக் கூடிய காதலியின் கூந்தல போலத தகை பெறறது. (கலி. 27:5,6). 'தலைவி தகை பெறும்படி நின் தேரைச் செலுத்துவாயாக' எனப் பாணன் தலைவனிடம் கூறினான (கலி. 30: 19,20). 'போரிலே பகைவரைக கொன்று அவர் நாட்டைக் கைக்கொண்டு களிற்றின மேலவரும் தலைவரின் வீரததாற் பிறந்த தகையைக காணுங் காலம் வரையும் இவ்வாடைககாற்று நம்மை உயிரோடு விடாது போலும்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 31:9-12), தகையினையுடைய குதிரை மேலேறித் தலைவன் வலம்பட வென்று வந்தான் (கலி. 31:13,14). தகை மிக்க தொகுததுக் கூறலையும் வகுததுக் கூறலையும் அறியும் தன்மையர் சானறோர் (கலி. 39:47) தகை கொண்டது தினைபபுனம் (கலி. 40:3). தலைவன் தலைவியினுடைய எழில் மேனியின் தகை கெடும்படி நோயைச் செய்தான (கலி. 40:20). 'தலைவியின பெருத்த திரணட தோள்களின தகை வாடும்படி நீ கெடுததது அவை நின் மலையின மூங்கிலை ஒக்கும் என்பதாலோ' எனத தோழி தலைவனை வினவினாள் (கலி. 45:12-15). மலையிடததில தேனினம் மொயக்கும பூக்களையுடைய வேங்கையின தகை போல வணடுகள் மொய்ககும் புள்ளிகளையுடைய முகத்தினையுடையது களிறறினம (கலி. 48:1-6). மலையில வாடி வருந்திய சிறுதினை மழைபெயயத் தகை பெறறாறபோலத் தலைவியின் ஆய நுதற்கவின, தலைவனது அளியைப் பெற அழகு பெறும் (கலி. 53.20-23). தலைவி, பொனனைக் கூறுசெய்த தகையுடைய வகிர்களை மயிரிடததே விளங்க விட்டுப் பூவினையும் முடித்தாள் (கலி. 56:1-3). தகையினையுடைய, வேங்கைப்பூவையொத்த சுணங்கினையுடையவள் தலைவி (கலி.57:17). தலைவியின பின்னின மயிர்க்கண்ணே கிடநது அலர்நத பூக்கள், மயிர்ப்பின்னாகிய கரும்பாம்பிடத்தே கிடந்து அதன் கரிய நிறததோடு மாறுபடும் கார்த்திகை என்னும் மீனினது தகையை ஒக்கும் (கலி 64:2-4). தகை பொலிவு பெற்றது வையையாறு (கலி. 67:3). நலத்தினையுடைய தகையினையும் எழில் உண் கணணினையும் உடையவர் பரததையர் (கலி. 67:6). தகையுடைய மலர்கள் (கலி. 77:5). 'தளிர்களிடத்தே வீழநது தகை பொலிவு பெற்ற தாதுபோலும் எழிலையுடையவள் தலைவி (கலி. 77:8). தலைவன தகையுடைய கழனியுடையவன (கலி. 79.6). பரத்தையாகிய புதநியானை தன வீட்டின் கதவைச் சார்ந்து நின்று தன்னலததைக காட்டி அததகையினால் ஒருவரும போகாதபடி காலைத தடுத்து வீழககும் (கலி. 97:16,17). தகையுடைய வகையினையுடையது ஏறு (கலி. 102:17). 'ஏற்றினை வலியடஙகத் தழுவி வருத்தி அதன மேலே தோனறி நின்ற பொதுவனது தகையைப பாரராய' எனத தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 103:41-43) 'சினததோடு தன மேலே பாயும் ஏற்றின் கொம்புகளைப் பிடித்து அதன வலியைக் கெடுத்துத் தழுவும் பொதுவனது தகையைப பார்ப்பாயாக' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி 103:50-52) 'பேரூர்களிலும் சிற்றூர்களிலும் ஆரவாரத்தை உணடாககுவாள் போல மோரோடு வந்தவளின் தகையை நெஞ்சே, காணபாயாக' எனபது கைககிளைத் தலைவனது கூற்று (கலி. 109.6,7). 'நின் தாது சூழந்த கூநதல தகை பெறுமாறு கோதையைப் புனையவோ' எனத் தலைவன் தலைவியை வினவினான (கலி. 111:12,13). தகை மிக்க கிளைகளிலிருந்து பறவைகள் ஆரவாரிததன (கலி. 118:17) பால் போன்ற மேனியையுடைய நம்பி மூத்தபிரான உடுத்திய நீல ஆடையை ஒககும படி தகையைப் பெறற வெணடிரையினை யுடைய கடல வெண்மணலை வநது சூழும் (கலி. 124: 2-4). தலைவன துறத்தலின தலைவி தகை பெற்ற தொன்னலம் இழநதாள (கலி. 124:11). 'கடலில பிறந்த முத்தினது தகையை ஒககும் முறுவலையுடையாய' எனத் தலைவி விளிக்கப பெறறாள் (கலி. 131:22) 'இலங்கெயிற்றையும் இன்னகையையும் உடைய மாதரின தகையாலே அவளைக் கொண்ட என் நெஞ்சை எரிககின்ற காமத்தீ உயிர போகும அளவிலே அமையாது சுடுதலைச செய்யும்' எனத தலைவன வருததமுற்றான் (கலி. 139:26-29). பிரிநத தலைவன் வரக்கணட தலைவி, தன் மெய்யிடததே தகையுண்டாக, மனதநிடத்தே மகிழசசியுண்டாக அவனைச் சேர்ந்தாள் (கலி. 147.70,71). செவ்வேள் ஞாயிறறு மணடலததினது எழுசசியில் உண்டாதம் நிறம் போன்ற தகை உடையவர்

(பரி. 5:12). தோன்றியின் கொடியில் தோன்றிய மெல்லிய தகையையுடைய செந்நிறமலர்கள் பரக்கத் திருப்பரங்குன்று கார்காலத் தன்மையைப் பெற்றது (பரி. 14:15-17). தகையுடையது வையை (பரி.20:26). தகையினையுடையது கூந்தல் (பரி. தி.1: 60). சிறந்த தகையினையுடையவர் மகளிர் (பரி. தி. 2·81).

2. தகுதி/தகைமை. 'தணியாத வண்மையுடைய தகை-தகுதி - மாட்சிமைப்பட்டவன் முதுகுடுமிப் பெருவழுதி (புறம். 6:26). மெல்லிய தகையுடையது மயில் (புறம். 145:1). வலித்தகை அரக்கன் என இராவணன் குறிக்கப்படுவான் (புறம். 378:19) இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் தமிழகம் விளங்குமாறு தன் செங்கோலை நிறுவித் தகை சான்ற சிறப்போடு ஆரியரை அடக்கினான் (பதி. ப. 2:5-7). முல்லை முகையின் தகையினையுடைய இடைமுரியாத அரிசிப் புழுக்கலைப் பொருநர் பெற்றுண்டனர் (பொரு. 112-114). தன்னையே ஒத்த தகையையும் விருப்பத்தையும் உடையவன் காதலன் (அகம். 117:13). மூங்கிலின் தகை உடைய தாய்க் காண்டற்கு இனிய மென்தோளினை உடையவள் தலைவி (அகம். 181:24,25). மயில்கள், இனிய குரலினையுடையவாய் ஆடும் தகையுடைய அழகின் சிறப்பினை யொப்பத் தலைவி ஆயத்துடன் கூடிச் சுனையின்கண் நீராடினாள் (அகம். 358:2-7). தலைவனது நெஞ்சம் மாட்சிமைப்பட்ட தகையை உடையது (அகம். 184:4). 'என் பேதைமையால் பெரிய தகையை (உரிமையாகிய தகுதியை) பொருந்தித் தலைவன் இங்கே வாராதவண்ணம் செய்த செயலொன்றை யான் உடையேனோ' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 230:2-4). கண்டார்க்கு விருப்பம் வரும் தகையினை உடையது கானங்கோழி (நற். 21:8). தலைவி, தகையுடைய அழகிய மலர்மிக்க கழிமுள்ளியின் பூங்கோதையைக் கூந்தலில் சூடினாள் (நற். 245:1-3). தலைவி தகையுடைய வனப்பு மிக்க கூந்தலில் வேங்கை மலர்களை அணிபெறச் சூடினாள் (நற். 313:3,4) 'நாடி நந்தோராகிய தலைவர், நின் தகையுடைய எழிலை வாட்டுநர் அல்லர்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 462:4,5) இலைகள் பசுமை இகந்து தீந்த கொம்புகளாலே இன்பத்தினின்றும் நீங்கிச் சென்றாரைத் துன்புறுத்தும் தகையுடையன காடுகள் (கலி. 11:10,11). ஞாயிறுமலையின் மேலேயுள்ள மூங்கில்கள் வாடும்படிசுடுதலானே செல்வார்க்குச் சேருதலரிய தகையினையுடையது காடு (கலி. 11:14,15). தலைவன் கூடியிருக்கும் காலத்துச் செவ்வியைத் தோற்றுவித்த மலரை யொத்த தகையினையுடைய தலைவியின் கண்கள் அவன் பிரியும்காலத்துப் பழியைத் தூற்றி அழுதன (கலி. 25:13,14). 'தலைவன் தனக்குரிய ஆளும் தகையைக் கைவிட்டு என்னை நோக்கிக்கூறும் மாட்சிமைப்பட்ட சொல்லைக் கேட்பாயாக' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 47:7,8). 'நின் அமையாத பரத்தைமை மேலிடுகையினாலே, நாள்தோறும் நின்னோடு புலக்கும் தகையுடைய பெண்டிரின் (பரத்தையரின்) ஊடலை வேண்டுமானால் சென்று தீர்ப்பாயாக' என்று தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 73:19-21). 'பரத்தையரைப் புணர்ந்ததற்குச் சான்றான தலைமாலையோடு என் மனைக்கு நீ வரும் நிலைமை, இவள் நலமானது நாம் பிரிந்தால் கெட்டும் புணர்ந்தால் பொலிந்தும் நாம் மனத்திற் கொண்ட கருத்தாயிருக்கும் என்று நீ குறித்த தகையின் விளைவு போலும்' எனத் தலைவி தலைவனை வினவினாள் (கலி. 78:11-14). 'பரத்தையரின் கூந்தல் மணம் நாறும் மார்பினை உடையையாய் எம் இல்லிற்கு நீ வருதல், எம் தொடர்ச்சி நீங்கின் இவள் நலம் கெடும் என்று நீ குறித்த தகை போலும்' எனப் பரத்தைமைத் தலைவனிடம் தலைவி கூறினாள் (கலி. 78:15-18). ''பரத்தையின் தொடியினால் உற்ற வடுவினைக் காட்டி எம் இல்லிற்கு நீ வருதல், 'யான் சென்றேனாயின் மகிழ்ந்து செல்லாமல் வருத்தின் கெடும்' என்று நீ குறித்திருக்கும் தகையோ'' எனத் தலைவி தலைவனை வினவினாள் (கலி. 78:19-22). 'தன் செவ்வியால் அலராது கையினால் வலிய அலர்த்துதலின் முகை அலர்ந்தாற்போல் இனிதல்லாத முயக்கத்தில் எமக்குத் தண்பனிக்காலம் கொடிதாயிருக்க நும்மையின்றித் தங்குதலும் தகை உண்டோ' எனத் தலைவி தலைவனை வினவி ஊடல் தீர்ந்தாள் (கலி. 78:25-27). புலக்கும் தகையுடைய புதியவள் பரத்தை (கலி. 82:24). 'துயிலாத கண்கள் துயில் கொள்ளும்படி நாம் இனிச் சிறிதும் மேலாகக் கூறும் கூற்றை உடையேமல்லேம் என்று தோழி கூறும் தகையுடைய கூற்றினை நினைத்துப் பார்ப்பாயாக' என்று தலைவி நெஞ்சொடு கூறி ஊடல் தீர்ந்தாள் (கலி. 87:14-16). 'பெடையை யொத்த மகளிர், தம் கண்கள் பொலிவு பெற்று ஏறுகோள் விழாவின் அழகை நின்று பார்க்குமாறு பரணைப் பெறுவார்களாகில் அது தகையுடையது' என்று ஆயர் கூறினர் (கலி. 102: 15, 16). வலியின் தகை கெட்டுத் தன் வறுமையால் ஒருவன் இரப்பவனுடைய நெஞ்சம்போல, மரங்கள் பொலிவழிந்தன (கலி. 120: 4, 5). உலகம் கொண்டாடும் தகையினையுடையது மதியின் தோற்றம் (கலி. 126:2).

'தலைவன் காட்டைக் கடந்த போயினானோ; அன்றி அன்புறாத தகையை எனக்குச் செய்து இவ் வூரிடத்தே இருககினறானோ' எனப் பெருந் திணைத் தலைவி கலங்கி மொழிநதாள் (கலி. 147: 38,39). நீராட்டு விழாவிற்குரிய தகைமிக்க வையை நீரையே விளையாட்டுப் போரினை நிகழவதற் கேற்ற போர்க்களமாக மைந்தரும் மகளிரும் குறித்தனர் (பரி. 6: 29, 30).

3. கூறுபாடு. மறத்தகை - வீரக்கூறுபாடு - உடை யவர் மறவர் (புறம். 63:4). மறததகை மனனன சேரலாதன வாள் வடக்கிருந்தனன் (புறம். 65:10). தனனை நினைந்து வருவாருடைய வறுமை நீங்கத் தவிராது கொடுககும் தகை அமைந்த வண்மை யினை உடையவன் நள்ளி (புறம். 158:15, 16). ஆண்மையினும் சூழ்ச்சியினும தளராத ஆண்மைத் தகை பொருந்திய ஊககத்தினை உடையவன நாலை கிழவன் (புறம். 179:9,10).

4. தன்மை. மரங்களில் விளைந்த தீம்பழங்கள், வழியிலே செல்லுகினற மக்களுககு நடந்து செலலு தலால் உண்டான ஓய்ந்த தகையை-தனமையை- தடுககும் (பதி. 60: 5–7). 'ஆண்மான, அறுகினது மெல்லிய கொத்துக்களைப் பெண்மானுககு அருத்தி மணல் சார்நதகரைகளில் அசைவிடும கவு ளினையுடையவாய் அது துயிலிடத்தைக் காக்கும் பெரிய தகையினைக் கணடு தளர்நத என் நெஞ்சம் இன்பம் அடையுமாறு தேர் விரைநது செலவதாக' எனத் தலைவன பாகனிடம கூறினான் (அகம. 34: 4-10). அழகின் தகையுற்ற வளம பொருந்திய தளிர் களையுடையது மாமரம் (அகம. 37:6,7). முடி வெல்லை இதுவெனறுஅறியப பெறாத தகையோடு வருவது வாடைக காற்று (அகம். 237: 10). 'துணை யைப பிரிந்துள்ள நாம் உய்யும் தகை ஒனறு மிலலையே' என்த தலைவி தோழியிடம கூறினாள் (அகம. 341: 1). 'கொடுஞ்சுர நெறியில் என்னை அழைத்து வந்த நீ தலைவியின் அழகிய மடபப மாகிய தகையினை நினைப்பாய் 'ஆயினை' என இடைச்சுரத்துககண் தலைவன் தன்னெஞ்சிடம் கூறினான் (அகம. 365: 9-11,15). 'இராககாலத்தில் பொய்வலாளன் ஆகிய தலைவன் என் மெய்யிலே அணைதலைப் பொருந்திய மெய்போலும் தகை யுடைய பொய்யாகிய கனவு மருட்டத் துயில் உணர்ந்து தலைவனென்று எண்ணிப படுக்கையைத் தடவினேன்' எனத் தலைவி தோழியிடம் கூறல் (குறு. 30:1-4). தலைவியின கணகள் பூவினை ஒத்துச் சுழலும் தகையினை உடையன (குறு. 72: 1, 5). புன்கினது அழகின தகையுடையது ஒளளிய தளிர் (நற். 9:5). எழில்தகையினது இளமுலை (ஐங். 317:2). 'தலைவன் களிற்றை யொத்த தகை கெட்டு, மனமுடைந்து, உள்ளம் உருகி நின்றான்' எனக் குறையுற்று நின்ற தலைவனைக் குறிதது்த் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 60:9-11). உல கெலாம் தன ஒளி பரக்கும் தகை உடையதாகிக் கடலில் தோன்றும் திங்கள் நிலவொளியைப பரப பியது (கலி. 121:1-3), 'என மென்தோளை மெலி வித்தானது வடிவழகின் தகையை விரும்பிக் காணபதல்லது அவன செய்த நன்று தீதென்று கூறு கின்ற பிறவற்றைக காணேன' எனபது தலைவி யின கூற்று (கலி 142:49,50). கொல்லும் தகை யினை உடையவர் அவுணர் (பரி. 5:6,7). வையை யின்கண மகளிரும் மைந்தரும் நாளும் ஆடிமகிழும காட்சி பொருகளம் போலும் தகையினை உடை யது (பரி. 11.58-61). வையை யாறு மககள விரும்பும் தகையினை உடையது (பரி. 20.26). சுனையின் நடுவே மூழகி எழுநத மடநதையொருததி தன் கணவனிடம நீரில அழுந்துகின்ற தனககு மூங்கில புணையைத தருமாறு வேண்டிட அவன அதனைக கொடாதே அரக்கு நீர் வட்டினை எறிய அதனால் புணைபெறாது கலங்கிய அவளின் அலலல கண்டு அவன நீரில் பாயநது அவளைத தழுவும் தகை யினை உடையது பரஙகுனறிலுள்ள சுனை (பரி. 21:39-45). இருநதையூரின ஒரு பக்கததே கயங்கள், வானம் விரிநது கிடககும் தகைபோல விரிநது கிடக்கும் இடமுடையவாய் இருந்தன (பரி. தி.1:10- 13). பாணடியன, மதுரை நகர மாந்தரோடு வையைப புனலில் ஆடியது, இநதிரன அமரர்கள் புடைசூழ ஆகாய கங்கையில் நீராடிய தகையை ஒக்கும (பரி. தி. 2:90-96).

5. மாலை (ஆகுபெயர்). முகைவாய் நெகிழ்ந்த தகை - கட்டியமாலை - மார்பில சூழ்நது கிடநதது (முரு. 139). மைந்தர் தகை பொருநதிய மார்பினை உடையவர் (பரி. 22:23).

6. மேன்மை. கரிய மலரின் தகையுடைய - மேனமை யுடைய - அழகினை இழநத கணணினை உடை யவள் தலைவி (அகம. 69:1,2). தாழந்த கிளை களை யுடைய மருதமரம் தகை பெற அழகு பெற்றிருக்கும நீர் சூழ்நத களம் பொலிவுபெறு மாறு உழவர் போரினைப் பிரிததுக் கடாவிடுவர் (அகம. 366:1-3).

7. புகழ். தாழாத ஈகையாற் பிறக்கும் தகையை - புகழை - விருமபுபவனே எனச் சேரமான கட லோட்டிய வேலகெழு குட்டுவன் விளிக்கப் பெறு தல (புறம. 369:28).

8. பெருமை. தலைவியின் கண்கள், கொற்கைப் பெருந்துறையில் வைகறைப் பொழுதில் மலரும் நெய்தல் போலத் தகை - பெருமை - மிக்குடையன (ஐங் 188).

9. கட்டுதல். தகைத் தாரை - கட்டிய மாலையை - உடையவன் கிள்ளி வளவன் (புறம். 69:14). தகை - கட்டுதல் - (பரி. 11:64; 20:56; 21:55).

10. தகைத்தல். மலையினின்று இழிதரும் அருவி காட்டினிடத்து ஓடும் அழகை நோக்கிய தலைவி அது தலைவனை எதிர்ப்பட்ட இடமாதலின் அடக்கவும் தகை - தகைத்தல் - அளவில் நில்லாமல் அவள் கண்கள் நீரைச் சொரிந்தன (நற். 17:1-5). தகை - தகைத்தல் - (நற். 111:4; 249:8).

11. தகைதல். வையையில் நீராட விழைந்தோருள் சிலர் தாரை, தகை வகையால் - தகைந்த வகையால் - அணிந்தனர் (பரி. 20:28).

12. உள்ளடக்குதல். எருதிற்கு வைக்கோலிடும் சாலை கேணிகளை தகை - உள்ளடக்கிய - முற்றத் தினையுடையது (பட். 51,52). 'பெருந்தகை' 'நெடுந் தகை' காண்க.

**தகைக்குநர்** - தடுப்பவர். 'தலைவியின் வளை நெகிழ்ந்து வீழினும் வீழ்க; நீ முன்னிய இடத்திற்குச் செல்வாயாக; நின்னைத் தகைக்குநர் - தடுப்பவர் - யாரோ' என்று வாயில் வேண்டிச் சென்ற தலைவனிடம் தோழி கூறினாள் (அகம். 46:14-16).

**தகைப்பு** - 1. அணிவகுப்பு. புலால் நாறும் வாளை மறவர் தம் வலக்கையில் ஏந்திப் பகைவர் அரண்களை அழிக்கும் தூசிப்படையால் பகைவரது தகைப்பில் - படையின் அணிவகுப்பில் - பாய்ந்து வெற்றி கொள்ளும் தானைக்குத் தலைவன் பல் யானைச் செல்கெழுகுட்டுவன் (பதி. 24:3-5). பகைவரது மிக்க மாறுபாட்டைத் தடுத்த, ஒழுங்கை யுடைய பகைவரால் குலைத்தற்கு முடியாத தகைப்பினை உடையவர் மள்ளர் (பதி. 66:9,10,14).

2. கட்டு [பொறியெனவும்கூறுவர்]. எந்திரத் தகைப்பும் - கட்டும் - எய்யப்படும் அம்பு அமைக்கபபட்ட கோட்டைவாயிலும் உடையது எயில் (பதி. 53:7).

3. மாளிகைக் கட்டணம் (கட்டடம்). புலவர், பொருநர், அந்தணர் என்போருக்கன்றிப் பிறர் புகுதற்கரிய தகைப்பில் - கட்டணத்தில் - அமர்ந்திருந்த கூத்தர் புறஞ்சிறையிடத்தே வரக்காணின் தாழ்க் காது பரிசிலை நல்கும் ஈகையில் அமையாத கொள்கையுடையவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதி. 64:7-11). முன்றிலையும் திண்ணையையும் புழையையும் இடைக் கழிகளையும் உடையது மாடம். (பட். 141-145).

**தகைமை** - 1. தகுதிப்பாடு. 'எம்மை அணங்கியவளே, நீ யாரையோ' எனத் தலைவன் தலைவியை அணைத்துக் கொண்டானாக; தலைவியும் தன் மனத்தோடு படாத கடுஞ்சொற்களைக் கூறி அவன் கையை அகற்றி விலகி நின்றாள்; அவளது தகைமையை - தகுதிப்பாட்டை - கண்டு தலைவன் தன் காதலை உள்ளடக்கிப் பிறிதொன்று சொல்லும் வலியற்றவனாகி வருந்திச் சென்றான் (அகம். 32: 8-15). தலைவி பந்தரின் கீழ் பந்தினை எறிந்து விளையாடி இளமைத் தகைமையோடு திரியும் இயல்பினள் (அகம். 275:3-6). 'நீ தலைவியைப் பிரிந்து சென்றது கொடியதாயிருந்தது; நினது வன்மை மிக்க அத் தகைமையை மறந்து விடுகின்றேன் காண்' எனத் தோழி தலைவனிடம் வெகுண்டுரைத்தாள் (நற். 270:9-11). 'நம்மோடு கொண்ட நட்பிடையே தோன்றிய தம் தகைமையால் நம்மை வருத்துவது அல்லது தம் பகைமையால் வருத்துவதில்லை; ஆயினும் அவர் பகைதரும் வருத்தத்தினும் அவர் தகைமை தரும் வருத்தமே கொடியதாகும்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 137:13-17).(2)

2. அழகு. துடியின் ஓசைக்கு இயைய அடியைப் பெயர்த்துத் தோளை அசைத்துக் கள்ளுண்ட மகிழ்ச்சி தடுப்ப ஆடுவாளது தகைமை - அழகு - காரணமாக அவ்வாடலைத் தன் தலைவனோடு பார்த்துக் கொண்டிருந்த தலைவி ஒருத்தி தலைவனை வெகுளிமிக்க பார்வையோடு சினந்தாள் (பரி. 21:19-22).

**தகையவர்** - அழகினையுடைய மகளிர். தகையவர் அழகினையுடைய மகளிர் கையிலிட்டதாட் கூட்டாகிய நீலக் கடைச் செறிபோலத் தும்பி, காந்தளின் முகைமேலே அமர்ந்து அது அலரும் காலத்தைப் பார்த்திருக்கும் (கலி. 43-8,9).

**தகையவள்** - தகைமையையுடையவள். 'மீளாத காம நோயாலே வருந்தி அமையாத தகையவள் - தகைமையை உடையவள் - நின் அடியைப் பணிந்து சேராத பகைவர்போலப் பெரிதும் நடுங்கினாள்; அவள் அழகைப் பெறும்படி நின் தேரைச் செலுத்து

வாயாக' என்று பாணன் தலைவனிடம் கூறினான் (கலி. 80:19-21).

**தகையள்** - அழகையுடையவள். 'இவள், வட்டியை ஒரு கையால் அணைத்துத் தோளை இளமைச் செருக்குத் தோன்ற வீசித் திருந்தாத சுமையினை யுடையளாய் மகரககுழை, ஆடுதல் உண்டான தகையள் - அழகையுடையவள்' - என்று வினைவல பாங்கின் தலைவன் அத்தகு தலைவியைக் கணடு கூறினான் (கலி. 109:13-15).

**தகையன்** - தகைமையையுடையவன். 'பிட்டங்கொற்றன், இனச்சேக்களைத் தொழுவோடே வேண்டினும் களத்திலுள்ள நெலலைக குவையாக வேண்டினும அருங்கலன்களைக் களிறறோடு வேண்டினும் நமக்கேயன்றிப் பிறர்க்கும அத்தன்மையவாய அறஞ்செய்யும் தகையன் - தகைமையையுடைய வன -' எனக் காரிககண்ணனார் அவன் கொடை யைச் சிறப்பிப்பர் (புறம். 171:7-11). சிவ பெருமான், ஆணும் பெணணுமாகிய இருவகை யுருவம் ஒருருவிற் பெறறு அவ்விருவகை உருவிற் கேற்ப ஈரணிகளாற் பொலிந்த எழில் - தகையன (பதி. க. வா. 7,8).

**தகையார்** - அழகினையுடையார். கொடியை ஒத்த தகை யார் - அழகினையுடையார் - காவிடத்து நினற பூங்கொடியை வளைத்து அதிலுள்ள கொத்துக் களைப் பறிக்க அங்குள்ள வண்டின் கூட்டம் உடைநதது (கலி. 92:25-29).

**தகையியலார்** - அழகுத்தன்மையுடையவர். வளை யணிநத முன்கையினையுடைய மகளிரும் அவர் மென்தோளில் தஙகி அன்பொததவராகிய தாரணிந்த மார்பினையுடைய தகையியலார் - அழகுத்தன்மையுடையவர்-ஆகிய ஆடவரும் பரங குன்றிலுள்ள சுனையில் நீராடினர் (பரி. 17:33-39).

**தகையினான்** - தகைமையுடையவன் (பாண்டியன). யாவரானும் விரும்பபபட்ட தகையினான் - தகை மையை யுடையவன் (பாண்டியன்) - யாறு வையை (பரி. 7: 1).

**தகையோள்** - தகைமையுடையோள். மூங்கில் உயர்ந்த சுரனிலுள்ள அரிய வழியிடத்தும் தகையோள்- தகைமையுடையோளா-பண்புகள் தன்மை செய்தன எனத் தலைவன் இடைச்சுரத்துககண தலைவியின் குணத்தை நினைநது கூறினான் (ஐங். 327).

**தகையோன்** - அழகுடையோன். பாணர் எயிற் பட்டினத்தை அடைவாராயின் கிடங்கிற் கோமா னாகிய அரும்பு நெகிழ்நத மாலையினையுடைய தகையோனை - அழகுடையோனை - பாடிப் பினனர் பரதவர் தந்த தேறலைச் சூட்டோடு மனைகள் தோறும் பெற்றுண்பர் (சிறு. 153-163).

**தகைவு** - தகுதி. உலகத்துள் இதனைக் கண்டவர் இல்லையெனக் கருதித தகைவு - தகுதி - இனறித் தாம் நெஞ்சறிநது செய்த கொடிய தீவினைகளைப் பிறர் அறியாமல மறைபபினும் அததீவினையை அறிவாருள் அவர் நெஞ்சைக் காட்டிலும் அறிநது சானறு கூற வலலார் பிறரில்லை (கலி. 125.1-4).

**தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்** - புலவர், அந்தணர். தங்கால எனனும் ஊரினரான ஆத்தி ரேய கோததிரத்துச் செங்கண்ணனார் என இவர் பெயர்ககு விளககம் காணலாம். தங்கால எனபது பாண்டிநாட்டில் இககாலததுத் திருத்தணகால என வழங்கும. இவா பாடியதாக நறறிணையில் 386 - ஆம் பாடல ஒனறே யுள்ளது. குறிஞ்சித் திணையில முதல், கருப்பொருள்களுடன மருதத் திணையுரிப் பொருளைப பொருததி இவர் அப பாடலை இயறறியுள்ளார். பரததையிற பிரிநது மீணட தலைவனுககு வாயில் நோநத தோழி, தலைவியை முகமபுகுமாறு செயவிகக வேண்டிப பேசுவதை இவர்பாடல நயமுறப புனையும. பனறியொன்று கானவர் உழுது விளைதத தினைக் கதிரைத் தினறு, மலைக்குகையிலுள்ள புலிககு அஞ்சாமல சாரலிலே துஞ்சும் என்ற புனைவினால, தலைவன் பரததையரைத் துயத்து, உலக இகழ்ச்சிககு அஞ்சாது தலைவியின் முனறிலில் காத்திருக்கின்றான எனற உள்ளுறைக கருத்தை இவர் உணர்த்தும பானமை நினையத்தகும்.

**தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்** - புலவர். பாண்டிய நாட்டிலுள்ள திருத்தணகால் எனனும் ஊரினா; பொனனணிகலனகள் செய்யும் கொலலர் மரபினர்; வெணணாகனார் என்னும் இயற் பெயரினா. இவரது இம்முழுபபெயரோடு காணப் படுவது நறறிணையில் 313-ஆம் பாடலொன்றே. மறறு, தங்கால் பொறகொலலனார் என்னுமளவில் பெயர்கொணடு அகநானூறறில இரு பாடல்கள் (108,355). உள்ளன. அவற்றில ஒனறின்கீழ் (355) தங்கால முடககொற்றனார் என்ற பெயர் வேறு பாடமாகக் காட்டபபட்டுள்ளது. அவ்வேறுபட்ட பெயரோடேயும் ஒரு பாடல் (48) அகத்திலேயே அமைநதுள்ளது. தண்கால் பூட்கொல்லனார் என்ற

பெயரோடும் தண்கால் பொற்கொல்லனார், முடக்கொல்லனார்என்ற வேறு பாடங்களோடும் புறநானூற்றில் ஒருபாடல் (326) காணப்படுகின்றது தங்கால் முடக்கொல்லனார் என்ற பெயருடனும் குறுந்தொகையில் ஒரு பாடல் (217) உள்ளது. இப்பெயர்களையெல்லாம் ஒருவர் பெயர்களாகவே உ.வே.சா (குறு), பி நா (நற்), வையாபுரிப் பிள்ளை (ச.இ) ஆகியோரனைவரும் கொண்டுள்ளனர். பூண்களைச் செய்யும் பொற்கொல்லனாரே பூட்கொல்லனார் எனவும் பெயர்பெற்றிருப்பர். இப் பெயர்க்குப் பணித்தட்டார் எனப் பொருள் படலாம் என்பர் பி.நா. (நற் பாடினோர் வரலாறு: தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்). எனவே, பொற்கொல்லனார் என்பதும் பூட்கொல்லனார் என்பதும் பொருள் ஒத்த பெயர்களேயாம். முடக்கொல்லனார் என்பது இவர்க்கு உடற் குறையால் வாய்த்த பெயராகலாம். (இப்பெயரே எழுத்துப் பிழையால் முடக்கொற்றனார் என்றும் ஆகியிருக்கலாம்). இவருடைய பாடல்களாக உள்ளவை மேற்குறித்த புறநானூற்றுப் பாடலொன்றும் அகநானூற்றுப்பாடல்கள் மூன்றும் குறுந்தொகைப் பாடலொன்றும் நற்றிணைப் பாடலொன்றும் ஆக ஆறு பாடல்களே. மூதின்முல்லைத் துறையில் அமைந்த புறப்பாடலில் மறக்குடியொன்றின் இருப்பினையும் அவ்வில்லத்தோர் பண்புகளையும் இவர் குறிப்பிடுவர். ஏனை அகப் பாடல்களைக் குறிஞ்சி, பாலை ஆகிய இருதிணைகளில் இவர் பாடியுள்ளார். செவிலிக்கு அறத்தொடுநிற்கும் தோழி கூற்றாக இவர் பாடிய அகப்பாடல் (48) மிக அழகியது. இளவேனிற் காலத்தை இவர் அழகும் இனிமையும் அமையப் புனைந்துள்ளார் (அகம். 355). காயாம் பூஞ்சினைக்கருகே மலர்ந்துள்ள காந்தட்பூங் குலைக்கு மயிலைக் கண்டு வெருவிப் படம் விரித்த பாம்பினையும் அக்காந்தட்பூவில் தாதுண்ணும் வண்டிற்குக் கையின்கண் வைத்தாடும் வட்டினையும் இவர் அழகுற உவமிப்பர் (அகம். 108). வேங்கைப் புதுப்பூக்களின் அழகிற்குப் பொன்செய் கம்மியனின் கைவினையழகினை உவமித்திருப்பது (நற். 313) இவர் தம் தொழில் சார்ந்த புலமையை உணர்த்துவதாகலாம்.

**தங்கால் பொற்கொல்லனார்** - புலவர். தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்' காண்க.

**தங்கால் முடக்கொல்லனார்** – புலவர். 'தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்' காண்க.

**தங்கால் முடக்கொற்றனார்** - புலவர். 'தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்' காண்க.

**தங்கை** - இளைய சகோதரி. பாணர் ஆமூரை அடைவாராயின் அங்கு உழவரது தங்கையாகிய, பிடியினது கை போன்ற மயிர் வீழ்ந்து கிடக்கின்ற முதுகினையும் தொடிக் கையினையும் உடைய மகள், தன் பிள்ளைகளைக் கொண்டு அவரைப் போகாதுவிலக்கி வெண்சோற்றை நண்டும் பீர்க்கங்காயும் கலந்த கலவையோடு தர அவற்றைப் பெற்றுண்பர் (சிறு. 188-195). 'கானவரது தங்கையும், மூங்கிலையொத்த மென்றோளினையும் மழைக் கண்ணினையும் அசையும் இயல்பினையும் உடைய கொடிச்சியுமாகிய தலைவிக்கு அருள் செய்வாயாயின் அவளை நும் ஊர்க்கு வரைந்து கொண்டு செல்வாயாக' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 132:5-8,14). 'கானவர் தங்கையாகிய பெருந்தோளினையுடைய கொடிச்சி வாழும் ஊர் மலையினிடத்தே உள்ளது. (குறு. 335:5-7). 'தும்பியே, தலைவரது நாட்டிலுள்ள நெடுவரையைச் சேருவாயாயின் தலைவரிடத்துச் சிறுதினையிடத்தே களையெடுப்பாருடைய தங்கை தன் சுற்றத்தாரிடத்தினின்றும் நீங்காளாயினாள் என்று கூறுவாயாக' எனத் தலைவி தும்பியைத் தூது விடுத்தாள் (குறு. 392). 'கொலை வில்லையுடைய எயினரது தங்கையே, நின் முலையிடத்துள்ளது சுணங்கென்று நினைக்கின்றாய் நீயே, அணங்கென நினையும் என் அணங்கு நெஞ்சே' எனத்தலைவன் தலைவியை நலம் பாராட்டினான் (ஐங்.363). முள்ளம் பன்றியின் இறைச்சியை உணவாகவுடைய எயினரின் தங்கையாகிய மாமைநிறம் பொருந்திய எயிற்றி எனத் தலைவி குறிக்கப் பெறுவள் (ஐங். 364:1,2).

**தங்கையர்** - தங்கைமார். கடலில் வலைகளை இழுத்துப் பற்றித் திமிலோன் கொண்டு வந்த மீன்களைத் தழையணி அணிந்த அலகுலையுடைய செல்வத் தங்கையர் விழா அயரும் தெருக்களில் விலை கூறி விற்பர் (அகம். 320:1-4).

**தச்சச்சிறாஅர்** - தச்சருடைய புதல்வர். தச்சச்சிறாஅர் - தச்சருடைய புதல்வர் பிறர் விரும்பும் படி செய்த சிறுதேரினைப் பிள்ளைகள் உருட்டித் திரிவர் (பெரு. 248,249).

**தச்சன்** - தச்சுத்தொழில் செய்பவன். ஒரு நாளைக்கு எட்டுத்தேரைச் செய்யும் தச்சன் -தச்சுத் தொழில் செய்பவன் -ஒரு மாதங்கூடிக் கருதிச் செய்யப் பட்ட தேர்க்காலை ஒத்தவன் அதியமான் நெடுமானஞ்சி (புறம். 87). மரத்தைத்துணிக்கும் தச்சன் பயந்த மழுவையுடைய கைத்தொழில் வல்ல காட்டகம் சிறுவர் செல்லின் அக்காடு அவர்க்குத்

தவறாமல் பயன்படும் (புறம். 193 8-11). 'உன் தந்தையின தந்தைககு இவனுடைய தநதையின தந்தைபோரில கணணிமையாமல நினறு தசசனால் ஆர்ககாலைச் சேர்த்து எறியபபட்ட குடம போலப் பகைவர் எறிந்த படைகளைத் தானேறறு மாண் டான்' என மறவன் ஒருவனது குடிசசிறபபு மன்ன னிடம் உரைககப்பட்டது (புறம. 290.3-8). தச்ச னால் செய்யபபட்ட சிறு குதிரை பூட்டபபெறற சிறுதேரைச் சிறுவர்கள ஏறிச செலுத்தி இனப மடையாராயினும கையினால் ஈர்த்து இனபுறுவர் (குறு. 61:1-3).

**தசம் - பத்து.** நான்கு தசம் எய்திய - நாற்பது ஆண்டு கழிந்த - யானையின் கொம்பினால் கட்டில் செயயப் பெற்றது (நெடு. 115-117).

**தசும்பு - 1. மிடா (சால்) தாழி.** வேட்டுவன கொண்டு வந்த மான்தசைசொரிநத கடகமும் இடைமகள் தயிர்கொணடு வந்த தசும்பும்-மிடாவும்-நிறையு மாறு உழவர் மகளிர் வெணணெலலை முகந்து கொடுப்பர் (புறம். 33:1-5) மணணாற செய்யப பட்டுச் சுடப்பட்ட தசும்பில தயிரை மத்தாற் கடைந்தனர் (நற். 84:6,7).

2. **மதுக்குடம்.** கரிகாற் பெருவளத்தான் துணை யாய்க் கூடினஇனததோடு கூடித் தசும்பினை - மதுக்குடஙகளை - நுகர்நது தொலைத்துப பாண் சுற்றத்தைப் பாதுகாத்தான் (புறம. 224:2,3), நம்பி நெடுஞ்செழியன, இனிய செறிவையுடையதாகிய தசுமபினைப் பலர்ககும்வழங்கினான் (புறம். 239:16) இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, கிணைப் பொருநர்க்கு, மணியும் பொனனும் முத்தும் உடையும் கள்நிறைநத தசும்பும் அவர் வருந்தாது நிறகுமாறு கனவிலே கண்டது போல நனவிலே நலகினான (புறம்.377: 16-20). கடல்பிறககோட்டிய செங்குட்டுவன், இஞ்சியும் நறும்பூவும் விரவித் தொடுத்த மாலையினையணிந்து புறத்தே சந்தனம் பூசப் பெற்ற தசுமபுகளை அசைகின்ற இருககை யிலேவைத்து அவறறில நிறைநத கள்ளினை ஓமபா ஈகையால வழங்குவான் (பதி. 42:10-13). நிரமபு தலையும் குறைதலையும் அறியாத கோககாலியினி டத்தே நிறைநது நெடுநேரம இராத தசும்பில் உள்ள, கூத்தர் உண்டும் குறையாத கள்ளை அளித் தலையுடைய வணகை வேநதே என்று கடலபிறக கோட்டிய செங்குட்டுவன் சிறபபிக்கபபடுவன (பதி. 43.33-36). களிபபு மிகுதியால் அசையும் தசும் பினினறும் வார்த்த கட்டெளிவைக கூத்தர் களங் கள் தோறும் பெற்றுணபர் (இவ்விடததில் தசும்பு என்பதற்கு மிடா என்று பொருள் கொள்வர் நச்.) (மலை. 463,464).

**தசை - ஊன்.** வேட்டுவன மானினது தசை - ஊன் - சொரிநத கடகம நிறையுமாறு உழவர் மகளிர வெண்ணெலலை முகநது கொடுபபா (புறம். 33: 1-6). ஆதியினது குடநாட்டின்கண மறவர் எயது கொணடு வநத தடியபபட்ட எயபபனறித் தசை யின நிணம் மிகக வெணசோற்றை வருவார்க் கெலலாம வழங்க அவா அதனைப பனையோலை யாலியனற குடையிலே மிசைவர் (புறம. 177:12-16).

**தட்டம் - கச்சு.** புலியினது வரியைக் கொண்ட பொலிவு பெற்ற நிறத்தையுடைய தட்டத்தாலே - கச்சாலே - நடுவு வெளியான இடம மறையும்படி கோககப் பட்டுக கட்டில் செய்யபபெறறது (நெடு. 126,127).

**தட்டை - 1. கிளி கடி கருவி.** புனங்காபபோர் தடடையை - கிளிகடி கருவியை - புடைப்பின அப புனத்திற்கு அயலதாகிய வயலினகணணும் கடற கரையினகண்ணும் வாழும் பறவைகள் ஒரு சேர எழும (புறம. 49:3-6). தலைவியும தோழியும சேணோன இழைதத பரணமீதேறித தழலும தட்டையும் குளிரும் பிறவுமாகிய கிளியோட்டும முறைமையினை உடையவறறை முறையே கையிலே வாஙகிக் கிளிகளைக் கடிந்தனா (குறி. 41-44). ஒலிககும் மூஙகிலால செயத தட்டையைப புடைததுப புனங்கள் தோறும் கிளிகளை ஓட்டு கினற மகளிர கூபபிடுவதால் ஆரவாரம் உணடா யிறறு (மலை. 328,329). 'சிறுதினையிற் படியும கிளி களைக கடிய வேணடிக் குளிருடன கூடிய தட்டை யாகிய கருவிகளைப பலமுறையும் புடைததுச சூரரமகளிர போல நின்ற நீ யாரையோ' எனத் தலைவன தலைவியை வினவினான (அகம். 32:5-8). 'வேஙகைமாலை சூடி ஆயததோடு அழகுற நடநது தழலினைச சுறறியும தட்டையினைப புடைததும குறமகள் காககும தினையினிடத்து மழையும பொழிலையோ' எனத் தோழி மேகததை வின வினாள் (அகம். 188 9-14). தலைவியும் தோழியும், மலைமூஙகிலை அறுத்து இயற்றிய வெவ்விய ஓசையுடைய தடடையால சிறுதினைக் கதிர்களைக கவரவரும கிளிகளை ஓட்டி வேஙகை மரககிளையில கட்டிய பரணிடத்தே இருநதனர் (அகம. 388.2 7). 'கிளிகடி கருவிகளாகிய தழலையும் தட்டையையும அனனை எனககுக் கொடுததாள். அவள் பாது காத்த என ஆயநலத்தைத தலைவன கொள்ளை கொணடான' எனத் தலைவி தோழியிடம்

மறிக்கப்பட்டு வருந்தச் செய்த தன் தப்பல் அன்றி யும் ஒரு தேர் வருவதன் காரணந்தான் யாதோ என ஆய்ந்து வருத்தமும் அடைந்தது இவ்வூர்' எனத் தோழி தலைவன் சிறைப் புறத்தானாகக் கூறினாள் (நற். 203:9-11). 'தலைவ, அரும்பொருள் ஈட்டலாகிய செய்வினை தப்பற்கும் உரித்து; அரிவையாகிய தலைவி நின்னைத் தகைத்தற்கும் உரியள்; ஆதலின் அவள் அழுமாறு பிரிந்து செல்லா யாயின் நன்று' எனத் தோழி தலைவனிடம் கூறி னாள் (ஐங். 302).

2. **வறிதாதல்.** இளையர் காலால் மிதித்தெடுத்த வரகுக் குவியலில் கடன் காரர்க்குக் கொடுத்தது போக எஞ்சியதைப் பாணர் உண்டு வெளியேறுத லின் புறங்கடை தப்பலாயிற்று - வறிதாயிற்று (புறம். 327).

**தப்பியோன் - கொன்றோன்.** போர்மறவனொருவன், 'நேற்று என் தமையனைத் தப்பியோனோடும் - கொன்றோனோடும் - அவன் தம்பியோடும் நாளை ஒரு சேரப் பொருது அழிப்பேன்' என்று வஞ்சினம் கூறிப் பல குதிரைகளையும் பெரிதும் ஆராய்ந்தான் (புறம். 304:4-8).

**தப்பு - பிழை.** 'நீவிர் பெற்ற செல்வத்தை வந்தோர்க்குக் கொடுத்து உதவுவீர்களாக; அவ்வாறு செய்தல் தப்பு-பிழை - இன்று; மாரி, பொய்ப்பினும் சேர லாதன் கொடுத்தலில் பொய்யலன் 'எனப் பாணர் ஆற்றுப் படுத்தப் பெறுவர் (பதி. 18:7-12).

**தப்புந - தவறுவன.** செல்வத்தாற் பெறும் பயனா வது கொடுத்தல்; செல்வத்தை யாமே நுகர்வேம் என்று கருதின் தப்புந - தவறுவன - பலவாகும் (புறம். 189:7,8).

**தப்புநர் - பிழை செய்தவர்.** பகைவர் பெரிய தப்புநர்- பிழை செய்தவர்- ஆயினும் அவர் பணிந்து திறையை அளிப்பின் சினம் மாறி அத்திறையை ஏற்றுக் கொள்ளும் பண்பினன் இமைய வரம்பன் நெடுஞ் சேரலாதன் (பதி. 17: 2,3).

**தபுதி - அழிவு.** 'பருந்தினது எற்றுதலை வெருவித் தன்னிடம் புகுந்த புறாவின் தபுதியை - அழிவை - அஞ்சித் துலாக் கோலுள் புக்க உரவோன் (சிபி) மருக' எனச் சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத் தான் விளிக்கப் பெற்றான் (புறம். 43:5-8).

**தம்பலம் - தாம்பூலம்.** தலைவன் செய்த குறியிடத்து நின்றவளை முடமுதிர் பார்ப்பான் அணுகிச் 'சிறியவளே, நீ என்னால் அகப்படுத்திக் கொள்ளப் பட்டாய்' என்று கூறி அவள் பக்கத்தினின்றும் போகாதே 'தையால், தம்பலம் - தாம்பூலம் - தின்றியோ' என வினவினான். (கலி. 65: 8-13).

**தம்பி - தன்பின் பிறந்தான்.** 'பகைவரை வென்ற மாறுபாட்டான் மிக்க செல்வத்தையுடைய தேர் வண் கிள்ளிக்குத் தம்பி எனச் சோழன் நலங் கிள்ளியின் தம்பி மாவளத்தான் விளிக்கப் பெற் றான் (புறம். 43:9,10). மறவனொருவனால் கொல்லப்பட்டோனுடைய தம்பி, சுழலுகின்ற கண்ணையுடையனாய்ப் பேரூரில் அட்டகள்ளைப் பெறுதற்கு மனைக்குட் புகுந்து கட்கலயத்தைத் தேடுவோன் போல அவனைத் தேடினான் (புறம். 300). மறவனொருவன், 'நேற்று என் தமையனைக் கொன்றவனோடும் அவன் தம்பியோடும் நாளை ஒருசேரப் பொருது அழிப்பேன்' என்று வஞ்சினம் உரைத்தான் (புறம். 304:4-6). பல்யானைச் செல் கெழு குட்டுவன், இமையவரம்பனின் தம்பி ஆவான் (பதி. ப. 3:1).

**தம்முன் - தமையன்.** குறளன் கூனியிடம், 'ஒருவரை ஒருவர் முயங்குவதற்குக் காரணமான கணை யினையுடைய, சாமனாரின் தம்முன்னாகிய - தமை யனாகிய - காமனார் நடையை நீ காண்' என்று கூறி நடந்து காட்டினான் (கலி. 94:33,34). ஆயிரம் தலைகளையுடைய அரவினால் (ஆதிசேடனால்) கவிக்கப்பெற்றவர் கண்ணனின் தம்முன் (பல தேவன்) ஆவார் (பரி. 15:19).

**தம்மோன் - தம் தலைவன்.** 'தம்மோன்–தம் தலைவன்- நம்மிடத்துச் செய்த கொடுமையை நினைந்து அவனுடைய பழமுதிர் குன்றுகள் நம்பால் அனபு பெரிதும் உடைமையின் கண்ணீர் அருவியாக அழும்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 88:6-9). தலைவியின் பிரிவு நோய் கண்டு வருந்திய பாணனைப் பற்றித் தலைவி. 'எம்முடைய விருப்பமிக்க காதலோடு பிரிந்து சென்ற தம்மோன் போல்கின்றான் அல்லன் இவன்; அவரினும் பேரன் பினன்' என்று தோழிக்கு மகிழ்ந்து கூறினாள் (ஐங். 475:3-5).

**தமர் - தம்மவர்.** (சுற்றத்தார்) தமர் - தம்மவர் - பிழை செய்யின் அதனைப் பொறுத்தல் முதலான பண்புகள் வாய்க்கப் பெற்றவன் ஏறைக்கோன் (புறம். 157:1). தமர் எனின் யாவரும் எளிதிற் புகுவர்; அமர் எனின் திங்களும் நுழையப் படாத தன்மைத்து என்று காரியாதனின் அரண் சிறப்புப்

புகழப்படுகின்றது (புறம. 177:4,5). மறவா, போாக களததில, தமா எனறும பிறர் எனறும பாராது கைகலநது போர் செயவர் (புறம். 294 3,4) சிறுவர் தாம தொடுத்து விளையாடிய அமபு இலலையாகும போது தமககு அவற்றைச் செய்து தரும தமா முகததை நோக்குவர் (புறம: 373.16, 17). வேநதனும் வினையை முடித்தனன்; பகைவரும திறையைக் கொடுத்து வேநதனுககுத தமர் ஆயினர் (அகம. 44: 1, 2). வதுவை நன்மணம் கழிநத பின்பு, தமர் கல்லென்ற ஒலியினராய் விரைநது வநது, 'பெரிய மனைககிழததி ஆவாய்' எனறு கூறித் தலைவியைத தலைவனோடு ஓா அறையில் கூட்டுவர் (அகம .86: 17-20). தமா தலைவியை, வெணணூல சூட்டித தூய உடையாற பொலியச் செய்து மணவொலி மிக்க பநதலிலே அணிகளை அணிவித்த சிறப்பி னோடு, தோனறிய வியர்வையை ஆறறித தலை வனுககு அளிபபா (அகம. 136:14-18). 'அமரகததுு அடட செல்வத்தைத தமா விரைநது சென்று உரைக்கக கேட்குநதோறும் தலைவி உவககுவள் அன்றோ' என வினைமுறறி மீளும் தலைவன தனனெஞ்சிறகுரைததான (அகம. 144:11, 18, 19). மகளிர், காஞசி மர நிழலில் தமர் வளம் பாடிக் கரும்புலககையால் வெண்மணலைகு குவித்துக் குறறுவர் (அகம். 286:1-5). தாயமார் உள்ள பெரு மனையில் தமர் பாராட்டக் காதலோடு வளர்ந்த வர் பெண்டிா (அகம. 310:7-9). 'செலவமிகக நனமனையில புதுவதாக ஒப்பனை செய்து தமர் மணம செய்விககவும் மனம பொருந்தாளாகித் தலைவனுடன சென்று சீறூரிலுள்ள வறுமனையில் சிலம்பு கழித்து அவனுடன் மணம் பொருந தினளோ' எனறு மகட் போககிய செவிலி வருநதி னாள (அகம. 369:15,16, 22-26). தலைவி, வைகறைப் பொழுதில தலைவன் அணிநத மலர்களை உதிாதது விட்டு நறுங்கூநதலில் எண்ணெய தடவிப் பொருந்தாத முகததளாகித தமரோடு ஒத்தவளாக இருந்தாள் (குறு. 312). 'தும்பியே, தலைவி தமரினினறும நீங்காளாயினாள் என்பதைத் தலைவனுககு உரைப்பாயாக' என்பது தோழியின கூற்று (குறு. 392). 'தமர் ஒருவரை ஒருவர் அறியாத சேரியை உடையதாதலால அயலார் ஒருவரை ஒருவர் அறிவது எவ்வண்ணமியலும்; ஆதலின் நீ அச்சமினறி எம்மூர்க்கு வருவாயாக' எனறு தோழி தலைவனிடம் கூறினாள் (நற. 331:11,12). 'எம் துயிலை, நினககொதத பரத்தையை மனை யிலே கொணடு வநது தநது நின தமராகிய பரத் தையா பாடும் துணங்கை ஆரவாரம போககும்' எனத தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 70: 11-14) மகளிரின ஆரவாரத்திறகு வெருவியெழுந்த பறவைததிரள், நெடுமரக கிளையிலேறி மகளிா அலைதத நோயை அம்மகளிரின தமாககுக கூறு வன போல் பலகுரல் பயிறறும் (கலி. 75.1-8). தமா கட்டித் தநததும மயிா முடியில ஒரு புறததே செருகி வைத்ததுமான கணணியைச் சுமகக மாட டாதவள ஆயா மகள் (கலி. 109:9,10). தலைவன் மடனமா ஊாநது தெருவினகண பாடப பகைவா பாணடியனுககு அஞ்சி அருநதிறை கொடுததாற போலத் தமர் தலைவியை அலனுக்குக் கொடுதத னா (கலி. 141:22-25). வள்ளியின தமா, வானவன மகளுடைய பாஙகியரோடு போரினை விளைதது வாகை சூடினா (பரி. 9·67,68). பரங்குனறததின கணணே பேதையொருததி தன தமரினினறும நீங்கிக கற்களின இடையே நெறி தவறி அவரை அழைத்து விளிககும் ஒலி, முழைஞசினினறும எதிரொலியாய் ஒலிகக, அவவொலி வரும இடத்திறகுச சென்று அங்கும தமரைக் காணாது மீணடும் கூவுதலைச் செயவாள் (பரி. 19 57-66) (²)

**தமனியம் – பொன்.** இளவேனிறகாலம் தொடங்கு கினற நாளிலே கண்டாா, தமனியம - பொன - எனறு மருளுமாறு செருநதி மலரும (சிறு. 147). தமனியப பூணகளையுடைய சிலமபுகளை மகளிர் காலகளில அணிநதிருநதனா (பெரு 331-333). ஞாயிறறின இளவெயில தோனறினாற போனற தமனியததின ஒளியால விளஙகுகினற பேரணிகலன களை உடையவா மகளிா (மது. 703,704). தலைவி, பரத்தையைத தமனியததாற செயத மேகலை யாகிய சதங்கைத தணடினை அணிநத குதிரையாக உருவகிததாள் (கலி. 96 15) தோளாகிய தமனியக கயததில் மலாந்த கைகளாகிய தாமரைமலாகள எனறு மகளிரின தோளும கைகளும உருவகிககப படும் (பரி. 8.114,115).

**தமாலம் - கொடி வகை.** சநதனமரக கிளையிலே சுறறிய பசிய நிறம பொருநதிய இலையையுடைய நறிய தமாலக கொடியைத் தீநதேன எடுககும வேடர் வளைதது அறுததுச செலவா (நற. 292·1-3)

**தமியர் - தனித்திருப்பவர்.** தமமூரினகண்ணே தமியர்- தனிததிருபபவர் - இரஙகததககவர்; எனனாகுவா கொலலோ எனறு தலைவி தோழியர் குறிததுத தலைவன வருநதவிலலையே எனத தலைவி வருநது தல (அகம. 78:11-13). தலைவன பரததைமையைப புலந்து பிரிநதுறைவோர், திருமகள் நீஙகச சில வாகிய அரிசியைப புடைததுச் சமைததுணடு தமியர் ஆகி வைகுவர் (அகம. 316 12-14). 'மாலைக

காலததில யாமதமியேமாகுமபடி பிரிநத தலைவர், தமியா ஆகவும இனிமையுடையரோ' எனத் தலைவி தோழியை வினவினாள் *(குறு. 172:2-4).*

**தமியார் - தனித்திருபபார்.** இளவேனிறபொழுது தலை வியர் வெறுககுமபடி வநது, தமியாரை - தனித் திருபபாரை - அகததிடாது புறத்தே தள்ளி இகழநது, ஊரவர் அலர் தூறறும கொடுமையை ஒககும கொடுமையைச் செய்தது *(கலி. 33:13,14).*

**தமியோர் - தனித்திருப்போர்.** வாடை, பனி நலிகினற நள்ளிரவில் தமியோரின் - தனிததிருப்போரின் - வலியளவை ஆராயாது, முரணில்லாத காலததும் தணவென்று வீசி அலைக்கும *(அகம. 125:11-13).* குளிாந்த பனியை உடைய அறசிரக காலம் தமி யோாககு அரிதாகுமென உணர்ந்து கனவினும் பிரிவினை அறியாதவன் தலைவன் *(அகம். 178: 19,20).* 'ஓமைமரங்களை யுடைய பெருங் காடுகள் இனனாமையுடையன எனநீராயின் தமியோர்கககு வீடுகள இனிமை தருவனவோ' என று தோழி தலை வனை வினவினாள் *(குறு. 124:2-4).* 'முல்லையே, மாலைக காலததில நீ நின் வெள்ளருமபு களினால முறுவல் கொண்டனை; தமியோர்பால் எள்ளி நகைபபாய போலக காட்டுதலாகிய இது நினககுத தகுமோ' என வினைமுடித்து மீளும் தலைவன முல்லைப் பூவினைக் கண்டு உரைததான் *(குறு. 162:2-6).*

**தமியோன் - தனியோன்.** தேரோடும் தெருவில் தமி யோனை - தனியோனை - (புதல்வனை) விளை யாடக கணட காமக கிழததி அவனைத் தழுவி உவநது நினறாள *(அகம: 16:5-10):*

**தமிழ் - 1.** தமிழ்மொழி. 'முரசு கட்டில் எனபதனை அறியாது ஏறிக கிடநத எனனை, நலல தமிழ - [illegible] காரணததால் இரு [illegible] வெட்டாது வடுததனை' என மோசி கீரனார் பெருஞ்சேரலிரும பொறையைப் புகழவர் *(புறம். 50.9,10).* 'ஒலிககும் குரலையுடைய முரசம் மூனறுடனே ஆளும் தமிழ் பொருநதிய மதுரைக் கண செங்கோலோச்சிய வேநதே! எனப பாணடி யன் வெள்ளியம் பலத்துத துஞ்சிய பெரு வழுதி விளிக்கப பெறறான *(புறம. 58.12,13).* தமிழ வீற்றிருந்த தெருவினையுடையது மதுரை *(சிறு 66, 67).* தமிழையுடைய வையைப் புனல் எஙகும பரநதது *(பரி. 6 60).*

2. தமிழப்படை. தமிழ் - தமிழபபடை - கை கலநத தலையாலஙகானத்துக்கண் நிலைபெற்ற உயிரது பன்மையையும் அவ்வுயிரைக் கொள்ளும் கூறறினது ஒருமையையும் தனனுடனே சீர்தூககிக் காட்டிய வேலையுடையவன் நெடுஞ்செழியன *(புறம. 19: 1-4).*

3. தமிழ் நாடு. வெற்றி வாய்த்தலையுடைய வாட் போரில தமிழ - தமிழ் நாடு - முழுவதையும் அகப் படுததிக் கொண்டமையால முழங்குகினற வெறறி முரசததையுடையவன் தழும்பன் *(அகம்,227: 13-17),* தண்டமிழ்; 'தண்டமிழக கிழவர்; 'தணடமிழ வரைப்பகம்' காண்க.

**தமிழ் கெழுமூவர் - தமிழ் நாட்டினையாளும் மூவர்** (சேர சோழ பாணடியர்). விறபோரில பகைவரை அழித்து அவ்வெறறியால எயதும் திறைப் பொருளைத துய்ககும வலிய ஆண்மை பொருநதிய வாழ்ககையினையுடைய தமிழகெழு மூவரால - தமிழ் நாட்டினையாளும் மூவரால் - காககப் பெறும் வேற்று மொழியினையுடைய தேயங்களி லுள்ள பல மலைகளையும் கடந்து தலைவன செனறான *(அகம. 31:12-15).*

**தமிழ் நாட்டகம் - தமிழகம்.** பாணடியனின் பொதியில மலை இருககுமளவும் மதுரை நகர் தண்டமிழை வேலியாக உடைய தமிழநாட்டகம் - தமிழகம - எங்கும் தன புகழ்பரவப் பொலிநது நிற்பதனறிக் குனறாது *(பரி. தி. 8).*

**தமிழகம் - தமிழ் நாடு.** பரிசிலர், பிட்டங்கொற்றனின வசையிலலாத வான் புகழினை உலகத்தெல்லையுள் தமிழகம - தமிழநாடு - கேட்க நாடோறும தம் செநநா வருநதும்படி வாழததிப பாடுவர் *(புறம. 168:18-22).* இமயவரம்பன நெடுஞ்சேரலாதன் இமயத்துககண விறபொறிதது ஒலிககின்ற கடலை வேலியாக உடைய தமிழகம விளங்குமாறு தன செங்கோலை நிறுவினான் *(பதி. ப.2:4-6).*

**தயக்கு - துளக்கம்.** தலைவன், நுண்ணிய தொழில களையுடைய கசசைக கட்டின ஆடையைத் தயக்கற- துளககமற - கட்டி வந்தனன் *(குறி. 125).*

**தயிர் - பாலின் உறைவு.** ஆயமகள் தயிர் கொண்டு வந்த மிடா நிறையுமாறு உழவாமகளிர் வெண ணெல்லை முகநது கொடுபபா *(புறம. 33:2-6).* வரகுச் சோறறையும், வேளைப்பூவை வெளிய தயிரின்கண பெயது இடைமகள சமைதத புளிங் கூழையும் அவரை கொயயுநர் ஆர மாந்துவர்

(புறம். 215.1-5). மறவனொருவனின மனைவி, உடும்பின் தசை சொரிந்து சமைக்கப்பட்ட தயிரோடு கூடிய கூழைப் பாணர்கரும அவரோடு வந்த விருநதினர்க்கும் ஒரு சேரக கொடுதது உண்பிக்கும் விருப்பினள் (புறம. 326:9-12). ஆய மகள், விடியற்காலையில் மத்தினை ஒலிககுமாறு வலிததுக் குடைககாளானுடைய வெணமுகைகளை யொத்த குவிந்த முகிழகளையுடையதும் உறை யாலே இறுகத தோய்நததுமான இனிய தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்தாள் (பெரு. 155-158). வானம் மழை பொழிந்தமையால் அவரைக கொடிகள் தினையரிநத தாள்கள தோறும் முற்றின தயிரினது பிதிர்சசி போலும் பூக்களை உதிர்தது அடியிலே காயைக் கொணடன (மலை. 97,109,110). நனனனது அரண்மனை முறறத்தில் தரபபட்ட பல வேறு வகைப்பட்ட கையுறைப பொருள்களுள் மூங்கிற் குழாயிலே தோய்தத காட்டெருமையின தீநதயிரும் ஒனறாகும் (மலை. 523). இனிய தயிரைக கடைநத மத்து, கனறு தன் வாயாற் சுவைத்திட முற்றததிடத்தே தொங்கியது (அகம. 87:1,2). 'பசு மீன விற்று மாற்றிய வெண்ணெல் மாவினைத் தயிரிட்டுப் பிசைந்து கூழாக்கி நின குதிரைகள் உண்பதறகுத் தருவோம்' என்று தோழி தலை வனிடம் கூறினாள் (அகம். 340:14,15). செம்மறி யாட்டினது நிறம் போன்ற பழுப்பு நிறம் வாய்நத முற்றிய தயிராகிய உலையில், வரகரிசியோடு ஈயலையும் இட்டு இனிய புளிஞ்சோறு ஆக்கப் பெற்றது (அகம. 394:2-5). முற்றிய தயிரைப்பிசைந்த மென் விரலை ஆடையில் துடைத்துக் கொணடு தலைவி புளிககுழம்பைச் சமைததாள் (குறு. 167:1-4). 'பல முறை தயிரைக கடைகையினாலே தெறித்த புள்ளிகளின் மேலே கொலலேற்றைத் தழுவினவனுடைய குருதி கலக்குமபடி தழுவுதல் எம்முடைய தோளிறகு அழகாகும்' என்று தலைவி தோழியிடம் கூறினாள (கலி. 106:37-39)' வையை யாற்றினகண் வெள்ளம் பெருகுதலின் மிளகினை யும் சநதனததையும் வெண்ணெய் படுதற் பொருட் டுக் கடையும் தயிா போனற நுரையையும் பிறவற றையும் அலைகள் கரைமீது வீசின (பரி. 16:1-4).

**தராய்** - மேட்டு நிலம். 'நண்டுகள் ஆடித்திரியும வயலுககு அருகில் தராய்ககண் – மேட்டு நிலத்தின கண - இட்ட நெறபோரைக் கடாவிட்டுக குவித்த நெல்லை உழவா முகந்து தரப பெற்றுச செல வீராக' எனக கூத்தர் ஆற்றுப் படுத்தப பெறுவர் (மலை. 460-462).

**தரு** - மரம். முகில்கள், குளிர்ந்த தளிரைத் தருவில் - மரத்தில் - தோற்றுவித்து அச்செயலை உலகத தாாக்கு எடுததுரைபபது போல் முழங்கின (பரி. 18:22,23).

**தருக்கு** - மனச் செருக்கு. 'நாம் ஆடும் குரவைக் கூததில் நம்மை அருமை செய்தான் போலே நோக கிய ஆயாமகன நமககு வருத்ததைத தரும நோயைச செயதல, கொலையேறறையான கொண டேன் எனனும தருககினால்-மனச் செருககினால்- அன்றோ; வேறெனறலலவே' எனத தலைவி தோழி யிடம் கூறினாள் (கலி. 104:70-73).

**தருப்பை** - தருபபைப்புல. வஞ்சிமரமும காஞ்சிமரமு மாகிய கொமபுகளை நாறறி வேழககோலை வரிச சாக நிரைத்துத தாழை நாராற கட்டித் தருபபை யால் - தருபபைபபுலலால் - வேயபபட்ட குறிய இறபபை உடையது குடில் (பெரு. 263-265).

**தருமணல்** - புதிதாகப் பரப்பப்பட்ட மணல். தருமணலை- புதிதாகப பரபபபபட்ட மணலை-உடைய முறறத திடத்தே வணடுகளும மிஞிறுகளும ஆரவாரிததன (மது. 684). நனனாளில வரிசையாக நடபபட்ட கால்களையுடைய பெருமபநதரின கீழ தருமணல் பரபபி மனையின்கண விளககேறறி மலாமாலை சூட்டி மணவிழா தொடஙகப பெறுதல் (அகம. 86:2-7). 'தருமணலில கிடநத பாவையை எடுதது என அருமகளே, நின் இனிய தோளைத தருவாயாக எனத் தழுவி அழுதனள' எனறு மகட்போககிய தாயது நிலைமையைக கணடாா கூறினர். (அகம. 165:8,12,13). தருமணல பரபபபபட்டமனைமுறறம இனி தனிமையுறுமோ' எனப பிரிவுணர்ததிய தோழியிடம் தலைவி உரைத்தாள (அகம. 187.8-10). தேறல மாநதி, வினைததிறம அமைநத நனமனை யின கண தருமணல பரபபி, தலைவியின தமா வதுவை அயாநதனர் (அகம. 221:1-4). தருமணல பரப்பட்டது திருநகர் முறறம (நற. 143.2). தரு மணல பரபபியும் மனைககுச செம்மண பூசியும் பெண எருமைக கோடு நட்டுக கடவுளை வழி பட்டும் சுறறததார் திருமண நிகழ்சசியினை மேற் கொணடனா (கலி. 114.12-14).

**தருமபுத்திரன்** - ஓர் அரசன். இவனுககுக் கோதமனாா் அறமுரைத்ததாகப புறநானூறறில ஒரு பாடல (366) காணப்படும். அதில, 'அறவோன் மகனே மறவோர் செம்மால், எனறு விளிககப பெறுதல் கொணடு இவனைப பாணடவா தலைவனாகிய தருமபுததிரனாகக கருத வாயபபுணடெனினும், இவனுககுக கூறப்படும் அறவுரைகள அக

கருத்திறகு அரண செயவனவாக இல்லை. 'உழுது வநத பெரும பகடு வைககோலைத் தினறாற போல நீ நின அரசியல் பணிககுப பின செங்கண் மகளிரொடு சிறறாடல் கலந்து, அமமகளிர் கள்ளினைக் கலததிலே பெய்து தர உணடு மகிழவா யாக' எனறும் 'ஆட்டுக் கிடாயகளை வெட்டி வீழததிச் சூட்டிறைச்சியை வேண்டுவோர்ககுக் கொடுபபாயாக' எனறும கோதமனார் அறங் கூறுவர். இவனை, 'அறவோன் மகனே, மறவோர் செமமால்' எனறு விளித்தமையைப் பொதுநிலையி லேயே பொருள் கொள்ள இயலும். தருமபுத்திரன் எனற பெயரும, 'அறவோன் மகனே' என்ற விளி வாயிலாய் இவனுககுப பிற்காலத்தாரால இடப் பெற்றதாகலாம் எனறு ஔவை. து. கருதுவர்.

**தருமம் - அறம்.** பொற்காசு அணிந்த மேகலை யையும் பொன்னாலாகிய கண்ணியையும் விளகக முறப புனைநது கொண்டு தருமத்தின்கண் இயல் வோளுடைய சாயலை நோககி அண்ணலாகிய தலைவன் 'இவள யார் மகள்' என வினவினான் (இங்குத் தருமம் எனபதற்குத் தருமணல் என்று பாடங்கொளவர் ஔவை. து.) (புறம. 353:1-7)

**தருமன் - கூற்றுவன்.** மாயோனாகிய திருமாலிடம் தோன்றியவர்களுள் தருமனும் - யமனும் - ஒரு வனாவான் (பரி. 3:8).

**தரை – நிலம.** பனையின் உசசியிலுள்ள பல பதி னாயிரம குலைகள் அதனிடத்தினின்றும் நீங்கித் தரையின்கண - நிலததின்கண - உதிர்வனபோலத் திருமால ஏநதிய ஆழிபபடை அவுணரது தலை களை உதிர்த்தது (பரி. 2:43-49). அரை மலை யாகிய மேகலையினையும் அருவியாகிய படாத் தினையும் உடையதாயத் தரையினகணின்று விசுமபை உறுமாறு ஓஙகி உயாநதது தணபரங் குனறம் (பரி. 21:14,15). தரை (22-ஆம் பரிபாட ல்ல் 1 ... ... ... இடம் பெறற இச் சொல் லுககு உரை வளககம கிடைககவில்லை).

**தலை - 1. உறுப்பு வகை.** சிறிய தலை பொருநதிய மறிகளையுடைய மான் பிணைகள் அநதணரது மூததீயொளியில் துஞ்சும் (புறம். 2:21-23). பாம் பின நடுங்கும்படி இடிககும் இடி போன்று முரசு முழங்கும் (புறம். 17.38,39). பிள்ளைகள் புல்லிய தலையையுடையன (புறம். 19: 13; 46' 6; 61: 8; 319: 11,322'4;334:3,373:16,374:9; மலை. 217; அகம. 104: 11;197:12;290'3; குறு. 241 3; நற். 392.3). முடியை யுடைய தலையை அடுபபாகவும குருதியை உலை யாகவும கொணடு சமைககபபட்ட உணவால கள வேள்வி செயயப்பட்டது (புறம. 26:8-11). பாண சுற்றம், பொன்னாலியனற நறுமாலையைப்பாறிய மயிரையுடைய கரிய தலை பொலியுமாறு சூடியது (புறம். 29.3-5). பாமபு, ஐந்து படம் பொருந்திய தலையைச் சுமநத சினம பொருந்திய வெய்ய திறலையுடையது (புறம். 37:1,2). சோழன் குளமுற்றததுத் துஞ்சிய கிள்ளிவளவன, உலகத்தின் கணணுள்ள வேநதர்தம் தலை நடுங்குதற்கு ஏதுவாகிய வலியையுடையவன் (புறம, 42:4,5). சோழன நலங்கிள்ளி ஆவூரை முற்றியிருநத காலத்து அங்குள்ள மகளிா பூவிலலாத வறிய தலையை முடித்தனர் (புறம். 44:6,7). சிறிய தலையையுடையது ஆட்டினம் (புறம. 54: 12). யானை பாகர் ஏறாத வறிய தலையையுடையது (புறம். 68.16). புலலிய தலையையுடையது மடப பிடி (புறம். 151:4;308:10;389'9; அகம. 43:3;59:7;68:17: 113'3;347:13 நற 92:7,318.9). யானையைக கொன்று வீழததிய அமபு கோடடையுடைத்தாகிய தலை யினையுடைய புள்ளிமானை உருட்டி உரல்போலும் தலையையுடைய கேழற் பன்றியை வீழச செய்தது (புறம். 152.1-4)([2]) பலாப்பழததைப் பெற்ற கடுவன் மயிரையுடைததாகிய தலையினையுடைய மந்தி யைக் கையாற குறி செயது அழைததது (புறம். 158.23,24). 'பரிசிலன் வாடிப் பெயாதல், நாட்டை இழந்ததனினும் மிக இனனாது என நினைந்து தனது தலையை எனககுத் தருதற்கு வாளைத் தநதனன்' என இளங்குமணனிடம் பெருந்தலைச் சாததனார் கூறினார் (புறம. 165:10-12). அச்ச முடைய பாமபினது அணுகுதற்கரிய தலை துணியு மாறு இடி இடிததது (புறம். 211:1,2). 'நரநதம்பூ நாறும் தனனுடைய கையால புலால் நாறும் எனனுடைய தலையைத தடவுவன; அது கழிந் ததே' என்று அதியமான இறநதபோது ஔவை யார் பாடினார் (புறம. 235: 8, 9). 'செய்யத தகுவனவெல்லாம் செயதனன், ஆதலின் இப் புகழ் வெய்யோனின தலையை வாளால் அறுதது இடினும் இடுக; அனறிச சுடினும சுடுக; பட்டபடி படுக' என்று நம்பி நெடுஞ்செழியன் இறநதபோது பேரெயின் முறுவலார் குறிபபிட் டுள்ளார் (புறம். 239:19-21). குடுமி பொருந்திய தலையினையுடையவர் புதலவர் (புறம. (250:8). மகளிர், தலைவன் இறநததால் தனித்துக் கொய்யப் பட்ட மொட்டையாகிய தலையுடனே, கைம்மை நோன்புற்றுக கலககமுற்றனர் (புறம. 261: 17, 18). இளையோரின தாய, நறுமணபபொருள்களைத் துறநதமையால் நறுமணம கமழாத நரைத்த தலையையுடையவள் (புறம. 270.5,6). கைம்பெண்டிர் கழுவுகின்ற மழிதத தலையினினறும தெளிந்த

நீர்வார ஆம்பலிடத்துண்டாகும் அல்லியரிசியை உண்ணுவர் (புறம் . 280:11-14). மெலலிய தலையை யுடையது மடப்பிடி (புறம். 303:8; மலை. 307; அகம். 165:1;202:2; நற். 137:6). ஆமான்கன்று அசைகின்ற தலையினையுடையது (புறம். 319.10). ஆண் காட்டுப பூனையினைப் போன்ற வெருண்ட பார்வையினை யும் பெரிய தலையினையுமுடையவர் வேட்டுவர் (புறம். 324:1-3). சிறுவர் மெல்லிய தலையினை யுடையவர் (புறம். 325.12). குறுமுயல், கரிய பிடரி பொருந்திய தலையினையுடையது (புறம். 333:3). பெரிய தலைகளை வெட்டிச் சாய்த்து மூளையும் நிணமும் குழம்பிய அச்சந்தரும் பிணங்களாகிய பசிய பயிர்களின் போர்களை நரிகளோடு பேய்கள் ஈர்த்துண்டன (புறம். 369:14-16). தலைகள் வெட்டுண்டு குறையுடலங்களாய வீழும் பிணங்களாகிய போர்களை அழித்து யானைகளாகிய எருதுகளி னால் கடாவிட்டனர் (புறம். 371:15-17). பேய் மகளிர், குடர்களைத் தம தலையில மாலையாக அணிந்து கொண்டு கூத்தயர்ந்தனர் (புறம். 371:24, 27). பகைவர் உடலகளினின்றும் நீங்கிய அரிய தலைகளால் செய்யப்பட்ட அடுப்பில் சமைத்த ஊன்சோறாகிய பிண்டத்தினால களவேள்வி செய யப்பட்டது (புறம். 372.5-10). பொருநன் புலலிய தலையினன் (புறம். 390:12). இமையவரம்பன நெடுஞ்சேரலாதன, பகையரசர் தலை நடுங்கி வணஙக அவர்தம் காவல் மரமாகிய கடம்பினை அழித்தான் (பதி.12:2,3). வளைந்த தலையினை யுடைய மூதாககள ஆம்பலை மேய்ந்தன (பதி. 13:6) கவைதத தலையினையுடைய பேய்மகள், கழுதினை யூர்நது திரிநதாள் (பதி. 13:15). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், யவனரை வென்று அவா தலை யில் நெயயைப பெய்து கையைப் பிணிததான் (பதி. ப. 2:8,9). போர்க்களததில், தலை வெட்டப் பட்ட உடம்பு ஆடியது (பதி. 35:6). பெரிய போரின்கண் அரசர் இறக்கும்படி வென்று பகை வரது கரிய தலையை உலக்கையால் இடித்தனர் (பதி. 41:19-21). துய போன்ற உச்சிக் கொணடை பொருநதிய தலையையுடையது ஆண் கோட்டான (பதி. 44:18). போர்க்களத்தில தேரினது தேய்ந்த வாயையுடைய உருளை, ஊர்கின்ற வழியில வீர ருடைய எண்ணில்லாத பசிய தலைகளை வெட்டி யது (பதி. 46:8,9). தலை வெட்டப்பட்ட உடல் மட்டும் எஞ்சிய ஆண்மை மிகக கவந்தத்தோடு பேயமகள் வருத்தததைச செய்யும்படி செல்வக் கடுங்கோ வாழியாதன பல போர்களைச் செய் தான் (பதி. 67:10-12). வளைந்த தலையையுடையது விலங்கு (பதி. 67:16). பேயமகள், கொடு விரலாலே கண்களைத் தோண்டி உண்ணப்பட்டதும் மிக்க முடை நாற்றம உடையதுமாகிய கரிய தலையைக் கையிலே ஏநதித் துணங்கை ஆடும (முரு. 52-56). உழவா, தம் ஈருடைததாகிய கரிய தலை நிறையும்படி கணணியைச சூடினர் (பெரு. 219). ஆணமககள் தலையாலாகிய அடுபபின கணணே ஊன சோறறினைச சமைததுக கள வேளவி செயதனா (மது 29). பெரிய அழகைப பெறற சிறிய தலையினையுடையது நெளவிமான (மது. 275). மழவா, பொறபூககள பொருந்திய தலையினர் (மது. 395,396). பரதவா, புலலிய தலை யினையுடையவர் (பட். 90). முடியையுடைய கரிய தலைகளை உருட்டும முன காலினையுடையது, யானை (பட்.230,231). மறவர் பகைவரது கரியதலை கள் துமியுமாறு போரை வெலலும ஒளவாளினை யுடையவா (மலை. 488,489). வருடைக்கிடாய வலிய தலையினை யுடையது (மலை. 503). தலைவி, புதல்வனது புலலிய தலையிலுள்ள செஙகழுநீா மாலையை மோநது பெருமூசசு விடடாள் (அகம. 5: 22-24) யாம இருதலைபபுள் போல ஒருயிா உடையேம எனபது தோழி கூறறு (அகம. 12 5). இளையர், வெணகடமபின புதுபபூககளைச் சுருள கொணட உளை போன்ற மயிரினையுடைய தலை யில பொலியும்படி சூடினா (அகம. 83 1, 2). மற வர், கழுதை நிரைகளைப பின்பறறி வரும வய வராகிய வணிகர்களை வாடடி அவரது அரிய தலை களைத துணிததனா (அகம. 89:11-13). பெரிய தலையினையுடையது கழுகு (அகம. 97:7). மயிலைக கண்டஞ்சிய பாம்பினது வருததததைச செயயும நஞ்சினையுடைய தலைகள் படத்தை விரிபபன போல் காயாவின மென்சினைகள தோய நீணடு தூககிய குலைகளையுடையது காநதள் (அகம. 108: 12-16). பருநது வெள்ளிய தலையினையுடையது (அகம். 117:6). களிறு, குளத்தில தோணடப பெற்ற கலங்கல் நீரால மடபபிடியின மெலலிய தலையினைக கழுவிப பின எஞ்சிய சேறறினை அளைநது நிறம வேறுபடும (அகம. 121:3-6). மழவர், சீறூரில உளளாா கையைத தலைமீது வைதது அலற அவர்தம ஆககளைக கவர்நது கொனறு தினபர் (அகம. 129:11, 12). பேயத தலையினைப போன்ற உச்சியினையுடையது தாழை (அகம. 130.5). பொனனிறம வாயநத தலையினை யுடையது ஓநதி (அகம. 145:3). கலை மானினது தலையில கப்புவிட்ட கொமபு போனற கவட்டினையுடையது வாகை மரம (அகம. 151 7,8). தோ உருளையால அறுககப் பெறற நெயதல, பாமபினது மேலே தூககிய தலையைப போல வாடி மேலெழும் (அகம 160:12-15). பாமபினது புள்ளிகளையுடைய படம் பொருநதிய தலை துணி

பட உருமேறு முழங்கும் (அகம் 202:10, 11) ஆண பருந்துகள், இறந்துபட்ட பிணங்களின் தலையினைத் தோண்டுவனவாகிக் கூடின (அகம். 215: 12, 13). நுகத்திடத்தே கட்டப் பெற்ற தலையின வாகிய குதிரைகள் விரைந்து செல்லும் (அகம். 224:4,5). மெல்லிய தலையினையுடையது யானைக் கன்று (அகம். 229:4). 'யாம் பெரிய வருத்தத்தை யடைய அவள் மையுண்ட கண்களில் உவகைக் கண்ணீர் வருதலை மறைத்துத் தன் தலையினைச் சிறிதே கவிழ்த்தனள்' என்று தலைமகளைக் கண்ணுற்றுநீங்கும் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான (அகம். 230 14-16). கானவர் அம்பு விடுதலால் இறந்தோர் வீழ்ந்து கிடக்கும் களத்தில் உயர்த்திய மயிரினையுடைய தலைகள் நிறைந்த கற்குவியலகள் களர்நிலந்தோறும் திரண்டு நினைப்போரை நடுங்கச் செய்யும (அகம். 321:5-8). பஞ்சு போன்ற மயிரையுடைய தலையினையும் செம்முகத்தினையுமுடையது மந்தி (அகம். 241:14,15). இளையரது தலைவர், மன்றின்கண் விளையாடும புதல்வனுடைய புல்லிய தலையைத் தடவுவர் (அகம். 245:7-12). இளையாள் ஒருத்தியின நலனைக கவர்ந்துண்ட அறனிலாளன ஒருவன் பினபு அவளை அறியேன் என்று கூறிய சூளினை அவையத்தார் சான்றாவாரை வினவி உணர்ந்து, அவனை மரக்கிளையில இறுகப் பிணித்து அவன தலையில நீற்றினைப பெய்து தண்டித்தனர் (அகம். 256:16-20). 'நினது அழகு மாண்புற்ற முதுகினை யாம் காண்பேம; நீ சிறிது தூரம் முன்னே நடப்பாயாக' என்று தலைவன் கூறக் கேட்ட தலைவி நாணி விரைவாகத் தலை இறைஞ்சினள் (அகம். 261:6-10). செம்மறியாடுகள் அசையும் தலையினை யுடையன (அகம். 274:4). மெல்லிய தலையினையுடையது மந்தி (அகம 288:12). ஆண்மானகள், காட்டில உதிர்ந்து கிடக்கும் நெல்லிக் காய்களைப பிணைமான உண்ண வேண்டிக கொம்பு அற்று வீழ்ந்த தன தலையில் தோன்றும் இளங் கொம்பு அதிரநதிடக கூவியழைக்கும (அகம். 291: 15-20). மழை பெய்த நள்ளிரவில் அரவினது பசிய தலையை இடறிக்கொண்டு வந்து தலைவன தலைவியை முயங்கிச் சென்றான (அகம். 328:3-5). புலி பாயந்ததால களிறு முழக்கிய ஒலியினைக் கேட்டஞ்சித் தன் கன்றினை விட்டோடிய மடப பிடி, கையைத் தலைமீது வைத்துக் கொண்டு மயக்கம கொண்ட விரைவுடன தன கன்றினைத் தேடியது (அகம 347:11-14). இளம்பெருஞ் சென்னி, வமபவடுகரது பசிய தலையினை அறுத்தான (அகம். 375 11,14). துயயினைத் தலையிலேயுடையது வளைந்த இறாமீன (அகம். 376:16). பாழ்மன்றத்தின கண்ணே நரைமூதாளர், நடுங்கும் தமது தலையைக் கவிழ்த்து வல்லுபபோர் புரிந்தனர் (அகம். 377:6-8). சிறுவர், உவர்மண் அரித்தலால மயிர் கழிந்ததும் ஊன்பொருந்தியதுமான தலையினை யுடையவர் (அகம். 387:4). தலைவன தலைவியின் தலையிற் சூடியமலர்களை முல்லை மலர்களோடு அகற்றித் தண்ணறுங் கதுப்பில துயில் கொள்வன (அகம். 391: 4-6), சிறிய தலையினையுடையது செம்மறியாடு (அகம். 394:2) செந்தினையின் கதிர் நீண்டு வளைந்தாற்போன்ற வளைந்த தலையினையுடையது குதிரை (அகம். 400:8,9) 'எவ்வியை இழந்த பாணரது பூவிலலாத வறியதலை பொலிவிழந்தது போலப் பொலிவிழந்து வருந்துவாயாக' என்று உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான (குறு. 19). நடுங்கும் தலையினை யுடையது ஆனகன்று (குறு. 132:4) தலைவனின் தமர், நரையையுடைய தம் தலையின்கண் துகிலுடையராய்த் தோன்றினர் (குறு. 146:3,4). நெருப்பைப் போன்ற சிவந்த தலையினையுடையது அன்றிற் பறவை (குறு. 160:1). சிறிய தலையினை யுடையது வெள்ளாட்டின தொகுதி (குறு 163:2). பெண்மான சிறு தலையினையுடையது (குறு. 183:3). பாம்புகளின பசிய தலைகள் துணியும்படி இடியேறு முழங்கியது (குறு. 190:4). கிளைத்த கொம்பு பொருந்திய தலையினையுடையது ஆணமான (குறு. 213:2). 'இவன இவளது கூந்தலைப பிடித்து இழுக்கவும் இவள் இவனது புல்லிய தலையிலுள்ள முடியை வளைத்து இழுபபாளாய் ஓடவும் சிறு சண்டையினை முன்பு செய்தனர்' என இடைச் சுரத்துக் கண்டார் காதலரது இளமைக்கால நிகழ்ச்சியினைக் கூறினர் (குறு. 229:1-4). பாம்பினது படத்தையுடைய பெரிய தலையை இடியேறு துணிக்கும் (குறு. 268:3,4). தலைவன, சுழித்தல ஆர்ந்த மயிரையுடைய தனது தலையில் வேம்பின் மலரைப் பொலியும்படி அணிந்து சென்றான் (குறு. 281. 3,4). களிறு, அணங்குடைய பிறர் இருத்தற்கரிய தன் தலையினை வாழையின் குருத்து தடவுதலின வலிகெட்டு மயங்கு துயர் உற்றது (குறு. 308.1-4). தலைவியின் தலையில கிளைத்த மெல்லிய மயிர்க்கொத்துக்கள் கீழ்த் தாழ்ந்தன (குறு. 337:1,2). மெல்லிய தலையினை யுடையது யானைக் கன்று (குறு. 394:1; நற்: 171:3). வழியிற் செல்லும் மக்களுடைய சென்னியை மோதியதனால் குருதி படிந்து சிவந்த மாறுபட்ட தலையையுடையனவும் குருதி பூசிய வாயையுடையனவுமாகிய பெரிய தலையை யுடையன புலிக் குட்டிகள் (நற். 2:3-5).(²) பாமபினது வருத்துகின்ற அரிய தலை துணிந்து வீழும்படி சினந்து இடியேறு

முழங்கியது. (நற். 37·8-10). பஞ்சு போன்ற தலை யினையுடையது மந்தி (நற். 57:3;95.4;326:4). கா ரெருமை, அகன்ற தலையினையுடையது (நற. 80:1;391:4). இருபபைப்பூப்போன்ற மெல்லிய தலை யையுடையன இறாமீனகள (நற். 111:2). நிறம பொருநதிய படப்பொறியையுடைய அரவினது தலை நடுங்கும்படி இடி முழங்கும் (நற். 129.7,8) நாட்டின் தொகுதி சிறு தலையினையுடையது (நற். 142:7) தலைவி தலைவனது கூட்ட உண்மையை உரைத்திட அதனைக் கேட்ட அனனை வெட்கித் தலை இறைஞ்சி நினறனள் (நற 147:10,11). கடுவனால முயஙகபபடட மநதி புணாசசிக குறி யினைத் தன சுறறம அறியுமெனறஞ்சி வேஙகைக கிளையேறிச சுனை நீரை நோககிக கவிழநது தன மெலலிய தலையில குலைநத மயிரைத திருததும (நற 151:5-11). புலலிய தலையினையுடையது மநதி (நற. 168.5,373 2,379.1; ஐங. 273:2). ஆடுகினற தலையினையுடையது ஆடடின் தொகுதி (நற. 169·6) தறியிலே பிணிததுக காப்பவரும மீதேறி நடததுபவரும் ஒழிநத வறிய தலையினையுடையது பெருஙகளிறு (நற. 182 8,9). கொழுமீன, நிண மிகக தலையையுடையது (நற். 291 2) கவிநத தலையையுடையது ஆணகரடி (நற. 325 1). பூப போலும் சூட்டினையுடைய புலலிய தலையினை யுடையது மயிற்பேடை (ஐங. 62:1,2). வெள்ளிய தலையினையுடையது குருகு (ஐங 86.1). குதிரைகள, பார்ப்பனச் சிறார்போல முன்குடுமியமைநத தலையையுடையன (ஐங. 202:1-3). நெயபபினறி வறணட தலையினையுடையது பருநது (ஐங. 321: 1). பசிய தலையினையுடையது அரவம (ஐங. இ.1:2) சிவபெருமான, அயனது தலையை அஙகையிலே ஏநதிக காபாலக் கூத்தாடுவா (கலி. 1 11,12). ஐயிரு தலையின் அரககர்கோமான (இராவணன) (கலி. 38:3). தலைவியின தமா களவுககூட்டததை உணர்ந்து காதலரிடத்துக் குறறமில்லையாதலை உணாநது சினம் ஆறித தலை சாயததிருநதனா (கலி. 39:22-24). தோழி தலைவனைப பாாக்கும காலத்து அவன் மெலலெனத தலையைத தாழததி னான (கலி. 61:5,6) முடமுதிர் பாாபபான், மயிர் நீங்குதலால் தட்டையான தலையினையுடையவன (கலி. 65.6-8) புதல்வனின் மெனமையினையுடைய தலையிடததே மூனறுவடம எனனும் அணி கிடநது மின்னியது (கலி. 80:2). 'கையாற புனைந்த மூன்று வடம, மெனமையுடைய தலையிடததே தாழ இவ்விடததே வருக' எனறு தலைவி புதலவனை அழைததாள் (கலி. 86:2,10). 'உடலும உயிரும ஒனறாகவும் தலை இரணடாகவும உள்ள பறவை யின சென்னி இரண்டும தம்முள போர் செயதலைப போன்ற தன்மைத்தாக நீ கொடுமைகளைக் கூறிப் புலவாதே' எனறு தலைவன் தலைவியிடம் கூறி னான (கலி. 89:4,5). 'அழுநதும நாவுடனே தலை யைச சாயத்து நீ கூறும் கூறறோ பொய; ஆகை யினாலே நீ எமமால் அகபபடுககபபட்டாய' எனறு தலைவி தலைவனிடம கூறினாள் (கலி. 93 14-16). ஆயர், பொருகினற ஏறறினது சேருதற் கரிய தலையை அஞ்சாா (அகம. 108.40). தழுவுதற் கரிய தலையினையுடையது ஏறு (கலி. 106:47). திரு மாலடியைத தலையினாலே வணங்கிக கையினால் தொட்டுச சூளுற்றேன' எனறு ஊடற்றலைவியிடம் தலைவன கூனறிான (கலி. 108:57,58). தலைவன, மழையில நனையும ஏறுபோலத தலையைச் சாயததுத் தலைவி கூறுவதற்கு எதிா கூறி மயகக முறறான (கலி. 117.14,15). 'தலைவன என் சீறடி முனனே தனதலையுறும்படி வணங்குவான போலக் கனாககண்டேன' எனத் தலைவி தோழியிடம் கூறி னாள (கலி. 128:17,23). அசசநதரும இயல்பினை யுடைய படம விரிககபபட்ட ஆதிசேடனின அரிய ஆயிரந தலைகளும சினததீயை உமிழகினற தனமை யோடு திருமாலின முடிமீது எழுநது நினறன (பரி. 1·1,2). 'ஐநது தலைகளைத் தனககுத் தோறறு வித்துககொணட சிவனும நீயோ' எனத் திருமால போறறபபடுவர் (பரி. 1:43,44). திருமால ஏநதிய ஆழிபபடை, அவுணரது தலைகள வலியழிநது சாயநது தரித்த மாலையோடு புரளுமபடி அவாதம உயிரைச செகுககும (பரி. 2:41-48). அடியாா, திரு மாலின் திருவடியைத தலையுற வணஙகிப பல காலும ஏததிப்பரவுவர் (பரி. 2:72-74). ஆயிரமாகிய கிளாநத தலையையுடைய அரவு (ஆதிசேடன) (பரி. 3:59). கருடனின தலைமேல அணியபபடும் சூட்டு பாமபாகும் (பரி. 4:45). நீராடுவோரின மலாமாலைகளை வாஙகித தன தலையில சூடடி மகிழதறகுக் காரணமான நீரினையுடையதுவைகை (பரி. 7.84,85). செவ்வேள், ஊடலானே சென்ற தேவசேனையைத தொடாந்து சென்று அவள, திருநதடிமேல தனது தலையிற சூடடபபெறற மாலை தோயுமபடி வணங்கினார் (பரி. 9:36,37). அடியாா, செவவேளின் திருவடிகளில தமது தலை யுறுமபடி வீழநது வணஙகி வாழததுவா (பரி. 9.83, 84). வையை வெள்ளம தமபால நீராடும புதல் வரது மெலலிய தலைமுசசியிடததுள்ள முஞசம் எனனும அணியைக கைககொணடு ஓடியது (பரி. 16:7-9). பரஙகுனறிறகும கூடலுககும் இடையில் கிடநத நிலமெலலாம மலாமாலையணிநத மக்கள் தலைகள நிறைதலால பூககளை வைததுககட்டி நிலதகிற்கு இடட மாலை போலத் தோனறியது (பரி. 19.15-17). ஐநது தலையினை யுடைய அரவம்

(பரி. 19:72). அடியார்கள், திருமாலின திருவடிமீது தம தலைபொறும்படி பொருந்தி வீழ்ந்து வணஙகி வாழதததுவா (பரி. தி.1 6). அணங்குடைய ஆயிர மாகிய அரிய தலைகளை விரிதத அண்ணல் (ஆதி சேடன) (பரி. தி.1 79,80).

2. இடம். அகனற தலையையுடைய - இடத்தை யுடைய-நாடுகள் (புறம 7.13,63:15;89 3,98:20; பதி. 23:25;25:13,28,14,62:19; பெரு. 32). அகலிய தலை யையுடையது நலலரண (புறம. 15:3) பரநத தலை யையுடையது உலகம (புறம். 24:35,53:9;132.9,186:2; 213 3; பதி. 88 3; மது 199,237; அகம. 374.2; கலி. 103: 79; பரி. 12.102). மன்றம அகனற தலையையுடை யது (புறம. 34:12). அகனற தலையையுடைய பேரூர் (புறம. 57:7). சோழன போராவைக்கோப்பெருநற் கிளளி, ஆமூர்மலலனைச செனனியும் காலுமாகிய இருதலையும முறியுமாறு மோதிக் கொன்றான் (புறம 80:8,9) அருவி ஒலித்திழியும் வேயமிக்க அகனற தலையாகிய அடுககததில கானதள் மலரும் (புறம். 168.1,2). 'அறிவும் புகழுமுடையோர் இறந் தாராக வறிய தலையையுடையதாக உலகம் ஆகி விடவில்லை' எனறு பரிசில நீட்டித்த அதியமா னிடம் ஔவையார் கூறினார் (புறம். 206:8,9). நனந தலையுலகம் (அகலிய இடத்தையுடைய உலகம்) (புறம. 221:11; பதி.63:18; 86:5; முல்லை. 1; குறு. 6.3). அகனற தலையினையுடைய மூதூர் (புறம. 228:4). தனிததததலையையுடையது புறங்காடு (புறம. 250;9) மறக்குடி மகளொருததியின நலன், புல்லிய தலை யாகிய பாழிடமாக ஊரினைக் கெடுக்கும (புறம். 346 7). தொல்குடி மனனன, பல நெற்போர் களை அழித்துக் கடாவிட்டு அகனற தலையில் குவித்த நெலலை இளையர்கசு நாளுணவாகக் கொடுத்தனன (புறம் 353:8-11). அகனற தலையை யுடையது வையம் (புறம. 371:1). பொருநர், தம் மைக காக்கும் வேநதரைக காணபபெறாது மரத தின தலையை (கீழிடததை)ச்சோநது தங்கிப பட்டினி யால வருநதினர் (புறம. 371:2). அகனற தலை யினையுடையது நன்னாடு (பதி. 15:17). விரிந்த தலையினையுடைய பசுமையான நிலததில வாழும் மககள்தொகுதி (பதி. 17:9). அகனற தலையை யுடையது பேரியாறு (பதி. 28:10). திருமாலை வழி பட வரும் மககள் செய்யும் ஆரவாரம நாலவேறு திசைகளின் பரநத தலைகளில ஒனறாயத திரண டெழுநதொலிததது (பதி 31:3,4) இறைச்சித துணடங்களை வைதத தலையினை மறநத ஆண் கோடடானைப பெண கோட்டான வருததியது (பதி 44:17-19). அகனற தலையினையுடையது அரண (பதி. 45:9) கடலபிறககோட்டிய செங்குட்டுவன, பகையரசரது நற் புகழை, அகன்ற தலையுடைய உலகத்தினின்றும கெட்டோடச் செயதான் (பதி. 50:15,16). அகன்ற தலையிலுள்ள பகையரசர் தூசிப் படை அழிநது அலறும்படி ஆடுகோட்பாட்டுச் சேர லாதன் நாளும் போர்செய்தான் (பதி. 55:16,17). நாடும் காடும் அவலும் மிசையும் எனபபல்வேறு பட்ட அகன்ற தலையையுடையது உலகம் (பதி. 59:14). செல்வக் கடுங்கோ வாழியாதனின் முன் னோர்நானகாகிய வேறுபட்ட அகனறதலையுடைய திசைகளும் ஒன்றுபோலப் பகையின்றி விளங்கு மாறு ஆட்சிபுரிந்தனர் (பதி. 69:12,16). மருத வளம் சான்ற விரிநத தலையையுடைய கழனியின் கண்ணே உலவும் நாரைகளை மகளிர் ஓப்பினர் (பதி. 73:4,5) அகனற தலையையுடையது காடு (74: 24). பேரூர், அகன்ற தலையினையுடையது (பொரு 1). அகன்ற தலையினையுடையது பொய்கை (பெரு. 292,294). அகனற தலையினையுடையது தேயம் (மது. 322). வீரமத்தளததின் வலிய கணணாகிய தலை (மது. 396) மனறம் அகனற தலையினையுடையது (பட். 69). அந்திககாலத்தில மகளிர் விளககினை மனையாகிய தலையிலே கொளுத்தினர் (குறி 223, 2 4). அகன்ற தலை யினையுடையது தெரு (பட். 193). கரிகாலன பகை வரது அரணாகிய தலையிடத்தே செனறு வெறறி கொண்டான் (பட். 239). அகன்ற தலையினை யுடையது குன்றம் (மலை. 272). 'மழைபெயகின்ற காடுகள் அத்தலையின்கண மிகப்பலவாகும' (மலை. 385). காவலையுடைய அகன்ற தலையில ஈனறு இளைப்பட்ட பேடைக்கு எருவைச்சேவல இரை தேர்நதது (அகம. 3 3-5). பருநது தங்கியிருநது வருத்ததைச் செய்யும் ஓசையைப் பன்முறை பயிற்றும் யாமரங்கள் உயர்ந்த அகனற தலைகளில் ஆநதைகள் பறையின் ஓசையைப் போலப் பொருள் தெரிய ஒலிககும் (அகம். 19:2-5). ஊர் வெம்மை நிலைபெற்ற புல்லிய தலையினையுடையது (அகம். 21.14). செழியன், தலையாலங்கானததின அகனற தலை செநநிறம் அடையும்படி எழுவரது நல் வலததை அடககிக் களவேள்வி செயதான் (அகம. 36:13-22). புலியினைக் கணடஞ்சிய யானைக் கூட்டம் பலவிடத்தும் திரிதலுறற அகன்ற தலை யினையுடையது பெருங்காடு (அகம். 39:11,12). ஆண்பருநதின், சிறை கரிநது தீயுமாறு வெப்பம மிகக மூங்கில் உயர்ந்த அகனற தலையாகிய காட்டுவழியே தலைவன் சென்றான (அகம. 51:6-8). யாமரங்கள் உயர்நதுள்ள அகனற தலை (அகம. 65:13). மரஙகள் பொலிவறறிருககும கறகுவியல்கள் உயர்ந்துள்ள அகன்ற தலையாகிய நீண்ட இடங் களில் இருளிலே விரைந்து செனறு மறவர்,

நிரையை மீட்டனர் (அகம். 67:3-6). காடு, அகன்ற தலையினையுடையது (அகம். 78:1). தலையகன்ற காடு (அகம். 79:9). விரிந்த தலையினையுடையது நன்னாடு (அகம். 83:10). ஞாயிறு காய்தலின் நீர் வறண்ட பேய்த்தேர் ஓடும் அகன்ற தலையினை யுடையது பெருங்காடு (அகம். 89:1,2). மூங்கில்களின் கணுக்கள் பிளந்த வெயில் விளங்கும் அகன்ற தலையில், தலைவன் பொருள் வேட்கையினால் பிரிந்து சென்றான் (அகம். 91:7,8). அகன்ற தலை யினையுடையது பெருங்காடு (அகம். 101:11). நிழலற்ற அகன்ற தலையாகிய பாலைநிலத்தில் புல்லூற்றினால் ஏற்றுதல் குறிக்கப்பட்ட குறும் பூழ்ச் சேவல் பாதுகாவலான இடத்திற்குச் சென்று தங்க எண்ணியது (அகம். 103:1-4). அணில்கள் கூடியாடும் மூங்கில் வளர்ந்த அகன்ற தலையில், அம்பு பட்டு வீழ்ந்தோரின் தலையிட்டு மூடிய பதுக்கைகளையுடைய கவர்த்த நெறிகளில் ஆறலைப்பதால் வழிப்போவார் இல்லையாயினர் (அகம். 109 6-10). ஞாயிற்றின் வெம்மைமிக்க அகன்ற தலையில் புலியாற் கொன்று தின்றொழிந்த யானையின் ஊனில் ஆறலைப்போர் கோலிற் கோத்துக் கொண்டேகியதுபோக எஞ்சியதை உமணர், சிறுதீயில் வதக்கிச் சோற்றுலையில் கூட்டி யாக்குவர் (அகம். 169:2-7). தலைவன் பாம்பினது சென்னி துணிபடுமாறு இடி முழங்கும் அச்சம் வரும் அகன்ற தலையில் ஊக்கம் குன்றாத உள்ளத் துடன் வேலே துணையாகத் தலைவியை நாடி வருவான் (அகம். 202:10-14). மூங்கில்கள் அழ கிழந்த மழை பெய்யாது பொய்த்த அகன்ற தலை யாகிய பாலையிடத்தே களிற்றிரையைத் தப்பிய வேங்கை சினம் சிறந்து முழங்கப் பிடியானைகள் இரிந்தோடின (அகம். 221:10-13) கானம் அகன்ற தலையினையுடையது (அகம். 238:8). மழை பொய்த் தலின் அருவி வற்றிய அச்சம் வரும் அகன்ற தலை யில் தோன்றிய பேய்த்தேரை மழையென்று கருதி ஓடித்தாகம்பட்ட கலைமான், வேறுபுலம் செல்லாது அப்பேய்த்தேர் அசையும் தலையாகிய வெங் காட்டின்கண்ணே வருத்தமுற்றுத் தங்கும் (அகம். 241:8-12). அகன்ற தலையினையுடையது பெருங் குன்றம் (அகம். 258:5,6). மரற்செடி வாடியுள்ள மேகம் பெய்யாதொழிந்த அகன்ற தலையையுடை யது குறும்பொறை (அகம். 271:4,5). வேங்கை தன் பிணவின் பசியினைப் பொறாது பனறி வருகின்ற நெறியைப் பார்த்திருக்கும் காட்டின் பரப்பாகிய அகன்ற தலையிலுள்ள மரங்களின் நிழலில் வழிப் போவோர் தங்கியிருப்பர் (அகம். 277:5-11). ஆல மரத்தின் நெடுவிழுதினை மோதிய கோடைக் காற்று துணையுடன் இருக்கும் புறாக்களை ஓட்டும் இடமாகிய மழையற்ற அகன்ற தலையில் பிணை மானை அதன் கலை முதுகிட்டதே நக்கும் (அகம். 287:7-10). ஞாயிற்றின் கடுங்கதிர் தெறுதலால் வெம்மைமிக்க மூங்கில்கள் தெறிக்கும் அகன்ற தலையாகிய கானத்தைக் கடந்து தலைவன் ஏகி னான் (அகம். 295:2,3,12,15). பொலிவற்ற தலை யினையுடையது மன்றம் (அகம். 301:24). மேகம் விரும்பி மழை பெய்த தெய்வம் உறையும் அகன்ற தலையினையுடையது கொல்லிமலை (அகம். 303: 5,6). வேங்கையின் மாறுபாட்டைத் தொலைத்து களிறு 'மதஞ்செருக்கி வலிமிக்கு வழிப்போவோ ரைக்கொல்லும் முள்ளம்பன்றி பொருந்திய அகன்ற தலையின்கண் கரடிக்கூட்டம் புற்றாம் பழஞ்சோற்றினை ஆராயும் (அகம். 307: 6-10). பழமையான வெற்றியினையும் அகன்ற தலை யினையும் உடைய பயன் பொருந்தியது மலை நாடு (அகம். 318.7). பாழ்பட்ட அகன்ற தலையில் காக்கைப் பெருங்கிளை ஆலமரக் கிளையேறிக் கொடுமறவர் விலலிடுதலின் தொலைந்தோரது பிணங்களைக் கவர்ந்துண்ணும் (அகம். 319:1-5). பொலிவற்ற தலையினையுடைய மன்றம் (அகம். 321:10). பேய்த்தேரை நீர் என்று விரும்பி விலங்கு கள் ஓடித்திரியும் மரற்செடி வாடும் அகன்ற தலை யினையுடையது காடு (அகம். 327.9,10,19). உப்பு வணிகரது வண்டியின் உருளையிலுள்ள பூணாகிய (சக்கரக்கட்டாகிய) தலையினை நடுகல் சிதைத்தது (அகம். 343.4,5). நாட்டின எல்லையினைக் காணற் குரிய உயர்ச்சியினையும் அகன்ற தலையினையும் உடையது பக்கமலை (அகம். 372 2,3). ஞாயிற்றின் கதிர் ஈரத்தினைத் தொலைத்தமையால் நீரற்ற அகன்ற தலையிலுள்ள நெறியில் கண கலைமான் பேய்த்தேரினை நீரென விரும்பியோடிக் கலங்கிய உள்ளத்தோடு பிணையினை அழைக்கும் (அகம். 396:5-11). புல்லிய தலையினையுடையது மன்றம் (குறு. 64:2). அகன்ற தலையினையுடையது ஓமை யம் பெருங்காடு (குறு. 124 1,2). அகன்ற தலை யினையுடையது கானம் (குறு. 272:3) கொடிய மறவரது அம்பினைப் பேணாராகி இறந்த வழிப் போவார் மீது தழையிட்டு வைத்த குவியல்கள் கல்லுயர்ந்த அகன்ற தலையில் உவரைப் போலத் தோன்றும் (குறு. 297:1-5). பூஞ்சினையில் இருந்த மயில்கள், பாய்கின்ற நீரையுடைய அகன்ற தலை தனித்து வருந்துமாறு கூவின (குறு. 391:7-9). 'நின் அழகிய நலமெல்லாம் கெடும்படியாக அயலாரிருக் கும் இத்தலைக்கண்ணே அழாதிருத்தலையேனும் செய்வாயாக' என்று தோழி தலைவியிடம் கூறி னாள் (நற். 13:1,2). ஒலிக்கின்ற தலையையுடை யது போர்க்களம் (நற். 113:9). பறவைகளின்,

உள்ளங்காற சுவடுகள் பொருந்திய வரிகள் விளங்கும தலைகளையுடைய நீரவறறிய பககங்கள் தோறும் நுணமணல தோனறும் (நற் 241·1-3). காரமேகம, திசைகளின அகனற தலையெலலாம் மறையும்படி பரவி மழை பொழிநதது (நற். 347:1, 2,5). வெளளிய விளிம்பாகிய தலையினையுடையது மாமழை (ஐங. 209:4). தீப்போனறு விளங்கும வெபபம்மிகக அகனற தலையின்கண நிழலிடம் பெறாத பிணைமான தன குட்டிகளோடு வாடி யிளைத்தது (ஐங். 326·1,2). ஆள்வழககற்றுப் பாழபட்டது அகனற தலை (ஐங். 329:1)

3. உச்சி. வெளிய தலை-உசசி-உடைய திரை பொருநதியது கடல (புறம. 2.10). கடலின் அலை வெளிய தலையை உடையது (புறம். 31:14;55:18). பறமபுநாடு, பாறையும சிறுமலையும் கூடிய தலையை யுடையது (புறம. 118·1,5). பூவைத தன தலையிலே யுடையது கொடிமுல்லை (புறம. 200:9). மனறததில நிறகும் உலாநத தலையினையுடைய இரததிமரததின நிழலில் சிறுவர் அமபெயது விளையாட்டயாவர் (புறம. 325.11,12). வானளாவிய தலையினை யுடையன குன்றுகள (புறம. 379:13). நுரையாகிய வெள்ளிய தலையினை யுடையது செம்புனல (பதி. 30:17). வடககு தெறகாகக குறுக்கிட்டு நின்று தடுத்த தலையினையுடைததாய் எழுநதுளளது பெருமலை (பதி. 31:16,17). சிதைந்த தலையினையுடையது வேலமரம் (பதி. 39·12). நுரையாகிய வெள்ளிய தலையையுடையது அலை (பதி. 42: 22). நுரையாகிய வெள்ளிய தலையையுடையது செநநீா (பதி. 87:3) நுரையைத தலையிலே யுடையது புனல (பொரு 240) பூணசெருகபபட்ட தலையினையுடையது பாரை (பெரு 91,92). மலையுசசியினினறும வீழநதோடுகினற நீா கொதிததுககுவிதத வெள்ளிய தலையினையுடையது மணறகுன்று (மது. 332-337). ஆரககைத தலையிலே உடையது புளியமபழம (மலை 178). வெள்ளிய தலையை யுடையது கடலநீா (அகம. 20:8;90:1). சிதறிய தலையினையுடையது ஓமைமரம் (அகம. 21.15). பிடாவின வெள்ளிய தலையினையுடைய குறும்புதர் மாலைபோல மலரும (அகம 34:1,2) மூஙகில, தழைநத தலையினையுடையது (அகம. 47:34). ஞாயிறு காய்தலின மராமரத்தின தழைகள் வாடிக கவிழநதுள்ள உலாநத தலையினை யுடைய கிளைகளில் ஏறிப் பருநது தனிமை கொளள வருநதும (அகம். 81:7-9). காயந்த தலையினையுடையது ஞெமை மரம (அகம. 111:5; 171.7,187:11). மரஙகளின தலை கரியுமாறு ஞாயிறு காயநதது (அகம. 169.1,2) பகக மலையிலுள்ள சுரபுன்னையின் தலை வாடும்படி ஞாயிறு காயும் (அகம. 177:7,8). கள்ளியின புலலிய தலையினை முல்லைககொடி மூடும் (அகம். 184:13,14). வானில ஓங்கிய தலையினையுடையது மலைச்சாரல் (அகம. 201:15). கரடியேறறை, இருப்பைபபூவினைத் தின்று வெறுப்பின செம்மண புறறினது பெரிய தலையினைப பெயர்கும் (அகம். 247:4-6). இலைகளை உதிர்தது வறறிய பொலிவறற தலையினை உடையது வேலமரம் (அகம். 293:1). துளையுடைய, துய்யையுடைய தலை கூம்பி வற்றியது பனைமரம் (அகம. 333:10,11). வெள்ளிய தலையினையுடையது புணரி (குறு. 144:2). சிறந்த தலையினையுடையது பெணணை (குறு. 182:1). ஞெமை மரத்தின் தலையினகண ஊனை விரும்பிய பருந்து வந்து தங்கும் (குறு. 285 6,7). பனையின் தலையிலுளள நெடுமடல குருத்தோடு மறையுமாறு மணற்குபபையைக் "கடுஙகாற்று கூட்டும் (குறு. 372:1-3). உலர்நத தலையினையுடையது உகாயமரம் (நற். 66:2). சிச்சிலிப்பறவை போனற தலையினையுடையது கள்ளி (நற். 169:4). கடற்புறததிலே சாயந்த தலையினையுடையது தாழை (நற். 211:7). தினைத்தாள்கள் கதிர்கள் கொய்தொழிதத கொம்பாகிய தலையினையுடையன (நற். 306 5,6). விசும்பில உயர்நத தலையையுடையது குன்றம் (நற். 347: 4). நெடுமலையின் தலையில் மழை சூழ்ந்திருககும் (ஐங். 207:4). வயலைககொடி படர்நத மலையின தலையிலுள்ளது அசோகு (ஐங. 211). வற்றி விரிநது நினற தலையினையுடையது ஓமைமரம் (ஐங். 321:2). தம் புகழ்களைக் கேட்ட சானறோரைப் போல மரங்கள் தலை சாய்த்துத துஞ்சின (கலி. 119 6). 'தண்பரங்குன்றின தலையைக் கையால் தொட்டேன்' என்று தலைவன் தலைவியிடம் சூளுரைத்தான (பரி. 6.94,95).

4. நுனி. நிணத்தைத தினறு களித்த நெருப்புப் போலும் தலையை - நுனியை - யுடையது வேல் (புறம. 200:6). பூண்செறிநத தலையையுடையது தண்டுககோல் (புறம. 243:12) வேலின தலையை யொதத கூர்முனையினையுடைய ஈநதின் இலையாலே குடில் வேயப்பட்டது (பெரு. 87,88), மூங்கிற் கோலின தலையிலே கயிற்றினால கட்டின தூண்டிலில பொதிநத இரையை அத்தூண்டிலின மடிதத தலை இரையினறித் தனிககும்படி வாளைமீன் கவ்விச சென்றது (பெரு 284-287). எறிகோலகளை பூததொழிலைத தலையிலே உடையன (முலலை. 41). பநதங்களினால் கொளுததி வைத்த நிறத்தை யுடைத்தாகிய தலைநிமிாநது மேனோககி எரிகினற விளக்கை நெயவறறுநதோறும நெய்வாாததுத்

தூணடிவிடுவர் (நெடு. 103, 104). விளக்கில் எரிகினற தீககொழுநது வாடைககாற்று அடிககுந் தோறும் அசைந்து தெறகுநோககி எழுநது சாயநத தலையினையுடையதாய எரியும் (நெடு. 173-175). வேபபநதாரினை வேலின தலையிலே கட்டினர் (நெடு. 176). துய்யையுடைய தலை வளைந்த கதிர் களை உடையது சிறுதினை (குறி. 37, 38). தலை யிலே ஆக்கினையுடையது வெள்ளிய பலா விதது (அகம். 7:21). தினைப்புனத்தில, கிளிகள், கதிரை முறிததலின கோலாகிய தலையையுடைய தட்டை கள் நிறைந்து காணபபெறறன (அகம். 38:12-14). இற்றிமரத்தின் புல்லிய தலையினையுடைய விழுது துறுகல்லைத் தீணடியது (அகம. 57:6, 7). துய் யினைத் தலையிலே கொண்டது பாதிரிப்பூ (அகம். 191:1). சிறிய பை தொங்கவிடபபட்ட பல தலை யினையுடைய கோலினை யுடையவன வேலன் (அகம். 195:13, 14). அம்புகளைத் தொகுத்த புட்டில் களின் தலை திறககபபெற்றனபோல இருப்பையின் தளிர் பொதியபபெறற பூங்கொத்துக்கள் தோன்றும் (அகம். 225:10, 11). பஞ்சுபோன்ற தலையினையுடையது ஈங்கைபபூ (அகம. 294:6,306: 3). இரலைமான் மேயந்தமையால வரகுத தட்டை குறைநத தலையினையுடையதாயிற்று (குறு. 220: 1-3). புலியின் முதுகிலே குததி விளையாட்டயர்நத களிறறின் இனிய தலையையுடைய மருப்பு செநநிற மாயிறறு (நற். 39:5, 6). பஞ்சுபோனற தலையை யுடைய புறவிதழையுடையது குருககததி மலா (நற். 97:6). பூவையொத்த மெலலிய தலையை யுடையது சிறுகோல் (நற். 110.3). மூங்கிலின் முளைத்தெழுநத வேல் போனற தலையையுடைய கொழுமுளையைப் பிடியானை உணணும் (நற். 116:4, 5). பஞ்சு போனற தலையினையுடையது பாதிரி மலர் (நற். 118:8). பஞ்சு போன்ற தலை யினையுடையது ஈங்கைப்புதுமலர் (நற். 193:2). பஞ்சு போன்ற தலையினையுடையது ஏனறகதிர் (நற. 206:1). முறுக்குண்ட பூவிதழகளின தலைகள் நெகிழ்ந்து மலாநதிட அம்மலர்களில உள்ள தேனை வணடுகள் நுகாநதன (கலி. 71:2, 3). மரககிளை களிலிருந்து உதிாககபபட்ட பூககளும் தளிர்களும சுனையில வீழநது அங்குள்ள அரும்புகளைப் பொருந்தி எடுத்த தலையினை யுடையனவாயக் கிடநதன (பரி. 19:68-70).

5. **தலைமை.** அரிய தலை - தலைமை - உடையது பெரும்பாணரது மணடை (கலம) (புறம. 235.10). வேந்தர்க்குரிய அரசியற்றொழிலைச் செயயும அரிய தலையையுடையது அமைசசரது சுற்றம் (புறம. 285: 7). மாட்சிமைபபடட தலையினையுடையது செவ வேளின் கோழிககொடி (முரு. 227). இம்மையில் கற்புபபூணடு நிகழததும் இல்லறமே அறஙகளில் தலையுடைய அறமாகும (கலி. 9.24) மனனனைச் சோநது செல்வததை நுகர்ந்த ஒருவன் அவன் சார் வாய் நின்று வினையால தலை (தலைமைபபாடு) எயதுவானாயின அதனால் விளையும பயனைஅம மனனனே கொள்வான (கலி. 64:24, 25). 'நம்மோடு ஒப்பளாய்த் தலைககொணடு (தலைமைபபாடுற்று) நம்மைச் சினநதிருக்கும் புதியவள் இலலததிறகுச் சென்றான' எனப புதலவனைப் பறறித தோழி தலைவியிடம கூறினாள (கலி. 82:23,24).

6. **பக்கம்.** காவினது ஒருதலைக்கணணே - ஒரு பக்கத்தின் கண்ணே - பதலை தொஙகியது; ஒரு தலைக்கணணே சிறுமுழா தொஙகியது (புறம். 103: 1,2). முன்னும் பினனுமாகிய இருதலையிலும் சஙகு ஒலிப்பக கடாமயானை செலலும (மது. 380,383). பகைப்புலததில இருதலையும போரபபடை வநதன (மது. 402). நெல்லரியுநா கட்டிய, அசையும தலைக ளுடைய பெரிய நெற்கடடுகளை உழவா களததிற சோததனர் (அகம். 84:11,12). எறுமபு, இருதலையும கொள்ளியினையுடைய புழறறடடையின் உள்ளே நினறு ஒரு தலையும செல்லவியலாது வருந்தியது (அகம். 339.9,10). தலைவன, கனறோடு செல்லும தலைவியின கையிலுள்ள தாமபின ஒரு தலையைப பிடித்தனனாய் அவள முனநினறு போகவிடாது விலககினான. (கலி. 116:1-3).

7. **முதல்.** ஆவியின குருளை தலை - முதல் - வேட்டையில் களிற்றைக கொனறது (பொரு. 142). ஆடு (மேடராசி) தலையாக ஏனைய இராசிகளில வானிடததே செனறு ஞாயிறு திரிதலைச செயயும (நெடு. 160-162). 'இனறு தலையாக ஏககசிறு நெறியில வாராதே' எனறு தோழி தலைவனிடம கூறினாள் (அகம. 318.9-15). இடபவீதி மிதுனவீதி மேடவீதி மூனறும எரியும (காாததிகை) சடையும (திருவாதிரை) வேழமும் (பரணி) ஆகிய நாள்கள தலையாக அவறறது பெயரால் வேறுபடுததோதப பட்டன (பரி. 11:1-3).

8. **தலைவன்** தீணடி வருத்தும தனமை பொருநதிய உயாநத பிறபபினையுடைய தெயவஙகட்குத தலை யாகிய - தலைவனாகிய - இநதிரனாலே பாதுகாக கபபடுவது இமயலை (பரி. 9.2,3).

9. **சிறப்பு.** சிகரம் ஓங்கினாற் போலத் தமது புகழை நிலைநிறுததி வசையிலலாத உடம்போடு இறத்தல் மிக்க தலை-சிறபபு-உடையதாகும (புறம. 214:12,13)

10. தொடக்கம். குடகமலையிடத்தே தலையினை - தொடககத்தினை - யுடையது காவிரியாறு (பட். 6).

11 முனனிடம். விலலின் ஓசையை வெருவிய மரையேறு தலையிலுள்ள - முன்னிடத்திலுள்ள — குறுங்காட்டில் விரைநதோடும (மலை. 406,407).

12 மேற்புறம். திருமால் ஏறும் கருடனது சிறகு களின் தலையில் - மேறபுறததில - அணியபபடுவன பாமபுகளாகும (பரி. 4:46).

13. மேல். அதன்தலை - அதற்கு மேல் - '(புறம. 191: 5; 216.10; அகம. 68.9, 158:14; 178.20; 190:10; 369: 9; குறு. 161:2; 165:1,2; 240:4, 302:2; 366:3; 377:2; நற். 129:6; ஐங். 160 3; கலி. 57:13).

14. வேற்றுமையுருபு. வழுதி யானை இரும்பிடர்த் தலை - இடத்து — இருநதான் (புறம 3:11) தலை - இடம் (புறம. 76:11; 117;4; 213:4; 258:3, 291;6,7; 312 1; பதி. 22.30; மது. 181; மலை. 371; அகம. 8:15; 212:23; 258:15; 350:12; குறு. 222:7; நற். 39 8; ஐங். 403.1; கலி 133:18; 138:2).

**தலைககுடை** - தலையிலணியப்படும் ஓலையாலாகிய குடை. கோட்டினையுடைய தலைக்குடையை - தலையிலணியப்படும் ஓலையாலாகிய குடையை - சூடிய கொலலையுழவர், பயிாகள் வளையும்படி ஒதுககிக் களைபறிததனர் (அகம் 194:7-9).

**தலைக்குரல்** - முதல்ஒலி. 'நெஞ்சே, சிற்றூரின் குடியில இரவில் தங்கிச சேவலின தலைககுரல - முதல் ஒலி - எழுந்த விடியற்காலையிற் புறப்பட்டுச் சென்று கவாத்த நெறிகளையுடைய காட்டில மிகவும் வருநதினை' எனறு தலைவன தனனெஞ்சிறகுக கூறினான (அகம. 87:3-6,10,11).

**தலைக்கூடுதல்** — ஒனறுகூடுதல. நெடுங்குழியின்கண் அகபபட்ட கொலகளிறு அதன நிலைசரியக் குழியைத் தூாததுத தன்னினம் விரும்ப அதனோடு தலைககூடியது - ஒனறுகூடியது - (புறம. 17:15-19). தலைக்கூடுதல - ஒனறுகூடுதல - (கலி. 74:10; பரி. 10:2; பரி தி 2:6).

**தலைக்கை தருதல்** - முதற்கை கொடுத்தல். (கையால் தழுவி அனபு காட்டுதல). புன்னைமாலை சூடிய ஆடவர் வளையலுடைய மகளிர்கருத் தலைககை தநதனா - முதறகை கொடுத்தனா (புறம். 24:7-9). சேரன, முழவு ஒலிககினற மகளிராடும் துணஙகைக் கூததிறகுக தழுவுதலையுடைய தெப்பமாகத் தலைக் கையைக் கொடுத்து அம்மகளிரோடு செறிந்து வருதலை அறிந்த சேரனதேவி சினம் கொண்டனள் (பதி. 52:14-16).

**தலைக்கொள்ளுதல்** - 1. கெடுத்தல். பாணடியன் பலயாகசாலை முதுகுடுமிப பெருவழுதியின பகைவர், அவனது தூசிப படையின வலியைத் தலைககொள்ள-கெடுகக-வேண்டிப பலகையுடனே நெடுவேலையும் ஏநதி வநதனர் (புறம். 15:13-15).

2. மிகுதல். 'நின் அமையாத பரத்தைமை தலைக் கொள்ளுதலின் - மிகுதலின - நாடோறுமம நின் னோடு புலக்கும் பெண்டிரைத் தெளிவிப்பாய்' என்று தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 73: 19-21).

3. மேற்கொள்ளுதல்/தொடங்குதல். ஊரின்கண் விழா தலைக்கொள்ளுதல் - தொடங்குதல் (புறம். 82:1). தலைக்கொளளுதல் - மேறகொள்ளுதல்/ தொடங்குதல்- (அகம 283:3; 386 5; நற். 293:4; பரி. 9:24, 49).

4. தன்னிடத்தே கொள்ளுதல்/கைக்கொள்ளுதல். பாண்டவர் ஐவருடனே சினநது நிலததைத் தலைக் கொண்ட - கைக்கொண்ட - நூற்றுவரும் பொருது களததில் படுநதுணையும் பெருஞ்சோறறினை வரையாது இருபடைக்கும் வழங்கியவன் பெருஞ் சோற்று உதியஞ்சேரலாதன (புறம். 2:13-16) தலைக கொள்ளுதல - தன்னிடத்தே கொள்ளுதல/கைக கொள்ளுதல - (புறம். 181:3; பதி. 40:29;364:6; நற். 30:5; 328.9, கலி. 52:2; 73:16; 139:29; 142:53; 144:59; 146:44; 150:4,5).

**தலைக்கோதை** - நெற்றிக்கட்டுமாலை. 'நின தார் மாலையை வாஙகிக் கொணட பரத்தையின் தலைக் கோதையை - நெறறிககட்டு மாலையை — மனந் தடுமாறிப பூணடு நீ எம்மில்லிடத்தே வநது நினறது, பரததையரோடு புனலாட்டு அயர்ந்தனை என்று ஊரார் கூறும் பூசலினும் பெரிதாகும்' என்று தலைவி தலைவனிடம ஊடிக் கூறினாள் (கலி. 66:13-16).

**தலைகரந்திருத்தல்** — மறைந்திருத்தல் மறவர், தாம் கொண்ட பெரிய ஆனிரை முன்னேபோகத தாம் பெயராது மீட்க வருவாரைக குறித்துத் தழையால் மூடிய பெருங்காட்டினகண தலைகரநதிருநதனர் - மறைந்திருநதனர் (புறம். 259:1-3).

**தலைச்செல்லல்** - மேற்செல்லல். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, படையைப பரப்பிப்

பகைவரது முனையிடம் கலங்கத் தலைச்சென்று - மேற்சென்று - அவரது நெல்விளை கழனியைக் கொள்ளையூட்டினான் (புறம். 16:2-4). தலைச் செல்லல் - மேற்செல்லல் - (புறம். 23:12; 211:5; பதி. 20:3; 36:4; மது. 68; 139; 221; கலி. 104:45).

**தலைத்தந்தோர் -** கொடுத்தோர். கேடில்லாத அரு நோயாகிய காதல நோயைத் தலைத்தந்தோர் - கொடுத்தோர் - கவர்த்த நெறிகளையுடைய அருஞ் சுரத்தைக் கடந்து போயினார்' என்று தலைவன் பிரிந்தபோது தலைவி கூறினாள் (ஐங். 320:4,5).

**தலைத்தருதல் - 1. தலைமையான அன்பினைக் கையால்** தழுவிக் காட்டுதல். மகளிர் குரவையாடி அசைய வேலன் தனனுடைய முழவையொத்த பெருமை யுடைய கையினாலே அவரது கையினைத் தழுவி எடுத்துக்கொணடு தலைத் தந்தான் (முரு. 215,216).

2. தன்னிடத்தே கூட்டிக்கொள்ளுதல். களிற்றொ ருத்தல, காட்டிடத்துள்ள ஆளியினை அஞ்சித் தன்னினத்தைத் தலைத் தந்து - தன்னிடத்தே கூட்டிக் கொண்டது - (அகம். 78:1,2). தலைத்தரு தல் - தன்னிடத்தே கூட்டிக்கொள்ளுதல் - (அகம். 253.13; 333.4; நற். 284:6).

**தலைத்தார் -** முதற்படை. யானைகளை அகப்படுத்தும் பூசறகண்ணே எழினி வாராதொழிய அதனால் சினந்த மன்னனது ஏவலாற் சென்ற மத்தி, நெடுஞ் சேயமைககண்ணதாகிய நாட்டில் தலைத்தாரில் - முதறபடையில - அகப்பட்டுககொணட அவ்வெழி னியின பல்லைப் பறித்து வந்து வெண்மணிவாயிற் கதவில் பொறித்தான் (அகம். 211:10-15).

**தலைதிறத்தல்-** மலர்தல். மழைத்துளியை எதிர் கொணட முல்லை முகை தலை திறந்த-மலர்ந்த- மணம், புதலினிடத்தே செம்முலலையோடு சோந்து மணநதது (குறு. 382:1-3).

**தலைதிரிதல்-** நீங்குதல். 'பயனை உண்டாக்கும் கொள்கையோடு இனிமை தலைதிரியாது-நீங்காது -நின வாய்மொழிகள் உணமையாக, தலைவர் வருவராயின் மிகவும நல்லதே' எனத தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 333:15-17).

**தலைநாண்மீன் - உச்சநாண்மீன்.** பங்குனி மாதத்தினது முதற்பதினைந்தின்கண் தலைநாண்மீனாகிய - உச்சநாண்மீனாகிய-உத்தரம் உச்சியினின்றும சாய அதறகு எட்டாவது மீனாகிய மூலம் தோனறிட மிருகசீரிடமீன் துறையிடத்தே மறைய இவ்வாறு வானநிலை அமைந்த பொழுதினகண் எரிநட்சத திரம் ஒன்று வீழ்வதனைக் கண்ட சான்றோர் யானைக்கட்சேஎய மாநதரஞ்சேரல இரும் பொறைககு ஊறு நேருமென அஞ்சினர் (புறம். 229:5-15).

**தலைநாள்- முதல்நாள்.** பரிசிலர் ஒருநாள் செல்லினும் இருநாள் செல்லினும் பலநாளும பயின்று பலரோடு செல்லினும் தலைநாள் - முதலநாள - போனற விருப்பதையுடையவன அதியமான (புறம். 101: 1-3). இளவேனிற் காலத் தலைநாளில், செருநதி தனனைக் கண்டார் பொன்னென்று வியககுமாறு மலரும் (சிறு. 147). தலைநாளில் பூத்த வேஙகைப் பூவினைச் சூடுதற்கு, மகளிர் புலிபுலியென்று கூவு தலின் ஆரவாரம எழுந்தது (மலை. 305, 306). 'நனனனிடததில் பன்னாள் தங்குவீராயினும் பசிய நிணத்தையுடைய தசைகளோடே வெண்ணெல அரிசியும முட்டுப்படாமல் தலைநாள் போனற விருப்பதோடு பெறுகுவீர்'-எனக் கூத்தர் ஆற்றுப படுத்தப்பெற்றனா (மலை. 563-566). மழை சொரிநதாற்போன்ற கொடைத தனமையால் பரிசிலர்கருத் தலை நாளிலேயே பரிசிலைத தநது விடுககும் தன்மையுடையவன நனனன் (மலை. 579-581). ஆயஆணடிரனது காட்டில தலைநாளில மலர்ந்த மலரென மணக்கும் முலைபரந்த மார்பி னள் தலைவி (அகம். 69:18-20) தலைநாளில் பூதத சிறந்த மலாகள் தண்டுறைகளில விளங்கும் (அகம். 126:4). தலைவியைச் சுறறததாா தலைவனுககுத தந்த தலைநாள் இரவில தலைவன, 'பெருமபுழுகக மெய்திய நின் நெற்றி வியர்வையைக காறறுப் போககிடச் சிறுபொழுது திறவாய' என்று கூறிப போர்வையைக் கவரத தலைவி நாணினள் (அகம். 136.18-26). மழவர் செயயும் பூநதொடை விழா வின் தலைநாளையொத்த பொலிவினை யுடையது திருமனை முற்றம் (அகம். 187 7-9). 'தலைவனது மார்பின கண்ணே வண்டு இடைபபடாத மயகக மும் நீங்காத காதலும தலைநாள போனறே சிறந்தன' என்று தலைவி தோழியிடம கூறினாள். (அகம. 332:13-15). செல்லுதறகரிய சிறுநெறியில் தலைநாளில் இருநதாற் போனற விருப்பத்தின னாயப பல நாளும இயஙகுதறகரிய இருளில் தலைவன் தலைவியைக காண வநதான (நற. 332: 7-9). தலைநாளில பெய்யத் தொடஙகியது குளிர்சசி யான மழையையுடைய மேகம் (நற். 362.3).

**தலைநீர் - புதுநீர்.** நீர்கொள்ளும் துறையிடத்தே மலையில் பூத்த பூக்களைக கொணாநதொதுககும தலைநீரால-புதுநீரால்-வளம பொருநதிய நாடடை யுடையவன் அதியமான (புறம். 390.23,24).

**தலைப்படுதல்** - கூடுதல் / எய்துதல். பொருள் வயிற் பிரிதற்கண் தலைப்படுதலை உடன்படாத எண்ணத்துடன் தலைவி புதல்வனைத் தழுவிப் பெருமூச்செறிந்தனள் (அகம். 5:7,24). தலைப்படுதல் -கூடுதல்/எய்துதல் (அகம். 7:16; குறு. 209:1; 342:7; நற் 134:1; 170:2; கலி. 59:13; 64:24; 112:22;138:7).

**தலைப்பாடு** - நேர்பாடு. விறகினைக் காட்டினின்றும் ஊரிடத்து எடுத்துச் செல்லும் மாந்தர் அக்காட்டில் விழுப்பொருளைப் பெற்றாற் போல்வதொரு தலைப்பாடன்று - நேர்பாடன்று-கிள்ளிவளவனது ஈகை (புறம். 70:17-19).

**தலைப்பிரிதல்/தலைபிரிதல்** - நீங்குதல்/பிரிதல். அற நெறியினின்றும் தலைப்பிரியாது - நீங்காது - இல் வாழ்க்கை நடத்துதல், ஊக்கமில்லாத உள்ளமொடு இருந்தோர்க்கு இல்லையாகும் (அகம். 173: 1-3). தலைப்பிரிதல் / தலைபிரிதல் - நீங்குதல் / பிரிதல் - (நற். 136:6; பரி. 13:37).

**தலைப்புடை** - முதற்றப்பல். புலைத்தி, கஞ்சியிலே தோய்த்து எடுத்துத் தலைப்புடையை-முதற்றப் பலை-தப்பிவிட்டுத் தண்ணீரிலே போட்ட, நீரிலே பிரியாத பருத்தி ஆடையின் முறுக்கையொத்தது பகன்றையின் மொட்டுமலர்ந்த வெண்பூ (குறு. 330:1-4).

**தலைப்புணர்த்தல்** - சேர்த்துக்கட்டுதல். கூத்தர், பல வாச்சியங்களோடு கூத்தியற்றித் தலைப்புணர்த்த-சேர்த்துக்கட்டிய-வாச்சியங்களையுடைய பையின ராகிப் பல ஊர்களுக்கும் செல்லுதற்கு விரைந் தனர் (அகம். 301:21-23).

**தலைப்புணை** - தெப்பத்தின் / முன்னிடம். தலைவன், காவிரி வெள்ளத்தில் தலைப் புணையைத்-தெப்பத் தின் முன்னிடத்தை - தழுவிப் பரத்தையோடு புன லாடினான் (அகம். 166:12-15). தலைவன், புது நீர்ப்பெருக்கில் வலிமைமிக்க களிற்றினைப் போலத் தலைப்புணையைத் தழுவி இளந்துணை மகளி ரோடு புனலாடும் (அகம். 266:2-5). தோழி தலைப் புணையைக் கைக்கொண்டால் தலைவியும் தலைப் புணையைக் கைக்கொள்வாள் (குறு. 222:1).

**தலைப்பெய்தல்** - கலத்தல். மலைபடுபொருளும் கடல் படுபொருளும் தலைப்பெய்து-கலந்து-வருவார்க்கு வழங்கும் தன்மையன் குட்டுவன் (புறம். 343:7-9). தலைப்பெய்தல் - கலத்தல்- (அகம் 86:1; ஐங். 86.4; கலி. 95:25).

**தலைப் பெயர்த்தல்** - 1. இடத்தினின்றும் நீக்குதல். ஆய் அண்டிரன், பரிசிலர்க்குக் கொடுத்த யானை களை எண்ணின் அவை, கொங்கரை ஆய் வென்ற ஞான்று அவர் புறங்கொடுத்தோடித் தலைப் பெயர்த்திட்டதம்-இடத்தினின்றும் நீக்கிய - வேலி னும் பலவாகும் (புறம். 130:4-7). தலைப்பெயர்த் தல்-இடத்தினின்றும் நீக்குதல் - (அகம். 101:11; 394: 13; குறு. 350:6; நற். 169:6).

2. அசைத்தல். மறவனொருவன், போர்க்களத் தின் நடுவே, வேலினைத் தலைப் பெயர்த்து - அசைத்து - மறவர் தொகுதியை முற்படச் செலுத் திப் போர் புரிந்தான் (புறம் 295:1-4).

**தலைப்பெயர்தல்/தலைபெயர்தல்** - கழிதல். 'அருஞ்சுரம் இறந்தோர்க்கு இன்றைய நாளோடும் ஆண்டு தலைப்பெயரவென - கழிகவென - கூறி வருந்தும் என் மனையோள் வியப்பக் களிறு மீதேறிப் போதலை விரும்பினேன்' என்று பெருஞ்சித்திரனார் குமணனிடம் கூறினார் (புறம். 161:11-20), தலைப் பெயர்தல்/தலைபெயர்தல் - கழிதல் (பதி. 15;1; பொரு. 22; மது. 686; அகம். 311:8; 367;1; நற். 321:2; 375:2).

**தலைப்பெயல்** - முதல்மழை. கடலிலே நீர்முகந்த கார் மேகம், வானில் துளியை முற்படச் சிதறிக் கார்காலத்துத் தலைப்பெயலை - முதற்பெயலை - கானத்தில் சொரிந்தது (முரு. 7-9). அறுகு, மேகத் தின் தலைப்பெயலால் பாவைபோன்ற கிழங்கினை ஈன்றது (அகம். 136: 11-13). தலைப்பெயலால் பெருகிய செம்புனலில் மகளிர்க்குத் தோள் துணை யாகிப் புனலாடியதால் தலைவனின் கண்கள் சிவந் தன (ஐங். 80:2-4). குளிர்ந்த நிலத்திடத்தேயுள்ள பிடவம் கார்காலத்துத் தலைப்பெயலுக்கு அரும் பீனும் (கலி. 101:1,2).

**தலைப்போகுதல்/தலைபோகுதல்**- 1. முடிதல். உலகத்தை யாளுந்தன்மை முடியச் செலுத்துதற்கு மறுமையை நினைத்தால் தலைப்போகுதல் - முடிதல் - இன் மையின் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தான் (புறம். 223:1-3). 'மலைகெழு நாடனது நட்பு தலை போகாமையை நன்றாக அறிந்தேன்; அதனை அறியாதார் பலரும் தமக்குத் தோன்றியவற்றைக் கூறினும் கூறுக' என்று தலைவி தோழியிடம் கூறி னாள் (குறு. 170).

2. மிகுதல். பரல் தலைபோகியது - மிகுந்தது - பாலைநிலம் (நற். 169:4).

**தலைபிரிதல் - பிரிதல்.** 'தலைப்பிரிதல்' காண்க.

**தலைமகள் - தலைவி.** 'பாணனே, மகிழ்நனாகிய தலைவனின் தாரிலுள்ள வண்டுகள் எம்கூந்தலில் இருந்தன என நின் தலைமகள் வெகுண்டனள் என்று கூறுவர்' எனத் தலைவி பாணனிடம் தலைவன் கேட்பக் கூறினாள் (ஐங். 82).

**தலைமடங்குதல் – தலைவணங்குதல்.** ஆனினது பயத்தால் வாழ்கின்ற இடையர் தலைவனான கழுவுள் தலைமடங்குமாறு - தலைவணங்குமாறு - பெருஞ்சேரலிரும்பொறை அவனை வெற்றி கொண்டான் (பதி. 71:17).

**தலைமணத்தல் – நெருங்கிக் கலத்தல்.** குன்றுகளோடு தலைமணந்த - நெருங்கிக்கலந்த - மலைகளையுடையது மண்ணுலகு (புறம். 357:1). தலைமணத்தல் - நெருக்கிக் கலத்தல் - (பதி. 31:1; மது. 700; பட். 97; அகம். 133:5; 172:5; 233.11; குறு. 186:1; 281:5; நற். 55:2 56:10; 374:1).

**தலைமயங்குதல் - 1. கை கலத்தல்.** தமிழ்ப் படை தலைமயங்கிய - கை கலந்த – தலையாலங்கானம் (புறம். 19:2).

**2. பிரிதல்.** ஞாயிறு படுகின்ற காலத்தில் தன் இனத்தினின்றும் தலை மயங்கிய - பிரிந்த - கலைமான் பிணைமானை அழைத்தது (புறம். 197.9-11).

**3. மயக்கமுறுதல்.** 'காமத்தால் நம்மைக்காட்டினும் மிக்க தலை மயங்கிய - மயக்கமுற்ற - தலைவி உறையும் இனிய ஊரானது அழகிய காட்டின் கண்ணது' என்று தலைமகன் தேர்ப்பாகனிடம் கூறினான் (அகம். 284:11-13).

**4 கலத்தல்.** களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் செல்வங்கள் தலைமயங்கிய - கலந்த - நாட்டைச் செம்மைப் படுத்தினான் (பதி. 38:3,4), தலை மயங்குதல் - கலத்தல் - (பட். 193; அகம். 39:12;298:8: நற். 274.5).

**தலைமயிர் - தலைமுடி.** யாமத்தில் பெய்த மிக்க பனி பரந்து சிதறித் தோன்றும் தன் தலைமயிரினை - தலைமுடியினை - நனைப்பக் கிணைஞன் தன தடாரியினை இசைத்து வேந்தனிடம் பொருள் வேண்டினான் (புறம் 377:1-4).

**தலைமிகுதல் - மேம்பாடுறுதல்.** போர் செய்வதில் தலைமிகுந்த - மேம்பாடுற்ற - நூற்றுவருடன் துணைவலியாகும் நெறியில் கடைபோகிய அக்குரனைப் போன்ற கைவண்மையுடையவன் இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. 14 5-7).

**தலைமுடி - கூந்தல்.** 'குறுமகளே, நினக்கு முலைகள் அரும்பின; பற்களும் ஒளி கொண்டன; தலைமுடியும் - கூந்தலும்-வகுத்து முடித்தற் கேற்ப அமைந்தன; ஆதலின் சுழன்று திரியும் ஆயத்தோடு எங்கணும் போகற்க' எனச் செவிலி தலைவியிடம் கூறினாள் (அகம். 7:1-3).

**தலைமை - முதன்மை.** பெரிய சுற்றத்திற்குத் தலைமை - முதன்மை - தாங்கிய பொருநன் அரிய நினைவுகளால் உண்டாகும் துன்பத்தால் வருந்தியது போக, சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னி நல்கிய பரிசில்களைப் பெற்று அவனும் அவனது சுற்றத்தினரும் பெரு மகிழ்ச்சியடைந்தனர் (புறம். 378'10-24).

**தலைமையர் - முதன்மையுடையவர்.** முனிவர், பல வற்றையும் கற்றோர்க்குத் தாம் எல்லையாகிய தலைமையர் - முதன்மையுடையவர் - ஆவர் (முரு. 133, 134, 137).

**தலையடுப்பு - தலைகளால் செய்யப்பட்ட அடுப்பு.** பாசறைக்கண்ணே பகைவரின் அரிய தலையடுப்பிலே - தலைகளால் செய்யப்பட்ட அடுப்பிலே - பேய் மகள் ஊன்சோறாகிய பிணடத்தைச் சமைத்தாள் (புறம். 372 4-8).

**தலையர் - தலையினையுடையவர்.** தலைவியின் தமையன்மார், பகைவரை யெறிதலால் குருதி தோய்ந்த கண்டார்க்கு அச்சந்தரும் தலையர் - தலையினையுடையவர் – (புறம். 337.16-18). தலைவியின் தமையன் மார் ஒவ்வாதார்க்கு மகட்கொடை மறுத்துச் செருவினை வேண்டியதால் குருதிநாறும் புலால் நாற்றத்துடனே கழுவாத தலையரா யினார் (புறம். 345,12-17). கண்டார்க்கு அச்சந்தோன்றும் தழைக்கண்ணி சூடிய தலையர், கவர்த்த நெறிகளில் ஆரவாரித்து அரும்பொருள்களைப் பறித்துக் கோடலின் அந்நெறியிடையே வாணிகச் சாத்தர் ஒரு சிறிதும் இயங்கார் (அகம். 291.13-15).

**தலையலர் - முதலிற் பூக்கும் மலர்.** அழகிய கிளைகளிடத்து வண்டுகள் ஆரக்கும்படி முலையையொத்த மெல்லரும்புகள் அவிழ்ந்த கோங்கின் தலையலர்கள் - முதலிற் பூக்கும் மலர்கள் - தோன்றின (குறு. 254'1-3).

**தலையளி** - அருள் செய்வேளின் பூசைக்கண், அச் செவ்வேளின் யானையுண்ட கவளத்தின் மிச்சிலைச் சிறப்போடு உண்ணாதொழியின் மணம்பெற்ற மகளிர் தம் காதலரது முறுவலோடு கூடிய தலையளியை - அருளை - எய்தார் (பரி. 19.91-93).

**தலையளித்தல்** - அருள் செய்தல். தன்னாட்டினைத் தலையளிக்கும் - அருள் செய்யும் - கோப் பெருஞ் சோழனின் விளங்கிய முகம் போல மதியம் மாலைப் பொழுதில் விளங்கியது (புறம். 67:2-5). 'தலைவி, நீ இன்னாதவற்றைச் செய்யினும் இனிதாகத் தலையளிப்பினும் நின்னாற் புரக்கப்படும் எல்லைக்குட்பட்டவள்; நின்னையன்றித் தன் விழுமம் களைவாரைப் பெற்றிலள்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (குறு. 397:5,6).

**தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்**-பாண்டிய வேந்தன். தலையாலங்கானத்துச் செருவின்கண் பகைவரை வென்ற சிறப்புப் பற்றி இந்நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்று அழைக்கப் பெற்றான். இளமையிலேயே தந்தைக்குப் பின் அரசினைப் பெற்ற இவன், அவ் விளமையிலும் தன்னாற்றலால் நாடுகாவலை நன்காற்றிச் சான்றோரால் புகழவும் பெற்றான். அப் புகழைப் பொறாத சேர சோழராகிய இருபெருவேந்தரும் திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகிய ஐம்பெருவேளிரும் கூடி இவன்மேல் படையெடுத்து வந்தனர். தன்னை இளையனென்றும் தன்னாட்டை மிகுத்துக் கூறுவோரை நகைக்கத் தக்கவரென்றும் தான் வெறுக்கும்படி பேசி, அவற்றின் மேலும் தன் வலிமையையஞ்சாது சினச்செருக்கினால் சிறுசொற்களையும் சொல்லி வந்த அப்பகைவரை 'அருஞ்சமத்திலே சிதறத்தாக்கி அவரை முரசங்களோடு ஒருங்கே அகப்படுத்துவேனாய' வஞ்சினங்கூறிப் போர்க்கெழுந்த இவன் (புறம். 72) தலையாலங்கானம் என்னுமிடத்தே அவரை யெதிர்த்தனன். எதிர்த்து தன் வஞ்சினப்படியே அப்பகைவரை ஒருபகற் பொழுதிலேயே செருக்களத்தே வென்று, அவர்தம் முரசங்களோடு வெண்குடைகளையும் அகப்படுத்திக் கொண்டு அவரையும் கொன்று களவேள்வி செய்தான். இவனது இப்போர் வெற்றியை விளக்கமாகப் பாடியவர் நக்கீரர் (அகம். 36); வியந்து வியந்து பாடியவர் இடைக்குன்றூர் கிழார் (புறம். 76-79). மற்றும் குடபுலவியனார் (புறம். 19), கல்லாடனார் (புறம். 23,25, அகம். 209), மாங்குடி கிழாராகிய மருதனார் (புறம். 26; மது. 55, 56;125-130), ஆலம்பேரி சாத்தனார் (அகம். 175), பொதும்பில் கிழார் மகனார் (நற். 387) ஆகிய புலவர் பலரும் இப்போரையும் இவன் வெற்றியையும் பாடியுள்ளனர். இவன் கூடற்பறந்தலை என்னுமிடத்தே மற்றொரு முறை தம்முள் இணைந்து படையெடுத்து வந்த சேர சோழ வேந்தருடைய பெரும்படைகளைக் கலங்கத் தாக்கி வென்றமையைப் பரணர் பாடலால் (அகம். 116) அறியலாம். அப்போரில் இவனுக்கு ஆற்றாத அவ்வேந்தர் தம் முரசங்களை விட்டொழிந்து ஓடிய நிலையில் அவரைப் புறங்கண்ட இவனது படை மிக ஆரவாரித்தது என்று அப்புலவர் பாடுவர். பின்னும் ஒரு போரில் இவனால் சிறைப் படுத்தப்பட்ட சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை தன் வலிமையால் தானே தப்பித்துப் போய்த் தன்னரசெய்தினான் எனக் குறுங்கோழியூர் கிழார் பாடலொன்று (புறம். 17) கூறும். மற்றும், வேளெவ்வியின் மிழலைக் கூற்றத்தையும் வேளிரது முத்தூற்றுக் கூற்றத்தையும் வென்று கைக்கொண்ட இவன் வெற்றிகளைப் பாடிய (புறம். 24) மாங்குடி கிழாராகிய மருதனாரே, நெல்லினூர் என்றோர் ஊரை இவன் வென்றதையும் குறிப்பிடுவர் (மது 75-88). இவன் முசிறியை முற்றுகையிட்டுப் போருடற்றி வென்று அங்கிருந்ததோர் படிமத்தை (சிலையை) கவர்ந்து வந்த செய்தி, நக்கீரர், எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார் ஆகிய இருவர் பாடல்களாலும் (அகம். 57, 149) விளங்கும். ஒருகால், வாகைப்பறந்தலை என்னுமிடத்தே இவனுடைய மறவனான அதிகன் என்பான் கொங்கரொடு போரிட்டுக் களிற்றுடனே வீழ்ந்து மாண்டான் (குறு. 393). மேலும், இவன் வெகுண்டெழுந்து அக்கொங்கரைப் போரிலே தோற்றோடச் செய்து, அவர் நாடுகளைக் கவர்ந்தனன் (அகம். 253). மற்றும், 'பலகுட்டுவர் வெல் கோவே' (மது. 105) எனவும், 'தென்பரதவர் போரேறே' (மது. 144) எனவும் விளிக்கப் பெறுதலால் இவன் குட்டுவரையும் பரதவரையும் அடிப்படுத்தி ஆண்டமை புலனாம். இவன் தன் பெருந்தேவியைப் பிரிந்து பாசறைத் தொழிலில் ஈடுபட்டிருக்கையில் நக்கீரரால் நெடுநல்வாடை பாடப் பெற்றான். இவ்வாறெல்லாம் இளமை முதலே மறத்துறையில் மேலோங்கிச் சிறந்த இவனுக்கு மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சி என்னும் பாட்டின் வழி அறமுரைத்தார். நாட்டிலே உழவுத் தொழில் சிறக்க வேண்டி, நிலந்தாழ்ந்த இடங்களில் நீர் நிலைகளை அமைக்குமாறு இவன் குடபுலவியனாரால் அறிவுறுத்தப் பெற்றான் (புறம். 18). இவன் சிறந்த பண்பாளன். மாங்குடி மருதனாரைத் தலை

வராகக் கொணடு விளங்கிய புலவர் குழுவை இவன் போறறிய மதிப்பும குடிபழி தூறறாச் செஙகோலனாய் ஆள்வதிலும இரப்போர்ககு ஈதலிலும் இவன் கொண்டிருநத நாட்டமும மேற் குறித்த இவனது வஞ்சினப் பாடலில் பதிநதுள்ளன. ஒரு பொய்யாலே உயர் நிலை உலகை அமிழ் தோடே பெறுவதாயினும் அப்பொய்யைப் போற றாதவனென றும் இவ்வுலகப் பகைவருடனே மேலு லகத்தே வரும் பகைவராய் வரினும் அப்பகை வாக்கு அஞ்சிப் பணிந்தொழுகாதவ னென்றும விழுப்பொருள் பெறுவதாயினும் தனக்குப்பழிவரக கருதாதவனென றும விழுபபொருளைப் பிறர்க்கு ஈதல் உள்ளமொடு நல்கிப புகழையே விரும்புபவ னென்றும் இவனுடைய பண்புகளைப் பாராட்டுவர் மாங்குடி மருதனார் (மது. 197-205). மறமிக்க தானையினையுடைய உலக வேந்தருள்ளும் அறத்தைக் கடைப் பிடித்த செங்கோலாட்சியுடன் போர்களிலே பகைவருடைய மறததைக கெடுததது மேம்பட்ட பலரும் புகழும் வெறறித்திருவமைந தவன் என இவனைக் குறிப்பிடுவா மதுரைக் கணக்காயனார் (அகம. 338). இவன் ஈகைத திறத் தால, 'கைவண செழியன' (அகம. 47,175) என வும் போாததிறத்தால், 'வெம்போர்ச செழியன்' (புறம. 79) 'மறபபோர்ச் செழியன்' (அகம. 116) 'அடுபோர்ச் செழியன்' (அகம. 149) எனவும் படைத்திறத்தால, 'கொய்சுவற புரவிக் கொடித் தேர்ச செழியன்' (அகம். 36,57), 'கலலா யானைக் கடுந்தேர்ச செழியன' (நற். 340). 'வேலகெழு தானைச் செழியன்' (நற். 387) எனவும் அடைக ளோடே சிறப்பித்து அழைக்கப பெறறான. இளமையிலேயே அரசவணிகளும் பேரணிகளும் அணிநத சிறபபினால போலும இவன், 'பசும்பூட் செழியன்' எனறும் குறிக்கப் பெறறான் (புறம.76). அப்பெயரே 'பசுமபூட் பாணடியன்' (அகம. 162, 231,253,338; குறு. 393), 'பசும்பூண வழுதி' (நற். 358) என்றெலலாம மாறி வழஙகியது.

**தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் - பாணடிய வேந்தன்.** 'தலையாலங் கானத்துச செரு வென்ற பாணடியன நெடுஞசெழியன்' காண்க.

**தலையாலங்கானம் - ஓரூர்.** தமிழ்ப் படைகள் கை கலநத தலையாலஙகானத்துககண் உயிரது பன்மை யையும் அவ்வுயிரைக கொள்ளும கூற்றினது ஒருமையையும் தனனுடனே சீாதூககிக் காட்டிய வெனறிவேலையுடையவனசெழியன (புறம. 19:2-4).

**தலையாறு - ஓரிடத்தின் பெயர்.** ஆய ஆண்டிரனது காட்டினையுடைய தலையாறு எனனுமிடததில் நிலைபெறற உயாநத மலையிலுள்ள மூஙகில்ற பொருந்திய கணுககளின நடுவிடததை ஒததது தலைவியின் தோள (அகம. 152:21-23).

**தலையிட்டுரைத்தல் - மேலிட்டுரைத்தல.** 'நினனை நின பெண்டிா ஊடிக் கூறினவறறையும், நீ அவரது அடியில் வீழந்து வணங்கிய புலவி தீர்நதனவற்றை யும் பலபடியாகக் கனவின் தலையிட்டுரையல் - மேலிட்டுரைககாதே-'எனத தலைவி தலைவனிடம் சினந்து கூறினாள் (கலி. 92 55-58).

**தலையிடுதல் - 1. தலைக்கீடாகக் கொள்ளுதல்.** 'முன்பு ஆயத்தோடு வண்டல விளையாட்டு அயர்தறகுத தான ஈனாது வைத்த பாவை தலையிட்டு-தலைக் கீடாகக் கொணடு - சேர்பபனாகிய தலைவன அலலாமலும் கழிககரைச சோலைககண விளை யாடச செலவோமாக எனறு தலைவி கூறுவள்; ஆதலால் தலைவன் இனி வருதலாலயாது பயனோ' எனறு தோழி பாணனை வினவினாள (நற. 127. 6-9).

2. **மேறகொள்ளுதல்.** பாண் தலைமையைத தலை யிட்ட - மேறகொண்ட - புலையன (பாணன) (கலி. 85:22).

**தலையோர் - முன்செல்வோர்.** சோழன் நலஙகிள்ளியின படையிலுள்ள தலையோா - முன செலவோா - பனையினது நுஙகினை நுகாவா; இடைச செல வோா அதன பழத்தினை மாந்துவா, பின் செல வோா அபபழததினது சுடபபட்ட கிழஙகினைத தினபர் எனப படையின மிகுதியும அது செலலுதற குரிய கால நீட்சியும உணாததபபடடுள்ளது (புறம. 225:1-3).

**தலைவ/தலைவன் - முதலவ/முதல்வன்.** 'சிறுசொல் சொலலிய பகைவரை வெல்லேனாயின் மாஙகுடி மருதன் தலைவனாக - முதல்வனாக - பலரும புகழும தலைமையுடைய புலவா, என நில வெலலையைப பாடாது நீஙகுக' எனப பாணடியன தலையாலஙகானததுச செருவெனற நெடுஞ செழியன வஞ்சினமுரைத்தான (புறம. 72 14-16). செலவம் உண்டாயின உணவு கொடுதது இலலை யாயின உள்ளதனைப பலரோடு கூடவுணணும வறியோருடைய சுறறத்திறகுத தலைவன, அதிய மான (புறம். 95:6-9). ஓயமான நலலியககோடன பெரிய மாவிலங்கை எனனும ஊாககுத தலைவன (புறம். 176.6). 'பெரிய பாண சுறறததின தலைவன, எவவியினமாாபில் வேல தைதததனால உணடான

புன் பலவென்று விடியற்காலத்துச் சொல லிய வாராததை பொய்யாகுக' என்று வெள்ளெருக் கிலையார் பாடுவர் (புறம். 21,33:5-8). 'மருத நிலத்தூர்களை முன்னே இரவலர்க்குக் கொடுத் தொழிந்ததனால் வறுமையுடைய சுற்றத்தாரின் தலைவனுக்கு எஞ்சிநின்ற கரம்பைச் சீறூரைக் கொடுத்தான்' எனச் சான்றோர், போர்க்களத்தில் பொருது வீழ்ந்த குருசிலைப் புகழ்தல் (புறம். 285: 13-17). 'பகைவரது அணி நிலையுள் பாய்ந்து வெற்றி கொள்ளும் இயல்பினையுடைய பெரும் படைக்குத் தலைவன பல்யானைச் செல்கெழு குட்டுவன (பதி. 24.4,5). 'வானோரது தானைத் தலைவ' என்று செவ்வேள் போற்றப் பெறுதல் (முரு. 260), 'யாழையுடைய கூத்தர்க்குத் தலைவ' எனப் பொருநன விளிக்கப்பெறுதல (பொரு. 57). ஆகாயத்துடனே காற்றும் நெருப்பும நீரும் நிலனு மாகிய ஐந்தினையும் சேரப்படைத்த மழுவாள் நெடியோனைத் தலைவனாகக் கொண்டு தெய் வங்களுக்குப பலிகளைக் கொடுத்தனர் (மது. 453-459). புகழினை உலகிலே நிறுத்தின, மாலையினை யும் பெரும் பெயரினையும் உடைய மாறன் தலை வனாகக் கோசரும் ஐம்பெருங்கேளிரும் குறுநில மன்னரும் பிறரும் பாண்டியன் நெடுஞ்செழியனின் வாய்மொழி கேட்டு அதன் வழி நடந்தனர் (மது. 771-774). வழி வந்த வருத்தத்தைக் கைவிட்டி ருந்த அறிவினையுடைய, பேரணிகலங்களைப் பெறும கூத்தர்ச் சுற்றத்திற்குத் தலைவ என்று கூத்தன் விளிக்கப பெற்றான (மலை. 49,50). நன்ன னிடத்துப் பரிசில் வேண்டிச் செல்லும் கூத்தர்க்குத் தலைவன் பொற்றாமரையைச் சூட விறலியர் பேரணிகலன்களை அணிவர் (மலை. 568-570). நன்னன, பாரம் என்னும் ஊருக்குத் தலைவன் (அகம். 152:12). தென்னன, ஏவுதலைச் செய்யும் வீரர்கட்குத் தலைவன (அகம். 342:7). ஆண் குரங்கு, பல சுற்றத்திற்கும் தலைவன (அகம். 352: 2). ததும்பன, யாழையுடைய பெரிய பாணர்ச் சுற்றத்திற்குத் தலைவன் ஆவான் (நற். 300.9, 10). தலைவ எனத் தலைமகனைத் தோழி விளித்தல (நற். 337:1). குரங்கின் தலைவனாகிய கடுவன சூரற்கோலைக் கொண்டு அகன்ற பாறைக்கண் உள்ள மழைமொக்குளைப் புடைத்தது (ஐங். 275: 1-3). மறத்தையுடைய நூற்றுவர் தலைவனின (துரியோதனனின) குறங்கினை யறுத்து வீமன கொன்றான (கலி. 52:2-4). 'செவ்வேளே, சால் பினையுடையாய, தலைவ' என்று வேலன் வெறி யாட்டினுள் செவ்வேளை ஏத்தினான (பரி 5:13-15).

**தலைவர்** - முதல்வர். பலரும் புகழும் மூவரும (அரி, அரன், அயன்) தமக்குரிய தொழில்களை முன்பு போல நடத்தித் தலைவராக - முதல்வராக - வேண் டிச செவ்வேள், மண்ணிடத்தே தோன்றி மயக்க முற்ற நான்முகனைப் பழைய நிலையிலே நிறுத்தி னார் (முரு. 162-165). 'தலைவர் வஞ்சி சூடிப் பகைவர் மண்ணைக் கொண்டு, திறையினையுடை யராய் வினைமுடித்து விரைந்து வருதல் உறுதி' என்று பெருமுது பெண்டிர் தலைவியிடம் கூறினர் (முல்லை. 18-20). வல்வில் மறவரது தலைவர் கள்ளிற்கு விலைப் பொருள் பெறாராகி யானைக் கோட்டினை எடுத்து வருதல் குறித்துத் தம்புதல்வர் தலையைத் தடவி ஏவுவர் (அகம். 245:6-12).

**தலைவரம்பு** - மேலெல்லை. தலைவரம்பு - மேலெல்லை - இதுவென அறியப் பெறாத தன்மையோடு வாடைக்காற்று மிகுந்துவந்தது (அகம். 273:10). ஏழு ஊரிலுள்ளார்க்குப் பொதுவாகிய தொழிலின் பொருட்டு ஓரூரின்கண் அமைத்த கொல்லனது துருத்தியைப் போலத் தலை வரம்பறியாது தலைவி யின நெஞ்சு பிரிவில வருத்தத்தை அடையும் (குறு. 172: 5-7).

**தலைவருதல்** - 1. கை வருதல். எக்காலமும் போர் செய்தலால மறையானேறு போர்த் தொழிலில் தலைவந்தது - கைவந்தது - (மலை. 331).

2. நேர்தல். 'பிரிவு தலைவருமாயின் - நேரு மாயின - மடன்மாவூர்ந்து தலைவி செய்த துயரைப் பிறர் அறியச் செய்தலும் பழிக்குக் காரணமாகும்; அது செய்யாது உயிரோடு வாழ்தலும் பழிக்குக் காரணமாகும்' என்பது தலைவன் கூற்று (குறு. 32). தலைவருதல - நேர்தல் (கலி. 39:31).

3. மேல் வருதல். தலைவியின் தந்தை, அரசர் தலை வரினும் - மேல்வரினும - அடங்குதலமையாது வீர ருடன கூடி வேலினை நீர்ப்படை செய்ய விடுத்தான (புறம. 354: 1-3). தலைவருதல் - மேல வருதல்- (அகம். 251:11; கலி. 78:4;129:6 139:20).

4. இடத்து வருதல். வேந்தர், தம் தானைச் சுற்றத் துடன திரண்டு தலைவரினும் - (தன்) இடத்து வரினும் - தாங்கக் கூடிய குன்றாத ஈகையுடைய வன் நெடுந்தகை (புறம். 325:14 15). தலை வருதல் - இடத்து வருதல் - (புறம. 333 17, குறு. 374:3).

**தலைவன்** - முதல்வன். 'தலைவ/தலைவன' காண்க.

**தலைவாய்** - முதல்மடை. குமிழி சுழன்று தோன்றும் விரைந்த செலவினையுடைய சேயாறு தலைவயிர்

லில் - முதல் மடையில் - ஒழிவின்றி ஓடும் (மலை. 474-476).

**தலைவினை – முதல்விளைச்சல்.** கேழற்பன்றி உழுத புழுதிககண்ணே விதைத்து விளைந்த பயிரின தலைவிளையை - முதல விளைச்சலை - கானவர் கொயதனர் (ஐங். 270:1-2).

**தலைவைத்தல் - மேற்கொள்ளுதல்.** காமன், 'நான் பிரிநதிருந்தாரை வருத்துதற்கு நீ போவாயாக' என்று கூறும் வினையைத் தலைவைத்து - மேற் கொண்டு - போவது போல ஞாயிறு மலையிடத் தில் மறைந்தது (கலி. 148:1-3).

**தவசியர் - தவஞ்செய்பவர்.** பொரிநத அடியினையும் துளை பொருநதிய காயினையும் உடைய கொன்றை மரஙகள், குன்றின் கணணே உறைகினற நீண்ட சடையையும் அசையாத மெய்யையுமுடைய தவ சியர் - தவஞ்செய்பவர் - போல வெயில் நிலை பெறற இடங்களில் அழகு பெறத் தோனறின (நற். 141:3-6).

**தவத்தோன் - தவத்தையுடையோன்** (சிவன்). நீர் தொலைவறியாத குண்டிகையானும் தாழ்ந்த திருச் சடையானும் பொலிவு பெற்ற அருந்தவத்தோன் (சிவன்) அனைத்து உயிர்களுக்கும் காவலானவன்; அவன் கணணியும் தாரும் கொனறைப் பூவால் ஆனவை; அவன் ஊறும் ஆனேறே கொடியாகவும் அமைநதது; நஞ்சினது கருமை அவன் மிடறறை அழகு செய்ததோடு அந்தணரால் புகழவும்பட்டது; பெண்ணுருவம் ஒருபக்கமாயிற்று; அவ்வடிவு தன னுள்ளே அடககிக கரககினும் கரக்கும்; பிறை, அவன நுதலுக்கு அழகானதால் பதினெண்கணங் களாலும புகழவும் பட்டது என்று அடியார் சிவனை வாழ்ததுவர் (புறம். 1).

**தவப்படிவம் - தவவிரதம்.** கூடா ஒழுக்கத்தால் அழிந்த தவபபடிவத்தை - தவவிரதத்தை-உடையோரும் மறு பிறபபு இல்லை என்று கூறும் மடவோரும் செவ் வேளின் தாணிழலைஅடையார் (பரி. 5:75,76).

**தவப்பயன் - தவத்தினாலுண்டாகும் பயன்.** நல்லெழுதி யார் 'முறபிறபபுக்களில தாம செய்த தவப்பய னால் திருமாலின திருவடியைக் கையாற்றொழுது பலகாலும் அடுத்தடுதது வணங்கி வாழ்த்தியதாகப், பாடுவா (பரி. 13.61-64). மைநதரும இனனகை யவராகிய மகளிரும, 'செய்த தவப்பயனபெரிது' என்று கண்டோர் கூறுமாறு வையைககரையினி டத்து நெருங்கினர் (பரி. 22:27-35).

**தவப்பள்ளி - தவம் செய்யும் இடம்.** பட்டினம, தலப் பள்ளிகளை - தவம செய்யும இடங்களை - உடை யது (பட். 53,219).

**தவம் - 1.** பற்றறுத்து மெய்வருத்திச் செய்யும் வழிபாடு உலகியலாகிய இல்லறத்தையும் (வையததையும்) தவததையும் சீர்தூககினால் தவத்திறகு வையம் சிறு கடுகளவும் நேர்படாது (புறம. 358.3,4). கொடையும் மாட்சிமையுடைய குணங்களும் செல் வமும் பிள்ளைப்பேறும் தம்மால் வழிபடப்பெறும் தெயவமும மறற எலலாப் பொருள்களும் தவம் உடையோர்ககு உரியன (பதி. 74:25.26). பொருநர், கரிகாலவளவனின அரண்மனையின ஒரு பககத்தே தங்கித் தவம் செய்த மாககள் தம் உடம்பைப் போகடாது அபபயனைப் பெறற தன்மையை ஒப்ப வழிபோன வருத்தத்தை அகல நீககி மனககவறசி இனறித் துயினறெழுநதனர் (பொரு. 89-95) இவ்வுலகதது மாநதர் தம வலிமை முறறும கெடுமாறு உயர்ந்த தவததைசசெயயார் (நற். 226: 1,2). 'துறைவனாகிய தலைவன நட்பினைப பிரியா மற் கூடியிருநது வாழவதற்குக காரணமான அருநதவத்தினை இயறறுதலிலலாத நாம ஒரோவழி பிரிந்தும் வாழவமோ' எனறு இறசெறிபபுணாநத தலைவி தலைவன் கேட்பத்தோழியை வினவினாள் (ஐங். 111:3-5). செயற்கரிய தவங்களைச செயதவர் கள் குறைவற நுகரும நுகர்சசி போல கொமபுகள் தோறும் தாதைப பொருநதியுணட வணடுகள ஆர்த்தன (கலி. 30:1-3). மன வேடகை அடஙகின அரிய விளககததையுடைய செயறகரிய தவததைச் செயதோர் தமமுடமபை இவவுலகிலே விட்டுச் சுவர்ககததை இனிதாகப பெறுவர் (கலி. 138:30,31). 'தவம செயதலினீஙகித துறக்கததிற சேறலைத தவறவிட்ட அரசனுக்கு ஆனறோர், அறிவூட்டி மீணடும் அதனைச செயவிதது உயாநிலை உலகததே போகவிட்டுத் துயா தீரததாற் போல என் துயரினைப் போககுதல நமது கடனாகும்' என்று மடலேறுகின்ற தலைவன சான றோரை நோககிக் கூறினான (கலி. 139:33-37). 'கனனிமகளிா, தத்தம் தாயர் பககத்தே நினறு தைந்நீராடலை நின்னிடததே பெறறது, எரிகினற தீயின பக்கததிலே நின்று புலனகளையடக்கிச செயதற்குரிய தவததினைப பண்டைப பிறபபுக களில மேறகொணடு ஆறறினமையாலோ' என்று வையையாறறை வினவினா (பரி. 11.89-92). 'நின னிடத்துத் தைநநீராடலை முற்பிறபபிற செய்த தவததாலே இபபிறபபிற் பெறறேம; அதனை யாவரும் விரும்பத்தகக நினது நீரநிறைவின கணணே மறுபிறபபினும பெறுவோமாக' எனறு

தோழி வையையை நோக்கிச் கூறினாள் (பரி. 11: 138-140). அறநெறிககண பிறழாது வேதத்தோடு பொருநதுவதாகிய தவத்தில முதிர்ந்தமையால தோனறும வெற்றிப புகழினையுடையவர் அந்த ணா (பரி. தி. 1: 18-20).

2. நோனபு. 'இவனுற்ற நோய் யாதெனறு கேட்கும் அருள் இவளுககிலலை எனறு கூறி அயலார் பழிககும்போது, இளைய மகளிர்கு நடுவே நினறு அணிகளால் பொலிநது நீ தைத திஙகளில் நீராடிய தவததின-நோன்பின் - பயனைப் பெறு வையோ; பெறாய காண்' என்று தலைவன் தலைவி யிடம கூறினான் (கலி. 59.10-13). கன்னிமகளிர் தத்தம் தாயர் பக்கத்தே நினறு தவமாகிய தைந் நீராடலை வையையினகண் ஆடினர் (பரி. 11:91).

**தவமுதல்வர்** - தவத்தையுடைய முதல்வர் (தெயவ முனி வா). உளம் பொருநதிய உணர்நது கோடறகரிய வேதத்தை உணாந்த சிறந்த தவ முதல்வரும் - தெய்வ முனிவரும-பிறரும் செவ்வேளைக காணும் பொருட்டு மணணுலகத்தினகண் வந்து தங்குதற் குரிய இடமாதலால் திருப்பரஙகுனறு இமய மலையை ஒத்தது (பரி 8:9-12).

**தவமுதல்வன்** - தவத்தையுடைய முதல்வன் (இறைவன்). 'பிரியேன எனறு நீ தெளிவித்த சொலலை விரும் பித தெளிந்த தலைவியின் கணகளில் நீர் நிறை தலைக காணுமிடதது, அருநதவ முதல்வன் - தவத் தையுடைய முதல்வனாகிய இறைவன்-போல யாவ ரிடததும் பொயகூறாய என ஐயமறறு உலகம் நினனைப புகழுகின்ற தன்மை கெடாதோ' எனறு சான்றோர் தலைவனை வினவினர் (கலி. 100:7-10).

**தவல்** - 1. கேடு/கெடுத்தல். 'நின் தோளின் கவின் வாடாது தலைவனுடன எனறும் சோநது வாழநது பினனா தவல - கேடு - இலலாத மறுமையுலகத் துத தஙகி வாழ்வீராக' எனறு தோழி தலை வியை வாழ்த்தினாள் (அகம். 178:14-16). தலைவன, முயற்சியால பொருள் ஈட்டுதற்குத் தவல இலலாத உள்ளமொடு தன வேற்படையே துணையாக வெஞ்சுரததைக கடநது சென்றான (அகம. 277.3,4, 12). தலைவிககுத தவல இல்லாத அருநோயாகிய காதல நோயைத தநத தலைவன் அருஞ்சுரததைக் கடநது செனறான (ஐங். 320:4,5). தவலில்லாதது செயவினை (கலி. 19:12). தவலிலலாத காம நோயினைச செயத தலைவனைக காணாது தலைவி வருநதினாள் (கலி. 134:11). கடலின அலைகள திரணடு வநது அலைக்க இடுமணலிடததே வளை யினின்றும் போந்து விளையாடித் திரியும் நண்டு, மனவேட்கை தவலில்லாத சூதாடுகளத்தில் உருட்டி விட்ட வடுவுற்ற கவற்றினைப் போல் காணப் பட்டது (கலி. 136:1-4).

2. இறப்பு. எல்லையளவு அளந்தறியப்படாத திரை யரிதாகிய வெள்ளத்தினகண் துன்பமாகிய மறு சுழியின்கண் பட்டுச் சுழலுவதைக் காட்டிலும் தவலே - இறப்பே - நனறாகும் எனறு வெளி மான துஞ்சியபின பெருஞ்சித்திரனார் பாடினார் (புறம். 238:17-19).

3. குறைவு. பகற்காலத்தும் நீங்காதாகிப் பெய்து இரவிலும் தவல் - குறைவு - இலலாத வெள்ளத் துடன் மேகம் மழையைச் சொரிநதது (அகம். 305: 1-3).

**தவளை** - தவ்விச் செல்லும உயிரினம். தவளையின் வாயைப் போன்று செயயப் பெறற கிணகிணி சிறு வரின காலில் அணி செயயும் (குறு. 148:1,2).

**தவறு** - பிழை. 'தலைவனைக் குறிவழி வரச் செய்த நீயும் தவறு - பிழை - உடையை அல்லை; நின பால் நீங்காத துனபததினை உணடாககிய யானே தவறுடையேன' என்று தோழி தலைவியிடம் கூறி னாள் (அகம.72:20-22.) 'தலைவியின் மேனி பசலை யால் பொன்னிறத்தை அடைதல, நின்னுடன நகையாடிப் பிழைதத தவற்றாலோ, பெரும' என்று தோழி தலைவனை வினவினாள (அகம. 156:12,17). 'தலைவர் பழியுடையரல்லர்; தமமை விரும்பி வந்தாரை விடாது பறறிக் கொள்ளுதலை அறியா வாய வளையலகளை நெகிழ விட்ட தோள்களே தவறுடையன' எனறு தலைவி தோழியிடம் கூறி னாள் (அகம். 267:14-17). 'தவறு இலலாத நம் துயரை அறியாமல சோர்நத நெஞ்சுடன தன துயரம் வெளிப்படச் செலகின்றனன' என்று தலை மகனுக்குக் குறை நேர்ந்த தோழி தலைவியிடம் உரைததாள் (அகம். 330:1-6). பாலை நிலததில் என்னைப் பிரிந்து சென்ற தலைவர் திறதது மெலிந்தனவாகிய என் தடமெனறோள்கள் தவ றுடையன என்று கூறின் ஒரு சிறிதும் தவறு இல்லை' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 77). 'எம் சிற்றூரின்கண்ணுள்ள நெடுமணல் மேட்டில் நின் நெடுந்தேரை நிறுத்திவிட்டு, இளைப் பாறி, தலைவியினது தனிமை வருத்தம் நீங்குமபடி தஙகுவீரானால் தவறுண்டாகுமோ' எனறு தோழி தலைவனை வினவினாள் (குறு 345). 'கொடிய காட்டில் நுமக்குத துணையாக வநத தவறறி

னாலோ தலைவியின் கைவளைகள் கழன்று வீழ்ந் தன' என்று தோழி தலைவனை வினவினாள் (நற். 26:6-9). 'பெரிதும் சிறப்புடைய நட்பின் கணணே நுட்பமாகிய தவறும் வாராதபடி நன்றாக அறிந்து நடக்க வேண்டும்' எனறு பரததை தலைவ னிடம உரைத்தாள் (நற் 315:8-10). 'எம்முடைய நல்லவூர் இனிமை உடையது; இப்பொழுது முதலாக எனறு வந்தாலும் தவறும் இல்லை' எனக் கூறித் தோழி தலைவனுககு இரவுக்குறி நேர்ந்தாள் (நற் 331:9,10). 'நின்னுடைய தோழி எனனுடைய பணபையும் இன்றுயிலையும் கவர்ந்து கொண்ட னள்; அங்ஙனம அவள் என்னை ஒறுத்தற்கு யான செயத தவறுதான யாது' என்று தலைவன் தோழியை வினவினான (ஐங். 176). தொணடி நகரததையொத்த தலைவியின் தோளினைத் தழுவு தல் உறறோர், தவறு செயதிலராயினும் தேறற மாக வருந்துவர் (ஐங். 177). 'தலைவியின் கை வளைகள் கழன்று வீழநதன; இவ்வாறு வீழ்தற்கு மழையையுடைய இராககாலத்தே நீ செயயும் குறி யொலியை ஓரநது மனவொடுககத்தால் உயிர் வாழும் இவளுடைய தோள்கள் செய்த தவறு ஏதேனும் உண்டோ' என்று தோழி தலைவனை வினவினாள் (கலி. 48:8-11). 'நீயும தவறுடையை யல்லை; நின்னை இறபுறத்தே புறப்படவிட்ட நுமரும் தவறுடையவர் அலலர்; நிறையழிந்த யானையை நீர்க்கு விட்டபோது பறையறைநது விடுவது போலப் பறையறைந்து அலலது இவள் செல்லல் ஆகாது என்று கூறாத இறைவனே தவறுடையன' எனபது கைக்கிளைத் தலைவ னொருவனின் கூற்று (கலி. 56:30-34).[3] 'நின னிடததுத் தவறு இலலையாயினும், தணிதற்கரிய காம நோயைத் தரும் அழகினைப பெறறுள்ளாய என்பதை அறிந்து வைத்தும செல்வச செருக கால உனனை மேலும் அழகு செயது போக விட்ட நுமர் தவறுடையரலலர் எனறு கூற முடியுமானால் கூறு' எனறு கைககிளைத் தலைவன் காமஞசாலா ஒருத்தியை வினவினான (கலி. 58:7 - 10). [2] 'நின்னிடததுத தவறிலலையாயி னும், உன வடிவழகை அறிந்து வைத்தும் தம செலவச செருககால மேலும் அழகு செயது போக விட்ட நுமர்மீது தவறு இலலை எனறு கூறமுடியு மானால் கூறு' என்று கைககிளைத் தலைவன காமஞ்சாலாத தலைவியை வினவினான் (கலி. 58: 11-14).[2] 'நின்னிடததுத தவறில்லையாயினும் உயிரைவாங்கும் நின வடிவை அறிந்து வைததும் தம செல்வச் செருக்காலே நினக்கு மேலும் அழகு செயது புறப்படவிடட நுமா தவறுடையரல்லர் என்று கூறமுடியுமானால கூறு' எனக கைககிளைத் தலைவன் காமஞ்சாலாத் தலைவியை வினவினான் (கலி. 58:15-18) [2] 'எம்மைப பிரிநதாய எனறு பிறர் கூறக கேட்டிருந்தும் நின் தவறுகளை ஓராது நின் குணங்களைப் பாராட்டும் நின் தோழன, பரத்தையரது கதுப்பணையில் துயின்றதனால் தெயவம் போல் மணககும நின் மாாபைக காணு தற்கு இப்பொழுது வாரானோ' எனறு காமக் கிழததி தலைவனிடம் ஊடிக கூறினாள் (கலி. 71:17 20). 'நீயும் தவறுடையை அல்லை; நின கையில இத்தொடியையிட்ட பரத்தையும் தவ றுடையளலலள்; இததொடியை இவன கையிலிட்ட வள் யாரோ என்று கேட்ட யானே தவறுடையேன்' என்று தலைவி புதலவனிடம் கூறுவாள போனறு தனனுள்ளே அழிந்து கூறினாள் (கலி. 84.36-41) [3] 'ஆயிழாய, உனககு எததுன்பமும செய்யாத என பால் ஏதேனும தவறுண்டோ' எனத தலைவியைத தலைவன் வினவினான (கலி. 86 29) 'தெரியிழாய, யான் செய்த தவறு இலலாத இடததும நீ எவவாறு சினங்கொளவாய' எனறு தலைவன் வினவ அதற்குத தலைவி 'ஏடா, கண இமைததால அககண இமைககும உள்ளாகவே நீ கரநது விடுவாய், அததகைய உன நிலையினை அறிந திருந்தும அறியாதாரைப போல நினனைப புலக கினறவரே தவறுடையர்; நினபால ஒரு தவ றுண்டோ' எனறு ஊடிக கூறினாள. அதனைக் கேட்ட தலைவன 'அணைபோலும் தோளினை யுடையாய, தீயாரை வருத்துதல் போல் வருத்து கின்றனை, நீ சினககும அளவுககு யான் தவறுடை யேன் அலலேன' என்று கூறினான (கலி. 87:3-10)[4] 'ஆயிழாய, நினனுடைய கண்ணினால அருணோககினைப பெறினலலாது இன்னுயிர் வாழ மாட்டாத எனனிடத்துள்ள தவறுதான யாதோ' எனறு தலைவன் தலைவியை வினவினான் (கலி 88:8, 9) 'பரத்தையருடைய மாலையை நீ அணிநது வந்திருக்கும் தவறறிற்கு அஞ்சி நீ கூறததுணிந திருககும் பொய்சசூளுறவு வருத்ததைச செயயு மாயின் அதனால விளையும் கேடு என்னை அலலவோ சேரும' என்று தலைவி பரததைமைத் தலைவனிடம ஊடல தீாந்து கூறினாள (கலி. 88:18-21). ஒருவன மேல தவறு இல்லை யாயினும் அவனை மன்னவன சீறும (கலி. 89:10). 'ஒண்டொடி, நீ என் மேல் கணட தவறுதான எதுவோ' எனறு தலைவன காமககிழத்தியை வினவினான (கலி. 90:4). 'யான தேறறத தெளிவை யாயின் யான தவறுடையேன அலலேன என்பது தெளிவாகும' எனறு தலைவன காமககிழத்தியிடம கூறினான (கலி. 90:20). 'யான் செயத தவறு களை என்மேலிட்டு என பொயகளையெலலாம

தெளிவித்துக் களவினைக் கையோடு பிடித்துக் கொண்டாய, இனி எனக்கு அருள்வாயாக' எனத் தலைவன தலைவியை வேணடினான் (கலி. 95.27, 28). 'கூந்தலில ஏதிலான புனைநத கண்ணியை முடிததேன எனபதைத தாய அறிவாளாயின் என்ன நிகழுமோ' எனறு அஞசிய தலைவியிடம் தோழி, வரைவினை உணர்ந்து 'இனி எல்லாத் தவறுகளும நீங்குமகாண்' எனறு கூறினாள் (கலி. 107.14-17). பெருநதிணைத் தலைவியின் பேதுறற செயலைக கணடு கூடியவர்களை நோககி அத தலைவி 'இது போனற தவற்றினை நீங்களும் செயயவிலலையோ' என்று வினவினாள் (கலி. 147: 13). தலைவர் நீஙகுதலை அறியாத களவுப் புணாசசியையுடைய மகளிர், தம் தலைவரோடு மாறுகொணடு ஊடுகினற தவறு உடையரலலர் (பரி. 9:23, 24). 'நினனை எயதும் மகளிரின மெனறோள் மேல் தஙகி அருள செய்யும் தன்மை யும நினககில்லை; வஞ்சனே, நீ வாழவாயாக; நீ தவறு உடையை அலலை; நின மாணலததை நுகரேன்' என்று வானவனமகள் (தேவசேனை செவ்வேளிடம கூறினாள் (பரி 9.30-32).

**தழல** - கிளிகடிகருவி. தலைவியும் தோழியும, மலைப் பககததே கடடின பரணமீது ஏறித் தழலும் தடடையுமாகிய கிளிகளைக் கடியும் கருவிகளைக் கையிலே வாங்கிக கிளிகளை ஓட்டினர் (குறி. 41-44). தலைவி, வேஙகை மாலை சூடி, ஆயததுடன் அழகுற நடநது தழலினைச் சுறறியும் தட்டை யினைத தட்டியும் தழையாடையுடுத்தும தினைப் புனத்தைக் காததாள் (அகம. 188:9-13). தழலும் தடடையுமாகிய கிளிகடிகருவிகளைத தந்தும தழை யாடையைக கொடுததும இபபொருள்கள் உனககு ஏற்புடையன எனறு புனைநதுரைகளைக கூறி அனனை ஓம்பிய தலைவியின ஆயநலததைத தலைவன் கொள்ளை கொணடான (குறு. 223:4-7).

**தழிஞ்சி** - ஓர் புறத்துறை (மறசசெயல் புரிநத வீரரை, மனனர் தழுவிக கொளளுதல) 'பேரியாழினகண பாலைப பணணையெழுபபிக குரல் எனனும் நரமபொடு புணாநத இனனிசையில தழிஞசி எனனும துறைபபொருளாக அமைநத பாட்டினைப பாடிச சென்று கணடு வருவதறகு வருதியோ' எனறு வினவி விறலியை ஆடுகோடபாடடுச சேர லாதனிடம ஆறறுபபடுததினர் (பதி. 57.8, 9).

**தழுமபன்** - குறுநில மனனன். போர்ககளத்தில் பிடி யானையால் மிதியுணடு பட்ட புண ஆறி வழு துணஙகாய போனற தழுமபுடன் திகழந தமையால போலும இவன் தழும்பன எனும் காரணபபெயர் பெற்றான். இபபெயர், பிடி மிதி வழுதுணைப பெரும்பெயர்த் தழும்பன்' (அகம். 227) எனவும, 'பெரும்புண் ஏஎர் (அழகிய) தழும்பன' (நற். 300) எனவும் விளக்க மாகவே பாடல்களில பயின்று வந்துள்ளன. இவனை, 'வாயமொழித் தழும்பன்' (புறம. 348) எனறும, 'இருமபாணொாககல் தலைவன்' (நற.300) எனறும் பாராட்டுவா பரணர். தப்பாத வாளினை யுடையவன; தன புகழைத்தமிழக எலலை முழுவதிலும் சாற்றி முழங்கும் முரசினையுடைய வன்; தன்னிடம் பரிசில வேண்டி வருவோர்ககு முடிவு கட்டாத நாளவையினையுடையவன; தூங்க லோரியார் புகழந்து பாடிய பெரிய நறபுகழை-யுடையவன் எனறு இவன புகழை விரிபபர் நககீரர் (அகம். 227). ஆயினும, தூங்கலோரியார் இவனைப் புகழந்து பாடிய பாடல் கிடைத்திலது. மருதவளம் சான்றதும் மதிறகாவல மிககதுமான ஊணூர் இவனுககுரியது (புறம. 348, அகம. 227; நற. 300).

**தழும்பு** - வடு. முல்லைககொடி, நாவில் தழும்பு - வடு- உணடாக வாழ்த்திப் பாடாதாயினும் மணிநெடுந் தேரைக கொள்க எனறு சொல்லிக் கொடுதத மேம்பட்ட சிறபபினை யுடையவன பாரி (புறம். 200:9-12). களிறறினைச் செலுததுவதனா லுணடா கிய தழும்பினை உடையதும வீரககழல கிடந்து அசைவதுமாகிய பிறககிடாத அடியினையுடை யவன நல்லியக கோடன (சிறு. 123,126).

**தழுவணி** - குரவைககூத்து. தலைவன், மகளிா கூட்டத் தோடு தழுவணி - குரவைககூதது - ஆடி, அயலா ரைப போல விரைவாக வநது தலைவியை முயங்கிச சென்றான் (குறு. 294:2-4).

**தழூஉ** - குரவைக்கூத்து. தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன சினநத பகைவர் நாட்டின்கண் உணடாகும் கேடுகளுள் மஙகையர் துணங்கைக் கூத்தினையும அழகினை உடையதா கிய தாள அறுதியை உடைய தழூஉவினையும - குரவைக கூத்தினையும - மறபபதும் ஒன்றாகும் (மது. 159,160). துணஙகைக் கூத்தினையும் தழூஉ வினையும் உடையது ஊர் (மது. 329,330). காதலை யுடைய மகளிரும அவர் கணவரும மனறததின் கண்ணே தழூஉ ஆடினர் (கலி. 103 61,62). தழுவிக் கொணட ஏறுகளலலாம் மேய்சசெல் புலத் திறகுப் போக ஆயசசியரும் ஆயரும் ஊரினகண தழூஉ அயர்நதனர் (கலி. 104:60-62). ஆயச்சியர்

தம்முடைய அனபுமிகக காதலரது கையைக் கோத்துக கொணடு தழூஉ அயர்ந்தனர் (கலி. 106.32,33).

**தழூஉவணி - குரவைக்கூத்து.** 'தழையாடை உடுத்து விழாவின்கண ஆடும் மகளிரோடு தழூஉவணியால் - குரவைக் கூததால் - பொலிவுறறு நின பரததை தன் முன்கையினால் பிணித்த பிணிப பினை விடுததுச் சென்ற அளவிற்கே வெகுண்டழு தனளாய் நின்னை ஊர் முழுதும் தேடிச சென்ற னள்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (தழுவியாடும் அணி எனவும் பொருள் கூறுவர். வே.வி) (அகம். 176:14-18,26).

**தழை - 1. தழையுடை.** கடைசியர், கொண்டையாகிய மயிரையும் குளிாநத தழையையும் - தழையுடையையும் - உடையவர் (புறம. 61:1). வெள்ளாமபல், தலைவி இளையவளாயிருநத காலத்தில தழையாய உதவிறறு, அவள் கொழுநன இறநத போது அதுவே பொழுது மறுததுணணும் புல்லரிசியாய் உதவிறறு (புறம். 248). தலைவி, இடையில அணிநத தழை அசையுமாறு ஓடிச் சென்று குன்றிமணிக கொத்துக்களைப் பறித்தாள் (புறம். 340:1, 2). இளையோளாகிய தலைவி, அழகிய பூக்கள் விரவித தொடுததலையுடைய அழகிய தழையினை உடையவள் (புறம. 341:2,3). செவ்விய மூடடுவாய் அமைநத சிலமபும் அணியாகத் தொடுக்கபபடட தழையும உடையது எயில் (பதி. 53 6,9). கஞசங் குல்லையினையும இலையையுடைய நறும் பூககளையும் மரத்தினுடைய வெள்ளிய கொத்துககளின இடையே வைத்துத் தொடுதத பெரிய குளிர்ந்த அழகினையுடைய தழையை மகளிர் அல்குலிடததே அணிநதனர் (முரு. 201-204). தலைவி அல்குலிடததே கொய்யப்படடுக கட்டிய தழையை உடுததினாள் (குறி. 102). பசிய தழையினை யுடையவர் மகளிா (பட். 91) 'தண்ணிய தழையை உடையை' என்று தாய தலைவியை நோககிக் கூறினாள் (அகம. 7:2). தலைவி, அழகிய பூக்களோடு மேவிய பசிய தழையினை அழகு பொருந்த உடுததிக் கொண்டு கானலில தலைவனோடு தஙகி வருவாள (அகம. 20:9,10). ஆயர்மகளிர் தண்ணிய தழையை உடுத்திக் கொள்ள வேணடித் தொழுநை ஆறறின் துறையிலுள்ள குருநத மரத்தைத திருமால வளையுமாறு மிதித்தார் (அகம. 59:4-6). தலைவியும் தோழியும், கழுநீர், ஆம்பல ஆகியவற்றின் பூக்களுடன் கூடிய பசிய தழையை உடுத்தி அது அகததின்கண அலையுமாறு விளையாடினர் (அகம. 156 9-11). மனையினகண உள்ள வயலைக் கொழுங்கொடியினை ஆம்பலோடு சோத்துக் கட்டிய தழையை உடுத்தி மகளிர் விழாவயர்நதனர் (அகம. 176:13-15). தீயினையொதத கொழுந்தினையுடைய அசோகினால ஆகிய தழையை உடுததிக குறமகள் தினைபபுனததைக காத்தனள் (அகம். 188'12,13). குறுமகள, நெய்தல் மலருடன் கூடிய பெரிய குளிர்நத சிறநத தழை பொருநதிய அலகுலை உடையவள் (அகம. 230.2-5). 'வேல்களும் விளககமுற்றன; ஏவலாளரும் புறப்பட்டனர்; மாலைகளும கட்டப் பெறறன; தழைகளும தொடுக்கப்பட்டன' என்று உடனபோக்கு நோநத தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 259'1, 2). பசிய தளிர்களால் ஆகிய தழையை யுடையவர் எயின மகளிர் (அகம். 331 5). தளிரால ஆகிய தழையை அணிந்த மகளிர் உண்பிககக் குறவர் தோபபிககள் மாந்தினர் (அகம் 348:7-9). வயலைக் கொடி, தலைவியின் அல்குலில் உடுக்கும் தழைககு அழகிய தளிர்களை நாடோறும் தந்துதவியது (அகம. 383: 6-8) அசோகு, கொடிசசியாகிய தலைவியின அல்குலுக்குப பெரிய தழையை அளிததது (குறு. 214:3-5). வெள்ளாமபலின அழகிய மாறுபடட முழுநெறியையுடைய தழை, துடையினகணணே மாறி மாறி அசையப பரததை வந்தாள (குறு. 293: 5-7). தலைவன், தலைவியினுடைய அலகுலின பக்கததில் கட்டிய பசிய தளிாகளாற் செயத தழையைக காட்டிலும் மிக அணிமையிலிருநது போகானாகிய காரணததால் தாய் தலைவியை இற்செறிததாள (குறு 294.5-8) நறிய தழையை அணிநத மகளிா கிளிகளை ஒட்டினர் (குறு. 333 3). பைஞ்சுனையிற் பூத்த குவளைகளை இடையிட்டுக கட்டிய குளிர்நத தழையை உடையவள் தலைவி (குறு. 342. 4, 5). தழை தாழநத, அலகுலை உடையவள் தலைவி (குறு 345 4). தலைவி, பலவாகிய பூககளுடனே மாறுபடத் தொடுககபபட்ட தழை அசையும அலகுலை உடையவள் (நற் 8:2). தலைவன் தலைவிககுத தழையும தாரும தநதான் (நற. 80 5). 'மாறுபடத தொடுதத நெறிபபையுடைய நெயதலினால் ஆகிய தழையை அழகு பெற எனக்கு உடுபபிததுத தலைவா தமியராய்ச சென்றுவிடட கானல இதுவே' என்று கூறித் தலைவி வருநதினாள் (நற் 96.7-9). நெயதலின, அழகிய ஒனறோடொனறு மாறுபட்ட நெறிபபையுடைய தழையை அழகுபெற உடுததித தலைவி சிறறில் புனைநது விளையாடினாள (நற 123.6-8) விறலி, பிணைத்த அழகிய தழையை உடுததி விழவுககளம் பொலியுமாறு வநது நினறாள் (நற. 170.3,4). பிறர் ஐயுறாதபடி தளிரால ஆகிய மெலலிய தழையை உடுததி நுநதையின் தினைப் புனததின்கணணே ஞாயிறு மறையும் பொழுதில

வாவோ' என்று தலைவன தலைவியை வினவினான் (நற 204 1,2). இளையோளாகிய பரத்தை, தழை யசையும் அலகுலையுடையளாய்த் தெருவின் கண்ணே சென்றாள (நற. 320 3,4). 'குன்றநாடன் உடுத்திக கொள்ளும் தழையைத் தந்தனன்; இதனை உடுததிக கொள்ளின யாய் சினகரும் என்று அஞ்சு கினறேன; வேண்டாம் எனின தலைவனின் ஆற்றா மையைக் கணடு அஞ்சுகினறேன்; இனி, தெய்வ முறையும் அடுக்கததிலுள்ள கொயதறகரிய இத் தழை வாடுங்கொல்' என்று தலைவனிடம தழை யேறற தோழி தலைவியை வினவினாள் (நற். 359: 4-9)(²) பசிய தழை சிதையக கோதை வாட வளை கள் கழலத தலைவி தலைவனோடு நண்டினைப பிடிதது விளையாடினாள் (நற். 363:7-10). 'சிறு கிளி கடிந்து, ஊசல் ஆடி, அலகுலுககுத் தழை அணிந்து நும்மோடு விளையாடி வருதலினும் இனியது உணடோ' எனத் தோழி தலைவனை வினவினாள் (நற். 368: 1-4). காமககிழத்தி, ஆம்பவின அழகிய நெறிப்பையுடைய தழையை, அலகுல் அணிபெறுமாறு உடுத்தினாள (நற். 390:4, 5). மகளிா ஒள்ளிய தழையுடுத்தினர் (ஐங். 15:1,2). ஆம்பல் மலரால தொடுககப்பட்ட மூட்டுவாயை யுடைய அசைகின்ற தழையை யுடையவள் தலைவி (ஐங் 72:1). நிறமமைநத ஒளியையுடைய தழை அசையும்படி தலைவி நீராடினாள் (ஐங். 73.1,2). ஞாழலினாலாகிய கவினுடைய தழையினையுடைய வள் தலைவி (ஐங். 191.3). தலைவனது மலையி லுள்ள மரங்கள் மலாகளோடு அரும்புகளை யும் உடையனவாகித தலைவிக்குத் தழையைத் தநதன (ஐங. 201). குளிர்நத தழையையுடையவள் கொடிச்சி (ஐங. 256:2). ஆராயநது தொடுதத தழையசையும அலகுலையுடையவள் தலைவி (ஐங. 291.3,4). ஆயத்தாா, பிடவம முதலிய பல மலர் கள் நெருங்கும்படி தழையும கோதையும் இழையும் கட்டினராய அணிநது மகிழநது திளைத்து விளை யாடினர் (கலி. 102:4-8). 'தலைவிககு அழகை யுடைய தழையை உடுத்து அவள் நலம் மேன் மேலும் வளரும்படி நீ அளிதத தொடர்பை அவள் அழுமாறு கைவிட்டுச செலலும ம நீ மிகக கொடியை' எனறு தோழி தலைவனிடம கூறினாள் (கலி. 125: 12-15).

2. இலை. 'நொச்சியின் கணணுக்கு நிறைந்த அழகிய நிறமுடைய தழை - இலை - மகளிருடைய அல்குலிடததே தொடலையாக அணியப் படுதலை முனபு கணடோம்; இப்பொழுது அவ்விலையையே மாலையாக மறவன அணிநததனால குருதியில் கலநது உருமாறிய அதனை ஊனென்று கருதிப பருந்து கவர்ந்து கொண்டு போதலைக் கணடோம' எனறு வெறிபாடிய காமக் காணியார் போர்க்கள நிகழச்சியொன றினைப் பாடுவர் (புறம். 271). வய லிடத்தே நெருஙகிய பசிய தழை அசைந்தது (புறம். 30:39). பிடவுடன மலர்நத வேங்கைப் பூவுடன் கூடிய தழையை வேறுவேறாக வகுத்து வைத்தாற் போன்ற தசையில மறைபபு நீங்காத வளைந்த நகததினையுடைய குட்டிகள் மூன்றினைப் பிணவுப்புலி ஈன்றது (அகம். 147:1-5). நெருங்கிய தழையினைத் தினறு வெறுத்த பிணைமான ஏறுடன கூடி மகிழ்ச்சியை யுடையதாய்த் துள்ளித் திரிந்தது (அகம். 234:10,11). கொயதழைத் தளிர் (இவ்விடததில் 'கொயகுழை' என்ற பாடமும் காணபபடுகினறது) (அகம். 319: 12). கலை மான, நீர் வேடகையால உறற துன்பத்தால் தழை உண்ணுதலைக் கைவிட்டு நீரற்ற கயததினை நோக்கித் தளர்ந்து சென்றது (அகம. 353'12-14). ஞாழன் மரங்களிலே மலர்கள் இன்மையின் அதன் ஒள்ளிய தழையைப் பறித்து ஆடையாகப புனைந்து மகளிர் விளையாட்டயர்ந்தனா (ஐங். 147). 'எம் மோடு வந்து கடலாடும் மகளிரும் நெய்தலினால ஆகிய ஒன்றுக்கொன்று மாறாகிய தழையால் பாவை புனையார்' என்று தோழி தலைவனிடம் கையுறை மறுததுக் கூறினாள் (ஐங. 187:2,3). 'செயலையின அழகிய ஒனறுககொன்று மாறாகிய தழை வாடிவிடும்' எனறு தோழி தலைவியிடம் தலைவனது கையுறையை ஏறகுமாறு கூறுதல (ஐங. 211). 'கொய்யப்பட்ட தழையைக் கையுறையாகக கொடுதத நீ வணங்கவும அவள் நினககு நேர்ந் திலளோ' எனறு காதறபரத்தை தலைவனை வினவினாள் (பரி. 6:66,67). தழையும் பூவுமுடைய அசைகின்ற கொடி (பரி. 22:28). ஆயம, தழையை ஆடையாக உடுத்தும் மாலையாகத் தொடுத் தணிந்தும் அணிகளாக அணிந்தும் கூததலில் செருக்கியும பொலிந்தது (குறு. 295:1,2).

3. மயிறறோகை. விளங்குகினற கரிய பீலியாகிய அழகினையுடைய தழை - மயிறறோகை - கட்டப் பெற்ற கொம்பும் பிறவுமாகிய இசைக கருவிகள் இட்டுச் சுருககபபட்ட பையினை யுடையராய்க் கூத்தர் சென்றனர் (மலை. 5,13).

**தழையணி** - தழையுடையாகிய அணி. விழாவிற்கு ஒப்பனை செய்யும மகளிர், தம் தழையணிககு - தழையுடையாகிய அணிககு - நெயதற்பூககளை அணி செயச் சேர்த்தனர் (அகம. 70:11,12). பழையர் மகளிர், தழையணியாற பொலிவு பெற்ற அலகுலை யுடையவர் (அகம. 201: 6, 7). 'என மகள்

அலகுலிடத்தே அணியும் தழையணிககாகக் கொய யும நொச்சியின கீழே, அவளால் இயற்றப் பட்ட வண்டலையும் கண்டீரோ' எனறு மகட்போக்கிய தாய் இடைச் சுரத்தாரை வினவினாள் (அகம. 275:16-19). செல்வத் தங்கையா, தழையணியினை உடுத்திய அல்குலினையுடையவா் (அகம். 320.3). தழையணி அணிநத அல்குலையுடையவா மகளிா (குறு. 125:3). தழையணியினை யுடைய அல்குல் (குறு. 159·1).

**தழையோர்** - தழையுடையினையுடையோர். தழையோர் - தழையுடையினையுடையோர் - கொய்தற்குரிய தளிரினையுடையது ஞாழல (நற் 54:9,10).

**தழைவிலை** - தழையாடை உடுக்கும் மகளிரின் அல்குல் விலை 'இறைவனாகிய தலைவன, தணணிய தழை விலையென- அல்குல்விலை என- நாட்டினைக கொடுததனன' (ஐங. 147).

**தள்ளாதோர்** - தளையாதோர். நிலம குழிநத விடத்தே நீர் நிலை மிகும்படி தளைததோர் தாம் செலவும உலகத்துச் செலவம் முதலாகிய மூன்றினையும் இவ்வுலகததில் தம பெயரோடு தளைததோரா வார்; அந்நீரைத் தள்ளாதோர் - தளையாதோா - இவ்வுலகததில் தம பெயரைத தள்ளாதோர் ஆவார் (புறம. 18:28-30).

**தளம்பு** - சேறுகுத்தி (சேற்றினைக குததிக் கட்டிகளை உடைத்துச சமபபடுத்தும் ஒருவகைக கருவி). மலஙகுமீன் பிறழ்கின்ற வயலின கணணே தளமபு - சேறுகுததி - துணித்த வாளை மீனின் தடியை வெண்ணெல் சோறறிறகு மேலிட்டு உண்ணும உணவாகக் கொணடு உழவர் விலாப பக்கம விம்ம உண்ணுவர் (புறம். 61·3-6).

**தளர்ச்சி** - சோர்வு. பாண்டியன தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் பிணிப்புண் டிருந்த யானைககடசேய் மாநதரஞ சேரலிரும பொறை, பொறுத்தறகரிய வலியாற் பகையை மதியாது தானுறற பெரிய தளர்ச்சி - சோர்வு - நீங்கப பிறிதொரு சூழசசியால பலரும் மகிழ அரசுரிமை எயதினான் (புறம். 17:20-22).

**தளரியால்** - மனந்தளர்கினற இயல்பினையுடையாய் (விளி). 'தளரியால் - மனநதளர்கின்ற இயலபினை யுடையாய - , யான பகைககு அஞசாத ஆட்டி னத்தையுடைய ஆயர்ககு மகனாவேன்' எனறு தலைவன் தலைவியை விளிததுத தன் செலவககுடிப பிறபபை உணர்ததினான (கலி. 113:6,7).

**தளரியலவர்** - தளர்ந்த இயல்பினையுடையவர். தலைவன், தளரியலவரோடு - தளாநத இயல்பினை யுடையவரோடு (பரததையரோடு) - துணஙகைக் கூத்து ஆடியதனால அலர் எழுந்தது (கலி. 66: 17,18).

**தளவம்** - செம்முல்லை. தலைவியும் தோழியும் பறிததுக் குவிதத மலாகளுள் தளவமும - செம்முல்லை யும் - ஒன்றாகும (குறி. 80). 'தளவம் முலலை யோடு கூடித் தண்ணெனறு நறுமணம் கமழும காட்டினது நீண்ட வழி பினனுறுமாறு நெடுந தேரைச் செலுததுவாயாக' என்று தலைவன் தேர்பபாகனிடம் கூறினான் (அகம. 254:12-17). முலலையின் அரும்பு விரிந்ததனால உண்டாகிய மணம், புதலினிடததே தளவமொடு சேர்நது மணம வீசுமபடி மேகம் மழையைப பெயதது (குறு. 382·1-4). புதல்மேல ஏறிப படாகினற தளவக் கொடியில பூக்கள் மலருமாறு கார்காலம் தொடங கியது (நற். 245:2,5). காயா முதலிய மலாக ளோடு, போது அவிழநத தளவமும பிடவும மலர்ந்து அழகு பெறறதால காடு பூவணியை உடையதாயிறறு (ஐங். 412). நெடுநதேரில பூட்டப பெறற குதிரை, நெடுஙகொடி முலலை மலரும தளவமலரும் உதிருமாறு விரைநதது (ஐங. 422: 1-3). காாபபருவத்தில மலர்நத செஙகாநதளையும தளவததையும உடையதால் தலைவன சென்ற நெறி நனமையுடையதாயிறறு (ஐங். 440 ) கானம, பிடவம மலரவும தளவம அருமபவும காாகாலததுக கவினைக கொண்டது (ஐங். 499·1,2) மகளிர் படர்கினற கொடியினையுடைய தளவம முதலிய மலாகளைப பறிததுத தழையாடை முதலியவற றைத தொடுத்துக கட்டி அணிநது விளையாடி னர் (கலி. 102:1-7). தளவமலர் நெருங்கபபெறறது கானம (கலி 108.27).

**தளவு** - செம்முல்லை. உழவர், புதலிடததே மலாநத தளவின் - செமமுல்லையின் - பூவினைச சூடிக கொணடு கிணைபபறையால் வயலில் படியும பறவைகளை ஓட்டுவா (புறம். 395 5,6). அவிழ கினற தளவு முதலிய மலர்களை உடையது புறவு (பொரு. 199,202). புதரினமீது படாநத தளவின சிவல முள்ளைப் போனற சிவநத அருமபு, பிடா வின அரும்புடன ஒருஙகு பிணிபபு விரிநது மலரக காடு கமமெனறு மணம வீசியது (அகம். 23·3-5). தளவின அருமபு விரிநத குளிாநத செவ்வியைக கொணடது. பெருவழி (அகம 64:4). சிசசிலிப பறவையின வாயபோனற அரும்புகளையுடைய தளவினை யுடையது காடு (நற். 61.7-9). பலியால

வளாகின்ற தளவினது சிவந்த அரும்பு வண்டு அவிழப்ப மலர்ந்து பெருமை பெறறது (ஐங். 447: 2-4). முல்லைக கொடிகள், தம் பககலிலே படர்நத தளவினது பைங்கொடிகளைத் தழுவிக் கொணடு தம் அரும்புகளைப் பேணிக் கார்ப் பருவத்தை நயநதன (ஐங. 454:1-3). ஆயர், கல்லிடத் தனவும் காட்டிடததனவுமாகிய தளவு முதலிய பல மலர்களாலும் செயத கணணியை மலைநது ஏறு தழுவினர் (கலி. 103:1-5). 'சுனையாடிக் குளிர்ச் சியை யுடையதாகிய பூக்களையுடைய தளவோடு முல்லை மலரையும் பறிததுப் பொழிலிடத்தே எம் மோடு தங்கி நும்மூர்க்குச செலவாயாக' எனறு தலைவன் தலைவியிடம் கூறினான் (கலி. 108:41-44). தளவம் 1. காணக.

**தளி** - மழைத்துளி/மழை. தண்ணிய தளியால் - மழைத் துளியால் - நிறைநத சூலையுடையது மாமழை (பதி. 24.28). தொகுதியைக் கொண்ட மேகம், குளிர்ந்த தளியைப் பெயதது (பதி. 31:15). மேகம், இடி முழககத்தைச் செய்து பெயல் சிறந்து தளியைப் பொழிந்தது (பதி. 43:17, 18). தொகுதி கொண்ட மேகம், நாற்றிசையும் காலிறங்கித் தண்ணிய தளியைப் பெய்தது (பதி. 76:9,10). இனிய ஓசையினையுடையதும் தளிகளையுடையதுமான மேகம் தங்கும் தன்மையினையுடையது திருப்பரங குன்றம் (மது. 262-264). துளியாகிய உணவினைப் பெறாது வானம்பாடி புலரும்படி மழைபெய்தலைத் தவிர்நது மேகம் பொய்ததது (பட். 3-5). தளி பொழிகினற கானம (மலை. 385). தணணிய முழககததையுடைய மேகம், எங்கும பரநது தளியோடு பொருந்தியது (அகம. 43 8). மேகம், மிக்க தளியைச் சொரிநது காாகாலததின் கடைநாளில் தூய்மையில்லாத வெண மேகமாய் உயர்மலையில் தவழும் (அகம.139:5-7). தலைவி, காற்று மோது தலின அசைவதும் தளி பொழியப் பட்டதுமான மலரைப போலக் கண்கள் நீரினை மார்பிலே சொர்யத தலைவன பிரிவால் அழுதாள் (அகம். 146.10,11). மேகங்கள், இடிமுழக்கததோடு மேம பட்டு ஒனறோடொனறு கலநது தளி மிககுப் பெய்தலால் மழைநீர் தெருக்கள்தோறும் ஓடியது (அகம். 264·7-9). மேகம், பரநத தளியினைச் சொரிநதிடப புற்கள குருததினை விட்டன (அகம். 283:12,13). வானம் தளியைச் சொரிந்து வெப்பம் நீங்கிக குளிர்ந்த நிலைமையை எயதியது (அகம். 345:1,2). தணணிய கார்ப்பருவம தளியைத தரும் (குறு. 60:3, நற. 316 9). தளி பெய்து பதம பெற்ற காட்டினைக குறவர் உழுதனர் (நற். 209:2). மேகம், ஓயாத முழககமொடு தளி மிகுநது ஓங்கிப் பெய்யத் தொடங்கியது (நற். 257,1,2). காலைப் பொழுதில் பாம்பு அளையினுள் செறிந்திருக்கு மாறு முழங்கி வலமாக எழுந்து மேகம் தளியைப் பொழிநதது (நற். 264:1,2). காக்கை, வலி மோதுகினற நெடுங்கிளையில் தன் மேல் விழுகின்ற தளியுடனே அசைந்து கொண்டு கழார் என்னும் ஊரில் கொளளப்படுகின்ற பெருஞ்சோற்றைப் பெறக் கருதி இருக்கும் (நற்.281:1-6). மாமழை, இடியிடித்துத் தளியைச் சொரிந்தது (ஐங். 423:1). 'எம்மோடு நீ வருவையாயின் முகிலால் சொரியப்பட்ட தளியை ஏற்ற தளிரையொத்த அழகினையுடைய நினது மேனியின அழகு கெடும்' எனறு தலைவன் தலைவியிடம் கூறினான் (கலி. 13:18-21). 'தளி பெயதலை அறியாத காடு, நின்னடிக்கு எளியவோ' என்று தலைவன் தலைவியை வினவினான் (கலி. 20: 7,8). தலைவன், தேரையும் களிற்றையும தனபால வந்த புலவர்க்குக் கொடுத்துத் தளியினும் அருள் சிறந்தான் (கலி. 50:15-17). மலையிடத்தில காய்த லுற்ற சிறுதினை, தளியைப் பெற அழகு பெறறாற போலத் தலைவியின் நுதல் தலைவனது அளியைப் பெற அழகு பெறறது (கலி. 53:21-24). தளியைப் பெறும் குளிர்ந்த நிலததில் பிடவு அரும்பு ஈன்றது (கலி. 101:1,2) தளியால் வளர்நத குளிர்ந்த கிளைகளையுடையது பொழில (பரி. 8:91,92). வானம், மின்னையும் இருளையும் மாறிமாறிப பரபபிசையமலையை முறறித தளியை இடைவிடாது பொழிந்தது (பரி. 12:1-3).

2. மேகம். தளி-மேகம்-மழையைச் சொரிநதமையால் குளிாந்து வருதலையுடைய வாடைக்காறறு மிக்க நடுககததைத தந்தது (அகம. 305:3,4).

3. நீர்த்துளி. வாழையின் கொழுவிய மடலகனற குருததாகிய இலையிலே தளி-(தாற்றின)நீாத்துளி-கலந்து தஙகியிருந்தது (நற். 309:4,5).

**தளிர்** - கொழுந்திலை. வேம்பினது பெரிய கொம் பிடத்துள்ள ஒள்ளிய தளிரை-கொழுநதிலையை-உழிஞைக் கொடியுடனே விரவி மாலை தொடுககப் பட்டது (புறம். 76:4,5). பாணடியன தலையாலங் கானததுச் செருவெனற நெடுஞ்செழியன, குடுமிகளைநத சென்னியின்கண்ணே வேமபினது ஒள்ளிய தளிரை உழிஞைக கொடியொடு சூடினான (புறம். 77:2,3). 'குபபையினகண முளைத்ததும் முன்பு கொய்யப்பட்டதுமாகிய கீரைச் செடியில கிளைத்த முதிராத இளைய தளிரைப் பறிததுச சமைதது அவிழாகிய உணவை மறநது இலையைத் தினறு அறககடவுளைப் பழித்து உண்ணாளாகினாள்

எனறு குமணனிடம பெருஞ்சிததிரனார் தன் மனைவியின நிலையைக கூறினார் (புறம. 159:9-14). சேரமாதேவி, கரையைப பொருகின்ற நீரிலேயுள்ள தளிரைப் போல நடுங்கிச் சிறுசெங்குவளை மலரைச சேரன்மீது எறிநதாள் (பதி. 52.21,22). சூரரமகளி ருடைய காதிலே இட்டு நிறைந்த பிண்டியினது ஒள்ளிய தளிர், அவர் மாாபிடத்தே அசைநதது (முரு. 31,32). மகளிா, மாவினது விளங்குகின்ற தளிரை யொககும் நிறத்தினை யுடையவா (முரு. 143,144). வேலன், அசோகினது தணணிய தளிர் அசையும் காதினை உடையவன் (முரு. 207). தளிரினையுடைய புன்கு சோலையில் இருநதது (பொரு. 196). கொயயப்பட்ட தளிர் விரவின மாலை யினை யுடையவன் நலலியக கோடன சிறு. 267-269). அவரையின நிறம பொருந்திய தளிரைத தின்னும் ஆமாவைக கானவர் ஓட்டுதலின ஆர வாரம் எழுநதது (மது. 292,293). கொண்டி மகளிர், கொழுங்கொமபுகளில உள்ள மெல்லிய தளிா களைப் பறித்துக குவளை முதலியவற்றோடு சேர்த்துத் தொடுத்து உடுத்தினா (மது. 586-588). மகளிர் மாவினது தளிர் அழகினையொதத நிறத தினையும் தளிரினது புறத்தே ஈர்ககுப போலத் தோனறின திதலையினையும உடையவர் (மது. 706-708).([2]) மெல்லியல மகளிா, தளிரையொதத நிறத் தினா (நெடு. 148,151). தலைவன், அசோகினது அழகிய தளிரைத் தன தோளில் வீழநது அலைககும படி காதிலே செருகினன (குறி. 119,120). கூத்தா, தளிரோடு மிடைநத விருபபம் மருவின கண்ணியை அழகு பெறச் சூடினர் (மலை. 430,431). தெனறல காறறினால கிளைத்த அழகின மேனமையுற்ற வளம் பொருநதிய தளிர்களை யுடையது மாமரம் (அகம. 37:6,7). அழகிய தளிர்களை யுடையது அசோகு (அகம். 38:6). பூஙகொத்துககளிலுள்ள தாதுடன் கூடிய தேன்துளி, தளிரில ஒழுகியது போல அழகு ஒழுகும மாமை நிறததில தோன்றும் தேமற புள்ளிகளை யுடையவள தலைவி (அகம. 41: 13-16). மாயோளாகிய தலைவி தளிரை யொதத அழகிய மேனியை யுடையவள (அகம. 42:4). அரக் கினை ஊட்டினாற் போலும ஒளளிய தளிரினை யுடையது அசோகு (அகம. 68:5). குறுமகளாகிய தலைவி, மாரிககாலத்தே ஒளிரும் இண்டையின கரிய தளிரை யொதத அழகிய மாமை நிறததை யுடைய மேனியள் (அகம. 75:17-20). மேனி தளிரை யொககும் (அகம. 95:2). அழகு ஒழுகும தளிரைக் கொண்ட பெருங் கிளைகளையுடையது மாமரம (அகம். 97:20). தலைவனைப பிரிநத தலைவி, தேம லுடன் கூடிய மாமை நிறமும தளிர் போலும வனப்பும் கெட்டொழியபபேதுறறாள் (அகம. 136: 1,6). அசையும தளிரினையுடையது இருபபை (அகம். 136:8). தலைவி, காறறு வீசபபெற்ற தளிரென நுடங்கி வநது காமநோயாகிய வருததம நீஙகத் தலைவனை அமையாது முயங்கினாள் (அகம். 162: 15,16). தலைவி,[1] மாமரததின தளிரை யொதத ஆகத்தில தகைபெற அரும்பிய வனமுலையள் (அகம. 177: 17-19). மனைக் கோழியினுடைய தொங்குகின்ற தாடியை யொத்த கவர்தத ஒள்ளிய தளிரினை யுடையது யாமரம (அகம். 187:14,15). ஆயிழை மகளிர், மாரிக காலத்தில் ஈஙகைச் செடி யில தோனறும் சிறநத தளிரினை ஒதத மாமை நிறம பொருநதிய மேனியினையுடையவா (அகம. 206:7,8). தலைவன், வெணகடபப மரததின தேன பாயும் பூஙகொததுக்களைத தளிருடன கொணடு வநது தலைவியின கூநதலில சூட்டினான (அகம. 221: 7-9). அழகிய தளிர்களையுடையது மாமரம (அகம. 229:18). வேட்கை நோயாகிய வளரும் இளமுளை, அமையாத காதல எனனும விளஙகும தளிாகளைப பரபபி நாணம இலலாத பெருமரமாயிறறு (அகம. 273:11-15). ஈஙகையின நெயயில் தோயத்தெடுத தாற் போனற நீரால நனைநத அழகிய தளிாகள, இரு பிளவாகிய ஈரல போல ஈரமுடையனவாய அசைநதன (அகம. 294:6-8). வேஙகை மரததின ஒளி பொருநதிய தளிாகள் விளஙகும பெருஙகிளை யிலுள்ள மழைததுளிகளைக காறறு மெலலெனத தடவி உதிர்ககும (அகம. 298:5,6). ஈஙகையின புது மலரும மாமரததின இளநதளிரும தனனை வருட நாரை துயிலும் (அகம். 306 3-5). கொயயபபட்ட குழையாகிய தளிரினை யொததவள தலைவி (அகம். 319:12,13). கிளி, தளிரின இயலபினைப பெறறது (அகம். 324.3). தலைவி, யாமரததின ஒள்ளிய தளி ரில அரககுப பொடியினைச சிதறினாற போலத தன் மேனியினகண பசலை பரககக வருததம மிகுதி யுடையளானாள் (அகம். 333.1-3). யாமரததின உயர்நத கிளையில் மாரிககாலததே துளிாதத குளிாநத தளிரையொதத மேனியினை யுடையவள் தலைவி (அகம. 337 1,2). யாமரததின பெருங கிளை, அழகிய தளிாகளையுடையது (அகம். 343:10). இளவேனிற காலததில மாமரஙகள அழகிய தளிர் களை ஈனும (அகம. 355 1,8). தளிரினை யொதத கனனத்தினையுடையது கோழிச சேவல் (அகம 367. 10,12). தலைவி, மழைத்துளியினை ஏறற தளிரி னைப் போனற மெனமையுடையவள் (குறு. 222:7). காறறுக கோதிய அழகிய தளிரையுடைய மாமரத தினது முறியை (தளிரை) கணடாற போனற மெல்லெனற சீறடியை யுடையவள தலைவி (குறு. 278.1,2). மாமரததின அழகிய தளிரை யொதத மாமை நிறததினள் தலைவி (குறு. 331.6,7). தலைவி,

தளிரினை யொத்த மெனமையள் (குறு. 356:8). 'கையும காலும் ஓயவனவாகி வருநதத தீயில் விழுநத தளிரினைப போல் நடுங்கி நான் செயயத் தககது ஒன றுமில்லை' என று உடனபோக வருந்தும் தலைவியிடம தோழி கூறினாள் (குறு. 383 4-6). இளவேனிற காலததில ஈங்கையின் நலல தளிாகள கணடாாககு விருபபம வருமாறு அசைநதன (நற். 86.7-9). ஆறறஙகரையிலுள்ள மாமரஙகள, கிளைக ளெலலாம் தழைககுமபடி தளிாகளை ஈனறன (நற. 118:1,2). 'தளிர் சேர்நத மெலலிய தழை யுடையை யுடுத்து நுந்தையின தினைப்புனத்தின கணணே ஞாயிறு மறையும் பொழுதில வரவோ' எனறு தலைவன தலைவியை வினவுதல (நற். 204: 1,2). ஈஙகையின் நெடிய கரிய அழகிய தளிரின மீது மழைநீர் பெய்த போது உணடான அழகிய நிறம் போனற மாமை நிறத்தினள் தலைவி (நற. 205.9-11). தலைவியினுடைய, அசோகநதளிர் போனற மேனியின அழகு கெடும்படி பசலை பரநதது (நற 244.10,11). தலைவி, தளிர் போன்ற மேனியள் (நற. 251.7). 'என னுடைய நெகிழ்ந்த தோளையும வாடிய வரியையும் தளிா போன்ற வனபபு இழநத நிறததையும் நோககி வருந்தாதே கொள்' எனறு தலைவி தோழியிடம் உரைததாள் (நற. 309:1-4). 'கானயாறறின இடிகரையில வேர் களெலலாம் அலசபபடடுத தோனறிக காற்றாலலை யும மாமரததின அழகிய தளிர்போல நடுங்கும நெஞ்சமொடு பிரிவுத துனபத்தை எவ்வாறு தாஙகு வேன' என று பருவ வரவினகண் தலைவி வருநதி னாள் (நற. 381.3-6). நீணட பூவினையுடைய வேழம் தீணடுதலான வடுக்கொணட மாமரததின் வளவிய தளிா நுடஙகியது (ஐங. 14·1,2). குளிர்நத தளிர் அழகைத திறையாகக் கவரும் மேனியை யுடைய என் தலைவி (ஐங. 38.3). கொயயபபட்ட தளிர் பானற நிறத்தினையுடையவள் தலைவி (ஐங். 176: 4). 'தலைவன பொருடடு நின மேனி, கொய்து இடட தளிா வாடுமாறு போல வாடி மாறுபடுதல் ஏனோ' எனறு தோழி தலைவியை வினவினாள் (ஐங. 216:4-6). அசோக மரத்தினது பவளததை யொதத ஒள்ளிய தளிரை மந்திப பார்பபு அருநதும் (ஐங். 273:1,2). 'மாமரத்தினது கிளை மறையுமபடி நெருபபைப போன்ற நிறத்தையுடைய தளிாகளை ஈனும் பொழுது வநதது; ஆனால் தலைவரோ வநதிலா' எனத தலைவி வருந்தினாள் (ஐங. 349). 'மாமரததினது காட்சிககினிய தளிரே, எயினரது தங்கை போல நீ கணடோா நயததறகுக் காரண மான பேரெழிலை உடையையா யிருககினறாய, இததகைய பேறுடையையாதறகு நீ எனன தவஞ செயதனையோ' என று தலைவன மாநதளிர்கண்டு கூறினான் (ஐங. 365:3-5). 'நீ போதற்குத் துணிநத வழியிடத்திலுள்ள மரத்தினது அழகு போக வாடிக் கிடநத அழகிய தளிர்கள் தாம் நின் செலவைத் தடுக்க வலலன' என்று தோழி தலைவனிடம் கூறி னாள் (கலி. 3:16,17). 'எமமோடு நீ வருவையா யின மழைததுளி சொரியபபட்ட தளிரை யொத்த அழகினையுடைய மேனியின அழகு கெடுமலலவோ' எனறு தலைவன் தலைவியை வினவினான (கலி. 13:18-21). அசோகினது அழகிய தளிரையொக்கும் தலைவியின் எழில் நலம பசலையால் உணணப் பட்டது (கலி. 15:12,13). 'நின் பிரிவினால் என் நலம் நீணட நிழலினின்ற தளிர் போல வெளுததுப் போகும' எனறு தலைவி தலைவனிடம் கூறினாள (கலி. 20:17,18). தணணிய அறலாகிய மணல, சுழனறு வீழ்நத தாதாலும தளிராலும் காதலரைக கூடிய மகளிரின் கூநதல் போல அழகு பெற்றது (கலி. 27:5,6). இளவேனிற காலத்தில பூககளிலே சுரும்புகள் ஆரவாரித்தன, மாமரங்களிலே தளிர் கள் துளிர்த்தன (கலி. 28:16,17). மாமை நிறததை யுடையவளின் திதலை போல, மாமரம் ஈன்ற சிறிது முறறின தளிரின மேலே பூநதாதுககள் உதிர்தலைச செய்ய இளவேனிற் காலம வநதது (கலி. 29:7-9). மகவீனற மகளிரின மேனியிற் காணப்படும தேமல போனற நெயபபசையோடு கூடியது மாந்தளிர் (கலி. 32:7). மரங்கள், கரிய நிறததையுடையவள மேனி போன்று தளிர்களை ஈன, அநநிறத்திற் பரநத சுணஙகுபோல அத்தளிர்களின மேலே தாதுக்கள் உதிாநதன (கலி. 35:3,4).(2) பூததாழ்நத சினையிலுள்ள தழைந்த தளிரை யொதத அழகை யுடைய மேனியின் அழகு கெடும்படி தலைவன தலைவிககு நோயைச் செய்தான (கலி. 40 19,20). இளவேனிற காலத்துச சோலையில ஒளியிழநது போகும தளிர் போல தலைவியின் மேனி நிறங கெடடது (கலி. 48:18,19). குளிாந்த பொழிலிடத துள்ள மிகக அழகினையுடைய இளைய மாவினது தளிரையொத்த நிறததினை யுடையவள் தலைவி (கலி. 57:12,13). தலைவி, மழையைப பெற்ற தளிர் போலும் நிறத்தினையுடையவள் (கலி. 58:3). குளிர்நத தளிரிடத்தே வீழ்நது அழகுபெறற தாது போலும எழிலையுடைய மாமையும் சுணஙகும் தலைவியிடததினினறும் போமபடி தலைவன் பிரிந்தான் (கலி. 77.8,9). கொய்யப்படும் தளிர் போலும நிறததினையுடையவள தலைவி (கலி. 108: 52). 'மாமரத்தினது தளிரையொககும் மாட்சிமை யுடைய நலததைததலைவி இழநதது அஞ்சலோம பென்று நீதெளிவித்ததன் பயனோ' என்று தோழி தலைவனை வினவினாள் (கலி. 132:9-11). மாந தளிரின நிறம் போல் மாலை வெயில தோனறும்

(கலி. 142.47). மாமரம் ஈன்ற பசிய தளிரின் மேலே கோங்கம் பூவின் தாது பரந்தாற் போன்ற அழகினைப் பெற்ற தலைவியின் மேனி தலைவன் பிரிவால் பசலையுற்றது (கலி. 143:4-6). மாந்தளிர் போலும் நிறத்தைக் கொண்ட மாலைக்கு முன் பொழுதாகியகாலத்தில் மகளிர், தளிர் விரவின மாலைகளைச் சூடி தலைவர்மேல் தாம் வைத்த நலத்தைப் பாடி இன்புறுவர் (கலி. 143:27,28) 'நின்னை விரும்பும் பிறமகளிர்க்கே தளிரினைக் கொய்தனை; முன்னர்நீ எனக்குக் கொய்து கொணரும் போது இதுதுவள்வதில்லை; இப்பொழுது துவண்டதற்குக் காரணம் யாது' என்று காதற்பரத்தை வினவ அதற்குத் தலைவன் வையையில் வெள்ளம் வந்தமையால் நான் தெப்பம் ஏறி வரவேண்டியிருந்தது; ஆதலின் இத்தளிர்கள் துவண்டன' என்று கூறினான் (பரி. 6:61-70). வையை வெள்ளம், தன்பால் நீராடிய மகளிர் காதின்கண் தளிரைச் செருகியது (பரி. 7: 44,45). குறுந்தொடி மகளிர், மாந்தளிர் மேனியர் (பரி. 8:38). சிவந்த மாந்தளிர் போன்ற நிறத்தையுடையவர் மகளிர் (பரி. 8.124). வையைப்புனல், மாமரத்தினது காண்டற்கினிய தளிர்களோடு வாழையின் இலைகளையும் மயக்கிப் பல்வேறு ஓசையெழக் கடலைக் கூடுதற்கு விரைந்தது (பரி. 10:2-8). தைந்நீராடுபவரில் ஒருத்தி, குழைந்த அசோகின் தளிரைத் தன் செவியிற் செருகினாள் (பரி. 11:95). குளிர்ந்த தளிர்களை மரங்களிலே தோற்றுவித்து அச்செயலை உலகத்தார்க்கு எடுத்துக் கூறுமாறு போல முகில்கள் முழங்கின (பரி. 18: 22,23).

**தளிரியலார்** - தளிர் போன்ற தன்மையினையுடையார். தாழாத பெண்மை நலத்தினையுடைய தளிரியலார்-தளிர் போன்ற தன்மையினையுடையார் (மகளிர்) - குதிரைகளில் ஊர்ந்து செல்ல அக்குதிரைகளின் பக்கத்தே ஆடவர் யானைமீதேறிச் சென்றனர் (பரி. தி. 2:14,15).

**தளை** - பிணிப்பு. தளையாகிய பிணிப்பு விரியாத சுரிந்த முகத்தினையுடைய பகன்றை அரும்புகள் (அகம். 24.3,4). 'வினையை முடிக்க வேண்டும் என்னும் நாணமே தளையாகக் கட்டுண்டிருந்து வினையின் பொருட்டு என் உடம்பு ஆங்குப் பிரிந்து நின்றதல்லது என்நெஞ்சம் நின்கண்ணதே' என்று வினைமுற்றி மீண்ட தலைவன் தலைவியிடம் கூறினான் (அகம். 29:21-23). எருமை நள்ளிரவில் தனது வலிய தளையை அறுத்துக் கொண்டு சென்றது. (அகம். 46:1,2). உழவர், கடாக்களின் தளைகளை அவிழ்த்து விட்டுப் போரடித்த நெல்லைத் தூற்றுவர் (அகம். 366.3,4).

**தளையவிழ்தல்** - பிணிப்பு நெகிழ்தல் (மலர்தல்). கிடங்கிற்கோமான் அரும்பு தளையவிழ்ந்த - பிணிப்பு நெகிழ்ந்த - மாலையினையுடையவன் (சிறு. 160, 161). தளையவிழ்ந்த மடல்களையுடைய தாழைகள் நிறைந்தது கானல் (அகம். 90:3). கார்காலத்தில் பிடவின் அரும்புகள் தளையவிழ்ந்தன (அகம். 304: 11,16). வெட்சியினது தளையவிழ்ந்த அரும்புகளின் மணம் கமழ்கின்ற கூந்தலையுடையவள் தலைவி (குறு. 209:5-7). வண்டுகள் மூடிய இதழ்களைத் திறத்தலின் காந்தட்கொழு முகைகளின் இதழ்கள் தளையவிழ்ந்து மலர்ந்தன (குறு 265:1-5). கொன்றையுடன் பிடவமலர்கள் தளையவிழ்ந்து மலர இனிய குரலையுடைய மேகம் முழங்கியது (நற். 246.8,9). மேகம் மழை பெய்தலைத் தொடங்கும் கார்ப்பருவத்தில் பிடவமலர்கள் தளையவிழ்ந்து மலர்ந்தன (நற். 256.6,7). குவளை மலரோடு இடையிட்டுத் தொடுத்த முல்லையின் தளையவிழ்ந்த மலராகிய பூமாலையை இளையர் சூடினர் (நற். 367:8-10). வெண்ணெல்லை அரிவோர், நெய்தலினது தளையவிழ்ந்த மலரை விலக்கிவிட்டு நெல்லை மட்டும் அரிந்தனர் (ஐங் 190 1,2). கானலில் மலர்கள் தளையவிழ்ந்து மலர்ந்தன (ஐங். 198 2). தளையவிழ்ந்த பூக்களையுடைய சினையிடத்தே சுரும்புகள் யாழ் போல ஒலித்தன (கலி. 34.16). பாசடைத்தாமரை தளையவிழ்ந்ததும அருமடுகள நீருக்கு மேலே ஓங்கின, (கலி. 39:1). தளையவிழ்ந்த பூக்களில் உள்ள தேனை, வண்டுகள் நுகர்ந்தன (கலி. 71 2,3).

**தளைவிடுதல்** - 1. பிணிப்பு நெகிழ்தல் (மலர்தல்). அறசிரக்காலத்தில், முறையாக முற்றின தோன்றியின் ஒள்ளியபூக்கள் தளைவிட்டன - பிணிப்பு நெகிழ்ந்தன (மலர்ந்தன) - (அகம். 217: 10,13). பொய்கையிடத்துள்ள புதிதாகத் தளைவிட்ட தாது சூழ்ந்த தாமரை மலரை அன்னம் தன் பெடையோடு கூடி வலம் வந்தது (கலி. 69 1-7). பனிஞாயிற்றின் தோற்றத்தால் ஒருசிறிது மறையத் தாமரை அரும்பு தளைவிட்டது (கலி. 71.7,8). நறுங்கள் உண்பவள் முகம் போலத் தாமரை முகையின் வளவிய முறுக்கு தளைவிட்டது (கலி. 73:4,5). தாமரையின் தனித்த மலர், தம்மிற் சேர்ந்து ஒத்த இரண்டு முகைகளுக்கு நடுவே நின்று வேறொரு பூ சிறிதும் தம் அருகே சேராதல்லநித் தளைவிட்டது (கலி. 77:1,2).

2 (மனம்) நெகிழ்தல். 'வண்டுகள் ஆரவாரிக்கும்படி மலர்ந்த கோட்டுப்பூப் போலத் தளைவிட்ட - (மனம்) நெகிழ்ந்த - காதலரைக்

கூடியிருக்கின்ற மகளிருடைய அழகைக் கடிய மாட்டாய்' என்று தலைவி மாலைப் பொழுதோடு புலந்து கூறினாள். (கலி. 118:11,12)'

**தறி** - முளைக்கோல். நெடிய தாம்புகள் கட்டின குறிய தறிகளை - முளைக்கோல்களை-யுடையது முற்றம் (பெரு. 152). கம்மியனால கவின பெறப புனையப் பட்ட ஆலவட்டம் வாடைக் காலததில சிலம்பினது நூலால சூழபபட்டு வளைநத தறியிலே தொங்கி யது (நெடு. 57-59). உழவர், காஞ்சி மரத்தின் குறிய தறிகளை நட்டுக் கரும்புககழிகளைக் குறுககே வைத்துக் கட்டி வயலாகிய பள்ளங்களில் நீரைத் தேககி அணை கட்டினர் (அகம். 346:5-9).

**தறுகண்** - 1. அஞ்சாமை. பன்றி தறுகண் - அஞ் சாமை-உடையது (அகம. 248:6). தறுகண - அஞ சாமை (ஐங. 261:1,262:1).

2. கடுகக் கொலலுதல் மதம் வீழகினற கதுப் பினையும தறுகணணாகிய - கடுகக கொல்லுத லாகிய - மேறகோளினையும உடையது யானை (சிறு. 140-142).

**தறுகணாளர்**–அஞசாமையுடையவர். தம்முயிர் வேறொரு நற்பதவியிற பெயர, மாறறார் அஞ்சுமாறு நற போரை வெனறு பட்ட தறுகணாளரின் - அஞ் சாமையுடையவரின் - குடரைப பருந்து கணடாா அஞ்சுமாறு கவரும் (அகம. 77.9 11). ஆனிரை மீளவும பெயராது நினறு வெட்சி வீரரைப்பொருது பட்ட தறுகணாளரது நறபுகழை நிலை நிறுதது மாறு கலலைச் செதுக்கி நீராட்டி மஞசளைப பொலியப பூசிக் கரநதைக் கணணியைச் சூட்டி அதனை இளையர் வழிபடுவர். (அகம். 269.2-13).

**தன்முன்** - தன்னுடைய முன்னவன் (அண்ணன்). காண்டவ வனததைக் கணையால் எரியூட்டிய வனின (அருசசுனனின) தனமுன் - தனமுன்னவன (அணணன) - ஆகிய வீமன இயற்றிய மடைநூல் நெறியில் தபபாத பல வேறுபாடடையுடைய அடி சிலை நலலியக்கோடன பரிசிலாககு அளித்தான (சிறு. 238-245).

**தன்மை** - 1. இயல்பு. ஆய் அண்டிரனிடம் ஓடை கிழார் 'வேநதே' என கநதை உடையின தையலில உள்ள சீலைப்பேன் ஒரு பகையாய்த் துனபுறுத்து கிறது; எனனையும் என சுறறததையும கணணில் நீா வருமபடியாகப் பசிபபகை வருததுகினறது; இவ்வாறு துனபுறுகினற எங்களுடைய தனமையை இயல்பினை - அறியாராய ஆறலைகள்வா ஒரு பகையாயத துன்புறுத்துகின்றனர். இவ்வெலலாப் பகையையும் ஒழிககவலலாய் நீயெனக் கருதி, நினனை வாழத்தி வந்துள்ளேன்' என்று கூறினார் (புறம். 136 1-19). களவுப் புணர்ச்சித்தலைவன், தலைவியை முயங்கும்பொழுது, தலைவியின் தன்மை வரைந்து கொண்டு விருநதோம்பல் முதலிய இல் லறம் ஆற்றுவதாக இருககும் என்ற அவளது உள்ளக் கருத்தினை உய்த்தறிநது அதறகு அவனும் உடனபட்டான (குறி. 200-207). 'தலைவன் குணத் தில் அறியாமையாகிய தன்மை இல்லை எனறு தலைவி தோழிக்குக் கூறினாள் (கலி. 55:22,23). தலைவனிடம் ஊடிய காதற்பரததை, 'காதலை யுடைய அழகிய காமநதானும் ஒரே 'தன்மை-யுடையதாய் இருபபதுண்டோ, சிலரிடதது விரைந்து சுருங்குதலும், சிலரிடதது விரைநது பெருகுதலு மாக வையையின் நீர்பபெருககை ஒக்கினறது' எனறாள் (பரி. 6:70-74). திருமாலிருஞ்சோலை, மகளிரும் மைந்தரும் தாம் ஒருவரையொருவா விரும்புதற்குக் காரணமான காமததை விதைத்து அதன் பயனை அனுபவிககும கூதிர் யாமததைத தனககுத தனமையாகவுடையது (பரி. 15:26). பாண்டியன் மதுரையின மககளோடு வையையில நீராடிய தனமையை ஒபபிட வேணடுமானால், இநதிரன் தேவர்களோடு ஆகாய கங்கையில நீராடு வதையேயொக்கும் (பரி. தி. 2:90-96).

2. பெருமை. அழகு பொருநதிய திரு என்னும் சொல்லோடும் சோலை எனனும் சொலலோடும் மாலிருங்குன்றம் என்னும் சொல தொடாநத மொழியாகிய திருமாலிருஞ்சோலைமலை என்னும் பெயரினது தன்மை - பெருமை - நன்றாக இநநில வுலகத்தின கண பரவி நின்றது (பரி. 15:22-25).

**தன்னை** - தமையன. முதிய மறககுடியில் பிறநத வீரமகள் ஒருததியின தனனை - தமையன் - முன்னா ளில நடநத போரில் யானை யெறிநது களத்து ஒழிநதனன (புறம. 279:2-4). மகடகேட்டுவநத வேநதருககுத் தந்தை மறுததான், தன்னையும் போருககெழுந்தான் (புறம். 352:14.15).

**தன்னைமார்** - 1. தமையன்மார். மகட்கொடைக்குரிய தலைவியின தன்னைமார் - தமையன்மாா - போர்க் களத்தில பிணங்களை வைககோல் போராகக் கொண்டு, களிற்று யானைகளை வைக்கோலை மிதிததொதுககும் எருதுகளாகக் கொண்டு தமது வாளாணமைக்கேறப நாடோறும வாளுழவு செய யும மாண்புடையராவர் (புறம். 342:13-15). மகட் கொடைவேணடிவநத வேந்தருககு, இவளுடைய

தன்னைமார், குடிமை ஆண்மை முதலியவற்றால் ஒவ்வாதாருக்குத் தங்கையைத் தருவதில்லை என்று கூறி, படைகளை ஏந்திப் போருக்கு எழுந்தனர் (புறம். 345:12-18). வேந்தனின் மகள் ஒருத்தியின் தன்னைமார் மகள் வேண்டிவந்த வேந்தருடன் போரிட்டுப் பகைவரை வென்று, அவரின் குருதியை யாறாக ஓடச் செய்து வடுப்பட்ட வாளுடனே சீலை நீக்கப்படாத புண்ணையுடையராயக் கண்டார் அஞ்சத்தக்க தகுதிப்பாட்டினையுடையரா யிருந்தனர் (புறம். 353:12-17).

**தன்னையர்** - 1. தமையன்மார். சோணாட்டரசனின் மகளொருத்தியின் தன்னையர் - தமையன்மார் (அண்ணன்மார்) - பொருகின்றபோரை வஞ்சியாது வென்ற உட்குப்பொருந்திய நெடிய வேலையும், பகைவரையெறிதலால் அவரின் குருதி தோய்ந்த கண்டார்க்கு அச்சம் தரும் தலையையுமுடையரா யிருந்தனர் (புறம். 337.16-18). மகட்கொடை மறுக்கப்பட்ட தலைவியொருத்தியின் தன்னையா அடுகின்ற மாறுபாட்டுக்கேதுவாகிய பலியினை யுடையராயும், போரை வெற்றியுண்டாகச் செய்து கையில் ஏந்திய வடித்த வேலினையுடையராயு மிருந்தனர் (புறம். 350:8,9). தலைவியின் தன்னையர் வில்லையுடைய வீளையொலியை யுடையோராய், ஆண்மானினது மருமத்திலே அழுந்தச் செய்து குருதியோடு பிடுங்கும் சிவந்த திரட்சியையுடைய அம்பையுடையராவர் (குறு. 272:2-6). தலைவியின் தன்னையர் கொழுவிய மீனையுண்ணுந்தலையுடைய செழுமையான மாளிகையில் வாழந்து தமது தொழிலன்றி ஏனைய ஒன்றும் கலவாத சினமுடையராவா (நற். 127:4,5). பாலைநில எயிற்றியர் தம் தன்னையர், விலங்குகளைக் கொன்று கொணர்ந்த நிணமுடைய ஊனாகிய உணவின்கண் வீழ்கின்ற பறவைகளை ஓட்டுவர் (ஐங். 365:1-3).

2. தாய்மார். வரகினைப் பாறை நிலத்திலே குவித்துவைத்து, திரைந்த கோடுகளையும பருத்த தோளையும், நீண்ட செவிகளையும் உடைய தன்னையர் - தாய்மார் - பண்ணைக்கீரையினது வெள்ளிய பழத்தினது விதையையொப்பத் திரிகையால் திரித்து உமியைப் போகச் சுளகினால் கொழித்து வெள்ளிய அரிசியாக்குவர் (அகம். 393: 7-10).

**தனம்** - பொன். தித்தன் வெளியன் என்பானுக்குரிய ஒலிக்கும் நீர்ப்பரப்பினையுடைய கானலம் பெருந்துறை என்னும் பட்டினத்தே, தனத்தை - பொன்னை - கொண்டுவரும் நல்ல மரக்கலம் சிதையுமாறு இறாமீனின் தொகுதி தாக்கும் (அகம். 152:5-8).

**தனிமகனார்** - புலவர். மாற்றானாகிய வெஞ்சின வேந்தன் படையெடுத்து வந்து போரிட்டு அலைத்தலால் கலங்கிக் குடிகளெல்லாம் போய்விட்ட பாழிடமான பேரூரைக் காத்திருந்த தனிமகன் போன்று, நெஞ்சினைத் தலைவனிடத்தே போகவிட்ட நிலையில் தன்னுடம்பு எஞ்சியிருப்பதைத் தலைவி கூறுவதாக இவர் பாடிய உவமைச் சிறப்பினால் இப்பெயர் பெற்றார். இதன்பின் இவரது இயற்பெயர் விளங்காமல் மறைந்தொழிந்தது. இவர் பாடிய அப்பாடல் நற்றிணையில் அமைந்துள்ளது. (153). தலைவனது பிரிவிடையே மெலிந்த தலைவியின் உணர்வினை இவர் அதில் நன்கு பொதிந்துள்ளார். கீழக்கடல் நீரை முகந்து கொண்டு மேலெழுந்து இருண்டு, செம்பினால் செய்து கடைந்த பானை போல விளக்கமுற்று மின்னி, எங்கும் மழை பொழிந்த மேகம், பருவ முடிவிலே தென்திசைப் பக்கம் சென்றொழிந்தது போல தன்னெஞ்சம் தலைவனிடத்தே சென்றது என அவள் கூறும் உவமப்புனைவிலும் இவரது புலமை நலத்தைக் காணலாம்.

**தனிமை** - தனித்திருத்தல். 'இத்தலைவியின் தந்தையினுடைய காவலிடம் கன்னியா உறையும் மாங்காடு என்னும் ஊரின் காவலை ஒத்தது; அவ்வாறிருந்தும் கனிகள் முதிர்ந்துள்ள இந்தப்பக்க மலையில நாங்கள் தனிமையுற்றிருந்த தலைக் காணுதலின் நீ எங்கள் அருமையுணராது எளிமை செய்தவை ஆகின்றாய்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 288:7-17). 'முன்பனிக்காலத்து நள்ளிரவில அமையாது வீசும் வாடைக்காற்றால் எனது தனிமையை யான் பொறேனாகின்றேன், நமது இத் துயர் நிலையை நீக்கத் தலைவர் வருவரோ' எனத் தலைவி தோழியை வினவினாள் (அகம். 294 14-16). வேந்தர்க்குற்றுழிப்பிரிந்து பாசறைக்கண்ணிருந்த தலைவன், தலைவியால் அனுப்பப்பட்ட பாணனிடம், 'வேற்றுநாட்டில் எம்பால இரக்கமிலலாத பொறுத்தற்கரிய பனி விரவிய இவ்வாடைக் காற்று ஒவ்வொரு நாளும் எமது தனிமையை இகழ்ந்து வருதற்கிடனான நள்ளிரவில் எம் காதலி கூறியதைப் பன்முறையும் என்காது குளிரக் கூறுவாயாக' என்றான் (ஐங். 479).

**தனியவர்** - தனித்திருப்பவர். 'வருத்தத்தினையும அழகினையும் உடைய சிறு குழலே, பனியோடு கூடிய இருள் சூழ்ந்து வருகையினாலே கலங்கின தனியவருடைய - தனித்தவருடைய - வருத்தத்தைக் கண்டு நீயும் வருந்துகின்றாயோ, எனத் தலைவி கூறினாள் (கலி. 129.16-18).

**தனியன் - தனித்திருப்பவன்/தமியன்.** ஆளியானது புலி அஞ்சும்படியாகப் பாய்ந்து வந்து உயர்ந்த நெற்றியினையுடைய யானையின் புள்ளி பொருந்திய முகத்தைத் தாக்கி அதன் வெள்ளிய தந்தத்தினைப் பறிக்கும் பெரிய மலையின் சாரலின்கண் வேல் ஒன்றினையே கொண்டு தனியனாகி - தமியனாகி - வருதலைத் தலைவனும் அஞ்சுகின்றிலன் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 252:1-6). 'புலியை வென்ற யானையானது புலால் நாறும் நெற்றியினைக் கழுவ இரவில் அருவியைத் தந்த தெய்வத்தினையுடைய நெடிய மலையில் அரிய இருளைப் போக்கும் மின்போல் விளங்கும் வேல் தான் செல்லும் நெறியினைக் காட்ட நம் தலைவன் தனியனாய் வந்து பனியையும் வெறானாய் நம் மனையின் கண் மகிழ்ச்சியுடையனாய்ப் புகுந்தான். நம் அன்னை முருகனே என எண்ணிச் செந்தினையைத் தூவி வழிபட்டாள்; இனி என்னாகுமோ' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 272: 1-15).

**தனியோர் - தனிமையுடையோர்.** முல்லையினது மெல்லிய அரும்புகள், தனியோர் – தனிமையுடையோர் – வருந்துதற்குக் காரணமாகிய மாலைப் பொழுதில் இடையர்களது கண்ணியிடத்தேயிருந்து தலைவர் கூறிச் சென்ற கார்ப்பருவத்தைக் கூறுவதைக்காண்' எனத் தோழி தலைவியிடம் கூறுதல் (குறு. 358). 'தமியோர்' காண்க.

# தா

**தா - 1. வலி.** வல்விலோரி தன் மலையில் பிறந்த தா-வலி– இல்லாத நல்ல பொன்னைப் பல மணித்திரளோடு கலந்து இரவலர்க்குக் கொடுத்தான் (புறம். 152:28,29). தா இன்மையாலே அழகிய மணிகளோடு மாறுபட்டு ஒலி விடும் பசும்பொன் (பதி. 16:14,15). 'நின் வலியோடு மாறுபட்டுப் பின் எதிர்க்கப்பெறாத தா இல்லாத வீரரோடு தூங்காத பகையரசரும் தூங்க வேண்டியும் நின் தேவியைக் காண வேண்டியும் நினது தேர் குதிரைகளைப் பூண்பனவாகுக' என்று இளஞ்சேரலிரும் பொறையிடம் பெருங்குன்றூர் கிழார் கூறினார் (பதி. 81:31-36). தா அற விளங்கிய அழகிய பொன்னாலே செய்த பூண்களை யுடையவர் மகளிர் (மது. 445,446) தூற்றாத பொலியினின்று முகந்த நெற்பொலியினைத் தூற்றுதலின் தாவில்லாத கூலங்கள் மேகம் போலத் திசையெங்கும் பரந்தன (அகம். 37:3,4). தா வில்லாத நன்பொன்னால் செய்யப்பெற்றது பாவை (அகம். 212:1). முன்னமே, என்னுயிரைக் கொண்டு போகாது இப்போது ஏதிலான் பின்சென்ற என்- மகளைப் பின் சென்று தேடி, அலர்கூறுதலை யான் கேட்டிருக்குமாறு என்னை இதுகாறும் கைவிட்டொழிந்த கூற்றமானது தா அழிந்து தாழியிலிட்டுக் கவிழ்க்கும்படி இறந்தொழிவதாக' என்று மகட்போக்கிய நற்றாய் வருந்திக் கூறினாள் (நற். 271:7-12).

**2. வருத்தம்/கெடுதி/அழிவு.** இரவலர் விரும்பிக் கேட்பதற்கு முன்பே நார்முடிச் சேரல் தா இல்லா (கெடுதி இல்லாத) மனத்தோடு பிறருக்குப் பகுத்துண்ணும் உணவைச் சேரக் கொடுத்தான் (பதி. 38:13-15). கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன் அறுகையின் வருத்தத்தைப் போக்கும் பொருட்டு அரண்களைத் தாவுறச் செய்து மோகூர் மன்னனது முரசத்தைக் கைப்பற்றி அவன் காவன் மரத்தைத் தடிந்தான் (பதி. 44:10-15). தவத் தொழிலை முடிப்பவர் தாவில்லாத விரதங்களை யுடையவர் (முரு. 89). தாமரைப்பூவின்கண் தோன்றித் தாவில்லாத காலத்தினையுடையவன் நான்முகன் (முரு. 164,165). தாவில்லாத கற்பினை யுடையவள் மடந்தை (முரு. 175). மணிமிடற்றந் தணனாகிய இறைவனுடைய தா வில்லாத திருவடி நிழலில் உலகம் இடையூறின்றித் தங்கும் (அகம். க.வா. 15,16). ஆயர், ஏறுதழுவுங்காற் பிறர்க்குத் துன்பம் நிகழுமென்னும் தா வில்லாத உள்ளத்தோடு ஏறுதழுவ ஏறுகளைத் தொழுவிடத்தே புக விட்டனர் (கலி. 105:7,8,22).

**3. குறைவு.** சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், நண்பர்கட்குத் தாவில்லாது - குறைவில்லாது - உதவும் நற்பண்பு உடையவன் (புறம். 373:35,36). நடுயாமத்தில் தாவில்லாத பெரு மழை பெய்தது. (நற். 261:5).

**4. பரத்தல்.** வெண் குடை தா - பரத்தல் - உடைய துளியை மறைத்தது (நெடு. 185). தா – பரத்தல் (குறி. 149;நற். 51:11).

**5. தாவுதல்.** தா – தாவுதல் - மிக்க செலவினை யுடையது நெடுந்தேர் - (அகம். 314:10). தா - தாவுதல் (குறு. 69:1).

**தாஅ - 1. வலி.** தாஅ - வலி - உடைய அழகிய சிறையையும் மென்மையாகப் பறத்தலையுமுடையது வெளவால் (குறு. 172:1).

2. தாவுதல். தாஅ - தாவுதல - பொருந்திய தாள்களையுடையது கலிமா (அகம். 134:8).

**தாஅம் - 1.** தாகம். மழை பொயத்து அருவி வறண்ட பேரிடத்தில் தோன்றிய பேயததேரை மழையென்று கருதியோடிக் கலைமான் தாஅம் - தாகம் - பட்டது (அகம். 241.8-10).

2. பரத்தல். கொன்றை நெற்று பாறைமேல் தாஅம்-பரவிககிடககும. (அகம. 115:12). தாஅம் – பரததல் (அகம. 133:15; 136:9; 236:8; 291:17; 309:8; 360:18; 363:8; குறு. 329:3; நற. 24:4; 78:3; 79:3; 113:3; 167:8; 180:3; 191:4; 274:4; 299:4 ஐங். 208:3; 219:2).

**தாக்கணங்கு -** தாக்கி வருத்தும் தெய்வம. 'தொன்மை வாயநத பதியின் இடஙகள் தாக்கணங்குகளை – தாக்கி வருததும தெயவங்களை - யுடையன; நீ காவலும் எயதினை ஆதலின் ஆயத்தாருடன யாங்கணும் போகற்க' எனச் செவிலி தலைவியிடம் கூறினாள் (அகம. 7:3-5). 'தலைவன் நமமைத் தெளிவித்துக் கூடி இப்பொழுது தாககணஙகாய வருத்துவது ஏனோ' எனறு' தலைவி தோழியை வினவினாள் (ஐங். 23:3,4). 'கண்டார்ககுத தாக கணங்காகும் இககாரிகையைக காண்மின்' என வையைப்புனலாட்டின் போது ஆடவர் சிலா கூறினா (பரி. 11:122).

**தாங்குநர் – 1.** தடுத்து நிற்பவர். தம்மைத் தாங்கு நரது - தடுத்து நிற்பவரது - யானையின் கொம்பை வெட்டும் வாளையுடைய வெறறியினர் மறவர் (பதி. 51:29,30). ஆடுகோட்பாட்டுச சேரலாதன் தாங்குநரைத் தடுக்கும வாளினையுடையவன (பதி. 55:20).

2. காப்பாற்றுபவர். பாணன், கடல் சூழ்ந்த உலகில் தன்னைத் தாங்குநரை-காப்பாறறுபவரை - காணாது கல்லென்ற சுறறத்தாரோடு ஓரிடததும் நிலலாமல் பயனினறித் திரிநதான (பெரு. 18-22).

**தாடி – தாடைமயிர்.** மறவர், மிக்க அழகு இல்லாத பெரிய பொலிவறற தாடியினை - தாடைமயிரினை - உடையவர் (அகம. 297:5,6). மறவா, கலைமானின கொம்பு போலத் திருகி முறுககுண்டு தாழ்ந்த தாடியினை யுடையவர் (கலி. 15:5-7).

**தாணிழல் -** திருவடிநிழல் (இறைவன், வேநதன் ஆகியோரின காவல்). குமணன, தனது தாணிழற கண் - திருவடி நிழறகண - வாழவோர் நன கலத்தை மிகுககுமாறு வாடபோா செயது பகை வருடைய செலவததைக கவாநதான (புறம. 161: 30,31). 'மழை போனற நினனுடைய தாணிழற கண் வாழும் பரிசிலரது செல்வமும நினனோடு கழிநதது' என வேநதனொருவன நடுகலலைக் கண்டு புலவா பாடினா (புறம். 256 5-9). வில்லி யாதன தாணிழற்கண் வாழும வாழவே தனககு உண்டாகுக எனறு புறத்திணை நனனாகனாா வேணடினர் (புறம். 379:1). செலவக்கடுங்கோ வாழி யாதனின தாணிழலில் வாழும வீரா முரசு முழங்கப பகைவர் மதிலையழித்தனறி உணவு உண பது இலலையெனறு ஊககம மிககவராய வாழந தனர் (பதி. 68). பொருநர், கரிகாலனின தாணிழலை அணுகி நினறு தொழுது முன் நிறபாராயின வறுமை நீஙகுமபடியான பரிசில பலவறறையும பெறுவர் (பொரு. 149-151). மணிமிடறறநதனனாகிய இறைவனது அழிதலில்லாத தாணிழலில உலகம் இடையூறின்றித தஙகும (அகம. க. வா. 15,16). 'நினனைப் பிரியின என நலன் நிழலிலுள்ள தளிர் போல வெளுததலை அறிநதேனாதலின் நான நினது தாணிழலைக கைவிட்டு இங்கே இருததலை நினைபபேனோ' எனறு தலைவி தலைவனிடம கூறினாள் (கலி 20 17,18).

**தாது - 1.** பூந்துகள (மகரநதம). சூரரமகளிர் தம இளமுலையிலே சநதனததை அபபி அச்சநதனத தின் ஈரம புலர்தறகு முனனே வேஙகைப பூவினது நுணணிய தாதையும - பூநதுகளையும்-அதனமேல் அபபினர் (முரு. 32-36). தாது நிறைநத கோஙக மலர்கள் பரவ வையைநீர் ஓடியது (மது. 338-340). இடிககவலலாா பலரும திரணடு இடிதத தாது போலப பரக்கும சுணணததை யுடையோா உள்ளிட்ட பணடம் விறபோா பலரும மதுரை நகர வீதிகளில் மாடநிழலிலே ஒதுஙகியிருநதனா (மது. 399-406). தாது நிறைநத செவவியது தாமரை மலா (மது. 463). தாமரையினது தாது நிறைநத பெரிய பூவினையொககும முகததினா மகளிர் (மது. 710-712). அசோகினது தாது உதிாகினற குளிர்நத நிழலிலே தலைவியும தோழியும தஙகி யிருப்பர் (குறி. 105,106). தாது விரிநத பூககளை யுடையது கொம்பு (குறி. 149). தாமரையின் தாதாகிய அலலியின அடுதத இதழினையொதத குறற மிலலாத அங்கையினையுடையவன புதல்வன (அகம. 16:1,2,5). மணலமேடுகளில காஞசி மரததினது அழகிய தாதினைக கொணட பூககள் உதிாந துளளன (அகம. 25.3,4). வணடுகள், பூககள நிறைநத கோங்க மரததின் மீதிருநத இலவததின

மீது உதிர்த்த நுண்ணிய தாது, பொன்விற்போர், பவளச் செப்பில் பொற்பொடியைப் பெய்து வைத் தாற் போன்று தோன்றும் (அகம். 25:9-11). வண்டு களையுடைய பூங்கொத்திலுள்ள தாதுடன் கூடிய தேன்துளி, தளிரில் ஒழுகியது போன்று, அழகு ஒழுகும் மாமை நிறத்தில் கிளைத்துத் தோன்றும் தேமற்புள்ளிகளையுடையவள் தலைவி (அகம். 41: 13-16). காஞ்சியின் நுண்ணிய தாது, எருமையின் ஈரமுடைய உடம்பின் புறத்திலே சிந்தின (அகம். 56:3,6). மலர்ந்த பொன் போலும் தண்ணிய நறிய செவ்வித் தாதினைச் சொரியும் புன்னை மரங் களை யுடையது கானல் (அகம். 80:11-13). தாது மிக்க குவளைப் போது பிணிப்பு நெகிழ்ந்தது (அகம். 125:6). நுண்ணிய தாதினால் மூடப்பட்ட, சிவந்த தண்டினையும் கொழுமுகையினையும் உடையது கழிமுள்ளி (அகம். 130:3,4). தண்ணென மணக்கின்ற காந்தட்பூவின் தாது கட்டவிழ்ந்து விரிந்தது (அகம். 154:7). கேழற்பன்றி, வெண் கூதளஞ்செடியின் கொத்திலுள்ள மலர்களைப் பொருந்தி அதன் தாது மேலே உதிர்தலால் பொன்னுரைக்கும் கட்டளைக்கல்லினைப் போல் அழகுபெறத் தோன்றியது (அகம். 178:2,9-11). 'நான் ஆயமொடு வண்டல் அயர, ஒருவன் தேரில் வந்து கண்ணியினைக் கூந்தலில் சூடி, நெடிது நினைந்து பெயர்ந்தனன்; அதற்கே இந்த அழுங்கல் ஊர், தோட்டத்தில் நிற்கும் புன்னையின் பொன்னை யொத்த நுண்ணிய தாதினைப் பார்த்து என்னையும் நோக்கும்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 180). குயில்கள், முருக்கமரத்தின் அழகிய போதுகள் விரிந்த மலர் களைக் கிண்டி அவற்றின் தாதினை உண்ணும் (அகம். 229:16-19). புன்னைமரம் வெண்மணலில் உதிர்ந்த நுண்ணிய தாதினைப் பொன்னாக முகந்து குறுமகளாகிய தலைவி இல்லறம் நடத்தி னாள் (அகம். 230:5-9). வேங்கைமரக் கிளைகளில் வண்டுகள் பூவின் வாயைத் திறத்தலால் பொன்னை யொத்த நுண்ணிய தாது மயிலின் நீலமணியை யொத்த தோகையில் உதிர்ந்து அழகு செய்தது (அகம். 242:1-4). தாது நிறைந்த காஞ்சி மரங்கள் சூழ்ந்தது தண்பொழில் (அகம். 246:6). புன்னைமரப் பூங்கொத்துக்களின் நுண்ணிய தாது, மணல்மேட் டில் வீழ்ந்து அழகு செய்தது (அகம். 250:2-4). காஞ்சி மரத்தின் மலர் விரிந்த நறிய தாது அழகு செய்த கூந்தலை யுடையவள் பரத்தை (அகம். 296 1-3). புன்னையின் தாது, பெருந்துறையை அழகு செய்தது (அகம். 320:10) காஞ்சி மரத்தின் பூங் கொத்துக்களினின்றும் உதிரும் பொன்னின் அழ குடைய நுண்ணிய தாது தம் மேலே உதிர்ந்திட ஏறுகள் மணல்மேட்டில் துஞ்சின (அகம். 341:7-11). தாழையின் தாதாகிய பொடியை அப்பிய கூந்தலை யுடையவள் தலைவி (அகம். 353:19). தாது உதிரும் தண்ணிய பொழில் (அகம். 355:7). வேங்கையின் பொன் போன்ற நறிய தாது, காற்று அசைத்த லால் உதிர்ந்து மயிலின் தோகையை அழகு செய் தது (அகம். 378:3-5). கொன்றையின் நிறைந்த தாது போல் ஆக்கப்பெற்றது அவிழாகிய சோறு (அகம். 393:15,16). பூங்கொத்திலுள்ள பசிய தாது மேலே படும்படி காஞ்சிமரத்தின் கிளைகளை உழவர் வளைத்தனர் (குறு. 10:2-4). கருங்குயில், தன் மேனி பொன்னையுரைக்கும் கட்டளைக்கல்லை யொக்கும்படி மாச்சினையிலுள்ள நறுந்தாதினைக் கொழுதும் (குறு. 192:3-5). அரும்பு தாதையுடை யது (குறு. 273:1). மாமரத்தினது தாது பொருந்திய மலர்களில் வண்டுகள் பலவும் ஒருங்கே மொய்த் தன (குறு. 306:3-5). புன்னை மரத்தின் தாது நிறைந்த மலர்களை மகளிர் பறித்தனர் (குறு. 311: 5-7). முல்லையரும்பிலுள்ள தாதின் மணம் போன்று மணம் வீசும் நறுநுதலை யுடையவள் தலைவி (குறு. 323:4,5). தாமரையின் தண்ணிய தாதினை ஊதி மேலோங்கி நிற்கும் சந்தனமரத் தில் தொடுத்த தீந்தேன் போலத் தலைவனது கேண்மை இனியது (நற். 1:3-5). நறவம்பூவின் நறிய தாதினை அளைந்த வண்டு, பொன்னை யுரைக்கும் கட்டளைக் கல்லைப் போல நன்னிறத் தைப் பெறும் (நற். 25:2-4). தலைவியும் தோழியும், மலரின் நுண்ணிய தாதில் வீழ்கின்ற வண்டினங் களை ஒப்பர் (நற். 27:1,2). புன்னையின் நுண் ணிய தாது, கீழ்க்காற்று வந்து மோதுந்தோறும் குருகின் முதுகில் உதிரும் (நற். 74:7-9). நெய்த லின் கரிய மலர் நிறையுமாறு புன்னையின் பொன் போன்ற நுண்ணிய தாது உதிர்ந்தது (நற் 78:2,3). வேங்கைப் பூவின் தாது உதிர்ந்தாற் போன்ற சுணங்கு பரந்த மாமை நிறத்தை யுடையவள் தலைவி (நற். 157:8-10). வெண் பூவினையுடைய தாழை, அலை மோதுதலாலே பொங்கித் தாதினை உதிர்த்துச் சிறுகுடிப் பாக்கத்தின் தெருவிலெழுகின்ற புலவு நாற்றத்தைப் போக்கும் (நற். 203:3-6). தாழைப் பூ, பொன் போன்ற தாதினையுடைய புன்னைமலரோடு சேர்ந்து மணங்கமழும் (நற். 235:2,3). புன்னையின் நீலம் போன்ற பசிய இலையிடமெங்கும் பொன் போன்ற நறிய தாது உதிர்ந்தது (நற். 249:1-4). பொன் போன்ற தாது மிக்கன புன்னை மலர்கள் (நற். 278:3). தாழைப் புதரில் மேல் காற்று மோதுதலாலே நுண்ணிய மலரிலுள்ள தாது மகளிருடைய வளைகள் உடைந்து உதிர்ந்

தாற் போன்று உதிர்ந்து பரவியது (நற். 299:2-4). ஊதைக் காற்று தாதினைக் கிண்டுகின்ற கானலும் பொலிவிழந்தது என்று காபபு மிகுதிக்கண ஆற்றாத தலைவன் தலைவியை நினைந்து வருந்தினான் (நற். 319:1,2). காந்தளைத் தீண்டித் தாது உதிரப்பெற்று நிறம் வேறுபட்ட பசுவினை நோக்கிய கன்று தன் தாயென்றறியாது மருளும் (நற். 359:1-3). புன்னையின் நறிய தாது உதிரும் படி அக்கிளைகள் மீது தங்கிய நாரைக் கூட்டம் இரை வேண்டிப் பெயர்ந்து உலாவும (நற். 375: 1,2). வேங்கையின் பொன போனற பூககளை யுடைய கிளையிலிருநது அளாவி நறுமணம் வீசும் தாதினை அளைந்து மயில் அழகு பெறும் (நற். 396:3-5). தலைவன் பொருட்டுப் பசந்த தலைவி யின் கண்கள் பொய்கையில் பூத்த ஆம்பற் பூவின் அகத்துள்ள தாது போனற பொன்னிறததை யுடையவாயின (ஐங. 34). புன்னைமரததின் நுண்ணிய தாது உதிரப்பெற்ற நெயதனிலப் பரப்பு, பொனனழுத்தபபட்ட வெண்முத்துப போலப பொலிவுறத் தோனறும் (ஐங. 189:1,2). வண்டுகள் புதுமையை உணண வேணடிக குளிர்நத மலாகள் தாது அலர்ந்தன (கலி. 17.15). காதலரைக கூடின மகளிருடைய கூந்தல் போலக கழனறு வீழ்நத தாதாலும தளிராலும் மணல அழகு பெறறது (கலி. 27:5, 6). புதிய மலர் களையுடைய கோங்கம், பொனனென்னும்படி தாதை மலர்விக்கும் (கலி. 33:12). அலர்நத காஞ்சிப்பூவின தாதினை ஆடிய கருங்குயிலகள் கூவின (கலி. 34:8). கரிய நிறத்தையுடையவள் மேனி போல் மரங்கள் தளிர்களை ஈன, அந்நிறத் தில் பரந்த சுணங்கு போலத் தளிர்களின் மேலே தாதுகள் உதிர்ந்தன (கலி. 35:3,4). வேங்கைப் பூவின் பொன் போன்ற தாது பாறையில் உதிரும் (கலி. 39:33). ஞாழறபூவும் மயிரும தம்முள் மயங்கும்படி வாரிமுடிதத கூநதல் தோள்கட்டிலே தாதோடு சிறிது குலைநது வீழத் தலைவி வநதாள் (கலி. 56:2-4). தாது சூழநதது தாமரை மலர் (கலி. 69:2). பரததையருடைய முலையிடையிலே தாது உதிர்ந்து இதழகள் அழகிழநத தலைவனது கணணி அவனுககு உட்பகையாய வநது அவனது பரததைமையைத் தலைவிககு உரைததது (கலி. 73:8,9). 'தளிர்களிடததே வீழ்நது அழகு பொலிவு பெற்ற தாது போலும் எழிலையுடைய மாமையும சுணங்கும் அழியுமபடி அவறறை வாஙகிக் கொண்டு நீ பினபு ஒருகாலும தாராது விடட அழகை யான பெறுதலை விருமபேன' எனறு ஊடற்றலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 77: 8,9). 'பரத்தையருடைய கூந்தலினின்றும் உதிர்நத பூநதாது நின் தோளிலே கிடபப எம்மைத் தீண்ட வரும் நீ யாராந தன்மையுடையை' எனத் தலைவி தலைவனை வினவினாள் (கலி. 88:1-3). காஞ்சிப பூவின தாது உதிரநதாற் போனற சாணாகமாகிய எருவையுடைய மனறததில் குரவையாடினா (கலி. 108:60,61). 'நினது தாது சூழநத கூநதலிலே கோதையை அழகு பெறப புனையவோ' எனத தலைவன தலைவியை வினவினான (கலி. 111:12, 13). கமழகின்ற தணணிய தாது உதிரநது சிநதும படி கோடறபூவின இதழகள் வீழநதன (கலி. 121: 13,14). புனல் விளையாட்டில் மெலியாத மைநதரிற சிலர் தாழம்பூவின் தாதை அலையிலும் நுரை மேலும தூவினா (பரி. 10:101). சோலை தனககு விருந்தயாநத நீருக்குத தான் எதிர் விருநது செய தலைப் போலச சுருமபுகள் ஒலிக்கும் தாதுடனே மணமலர்களைச சொரிநதது (பரி. 16.14-16). மதுரை நகரம, திருமாலின உநதியில மலாநத தாமரை மலரையொக்கும; அநநகரில வாழும தமிழக்குடிமககள் அமமலரிலுள்ள தாதினை ஒபபா (பரி. தி. 7:1-5).

2. தேன். பொயகைகளில் நறிய தாதினை - தேனினை - உணணுமு துமபிகள் பாடின (மது. 654,655). மெல்லிய தாது துளிகும் செஙகாநதள (பட். 152). வணடுகள் காநதள மலரின், நறிய தாதினைக் குடைநதுணணும (அகம. 108.15,16). நெயதற்பூவிதழ நாறறததினை அமிழதென விரும்பிச சென்ற வண்டினம் அதன தணணிய தாதினை உணடு களிசிறந்தது (அகம. 170:4-6). வணடினம், நறுமுலலையின தாதினை விருமபிக குடைநதுணணும (அகம. 234:12,13) வணடுகள், விரிந்த பூங்கொததுக்களில தாதினை உணணும (அகம. 291.10,11). வணடு, நெயதறபூவின மெலலிய தாதினை உணடு அபபூவினைத துறநதது (அகம. 360:4,5). பொனனையொதத நறிய தாதினை வணடு ஊதும் (அகம. 388:8). துமபிகள், காநதட் பூவின நறிய தாதினை நுகாநதன (குறு 239.3,4). தாதினை உணணும வேடகையாலே நறுமலா இனனதென ஆராயாது வணடு ஊதும (நற. 25:9,10). வணடு, முள்வேலியில் படர்நது தாதோடு தழைந்த குலைகடடிய பீர்ககம பூவினைக குடைந துண்ணும் (நற். 277:6,7). புன்னை மலரின தாதினை அருநதிய வணடுகள ஒலிததன (நற. 311.9,10). பெண வணடுகள் புனனையின தாதினை உணணும் (நற். 323:7,8). பரததையிடததினினறும தலைவனைப பிரியுமபடி செயது அவள் நுதலைப பசககச செயயும மகளிா, வணடு தாதினை உணணுகினற மலரினும பலராவா எனபது

தலைவியின கூற்று (ஐங். 67 3-5). வணடு, பழனததே மலர்நத மலரின தாதினை உண்டது (ஐங். 89: 2,3) எருமை மேயநது கலககியதெனப் பொய்கை யிலுள்ள மலாகளில் தாதுணணலை வெறுத்த வணடுகள் தலைவியின கூந்தலில மொய்த்தன (ஐங. 98). தாது நிரமபிய மலர்களைத தேர்ந் துண்ணும் வண்டுகள் முரனறன (ஐங. 406:2,3). வணடுகள், புறவிலுள்ள தாதினை உண்டன (ஐங். 416:1,2). தாதினை உண்ணும் வண்டுகள் மொய்க் கும்படி தலைவி தலைவனைத் தழுவினள் (ஐங். 417:3,4). அரும்புகள் விரிநதமையாத கொம்புகள் தோறும் தாதினை விரும்பியுண்டு வண்டுகள் ஆர்ததன (கலி. 30:2,3). மிஞிறோடு தும்பிகள் தாதினை ஊதின (கலி. 33:23). வணடுகள், வையை யாறறு மணலிடத்து வளர்ந்த நறுமுல்லையின் தாதினை உணடன (கலி. 35:9, 10). தாதினை உண்ணும் வணடு மலரைத் துறபபது போலத தலை வன பெணடிரின் நலத்தை நுகாநது அவரைத் துறந் தான் (கலி. 40:24,25). வரிவண்டு, கழியில் பூத்த நெய்தறபூவின் தாதை மனம் பொருநதி நுகர்ந் தது (கலி. 74:1,2). தாதைத் தேரும் வண்டினம் வீழுமபடி கோதை கட்டபபட்டது (கலி. 80:25,26). கடம்பமலர்த் தாதை ஊதுகினற வணடுகளின குரல்கள் பண்களைப போலிருநதன (பரி. 14:3,4). காதலர், சுனையின்கண பாய்நது விளையாடுதலால் வணடுகள் வெருவிச் சுனைமலாத் தாதினை ஊதா வாயின (பரி. 17:35-38). குழலிசைககு மாறாக, மலர்மீது தாதினை ஊதும் தும்பிகள் ஒலித்தன (பரி. 22:40,41).

3. பொன். தாதினால் - பொன்னால் - செய்த பாவை போனற கட்டழகினையுடையவள் தலைவி (அகம். 392:6,7). தாதினால செய்யபபட்டது குளிர்ச்சியை யுடைய விளையாட்டுப் பாவை (குறு. 48:1).

4. துகள். மனையில் உறைகின்ற குருவிகள், மன்றத்தி லுள்ள எருவினது நுண்ணிய தாதினை- துகளினை- குடைநது விளையாடின (குறு. 46:2-4).

**தாதுண்பறவை** - தேனையுண்ணும் பறவை (வண்டு). பூதத சோலையில் பெடையோடு தங்கும், யாழ் ஒலித்தாற் போன்ற ஒலியினையுடைய தாதுண பறவைகள் - தேனையுணணும பறவைகள் (வணடு கள்) - மயஙகுமென்றஞசித தலைவன தேர்மணி நாவினை ஒலியாமற கட்டினான (அகம். 4:10-12). 'தலைவன மாாபிலுள்ள நறுந்தார்த் தாதுண் பறவை எம கூந்தலில மொயத்தன என்று நின் தலைமகள் வெகுண்டனள் என்பர்' என்று பாண னிடம் தலைவி கூறினாள் (ஐங. 82). கூடல்நகர், மாயோனின் உநதியில மலர்ந்த தாமரைப் பூவினையொக்கும்; இங்கு வாழும் குடிமககள் தாமரை மலரின மகரநதத்தை யொப்பர்; அங்குப் பரிசில் வேண்டிவருபவர் தாதுண்பறவை அனையர் (பரி. தி. 7.1-6).

**தாதுதேர்பறவை** - தேனைத் தேடியுண்ணும் பறவை (வண்டு). தலைவன, மகளிரது நலத்தை இரந்து கொண்டு தாதுதேர் பறவை - தேனைத் தேடி யுண்ணும் பறவை (வண்டு) - போல நுகர்நது அந்நலத்தை அவர் வேண்டின காலத்துக் கொடாது கேட்டினை நல்குவான் (கலி. 22:6,7).

**தாதெரு** - தாதாகிய எரு. (சாணத்துகள்). தாதெரு வினை - சாணத்துகளினை உடையது தெரு (புறம். 33:11; 215:2; 311:3; அகம். 165: 4; நற் 34':3). தாதெரு அற்றதும் ஆரவாரம் அழிநததுமாகிய மன்றம் (பதி. 13:17). தாதெரு நெருங்கிய முற்றம் (மலை. 531).

**தாதெரு மன்றம்** - இடையர் குரவை முதலியன நிகழ்த் துதற்கிடமானதும் எருக்கள் சூழ்ந்ததுமான மரத்து அடியிலுளள பொதுவிடம். காதலையுடைய மகளி ரும் அவர் கணவரும் தாதெரு மன்றத்தின்கண குரவைக கூததாடுவர் (கலி. 103:11-12). 'காஞ்சிப் பூவின் மகரந்தம் உதிர்ந்தாற்போனற தாதெரு மனறத்திடதது ஆடும் குரவைக கூத்திற்கு வந்த நின பெண்டிா கேளாமல ஆம்பற்குழலாலே ஓசை யெழுப்பிக் குறி செயது வருவாயாக' எனறு வினைவல பாங்கின் தலைவி அததகு தலைவனிடம் கூறினாள் (கலி. 108:59,62).

**தாதை** – தந்தை. காமன பிரமன் என்னும் இரு வர்க்கும தாதை - தந்தை - எனறு திருமால் போறறபபெறுவர் (பரி. 1:28). தாமரைப பூவினுள் பிறநதோனும் அவன் தாதையும் திருமாலென அநதணரது அருமறை நவிலும் (பரி. 3.13,14). பிருங்கலாதன திருமாலைப புகழ்தலாலே இரணியன சினநது பலபிணிகளபட பிணிததவழி அநநோயால் நடுககததை அடைநத அப்பிருஙகலா தன தன் தாதை ஆகலின் இரணியனை இகழா னாயினான (பரி. 4:10-15).

**தாம்பு** - கயிறு. நெடிய தாம்புகள் கட்டின குறிய முளைகளையுடையது முன்றில் (பெரு. 152). பசுவின கன்றுகளைக் கட்டின நெடிய தாம்புகள் கட்டிக் கிடககின்ற தறிகள் நட்ட பககத்தினையுடையது

நலலில் (பெரு. 244-247). சிறு தாம்பினால் பிணிக்கப்பட்ட கன்றினது துயரத்தைக் கண்ட ஆய்மகள், 'நும்தாயர் இப்பொழுதே வருவர்' என்று கூறினாள் (முல்லை. 12-16). பாறபசுக்கள் தம் பருத்த மடி கரைய வேண்டித் தாம்பாற் பிணிக்கப்பெற்ற இளங்கன்றுகளிடத்தே விரைந்து சென்றன (அகம். 54:7-9). தலைவி, தீம்பால் கறந்த கலங்களை மாற்றிக் கன்றுகளைத் தாம்பாற் கட்டினாள் (கலி. 111:1,2). தலைவன், பயிர்செய்யும் தோட்டத்திற்குக் கன்றோடு போகும் தலைவியின் கையிலுள்ள தாம்பின் ஒரு பக்கத்தைப் பிடித்தவனாய் முனனின்று அவளைப் போக விடாது தடுத்தான் (கலி. 116:1-3).

**தாமப்பல்கண்ணனார்** - புலவர். பலகண்ணனார் என்பது இவா தம் இயறபெயராகலாம மாலை என்னும் பொருளையுடைய 'தாமம' எனற சொல் இவா பெயரில் முனனொட்டாக அமைநது வழங்கிய காரணம் விளங்கவில்லை. 'காஞ்சிபுரத்தினருகில் தாமல எனறு ஒரூா உள்ளது, எனறு இவா தொடர்பாக உ.வே சா. குறிப்பிடுவதனால், இவர் அவ்வூரினராகலாமெனறும் இவர் பெயர் தாமறபல கண்ணனாராய இருநது தாமபபல் கண்ணனாரெனத் திரிந்திருக்கலாமென்றும அவர் கருதுவா போலும். இவரை அவ்வூரினராகவும் தாமற் பல கண்ணனார் என்னும் பெயரினராகவும் அறுதியிட்டுரைப்பர் ஔவை. து. இடைக் காலத்தே அவ்வூர் தாமர்என்று வழங்கியதைக் காட்டி இவா பெயரும் தாமர்ப்பல் கண்ணனாரென இருந்தே ஏடெழுதுவோரால் தாமறபல் கண்ணனார் எனறு மாறியது என்றும் குறிப்பர் அவர். இபபுலவர் அந்தணர்; சோழ வேந்தரொடு நெருஙகிய தொடர்புடையவர். ஒருகால் சோழன் நலங்கிள்ளியின தம்பியாகிய மாவளத்தானொடு இவர் வடடாடியிருககையில், விளையாட்டாகக் கவற்றினைக கையால மறைத்தாராக, அதறகு வெகுண்ட அவன பொறுமையின்றி தனகையிலிருநத வடடினால இவரை எறிநதான். அதனை இவரும் பொறாதவராய உடனே, 'பருந்திற்தத தபபித் தன்னையடைந்த புறாவின் அழிவிறகு அஞ்சித் தன் அழிவிறகு அஞ்சாது துலாககோலின் தட்டினுள் புகுநத வலியோன மரபினனே! பகைவரை வென்ற மாறுபாடு மிக்க செல்வத்தையுடைய தேர்வண கிள்ளிகுத் தம்பியே! மறவர்க்குத் தலைவனே! கைவணமையுடைய தோன்றலே! நின் பிறபபின்கண் ஐயமுடையேன. நின முன்னோர் யாவரும் பார்ப்பனர் வெறுககத் தகக வற்றைச் செய்யாா. நின செயகை நினககுத தகுதியுடையதோ?' என்று, அவனே வெறுககததகக கடுமொழிகளைக் கூறினார். எனினும், அவறறிறகாக அவன் இவுரை வெறுககாமல், இவரிடததுத் தன தவற்றிறகாகத் தலை கவிழநதான. அது கணடு இவரும் தமது பிழையையுணர்நதார். பொறுத்தற்குரிய அப்பிழையையும் பொறுத்துத தானே தவறு செயதவன் போல் தலை கவிழநதிருநத அவனது பொறுமையை வியநத இவா, அப பொறுமையை அவனுடைய குடிப்பணபாகக கொணடு அவனை வாழத்திப பாடினார் (புறம். 43).

**தாமம்** - மாலை. 'திருமருதமுன்றுறைககண் சோநத நீரில புனலாடி அனுபவிபபார் தாமத்தை – மாலைகளை - வாங்கித தலையிலே புனையும வையையாய' எனப் புலவர் வையையை விளிததுப புகழ்தல (பரி. 7:83,84).

**தாமரை** - நீர்பபூ வகைகளுள ஒன்று. பாணன, தழலின் கண் ஆககபபட்ட, பொன்னால் செய்யபபட்ட தாமரையாகிய வெள்ளி நாரால் தொடுக்கப பெற்ற பூவினைப பெறுவான (புறம். 11.15-18). பாணா, பொன்னாலாகிய தாமரைப பூவினைப் பெறறுச சூடுவர் (புறம். 12.1) சேறறில வளரும தாமரையின நூற்றிதழையுடைய மலரினது வரிசையைக கணடாற் போனறு வேறறுமையிலலாத குடியின கண பிறநது வீறறிருந்த வேநதரை எணணுங காலை அவருள புகழும் பாடடும் உடையோர் சிலரே (புறம். 27:1-5). வேலிபபுறதது நினறு வேணடிய மாககட்கு அறத்தைக் கருதி அகததுள ளோர் பறிததெறிந்த கருபபஙகழி வாவியிலுள்ள தாமரையின பொலிநத பூசசிதையுமாறு வீழநதது (புறம். 28:11-13). எரியால ஆககபபடட தகடாகச செயத தாமரையுடனே பொனமாலையினையும சூடிய பாண் சுற்றம், நலஙகிளளியின நாள மகிழிருககையைச சூழநதிருநதது (புறம 29·1-5). 'பாணனே, நீ கிள்ளி வளவனிடததுச செலவையாயின அவன நெடுவாயிலினகண காலம பாாதது நிறறல இல்லை நீ அவனைக கணட பினபு பூவின கண ஆடும் வணடு ஊதாத பொனனாலாகிய தாமரையைச் சூடாதொழிதல் அநநெடுவாயிலில நிறறலினும இலலை, எனறு பாணன ஆறறுப படுததபபெறறான (புறம். 69:16-21). பகைவரது யானையினுடைய பட்டததின் பொனனைக கொண்டு வாடாத தாமரையைச செயது பாணரது சென்னி பொலியுமபடி சூட்டும பெரியோன் மரபிலுள்ளவன் திருமுடிக்காரி (புறம். 126: 1-4). பாணன சூடிய பசுமபொனனால செயயபபடட தாமரை, விறலி அணிநத பொனனரி மாலையுடனே விளககமுறறது (புறம். 141:1.2). 'அரும்பற வளவிய

இதழ் மலர்ந்த த்தாமரையையுடைய பொய்கையும் தீயும் ஒரு தன்மைய என்று கணவன் இறந்தபோது தீப்பாயும் பெருங்கோப்பெண்டு கூறினாள் (புறம். 246:13-15). 'சீறூர் மன்னன், நெருநல் வேந்தன் பொருட்டுப் போர்த் தொழிலை மேற்கொண்டான்; நாளை வினைமுடித்து வந்து நின் பாடினி பொன்னரிமாலை அணிந்து மகிழ நினக்கு வாடாத் தாமரையைச் சூட்டுவான்' என்று புலவர் பாணனிடம் கூறினார் (புறம். 319:12-15). தலைவனொருவன், பொன்னரிமாலை பெறற்குரிய பாடினிக்கும் பொன்னாற் செய்த தாமரைப் பூவினைப் பெறும் பாணனுக்கும் வேண்டுவன நல்கினான் (புறம். 361: 11-13). பாணன் தன் சென்னியின்கண் நீர்நிலையிற் பூவாத எரிபோலும் பெரிய தாமரையைச் சூடினான் (புறம். 364:2,3). வயலிடையே பூத்த சிவந்த இதழ்களையுடைய தாமரை, அந்தணர் அறத்தை விரும்பி வளர்த்த தீப்போல விளங்கும் (புறம். 397: 19-21). நீர் நிலை தோறும் நெருப்புப் போன்ற தாமரை, ஆம்பலோடு மலர்ந்தது (பதி. 19:19,20). நெருப்புப் போலும் பூவினையுடையது தாமரை (பதி. 23:23). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் பசிய பொன்னாற் செய்த தாமரையைப் பாணர்க்குச் சூட்டினான் (பதி. 48:1). மெல்லியல் மகளிர் அசைந்துசென்று மருதநிலத்தேயுள்ள வளவிய இதழ்களையுடைய தாமரைப் பூக்களை நெய்தற் பூக்களோடு கொய்தனர் (பதி. 78:4,5). வண்டினம், முள் மிக்க தாளையுடைய தாமரையிலே இராப்பொழுதில் துயில் கொண்டு வைகறையில் நெய்தற்பூவை ஊதும் (முரு. 73-76). திருமாலுடைய திருவுந்தித் தாமரை ஊழிகடோறும் படைத்தற்றொழிலில் வருத்தமில்லாத ஒருவனை (பிரம்மன்) பெற்றது (முரு. 164,165). கரிகாலன், நெருப்புத் தழைத்தாலொத்ததும் ஒருவன் செய்ததன்றித் தனக்கென இதழில்லாததுமாகிய தாமரையை (பொற்றாமரையை) பாணனது மயிர் பொலியும்படி சூட்டினான் (பொரு. 159,160). நீருண் துறையிடத்தே நின்றதும் முலையையொத்த பெருமுகை நெகிழ்ந்து அழகிய முகம் போல மலர்ந்ததுமாகிய தாமரையிடத்துச் சிவந்த இதழ் சூழ்ந்த பீடத்திலே தும்பி தன் இன்றுணையைத் தழுவித் துயில் கொள்ளும் (சிறு. 70-76). கயல்மீனை மூழ்கி யெடுக்கும் சிச்சிலிப் பறவையின் உகிர் கிழித்த வடுவுடைய பசிய இலையினையும் முள்ளினை யுடைத்தாகிய தண்டினை யுடையதுமாகிய தாமரையின் அரும்பு விரிந்த நாட்காலத்தின் பூவில் தேனை நுகர்கின்ற வண்டினம், திங்களைச் சேரும் கரும்பாம்பை யொப்பத் தோன்றும் (சிறு. 181-185). முள்ளைத் தண்டிலே யுடைய தாமரையின் புறவிதழை யொக்கும் செவியினை யுடையது குறுமுயல் (பெரு. 114, 115). நான்முகனைப் பெற்ற திருமாலின் திருவுந்தியாகிய பல இதழையுடைய தாமரையின் பொகுட்டினைப் போல மூதூர், அழகு விளங்கத் தோன்றியது (பெரு. 402-404.411). தொண்டைமான் இளந்திரையன், வண்டுகள் ஒலியாத, நெருப்பிடத்தே விளங்கின பொன்னாலாகிய தாமரையைப் பாணரது மயிர் அழகு பெறும்படி சூட்டினான் (பெரு.481, 482). 'பொருநர்க்குப் பொன்னாற் செய்த தாமரையின் பூவினைச் சூட்டும் கோவே' என்று தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் விளிக்கப்பெற்றான் (மது. 99-105). இலைக்கு மேலே தாள்களையுடைய சுடர்த் தாமரைகள் நிறையப் பெற்றது பொய்கை (மது. 248,249,253). இளம்பெண்டிர், தாது சேர்ந்த தாமரைப் பூவைப் பிடித்தாற் போலச் சிறுபிள்ளைகளை எடுத்துச் செல்லுவர் (மது. 461-463). குளத்திலே நெருங்கப் பெற்ற, தெய்வங்களுக்குரிய, நெருப்புப் போலும் இதழ்களையுடைய தாமரையின் தாது பொருந்திய பெரும்பூவினையொக்கும் முகத்தினை யுடையவர் மகளிர் (மது. 710-712). தலைவியும் தோழியும் பறித்துக் குவித்த மலர்களுள் முள் பொருந்திய தாளையுடைய தாமரையும் ஒன்றாகும் (குறி. 80). கூத்தர் தலைவன் பொன்னாலாகிய தாமரையைச் சூடினான் (மலை. 568,569). தீப்போலும் தாமரைப் பூக்களையுடையது நீர் மிக்க வயல் (அகம். 6:16). பழைய நீரில் தழைத்த தாமரையின் பூந்தாதாகிய அல்லியின் அடுத்த இதழினையொத்த அங்கையினையுடையவன் புதல்வன் (அகம். 16:1-3). வண்டுகள் உள்ளிருந்து ஊதும் தாமரையின் குளிர்ந்த மலரை எருமை தின்னும் (அகம். 46:5,6). எருமை, தாமரையைத் தின்று வெறுக்குமாயின் பலாவின் நிழற்கண்ணே தங்கும் (அகம். 91:15,16). தீகிளைத்தெரிந்தாற் போலும் தாமரைப் பூக்களை உடையது பழனம் (அகம். 106:1). நெல்லரிவோர், நெருப்புக் கப்பு விட்டெரிவது போன்ற தாமரைப் பூக்களின் இடையிடையே செந்நெற்றாளை அரிந்து அரியாகப் போட்டனர் (அகம். 116:1,2). நிலம் பிளக்குமாறு இறங்கிய வேரில் கிழங்கினையும் மூங்கிலைக் கண்டாற் போன்ற துளையுடைய தண்டினையும் களிற்றுச் செவி போன்ற இலையினையும் கழுமரம் உயர்ந்து நின்றாற் போன்ற மொட்டுக்களின் இடையிடையே முறுவலையுடைய முகம் போலப் பூத்த பல மலர்களையும் உடையது தாமரை (அகம். 176:1-7). நீரில் தழைத்த தாமரையின் அகன்ற இலை, காற்று அடிக்குந்தோறும் யானையின் காது போல அசையும் (அகம். 186:2-6). சேவலங்கொடியோன் (முருகன்), தாமரையைப்

போனற அழகிய செம்மையாகிய திருவடியை யுடையவன் (குறு. க.வா.1,5). நாரை கவர்நது கொள்ள அதன் வாயினின்றும் தப்பு நீருள் குளித்த கெண்டைமீன், அயலதாகிய நிறம்பொருநதிய தாமரையின் வெள்ளிய அரும்பை வெருவும் (குறு.127:1,2). ஆழமாகிய நீரில் வளர்ந்த தாமரைப் பூந்தாதைப் போன்ற தேமற் புள்ளிகளையுடையவள் தலைவி (குறு. 300: 3,4). பனிக்காலத்தில், ஞாயிறு மறையக் கூம்பி அழகாக வெயிலை உட்பொதிந்த தாமரையின உள்ளிடத்தைப் போன்ற சிறுவெம்மையினள் எனத் தலைவன் தலைவியின இயல்பினை வியந்தான் (குறு. 376:3-6). வண்டு தாமரையின் தண்ணிய தாதினை ஊதிச் சந்தன மரத்தின் உச்சியில் தேனைத் தொடுககும் (நற். 1:3,4). எருமை, வயலில படர்ந்த தாமரையைத தினறு வெறுத்து அயலதாகிய மணறகுன்றில துஞ்சும் (நற். 260:1-4). கோமகள் சினங்கொண்டவிடததுத் தோழியர் கூட்டம் கைதொழுது இறைஞ்சினாற் போலக் காற்று மோதுதலானே ஒவிநத ஆம்பல், தாமரையை இறைஞ்சும் (நற். 300.1-4) விளககைப் போன்ற ஒளி விடுகின்ற மலர்பொருந்திய தாமரையினுடைய களிற்றியானைச் செவி போன்ற பசிய இலை அலைபடுமாறு வாளைமீன் நீரில் பாயும் (நற 310:1-4). பொயகையில தாமரை அரும்பும் (ஐங். 6:4). நூறு இதழகளையுடைய தாமரையிலுள்ள தும்பியின் சினைகளை வேழம் (வேழக் கரும்பு) துடைக்கும (ஐங. 20:1-3). அணையை உடைத்துப் புதுப்புனல பாய்நததெனக் கலங்கிக் கழனியிடததே தாமரை மலர்ந்தது (ஐங். 53:2,3). விடியற்காலையில ஆம்பல் மலர் தாமரை போல மலரும் (ஐங். 68:1,2). கழனியில் தாமரை மலர்ந்தது (ஐங். 94:4). போதவிழந்த தாமரை போனறவன் புதல்வன் (ஐங். 424:3,4). தாமரையையுடையது பொய்கை (கலி. 5:14). 'நீ எமமொடு வருவையாயின் நினது சீறடிகள் அங்குள்ள கல்லைத் தீண்டித் தாமரைப் பூவினது அல்லியைச் சேர்நத அழகிய இதழ்கள் அரககில தோயந்தன போலக் கறுக்குமலலவோ' எனத் தலைவன, உடன் வருவேன் எனக் கூறும் தலைவியிடம உரைத்தான (கலி. 13:10-13). குளம் அழகு பெறுதற்குக காரணமான தாமரையின் பசிய அரும்பினையொககும் இளமுலை (கலி. 22:15,16). தாமரை போலும் கண்கள் (கலி. 39:2). தலைவன, தாமரைக் கண்ணியை யுடையவன (கலி. 52:7). முறுக்கு அவிழநததும் அரும்புகள் நீருக்கு மேலே ஓஙகின பசிய இலையினை யுடையதுமாகிய தாமரையின வளர்ந்த வளையத்தை யொக்கும் தொடியினை யுடையவள் தலைவி (கலி. 59:1,2). திருமண நாளிலே அந்தணன் தன் மடந்தையோடு கூடித் தீயை வலம் வருவான் போல அன்னம் தன பெடையோடு கூடிபபொயகையிடத்தேயுள்ள தாமரையினது புதிதாக முறுககு நெழிந்த தாது சூழ்ந்த தனி மலரை வலம் வரும் (கலி. 69:1-7). துனி மிக்க தலைவியின சீறடியில் தலைவன் வணங்கி அளி செய்ய அதனால் சிறிது மகிழ்பவள் முகம் போல, பசிய இலைக்குள்ளே நினற தாமரையின் தனித்த மலர் அலர்நதது (கலி. 71:5-8). கிளி பாலை உண்ணுதலைக் கணடு மகிழ்ந்து முத்தங்கொள்பவள் முகம போலக குளத்தின் நடுவே நின்ற தாமரையின கமழுகினற முகை குளககரையில் நினற மாவின மாங்குலை ஆம்பல் மலரை முதலில தீணடிப பின்னா தனனைத் தீண்ட மலரும் (கலி. 72 4-8). நீருணணுந துறை அழகு பெறும்படி பகன்றைப பூவைச் சேருமபடி வளர்நதிருநத பசிய இலையினையுடைய தாமரை முகை, நறுங்கள் உணபவன முகம் போல மலர்நதது (கலி. 73:1-5). பொயகைப பூவில தேனருந்திய வண்டு, கழி நெயதலின மகரநததை யுண்டு பினனர் வயலிடததுள்ளதும சேபபங கிழஙகால் செய்து வைததது போல பூத்துக கிடப பதுமாகிய தாமரை மலரின இதழகளுககு நடுவேயுளள கொட்டையாகிய தன வாழிடம நோககி மீண்டு வநதடையும் (கலி. 74:1-4). தமமிற சேர்நது ஒத்த இரணடு முகைகளுககு நடுவே நினறு வேறொரு பூச்சிறிதும அருகே சேர்தலின்றி மலாநத தாமரையின தனிதத மலர், தலைவன பிரிவுககாக முகங்கவிழ்நது அழுகின்ற தலைவியின கணணீர் முலைமேல் வீழநது சிநதுவது போலப் பறவைகள் வநது தாகக (அததனிதத மலர்) சாயநது வளைநது தான் இதழகளுககுள்ளே உள்ள நீரை முகைகளின் மேலே சிநதியது (கலி. 77.1-7) தும்பிகள், பழனத்திலுளள பசிய இலைகளையுடைய தாமரையினது காட்சிககினிய மலரை ஆரவாரித்துச் சென்று ஊதின (கலி. 78:1,2). செந்நெலலிடையே பூததுமம முளளை அரையிலே யுடையதுமாகிய தாமரையின இதழை யுறும்படி பறவைகள நெற்கதிரொனறைச சாயககு, அப பூவிலே கிடநது விளங்கின அவவொரு கதிர், அரங்கின் மேல ஆடுவாளது நுதலிலே செருகி வைதத வயநதகம எனனும் அணி போல தோனறும (கலி. 79 1-5). நீரிலே அசைகினற, பொலிவினையுடைய தாமரைப பூவினைத தலைவன் தலைவிககுத் தநதான (கலி. 112:1,2). திருமாலின கண்கள், தாமரையலர் இரணடைப பிணைததாற் போன்று விளஙகும் (பரி. 2.53). 'வாயமொழி மகனோடு (பிரமனோடு) உநதிககண மலர்நத பொகுட்டுத தாமரையை யுடையவனாகிய நினது

சக்கரமே உலகிற்கு நிழலாகும்' என்று திருமாலை அடியார் போற்றுவர் (பரி. 3:93,94). 'நின் உந்தி யில் தோன்றிய நிரைத்த இதழ்களையுடைய தாமரை மலரை யொத்த கண்களை உடையை யாய அளத்தற்கரியை' எனத் திருமால போற்றப் பெறுவர் (பரி. 4.60,61). செவவேளை யீன்ற தாமரையின இணருதிரப பெறாதது வற்றாத பொய்கை (பரி. 8.13-15). பைஞ்சுனையிற பாயந தாடும் பாவையரின முகமாகிய தாமரை மலரும் தாள்களாகிய தாமரை மலரும் தோளாகிய பொற குளததில மலர்ந்த கையாகிய தாமரை மலரும் கொங்கையாகிய முனைகளும் ஆகிய இத்தாமரை கள் எலலாம் சுனையிற பூத்த தாமரைகளோடு சிறிதும் காட்சி வேறுபாடு உறாது விளங்கின (பரி. 8:112-117). (4) திருமாலின் திருவடியும கையும் கணகளும் திருவாயும் இலைப் பரபபினின்றும் உயாநது மலர்ந்த வளவிய இதழ்களையுடைய தாமரையை ஒப்பனவாகும் (பரி. 13:50,51). செவ் வேளின திருவடி தாமரை போன்றது (பரி. 21:3).

**தாமரைப்பூ** - தாமரைமலர். தூய மலராய தாமரைப் பூவிடததே கரிய இதழ்களையுடைய குவளை மலர் இரணடினைப் பிணைதது வைத்தாற் போனறு திருமுகத்திடததே அலமரும் மழைக கண்களை யுடையவள் தலைவி (அகம். 361:1-4). வேதமாகிய நீரோடையில மலர்நத தாமரைப் பூவினுள் பிறந தவன நான்முகன (பரி. 3:12,13). தண்ணிய நறிய தாமரைப் பூககளின இடையிடையே உள்ள அன்ற லரும இதழ்களையுடைய போதுகளின வாயி டததே தேன பருகும் பொருட்டு வணடினங்கள் ஆாத்தன (பரி தி. 1:10,11). மாயோனின உந்தி யில் மலாநத தாமரைப் பூவினையொக்கும் கூடல் நகா; அபபூவின் அக இதழ்களை ஒப்பன தெருக் கள; அவவிதழகளின நடுவே அமைநதுள்ள பொருட்டை யொககும் வேநதனது அரணமனை; அபபூவின் தாது போனறவர் தமிழககுடி மககள்; அததாதினை உணணவரும் வணடினைப போனற வர் இரவலா (பரி தி. 7:1-6).

**தாமரைப் பொய்கை** - தாமரை மலர்களையுடைய பொய்கை. 'ஓா இராப பொழுதில தாமரைபபொய கையில - தாமரை மலாகளையுடைய பொயகை யில - நீரால நீக்கபபட்ட மலர், அவ்விராககாலம முழுவதும் வாடாமற கிடநதாற போல நீ பிரிவை யாயின ஓர் இராககாலம் முழுவதும் தலைவி உயிா கொணடு வாழவாளோ' எனறு தோழி தலைவனிடம கூறினாள (கலி. 5:14,15).

**தாமரை மலர்** - தாமரைபபூ. யானைகள் பூவோடு கூடிய நீரை மேலே சொரிய எக்காலமும் முறுககு நெகிழ்நத தாமரை மலரின - தாமரைபபூவின் - அழகையுடைய அலலியிலே திருமகள் வீறுபெற்று விருமபியிருநதாள் (கலி. 44:5-7).

**தாமரையிறை** - தாமரையில் வீற்றிருக்கும் இறைவன் (நானமுகன்). தீயையொதத மலராகிய தாமரை யிறையால் - தாமரையில் வீறறிருக்கும் இறைவ னால (நானமுகனால்) - வீழ்ததப்பட்ட ஆகாய கங்கையைச் சிவபெருமான தன் விரிசடையில் தாங்கினான் (பரி. 9:4-7).

**தாமாஇருவர்** - தாவும் குதிரை வயிற்றில் தோன்றிய இருவர் (அச்சுவனிதேவா). தாமாஇருவர் - அச்சு வனிதேவர் - முதலானோர் திருமாலிடமிருந்து தோன்றியவராக வேதம் கூறும் (பரி. 3:8).

**தாமான் தோன்றிக்கோன்** - குறுநில மன்னன். தாமான் என்பது இவன் இயறபெயர். தோனறிககோன எனபதனால இவன தோன்றி மலை மன்னன் என்பது புலனாம. இவனை, அறவர் அறவனாகவும மறவா மறவனாகவும் மள்ளர் மளளனாகவும தொலலோர் மருகனாகவும குறிப்பிட்டுப் பாடுவர். ஐயூர் முடவனார் (புறம். 399). அம்முடவனார், தம் ஊாதியிழுததறகு வலியதொரு பகட்டினைத் தன்னிடதது வேண்டுமுன்னே அவரது குறிப்பை யுணாநது இவன் பல பகடுகளின் நிரையை ஊாதி களோடே அவர்கு நல்கினான. அவறறைப பெற்றுககொண்டு மீளும் நிலையில் பரிசில் விடை யாகக கிணைஞன கூறறில் அவர் இவனைப பாடிய பாடல் புறநானூற்றில் (399) இடம் பெறறுள்ளது.

**தாமோதரனார்** - புலவர். இவர் பாடியதாகக் குறுந தொகையில ஒரு பாடல் (92) உள்ளது. காம நோயினை ஆறறாத தலைவி மாலைப்பொழுதில பிள்ளைகளுககு இரைகொணடு மீளும் பறவை களைக் கண்டு நெஞ்சழிநது காமமமிகக கழிபடா கிளவியாகப் பேசுவதை இவர் அழகுறப பாடி யுள்ளார். அந்நிலையில தனது இரங்கத்தகக உணர் வினை அப்பறவைகளின் மேலேறறிக குறிப்பிடும அவளது மாலை மயககததை இவரது பாடல நனகு புலப்படுததும.

**தாய்** - அன்னை. 'தாயில்லாத உண்ணாத குழந்தையைப்போல ஒழியாது கூவும் நினனைச் சினபபித்தவருடைய நாடு' எனறு பரணா உருவப பஃறேரிளஞ்சேட் சென்னியின வீரத்தினைப் புகழவர் (புறம. 4:18,19). 'நினனைப பெறறோ ராகிய நின் தந்தையும் தாயும் வாழவாராக' எனறு

நாளுசில வள்ளுவனை ஒருசிறைப் பெரியனார் வாழ்ததுவா (புறம. 137:14,15). ஒருவயிறறுப பிறந்தோருள்ளும் கல்வி மேமபாட்டால தாயும மனம வேறுபடுவாள் (புறம். 183.3,4). 'நறுமணப பொருள்களைத துறந்தமையால நறுமணம் கமழாத நரைத்த தலையையுடைய சிறுவா தாயே, பெருங்குடிப பெண்டே, போர்ககளததில் வாளினமேல வீழநது கிடந்த நின மகன்குறித்து வேந்தரும ஒனறு கூடி அனபால் வருந்துதலை நீயே பாாபபாயாக' எனறு கழாத்தலையார் கணடார் தாயககுக் கூறிய நிலையில் பாடியுள்ளாா. (புறம். 270). போாக் களததில வெட்டுண்டு சிதைந்து வேறுபடடுக் கிடந்த தன் மகனைக கண்ட தாயின் வறறிய முலைகள், அன்பு மிகுதலின் மீணடும பாலூறிச சுரநதன (புறம. 295:5-8) 'மகளின் அழகினை வளர்ததலால உண்டாகிய மகிழ்சசியோடு ஊாககுப் பகைனயயும் வளர்ததிருநத பணபிலலாத தாய், ஒருதலையாக அறபபணபில்லாதவள்' எனறு மகட்கொடை மறுத்தலால நேரும அழிவு குறிததும அவ்வழிவுககுக் காரணமான தலைவியின அழகினை வளர்தத அன்னையின பண்பு குறித்தும் புலவர் வருந்திப் பாடுவர் (புறம. 336:10-12). ஈன்ற தாய' தலைவிக்கு 'இனியும் சிறிது பாலுளது உண்க எனறு வள்ளத்தை வாயில் வைத்து ஊட்டுவள் (புறம. 346:1,2). 'குவளையுணகணணாளாகிய தலைவியைத் தாய் பெறாதிருபபின ஊர்ப்பெருந்துறைக் கண் நின்ற மரங்கள், பகைவர் யானைகளைப் பிணித்தலின ஏற்படும் வருத்ததைப பெறாதிருநதிருககும்' எனறு மகட்கொடை மறுத்தலால ஏறபடும் அழிவு குறித்துப் புலவா வருநதுவர் (புறம். 348:6-10). சீறூர்த் தலைவனொருவன, தாயினும் பெரிய அனபுடையவனாய இரவலர்கசு வேண்டுவன நல்கும் தன்மையன (புறம. 361:6). 'குற்றமிலலாத தாயிடத்துப் பாலுணண ஓடிவரும் குழந்தை போல நினனிடத்துப் பெறலாகும பரிசின்மேல ஆசைவைதது வநதனன' எனக கிணைப பொருநன ஓயமான வில்லியாதனிடம் உரைததான் (புறம். 379'14,15) 'மேகம் பெயயாமற பொய்ப்பினும் தனனைச சாாநதார் வயிறு பசி மிகுமபடி ஈயாமல் நிறையக கொடுப்பன்; அவனைப் பெற்ற தாயின் வயிறு குறையின்றி விளங்குவதாக' எனறு இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் ஈகைத் திறன் சுட்டப்பெறும் (பதி. 20:25-27). கரிகாலன தாயினுடைய வயிற்றில இருநத போதே அரசவுரிமையைப் பெற்றான (பொரு. 132). தாயுடைய முலையைத தழுவிய குழந்தைபோலக் கடலோடு காவிரி கலந்தது (பட். 96, 97). 'மாாபிலுள்ள அழகிய முலையில் தோனறிய தேமலையும மாசிலலாத கற்பினையுமுடைய என் புதலவன தாயே, என்று மாயப பொயமொழிகளை வணங்கிக கூறி எம முதுமை நிலையினை இகழாதே' எனப் பரததைமைத தலைவனிடம தலைவி கூறினாள் (அகம். 6:12-15). 'குறுமகளே, ஏன் மயங்கினை; நீயும இவனுககு தாயாவாய' எனறு தலைவி பரத்தையிடம கூறினாள் (அகம். 16: 12, 13). 'அருநததி போனறோளாகிய நின் பரத்தை நின மகனுககுத தாயாதல் ஒககுமென எணணி யானும் அவளைப பேணினேன' எனறு தலைவி தலைவனிடம் கூறினாள (அகம. 16:18,19) 'மாயபபரத்தனாகிய தலைவனது வாய்மொழியை எமமைப போல்நம்பிக் கண்கள் கலஙகித தன தாய ஓமபிய ஆய் நலத்தை வேணடாது இழுபபவளாகிய வயஙகிழையாள் யாாகொலோ' எனறு பாணனிடம் தலைவிவினவினாள் (அகம். 146 7-13). 'தாயும, என் உயிா கெடுவதாக எனறு கூறி மணலில் கிடநத பாவையை எடுத்து 'என அருமகளே' என முயஙகி அழுவள்' எனறு மகட்போககிய அன்னையின நிலைமையைக கணடாா உரைபபா (அகம. 165:7-13). சுரநெறியைக் கடநது சென்ற குறுமகளோடு விடலையாகிய தன மகனும வரும எனறு அவன தாய், புறசசுவரில செமமண பூசி முறறததே மணல் பரபபி மாலைகளைத தொஙக விட்டு மகிழநது இனிதே கோலஞ்செயதாள் (அகம். 195 1-5). தாய முலையினைப பெறாதொழியும் யாட்டுககுட்டியினைப பலியிட வேணடி வேலன வெறியாடினான (அகம. 292:3-5). இரககம இலலாத கோவலர், கனறினை அதன தாயிடமிருநது பிரிததுக் கட்டுவா (அகம. 293 11,12). பூனைககுட்டிகள், திங்களைச சூழநதுள்ள விணமீனகள போலத தம தாயின பின் சூழநது திரிநதன (அகம. 297 13-15). தாயின பெருமனையில தமர் பாராட்டக காதலோடு வளர்நதவள தலைவி (அகம. 310 7, 8). 'வயலைக கொடியே, நீரினைப பெருஞசால நிறைய முகநது வநது தாயைப போல நின முகத்தினைப பாாதது வைகலும ஊறறுவாளனறோ; இனி நின்னைப் புரபபார் யாரைப பெறுகுவை' என மகட்போககிய தாய வயலைக கொடியைப பாாததுப புலமபினாள் (அகம. 383.6-14). 'பெருமனையில் என மகளது மடபபததினை யான பாராட்டவும தாய தனது தலைமையை அறிநது கடமைகளைச செலுததவும் திருமணததின வாயிலாகக கொளளாது காட்டின்கண் உடனகொணடு செல்லத துணிநதனனே' எனறு மகடபோககிய செவிலி வருந்தினாள் (அகம. 397 1-4). 'எமமிலலில பெருமொழி கூறிய தலைவன தம்மிலலில் கையும காலும தூககத்தூககும ஆடிபபாவை போலத

தன புதலவனது தாயக்கு அவள் விருமபுவனவற றைச செயவான' எனக காதற பரததை தலைவியின பாஙகாயினாா கேட்பக் கூறினாள் (குறு. 8). பரததையரைத தழுவும் பொருட்டுச் சென்ற தலைவன் மிகக விளககத்தை யுடையவன என்று எணணி அவன புதல்வனது தாய அவனை ஏற்றுக் கொள்வளாயினும் மனஞசுழல்வாள் (குறு. 45: 2-5). நல்லான கனறு, தாயை (பசுவை) காண விரும்பியது (குறு. 132:4,5). தலைவனைப் பனமுறை காண்டலால் வளரும் தனமையுடைய காமம், தலைவன பிரிதலின தாய் இலலாத முட்டை போல உள்ளததுளளே கிடந்து மெலியும (குறு. 152). தலைவன் புதலவனைத தழுவினான; புதலவனது தாய், தலைவனது புறததைத் தழுவினாள் (குறு. 359.5,6). தாய், மாறுபட்டு வருததிய பொழுதும குழநதை வாயவிட்டு அனனையே எனறழும (குறு. 397:4,5). 'இவளை ஈனற தாய, திண்ணிய தேரையுடைய பொறையனது தொண்டி நகர் போன்ற சிறப்பினைப் பெறுவாளாக' என இயறகைப புணர்சசி இறுதிக்கண தலைவியை ஆயததோடுங் கணட தலைவன கூறினான் (நற். 8:9,10). தலைவி, தன தாய் வீட்டைக கைவிட்டுத தலைவனுடன் உடன் போககினை மேறகொணடாள் (நற. 26:3-7). கடலைததுழாவிய நாரை, மீனகளைக கூட்டின் கண்ணிருந்து தாயைக கூவியழைககின்ற தன் பிள்ளைகளுககு ஊட்டும் (நற். 91:3-7). 'யானும் தாயும் (செவிலித்தாயும) தேனோடு கலந்த தீம் பாலை ஊட்டவும உணணாது விமமி அழும் தனமையளாயிருந்தவள் இனறு காளையோடு அருஞ்சுரததைககடநது செனறனள்' என்று தலைவியின் இளமைச் செவ்வியை நினைநது மகட் போககிய நற்றாய் புலம்பினாள் (நற. 179:5-9). 'எம புதல்வியிடம் பொய்மமொழி கூறி உடன கொணடு போன காளையை ஈன்ற தாய எம்மைப் போலப பெரிய நடுககமுற்றுத துன்பததை அடைவாளாக' என்று அனனை மனை மருணடுரைத தாள (நற. 293.5-9) 'தன்மகளை நயநதோளாகிய தாய யாவராலும் இரங்கத்தககாள்; அவள்தான் நொந்தழிகினற அவலமுடன இனி எனனாகுவளோ' என இடைச்சுரத்துக காதலரைக கணடோர் தலைவியின அன்னை குறித்து வருந்தினார் (இப பாடலுககுத தலைவன பாங்கற்குக் கூறியது என்றும் துறை வகுககபபட்டுள்ளது) (நற. 324:1-3). காநதளைத தீணடி அதன தாதுகள் உதிரபபெற்று வேறுபாடடைந்த பசுவினைக கணட கனறு அதனைத தன தாயெனறு அறியாமல் மயஙகும (நற. 359.1-3). நணடு, தன தாய சாவப பிறககும (ஐங. 24:1). பொயகையிலுள்ள யாமையின் இளம் பார்பபுத தன் தாய முகததைப் பார்தது வளரும் (ஐங. 44:1,2). 'தலைவனுடைய மாட்சிமைபபட்ட குணத்தை வண்டுகள் மேறகொணடனவோ; அன்றி அவவண்டின குணததைத் தலைவன் கொணடனனோ; யானும் அறிகிலேன, அவன் புதல்வனது தாய அவன் குணமே அத்தகையது எனபதை அறியாதவளாய் எமமொடு புலக்கினறாள' எனக் காதற் பரத்தை கூறினாள் (ஐங. 90). 'எனமகளை வெஞசுரத்தில் கொணடு சென்ற விடலையாகிய தலைவனின் தாய, நினைக்குந்தோறும் அழுகின்ற துனபத்தை அடைவாளாக' என நறறாய் புலமபினாள் (ஐங. 373). 'காளையாகிய தலைவனை ஈன்ற தாயிடம, சிலம்புகழி நோன்பினை நும்மனையில அயரினும் வதுவை நன்மணத்தை எம மனையிலே நிகழததுமாறு நீவிர் கூறின அதனால் ஏதம் உண்டோ' என்று நறறாய் உறவினரிடம் உரைத்தாள் (ஐங். 399). புதலவனைத தழுவிக கிடந்த தாயின முதுகினைத் தலைவன் விருபபமுள்ளவனாயத தழுவிக் கிடநதான (ஐங். 402:1,2). புதலவனை ஈன்ற தாய, விளககினது செஞ்சுடர் போல மனைக்கு விளக்காயினள (ஐங. 405). புதல்வனைத் தழுவினன் தந்தை; புதலவனது தாயோ அவ்விருவரையும் தழுவினள் (ஐங 409:1,2). 'வேந்தன போாத் தொழிலைக கைவிட்டு அமைதியுறுவானாயின், அருநததியினை யொதத தெயவக் கறபினையுடைய புதலவன தாய், விருநதோம்பறறொழிலைப் பெறுதற்குமுரியள்' என்று தலைவன வினைமுடியாது பாசறைககண்ணிருநது கூறினான் (ஐங. 442) தலைவனோடு அரிய சுரத்தைக கடநது சென்ற மடப்பததையுடையாளுககுத் தாயாந்தனமையுடையவள் செவிலி (கலி. 9:10.11). தாழிட்டு அடைத தாற் போனற கடுங்காவலையுடைய தாயின் முனனே கோடறபூ உகுவதுபோலத் தலைவியின் கைவளைகள் கழனறு வீழநதன (கலி. 48:10,11). புததேளிர் கோட்டம் வலஞ்செயவிததுக கொணடு வருதறகுத் தோழியுடன புதல்வனைப போககிய தலைவி, அவன் காலம் நீட்டித்து வநத வழிக காரணததை வினவ தோழியும், 'இவன தநதையால் விரும்பபபட்டவளும் பரத்தைமை தொடஙகுகினற காலத்துளளவளுமாகிய தாயிடத்தே சென்றான, ஆதலால காலநதாழநதது' என்று கூறினாள (கலி. 82:10,11). மகன வழிமுறைத் தாயிடம் செலல அவள் அவனை முயஙகி முத்தினள் (கலி. 82:15-17) குழவியைப பாாத்துஇனபுறும் தாய அதறகு முலை சுரநது கொடுககுமாறு போல மழையானது வேணடின காலததுப் பெய்து உலகை அளிததுப பாதுகாததது (கலி. 99:4,5). மகளிர், தாய் அருகே நின்று வையையில் தைநநீராடினர் (பரி. 11.91).

புனலாட்டின்கண் தலைவி தலைவனைப் பின தொடரத் தாய் அவரது அனபுடைமையை அறியாது அவள் தனியே சேறலை விலககுதலால் தலைவி அரற்றினாள் (பரி. 11:111-113).

**தாயங்கண்ணனார்** - புலவர். 'எருக்காட்டூரத் தாயங் கண்ணனார்' காண்க.

**தாயங்கண்ணியார்** - புலவர். பெண்பாலினர். கண்ணி யார் என்னும் இயற்பெயரையுடைய இவர், தாயன என்பார்கு மகளானதால் தாயங்கணணியார் என்று அழைக்கப்பெற்றார் (ஔவை. து). தாபத நிலைததுறையில் இவா பாடியதொரு பாடல புறநானூற்றில் (250) அமைநதுள்ளது. நல்லுணவி னால் இரவலரைத் தடுதத வாயிலையும் அவரது கணணீரைத் தடுத்த குளிர்ந்த பநதரையுமுடைய செலவவளம் மிககதோா அழகிய மனை தலை வனையிழந்து பொலிவழிநது தோனறுவதையும் புதலவரையுடைய அமமனையாட்டி கூநதலைக் கொயது குறுநதொடிகளை நீககி அல்லியரிசி உணவோடே கைம்மை நோற்பதையும கணடு இவர் அப்பாடலை இரக்கவுணர்வுடன பாடியுள ளாா.

**தாயம்** - 1. அரச உரிமை. பாண்டியன தலையாலங் கானத்துச் செருவெனற நெடுஞ்செழியனாற் பிணிப் புண்டிருநத யானைககட்சேய மாந்தரஞ்சேரலிரும் பொறை, பொறுததற்கரிய வலிமையால் பகையை மதியாது பிறிதொரு சூழசசியால தன தளர்ச்சி நீங்கிப் பலரும் மகிழ அரசுகட்டில் எயதிப் பரநத தாயத்து - அரச உரிமையோடு - தன் சுற்றததார் பலர்க்கு நடுவே உயாநது விளங்கினான் (புறம. 17:20-23). 'என நல்லடியைப பொருந்தி இரந் திருபபாராயின் அவர்க்குச் சீாமையுடைய முரசு பொருநதிய பழையதாய் வருகினற தாயததை யுடைய எனது அரசாட்சியைக் கொடுத்தல் எளிது; அவ்வாறனறி என் உள்ளத்தை இகழநத அறி வில்லாதவன் இனி, பிழைததுப போதல் அரிது' எனறு சோழன் நலஙகிளளி கூறினான் (புறம. 73: 1-8). குடியின் மூததோரைக கூறறம் கொண்டு செனறதென விதியால் தரப்பட்ட, பழைய வெறறி யால் உண்டாகிய தாயத்தைச சிறுமையுடையோன் பெறின் அது சிறப்பில்லாதது; சீரியோன பெறின அது நெட்டியின் சுள்ளி போல எளிமையுடைய தாகி நன்றாம் தனமையுடையது (புறம. 75:1-10). ஒரு நாளும் நீங்காத தாயத்தை வழுவினறி எய்திய வன் அதியமான (புறம. 99:7,8). பாணர் முதலி யோர் தமமுடையதென ஒரு பொருளை வளைததுக கொள்வாராயின அதனை எம்முடையதென அவரிடத்திருநது மீண்டும கைக்கொள்ளுதலைத் தெளியாத பயனபொருநதிய தாயததோடு கூடி அவ்வாறே நின் வாழ நாட்கள் அமைவதாகுக' என்று ஆய அண்டிரனிடம ஏணிச்சேரி முட மோசியாா உரைததார் (புறம். 135:16-19). 'நுநதை யினுடைய தாயததை நிறையப் பெறற புலிகடி மாலே' என்று இருஙகோவேள் விளிக்கபபெறறான (புறம. 202:9,10). 'நீ நறபுகழை இவ்வுலகததில் நிறுததித தேவருலகத்தினகண் போய பினபும நீ ஒழிதத தாயம் அவர்ககுரித்து' எனறு தன மககள மேல போர்ககெழுநத கோப பெருஞசோழனிடம் புல்லாற்றூர் எயிற்றியனாா உரைததாா (புறம். 213: 9-11). அரசு பழையதாய வருகின்ற தாயததை யுடையது (பதி. 44:20;45:9). கரிகாலன தாயி னுடைய வயிறறிலிருநத போதே தாயத்தைப பெறறான் (பொரு. 132). கரிகாலன, பகைவருடைய காவலாகிய வாட்படையை ஓட்டி அவவிடததினின றும் போந்து அசசம் பொருநதின தனது தாயததை முறையாலே பெறறான (பட். 225-227).

2. (அரச உரிமையால் பெறற) நாடு. அகனற தாயததினையும - நாட்டினையும - சுருஙகிய அறி வினையும் உடையராய இரவலாககு இல்லையெனறு கூறித தம பெயரை நிறுததாது தமமோடு கொணடு மாண்டோர் சேயாறறு மணலினும பலராவார் (மலை. 551-556).

3. உரிமை. 'தணணநதுறைவனாகிய தலைவனது மார்பை நிலையாகப பெறததககு தாயததை - உரிமையை - உடையேமானாலும அது உரியதே யாகும்' எனறு தலைவி தோழியிடம கூறினாள் (நற். 327.7-9).

**தாயர்** - அன்னையர். இளங்கனறுகள் பாலுணணா மல உறுகினற வருததத்தைப் பாாதத ஆயமகள் 'கோவலர் பின்னே நினறு செலுததிட, நிரம்ப மேய்நத நுமமுடைய தாயர் - அனனையர் - இப் பொழுதே வருவா' எனறு உரைததாள் (முல்லை. 12-16). 'பொறகலததில் தீமபாலோடு தேன கலநது ஏநதி ஊட்டத் தாயா (செவிலியர்) ஊட்ட வும் உணணாளாகிய என மகள அருநெறியில செல்லுதற்கு எஙஙனம் வலலமையுடையள ஆயி னளோ' எனறு மகட்போக்கிய அனனை வருநதி யுரைத்தாள் (அகம். 105:4-6). 'என் மகள் தனனை யொதத தோழியரும் எனனையொத்த தாயரும காணா மணநது செலலாளாயத் தன துணைவ னுடன செனறு அறியாத தேயததில் சிலமபுகழித்து வதுவை அயர்தல கொடிது' என மகட்போககிய

செவிலி வருந்தினாள் (அகம. 385.1,2,17,18). ஒரு தோ வந்து பெயர்ந்தது என்று அயலார் கூறு வதைக் கொண்டு அன்னையால் அலைப்புண்ட தலைவி, 'இளையரும மடவருமாகிய மகளிர் பலரும தமமை வருததாத தாயரோடு நல்வினை யுடையராய உள்ளனர்' என்று கூறினாள் (குறு 246: 4-8). 'விறலியே, தாழமை யுடைய நின சொலலுககு உடனபடட பரத்தையரின் தாயரை எயதிப பொய்ம்மையுடைய சொற்களைச சொல்லுகின்றி லையோ' என்று தோழி விறலியை வினவினாள் (நற் 310:5-11). 'தலைவிககுத் தாயா என்று கண்டோர் கூறுமொரு நறபெயரினை இயன்ற வகையாலே யான பெறறேன்; அபபெயரை அவள் ஆயத்தார் எனக்கு வழங்கினர்' என்று தலைவி உடன போயவழித் தனனைத தெளிவிபபார்க்குச் செவிலி உரைத்தாள் (ஐங். 380). 'இவனிடதது அமையாத விருபபததையுடைய வேற்றுத் தாயர் எதிர்கொள்ள அதனை மாறறாது ஏற்ற இக் கள்வனாலே காலநதாழதது வரநேரிட்டது' என்று புதலவனை அழைததுச் சென்று காலநதாழததி வந்த தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 83: 23,24). 'குடை நிழலில தோன்றும் புதல்வனைக் கண்டு மகனலலாதான (தலைவன்) பெற்றமகன் இவனே என்று கருதி மனைவாயிலைக் கடந்து வந்த தாயர் (பரததையா) தடுப்ப அவரிடத்தே தங்கினான' என்று கோயில வலம வரப புதலவ னோடு சென்று காலநதாழ்த்து வநத தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 84:11-15).

**தார் - 1. மாலை.** அருந்தவத்தோனாகிய சிவபெரு மானின் மார்பிலுள்ள தார் - மாலை - கொன் றைபபூவாலானது (புறம. 1: 2, 13). 'மகளிரது முயககத்தால் மாறுபடுத்தல அல்லது வீரர் போரால மாறுபடுத்த முடியாத, இநதிரவில போலும் தாரையுடைய மார்பன' சோழன நெய் தலஙகானல இளஞ்சேட்சென்னி (புறம. 10.9,10) இநதரவில போலும தாரினையுடையது முரசம (புறம. 36:12) மயிறபீலியால் தொடுககப்பட்ட, ஒள்ளிய பொறியையுடைய, நீலமணி போலும நிறததையுடைய தாரினைப பொன்னாலாகிய உழிஞையுடனே சேர்தது வீரமுரசத்தின பககம பொலியுமாறு சூட்டபபெறும (புறம. 50:2-4). 'மூவேந்தருள்ளும் மேம்பட்ட பூநதாரையுடைய மாற' என்று பாணடியன இலவநதிகைபபள்ளித் துஞ்சிய நனமாறன விளிககபபெறறான (புறம். 55: 6). இநதிரவில போலும தாரினையுடைது, மாாபு (புறம. 61:14). சுறறபபட்ட - தாரினையுடையவன் கிள்ளி வளவன (புறம. 69 14-16). 'என்னுள்ளததை யிகழந்த அறிவில்லாதோராகிய பகைவர் வருந்தும் படி பொருதிலேனாயின் பொதுப்பெண்டிரது பொருந்தாத புணர்சசியினிடையே என்தார் துவள்வதாக' எனச் சோழன் நலங்கிள்ளி வஞ்சின முரைத்தான் (புறம. 73:10-14). தலையாலங் கானத்துப் போருககுச் செல்லும்நெடுஞ்செழியனின் இளமைச செலவியை வியக்கும் புலவர், 'தாரினை யணிநது ஐமபடைத் தாலியைக கழித்தது மிலன' என்று பாடுவர் (புறம். 77:6,7). 'பொன் னாற் செய்யபபட்ட தாரினையுடையவன் அஞ்சி' (புறம. 91:4). குதிரைகள், வீரரது பொனனாற் செயயபபட்ட பசிய தாரினையுடைய மாாபு உரு வழிய ஓடுதலால குருதியால் மறுபபட்ட குளமபை யுடையவாயின (புறம். 97:11-13). பெருஙகானங் கிழான் குளிர்நத தாரினையுடைய மார்பினன் (புறம. 155.7,8). 'இணைந்த தாரினையுடைய தலைவ' என்று மலையமான சோழியவேனாதி திருககணணன விளிக்கப பெறுவன் (புறம. 174: 23). 'தாரணிந்த யானையினையுடையவன் இருங் கோவேள் (புறம். '201:13). பொன்னால் செய்யப் பட்ட தாரினை யுடையவன கிள்ளி (புறம. 220:5,6). சோழன குளமுறறத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பொனனால் இயன்ற தாரினையுடையவன் (புறம். 226: 4-6). தணணிய தாரினை யுடையவன அண்டிரன (புறம். 241:1,2). வேநதர் தாரினையுடை யவர் (புறம். 265:7). மறவன, தனனைக குறித்து வரும் மாறறார் படையை எதிரேறறகுக் கிளர்நதெழும் தாரணிநத மார்பினை யுடையவன (புறம். 282:4). தலைவன், நிரையாகத தொடுக் கப்பட்ட தாரணிநத மார்பினன (புறம். 294:9). தலைவன பூககளால தொடுககபபட்ட தாரினையணிந்தான் (புறம. 311:4). குட்டுவன் பொன்னாலாகிய தாரினை அணிநதவன் (புறம். 349:9). சோழன் நல்ல தாரினையும் கள்ளினையு முடையவன (புறம. 378:5). சிறுவர் இநதிரவில் போலும் தாரினை அணிநதனா (புறம. 380:13). சோழன குளமுறறததுத் துஞ்சிய கிள்ளிவளவன், மலர்களாலாகிய தாரினை அணிநத அணணல என்று போறறப்பெறுவன் (புறம். 363.9). 'பல வகைத தொழிற்பாடமையத் தொடுககபபட்ட தாரணிநத மாாபையுடையாய, துயில எழுமதி' என்று கிணைப பொருநன் வேநதனைத் துயி லெழுப்பினான் (புறம. 397:9) காலக்கடவுளாகிய இறைவன், விரிநத பூங்கொததுககளையுடைய கொனறைப்பூவால தொடுககபபட்ட பசிய தாரினை யுடையவன (பதி.க.வா. 1,2,12). இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் மார்பிற கிடககும் பசிய தார், யானையின் ஓடையளவும தாழந்து

அதனோடு விளங்கியது (பதி. 11:17). 'தாரணிந்து உயர்நத, பூண சிதைநத கோட்டினையுடைய யானைகளை யுடையவன சேரலாதன் (பதி. 15:22, 23). 'பொன்னாலாகிய தாரினையுடையவன குட்டுவன் (பதி. 23:10). வண்டு மொயத்து விளங்கும் தாராகிய மணங்கமழும கொததுக் களால தொடுககப்பட்ட துழாய் மாலையினை மார்பிலணியப் பெறறவர் திருமால் (பதி. 31:7-9). இஞ்சியும் பூவும் கலந்து தொடுதத வாடாத தார், கடகுடங்களுக்குச் சூடடப் பெறறது பதி. 42:10,11). பொனனாலாகிய தாரினையுடையவன கடலபிறக கோட்டிய செங்குட்டுவன (பதி. 43: 11). தார் அசைந்தாற் போனறு சுழலுதலையுடையது வாள் (பதி. 66:13). யானை பொன்னாலாகிய தாரினை யணிநதது (பதி. 75:3) செவவேள, உருள் போனற பூவால் செயயப்பட்ட குளிர்நத தாரசையும மாா பினன் (முரு. 11). செவ்வேளின் பன்னிருகைகளுள ஒருகை, மார்பிலுள்ள தாழ்நது தொங்கும தாரோடு சேர்ந்து அழகு பெற்றது (முரு. 112,113). நெடியோனாகிய வடிமபலமப நினற பாண்டியன, பொனனாற செயத தாரணிந்த மார்பினன (மது. 61). மகளிர் கூட்டம அணிநத கோதை, அவாதம கணவரது தாரோடு பொலிநதது (மது. 264,265). பொன்னாற்செயத தாரினையுடையவன் மாயோன (மது. 590,591). மாறன, கையாற் செயத தாரினை யும பெரும்பெயரினையும உடையவன் (மது. 771, 772). தலைவன், தன் அகனற மாாபில் பேரணி கலனகளோடு நறிய தார் பொலியுமாறு வந்தான (குறி. 120-122). நன்னன, கையாற செய்த தாரால் பொலிவுபெறற மார்பினன (மலை. 56). தலைவன பரத்தையோடு கூடித தன மார்பிலுள்ள பூநதார் அழகு கெடுமாறு புனலாடினான் (அகம. 6.7-11). வானவரம்பன பொனனாற செயத தாரினை யுடையவன (அகம. 45:15 17). ஊரனது, திண்ணிய தாரினைத தரித்துள்ள மார்பில பரத்தையரைப புணர்க்கப பாணன் அவாவுடன வநதான (அகம. 56:8-10). தலைவன, மலர் வரிசையாலாகிய தாரினைத தரித்த மாா்பினன (அகம. 66.7). தலைவி யரின் முலை பரந்த ஆகத்தில அமையாத விருப புடன தம் தாரினை இடையே குழையச செய்யாது பிரிந்த தலைவர் அததலைவியரின மாயநத அழகினை நினைந்து இரங்குவாரேயன றிப் பெயர்த் தும் அவ்வழகினை அவரால் தர இயலாது (அகம. 75:11-16) ஆட்டனத்தி, தேனொழுகும் தாரணிநத மாாபினன் (அகம. 76·7). தலைவன், அகனற தாரினையணிநத மாா்பினையுடையவன (அகம. 82: 14). கையாற புனைநத தாரணிநதவன் வேநதன (அகம. 84:17). செழியன, மலாந்த தாரினையுடைய வன (அகம். 116.12, 13). 'போரினை வென்ற செல் வத்தை நம் தமர் உரைககக கேட்குமபொழுது. குளிாசசி பொருந்திய நறிய தார் குழைநதிட நம்மோடு கூட்டம பெற்றவளைப் போல மகிழவள் அனறோ' எனறு வினைமுறறிய தலைவன தன் நெஞ்சிறகு உரைப்பானாயப பாகனிடம் உரைத தான (அகம். 144:9-11, 18, 19). தலைவன, தார் பொருந்திய மார்பினன் (அகம். 150:14). 'குதிரை யின தாளின அளவு தாழ்நத தாரிடத்து மணி ஒலிககத தேரை ஓடடுவாயாக' எனத் தலைவன பாகனிடம கூறுதல (அகம. 154.11-13). களிறு தாரணிநதது (அகம. 166:12). திருமாலின மாா பினிடததே பொருநதிய தாா போல, மேகம வான வில்லை விசுமபிடததே வளைதததது (அகம. 175 14-18). வினைமுடிதது மீளும தலைவன தேரிற்பொருந திய தாரிலுள்ள மணிகள் ஒலிததன (அகம. 184.18). தலைவன தாா இடைப்படடுக குழையப்பரத்தை யோடு வதுவை அயர்ந்தான (அகம. 206·8-12). ஆய எயினன இறக்க வேளிா மகளிர், பூககளாலாய அழகிய தாரினை அழிதது விட்டுச செயத அழுகை ஆரவாரததினை அகுதை நீககினான (அகம். 208.15-18). முசுனனை, ஏறறின கழுததில பொனனா லாகிய தாரினைப பூட்டி இரவலாககு அளிபபான் (அகம. 249 4-9) மயிலின சிறகால் தொடுதத தாரணிநதவர் மழவா (அகம. 249·12) மணியா லாகிய தாரினையணிநதது குதிரை (அகம. 254.19) 'வேலகளும் விளககமுறறன, ஏவலாளரும் புறப பட்டனா; தாரும கடடபபெற்றன, தழைகளும தொடுககபபட்டன' எனறு உடனபோககு நோ நத தோழி தலைவியிடம கூறினாள் (அகம. 259:1,2). 'எம சேரிககண வரும் ஊரனின தாரினையும் ஆடை யினையும பற்றிககொணடு அவன மாாபினைச சிறை செயயேனாயின் என தாய பாதுகாதது வளாதத என் அழகு கெடுவதாக' எனப பரததை தலைவியின பாஙகாயினாா கேட்ப வஞ்சின முரைததாள (அகம். 276 7 – 15) பரததை, தலைவனது தணணிய நறுமணம கமழும தாரினை அறுத்து அவனோடு ஊடல கொணடாள் (அகம். 306.13,14). முல்லை மலாகளாலாகிய பெரிய தாரின மணஙகமழும கூநதலையுடையவள் தலைவி (அகம். 314.19-21). தலைவன, கமழகினற தாரினை யுடைய மாாபினன (அகம. 332.13) செழியன, விரிநத மலாததாரினையுடையவன (அகம. 335: 9,10). தலைவன, அழகிய தாரினைத தரிதத தன மாாபில சநதனததோடு நுணபொடிகளையும அணிநதான (அகம 354:9,10). கடறறெயவம் அநதிககாலததில நெயதல்ன தணணிய அரிய பசிய தாா அசைந்திடக கரையிடததே நினறது

(அகம 370 10-12). வாளவன, வளாடுகள் ஒலிக்கும் நறிய தாரினை யுடையவன (அகம். 381:15). பனை மடலால் செயத குதிரைககு மணிகளணிந்த பெரிய தார் முறைமையோடு பூட்டபபெற்றது (குறு. 182: 1,2). குதிரையின கழுத்திலிடும் தாரிலுள்ள மணியைப போனற பூவினையுடையது அடும்பு (குறு. 243:1,2). 'எம் சேரிககண் வாராதொழிக; நினது தாரினையும் தாராதொழிக' எனப் பரத தையிற பிரிந்து வநத தலைவனிடம் தோழி கூறினாள். (குறு 258.1). தலைவன், ஒளளிய தார் அணிநத மாாபினன் (குறு. 362:6, 7). தலைவன், தலைவியிடம் தழையும் தாரும் தந்தான (நற். 80:5). மணிகள் பிணைத்த தாரணிநதது குதிரை (நற். 91:10,11). தலைவன சேரிக்கண வந்து தாரும் கணணியும் காட்டிப் பரத்தையின ஒருமைப்பாடு உடைய நெஞ்சத்தைக் கவாந்தான (நற். 150.7-9). நெடுவேள், வண்டுகள ஆரவாரிக்கும் பசிய தார் அணிநத மார்பினன (நற். 173:8,9) தாரணிந்தது புரவி (நற் 181:11). தேன மணங கமழும் விரிநத தாரினையுடையவன அழிசி (நற். 190.4). தலைவன, குளிர்நத தாரினையுடைய மாாபினன் (நற். 235:8). செழியன், நலல தாரினையுடையவன (நற. 298: 8,9). தனணியதாய் மணங்கமழும் நறிய தாரினை அணிந்த மார்பினை யுடையவன் தலைவன (நற். 364: 10). வேந்தர் கையாற் புனைந்த தாரினையணிநதனர் (நற். 349: 5,6) தலைவன், நலல தாரினை யுடைய மார்பினன (நற. 376:8). தலைவனின தண்ணிய தாரணிநத மார்பினைப புணையாகக கொண்டு பரத்தையர் நீராடினர் (ஐங். 33) 'தலைவன் மார்பிலுளள, மலாகின்ற கொத்துக் களாலான நறிய தாரில் தேனருநதிய வண்டுகள் என் கூந்தலில்மொயததன என்பதறகே நின் தலைமகள் (பரத்தை) வெகுண்டனள் என்று கூறுவர்' எனத் தலைவி, வாயில் வேண்டி வநத பாணனிடம உரைத்தாள் (ஐங். 82). நெய்தல் நறுமலரைச செருந்தியோடு கலநது கையாற் புனைநத நறிய தாரின் மணஙகமழும் மார்பினை யுடையவன தலைவன (ஐங். 182:1,2). 'பூவா லாகிய தாரினையுடைய மாாப' எனத் தலைவன விளிககப பெறறான (ஐங். 362:3; ஐங். இ 5:3) சிவ பெருமான, கொனறைபபூவாற செயத தாரானது தோளிலே அசைய அயன தலையைக் கையி லேநதிக காபாலக் கூத்தாடினார் (கலி. 1:11,12). கலபபைப படையினை யுடையவனது (நமபி மூததபிரானது) தார் (துழாய மாலை) போல, வெணகடமபின கிளைகளில மயிலகள் கூடி ஆர வாரித்தன (கலி. 36.1,2). புனலாடும் தலைவி கால் தளாநது நீரோடு செல்லத தலைவன சுரபுனனைப பூவாற் கட்டின நறிய குளிர்ந்த தார் அசையும்படி நீரிலே குதிதது அவளைக் காப்பாற்றினான் (கலி. 39:1-4). பூவினால் தொடுககப்பட்ட குளிர்நத தாரினையுடையவன் தென்னவன (கலி. 57'8). தலைவன, தன் தாரினைக் கொணடவளுடைய (பரத்தையினுடைய) தலைககோதையை மனந்தடு மாறிப் பூணடு தலைவியின் இல்லத்திறகு வந்தான் (கலி. 66:15,16). பூங்கொததுக்களைச் சூடி வையை யாறு ஊரைச சூழந்து வளைத்தது, நிலமடந்தை ஒரு பூந்தாரினைச சூடியது போல தோன்றியது (கலி. 67:1-4). பரத்தையா முலைகள் முயஙகுதலின செவ்வி குலைந்த தலைவனது தார், தலைவியை எள்ளி நகையாடியதாகப புனையப பெறும் (கலி. 68.14,15). பரத்தை, சதங்கை, சிறு மணிகள் கோதத தாருடனே ஒலியெழுந்து ஆரவாரிபபச் சென்று தன கண் வலையில் பிறரை அகப படுத்துவள் (கலி.74:13,14). தலைவன, பரததையரது தாரினைத் தனது மாலையாக நினைதது அணிநது வரத் தலைவி ஊடல் கொணடாள் (கலி. 88.18,19). 'நீலம், அல்லி, அனிச்சம், முல்லை, நறாம் ஆகிய மலர்களைக் கொணடு கட்டிய கணணியையும் தாரினையும் விரும்பிய பரத்தையர் ஊடிச் சினகக நலங்கெட்ட தலைவன் அழகு நேறறினும் இனறு மிக நன்றாயிருந்தது' என்று காமககிழத்தி ஊடிக் கூறினாள் (கலி. 91:1-5). பரத்தையரது முயககத் தால் குழைந்த தலைவனது தாரினைக் கண்ட காமககிழத்தி ஊடினாள் (கலி. 91:9-15). தலைவன், குளிர்நத தாரினையுடைய மார்பினன (கலி. 92: 40, 41). நலல தாரினையுடைய மார்பினன தலைவன் (கலி. 93: 34). தார் பொருநதிய தலைவனது மார்பினைப பரத்தை தழுவினாள் (கலி. 95:14,15). ஆயர்மகன், ஏறறினது கழுத் திலே பாய்ந்து அதறகு இட்ட தார் போல அதனைத் தழுவினான் (கலி. 103.34,35). ஒரு குழையவனுடைய (நம்பி மூதத பிரானுடைய) மார்பிலுள்ள ஒள்ளிய சிவநத தார் போல வெள்ளேறறின சிவநத மறு தோனறியது (கலி. 105:11,12). பொதுவன், பல மலர்களால விரவித தொடுககப்பட்ட தாரினையுடையவன் (கலி. 112: 2,3). தலைவனது மார்பில கமழ்கின்ற தாரினைத் தலைவியின இதழ் போலும் கணகள் வருதது வாடசசெயதன (கலி. 112:23,24). 'அலாந்த குளிர்நத தாரினையுடைய மார்பனே' எனத் தலைவன விளிககப பெறுவன் (கலி. 124: 21) தலைவி, நீரில வளர்நது அலர்நத பூவின நறுமணததைத் தலைவன மார்பிலுள்ள தாரின நறுமணமெனப் பிறழ உணர்ந்தாள் (கலி. 126:10,11). கடற்கரை மணலிடத்து ஞாழல் முதலிய மரங்களின பூககள

கிடப்பது, திருமாலின தோளைச சேர்ந்த தார் போனறு தோன்றியது (கலி. 127. 1-5). மாய வன், அலர்ந்த தண்ணிய தாரை அணிந்தமார் பினையுடையவன (கலி. 134:1). தலைவனது மாாபிடததே மாணிககம் விளங்கும் முத்துவடம தாரோடு அசைந்தது (கலி. 135.17,18). 'என தலை யிலும் மார்பிலும் கிடககின்ற இவை, ஆவிரம்பூக் கணணியும்; உழிஞையோடு பூளைப்பூவையும் மயிற பீலியையும் சேர்ததுக்கட்டிய பூநதாரும் ஆகும் என்பதை உணர்வீராக' என று மடலேறும் தலைவன சானறோரிடம் கூறினான (கலி. 140: 3-7). திருமாலேந்திய ஆழிப்படை அவுணர்களது தலைகள வலியழிநது சாய்ந்து தரித்த தாரோடு புரளும்படி அவரது உயிரைச செகுக்கும் (பரி. 2: 41-49). கட்டவிழ்நது மலாநத குளிர்நத தாரினை யுடையவர் அவுணர் (பரி. 3.55). 'கடம்பின மலரா லாகிய தாரினை அணிநதவா' செவ்வேள் (பரி. 5.81). சூடிக் கழித்த மலரும் மைநதரது தாரும மகளிரது கோதையும பிறவும் பரக்க வந்து கலதத லால வையைநீர் நலனழிந்து வேறாயிறறு (பரி. 6: 46-50). செவ்வேளின சநதனத்தின் புகை சூழநத தாரையுடைய மார்பினகண முததாரம் பொலியும் (பரி. 9:28,29). வானவன மகளுடைய (தேவசேனை யினுடைய) பாங்கியரும் வள்ளியின பாங்கியரும் மாறுபடடுத் தாரோடு தாரைச சிககுறச் செயது போரினை மேற் கொண்டனர் (பரி. 9:45-49). மலர்களால புனைநத மிக்க ஆடவர் தம மலை யொதத மார்பில் நறுநதண் தாரினையணிந்தனா (பரி 11:62,63). திருமால் அருவியின் நிறததோடு மாறுபாடு கொள்ளும் தாரினையுடையவர் (பரி.13: 3,4). 'வெடசி மலரை இடையிட்டுத தொடுத்த துளவமாகிய நறிய தாா பொருந்திய திருமார்பை உடையவர் திருமால் (பரி. 13:59,60) கொன்றை யின் மலர்க்கொததுககள் பொன்னாலாகிய தார் போல விளஙகும் (பரி. 14:10). தம்முன (நம்பி மூத்த பிரான) மார்பினகண அணியப்படட, அசை கின்ற; வெண கடம்பின மலரால் தொடுககப்படட தாா போல இருங்குன றததின அருவி இழியும் (பரி. 15:19-21). ஆடவா தாரணிநத மார்பினர் (பரி. 17:35). மைநதரும மகளிரும் தெரிநதெடுத்த மலா களாலாகிய தாரராய்ப பரங்குன்றை நோககிச சென றனா (பரி. 19:14) திருபபரங்குன றத்திறகும மதுரைக்கும் இடையில் யாததிரை செலகின்ற வழி, யாத்திரை செலவோரின மலர்மாலை யணிநத தலைகளால் நிறைநது பூககளை வைததுக்கட்டி நிலமகளுககுச் சூட்டப்பட்ட தார் போன று தோன றும (பரி. 19:15-18). வளவிய தார்களையுடையன குதிரைகள் (பரி. 19:32). வையைப புனலாட்டிற்குச செல்லும் விரைவினால் அணியும் முறை மயங்கி ஆடவர், மகளிரது கோதையைப புனைநதனர்; மகளிர், ஆடவரது தாரினைச சூடினர் (பரி. 20.20-22). மைந்தர், தாரினை அணிநது கொள்ளும வகையால் அழகுற அணிநதனர் (பரி. 20:28). செவ வேள அணிந்தது, வள்ளிபபூவினை இடையிடையே யிட்டுத தொடுத்த கடம்பின பூவினாலியனற தாராகும (பரி. 21.10,11). வையையில புனலாடச் செல்லும் மைநதரும் மகளிரும தாா பொருநதிய முடியினை யுடையவா ஊர்தியில விரைநதனர் (பரி. 22:21-25). மைநதர் தாரணிந்தனா (பரி. 22: 28). மதுரைமாந்தர், கையாற புனைநத தாரினராய் வையையில் நீராடச் சென றனா (பரி. தி.2:11). காதலனின மார்பில கமழ்கின்ற தாரினை வையைப புனல் இறபரததையின கூந்தலில் சேர்ததது (பரி.தி. 2.34,35). நீராடிய மகளிரும மைநதரும அணிந் திருநத சநதனம, மணங்கமழும தார் முதலியன வையை நீரில கலததலின நீரின் நிறம மாறியது (பரி.தி. 2:83-86).

2. தூசிப்படை. பாண்டியன பலயாகசாலை முது குடுமிப் பெருவழுதியின பகைவா, அவனது படைக கலஙகளையுடைய விரைநத தாரின - தூசிப படை யின - வலிமையைக கெடுகக வேண்டித தம ஆசையால விரும்பி வநது பின அவவாசை யொழிய வகையுணடாக உயிா வாழநதனர் (புறம. 15:14-16). சேரமான குடககோ நெடுஞ்சேரலாதனும சோழன வேற்பஃறடககைப பெருவிறறகிள்ளியும போர்ககளத்தில் பொருது வீழநது கிடநதாரைக கண்ட கழாததலையாா, 'வருகினற தாரினைத தடுத்துப் போரின்கண ஒருவரை ஒருவா வெல்வே மென று கூறுதல இனி எவவாறு' என று வினவினான (புறம. 62:1) 'பின படையினையும தாரினையும கொண்டு யாம அதியமானோடு பொருவோ மென று சொலலுதலை ஓமபுமின' என று ஔவையாா அதியமானின பகைவரிடம் கூறினார் (புறம். 88:1,2). அதியமானை எதிாதது வநத பகைவர், அவன தாரினைப பொறுததறகு மாட்டாராயச் சிதறி ஓடினா (புறம. 93:2,3). பலயானைச் செலகெழு குட்டுவனோடு போரேற்று நின்ற பகைவேந்தர் தாா அழிநது ஓடினா (பதி. 23:17). 'அரிய அரணகளை அழிககும தாரினால் பகைவரது அணிநிலையில பாயநது வெற்றி கொள்ளும இயல்பினையுடைய பெருநதானைக்குத தலைவன பல்யானைச செலசெழு குடடுவன (பதி. 24:4,5). களங்காயக கணணி நாாமுடிச சேரல், போாவேட்கை மிககெழுகினற கடிய தாரினால் பகைவர் நாட்டின எலலைமுடியச சென்று போர்

செய்தான் (பதி. 32:4,5). இருதிறந்து வாட்படைகளும் கலந்து போர் செய்யும் தார் நின்ற போர்க்களத்தில் வீழ்ந்த பிணங்களைப் பருந்து உண்டது (பதி. 36:6-9), வேலைச் செலுத்தி எழுகின்ற பகைவரது படையின் கையென்னும் உறுப்பைக் கவர்கின்ற விரைந்த தாரினை யுடையவர் வேந்தர் (பதி.49:6,7). களிறுகளாகிய கடலலைகள் அசைந்து வர, விற்படை பிசிர் போலப் பரவ, கேடகத்தின் விளிம்பின்மேல் வேற்படையாகிய மீன்கள் விளங்கப் போர்ப்பறையைக் கேட்டு வெருவிய வேந்தர்க்குக் காப்பாகிய அச்சந்தரும் தாராகிய வெள்ளம் என்று சேரனின் படை, ஒரு வெள்ளமாக உருவகிக்கப்படும் (பதி. 50:8-11). பகையரசர் தம்முடைய தார் அழிந்து அலறும்படி ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் போர் புரிந்தான் (பதி. 55:17). வில்லிலிருந்து மழை போலத் தாழ்ந்து வீழும் அம்புகளையுடைய தாரோடு பொலிவு பெற்றது மதில் (மலை. 226-229). மத்தி, தாரில் அகப்பட்டுக் கொண்ட எழினியின் பல்லைப்பறித்து வந்து வெண்மணி வாயிற் கதவில் பதித்தான் (அகம். 211:12-15). தார் மலிந்தவன் தித்தன் வெளியன் (அகம். 226:13). வையையில் நீராடவேண்டி மகளிரும் மைந்தரும் விளையாட்டுப் போரினை நிகழ்த்துவதற்கு ஏற்ற போர்க்களமாகிய துறையினைத் தேர்ந்து கொள்ளும் விருப்புடன் கூட்டங்கூட்டமாகிய தாரராய் (தூசிப்படையின் தன்மையுடையராய்) விரைந்தியங்கினர் (பரி. 6: 29-32). வையையில் புதுநீர் வந்ததென அறிந்து மதுரை மாந்தர், தாரினது தன்மையை மேற்கொண்டதொரு மகிழ்ச்சியை எய்தப் பெற்று (தாம் தாம் முந்திச் செல்லுதல்வேண்டும் என்னும் விருப்பால்) விரைந்தனர் (பரி. தி. 2:5-8).

3. **ஒழுங்கு**. தார் - ஒழுங்கு - உடைய மாளிகைக் கட்டணம் (கட்டு) (பதி. 64:7). தாருடைய மாற்றாரால் குலைத்தற்கரிய படை வகுப்பினை யுடையவர் மள்ளர் (பதி. 66:10).

4. **கோடு**. சிவந்த தார்-கோடு-பொருந்திய கழுத்தினையுடையது கிளி (அகம். 34:14; 242:6; 369:3,4; நற். 301:4,5). கரிய தார் பொருந்திய கழுத்தினை யுடையது குறும்பூழ்ச் சேவல் (அகம். 63:7). வானிலுள்ள எய்யப் பெறாத வில்லையொத்த பசிய தாரினை யுடையது சிறுகிளி (அகம். 192:3-5).

5. **பிடரிமயிர்**. தார் - பிடரிமயிர் - பொருந்திய கழுத்தினையுடையது சிங்கம் (பதி. 12:4).

6. **உபாயம்**. சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி, ஆமூர் மல்லனது வலிமையைக் கெடுத்து ஒரு கால் மண்டியிட்டு மார்பிலே மடித்து வைத்து ஒருகாலால் அவன் செய்கின்ற தாரை - உபாயத்தை - விலக்கி முதுகின்கண் வளைத்து மோதி அவனைக் கொன்றான் (புறம். 80).

7. **கிண்கிணி**. தார் - கிண்கிணி - உடையது புரவி (புறம். 299:5).

**தாரகை - விண்மீன்**. தென்னவன் தன் மனைவியரோடும் அமைச்சரோடும் பிறரோடும் கூடித் திருப்பரங்குன்றத்தை வலம் வந்தது, திங்கள் மண்டிலம் தன்னைச் சூழ்ந்து வரும் தாரகையோடு- விண்மீன்களோடு - மேரு மலையினைச் சுற்றி வருதலை யொக்கும் (பரி. 19:19-29).

**தாரம் - 1. அரிய பண்டம்**. 'கடலால் வரும் தாரத்தை - அரிய பண்டத்தை - உடைய நாட்டினன் சோழன் நலங்கிள்ளி (புறம். 30:14). மலையில் கிடைக்கும் தாரத்தையும் கடலில் கிடைக்கும் தாரத்தையும் கலந்து வருவோர்க்கு வழங்கும் தன்மையுடையவன் குட்டுவன் (புறம். 343: 7-9).(²) கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன், பகைவரிடமிருந்து பெற்றுக் கடல் வழியாகக் கொணரப்பெற்ற தாரத்தினைப் புலவரது பாட்டிற்கு எளிதாக ஈவான் (பதி. 48:5, 6), சேரன்பால் இரந்துவரும் இரவலர்க்கு எல்லையில்லாது கொடுக்கும் செழுமையான பல தாரம், கொள்ளக் கொள்ளக் குறையாமல் இடந்தோறும் மிகுந்தது (பதி. 88:26, 27). பாணர், பனை நுங்கோடு வேறு பல இனிய தாரங்களை வெறுப்பின் சேம்பின் இலையோடு கிழங்குகளையும் உண்பர் (பெரு. 360-362). இஞ்சியும் மஞ்சளும் மிளகுக் கொடியும் ஒழிந்த பலவாய் வேறுபட்ட தாரங்களும் கற்றரையிடத்தே குவிக்கப் பட்டன (மது.289,290). வளப்பம்பொருந்தின தாரங்களையுடையது மதுரை (மது. 697). கூத்தர், உச்சி மலையிலே ஏறிக் குறவன் கொணர்ந்த மலைத் தாரங்களைச் சோற்றுணவோடு மனைகள் தோறும் பெறுவர் (மலை. 170, 184). நன்னனது அரண்மனை வாயிலில் குவிக்கப்பட்ட பல்வேறு கையுறைப் பொருள்களுள் மாவினது பழமாகிய தாரமும் ஒன்றாகும் (மலை. 512, 513). சீறூர் மக்கள் கரடியேற்றின் ஒலியினை உணர்ந்து வில்லொடு அம்பு தெரிந்து இடந்தோறும் படர்தலின் அவ்வேற்றை தரையில் கிடக்கும் தாரங்களை உண்ணாது இருப்பையின் கிளைகளிலுள்ள பூக்களை உண்டது (அகம். 171:8-15). வேட்டம் போகிய கானவன், யானைக் கொம்பினால் அகழ்ந்தெடுத்த

மணியும் அதனோடு கூடிய பொன்னும் யானைக் கொம்பு ஒடிதலால உதிர்ந்த முத்தும் ஆகிய வேறான இம்மூன்று தாரங்களைச் சந்தன மரத்தைக் காவுமரமாகக் கொண்டு கொணர்ந்தான் (அகம். 282:1-9). சீறூரில் வாழ்வோர், மணல முற்றத்தின்கண்ணிருந்து அளவுபடாத தாரத்தை வருகின்ற விருந்தினர்க்குப் பகுத்துக் கொடுப்பர் (நற். 135:2-4)

2. தேவதாரம் (முதற்குறை). சைய மலையில் மழைபொழிய அதனால் வையை, மலைச்சாரலில் உதிர்ந்த மலர் தனமேல பரக்க நாகம் முதலிய மரங்கள் வருந்தத் தாரம் - தேவதாரம் - முதலிய மரங்களை ஏந்தி விரைந்தோடியது (பரி. 12:1-8).

**தாரவர் - மாலையினையுடையவர்** மலர்ந்த குளிர்ந்த தாரவரது - மாலையினையுடையவரது - தலையிற் சூடிய கண்ணியினை வையைப்புனல் பறித்துச் செல்லுதல் (பரி. 7:43-50).

**தாரன் - மாலையினையுடையவன்.** 'கார்காலத்துக் கொன்றைப் புதுமலராலாய தாரன்' சிவபெருமான் (அகம். க வா. 1,2). தலைவன், குவளைப் பூவினாலாகிய தேன் பாயும் தாரன் (அகம். 38:2-5). தாரனாகிய தலைவன் காவலாளர் அறிதலை ஓம்பித் தலைவியைக் காண வந்தான் (அகம். 102 11,12). தாரனாகிய தலைவன், தலைவியின் வணங்கல் மனையைப் பாராட்டிய சொல்லையுடையனாகி யாதொன்றும் மறுமொழி பெறாது மீண்டு சென்றனன் (அகம். 250:7-9). தலைவி தினைப்புனத்தைக் காவல் செய்யுமிடத்துத் தாரனாகிய தலைவன் வந்து அவள் சிறு புறத்தைத் தழுவினான் (நற். 128:7-9).

**தாலம்-உண்கலம்.** பெரிய தோளையுடைய மனையாள், சோற்றினைச் சமைத்து விருந்தினரை உண்பிக்கத் தாலத்தை - உண்கலத்தை - கழுவினாள் (புறம். 120.14,15).

**தாலாட்டல் - உறங்கச் செய்யப் பாடடுப் பாடுதல.** இரவுக் குறிக்கண் தலைவியைத் தலைப்பட்டுக் கூடிய தலைவன், எல்லைகடந்து இழியும் வெள்ளருவி தாலாட்ட - உறங்கச் செய்யும் பாட்டுப்பாட - தலைவியின் முலையிடையில் இன்றுயில் கொண்டான் (பரி. 6:53-55).

**தாலி - 1. ஐம்படைத்தாலி.** தலையாலங்கானத்துப் போருக்குச் செல்லும் நெடுஞ்செழியனின் இளமைச் செவ்வியினை வியக்கும் புலவர், 'மாப்பிலணியக் கூடிய மாலையை அணிந்து தாலியை - ஐம்படைத் தாலியை - கழித்ததும் இலன்' என்று பாடுவர் (புறம். 77.6,7). புதல்வன் பொன்னாலாகிய தாலியினையுடையவன் (அகம் 54:18).

2. **கழுத்தில் அணியும் ஒருவகை அணி.** சிறுவர் புலிப்பல்லினைக் கோத்துச் செய்யப்பட்ட தாலியினை அணிந்தனர் (புறம். 374.9; குறு. 161.3). பொன்னாலியன்ற புலிப்பல்லோடு கோக்கப் பெற்ற மணிகளையுடைய தாலியினை உடையவள் கானவன் மகள் (அகம். 7:17,18,22).

3. பலகறை (சோழி). பெருங்கடற்கரையிலுள்ள சிறுவெண்காக்கை, வரிகள் பொருந்திய வெள்ளிய தாலியை - பலகறையை - வலையென்று கருதி அஞ்சும் (ஐங். 166:1,2).

**தாவல் - வருத்தம்.** 'கடலில வருந்திய நினது காலகள் தாவலினின்றும் - வருத்தத்தினின்றும் - நீங்குமோ' என்று கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் வினவினர் (பதி. 41.17,26,27).

**தாழ் - 1. தாழ்ப்பாள.** கூதிர்க் காலத்தில மாளிகையிலுள்ள திண்ணிய நிலையினையுடைய தம்முள் பொருந்துதலையுடைய கதவுகள் தாழிட்டு - தாழ்ப்பாளிட்டு - கிடந்தன (நெடு. 62,63). தாழோடு சேருமாறு செய்த, இரண்டாய மாட்சிமைப்பட்டது கதவு (நெடு. 81 84) தாழினையுடையது மஞ்சிகை (தொம்பை) (பட. 163,164). தாழிட்டு அடைத்தாற் போலும் கடிய காவலையுடைய தாயின் முன்னே தலைவியின் கைவளைகள் தலைவனது பிரிவால கழன்று வீழ்ந்தன (கலி. 48.10 11).

2. **மோதிரம்.** தலைவி, தாழ - மோதிரம - செறிந்த மென்விரலை யுடையவள் (நற். 120'4).

**தாழ்கா -** இளமரக்கா (தாழ்ந்த சோலை). தாழ்காவினை - இளமரக்காவினை - யுடையதாய ஞாழலோடு ஏனைய மரங்களும் திரண்ட வளமையுடையது நாடு (பொரு. 196-198). வேள்வித் தீயின் புகையினை வெருவிய குயில்கள், தாழ்காவின்கண் புறாக்களுடனே தங்கின (பட். 53-58).

**தாழ்வரை - மலைச்சாரல்.** மழை பெய்தலின் அருவியாய வீழ்கின்ற வெள்ளம், ஓடுதற்குரிய வழிகள் பல பொருந்திய தாழ்வரையில - மலைச்சாரலில - பரவிப் பலதொழில்களும் பெருகும்படி விரைந்தது (பரி. 6:1-9).

**தாழி - 1. இறந்தவர்களை அடக்கஞ் செய்யும் பானை.**

'நெடுமாவளவன் தேவருலகத்தை அடைநதனன; பல புகழும பெறற அவனைக கவிக்கும இடமகனற தாழியை வனைய விருமபும் குயவனே, அவன புகழுக்கு ஏறபப பெரிய நிலவட்டத்தைத் திகிரி யாகவும மேரு மலையை மண ணாகவும் கொணடு பானையை வனைய நின்னால் இயலுமோ' எனறு கிள்ளிவளவன இறநதபோது ஐயூர் முடவனார் கையறறு வினவினார் (புறம. 228:10-15). இடு காட்டில கவிக்கபபட்ட செய்ய தாழியினது குவிநத புறததேயிருநது கழுகும் பொகுவல என னும் புள்ளும அஞசாவாயப் பேயினத்துடன் கூடி இயஙகும (புறம. 238:1-4). 'சகடத்திலுள்ள ஆரததைப பொருநதி வநத பல்லி போலச் சுரங்கள் பலவற்றையும் தலைவனோடே சேர்ந்து வநத எமக்கும் அருள் செயது யாமும அவனோடு கூடியிருக்குமபடி ஈமத் தாழியினை அகலியதாக வனைவாயாக' எனத தலைவனை இழந்தா ளொருத்தி குயவனை வேணடினாள் (புறம். 256). தாழிகளை யுடையது பெருங்காடு (புறம 364:13). பகையரசா பலரை வெனறு அகனற உலகததை இனிமையாக ஆண்டு இறந்த மன்னரைக் கவிதத தாழிகளை யுடையது இடுகாடு (பதி. 44.20-23). 'மாலைப பொழுதின நிலவொளியில உடன போககு மேவிய மகளை பினனே செனறு தேடும்படி என்னைக் கொள்ளாதொழிந்த கூற்றம் வலிமை யழிநது பெரிய தாழியிலிட்டுக கவிககும்படி இறந் தொழிவதாக' எனறு மகட்போககிய நற்றாய கூறினாள (நற். 271:10-12).

2. சாடி. குடிலின்கண்ணிருந்த தாழியிடத்தே - சாடியிடததே - தழைதத பருததியின இளஙகாய் களை ஆண் பறவை பேடைகட்கு ஊட்டும் (அகம். 129:6-9). மகட்போககிய தாய், மணலில் கிடந்த பாவையை எடுத்துத் தாழியிலுள்ள குவளையில் வாடல்மலரைச் சூடடி 'என் அருமகளே' என அழுதாள் (அகம். 165:7-13). உயர்நத நிலை யினையுடைய தாழியில், பனங்குடையால முகந்த நீரினை ஊறறி வயலைக கொடி வளர்க்கப்பெறறது (அகம். 275:1-3). 'கிளிகளும் தீமபாலை உண கினறில, தாழிகளும பல மலர்களைக கொண டில' என மகட்போககிய செவிலி வருநதியுரைததாள் (அகம. 369 4-6)

**தாழை - 1.** நெய்தல நிலத் தாவரம் கடற்கரைச் சோலை, கமழும தாழைகளை யுடையது (பதி. 55.5). அலையும நீரையுடைய வெணமணல் கரையில நினற தாழை, அனனம் போலப பூததது (சிறு. 146-150). குடில வேழககோலை வரிசசாக வைத்துத தாழையினது நாரால் கட்டித் தருபபைப் புலலால் வேயபபட்டது (பெரு. 263-265). குடமுழாப் போலும் காயையுடைய தாழை இளமரககாவிற்கு வேலியாக அமைநதது (மது. 114, 115). பரதவர், சுறவுக் கொம்பினை நட்டு அதனிடததே ஏற்றிய தெய்வம் காரணமாக விழுதை யுடைய தாழையின அடியிடததே நினற வெண் கூதாளததின மாலை யினை யுடையராய் மடலையுடைய தாழையின் மலரைச் சூடிக் கள்ளுண்டு ஆடினர் (பட். 86-93). வெள்ளிய பூங்கொத்துக்களையும் மடலினையும் உடையது தாழை (பட். 118). கழியிலுள்ள தாழை யின விழுதாலாகிய கயிற்றால் ஞாழல மரத்தின கிளையில் கட்டித் தொங்கவிடப்பட்ட ஊசலில் தலைவி ஆடினாள் (அகம. 20:5,6). மாலைப் பொழுதில் தாழைகள் தளர்நதிட அசைந்து கீழ் காற்று வீசும் (அகம. 40:6,7). கட்டவிழ்ந்த மடல்கள் நிறைந்த தாழைகளை யுடைய சோலைகள பொருந்தியது கடற்றுறை (அகம். 90:3). மணற கரையிடத்தே பேய் போலும தலையினையுடைய சருச்சரை வாயநத அரையினையுடைய தாழை யின் முள்ளாகிய பறகளை யுடைய புறவிதழ்கள் பலவும் காப்பப் போது விரிநது மலர்ந்து புலவு நாறறத்தைப போககும் (அகம். 130'4-8). பெருங் கழியில் மீனைத் துழாவிய பறவையினம் முள் உடைய நீண்ட இதழ் பொருந்திய தாழையில் தங்கும் (அகம். 180:10,11). தலைவன் ஏறிய தேர், மணல் மேட்டிடத்துள்ள தாழை மடல்கள் அரிபட ஏறியும் இறங்கியும் விரைநதது (அகம். 330:11-14). சுறாமீனகள் பாயந்து கிழித்த வலைகள், மனை முற்றங்களிலுள்ள தாழையின மீது கிடந்து காற்று வீசுநதோறும் அசையும (அகம். 340:21-23). தலைவி தாதாகிய பொடியை உதிர்த்த தாழையங் கூநதலள் (அகம. 353:19). தாழையின் வேர்ப்பக் கத்திலுள்ள வளையில வசிக்கும் பெண் நண்டிற்கு ஆண் நண்டு நாவற் கனியைத தரும் (அகம. 380:4-7). கானலம பெருநதுறையினிடததே வெண் நிறப் பூக்களையுடைய தாழைகளை அலைகள் மோதி அலைத்தன (குறு. 163:3,4). முள்ளமைந்த இலையினையும் பருத்த அடியினையுமுடைய தாழைகள் மிக்கது கடற்கரை (குறு. 219:5,6). அலைகளால் மோதப்பட்ட தாழையின வெண்பூ, குருகுபோல மலரும் (குறு. 226:5,6). விழுது தாழநத தாழையின் முதிர்நத கொழுவிய அரும்பு, குருகுகள் கோதுகினற சிறகைப போல மடலகள் விரிந்து மலர்நதது (குறு. 228:1,2). வாள் போனற வாயையுடைய கொழுவிய மடல் பொருந்திய தாழை, வேல்கள் நட்டு வைத்த வேலி போலப் பயன் தரும் (குறு. 245.3 4). கழியில மீனுண்ட

குருகினம் அடைகரையிலுள்ள தாழையினிடத்தே கூடிக் கடலொலியில் துஞ்சும் (குறு. 303:1-3). தாழைகள் நிறைந்தது உடப்பங்கழி (குறு. 345 5). இறாமீனின் புறம் போன்ற சருச்சரை பொருந்திய அடியை யுடையதும் சுறாமீனின் 'கொம்பு போன்ற முள் பொருந்திய இலையையுடையதுமாகிய தாழையினது களிற்று மருப்புப் போன்ற அரும்பு முதிர்ந்து பெண்மான் தலைசாய்த்து நிற்றல் போல வேறாகத் தோன்றி விழவுக்களம் முழுதும் கமழும் (நற். 19:1-5). புன்னை நறுமலர், முன்றிலிலுள்ள தாழையோடு கூடி மணங்கமழும் (நற். 49:8,9). வீழூன்றிய அடியை யுடைய தாழை மலர் கமழ்வது கடற்கரை (நற். 78:4). வளைந்த அடிமரத்தையுடைய தாழையினுடைய, சுறாமீன்கொம்பு போன்ற முள்ளை யுடைய இலை முறிந்து சாயும்படி நாரைகள் வீற்றிருந்தன (நற். 131.4-6). வளைந்த அடியை யுடைய தாழையினது இலையின் உள் மடலிலே தோன்றிய அரும்பு முதிர்ந்ததும் சங்கினை நீட்டி வைத்தாற் போன்றிருப்பதுமாகிய தாழை வெண்பூ, அலை மோதுதலால் தாதினை உதிர்த்து மணந்து சிறுகுடிப்பாக்கத்துத் தெருவிலெழும் புலவுநாற்றத்தைப் போக்கும் (நற். 203:2-7). குருகின் குத்துக்குத் தப்பிய இறாமீன், மணற்கரையில் நின்று கடற்புறத்தில் தலைசாய்த்திருக்கும் இலைகள் பொதிந்த தாழையின் வெண்பூவினைக் குருகென அஞ்சும் (நற். 211:4-8). அலைவந்து மோதியதும் சருச்சரை பொருந்திய அடியையுடையதும் முட்கள் பொருந்திய இலைகள் மிக்கதுமான தாழையின் கண்ணுள்ள பூ, புன்னை மலரோடு சேர்ந்து மணங்கமழும் (நற். 235.1-3) பெரிய தூற்றினையுடைய தாழைப் புதலினாலே வீடுகட்டப்பட்டது (நற். 270:1). யானையின் உடைந்த கொம்பினைப் போன்ற பிணிப்பு அவிழ்ந்த தாழைப்புதரில் மேற்காற்று மோதுதலின் மலர்த்தாதுகள் உதிர்ந்து பரவும் (நற். 299:1-4) கடற்கரைச் சோலையிலுள்ள, முள் மிக்க இலைகளையுடைய தாழையின் கூம்பிய அரும்பு மலர்ந்தது (நற். 335:4,5). வாடைக்காற்று அசைக்கையினாலே வளைந்த தாழையின் கொம்பிலே இருந்து, நாரை மாறாமற் கூவியது (கலி. 128:2-5). தேன் துளிக்கும் மலரையுடைய தாழையின் விழுதால் திரித்து இட்ட ஊசலில் தலைவி ஆடினாள் (கலி. 131:10,11). கரகம் போலப் பழம் தொங்கும் தாழை மரத்தில் பூ மலர்ந்தவை போலக் குருகினம் (அத்தாழை) மேலே தங்கும் (கலி. 133.4,5). முடத்தையுடைய தாழையின் முடுக்குக்களுளே தலைவன் தலைவிக்கு அளிசெய்தான் (கலி. 136 9). கானல் நீண்ட இலையினையுடைய தாழைகள் நிறைந்தது (கலி 144:27).

2. தெங்கு. குலைதாழ்ந்த பறிக்கின்ற பக்குவத்தினை யுடைய தாழைகள் - தெங்குகள் - நிறையப் பெற்றது தொண்டி (புறம். 17.9,13) மகளிர், பனை நுங்கின் நீரையும் கரும்பின் தீஞ்சாற்றையும் உயர்ந்த மனலிடத்துத் திரண்ட தாழையின் இனிய இளநீருடன் கலந்து உண்ணுவர் (புறம். 24·12-16). தாழையின் இளநீரை யுடைய சீரிய குலை உதிரு மாறு தாக்கி அருவி இழிந்தது (முரு. 307,308,316). தாழ்ந்த தெங்கினையுடையது குளிர்ந்த மரச்சோலை (பொரு 181). பாணர், விழுதிலலாத தாழையின் இளைதாய இனியநீர் முதலியவற்றை வெறுப்பின் வள்ளி முதலிய கிழங்குகளை உணபர் (பெரு. 357-362). தலைவியும் தோழியும் பறித்துக் குவித்த மலர்களுள் தாழையின் பாளையும் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது (குறி. 80).

**தாள் - 1. பாதம்.** மறவரின் தாள், – பாதம் - புடை பெயர்ந்து போர் செய்து களத்தைத் தமதாக்கிக் கொள்ளுதலால் அதில் அணியப்பட்ட வீரக்கழல் அருப்புத்தொழில் சிதைந்து கொலலேற்றின் கொம்பையொத்துத் தோன்றியது (புறம். 4 3,4). களிற்றைச் செலுத்திய தாளை யுடையவன் கரிகாற் வளத்தான் (புறம் 7.1). சேரமான் செல்வக் கடுங்கோ பெருவாழியாதனின் தாளைப் பொருந்திய பெருங் கைகள் போரத் தொழில் பலவும் செய்தலின் வலிமை யுடையனவாய்த் தோன்றின (புறம். 14 1,). 'பாணர்க்கு நீங்காத செலவத்தைக் கொடுத்தோனாகிய எம் வேந்தன் கிள்ளிவளவன் வாழ்வானாக என்று சொல்லி அவனது பெருமை பொருந்திய வலிய தாளைப் பாடிற்றிலேனாயின் கதிரவன் தோன்றுதலறியான்' என்று கிள்ளி வளவனை ஆலத்தூர் கிழார் கூறுவர் (புறம். 34.14-18). 'சேரன் அழிய அவனது கருவூரை அழிக்கும் நினது பெருமை பொருந்திய வலிமையுடைய தாளைப் பாடுங்காலத்து யான் என்னெனப் புகழ்ந்துபாடுவேன்' எனக் கிள்ளிவளவன் மறத்தினை மாறோக்கத்து நப்பசலையார் வியந்து கூறுவர் (புறம். 39:13-18). தாள் அளவு தாழ்ந்த தடக்கையினை யுடையவன் வழுதி (புறம். 59·2). 'கிள்ளிவளவன் தாள் வாழ்க' என்று கோஊர் கிழார் வாழ்த்துவர் (புறம். 70:19). பரந்த அடியினையும் பெரிய தாளினையும் உடையது யானை (புறம். 72:3,4). பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வலிமை பொருந்திய, போரின்கண் நிலை தளராத பொறையினை யுடைய தாளினை யுடையவன் (புறம். 78.1). கணையமரத்தை யொக்கும் தாளளவு தோய்ந்த தடக்கையினை யுடையவர் மறவர் (புறம் 90·

10,11)- 'அதியமான் தாள் வாழவதாக' என்று ஔவையாா வாழததுவர் (புறம 101.10;103:12). இளம்புதல்வா, ஆடக கலங்குகின்ற தாள் அள வான அளவிறபட்ட நீருள்ளே முதலை, யானை யைக கொன்று வீழததும் (புறம. 104:2,3)· தாளளவு தாழந்த ஒலிக்கும மணியினையுடையது யானை (புறம். 165.6,7). 'ஈவோர் அரிதாகிய இவ்வுல கத்தினகண உயிர்வாழவோர் வாழும்படி அவன் தாள் வாழலதாக' எனப பிட்டஙகொற்றனைக் காவிரிபபூம்பட்டினத்துக் காரிக கண்ணனார் வாழத்துவர் (புறம. 171.14,15). குறுகிய தாளை யுடையது உடும்பு (புறம 326:9). குறுமுயல் குறுகிய தாளையுடையது (புறம். 334:2). பருத்த தாளையுடையது யானை (புறம். 351:1). தலைவ னொருவன தன தாளைப் பாடுவோர்கருத தோகள பலவற்றை உவந்தளிததான (புறம. 361:9,10). பறை போன்ற நெடிய தாள்களையுடையது யானை (புறம. 371:20,21). குறுகிய தாள்களையுடையது பனறியேறறை (புறம. 379:8). சோழன நலங்கிள்ளி, நெருங்கிப் பெருகிய மறம் பொருந்திய வலிமைமிகக தாளையுடையவன் (புறம. 382:2-4). 'அவன தாள் வாழிய என அவனையே பாடுவோம' எனக கோவூர் கிழார், சோழன் நலஙகிள்ளியை வாழத்து வர் (புறம. 382:7). 'யாம வேணடுவனவறறை உணாநதோனது தாள் வாழலவதாக' எனக கிள்ளி வளவனைக் கோவூர் கிழார் வாழததுவர் (புறம். 386.25). செலவக் கடுங்கோ வாழியாதன வலிமை மிகக தாளினையுடையவன (புறம 387:29,30). 'வளவன வாழ்வானாக என்று நினது பெருமை பொருநதிய வலிமையுடைய தாளைப பல படியும் பாடுவோம்' எனக் கிணைபபொருநன் கூற்றாகக கிள்ளிவளவனை நல்லிறையனார் பாடுவா (புறம. 393. 24,25). 'வாழக அவன் தாள்' எனச் சோழ நாடடுப பிடவூா கிழான் மகன பெருஞ்சாத்தனை நககீரர் வாழததுவா (புறம. 395:40). 'கிளளி வளவ னுடைய திருந்திய கழலணிநத வலிய தாள்களின தனை நிழலினகண உள்ளேம் ஆதலால் ஊழிக் காலம வரினும் ஞாயிறு தெனறிசையில் தோன்றி னும யாம் அஞ்சுவேமல்லேம்' எனக கிள்ளிவளவன புகழ பாடுவர் எருககாட்டூர்த்தாயஙகணண னாா (புறம. 397.22-27). பெரிய தாளினையுடையது நாரை (பதி. 29:4,33.12; 51:4; அகம. 49:14; குறு. 349.2; நற 91.4; 178.2). சேர மறவர், கழலணிநத வலிமை மிகக தாள்களை யுடையவர் (பதி. 31: 31-33). துடியையொதத வலிய தாளை யுடையது யானை (பதி. 33·2,3). 'கடலில வருநதிய நினது தாள்கள் வருததத்தினின்றும் நீங்குமோ' என்று வினவு முகததான கடல பிறக கோட்டிய செங் குட்டுவனின வீரசசிறப்பைப பரணர் பாராட்டுவர் (பதி. 41:17.26,27). போாக்களத்தின்கண களிற்று யானையைச செலுத்திய தாளையுடையவன செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதி. 70:1). தன்னைச் சேர்ந்தவாகள் தீவினையைப் போககி அவரைத் தாககிய, அறியாமையை உடைத்தறகுக் காரணமாகிய வலிய தாளினை யுடையவா செவ் வேள் (முரு. 4). வலிமை நிலைபெறற பெருமை பொருந்திய தாளையுடையது கொழுங்கிடாய (முரு. 232). மயிர் ஒழுங்குபட்ட ஏனையிலககணங்கள் வாயக்கபபெற்ற தாளுக்குப் பொருநதிய, நாயின் நாப் போன்ற அடியை யுடையவள் பாடினி (பொரு. 41,42). கவைத்த தாளினையுடையது நணடு (சிறு. 195; பெரு. 208). பெருமை பொருநதிய தாளை யுடையது யானை (சிறு. 199,200). குதிரையின் செலவினைப் பினனே நிறுத்தும வலிமை பொருந் திய தாளினையுடையது நாரையெருது (சிறு. 259, 260). வம்பலர், நடநது வலிமையுடையவாகிய தாளில அடியை மறைககினற செருப்பை அணிந திருத்தல் (பெரு. 68,69). யானையின தாளை யொத தது திரிமரம் (தானியம் அரைக்கும் திரிகை) (பெரு. 187). குறிய தாளையுடையது பன்றியேற்றை (பெரு 344) பெருமை பொருந்திய தாள்களை யுடையது சினக்களிறு (மது. 178,179). முரசென்று மருளும வலிய தாள்களையுடையது யானை (நெடு. 115,117)· பெருமை பொருநதிய தாளினை யுடையது பிடி யானை (நெடு. 178). முதலை, வளைநத தாளை யுடையது (குறி. · 257; மலை. 90, அகம. 80:1). வளைநத தாளினையுடையது நாயேற்றை (பட். 140). முடியை யுடைய கருநதலைகளை உருட்டும் முன தாளின் உகிருடைய அடிகளை யுடையது யானை (பட். 230,231). வளைநத தாளையுடையது வருடை (மலை. 502,503). உடும்பின் ஏற்றை வளைநத தாளையுடையது (மலை. 508). கடுங்கண் யானை தன வளைநத தாளால் உதைத்தலின் புழுதி எழுநதது (அகம். 63:4,5). வளைநத தாளினை யுடையது யாமை (அகம். 117:16) கழியிலுள்ள சுறாமீன் எறிதலின் புணணுறற தாளினை யுடை யது கோலேறு கழுதை (அகம. 120:10). வெள்ளெலி புலலிய தாளினை யுடையது (அகம. 133:2). 'குதிரை யின தாவிச் செலலும இணையொதத தாள்கள் மெல்லென நடக்கும்படி தாற்றுக் கோலால குத்து தலைத தவிர்த்துச் செலுத்துவாயாக' எனத் தலைவன் பாகனிடம் கூறினான (அகம். 134:7-9). 'குதிரையின் தாளளவு தாழ்ந்த மாலையிடத்து மணி யொலிக்கத் தேரை ஓட்டுவாயாக' என்று தலைவன் பாகனிடம உரைத்தான (அகம. 154:12,13). தளர் விலலாத வலிய தாளினை யுடையது எருது (அகம்.

191:6,7). பறையினை யொத்த வட்டமாகிய பரநத அடியினையுடைய வலிய தாளினை யுடையது களிறு (அகம். 211:3,4). பாண்டியன், தாளளவு தோய்ந்த தடககையினன் (அகம். 312:11,12). நெடிய தாளினை யுடையது யானை (அகம். 359:10). பருத்த தாளினை யுடையது யானை (அகம். 373 3). இடைச் சுரத்தில் தலைவன் அருஞ்சுரம் நீநதிய வருத்தத்தோடு கையற்று மாலைக காலம் தனிமை தரத் திண்ணிய மனம தலைவியிடம் செல்லுதலை வற்புறுத்தத் தாள்களைக் கையால் கட்டிய இருப்புடன் தன நிலை எண்ணி வருநதினான் (அகம. 373:5-9). விரைதலையுடைய வளைநத தாளை யுடையது நணடு (குறு. 351:1,2). யானை தன பருத்த தாளால் உதைததலின பாழ் நிலததில புழுதி எழுநதது (நற 41.1,2). பெரிய நிலம குழியும்படி நடநது விரைந்து நேராக ஓடுகினற (ஆதி எனனும் செலவினையுடைய) களைபபில லாத வலிய தாள்களை யுடையது குதிரை (நற். 81:1-3). தேரிற் பூட்டபபெறற குதிரையினுடைய விளங்கிய தாள்கள் பநது போல் தாவிச செலவும (நற். 249:7), பெரிய தாளையுடையது எருமை (நற. 260:1). ஆண புலியோடு போர் செயத யானையின புணணையுடைய தாள் போல, பிடி யானை உதைத்து மேற்பட்டை பெயர்க்கபபட்ட ஓமையின சிவநத அடிமரம் தோனறும (நற் 279. 5-7). பெரிய தாளை யுடையது எருமை (ஐங 97: 2). தலைவன், வேலைபபாடுகள் நிறைநத கழல பொருந்திய தாளை யுடையவன (ஐங. 389:1,2). யானை, பெருமை பொருநதிய தாள்களை யுடையது (கலி. 5:1,2). 'வீடளிககுங்கால் நினைனினும் சிறநத நின தாளிணையை யுடையை' எனறு திருமால போறறப பெறுவர் (பரி. 4.62). 'முருகன தாளினை யாவரும் தொழும திருபபரங்குன்றததே சென்று மலர் தூவுவோம்' எனறு தலைவன் கூறினான் (பரி. 8:80-82). அரிவையர் தாமரை போலும் தாளினா (பரி. 8.114). திருமாலின தாள், தோள், பிடரி முதலியன பெரியன (பரி. 13: 53). செவவேள், தாமரை போன்ற தாளில் அடையற செருபபு அணிநதுள்ளாா (பரி. 21.3-7) 'தாணிழல்' காணக.

2. முயறசி. 'கடல் சூழந்த உலகததைத் தமது தாளால - முயறசியால - கைககொணடு தம் புகழை உலகின்கணணே நிறுததியாணட வலியோரது வழித்தோனறல்' பாணடியன நெடுஞசெழியன (புறம. 18:1-4). நெல் முதலியவறறை விதைத்து மழையைப பாாததிருககும புன்னிலம அகனற இடததையுடையதாயினும அது பொருந்தியாளும் அரசனது தாளுக்குப பயன்படாது (புறம. 18:24-26). வாட்போராலே வாழவோர், தலையாலங்கானத்துச செருவென்ற நெடுஞ்செழியனின தாள் வலிமையை வாழத்துவர் (புறம். 24.29). அரசுரிமையை, வலிமைமிகக தாளையுடைய சீரியோன் பெறுவானாயின அது சிறபபுடைதது (புறம. 75.2-9). 'மரநதோறும கட்டப்பட்ட யானையை உடையீராயினும இடநதோறும பரபபப்பட்ட தேரை உடையீராயினும் நும தாளால பறம்புமலை கொள்ளற்கரிது' எனறு கபிலா பாரியின் பகைவரிடம் கூறினார் (புறம. 109: 11-13) இரவலர், கண்டீரக்கோப் பெருநள்ளியின் தளாசசியிலலாத வலிய தாளினாலாய செலவததை வாழத்திப பரிசில பெறறனா (புறம. 148: 1-3). 'பொறுத்தறகரிய துன்பமுறும என மனையோள் நினது தாளால் உணடாகிய செல்வததைக் காணுந்தோறும் வியக்குமாறு களிற்றின மீதேறித தலைமை தோன்றப் போதலை விருமபினேன' எனக குமணனிடம் பெருஞ்சித்திரனார் உரைததா (புறம். 161:14-20). தமககெனறு முயலாத வலிய தாளினை யுடைய பிறாபொருட்டு முயலுவோர் இருத்தலான இவ்வுலகம நிலைததுளளது (புறம் 182). கடிய நெடு வேடடுவன, பகைவரின தாளுடைய கிளாநத உள்ளததைக கெடுததனன (புறம. 205:4,5). 'வலிய தாளுடைய, வெண கொற்றக் குடையால உலகததை நிழல் செயது புகழால விளககும வெறறியுடைய வேநதன கோபபெருஞசோழன (புறம். 213:1,2). சீாமை பொருநதிய வலிய தாளுடையவன அகுதை (புறம. 233 3). பகைவருககு வருததததைச செயயும வலிய தாளினை யுடையவன இமையவரமப னெடுஞ் சேரலாதன (பதி. ப. 2:12,13) 'பகைவரது மாறுபாட்டைக கெடுதத நினது வலிய தாளை வாழத்திக காணபேனாகி வநதேன' எனச் செலவக் கடுஙகோ வாழியாதனிடம கபிலர் கூறினாா (பதி. 64:13-15). வலிமை பொருநதிய தாளை யுடையவர் மூவேநதர் (பெரு 53,54). வெணணி எனற ஊரிடததே பொருத அச்சநதோனறுகினற வலிமையுடைய தாளை யுடையவன கரிகாற சோழன் (பொரு. 147,148). அறிவை யுடைததாகிய வலிமை பொருநதிய தாளையுடையவன நலலியககோடன் (சிறு. 115). வாட்போரிலே வருநதி வென்றதறகுக காரணமான மனனரது தாளினை வாழததி விடியற காலத்தே வநத சூதா, தேரோடு குதிரைகளைப பரிசிலாகப பெறறனா (மது. 222-224). தலையாலஙகானததுச செருவென்ற நெடுஞ் செழியனின வாள் வெற்றியைப பொருநதிய தாளின் வெறறியை மறவர் வாழத்தினா (மது.

726,727) அரசுகளைச் சினந்தழிக்கும் செருக்கினை யுடைய வலிய தாளினையுடையது பெரிய தானை (பட். 277,278). தொடங்கிய வினையைக் கைவிடாத தளர்ச்சி யிலலாத வலிமையுடைய தாளினையுடையது புலி (அகம. 29:1,3). தலைவன், தாளினை வெற்றி யுறுவிக்கச் சேணிலததே வினை வயிற பிரிந்தான் (அகம். 61 3). தலைவனுடைய தாளின வலிமையினை இளையர் வாழத்தினர் (அகம். 74 2). பாரி, வாட்போரினைக் கலக்கித் தாளால வென்று வேந்தரைப பிறக்கிடச் செய்தான் (அகம. 78.20-22). தாள் வலி மிககது வீரததன்மை யுடைய இருப்பிடம் (நற. 346.6). கணவனிலலாத தாபதமகளிர் தம தாளினால் நூறகினற பஞ்சு போல மேகம் மலை முடியில் தவழும் (நற். 353: 1-3). கொடுஞ்சுறாவை வலையிட்டுப பிடிககின்ற கடிய தாளுடைய தநதை, கடல் வேட்டைக்கு உடன கொணடு செலலாமையின் சிறுவர் அழுதனர் (நற. 391:1-3). தலைவன, தன் தாள்களால் வெற்றியுண்டாகும்படி குதிரையேறி வாளால் வென்று வருவான (கலி. 31:13,14). (அசுவத்தாமன), தன் தாளால தன் தநதையைக் கொன றானை (சிகணடியை) வென்று தன தோளால் தலையைத திருகினான (கலி. 101:30-32). ஏறுதழுவு தல எக்காலமும் மனததைச் செலுத்துதலின அம் மனம் பிணித்த தாளாலே எழுந்து பொதுவன் ஏறுதழுவினான் (கலி. 104:45,46).

3. அடிப்பகுதி (மரத்தினடி). பாரவைமான கட்டி நின்ற, தேயந்த தாளினை - அடிப்பகுதியினை - உடையது விளாமரம் (பெரு. 95,96). நெடிய தாளினையுடையது ஆசினிப்பலா (மலை. 139). யாமரம நீண்ட தாளினை யுடையது (அகம. 51:2; 193:7). கரிய தாளினை யுடையது இகணை மரம் (அகம. 131:1). புன்னை, வளைந்த தாளினை யுடையது (அகம. 180:13). நெடிய தாளினையுடையது வேங்கை மரம் (அகம. 360 6; குறு. 134:3; நற். 157:8). ஓமைமரம பொரிந்த தாளையுடையது (குறு. 79:2). ஒன்றோடொன்று பொருத களிறுகளால் மிதிக்கப் பட்ட நெரிந்த தாளையுடையது வேங்கை மரம் (குறு. 208:2). ஓமை, புலலிய தாளையுடையது (குறு. 260:8). பெரிய தாளையுடையது புன்னை (நற. 87:6). கடலலை மோதி வளைந்த தாளை யுடையது கணடல் மரம (நற். 123:9). வளைந்த தாளையுடையது தாழை (நற். 131:4;203.2;270:1). பெருங்களிறு உதைதத வளைந்த தாளையுடைய ஓமைமரம், அருஞ்சுரம் செல்வார்ககுத் தங்கும் நிழலாகும் (நற. 137:7,8). கரிய தாளை யுடையது புன்னை (நற. 231:7). பருத்த தாளை யுடையது ஓமை (நற. 318:2). வேங்கை கரிய தாளையுடையது (நற. 351:5,6). முழவு போலும் தாளினை யுடையது வேங்கை (கலி. 44:4).

4. தணடு. பெரிய தாளினை - தண்டினை - உடையது நெல் (புறம. 97:17,18). கரிய தாள நீண்டு சூல விரிந்து காயத்துச் சீரியதாக வரகு விளைநதது (புறம, 120:7-9). முள்ளுடைத்தாகிய தாளினை யுடையது தாமரை (முரு. 73; குறி 80). குறிய தாளை யுடையது வரகு (பெரு. 193). வினைஞர், செந்நெலலினுடைய உள்ளே பொய்யை யுடையதாகிய திரண்ட தாளை அறுததனர் (பெரு. 230,231). பெரிய தாளினை யுடையது கமுகு (பெரு. 363,364). தாமரை, நீர் மீது உயர்ந்த நெடிய தாளுடைய இலைகளையுடையது (அகம. 186:4-6). செநதினை பசிய தாளினையுடையது (அகம. 242:5; நற். 104:6). பழங்கொலலையாகிய மேட்டுநிலம் வரகினது அழகிய பசிய தாள்களை (தட்டைகளை) உடையது (அகம். 359:13,14). தினையினது தாளைப் போன்ற சிறிய பசிய கால்களையுடையது குருகு (குறு. 25: 3,5). குறிய தாளையுடையது கூதளஞ் செடி (குறு. 60:1). பசிய தாள்களையுடையது செநதினை குறு. 198.2; நற. 376:2).

5. காம்பு. பசிய தாளையுடையது குவளை மலர் (முரு. 22). குவளை மலர் கரிய தாளை யுடையது (அகம. 62:4). பெரிய தாளினையுடையது ஆம்பல் மலர் (அகம். 78:18). குவளையின் குறிய தாளை யுடையதும் அலர்ந்த செவ்வியை யுடையதுமாகிய மலர் மணக்கும் கூந்தலையுடையவள் தலைவி (குறு 270.5-7). அழகினையும் வலிய தாளினையும் உடையது நெயதற் பூ (நற். 8.7,8).

6. தாளமீன். (விண்மீன்). 'வானகத்தே எரி மீனகள் தோனறினும் குளமீனோடு தாள் - தாள் மீன் - புகைந்து தோனறினும் பெருவயலிடதது விளைந்த நெறசோறறோடு பொரிக்கறியும் சூட்டிறைசசியும் மாந்துவோம்' எனச் சோழ நாட்டுப் பிடவூர் கிழான் பெருஞ்சாத்தனைப பாடும் நக்கீரர், கிணைப் பொருநன் கூறறாக அவன் நாட்டு வளததைக் கூறுவர் (புறம். 395:34-37).

7. அடியிடம். பரதவர், தாழையின் தாளில - அடியிடத்தில - நின்ற வெணடாளியின் பூவாற் செய்த மாலையினை அணிந்தனர் (பட். 84,85). கரிய தாளினையுடையது கந்து (தெய்வமுறையும தறி) (அகம. 287:4). வலிய தாளினை யுடையது கந்து (அகம். 307:12).

8. **கைவிரலணி.** மகளிர் கையிலிட்ட தாள் - கைவிரலணி (தாட்கூட்டாகிய நீலககடைச் செறி)- போலத தும்பி, காந்தண முகைமேல் அமர்ந்து அலருங்காலத்தைப் பாாகும (*கலி. 43:8,9*).

9. **கடையாணி.** தாள் - கடையாணி - இட்ட காம் பினையும கூரிய முனையினையும் உடையது நெடுவேல் (*அகம. 35:3,4*).

10. **பந்தற்கால்.** கன்று கட்டின சிறுதாள் - பந்தற் கால் - உடையது பநதர் (*பெரு.297*).

11. **படி.** குறிய தாளினை - படியினை - உடையது ஞாயில் (*பதி.71:12*).

**தாளம் - இசையில் காலத்தை அறுதியிடும் அளவு.** குற வரது குறுமாக்கள, பாறையிடத்துள்ள மூஙகிலின மேல விசைததெழுநதேறி தாளம் கொட்டுவர் (*நற். 95:5,6*). பரங்குன்றில், பாடுவாரது பாடடிற குரிய சீரும் ஆடுவாரது கூத்திற்குரிய தாளமும மலையில உணடாகும் எதிரொலியும் கலததலால பெருமுழககம் உண்டாயிற்று (*பரி. 8:109-112*). கற புடைய மகளிர், பரத்தையர், தோழியர், முதலிய மகளிர் வையை யாற்றுககு நடந்து சென்ற தன்மை வித்தகர் ஆககிய தாள விதிகளால கூட்டப்பட்ட வாத்தியங்களின் மெளனடையை யொககும (*பரி. 10:23-25*). விளரிப் பாலையில் தோனறும யாம யாழினைத் தாளததோடு பொருநதப்பாடி மேற கொணட அததாளத்திற்கும பணணினது சீரககும ஏறபத் தும்பிகள் சிறகுகளை விரிதது ஆடின (*பரி.11:128-130*).[2]

**தாளம்போந்தை - தாளிப்பனை.** மக்களியங்காத நெறி யின்கண் உள்ளதும் ஈந்தினது முற்றிய குலை போனற குலையினையுடையதுமாகிய தாளம போநதையின - தாளிபபனையின் - நெடிய மடலி லிருந்து ஆணபறவை பெணபறவையைக கூவி யழைத்தல (*நற். 174:1-3*).

**தாளாண்மை - முயற்சி.** 'ஏறுகொள்ளவல்லார் எனனை யொப்பார் பிறரில்லை யெனறு நம் பசுததிரளிலே நினறு தனது தாளாணமையை - முயறசியை - கூறும தலைவன, பினனொரு நாளிலேயாயினும் ஏறுதழுவி நமக்குக் கேளாளன ஆவான' எனத தோழி தலைவியிடம் கூறினாள் (*கலி. 101.43-45*).

**தாளி - செடிவகை.** 'திலலநதளிர் போனற புறகென்ற சடையோடு கூடிநினறு செறிநத இலையையுடைய தாளியை - செடியை - பறிபபோன - முனபொரு காலததில் தன் மனைவியாகிய மயிலைச சொலலா கிய வலையில அகபபடுததிக் கொள்ளும் வேட்டு வனாயிருநதனன' என்று தாபதன ஒருவனைப பற்றிப புலவர் கூறுவா (*புறம. 252*). தாளியின அடியில் படர்நதிருககும முன்னைக் கொடியை (முஞ்ஞைக் கொடியை) குறுமுயல் வநது கறித்தது (*புறம. 328:14,15*). தாளியின குளிாந்த கொடிகளை விடியற் காலத்தில பசுககள் மேயநதன (*குறு.104:3*).

**தாளித நொய்ந்நூல் - 'தாளித நொயந்நூற் சரணத்தர்'** என்ற பரிபாடலடிக்குப பொருள் விளககமுற வில்லை. இவ்வடிககுத தாளிதம எனனும பெயரை யுடையதும நுணணிய நூலானாயதும் காலில் அணிநது கொள்வதுமாகிய ஒருவகை ஆடை யெனறு ஊகிககலாம எனப பொ,வே.சோ. விளக்கம் கூறுவர் (*பரி. 10.10*).

**தாளிலாளர் - முயற்சியில்லாதவர்.** அகமகிழவினறித தமமுகம மாறித தரபபடட பரிசிலைத தாளிலா ளர்-முயறசியிலலாதவா - விருமபுவா (*புறம. 207: 4,5*).

**தாளிலான் - முயற்சியிலலாதவன்.** தன் சுறறததாரது நெஞ்சு வருநதும்படி தனனோடே பொருநதுத லுறற செல்வததை மேனமேலும் வளர்ககும தாளி லானது - முயறசியிலலாதவனது - குடி நாடோறும தேயும (*கலி. 149:8,9*).

**தாறு - 1. தாறுகோல/அங்குசம்.** கரிகாலன, பொரு நர்க்குப் பரிசில அளித்து நெடுநதேரில குதிரைகள் நான்கினைப் பூடடிக குதிரைகளின செலவினை முடுக்கும தாறு - தாறுகோல - களைநது அப பொருநரைத் தேரில ஏறறி விடை கொடுபபான (*பொரு. 165-167*). தலைவன தலைவியின கூநத லிடதது மொயக்கும் வண்டுகளைத தாறு கைகடநத களிறுபோல வீறுபெற ஓட்டுவான (*குறி. 150*).

2. **குலை.** காறறு வீசுந்தோறும கலஙகியதும, வாழைமரததின கிளையில விளைநததுமாகிய நெற் றின் தாறு - குலை - ஆடுமகளது பறை போல வியபபுணடாக ஒலிககும (*அகம. 151 6-10*). துமபி, தேனோடு தழைத்த தாறு கட்டிய பீரககம பூவிலே செனறு தேனைப பருகியது (*நற. 277.6,7*).

**தாணை - 1. படை.** சேரமான கடுங்கோ வாழியாதன பகைவரை வஞ்சியாது எதிா நினறு கொலலும்

தீயினுடைய வலிமை முதலியவற்றை அளந்தறிய இயலாது (பதி. 24:15). ஊழிசகாலத்து நெருப்பை, மடங்கல் தீ (வடவைத்தீ) என்பர் (பதி. 72.15). பல் யானைச் செலகெழு குட்டுவன் அகப்பா என்ற அரணத்தை அழித்து, ஒருநாள் பொழுதுக் குள்ளேயே தீ மூட்டி மறக்கள வேள்வி செய்தான (பதி. ப. 3:3). முருகவேளைக் காணக் காற்றிடத்தே தீயெழுந்தா லொத்த வலிமையினை யுடையராய தேவர் வந்தனர் (முரு. 170,171). பரதவ மகளிர் விறகினால் உண்டாக்கிய செந்தீயில் மதுவைக் காயச்சி அரிப்பர் (சிறு. 155-158). இடையர் கையாலே கடைந்து உண்டாக்கிய தீயையுடைய கடைகொள்ளியாலே துளையிட்டுக் குழலில் பாலைப்பண்ணை இசைப்பர் (பெரு.177-180). தீயின் தோற்றம் போலப் பொய்கையில் மலர்ந்த தாமரைப்பூ விளங்கும் (பெரு. 289). தொண்டைமான இளந்திரையனுக்குரிய வேங்கடமலையில், முனிவர் சிவந்த தீயினால் வேள்வி செய்வர் (பெரு.498). தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின போர்க்களத்தில் பகைவருடைய தலைகளை அடுப்பாக்கி அவருடைய குருதியை உலைநீராக்கி, சினத்தீயைக் கொண்டு எரித்து ஊன் சோறாக்குவர் (மது. 31). சிவபெருமானால தீ முதலிய ஐந்தும் சேரப் படைக்கப்பட்டன (மது. 453-455) அசோக மரத்தினுடைய மலர்கள் செந்தீயைப் போலத் தோன்றும் (மது. 700-701; குறி. 118, 119) மருதநிலத்தில கருப்பஞ்சாற்றை அடுகின்ற தீயின் புகைபட்டு, நெய்தற் பூ வாடும் (பட். 9-11). கழுகு, தீயினைப் போன்ற செங்காந்தளினது மொட்டினைத் தசைத் துண்டமென்று எடுத்தது (மலை. 145-147). காய்ந்த மூங்கில்கள் ஒன்றோடொன்று உராயவதனால் காடெங்கும தீப்பற்றிக்கொளளும (மலை. 248). இரவில் இடையர் உறங்கும இடங்களில் விலங்குகள் வராதபடி, தீயினை எரிய விட்டிருப்பர் (மலை. 419, 420). காட்டில் மூங்கில ஒன்றோடொன்று உராய்வதால் பெருந்தீ மூண்டு, காற்று ஓடும் வழியெலலாம் ஓடி நெறியை அடைத்தலின அவ்வழிச செல்லும் வணிகச சாத்தர் வழியை விட்டு விலகி அலறுவர் (அகம். 39: 8-10). ஆனிரையைக் கவரச செலலும மழவர் வில்லோடு தீக்கடை கோலையும் எடுத்துச செலவர் (அகம். 101:5-7). உறையூரில காவிரியின தண் பொழிலகத்து, விழாநாளில் பலிச் சோறடுதலின் தீ எங்கும் நிறைந்திருக்கும் (அகம். 137: 9-11). பாலைநிலத்தில் உப்பினை விற்பதற்குக் கூட்டமாகச் செலலும் உமணர், தாம் கொண்டு வந்திருக்கின்ற ஞெலி கோலால (தீக்கடை கோலால்) தீயினை உண்டாக்கி, ஊனைச சுட்டுச் சோற்றோடு உண்பர் (அகம். 169.5-7) மாந்தர் கடும் பனிக்காலத்தில, பொறுக்கலாற்றாக் குளிரால் பறகளைத் தீயுண்டாகுமாறு கடித்து நடுங்குவர் (அகம. 217:19,20). செலலூரின்கண் எப்பொழுதும வேள்வித்தீ எரிந்து கொண்டிருக்கும (அகம். 220.3). உறையூர்வாழமக்கள், அவலுடன் செறிந்த, வலிய செந்தீயில் சுட்ட கொழுவிய தசைத் துண்டங்களைப் பாணர் முதலிய இரவலாக்குப் பகுத்துக் கொடுப்பர் (அகம. 237:9-14). களிறுகளினால் சுவைத்துப்போடப்பட்ட காய்ந்த மாமரத்தின சுள்ளிகளைக் கொண்டு சுரத்தின்கண் உமணர் தீ மூட்டுவர் (அகம். 257:16,17). இரவில இடையர் காட்டில் செம்மறியாட்டின இனம பாதுகாவல அடையக் கோலினின்றெழுந்த சிறு தீயை அணையாமல விறகிட்டுப் பாதுகாப்பர் (அகம. 274.5). இரவில் சுரத்தில காட்டுவிறகில் மூட்டப்பட்டுள்ள தீயின் ஒளியில் மக்கள் மாலை முதலியன அணிந்து கொள்வர் (அகம. 301 13,14). 'தலைவியினுடைய நீரைப்போன்ற மென்மை தீயைப்போன்ற என்னுடைய வலிமையை அழித்து விட்டது' என்று தலைவன் கூறினான (குறு 95 4,5). மணவிழாவினபோது நெய் பெய்து தீ வளர்த்துச் சடங்கோம்புதல மரபு (குறு. 106 5,6) தீ தன்னுடைய சுடும தன்மையிலிருந்து மாறினாலும தலைவனிடம நாம் கொண்ட நட்பு மாறாது என்று தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 373 1). உடன போகக்கிறகு உடன்பட்டுப்பின மறுத்த தலைவியை நோக்கித் தோழி 'தீயிடைப்பட்ட தளிரைப்போன்ற நடுக்கம் உண்டாகின்றது' என்று கூறினாள் (குறு. 383: 5). சேரனுக்குரிய கழுமலத்தின மதிலை அழித்து அவவூரை ஒரு பகலுக்குள் கிள்ளி வளவன தீயிட்டுக் கொளுத்தினான (நற். 14:4,5). பரதவர் தாம் கடலில பிடித்துக் கொண்டு வந்த மீன்களை மணற்பரப்பிலே குவித்து விட்டுக் கிளிஞ்சலில் மீன நெய்யைப் பெய்து விளக்கேற்றி அதத்தீயொளியில் உறங்குவர் (நற 175 3,4). காடு முழுதும தீப்பிடித்து மரங்களெல்லாம தீய்ந்து, ஒதுங்க நிழல இல்லாமல் போவதுமுண்டு (நற. 177:1-3). தலைவனைப் பிரிந்த தலைவிக்குத் தீயுமிழ்கின்ற வெப்பத்தைப் போன்ற கொதிப்பு உண்டாகும (நற். 236 2) வானம் என்ற ஒரே பொருளிலிருந்து சுடுகின்ற தீயும், இனிய காற்றும உண்டாவது போலத் தலைவனுடைய மார்பு என்ற ஒன்றே தலைவிக்கு நோயையும், இன்பத்தையும தரும (நற். 294:1,2). மக்களின மனம உருகுவதற்குத் தீயிலிட்ட மெழுகு உருகுவதை உவமை கூறுவர் (ஐங. 32 4). தேனூரில எப்பொழுதும வேள்வித்தீ எரிந்து கொண்டிருக்கும (ஐங. 57.1,2). இலையுதிர்ந்து

மலர்கள் மட்டுமே உள்ள இலவ மரங்கள் மலைகளில் பறறி எரிகினற தீபபிழம்புகள் போனறு தோனறும் (ஐங். 338:2,3). மூங்கில புதரில் தோனறிப பரவும தீயினைப போன்று ஊரில தலைவியைப பறறி அலர் எழுந்தது (ஐங். 340.4). தலைவனுடன தலைவியைப் போகவிட்ட ஊழ் (பால்), காடடுத்தீயின நடுவில் அகப்பட்டு அழியட்டும் எனறு நற்றாய் கூறினாள (ஐங். 376:2). சிவபெருமான முபபுரங்களையும் தீயினால் அழித்தார (கலி. க.வா. 2). 'திஙகளிலிருநது தீத் தோனறாதது போலத தலைவனிடத்தும் பொய் தோன்றாது' (கலி. 41,23,24). மகளிர் மாலைக் காலத்தில் செந்தீ தோன்றுமாறு விளககேறறி வைப்பர் (கலி. 119: 13). மாலைக காலம மகளிர்ககுக காமத்தீயை உண்டாககும் (கலி. 130:10). 'தலைவர் தனது சாயலால கூடுதல அலலது இருளை நீககும் நெடிதாகிய கொழுந்தினையுடைய தீயினால் சுடுதலோ இலர்; ஆயினும் எனககுள் உணடாகிய காமத்தீ சுடுகினறது' எனறு தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 137:21,22). காமம் மிககூர்நத தலைவி ஞாயிற்றை நோக்கி, 'ஞாயிறே என தலைவனைக் கண்டுபிடித்து, எனனிடநதருவாயாயின், எனது காமத்தீ அணையும்' என்றாள் (கலி. 142:39,40). காமம மிககூர்நத தலைவி கடலை நோககி, 'கடலே, ஊரைச சூழ்ந்து எரிகசும் தீயிலே நீரை ஊற்றினால சினந தணியும்; ஆனால என்னுடைய காமத்தீயோ, நீரினுள் மூழகினாலும் தணியவிலலையே'', என்று கூறினாள் (கலி. 144:59-62). காமம் மிககூர்நத தலைவி மேகததை நோககி, 'மேகமே, தலைவனின் பிரிவினால் உணடாகிய காமத்தீ, என் உடலின் சந்துகள் எல்லாவற்றையும் எரிககின்றதே; மழையைப பொழிந்து தணித்துவிடு' எனறாள் (கலி. 145 57 58). ஆதிசேடனுடைய ஆயிரநதலைகளும் தீயைச் சொரியும் தனமையோடு விளங்கும் (பரி. 1: 1,2) காற்றிலிருநது சிவநத தீததோனறியது (பரி. 3:8). தீயாக இருபபவரும் திருமாலேயாவர் (பரி. 3 4). ஓசையும ஊறும் ஒளியுமாகிய மூன்று புலனாலும் உணரபபடுவதாகிய தீயாக இருபபவரும் திருமாலே (பரி. 13.20) தீயின்கண் உள்ள வெமமையாக இருப்பவரும் திருமாலேயாவர் (பரி. 3:63). முருகவேளினால விடடெறியப்பட்ட வேலினுள் தீயழல் கொழுந்து விட்டெரிந்தது (பரி. 5:3). தோன்றிமலா தீயைபபோனறு மலரும் (பரி.11:21). தீயின் பககததிலே நினறு பொறி புலன்களை யடககித் தவமியறறுவா (பரி 11:90). முருகப் பெருமானுடைய திருமேனி செந்தீயைபபோன்றது (பரி. 19 99).

2. தீதல். தீ செங்கனலி - எலலாம் தீதற்குக் காரணமாகிய செங்கனலி (பரி. 3:21).

3. தீய/கொடிய. தீ நோய் - தீய நோய (புறம். 185:6). தீநெஞ்சம் (பரி. 5:74). தீவாய் (அகம். 203: 2).

**தீங்கு** - 1. துன்பம், ''தலைவியை வரைந்து கொள்ளாமல, களவொழுக்கத்திலேயே நீ நாட்டங்கொண்டு இங்கு வருதல, தலைவிக்குத் தீங்கு - துனபம் - செய்வதாகும் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 112:8). 'நீ பிரியின் தலைவி தீங்காயினள் (துன்பமடைகினறாள்) ஆதலின் தங்கிச் செலக' என்று தோழி தலைவனிடம கூறினாள் (அகம். 300:10, 11).

**தீது** - தீமை. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் அமைச்சர் நன்றும் தீதும் - தீமைகளும் - அறிந்தவர் (மது. 496). 'இல்லறக் கடமைகளைச செயது என்னுடன் வாழவதில் தீதும்உண்டோ' என்று தலைவன தலைவியைக கேட்டான (அகம. 230:9,10). தலைவியிடம் தீது சிறிதும் இல்லாதிருந்தது (அகம். 354:14). பொருளின் மேல்கொள்ளும் வேட்கை தீதினை நல்கும் (அகம். 379:2). தலைவன் தோழியிடம், தலைவிக்குத் தீது பிறவாதபடி, நீ எனக்குப் புணையாகச் செல என்று கூறினான் (அகம். 392:8). தலைவனால் தலைவிககு வந்த நோயை அறியாத கட்டுவிச்சி, தெய்வததால் வந்ததென்று கூறித் தலைவிக்குத் தீது பயந்தாள் (குறு. 26:4). வரைவிற்குரிய முயற்சிகளைக் கண்ட தலைவி, இனித்தீது இன்றி தலைவனுடன இன்புற்றிருப்பேன எனறாள் (குறு. 368:8) ஒருபொழுது நன்றாகும் செயல் மற்றொரு பொழுது தீதாவதும் உண்டு (நற். 188:6). 'வாடையே, உனக்குத் தீது இழைத்திலனே, என்னை வருத்தாதே' என்று தலைவி கூறினாள் (நற். 193:4,5). 'எம் நாட்டிற்குத் தீது தருவன எல்லாம் இல்லையாகுக' என மகளிர் வேண்டிக் கொள்வர் (ஐங். 9:2,3). போவோருக்குத் தீதினைத் தருகின்ற முள் நிறைந்த கள்ளிகள் காட்டில நிறைந்திருககும் (ஐங். 1:4). ஈதல் குணமுடைய தீதிலானின் செல்வம் மேன்மேல பெருகும் எனபது பண்டையோர் துணிவு (கலி. 27: 1,2). தலைவியிடம் தலைவன் 'நான எவ்வகைத தீதும் இல்லாதவன' என்றான் (கலி 73:7,11;81: 33;88:15;89:11;91'7,16). 'பரத்தையராகிய தாயர் அழைக்க உன புதலவன் சென்று விட்டான்; யான் எந்தத் தீதும் செயயவிலலை' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி 83:23-25). 'பாணடியனும்

பாண்டிமண்டலமும் தீது இன்றிப் பொலிக என ஆயர் வேண்டினா (கலி. 105.6). உடைந்த கலத திலிருந்து கடலுள் மூழ்குமொருவன் திரைதந்த கட்டையால் தீதின்றிப பிழைத்தல் போலத் தலைவன் வருகையால தலைவியின துனபமெல்லாம போயின (கலி. 134:24-27). மலைமுகட்டிலே இருக்கும் கதிரவனே, என காதலனினவடி வழகைக் கணடேனேயொழிய, அவனிடமுள்ள நன்று தீதினைக் காணேனே' எனறு தலைவி கூறினாள் (கலி. 142:49,50). 'என உயிா போனறவன தலைவன், நான உயிருடன் இருபபதனால், தலை வனுக்கும் தீதிலலை எனபதை அறிக' எனறு தலைவி கூறினாள (கலி. 143·20,21)

2. குற்றம். போரில இறககாமல் நோயில் இறககும் வேந்தரை, வாட்படாத தீது - குற்றம-நீங்கத தருபபைப்புல்லில கிடத்தி, வாளால் போழநது அடககஞ்செய்வர் (புறம. 93·5-11). 'இவ வுலகில் ஒவ்வொருவரும் புகழை நிலைநிறுததித் தீது இல்லாத உடம்போடு வாழந்து இறத்தலே சிறந்தது' எனககோபபெருஞ்சோழன் கூறினான் (புறம. 214:12,13). ஞாயிறு, திஙகள், காற்று முதலியன இயங்குவதால விசும்பு தீதின்றி விளங்கும் (பதி. 17:10). திருமகள் குடிகொண்ட தீது தீர் அங்காடித் தெருவினை உடையது மதுரை (முரு. 70). தலையாலங்கானததுச் செருவென்ற நெடுஞ்செழியனின் அரண்மனை திருமகள் நிலை பெற்ற தீது தீர் சிறபபினையுடைய மணல பரவிய முன்றிலை உடையது (நெடு. 89,90). 'தீது இலலாத நெஞ்சினால் கூறும் சொறகளையுடைய தலைவனின் தூதன வந்திருக்கின்றான' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 106·3,4). வேதத்தாற் கூறப்படும் முதறகடவுள் தீது அற விளங்கிய திருமாலே என்று கூறுவர் (நற் க வா. 6,7). கொல்லிமலை, தீது தீர்நத நெடிய கொடு முடியை உடையது (நற. 201·6) பலதேவன கதிரவன், மனமதன், அவன தம்பி சாமன, சிவன ஆகிய ஐவரும் தீது தீர்நத சிறபபினை உடையவர் (கலி. 26.6). திருமால், நன்னெறியிற செலலும் திறனிலலாரை, நனனெறியிற் செலுத்திய தீது தீர்ந்த சிறபபினையுடைய வீரமுமாகவும் விளஙகு கிறார் (பரி.க.வா. 39, 40).

3. துன்பம். 'புலவருடைய வாழ்க்கை பிறர்க்குத் தீது-துன்பம்-தராத இயல்பினையுடையது' எனறு புலவர் கோவூர் கிழார் சோழன நெடுஙகிள்ளி யிடம் கூறினார் (புறம. 47:7). 'எனனை இகழ்ந்த பகைவரை வெலலேனாயின் தீதுள்ள நெஞசத்தை யுடைய பரத்தையர் மார்பில் என மாலை புரள் வதாக' என்று சோழன நலஙகிள்ளி சூளுரைத் தான் (புறம். 73:11-14). பல்யானைச் செல்கெழு குட்டுவன, 'தனனாட்டு மககளுககுத தீதுதரும செயல்கள் இல்லாமல அரசாண்ட மரபில வநதவன் (பதி. 23.5). இம்மையில் நல்லது செய்தால் தீதுண்டாகாது என்பது மரபு (அகம. 101.2).

4. கேடு. ஒருவனுககுத் தீதும்-கேடும-ஆககமும் பிறரால வருவன அலல; அவனாலேயே வரும் எனபது கணியன் பூங்குனறனார் கூறறு (புறம். 192:2).

5. அழுக்கு. மானின தோலிலுள்ள தசையினை எடுததுவிட்டுத தீதினை-அழுககினை போககித தூயதாககி, மணிகளிழைத்து அழகுபடுத்தி அரசரும, அரசியரும வேள்வியினபோது அணிநது கொள்வர் (பதி. 74:10,11).

6. தீவினை (பாவம). காவிரியாறு கடலில கலக்கும புகார்முகத்தே மககள தீது - தீவினை (பாவம)-நீஙகக கடலாடினா (பட 99)

தீம - 1. இனிமை. எவ்வி எனபானுககுரிய மிழலைக் கூறறததில வாழும மகளிர் கருமபினுடைய தீம - இனிமை - நிறைநத சாறறைத் தெஙகினது தீம நீரோடு (இளநீரோடு) கலநது அருநதுவர் (புறம 24: 13-15). சிறுபாணா தேனபோனற தீம பொருநதிய நரம்புத தொடையமைநத யாழை உடையவா (புறம. 70:1). நீணட ஆயுளைத்தருகினற நெல்லி மரத்தின தீஙகனியை ஔவையாருககு அதியமான அளிததான (புறம. 91.9). வேள்பாரியி னுடைய பறமபு மலையில் தீஞ்சுளைகளையுடைய பலாபபழஙகள் மிகுதியாக உளளன (புறம. 109.5). தீம்பொருநதிய நீரையுடைய ஆழநத சுனைகள பாரியின பறமபு மலையில் நிறைநதிருநதன (புறம. 116.1). ஆய அணடிரனுககுரிய பொதிய மலையில் தீஞ்சுளைகளையுடைய பலாபபழஙகள் நிறைந திருககும (புறம. 129.4). தீம் பொருநதிய நீரை யுடைய சுனைகள் கணடீரககோபபெருநளளியின தோட்டி மலையில் மிககிருநதன (புறம 150:27,28). பிட்டஙகொறறனின குதிரைமலையில் உளள குறவர் மரையாவின் நுரை கொணட தீமபாலில் தினையரிசியைப போட்டு அட்டுப பகுததுணபா (புறம. 168 8). மல்லிகிழான காரியாதிககுரிய மலலி என்னும ஊரில் உள்ள ஆடவா தீம நிறைநத புளிபபையுடைய களாபபழததுடனே துடரிபபழத தையும உணபா (புறம. 177 9) நுஙகின் சேறு தீம நிறைநதது (புறம. 225). நமபிநெடுஞசெழியன

தீஞ்செறிவையுடைய மதுககுடஙகள் எலலாவற்றையும பலருககும வழஙகினான (புறம. 239:16). ஒரு வளளலின புதல்வர் சோறறை வெறுத்துத் தீம பாலையே விரும்பினர் (புறம. 250.7). சுநதாரம எனனும ஊரில தீம பொருநதிய மது நிறைந திருநதது (புறம 258:2). தீம பொருநதிய நரமபுத் தொடையால இயககும் விளரிபபண, இரங்கற் பணணாகும (புறம. 260:2). பேய் அண்டாதபடி வீடடின முனனிறைபபில் தீம நிறைநத கனிகளைத்தரும் இரவமரத்தின் தழைகளையும் வேபபநதழைகளையும கலநது செருகுவர் (புறம். 281:1). சீறியாழ தீம பொருநதிய இசையை எழுபபும நரம்பினையுடையது (புறம. 285:3). வேநதனுககுப பசும பொறகலத்தில தீம் பொருநதிய மதுவினை அளிபபர் (புறம. 292:1). முறறததில முறததில காயவைததிருககினற தீம நிறைநத எளளினைக குறுமபூழபபறவை கவாந துணணும் (புறம. 321:1-3). வெணணெல்லை அரியும உழவர் முழககும் தண்ணுமை ஓசைக்கு அஞ்சி, நெறபயிரின் கணுககளில கட்டியுள்ள தீம பொருந்திய கூடடினின்றும் தேனீககள் பறந்தோடின (புறம. 348:1,2). நாஞ்சில வள்ளுவனுக்குரிய நாஞ்சில மலையில தீஞ்சுவைகளையுடைய பலாமரஙகள நிறைநதிருநதன (புறம. 380.9). கிணைபபொருநனொருவன தீம் பொருநதிய தடாரிபபறையை முழககினான (புறம. 395:25). வாட்டாறறூரில் வாழும கோசர் தீம பொருந்திய கட்டெளிவையுணடு, தீம பொருநதிய குரவையாடுவா (புறம். 396:7-9). தீம்பொருநதிய மாங்கனியைப பிசைநது நறிய புளிககுழம்பு செயவா (புறம. 399:4). பேரியாழ் தீம் பொருநதிய இசையை எழுப்பும் நரம்பினை உடையது (பதி. 41:1,2). கட்குடஙகளில் தீஞ்சுவை நிறைநத நீல மணி போனற கள்ளினை நிறைபபர் (பதி. 42:12). தீம பொருநதிய நீரையுடைய காஞ்சியாற்றின் பெருநதுறைககண தீமபொருநதிய புதுப்புனலாட்டு விழா நடைபெறறது (பதி. 48:14-17). புறததில் வணடினம மொயததும தீம நிறைநத சுவையில் மாறுபடாமல் இருககும இனிமை பொருநதிய முடடைகள் போனற கனிகள் வழிசசெல்வோாககு உணவாகி, அவாகளின களைபபைப் போககும் (பதி 60 4-7). பாலையாழ் தீம் பொருந்திய இசையைத தரககூடிய நரமபினால அமைந்தது (பதி. 65 14,15). பேரியாழ, தீம நிறைநத இசைக்குரிய நரமபுகளால ஆயது (பதி. 66:1,2). தீம் பொருநதிய சுனையில குவளைப்பூ மலர்நதது (பதி. 70.7,8). தகடூரெறிநத பெருஞ்சேரலிரும் பொறையின நாட்டினா கருமபினது தீம நிறைந்த சாற்றினை வருவோர்க்கு வரையாது வழங்குவர் (பதி. 75:6,7). கொல்லிமலையில் வாழும் செல்வ மகள் மூங்கிற்குழாயில் அடைத்து முதிர்வித்த தீம் பொருநதிய கள்ளினையருந்துவள் (பதி. 81:21,22). மலையில தீம் நிறைந்த நீர் வற்றாத சுனைகள் இருந்தன (பதி. 85:6). குடக்கோ இளஞ்சேரலிரும் பொறை வானியாற்றின் நீரைவிடத் தீம நிறைந்த தண்ணிய மெனமையையுடையவன் (பதி. 86:12, 13). புன்னை மரத்தின் கிளைகளில் தங்கியுள்ள நாரைகள் அலைகட்குப் பயந்து மருதநிலததின தீம் பொருநதிய பனையினது மடலிலே தங்கும் (பொரு. 204-207). கரிகாலனின் காவிரிசூழ் நாட்டில தீம நிறைந்த கரும்போடு அவலையும கூறு வைத்து விறபவர், மான் தசையோடு களளையும பணடமாற்றாகக்கொள்வர் (பொரு. 216,217). நாட்காலையில் ஆயசசியர் குடைககாளானுடைய வெள்ளிய முகைகளை ஒத்த குவிநத முகைகளையுடைய உறையினாலே இறுகத்தோயநத தீம் நிறைந்த தயிரைக் கடைவர் (பெரு. 157,158). ஆனிரைகளோடே காட்டிடத்துறையும் ஆயன குழலாலே தான பாடும் தீம்பொருநதிய பாலைபபணனை வெறுபபின, விலயாழாலே குறிஞ்சிப் பண்ணை இசைபபான் (பெரு. 180-182). தொண்டைமான் இளநதிரையனின் நாட்டில செல்வோர், கரும்பின தீம் நிறைநத சாற்றினையும், தெங்கினது இளைதாய தீம் பொருநதிய நீரையும் (இளநீர்), பலவேறு தீம் நிறைநத பல பணடங்களையும் வேண்டுமளவு பெறுவா (பெரு. 262;357;361). தொணடைமான் இளந்திரையன பரிசிலர்ககுத் தீம்நிறைநத சுளையுடைய அமிழதம் போன்ற உணவுகளையும் பிற வறறையும் உண்பிப்பான் (பெரு. 475-479). மதுரையின தெருககளில தீம நிறைந்த பணணிகாரங்களாகிய உணவினையும், உடலுககு அழகைக் கொடுககும தீம் பொருந்திய களி கலநத இனிய நீரினையுடைய பசிய பாக்குடனே வளர்ந்த கொடியினற வெற்றிலையினையும் விறறனர் (மது. 395, 400,401). மதுரையின தெருக்களில் அமிழ்தம கறகணடாக வளர்நதாலொத்த தீம் பொருநதிய சாறறையுடைய கறகண்டுத் தேற்றைப பெறறவர் பலவிடங்களிலும் உணடனர் (மது. 532). மதுரையில் ஆடல மகளிர், குளிர்ச்சியாலே நிலைகுலைந்த தீம் பொருந்திய நரம்பினைத் தம் முலையின் வெபபத்தில தடவிச் சிறிய யாழைப பணபடுத்துவர் (நெடு. 67-70). மாமரத்தின தீம் பொருநதிய சுவையையுடைய கனிகளிலிருந்து மது உண்டாகும (குறி. 188,190). தலைவன, தலைவிககுக் கூறிய வஞ்சின மொழிகளை (உறுதிமொழிகளை) மலையின அழகிய தீம பொருநதிய தெளிநதநீரை

அருநதி உறுதி செயவது ஒரு மரபு (குறி. 210,211). கோவலர், மாலைக்காலததே ஆமபல என்னும் பண்ணினையுடைய தீம்பொருநதிய குழலிடததே தெளிநத இசையைப் பலகாலும எழுபபுவர் (குறி. 221,222). புகார் நகரம் கண்ணுககுத தீம் பொருநதிய நகரமாகத தோனறியது (பட். 173). பெருவிழாககாலங்களில புகாரில கூததர், முழவு இசையோடு நரம்பின தீம்பொருநதிய கட்டினை யுடைய யாழிசையை இசைபபர் (பட். 253-255). இசைக்கருவிகளுள் பாட்டைச் சுருதி குன்றாமல் கைககொண்டு நிற்கும தீம்பொருநதிய குழலும் ஒன்று (மலை. 8). தீம பொருநதிய கருமபுகள் முறறி, வெட்டுதலுறறு ஆலைககுப போகச் சமைநது நின்றன (மலை. 119). உணடு எஞ்சிய தீம்நிறைநத பலாசசுளை களில் உள்ள கொட்டைகளை நீக்குதறகுக குறவா மகார் கன்றுகளைக் கொணடு கடாவிடுவா (மலை. 337-339). நன்னன் வேணமானின் அரணமனையின வாயிலில நிறைந்திருந்த கையுறைப பொருளகளில் தீம் நிறைநத மாம்பழச் சாற்றில செயத பணடமும இருந்தது (மலை. 512, 513) வாழையின் பெரிய குலையிலுள்ள முதிர்நத தீம பொருந்திய கனியில் தேன் உணடாகும் (அகம. 2:1, 2). தலைவி தீம நிறைந்த மொழியினையுடையவள (அகம. 3:16,9: 25; நற். 306.9, 10). இருப்பை மரஙகளில நெயயை ஒதத தீம் பொருநதிய துளையுள்ள மலாகள் மலர்நதிருக்கும் (அகம். 9:5). தீம பொருநதிய பால், மடியில நிறைந்து வழிவதால், பசுககள் கனறுகளை உள்ளி மன்றுகளில புகுநதன (அகம. 14:9-11). சிறு குழநதைகள், நாவாற பயினறு பேசப்படாத, கேட்டார்ககு மகிழச்சியைத் தருகினற தீம பொருநதிய குதலைச சொறகளையுடையா (அகம். 16:4, 5). குழநதை பயந்த தலைவியைத தழுவினால், அவளுடைய தீம்பொருநதிய முலைப பால தன் மார்பில படும என்று அஞ்சித் தலைவன தழுவாதிருததலும் உணடு (அகம. 26:16). சுரததில் பருநதின சேவல், தன பேடையைத் தனனருகில வருமாறு இளி எனனும இசைபோனற தீம பொருநதிய குரலால் அழைககும் (அகம. 37:5-7). மேகம பொழியும் மழையைத தீமபொருந்திய மழை எனபர் (அகம். 54.2). திருபபரஙகுனறத திலுள்ள சுனை மிகவும் தீமபொருநதியது (அகம். 59:13). பாரியின பறம்புமலையில் தீம்நிறைந்த சுனைகள் இருநதன (அகம. 78.22, 23). கரடி, இருப்பைமரததின் தீம்பொருநதிய பழத்தினை வெறுத்தால் புற்றாஞ சோற்றை உண்ணும (அகம. 81:2, 3). தீம் நிறைந்த தயிரை மத்தினால் கடைவா (அகம். 87:1), தலைவி சிறுமியாக இருக்கும்பொழுது தேனைச சொரிந்து கலந்துளள தீம நிறைந்த பாலினை வறபுறுதநி ஊட்டவும உணணாளாய் அங்கும இங்கும ஓடுவாள் (அகம. 89.20). தலைவி உடனபோககிறகு முனபு, பொற கலததில தீமபாலொடு தேன கலநது செவிலித தாயா ஊட்டவும உண்ணாள் (அகம். 105.4-6). தலைவி, நல்லயாழின நரம்பு ஒலிப்பது போன்ற மிகவும தீம் நிறைந்த மொழியினை உடையவள் (அகம. 109:2). தலைவியின கூநதல் தீம பொருத்திய நீரினையுடைய காட்டாறறின கருமணலைப போனறு கருமையாகவும், நெளிநெளியாகவும இருநதது (அகம். 117:19). தீமபொருநதிய நீரினையுடைய காட்டாறு பலவகை மலாகளைச சுமநதுகொணடு வரும் (அகம. 133 10). தீம நிறைநத குலையினையுடையது வாழை (அகம. 141: 20). தலைவி, அழகிய தீமபொருநதிய சொறகளையுடைய தோழியருடன பநதாடுவாள (அகம. 153. 2, 3). தலைவன, தீமபொருநதிய நீரையுடைய ஊருககுத் தலைவனாவான (அகம. 156:7). சுரத்தில் செலலும உமணா சோறு அடுதலுககு உலை நீராகச சுனையின தீம பொருநதிய நீரினைப பெயவா (அகம. 169 6, 7). கரடி, இருபபையின பழங்களைப போல இனிககும சாறறினையுடைய தீமதுளையையுடைய பூககளை யும உண்ணும (அகம. 171 13, 14). குறவன, தன ஏவலருடன் தீம நிறைநத பலாசசுளையிலினறும விளைநத தேனை அருநதுவான (அகம 182 3,4). பரதவாககுப பாண மகளிா ஆமபலிலையில சோறறோடு, தீமநிறைநத புளிபபும கலநத பிரம்பின பழததையும சோததுஉணவிடுவா (அகம. 196:5-7). உடனபோககிறகு முனபு தலைவி, தேன்கலநத தீமபாலை, கூநதலைக கோதி நய மொழிகளைக கூறி ஊட்டினாலும உணணாள (அகம. 207:14-17) தலைவி, யாழவலலோன இயககும் யாழின செவவழிபபணணைக கேட்டாற் போலும தீஞசொலலை உடையவள (அகம 212 6-8). உறையூா மகளிர், பாணா முதலியோாககுக கருமபினைப பிழிநது தீமநிறைநத சாறு அட்ட பாகுடன, பாலில ஊறவைதத அவலையும பகுததுக கொடுபபா (அகம. 237.12-14). பொருள வயிற் பிரியும தலைவனிடம தலைவி, குறியனவும நெடியனவுமாய தீம பொருநதிய ஊடலுரை களைக கூறுவாள் (அகம. 239.13,14). குரஙகுகள் பாலை நிலவழியில உள்ள நெல்லியின தீம் நிறைநத சுவை பொருநதிய திரணட காயகளைக கழஙகுகளாகக கொணடு உருட்டி விளையாடின (அகம. 241: 13-15). யாமை நீராததுறைககண சென்று பனஙகள்ளினை அருந்துவோர் ஒழுகவிட்ட

கள்ளினை அருந்தித் தள்ளாடு நடையில் சென்று தீம் பொருந்திய பெரிய வயல்களைக் கலக்கி ஆம்பலின் இலைகளில் ஒடுங்கிக் கிடக்கும் (அகம். 256:2 7). அழகிய தீம் பொருந்திய சொல்லை யுடையவள் தலைவி (அகம். 262-17,18). சீறியாழ், தீம் பொருந்திய விளரி என்னும் நரம்பினை யுடையது (அகம். 279:10,11). மாந்தர் அழகிய தீம்பொருந்திய புதுநீர்ப்பெருக்கில் நீராடுவர் (அகம். 266:2). தலைவியின் தந்தைக்கு மிக்க தீம்நிறைந்த பலாமரங்கள் இருந்தன (அகம். 282: 11,12). தலைவி அழகிய தீம் பொருந்திய சொல் லினையுடையவள் (அகம். 288:17). நெல்லிமரத்தின் காய்கள் தீம் சுவை உடையன (அகம். 291:16). புல்லாங்குழலின் இசை, தீம் பொருந்தியதா யிருக்கும் (அகம். 305:16). ஆயர், தீம்புளிச்சோறு நிறைக்கப்பட்ட மூங்கிற் குழாய்களைத் தம் காளைகளின் கழுத்தில் கட்டித் தொங்க விட்டிருப்பர் (அகம். 311:9,10). யாழ், தீம் நிறைந்த நரம்புகளால் தொடுக்கப்பட்டிருக்கும் (அகம். 314:11,12)). மலை உச்சியின்கண் அமைந்த தீம் பொருந்திய தேனிறாலைக் குறவர் அறுத்தெடுப்பர் (அகம். 322:12). தலைவன் தீம் பொருந்திய பொய்களையுடையவன் (அகம். 336: 10). கரும்பு தீம் நிறைந்த சுவையுடையது (அகம். 346:6). தீம் பொருந்திய மாங்கனியின்சாறு, பலாச்சுளையின் கனிவு, தேன் ஆகிய மூன்றையும் மூங்கிற்குழாயுள் பெய்து நீண்டநாள் முதிரவைப்பர் (அகம். 348:3-6). குயிலின் குரல் மிக்க தீம் நிறைந்ததாய் இருக்கும் (அகம். 355:1,2). தீம் நிறைந்த சுளைகளையுடைய வேர்ப்பலாப் பழங்களை யானைகள் கையினாலே தோண்டித் தின்னும் (அகம். 357:8,9). மிக்க மழை நிலைத்துப் பெய்ததால் தீம் நீர் நிரம்பியது பொய்கை (அகம். 357:13). மயில்கள் தம் கடிய குரலை விடுத்து, இனியதீம் நிறைந்த குரலால் பாடி ஆடுவதைப் போலத் தலைவி, தோழியருடன் பாடி ஆடினாள் (அகம். 358:2,3). பரதவர் உப்பளத்தில் உணவிற்குத் தீம்பொருந்திய சுவையைத் தருகின்ற உப்பினை உண்டாக்குவர் (அகம். 366:6,7). உயர்ந்த மலையில் அரிய இடத்திலிருக்கும் சுனையின் தீம்பொருந்திய நீரின்கண் தலைவனும், தலைவியும் நீராடி மகிழ்வர் (அகம். 368:8,10). தலைவி தலைவனுடன் உடன் போக்குப் போயவழி, அவளால் வளர்க்கப்பட்ட கிளிகளும் தீம்பாலை உண்கின்றில (அகம். 369:4). ஆனிரையை மேய்க்கின்ற இடையர், இசையாசிரியர்பால் கற்காமலேயே, தொன்று தொட்டு வருகின்ற இயற்கையறிவினாலேயே தீம் பொருந்திய புல்லாங் குழலை இசைப்பர் (அகம். 399:11,12,). கண்ணுக்குத் தீம் பொருந்திய நீரையுடையது கடல் (குறு. 5:3). கனிந்து விழுகின்ற மாவின் தீம்பொருந்திய கனியினைப் பொய்கையிலுள்ள வாளை மீன்கள் கவ்வி உண்ணும் (குறு. 8:1,2). பிரிந்திருக்கின்ற தலைவி 'நல்லபசுவின் தீம்பொருந்திய பால் கன்றுக்கும் உதவாமல் கலத்திலும் படாமல் பூமியில் சிந்தி வீணாவதுபோல, என்னழகு எனக்கும் உதவாமல், என் தலைவனுக்கும் பயன்படாமல், பசலைக்கு உணவாகின்றது' என்று கூறினாள் (குறு. 27:2). தலைவனுடைய மலையில் கொம்புகள் தோறும் தீம் நிறைந்த பழங்கள் தொங்கும்படியான பலா மரங்கள் நிறைந்திருந்தன (குறு. 83:2,3) ஆண் குருவி கருவுற்றிருக்கும் தன் பெட்டைக் குருவிக்கு இடம் அமைக்கும்பொருட்டுத் தீம் நிறைந்த கரும் பினுடைய வெண்பூக்களைக் கோதி எடுக்கும் (குறு. 85:2-5). 'கரும்பின் கழனியது, மணலால் ஆகிய சிறுகரை, தீம் பொருந்திய நீர் வந்துவந்து மோது தலால் அழிவது போல, என்னுடைய நாணமும் சிறிது சிறிதாக அழியும்' என்று தலைவி கூறினாள் (குறு. 149:3,4). நிறைந்த கருப்பத்தையுடைய பெண் வாளைமீன் தேமாவின் உதிர்ந்த தீம்பழத்தைக் கவ்வும் (குறு. 164:1,2). தீம் நிறைந்த புளிப்பை யுடைய குழம்பைத் தலைவி அட்டு இட்டதை உண்ட தலைவன் மகிழ்ந்தான் (குறு. 167:4-6). மலையுச்சியிலுள்ள தீம் நிறைந்த தேனிறாலை, அருகில் வளர்ந்துள்ள மூங்கில் அசைந்து கிழிக்கும் (குறு. 179:4,5). வருடைமானின் குட்டி, தாயி னுடைய தீம்பாலை அருந்தி, மலைப்பக்கத்திலுள்ள நிழலில் துள்ளும் (குறு. 187:1-3). பிரிந்திருக்கின்ற தலைவிக்குப் பறவைகள் தம் துணையுடன் மகிழ்ந்து தீங்குரலால் அகவுவது பிரிவுத்துன்பத்தை மிகுவிக்கும் (குறு. 191:2-4). தலைவியின் பேச்சு தலைவனுக்கு, அமிழ்தத்தைப்போன்ற அழகிய தீம் நிறைந்ததாய் இருக்கும் (குறு. 206;1). தலைவி ஆராய்ந்த தீம் சொற்களையுடையவள் என்று தலைவன் கூறினான் (குறு. 250;6). 'தலைவியின் எயிற்றிலிருந்து ஊறும் குற்றமில்லாத தீம் பொருந்திய நீர், கரும்பினது அடித்துண்டத்தை உண்டாற்போன்ற சுவையுடையதாகும்' என்பது தலைவன் கூற்று (குறு. 267:2-5). ஆண்குரங்கு மரத்தின் மேலிருந்து முதிர்ந்த தீம்பொருந்திய பழங்களை உதிர்க்கப் பெண்குரங்கும் குட்டிகளும் ஏற்பனவற்றை உண்ணும் (குறு. 278:4-7). தீம் பொருந்திய புளிப்பையுடைய நெல்லிக்காயை உண்டு நறுநீர் அருந்துதல் மிக்க சுவையுடைத்து (குறு. 317:2-4). மேதக்கோருடைய நட்பு, தேனீக்கள் தாமரையின் தாதிலிருந்து தேனெடுத்துச் சந்தன

மரத்தில் தேனிறாலில் வைககும் தீநதேனைப போன்ற இனிமையும மேனமையும் உடையது (நற். 1:2-5) காந்தளின் தேனையுண்ட கருவண்டு, யாழிற்கட்டிய தீநதொடை நரமபு ஒலித்தல் போல முரலும (நற். 17:10,11). காண்டவாயில் எனனும ஊரின் பரதவர் மீனைக் கொடுத்து, அதற்கு ஈடாக பனையின தீம் நிறைந்த கள்ளைப் பெற்று அருநதுவர் (நற். 38.2,3). பாணரின் குறுநதடியைப் போலக் கொன்றையின் தீம்பொருநதிய கனிகள் பாறையில் விழுந்து ஒலிக்கும் (நற். 46 6,7). மலையில பெய்த மழை, அங்குள்ள பலவகை மூலிகைகளின் சருகுகளையும் பூக்களையும் அடிததுக் கொண்டு வரும் தீம் நிறைநத நீரில் நீராடினால் நோய்கள் நீங்கும் (நற். 53·6-8) வேங்கையின் நிழலில் ஆமான கன்றொடு உறங்கியபொழுது, குரங்கு ஆமானின தீம்பொருநதிய பாலினைக கறந்து தன் குட்டிக்கு ஊட்டும் (நற். 57:1-6). தலைவனின் ஊரிலிருநது வரும் தீம் பொருந்திய நீர் தலைவியின் ஊரிலுள்ள கழனிகளில பரநது பாயும் (நற். 70:7,8). வைகறையில் வெளியே சென்று வயலில மேய்ந்துவிட்டு வநத கறவை எருமை தீம் நிறைந்த பாலினை மிகுதியாகக் கொடுக்கும் (நற். 80:2,3). தீம நிறைந்த அத்திப் பழம் போன்று குரங்கின் சிவநத முகம இருககும். (நற். 95:3,4) தலைவி இளமையில தேன கலநத தீம்பாலுணவை விரிந்த பொற்கலத்திலிட்டுக் கையில் சிறு கோலினால் அசசுறுத்தி ஊட்டவும் உண்ணாளாய்ப் பந்தரின் கீழ ஓடி மறைந்து விளையாட்டுக்காட்டுவாள் (நற். 110:1-8). வேங்கை மரததில் உள்ள தேனடை சிதைந்து அதிலுள்ள தீம் நிறைநத தேன பாறையின குழிகளில் வழியும் (நற். 168:1-3). தலைவி, தான வளாககும் புனனைச் செடிக்கு நெய்கலந்த தீம் பொருநதிய பாலினை நீராக ஊற்றி வளர்பபாள் (நற். 172:3). இளமையில மனையகத்து வயலைக கொடியைப் பசு தினறுவிட, அதற்கு வயிற்றிலடிததுககொண்டு அழும தலைவி, நற்றாயும் செவிலியும தேனோடு கலநத தீம்பாலை ஊட்டவும் உணணாள (நற். 179:5,6). 'கிளிகள் அறிந்திருக்கும்படியான என தலைவியின மழலை மாறாத தீம்பொருந்திய குரலை யான் கேட்பின என நோய தீரும, கேளேனாயின் என் உயிர் தீரும்' என்று தலைவன் கூறினான (நற 209:5-9). தலைவி தன் குழநதையை "எந்தாய வருக" எனறு அழைக்கும் அழகிய தீம நிறைந்த சொல் தலைவனுககு மிகக மகிழசசியையளிக்கும் (நற். 221:8-13). யானை தன துணையுடன், தான உண்ணும் மலை வாழையை வெறுககின் பலாவினது தீமபொருநதிய பழத்தை உண்ணும் (நற். 232·1-5). வண்டின தீம் பொருநதிய குரலை, யாழோசை எனறு மலையின முழையிலுள்ள அசுணமா கேட்கும (நற. 244:3,4). வெளவால், வேமபின பழததைத தினனுதலை வெறுப்பின, இருபபையின தேனபோலும் பாலவறறிய தீமபொருநதிய பழத்தை விருமபி உண்ணும் (நற். 279:1-3) கொககு உட்கார்நததால கிளை அசைந்து தீமநிறைநத மாம்பழம் ஆமபல மலர் நிறைந்துள்ள ஆழமான நீரில விழும் (நற. 280:1-3). சநதன மரததில சுறறிககொண்டிருககும தமாலக்கொடியைத் தீம்பொருநதிய தேனை எடுககும வேடர் அறுத்துச் செல்வா (நற். 292 1·3). சிறுகுடிபபாககததைச சுறறியுள்ள பனை மரங களிலிருநது தீமபொருநதிய கள்ளினை வடிததனா (நற. 323:1,3). தன கையால முலையைப பிடிததுக குழந்தைககுத தாய பாலூட்டப பாலுணணும் குழநதை போலக காநதளங்கொததோடு பொருந திய வாழைபபூவிலிருநது வரும தீம பொருநதிய நீரைக குரங்கு பற்றிப பருகும (நற. 355.1-5). ஆயர், கொனறைபபழத்தால செயத தீமபொருந திய புல்லாங்குழலை இசைபபா (நற. 364.9,10). குரஙகுக் குட்டி வேஙகைககிளையில் மறைநதிருநது சிறு கொடிசசியின கையிலுள்ள தீமபொருநதிய பாலுள்ள கலததைபபறிததுக கொணடு சென்றது (நற். 379:4,5). பரததமைத் தலைவனின பாணனிடம தோழி, 'தலைவியின கொஙகையில தீமபால் பெருகு வதைப புதலவனுககு ஊட்டுவதால முடைநாறறம வீசும, ஆகவே, தலைவனைப பரததையிடமே செல்லுமபடி கூறு' எனறாள் (நற 380·3,4). இனிய சுளையைத் தருவதால் பனைநுஙகின கணணைத தீமபொருநதிய கண எனறு கூறுதல் (நற். 392 4). தீமபொருநதிய பெரிய பொயகைககண வாழும யாமையின் பார்பபு. தாயின் முகம பாராதே வளரும (ஐங். 44.1,2). மாமரததிலிருநது முதிாநத தீம்பழம பொயகையில் விழும (ஐங். 61·1,2). 'தலைவி யாழின நரமபு முரன்றாற போனற தீங கிளவியையுடையவள்' (ஐங. 185:3,4). துமபிகள, தீம்நிறைதத ஆம்பலின குழல்போல முரலும (ஐங். 215:1,4). குரங்குகள குட்டிகளோடு தீநதேனை விருமபி உணணும (ஐங். 272:1,2). தலைவியைத தோழி, அழகும் தீம மொழியும உடைய மடநதையே, என அழைததாள் (ஐங. 300.4). தலைவன தலைவியை, 'அழகிய தீமமொழிகளை யுடையவள்' எனறு கூறினான (ஐங். 490.1). தோழி தலைவியை, அழகிய தீம்மொழியினையுடையவளே என அழைத்தாள் (ஐங. 499:5). தலைவியின எயிற்றிலிருநது ஊறும அமிழதம போனற தீம பொருநதிய நீரை, கள்ளினைவிடச சுவையாய்

இருக்கிறது என்று கூறித் தலைவன் பருகுவான் (கலி. 4:13,14). தலைவியின் முகம், தீம்பொருந்திய கதிர்களுடைய திங்களையொக்கும் (கலி. 15:16). தோழி மிகவும் தீம்நிறைந்த சொல்லையுடையவள் (கலி. 24.3). வரையாது வழங்கும் வள்ளலின் செல்வம்போலத் தீம்பொருந்திய நீரையுடைய ஆற்றங்கரையில மரங்கள் வளர்ந்தன (கலி. 27:2). நரம்பின் தீம்பொருந்திய இசையைத் தானத்திலே நிறுத்தும் வங்கியம் போல, மிஞிறோடே தும்பியும் தாதை ஊதிமுரலும் (கலி. 33:22,23). ஆண் யானை சூலுற்ற பெண்யானைக்குத் தீம் நிறைந்த கணுக்களையுடைய கரும்பினை முறித்துக் கொடுக்கும் (கலி. 40:27,28) தீம்நிறைந்த பலாப்பழங்கள் விழுந்து பாறை கறைபடிந்ததாய் இருக்கும் (கலி. 50.12) நிறைந்த மதி தீம்பொருந்திய கதிர்களை விட்டாற்போன்ற முகத்தை உடையவள் தலைவி (கலி 56.5). குழந்தை பால் குடிக்க இடையீடு நேர்ந்தபொழுது தாயின் தீம்பொருந்திய பால் சுரந்து வழிவதுமுண்டு (கலி. 83:5). மகளிர், அழகிய தீம்பொருந்திய சொற்களையுடையவர் (கலி. 83: 28). தலைவன், அமையாத தீம்பொருந்திய மென்மையினை யுடையவன் (கலி. 92:14,93 2). ஆயர் கொன்றைக் காயைத் திறந்து அமைத்த தீங்குழலில் இசையெழுப்புவர் (கலி. 106.3). ஆயர் மகளிர் தீம்பொருந்திய பாலுள்ள கலத்தினை வீட்டிற்குள் பதனப்படுத்துவர் (கலி. 111:1) கோவலருடைய தீம்நிறைந்த குழலின் இசை, மாலைக்காலத்தில் தலைவரைப் பிரிந்த மகளிரைத் துன்புறுத்தும் (கலி. 130: 15). தலைவனிடம் தோழி, 'தலைவியை நுகர்ந்து பின் துறத்தல் தீம்நிறைந்த பாலை உண்டு பின் பாலிருந்த கலத்தைக் கவிழ்த்துவிடுதலை ஒக்கும்' என்று கூறினாள் (கலி. 133:16,17). முழுத்திங்களின் தீம்பொருந்திய கதிர்களை உண்ணுகின்ற தேவர்களுக்குத் தலைவர் திருமால் (பரி. 3:51,52). வையை நீர் தீம்பொருந்தியது (பரி. 6:79,80;10:111). மாமரத்தின் தளிர் தீம் நிறைந்தது (பரி. 10:6). வையையின் தீம்நிறைந்த புதுப்புனல் சந்தனம் முதலிய பலவகை மரங்களைச் சாய்த்துக் கொண்டு கடல் பொங்கிவருவது போல விரைந்தது (பரி. 12:5-8). வையையின் கரையருகேயுள்ள பூம்பொழில்கள், தமக்கு விருந்தளித்த தீம் பொருந்திய வையை நீருக்கு எதிர்விருந்தளிப்பதுபோல நறுமலர்களைச் சொரிந்தன (பரி. 16:16-19). முகில் மலையில் முழங்கிய அளவிலேயே, தீம்பொருந்திய நீர் வையையிலே கரையில் மோதி ஆரவாரிக்கும் (பரி. 16:48,49). முருகவேளின் திருப்பரங்குன்றத்தின் ஒருபுறத்தில் பாணருடைய யாழின் தீம்பொருந்திய இசை எழும் (பரி. 17:9,10). திருப்பரங்குன்றத்தின் சுனைகளின் பக்கம் சாய்ந்திருக்கும் மரங்களிலே மகளிர் சிலர் ஏறி, மரத்தின் தளிர்களைத் தீம் பொருந்திய சுனைகளில் உதிர்ப்பர் (பரி 19:67,68). வையையாற்றில உள்ள திருமருதமுன்றுறையின் கண் இசைவாணர் தீங்குழலினை (வேய்ங்குழலை) இசைத்தனர் (பரி. 22:40). திருமருத முன்றுறை தீம்பொருந்திய நீரையுடைய வையையில் உள்ளது (பரி. 22:45). உயிர்களுக்குத் தீம்பொருந்திய நீர் இன்றியமையாத உயிர் மருந்தாக இலங்கும் (பரி தி. 1:4).

2. சாறு. கரும்பு வெட்டுவோர் தீம் - சாறு - பிழியும் எந்திரத்தின் பத்தல் வருந்த அதைப் பயன் கொள்வர் (பதி. 19:23). முதிர்ந்த மாங்கனியினுடைய தீமொடு பலாவின் சுளைகளையும் தேனையும் கலந்து மூங்கிற்குழாயுள் பெய்து முதிரவைப்பர் (அகம். 348:3-6).

3. வெல்லக்கட்டி. பாண்டியநாட்டிலிருந்து பல பண்டங்களோடு தீம் - வெல்லக்கட்டி - கலந்து பொரித்த புளியாகிய உணவுப்பண்டமும் நாவாயில் வெளிநாட்டிற்குச் சென்றது (மது. 318).

4. கடுமை. கோட்டானின் குரலோசை, துடியோசை போன்று தீம் - கடுமை - பொருந்திய ஓசையாக இருக்கும் (புறம். 370:6).

**தீமை** - 1 கொடுமை சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி, தான் ஆராய்ந்துகண்ட தீமையை - கொடுமையை - ஒருவன் செய்தால், அவனுக்கு அறநூற்படி தண்டனையளிப்பான் (புறம். 10:3,4). பெரியோர் தீமை செய்பவரிடத்தும் பொறுமையைக் கடைப்பிடிப்பார் (நற். 116:1,2). 'தலைவன் செய்த தீமையை (பிரிந்துசென்றதை) மறக்க முயன்றும் முடியவில்லையே' என்று தலைவி கூறினாள் (கலி. 34:9,13,17). தலைவி, தனக்குத் தலைவன் செய்த தீமையைப் பிறர் அறியாதபடி மறைத்தாள் (கலி. 44:18, 19). தலைவன் தலைவிக்குச் செய்த தீமைகளை எல்லாம் தோழி எடுத்தோதி அவனை இணங்குவித்தாள் (கலி. 45.21). பரத்தமையில் ஒழுகிய தலைவனின் தீமையைத் தலைவி பொறுத்துக் கொண்டாள் (கலி. 90:27, 28).

2. பாவம். உறையூர் முதுகண்ணன் சாத்தனார், சோழன் நலங்கிள்ளியை நோக்கி, 'நல்வினையினது நன்மையும் தீவினையினது தீமையும் - பாவமும் - இல்லை என்போருடன் சேராதே' என்று அறிவுரை கூறினார் (புறம். 29:11, 12).

**தீமொழி - 1.** தீயசொல். தலைவன் தலைவியருடைய களவொழுக்கக்காலத்து, அவ்வூர் மகளிர் அவரைப் பற்றித் தீமொழியாலே - தீயசொற்களாலே - அலர் கூறினர் (நற். 36:6, 7).

2. பழிச்சொல். அறநெறிநடக்கும் நல்லோனைப் பற்றி, தீநெறியோரால் கட்டிக்கூறப்பட்ட தீ மொழிகள் - பழிச்சொற்கள் - எல்லாம் சான்றோர் அவையால் ஆராயும்போது இல்லையாமபடி முடியும் (கலி. 144:70-72).

**தீயார்** - தீய மக்கள். தலைவன் தலைவியிடம், 'தீயாரை - தீயமக்களை - உடற்றுமாறு போல என்னை உடற்றுகின்றாயே' என்றான் (கலி. 87: 9, 10).

**தீர்வை** - கீரி. நன்னன் வேண்மானின அரண்மனை முன்றிலில் காணப்படும் கையுறைப் பொருள்களில், பாம்பினது வலியையழித்த சிறிய கண்களை உடைய தீர்வையும் - கீரியும் - இருநதது (மலை. 504).

**தீரம் - 1.** வலிமை. முருகவேளுடைய வேல, விண்ணோர்களைச் சிறைமீட்ட தீரம - வலிமை - மிக்கது (முரு. வெ. 3:1, 2).

2. கரை. மதுரை நகரின் ஆடவரும் மகளிரும வையையிலும் வையையின் தீரத்திலும் – கரை யிலும் - கூடினர் (பரி 22:32-35).

**தீவு** - நாற்புறமும் கடலால் சூழப்பட்ட நாடு. சோழன குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், தான வென்ற தீவிலிருந்து - நாறபுறமும் கடலால் சூழப பட்ட நாட்டிலிருநது - பொன்னாலாகிய கலங் களை வாரிக கொணர்ந்தான் (புறம. 397:22).

**தீன்மிதி நாகனார்** - புலவர். இவர் பெயர், 'தீன்மதி நாகனார்' என்றும் 'தீமிதி நாகனார்' என்றும காணபபடுகிறது என்பர் உ.வே.சா. (குறு. பாடினோர் வரலாறு). இவருடையதாகக குறுந் தொகையில மட்டும் ஒரு பாடல் (111) உள்ளது. வரைவு நீட்டிக்கும் நிலையில் தலைவியின் மெய்வேறுபாடு கண்டு வெறியெடுககும் அன்னையின் செய்கையைத் தோழி தலைவிக்குச் சொல்லுவாளாய்ச் சிறைபபுறததலைவனுககு அறிவிககும் துறையில் இவர் தம் பாடலை இயற்றி யுள்ளார். தலைவனது மலைநாடடுத்துறுகலலிறகுக் கைமறைநத கரிய பிடியானையை இவர் உவமித் துள்ளார்.

# து

**துகள் - 1.** குற்றம். துகள - குற்றம் - அற்ற கேள்வி யினையுடையவர் அந்தணர் (புறம 221.6). கற்பொழுககமாகிய கொள்கையை யுடைய துகளற்றவர் குலமகளிர் (புறம். 224:6). அதிகமா னுடைய உரிமை மகளிர் துகள் தீர்ந்தவர் (பதி. ப.8:8). வேண்டுவன கூட்டி முறற முடிககபபெறறது துகளற்ற கொண்டை (முரு 26). கடாவிட்டுப போன பின்பு துகள் நீங்குமபடி வைககோலையும கூளததையும நீககிக் கையாலே பொலி தூறறினா (பெரு. 236-240). ககசாலே நடுவுவெளியான இடம் மறையுமபடி கோககூப்படுத துகள் தோநது, ககசுக் கட்டில என்னும பெயரையுடைய பாணடில் செயயபபட்டது (நெடு. 123-127). திஙகளை உரோகிணி கூடிய நாள் துகள் தீரநத நனனாள (அகம். 136:4,5). துகள் அற முதிாநதது தோபபிக் கள் (அகம். 265:16). துகள் அறப பூஙகொததுக களை உதிர்த்தணிநத கூநதலை யுடையவள தலைவி (அகம். 288·15-17). துகள் அறற ஒளியையுடையது முகம் (கலி 64:15). துகள் அறுகினற அறிவினை யுடையவர் அவையததார் (கலி. 94:42).

2. அணு. இமயவரம்பன நெடுஞசேரலாதன, பகைவர் நாடடிற சென்று செயத போரில பின வாங்குதலை, வெயிற கதிரிலே தோனறும் துகள - அணு - அளவேனும பொருநதுதலையறியான (பதி. 20:5-7).

3. தூளி/பொடி. ஆவினைக கவரச சென்ற மறவன, கலநத துகளினை - தூளியினை - உடையவனாய மீண்டு வந்து கள்ளிறகு விடாயததலும் உணடு என்று புலவா அமமறவனுககுக கள்ளை எடுத்து வைககக் கூறினார் (புறம. 258). தெருவு, தோ ஓடுவதால துகள பொருநதியிருநதது (புறம். 345 2). போாககளம குருதிததுகள் மிகுநதிருக்கும (புறம. 371:27). யானைகளின மத அருவி, எழுநத துகளை அவித்தலால தெருவு புழுதியடங்கியது (சிறு. 200, 201). குதிரைத் திரள் செல்லுதலால எழுநத மிகக நிறத்தையுடைய துகள் வானததிடததே வெயிலை மறைததது (மது. 49,50). பல தோகளும ஓடுதலால துகள் பொருந்தி வேறுபட்டன சிததிரங்களை யுடைய கோயில்கள் (பட். 47-50). சுனையினநீர் துகள் அறததெளிந்தது (துகள் என்பதறகுக கலக்கம எனவும் கூறுவா) (மலை. 250). குளஙகள் நீரறறுத் துகள்பட்டிருககும (அகம. 11.6). நிலத திலே துகள் பரககக கரடிகளின கூட்டம பரந்து சென்றது (அகம. 15 14-16). உழவர்

தூற்றாப் பொலியினின்றும் முகந்த வலியற்ற நுண்ணிய துகள், மேகம் போலத் திசையினை மறைத்தது (அகம். 37:2-4). செவ்விய ஆக்கள் கிளப்பிய செம்மண்ணாகிய நிறம் பொருந்திய துகள் வானின்கண் மிக்குத் தோன்றும் (அகம். 79:7,8). துகளைத் தன்னிடத்தே உடையது மேல் காற்று (அகம். 249:14). உப்பு வாணிகரின் பகடுகள், வருந்தி இழுக்கும் கொடிய இடங்களில் எழும் துகளைத் திரட்டிக் காற்றுச் சுழற்றும் (அகம். 329:7,8). தாழையின் தாதாகிய துகளை அப்பியது கூந்தல் (அகம். 353:19). அழகிய மாலையினை அணிந்த மார்பில் சாந்தினொடு நுண்ணிய துகளை அணிந்தனர் (அகம். 354:9,10). பொற்றைக் கல், துகள் படிந்த யானைபோல் தோன்றும் (குறு. 279:5,6). தினையிடத்தே களைக் கொட்டை எறிவதனால் நுண்ணிய துகள் தோன்றியது (குறு. 392:4,5). வெம்மையான துகள் மிக்கது நெறி (நற். 66:5). சாந்தம் பூசிய கூந்தலை அழகு பெற வாரி, அது காய்ந்த வழி உதிர்க்கப் பட்ட துகள்படு கூந்தலை உடையவர் தோழியர் (நற். 140:3,4). நுண் மணலாகிய துகளை முகந்தெழுந்தது ஊதைக்காற்று (நற். 163:2). தலைவியின் இருள் ஒத்த கூந்தலில் மிக்க துகள் படிந்தது (நற். 270:3,4). வெய்ய துகள்மிக்கது பாலை நிலம் (ஐங். 330:1). காட்டில் மலர்களின் நிறைந்த துகள் (மகரந்தப்பொடி) அழகைத்தரும் (ஐங். 416:1). கோடையின் வெம்மையால் மண் பிளக்கத் தெளிந்த நீர்நிலைகளிலும் துகள் உண்டாயின (கலி. 20:5,6). முடியை வகிர்ந்து கைசெய்து முடிக்கையினாலே பூந்துகள் வீழ்ந்து கிடந்தன (கலி. 72:20). பரத்தையின் முடியில் நின்று உதிர்ந்த பூந்துகள் தலைவன் ஆடையில் சிந்திக் கிடத்தலைக் கண்டு காதலி ஊடினாள் (கலி. 81:31,32). பொதுவர், ஏறுகளைத் தழுவிப் போக்கும் நிலையை உட்கொண்டு புகையொடு துகள் எழத் தொழுவிலே பாய்ந்தனர் (கலி. 101:13,14). ஏறு தழுவப் பொதுவர்கள் சென்றபோது துகள் எழுந்தது (கலி. 102:21). பொதுவர், கண்கள் மறைத்தற்குக் காரணமான துகளாலே விசும்பு தூர்ந்து போம்படியாகத் தொழுவினுள்ளே பாய்ந்தனர் (கலி. 105:27-29). செவ்வேள், பார் துகள் படும்படி புகுந்து அமர் புரிந்தார் (பரி. 5:1,2). நீராடும் மகளிர், எண்ணெய் நீங்கும்படி இழை துகளை இட்டுப் பிசைந்து நீராடினர் (பரி. 10:91). வாலிய துகளால் கண்ணாடியை விளக்கினர் (பரி. 12:19,20). மகளிரின் கமழ்கின்ற துகள் (தாது) உதிர்த்த கதுப்பின் ஊடே சென்று காற்று அசைத்தது (பரி. 21:48,49).

**துகிர் – பவளம்.** பொன்னும் துகிரும் - பவளமும் - முத்தும் ஒன்றற்கொன்று சேய் நிலத்துத் தோன்றினும் அணிகலங்களைச் செய்யும் காலத்து ஓரிடத்தில் தோன்றினாற் போல எந்நாளும் சான்றோர் சான்றோர் பக்கத்தவராவர் (புறம். 218:1-6). துகிரினை வேண்டுவோர் அவற்றை எடுத்தற்கிடமாயது கடல் (பதி. 30:7-8) துகிர்போலும் மேனியினை யுடையவர் மகளிர் (பட். 148). தென் கடல் முத்தும் கீழ்கடலில் தோன்றிய துகிரும் பட்டினத்தே வந்து செறிந்தன (பட். 189,192). சிவந்த, வளைந்த துளையினையுடைய துகிர் போல் இண்டை பூத்தது (அகம். 243:1,2). தலைவியின் மகள், உடுத்தவை பொன் மணிகளையுடைய வடம்; அதன் மேலே அழுக்கில்லாத செந்துகிர்க் கோவை (கலி. 85:3,4). புதல்வன் பூண்டது மூதாயினது நிறத்தையுடைய துகிராற் செய்த அழுக்கற விளங்கிய இடபத்தை யுடைய விளங்குகின்ற பூண் ஆகும் (கலி. 25:8-11). புதல்வன், காட்சிக்கினிய துகிர்ப்பலகைமேல் அமைந்த கையாற் புனைந்த வேழத்தைச் சதங்கை ஆர்ப்ப இழுத்து வந்தான் (கலி. 86:5-10).

**துகில் - 1. உடை.** கழுவப்பட்ட துகிலை-உடையை - விரித்தவழி அது நுடங்குவது போல அகிற்கட்டையினின்றும் எழுந்த புகை நுடங்கியது (புறம். 337:9,10). சேரமான், தன் அரையில் உடுத்தியிருந்த புகையை விரித்தாற் போன்ற உயர்ந்த துகிலைப் பரிசிலனுக்கு உடுப்பித்தான் (புறம். 398:19,20). விறலி பூத்தொழிலையுடைய துகிலையணிந்த அல்குலை யுடையவள் (பதி. 54:5,6). இந்திர கோபத்தை ஒத்த இயல்பான சிவப்பாகிய பூத்தொழிலையுடைய துகிலினை சூரரமகளிர் அணிந்தனர் (முரு. 15). நாலவிட்டமையால் நிலத்தைப் பொருந்திய நறிய மென்மையாகிய துகிலினை, முருகன் உடுத்தினார் (முரு. 213,214). மகளிர் துகில் சூழ்ந்த அல்குலினையுடையவர் (சிறு. 262). துணங்கையாடும் பூதங்கள் வெள்ளியதுகிலை உடுத்து நின்றவை போலச் சிலந்தியினது வெள்ளிய நூல் சூழ்ந்த பக்கத்தினையுடைய, நெற்போர் தோன்றியது (பெரு. 234-237). மாடத்துறையும் மகளிர், கொன்றையின் மெல்லிய கொம்புகளிலே பனிமாசு கிடந்து தவழ்கின்றவை போலப் பசிய மணிகள் கோத்த வடங்களையுடைய, அல்குலிற் கிடக்கின்ற மெல்லிய துகில் அசைய உலாவினர் (பெரு. 327-331). கோப்பெருந்தேவியின் பூத்தொழிலையுடைய துகில் கிடந்த அல்குலில் இக்காலத்து அழகிய மாசேறிய விளங்கிய நூலாற்செய்த புடவை கிடந்தது (நெடு. 145,146). தோளினின்றும்

நழுவி வீழ்ந்த அழகினையுடைய துகிலை இடப் பக்கத்தே அணைத்துக் கொண்டு, பாண்டியன் நெடுஞ்செழியன் புண்பட்ட வீரரை அக மலர்ச்சி தோன்ற நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளா னாய்ச் சென்று கண்டான் (நெடு. 181-187). அருவி அழகிய வெள்ளிய துகிலை ஒக்கும் (குறி. 55). துணைப் புணர்ந்த மடமங்கையர் பட்டு நீக்கித் துகில உடுத்தனர் (பட். 107). துகில் ஆய்ந்து நெய்யுங் கால பாவானது விரிந்தது போல வெயில விளங்கி அசைந்தது (அகம். 293:4,5). வண்ணாத்தி, நெடும் பொழுது பிசைந்து கஞ்சி ஊட்டிய அழகிய துகில் ஒளிரும் அலகுல் உடையவள் தலைவி (அகம. 387: 6,7). எக்கர் மணலை, நுணங்கிய துகிலின் நுடக்கத்தைப் போலக் காற்றுத் தூற்றியது (நற். 15:1-3). வெளிய துகிலை விரித்தாற்போல வெயில் விளங்கும் (நற். 43:1;99.2). தலைவி நுதலில் உண்டாகிய வியர்வை நீரை அழகிய துகிலின் முற்பகுதியால் (முன் தானையால) துடைத்துக் கொண்டு புலவி மிக்கு அடிசிறசாலை புகுந்தாள் (நற். 120:7-9), நடத்தலால் ஒதுங்குதல் அமைந்த நுணணிய துகிலினுள் தோன்றி விளங்கும் அல்குலையுடைய குறுமகள் தலைவி (நற். 366:2,3). ஏந்தினது, சிலம்பி நூலால் மூடப்பட்ட சிவந்த காய், துகிலால் பொதியப் பெற்ற பவளத்தை ஒத்தது (ஐங். இ. 2:2,3). அழகிய துகிலால் போர்த்த போர்வையை வாங்கி அழகுபெற உடுத்துத் தலைவி தலைவன செய்யும் குறியிடத்து நின்றாள் (கலி. 65:4,5). நிறத்தை ஒழியாமல் தன்னடுவே தோற்றுவிக்கும் உடுத்துதல கழன்ற அழகினை யுடைய துகில தலைவியின் அடியைத் தடுத்தது (கலி. 81:5,6). தலைவி, அல்குற்கு உடுத்தவை மணி, பவள வடங்களும் அவற்றின் மேலே உடுத்தின கழல்கின்ற ஒன்றாகிய திரைந்த பூந்துகிலு மாகும் (கலி. 85:3-5). முருகனுடைய உடையாய்த் தாழ்ந்து விளங்குகின்ற வெள்ளிய துகிலை ஒப்ப வெள்ளிய கால்களையுடைய ஏறு (கலி. 105:17,18). வையை நீர் மகளிர் உடுத்த துகிலையும் மேகலை யையும் பிறவற்றையும் பறித்துச் சென்றது (பரி. 7:46-48). வையையில நீராடும் மகளிர் சிலர் மேலே வெண்டுகிலைப் போர்த்தனர்; சிலர் கூந்தலில் வெணடுகிலை ஈரம்புலரச் சுற்றி முறுக்கினர் (பரி. 10:79,80). துகிலின்கண் சோந்த பூந்தொழில போலப் புனலின்கண் நீரினையுடைய மணிகள் நிறைந்தன (பரி. 12:93). நீராடு வோருடைய ஈரத்துகிலில இருந்து பொசிந்த நீரால கரை கார்காலத்திற்குரிய தன்மையைப் பெற்றது (பரி. 12: 98). இளஞாயிற்றினது அழகு போலும அழகமைந்த பூந்துகிலை உடையவர் திருமால (பரி. 13:1,2). காதற்பரத்தை சுற்றி நின்ற ஆயத்தார் அரக்கு நீரை எறிய அதனைத் துடையாது இருந்துகிலினால ஒற்றி நின்றாள் (பரி. 16:20-23). அன்பர் பூந்துகில்களையும பிறவற்றையும ஏந்தி வந்து முருகன் காவல மரமாகிய கடம்பினைப் பரவினர் (பரி. 17:1-4). திருப்பரங்குன்றத்திற்கு மைந்தரும மகளிரும் சிறந்த அணிகலன்களையும நல்ல துகில்களையும அணிந்து செலவர் (பரி. 19.12). செவ்வேள் குன்றத்தே ஒருத்தி, துகில நெகிழக் கண்கள் சிவப்பப் பூங்கொடிபோல அசைந்தாள் (பரி. 21. 58, 59). வையையில் நீராடுதற்குக் கள்ளையும பூந்துகில்களையும ஏந்திச் செலவர் (பரி. 22.19).

2. துகிற்கொடி. வேறுபட்ட பலவாகிய துகில-துகிற்கொடி-போல அருவி, அசைந்து ஓசைபடக் குதித்தது (முரு. 295,316). கால்கள் நட்டு வைத்த கவிந்த சட்டங்களின் மேலே வெள்ளிய துகிற் கொடிகள் கட்டப்பெற்றன (பட். 167,168). பட்டத்து யானை மீது துகிற்கொடி கட்டினர் (அகம 111:4).

**துகில் முடித்தல்** - மயிர்க்கட்டுக் கட்டுதல் (தலைப்பாகை கட்டுதல்) துகில முடித்து - மயிர்க்கட்டுக்கட்டி-சட்டையிட்டனர் மெய்க்காப்பாளர் (முல்லை. 53, 54). விளங்குகின்ற துகில் முடித்தனர் காவிதி மாக்கள் (மது. 494,499).

**துகிலிகை** - **ஓவியர் எழுதுகோல்.** பாதிரியின் வெளிய இதழ்களையுடைய மலர்கள். ஓவியர்களின் அரக்கு ஊட்டிய துகிலிகை - எழுதுகோல்-போலத் தோன்றின (நற். 118.7,8).

**துச்சில்** - **குடியிருப்பு.** குயில் தம பெடையுடனே நீங்கிப்போய், அழகிய புறவுகளுடனே துச்சிலாக-குடியிருப்பாக-இளமரக்காவில தங்கும் (பட. 55-58). 'சிறிய ஊரில், தலைவனுடன் காட்டினைக் கடந்து சென்ற என மகளுக்கு, வரும விருந்தாக அவர்களை ஏற்று, உணபித்துத் துச்சில இருத்த, மனைக்கு உரிய பெண்டாக யான ஆவேனாக' என மகட் போக்கிய தாய கூறினாள (அகம. 203: 10-18). "என மகள சீறூரிடத்து இரவில தன் துணைவனுடன் ஓர் துச்சிற்கண் தங்கியிருப்பாளோ' என யான நோவேனாகின்றேன" என்று மகட்போக்கிய செவிலி கூறினாள (அகம. 321: 10-14).

**துடரி** - தொடரி (செடிவகை). கள்ளை உணட ஆண மக்கள் களாப்பழத்துடனே துடரிப் பழத்தையும்

வெறுப்பின் நாலறு பழத்தை உண்பா (புறம் 177. 8-11).

துடவை - தோட்டம். உழுது விதைத்த பின்னர் இடையே தோன்றிய களைகளைச் செத்திய துடவையை - தோட்டத்தை - அறுக்கும் பருவம் வரும்போது குறும்பூழ்ப்பறவை அதனை விட்டு விலகிச் செல்லும் (பெரு. 201-205). சிறுவெண் கடுகு, உழாதே களைக்கொட்டால் அடிவரை நது கொத்தும் துடவையிடத்தே நெருங்கி விளைந்தன (மலை. 122,123). குறவனது துடவையிடத்தே விளைந்த கடவுளுக்கிட்ட சிறு தினையின் கதிரை அறியாது உண்டு மயில் வெம்மையுற்று நடுங்கியது (குறு. 105:1-4). குறவனது துடவையிடத்தே பொன் போல சிறுதினை விளைந்தது (குறு. 133:1). துடவையில் அழகிய இளம் தினைப்பயிர் விளைந்தது (குறு. 392:4)

துடி - உடுக்கை. இழிந்த பிறப்பினை உடைய புலையன், தனது கை சிவப்ப வலியான முடுக்கிக் கொட்டும், வலிய கண்ணையுடைய அச்சத்தைச் செய்யும் துடி-உடுக்கை-மலையின்கண் பேராந்தை யோடு கூடி ஒலிக்கும் (புறம். 170:5-8). தன் ஊரின் கண் நிரைகொண்ட வீரர் எய்த அம்பு வெள்ளத்தைத் தன் துடியே புணையாக வென்று பகைவரைக் கொன்று மறவன் நிரை மீட்டான் (புறம். 260:12-15) பாணன் துடியுடையவனாக விருப்பான் (புறம். 280:8) புலையன் துடி எறிவான் (புறம். 287.1). துடியின் கண் போன்ற அடியை யுடையது யானைக்கன்று (புறம். 369:26; பொரு. 125). அருஞ்சுரத்தே கோட்டான், துடியின் ஒலியோ என மயங்குமாறு குரல் எழுப்பும் (புறம் 370:6). துடியோசை போலும் ஓசையினையுடைய குடிஞை (பேராந்தை) (பொரு. 210). பந்தரிடத்தே ஓசை கடிய துடி தொங்கியது (பெரு. 124). திமிலர் கொழுவிய மீன்களையறுத்த துண்டுகள் துடியின் கண்போன்றன (மது. 319,320). வேடர், துடி யொலிப்பத் திரண்டு நெல்லினைக் கொள்ளை யாகக் கொண்டுண்டனர் (பட. 265-267). வராலினது தடி துடியின் கண்ணையொத்தது (மலை. 457,458; அகம். 196 2,3). உருள்கின்ற துடியின் (இழுகு பறையின்) ஓசையைப் போலக் குடிஞைகள், குன்றத்தில் பொருள் தெரிய ஒலித்தன (அகம். 19 3-5). வெட்சி மறவர், நடுகல்லில் மயில் தோகைகளைச் சூட்டித் துடியை அடித்துப் பலி கொடுத்தனர் (அகம். 35:6-9). களவுப் புணர்ச்சியை ஆரவாரமுடைய துடியினைப் போல ஒருகால் இணைந்தும் ஒருகால் தனித்தும் அயலோர் அலர் கூறினர் (அகம். 62.6,7). ஆடுந்தோறும் ஒலிக்கும் அழகிய வாயினையுடைய கடிய துடியினையும் வளைந்த வில்லையுமுடையவர் மறவர் (அகம். 79:13,14). மறவர் போர்க்களத்தே துடி யினைத் தாழக்கொட்டி அணிகலன்களைத் திறை யாகப் பெற்ற போர் விருப்பத்தையுடைய வென்றியினர் (அகம். 89:14,15). கொடுவல் ஆடவர் மிக்க குரலையுடைய கடிய துடியின் ஒலிக்கொத்த தாளத்தோடு ஆடி ஊனைப் புழுக்கியுண்ணுவர் (அகம். 159:5-11). கானவரது சீறூரில் கள்ளுண்டு களிப்புறலால் ஒலிக்கும் வலிய முகத்தினையுடைய கடிய துடியின் ஒலியினைக் கேட்டுத் தலைவி அஞ்சுவள் எனத் தலைவன் கருதுவான் (அகம். 261:14,15). கொலைவில் ஆடவர், பகைவர் நிரைகளைக் கவரும் போரில் ஒலி மிகு மாறு அடிக்கும் பெரிய துடியின் வாரைப் போலச் செறிந்தும் நெகிழ்ந்தும், மேய்தற் பொருட்டு உமிழ்ந்து வைத்த மணியினை இழந்த பாம்பைப் போல வருந்தியும் அல்லகுறிப்பட்டுத் தலைவன் துயருழந்தான் (அகம். 372:10-13). மலையன், யானை மீது ஏறி நடத்திச் சென்று புலையனால் முழக்கப்படும் பெரிய துடி ஒலிக்க, வேற்று நாட்டிற் புகுந்து பகைவர் அரணையழித்தான் (நற். 77:1-4). துடிபோலும் அடியையுடையன யானைக்கன்றுகள் (கலி. 11:8). கடிய துடியினது ஆரவாரத்தையுடைய மறவர் ஆறலைப்பர் (கலி. 15:4). இளநெல்லின் கண்ணும் அரிகாற் சூட்டின் கண்ணும் வையைப் புனல் பரந்தது என்பதைத் துடி கொட்டி அறிவிப்பர் (பரி. 7:27,28). திருப் பரங்குன்றத்தில் துடியின் ஓசைக்கு இயைய ஒருத்தி ஆடினாள் (பரி. 21:19,20) துடிச்சீருக்கு இசைய முத்தாரம் அசைய ஒருத்தி ஆடினாள் (பரி. 21:60, 61). துடிச்சீர்க்கு இசையத் தோளைப் பெயர்த் தாடினாள் (பரி. 21:64,65). துடிச் சீருக்கு ஏறப் காற்றாகிய நட்டுவன் பூங்கொடியாகிய விறலியை ஆடச் செய்தான் (பரி. 22:42,43).

துடியர் - துடிப்பறை கொட்டுவோர். (அண்மைவிளி) 'துடியர் துடிப்பறை கொட்டுவோர் - 'நீவிர், தூய வெள்ளறுவையுடையோனைக் குறுகிப் புட்கள் செய்யும் ஆரவாரத்தை நீக்குவீராக' எனக் களத்திலே மாண்ட மறவனைக் குறித்துப் பாடுவர் (புறம். 291:1-3).

துடியன் - துடிகொட்டுவோன். தழை விரவித் தொடுத்த கண்ணியையுடைய துடியன் - துடிகொட்டுவோன் - அதனைக் கொட்டி வெட்சிப் போர்க்கு எழுச்சி யினைத் தெரிவிப்பான் (புறம். 269:6). துடிப்பறை

கொட்டுவோன் கையில் வேல் இருககும் (புறம். 285:2). துடியன், பாணன், பறையன, கடம்பன் என்று சொலலப்பட் நால்வகைக் குடிகளலலது வேறு குடி இல்லை என முல்லை நிலச் சிற்றூர் ஒனறின் நிலை குறித்து மாங்குடிகிழார் பாடுவர் (ஔவை து.உரை) (புறம். 335,7).

**துடுப்பு – 1. அகப்பை.** பகைவர் முடிததலையினை அடுப்பாகக் குருதிப்புனலாகிய உலையினகண் தசை முதலியவற்றைப் பெயது வீர வளையையுடைய தோளாகிய துடுப்பால் - அகப்பையால - துழாவி அடபபட்ட உணவால் களவேள்வி வேடடவன பாண்டியன் தலையாலங்கானத்துச செருவென்ற நெடுஞ்செழியன (புறம. 26.8-11). தசையாகிய துணடஙகளை அரிசியுடனே நெய்கலந்து சமைததுத் துடுப்பால் துழாவபபட்ட வெணசோறறை இரவலர் உண்ணுவர் (புறம. 328.9-12). பகைவா தலைகளால் செயயபபட்ட அடுப்பிலே ஆககபபடும் கூழிடையே வரிக்குடர்கள் பிறழ்நது பொங்க, மண்டையோட்டை அகபபையாகவும் வனனி மரததின கொம்பை அதிற் செருகப்படட காம்பாக வும் கொணட துடுப்பினால் ஏனாத பேய்மகள் துழாவிச சமைததாள் (புறம. 372:5-9). போர்க் களத்தில ஆண் மக்கள் தலையாகிய அடுபபின கணணே வீரவளையணிநத தோளையுடைய கைகள் துடுப்பாகக் கொணடு துழாவி அடுதலுறற ஊன சோறறைக கொண்டு களவேள்வி செயதனர் (மது. 28-38). செஙகாநதளினது துடுபபுப்போலும் (மடல்) இணைநத குலையை யொததது முன்கை (பட். 153,154): பலாப்பழத்தின் விதையைப பயன் கோடறகுக கன்றுகளைப பிணைத்துக காந்தளினது துடுப்புப் போலும் கமழுகின்ற மடலாலே அடிததுக கடா விட்டனர் (மலை. 336 339). காநதளின நீணட இதழைக் கொண்ட நெடிய துடுபபாகிய குலை ஒடியுமாறு வாடை வீசியது (அகம். 78.8-10). பல துடுபபுககளாக எழுநதுள்ள அசையும் குலைகளையுடையது காநதள் (அகம. 108:15). அலர்களையுடைய காநதளினது, குளிர்நத எழுசசியையுடைததாகிய வடிவினையுடைய, துடுப பென்று கூறும்படியாக இணையொத்தது முனகை (கலி. 59.3,4). துடுப்புப போலும் முகையை முனனர் ஈன்று, பின்னர் நெருபபைச் சேர நிரைததாற் போனறு அலாந்த இதழினையுடையது செங்காந்தள் (கலி 101:3,4).

**துணங்கை – கூத்தில் ஒருவகை.** மகளிர் ஆரவாரம் மிகக துணங்கைக் கூதது ஆடிய இடஙகளில அவா கள் அணிநது வீழததிய ஆமபல மலர்களைப் பசுக்கள் உண்டன (பதி. 13:5,6). கணைய மரததைப போனற திணிநத கையை உயர வீசிப பிணங்கள மிகுந்துள்ள போர்க்களபபரபபில துணஙகைக் கூத்தை (வீரர்) ஆடினா (பதி. 46 10-12). விளககின ஒளியிலே, முழவு ஒலிககினற, மகளிர் ஆடும் துணஙகைக் கூத்திற்குத தழுவுதலையுடைய தெயப மாக, சேரலாதன தலைககை கொடுத்தமைககு அவன் தேவி ஊடினாள் (பதி. 52:13-16). சேரலாதன போர்க்களததில துணங்கைக கூதது ஆடினான (பதி. 57.3,4). தம் பகைவரது படைகெட்டு ஓடவும் அரசர்கள் போாககளததில் இறபபவும கொனறு வெனறாடுகின்ற துணஙகைக கூததை வீரர் ஆடுவா (பதி. 77.3,4). பேயமகள் நிணததைத தின்கினற வாயினை உடையளாயத துணஙகைக கூததாடுவள் (முரு.51,56). தம்முடைய சுறறததோடே செறிநது நின்று பூதஙகள் துணஙகைக கூத்தாடும (பெரு. 234,235). பேயகளாடும துணங்கைக கூத்தினை உடையவள இறைவி (பெரு. 459). பேயமகளிருடைய இணைநத ஆரவாரம் முழஙகு கினற துணஙகைக கூததின சீாககுக குறைத்தலைப பிணம் எழுநது நினறு ஆடும (மது. 25-27). மகளிா, துணஙகைக கூததினையும் குரவைக கூததினையும மறபப அமபலங்களிலே பேயமகளிர் உலாவி யாடுவா (மது. 159-163). துணங்கைக கூததினையும குரவைக கூததினையும் உடையது பெரிய ஊா (மது. 327-329). விழாககளததே முழவு ஒலிககும துணஙகைக் கூத்தாடுதல் வழககம (அகம. 336:16). 'வீரர் திரணடிருககின்ற சேரி விழாவினிடததும பொதுமகளிா அவரவா காதறகிழவரைத தழுவி யாடும் துணஙகைக கூததினகணணும் யாணடும என் தலைவனைக காணேன' எனக காதலனை இழநத தலைவி கூறினள் (குறு. 31.1-3) மகளிாக் குரிய துணங்கைக கூத்தாடும நாளகளும வநதன; அககாலத்திலே அககூததினிடததே ஒருவாகண மறறொருவா கணணுடன தாகக அமமகளிரது மணததைக் கொள்ளுதறகு மள்ளருடைய சேரிப போரும வநது விருமபிக கொள்ளபபடும' என இறபரததை, தனனைப புறஙகூறிய பரததையின பாங்காயினார் கேடபக கூறினாள் (குறு. 364) தலைவன, குழை, கோதை, பைநதொடிகளை யணிநதவனாய, விழாக களத்துத் துணஙகையாடி னான் (நற. 50:2,3). 'நினனைப பெறாது தளாநத இயலபினருடன துணங்கைக கூததாடினாய' எனறு பிறர் கூறியதைச சுடடித தலைவி தலைவனொடு புலநதாள (கலி. 66:17,18). 'நின செவ்விககு ஒதத பரததையரை அவர்ககெனறு அமைநத மனையிலே கொணடு வநது அமாததி யுள்ளாய்; அவர்பாடும துணஙகைக கூததில்

எழுந்த ஆரவாரம எம துயிலைப போககும்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 70. 13,14). 'பரதத்தையர் ஆடும் துணங்கைக் கூததிடத்தே நீ தலைககை கொடுத்தமையை அவர் சிலமபிற் சிக்கிக கரையிடத்தே கிழிநத நின் நீல ஆடை அறிவிககும்' எனத தலைவி தலைவனிடம கூறினாள (கலி. 73:16,17.)

**துணர்** - கொததுகுலை. வாழையின முதல் துணிய, தெஙகின குலை உதிர மிளகுக கொடியின கரிய துணா-கொதது-சாயநதிட அருவி இழிநதது (முரு. 307-309). பாகற பழததையும சிவநத சுளையை யுடையவாகிய துணா கொணட பலாபபழததையும மயிலகள தினறன (பொரு. 180-182). ஊறுகறி மாவினது பசிய துணரிடத்து நறிய வடுவினைக் கொணடு செயயப பெறறது (பெரு. 308,310). பலாவின காய மிகவுடைய துணரை ஒததது கனததையுடையலாகக கட்டிக் காவின வாசசிய முடடுககளையுடைய பை (மலை. 12,13). மிளகுக் கொடிகளின பசிய துணர்களில் மிளகுகள் காயத திருநதன (மலை. 521). மாமரததில காயகளைக கொணட துணாகளிலிருநது அவறறைக கிள்ளி எடுத்துப புளிபபதன அமைததனர் (அகம. 37:7-9). குளிர்சசியையுடைய மணக்கும் பூந்துணாகளி லுள்ள தாதுடன கூடிய தேனதுளி ஒழுகியது போனற அழகு ஒழுகும மாமை நிறத்தில தோன்றும தேமற புள்ளிகளையுடையவள் தலைவி (அகம. 41: 13-16). வாகையின முதிர்நத நெறறுககளைக கொணட அழகியதுணர், கூத்தர் ஆடும களததில ஒலிககும் பறையைப போல விட்டுவிட்டு ஒலிததது (அகம 45.1,2) கருப்பததை உடைய பெண வாளை மீது, துணராகவுள்ள தேமாவின் உதிர்ந்த பழத்தைக கவவி உணடது (குறு. 164:1,2). பேய் வேனிறகாலத்துச செமமுருக்கின் விளைந்த துணரைப் போன்ற மாணபில்லாத விரலகளை யுடையது (நற. 73:1,2). மள்ளர் தண்ணுமைககுப் புளளினமெலலாம் இரிநதோடுதலால் மருத மரத்தே தொஙகுகினற துணாகள உதிரும் (நற். 350:1 3). சாரலிடததே பலா மரததின் கொழுவிய துணராகவுள்ள நறும்பழம கல்லளையில வீழநது அவ்விடத்துள்ள தேனிறாலைச சிதைத்தது (ஐங. 214.1-3). துணரான காயகளையுடைய கொன்றையின குழல் போனற பழம முதிர்நதது (ஐங் 458.1) கானவன எறிநத கல நறிய வடுவை யுடைய மாவினது பசிய துணர்களைச சிதறச் செய்தது (கலி. 41:8-16).

**துணி** - துணடம். மறவர் பனையினது துணி-துணடம-போனறுவேறு வேறு கிடபபக களிறறுத் திரளைக் கொனறு வீழத்தினர் (புறம. 35:22,23). கொழுபபிலலாத பசிய இறைச்சித் துணிகள் வைதத இடததைக கோட்டான மறந்தது (பதி. 44:17,18). நுணா மரத்தினது துணியை உளியினால கடைந்து செயத மணிமாலையினை மந்தி அணிநதது (சிறு. 51-53). நெறியிற செல்லும் மககள் அறுத்துப் போட்ட பிரணடைக் கொடி, இடியால் தாககப் பெற்ற பாம்பினது பசிய துணி போல வழியின் பக்கததே வதங்கிக் கிடந்தது (அகம். 119:5-7). யானை புலியுடன் பொருது உழநதமையால அதன சென்னி துணியாகப பிளவு பட்டது (அகம. 119:15-18). 'முருகா, நின்னைப பெறற அன்றே இநதிரன வசசிரததைக கொண டெறிநதானாக, அறுவேறாகிய துணியும் அறு வராயபின் ஒருவனாயினை' எனச் செவ்வேளைப் பற்றிக கூறுவர் (பரி. 5 50-54).

**துணிபு** - தெளிவு. 'மிகுதியை உடைய பரிசிலைக் கொணடு வருதறகுத துணிபை - தெளிவை - முனனிட்டுக கொண்டு எழுக' எனததம நெஞ்சினை நோககிப் பெருஞ்சிததிரனார் கூறினார் (புறம். 237:19, 20).

**துணியல** - துண்டு (தடி). உழவச்சிறார் வாளையினது பரிய துணியலை - தடியை - வெணசோற்றுககு மேலீடாகக்கொணடு விலாபபககம் விம்ம உணடனர் (புறம. 61:4-6). திமிலர் கொழுவிய மீனகளையறுத்த, துடியின் கணபோல் உருணட துணியலகளை நாவாய் ஏறறிச் செல்வா (மது. 319-321). துணிவு 1 காணக.

**துணிவினோன்** - சூழ்ச்சித் தெளிவுடையோன். யாவரும் தன்னை அணுக வொண்ணாத துணிவினோன - சூழசசித தெளிவினையுடையோன - பாணடியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ் செழியன் (புறம். 23:14).

**துணிவு** - 1. தெளிவு. அழுக்குச் செறிந்த காட்சி நீங்காத உள்ளத்தினையுடைய துணிவு - தெளிவு - இல்லாதோா அறவினையைச செய்வேமோ அல்லேமோ எனறு கருதி ஐயபபாடு நீங்கார் (புறம. 214:1-3). துணிவு காணக.

2. உறுதி. ஒரு மகனலலது வேறுமகன் இலலாத தாய் போர்ககோலஞ் செயது தன மகனைப போக்கு அனுபபுவதைக குறிபபிட்டுக 'கெடுக சிந்தை கடிது இவள் துணிவு - உறுதி' - எனப் பாடுவா ஒககூர் மாசாத்தியாா (புறம 279). நூற்றுவருடன துணை வலியாகும் நெறியில்

கடைபோகிய துணிவு உடைய ஆண்மை மிககவன அக்குரன (பதி. 14.5–7). 'தலைவர், பொய்மிக்க உள்ளத்தால பிரியலம் என்று நாம் விரும்புமாறு கூறித் துணிவில்லாத கொள்கையினராகி நாம் அழபபிரிந்து சென்றார்' எனப் பிரிவின்கண் வேறு பட்ட தலைவி வற்புறுககும் தோழிககுக் கூறினாள் (அகம். 205:3-7) 'என மகளை உடனகொண்டுபோன காளையிடததே அவள் கொண்டுள்ள துணிவினை (அன்பின் உறுதியை) யான் அறிநதேனாயின் வதுவை நெறியால் கூட்டிவைத்திருபபேனே' என மகட்போககிய தாய கூறினாள் (அகம். 263:9-15). 'துணிவு இல்லாத நெஞ்சமே, கொடிய சுரநெறியில் பொருள்வேட்கை செலுதத நீ சென்று சேர்தலும் தகுவதாமோ' எனப் பொருள்கடைக் கூட்டிய நெஞ்சினைத தலைவன கழறினான (அகம். 327:5,6). 'துணிவு தங்கிய நெஞ்சமுடைன இளை யானுக்குப பொருநதிய என மகள், சிலமபு கழித்து அவனுடன் மணம் பொருநதினளோ' என மகட் போககிய செவிலி கூறினாள் (அகம. 369:19-26). 'தலைவி நமமோடு காட்டுவழியில் வருவாளாயின் பொருளின் பொருட்டுப பிரியக்கருதிய உன் துணிவு நன்மையுடையதே' எனப பொருளவலிககும நெஞ் சிறகுத தலைமகன சொலலிச செலவழுஙகினான (குறு 347:4-6 . 'அழுது நீா சிநதும கணணை யுடையளாய இத்தலைவியின துணிபு குறறமறறது' எனத் தோழி செவிலிககுக கூறினாள. (குறு. 366: 6,7). 'இவள் துணிவிலலாதவள என்று கருதி இவ்விடததுத் தாழநதாயைப போலப பயனிலலாத சொறகளைக கூறுதல உனனை வருத்தாதோ' என, ஊடல் தீர்கினற காமககிழததி தலைவனிடம கூறினாள் (கலி. 69:10,11).

துணை - 1. உதவியாக அமையும் ஒன்று/ஒருவர். துணை - உதவிபபடை - வேண்டாத போர் வெறறியினை யுடையவன் சோழன் இராசசூயம வேட்ட பெருநற் கிள்ளி (புறம. 16:10). கௌணியன விண்ணந் தாயனுககுத் துணையாக உள்ள துணைவியர் தததமக்குரிய ஏவல் தொழிலை அவனைக கேட்டுச் செய்வர் (புறம. 166:17,18). தனககுத் துணையாயக கூடிய இனததுடனே மதுக்குடங்களை நுகர்ந்து பாணசுறறததைக கரிகாலன பாதுகாததான் (புறம். 224 2,3). மேலோர் உலகம் எயதிய கோச் சேரமான யானைக் கட்சேய் மாநதரஞ்சேரலிரும் பொறை, தான ஒண்டொடி மகளிர்ககுப பொருநதிய துணையாகித் தனக்குத் துணையாகிய மகளிரை மறந்தானோ என, அவன் துஞ்சிய விடத்துக கூடலூர் கிழார் பாடுவர் (புறம் 229: 23-24). 'நெடுமானஞ்சி அறிவில்லாரோடும் உடனிருந்து உண்டு மகிழும் துணையாவான' (புறம. 315:3). வேட்டுவரின சிறுவா விருமபி ஒருவர்ககொருவர் துணையாக இருநதனா (புறம. 324:3). தலைவன் ஒருவன, வேநதனுக்குக கேடு வநதவிடததுத் தானும உடனகெடும நெஞ்சறிநத துணையாக இருநதான் (புறம. 324.12-14). 'மூவேந தருடைய நாடுகளையும பொதுமையின்றித் தாமே ஆளட வேநதருககும வாழ நாட்கள் கழிநதன; அவாகள் ஈட்டிவைதத செல்வம துணை ஆவ தில்லை' எனப் பிரமனார் பாடுவர் (புறம. 357 2-5). 'அறமாகிய புணையைக கைவிட்டவாககு, துணை அழக கூறறுவன உயிர் வௌவும காலததில, இவ்வுலகிலிருநது மேலுலகம் செல்லுதல அரிது' எனப பிரமனாா குறிபபிடுவர் (புறம 357 7-9). 'பெரும! யாம துணையுடையேம' எனக கருமபனூர் கிழானிடம புறததிணை நனனாகனாா கூறினாா (கிணையேம் எனவும் பாடம.) (புறம. 384 10). தம துன்ப வாழககையில் மதிநுட்பமும் இளைய நெடிய துணையாகிய மனைவியும் கெட்டமையால குடிகள் தோறும சென்று பாடியமையினை நல்லிறையனாா குறிபபிடுவா (புறம். 393 1-3). 'வள்ளன்மையால் எமககு உதவுவோா யாா என்று கருதி விருபபம் துணையாக, அண்ணலே! உன்புகழை நினைநது வநதேன்' எனச சோழன குளமுறறததுத துஞ்சிய கிள்ளி வளவனை நலலிறையனாா பாடுவா (புறம 393: 5-9) பலயானைச செலகெழு குடடுவன சொல, பெயா, நாட்டம், கேள்வி, நெஞ்சம என்ற ஐநதினையும போற்றி அவை துணையாக ஒழுகியவன (பதி. 21·1-5). மககள அறநெறியிலே ஒழுகித தம துணையை (மனைவியை) பிரியாமல பாததுணைடு இல்லறம நடததி மூதத யாககையோடு பிணியின்றி வாழ, உதவியவன பலயானைச செலகெழு குட்டுவன (பதி. 22 8-11). இளைய துணையாகிய புதலவர் (பதி. 57 10,70.21,71.7). (முருகன) வேல துணையாகும (முரு. வெ. 3). துமபி தன துணையைத தழுவிககொணடு சீகாமரம என்னும பணணைப பாடியது (சிறு. 76,77). பகைவரைத தெறும வலியை வேண்டி நினற துணையிலலாதோா, தொணடை மானுககுப பணிநதனா (பெரு. 426-428). கணவா பிரிதலின கூடடததை விருமபியிருநதோா தமமேற காதலுடைய இனிய துணையை (கணவரை) கூடினா (மது. 549,550). மகளிா தமமை விருமபின துணையை (கணவரை) புணாநது நாணுக கொணடனா (மது. 561). தம துணையை (பேட்டை) புணாந்தது அனனம (நெடு. 132) பாணடிமாதேவி துணையை (அரசனை) துறநதிருநதாள (நெடு. 137). குணத்தையும் சுறறததின துணையையும

பார்த்துக் களவு மணத்துக்குத் துணிந்தனர் (குறி. 31,32). ஏறு துணையைப் புணர்ந்தது (குறி. 235). மடமங்கையர் துணைபுணர்ந்தனர் (பட். 106). கானவர் துணை புணர்ந்தனர் (மலை. 17). பரிசிலர் இரவில, தோறபடுககையிலே, கொடியவிலங்குகள் வராதபடி இடையா எரிதத நெருப்புத துணை யாகத் தங்கிச சென்றனர் (மலை. 419,420). பறவை சோலையிடத்தே துணையொடு தங்கும் (அகம. 4: 10,11). 'கூதிர்க்காலத்திற்கு இனிய துணையாகிய தலைவியைப் பிரிந்துறையின, நீ தேடுகின்ற பொருட்கு எககுறையும் நேராதொழிவதாக' எனக் கூறிய பொருள வயிற் பிரியலுற்ற தலைமகனைத் தோழி செலவழுங்குவித்தாள் (அகம். 13 14,15). தனது இனிய துணையை (துணைவன்) நினைந்த கொள்கையளாயத் தலைவி உடன் சென்றனள் (அகம. 15:17-19). காதலி அகலிடத்துத் தான ஏற்றிய விளககே துணையாக, இயங்காது ஓரிடத்தே தங்கினாள (அகம். 19:17,18). அன்னஙகள் தம துணையுடன் திளைத்தன (அகம. 34:12,13). 'தலைவியை அறிவார் இலலாத நாட்டிலே செலுத் திபபோகும் துணை (துணைவன) அவளைத தன மார்பு துணையாகத் துயிற்றுக' என மகட்போககிய நற்றாய தெய்வததைப பரவினாள் (அகம. 25:13,18). 'தோழி, மாணபுற்ற நலத்தினைத் துயககும் துணை யுடையோர்ககு, அழகிய வேனிற்காலம் இதுவாகும; இது கழிந்தது' எனத தலைமகள கூறினாள் (அகம. 37 17,18) 'வெற்பன், துணையை (தலைவியை) நினைந்து வருந்த இங்கு வருதல் மெய்ம்மை' எனத் தோழி கூறினாள் (அகம. 38:4,5). 'இரகக மின்றிப பொருளீட்டத தமது இனிய துணையைப பிரியும மடமையோரா இரஙகத்தக்கார்' எனத தலைமகன பொருளகடைக் கூட்டிய நெஞ்சிற்குக் கூறினான (அகம். 43: 13-15). புறாவின சேவல், மாலைககாலத்துத் தனபால அன்புள்ள துணையை (பெடையை) அழைத்தது (அகம். 47:11-13). அன்றில் ஒன்றியிருத்தலினின்றும் துணை சிறிது பிரியினும துயிலாது (அகம. 50:11,12). 'என்மகள், தன் தலைவன தோள் துணையாகத் துயிற்றவும துஞ்சாள்; பறை ஒலியினைக கேட்டு அஞ்சுவளோ என நோவேன' என்று தலைமகள் புணர்ந்துடன் செல்லச செவிலி தன மகளுககுக கூறினாள் (அகம. 63:15,19) தலைமகன அருள வைத்த நெஞ்சததோடு வேல துணையாக இரவுக்குறிககண வந்தனன (அகம். 72:18,19). மயில், குருந்த மரததின கிளையிலிருந்து தன் துணையை அழைத்தது (அகம. 85.11-13). தலைவிககுப பசலை உசாவும் துணையாக இருந்தது (அகம. 103.12,13). மாலைக் காலததில இனிய துணையாகத் தங்குதற்கு என தோழியும உன்னுடன வருவாள்' எனத தோழி, தலைமகள் குறிப்பறிந்து வந்து தலைமகற்குக் கூறினாள் (அகம் 107:19). பனை ஓலையாலாய குடையினைச் சூறாவளி தூக்கலின எழுந்த ஒலியினைத் தனது துணையினது ஒலியெனக் கருதி, மானேறு அஞ்சி அதனை அழைததது (அகம. 121:12-14). தலைவியைப் பிரிந்து சென்றபின, அவளை எண்ணி இரங்கல் வேண்டிவரும் என்று நினைந்து நள்ளென்னும் ஒலியினையுடைய நடு இரவில் துணையான காதலர் நடுங்குவர் (அகம்.129: 1,2). ஆண்மான், நீண்ட மணலின ஒரு பக்கததே பிடவினது நிழலிலே அழகிய தன் துணையோடு தங்கும (அகம. 139:10-12). ஆணமான், தெளிந்த நீரைக குடித்து அழகிய துணையொடு இன்பம்மிகத் தங்கும் (அகம். 154:8,9). 'மலைநாடனொடு உடல நீங்கிப புணர்ந்திடும நீயும், நின தோளின் அழகு ஒழியாது என்றும் துணைபுணர்ந்து கெடாத மறுமையுலகத்துத் தங்கி வாழ்க' எனததோழி வரைவு மலிந்து கூறினாள் (அகம். 178:13-16). புணையினைத் துணையாகக கொண்டு புன லாடினர் (அகம. 186:8,9). தலைவன எஃகு துணை யாக இரவுக் குறிக்கண வருவான (அகம. 212:12,13). 'இப்பருவம் பொருள்வயிற் பிரிவாரககு ஏற்ற தொன்றென எணணி, எத்தகைய சிறந்த பொருளைப் பெறுவதாயினும் பிரியாதீர் என்று எங்கட்குத் துணையாகவுள்ள நுமககுச் செப்பு வேன' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம். 217:14,15) 'வரிப்பட்ட மணலில் தேரின வட்ட ஆழி அறுத்துக் கொண்டு செல்ல நமது இனிய உயிர்த்துணையாகக காதலர் வருவரோ எனத தலைவி வருந்துதலை எண்ணித் தலைமகன தோப்பாகனிடம் விரைந்து தோ செலுததக் கூறினான் (அகம். 224:13-18) 'பலவற்றையும் வெறுத்து உறையும் துணையுடன (துணைவருடன்) கூடியிராத வாழ்க்கையினையுடைய நமது துனபம் பொறுக்கும ஆற்றலைக்கூறி அவர்தம் நிலை யினைத் தேருமாயின, வாடை நன்று' எனத தலைவி வறபுறுததும் தோழிககுக் கூறினாள் (அகம. 243.8,12) ஆணசங்கு, ஆரல் மீனைக கரி கூறுபவனாக, பொய்கையில துணையோடு (பெண் சஙகினோடு) மணம் புணர்ந்தது (அகம். 246.1-3). மனையில் தங்கி உறையும் புறவின சேவல தன துணையொடு குறுகக குறுகப் பறந்து மேலே செலலும் (அகம. 254:5,6). தன துணையைப பிரியாது சேர்ந்திருக்கும் அன்றிற்பறவை மணல மேட்டிலுள்ள பனை மரத்தின உள்மடலில சேர்ந்து தங்கும் (அகம. 260:6,7). தலைமகன, புணையின தலைப்புறத்தினைத தழுவித் திரண்டகரிய கூந்தலை

யுடைய, துணையாய இளைய மகளிரொடு (பரதவையரொடு) நீர்விளையாடினான் (அகம. 266:3-5). தலைவன முயறசியால பொருள் ஈட்டுதற்காக எஃகு துணையாகச் சுரம் கடநது சென்றான் (அகம. 277.3.4,12). குறிய முயல்கள் இனிய துயிலினின்றும எழுந்து துணையோடு போயின (அகம். 284:2-5). 'தலைவி, பகல் நேரமே தனககுத துணையாக வருநதியிருப்பளோ, இரங்கததககாள்' எனப் பிரிந்து செல்லும் தலை மகன் தனனெஞ் சிறகுக் கூறினான (அகம. 287:10) கோடைக காறறு துணையுடன மேவியிருந்த புறாககளை ஓட்டிற்று (அகம. 287:8,9). நமமைத்துறந்த தலைவர் காலம் தாழ்ககாது விரைநது வருவர் எனக கூறி இரவில் துயிலாது தலைவிக்குத் தோழி உசாததுணையாக இருநதாள் (அகம. 298:20,23). 'என மகள், சீறூரின கணணே, இரவில் துணையொடு ஓர் ஒதுககிடததுத தங்கியிருபபாளோ' என மகட்போககிய செவிலி உரைத்தாள் (அகம் 321:10,11). களிறு, தன துணை உண்ணும்படி யாமரத்தின பட்டையைக கிழித்து ஊட்டியது (அகம. 335: 4-7). 'தலைவியோடு முயங்குதல் இயலாதாயினும் எப்பொழுதும வேட்கையுறற நெஞ்சத்திறகு உசாத்துணையாக நட்புககெடாமல் நிலைபெறுவதாக' என அல்ல குறிப்பட்ட தலைமகன் தன்னெஞ்சிறகுக கூறினான் (அகம. 338:10-15). 'சிறநத இன்பததினை நுகரும துணையுடையோர்க்கு அழகிய வேனிறகாலம் இது' எனப் பிரிவின் கண தோழிககுத தலைமகள கூறினாள் (அகம. 341:12,13). 'நெஞசே, தலைவியைப் பிரிந்து வநத நீ, மீணடும மீளாதிருந் தார்கு உசாவும் (வழித்) துணையாகி மிக்க முயறசியினை விரும்பி நின்றனை' எனத தலைமகன இடைச்சுரத்து மீளககருதிய நெஞ்சினைக் கழறிக் கூறினன (அகம. 343:14-19). மகிழதற்குத் துணையாக அமைநத சுற்றதோடு (பரதவையரோடு) தலைவன் கள்ளுண்டு களிததான் (அகம. 346:15). ஆண் குரஙகு, தன துணையினை அழைககும் (அகம். 352:2,7). குற்றமறற இனிய துணையைக் கூடியிருப்பவர்க்கு மாலைப்போதும் இனிது (அகம. 367:13-16). மறவர் அம்பினை எய்த மையால் இறந்த தனது காதல மிகக துணையினை நினைத்து ஆணமான் வருத்தம மிகும் (அகம. 371: 3,5). நாவல மரம் சொரிநத கனியினை அதன் அழகு கெட இழுத்துககொண்டு சென்று, ஆண் ஞெணடு தன் துணைக்கு இடும் (அகம 380:4-7). காட்டில பல்லி தன துணையினை ஒலி எழுபபி அழைததது (குறு. 16:4,5). தலைவன் துணை துறந்து பொருள் வயிற்பிரிநதான் (குறு. 20,1,2). தெளிநத நீரைக குடித்த ஆண்மான தன் துணையோடு சுழனறு திரிந்துதுள்ளி விளையாடியது (குறு. 65:1,2). 'கனவே, தலைவியைக கொணடு வநது தநதாயைப் போல நீயும் துயில எழுப்புகினறாய; ஆதலின துணைப் பிரிநதோர் நினனை இகழார்' எனத தலைமகன தலைமகளைப பிரிந்தவிடததுக கனாக்கணடு கூறினான (குறு. 147:3-5). 'மேகமே, இபபெணடிர் தமககுத் துணையாக உடனுறை காதலரைப பெறறிலர் ஆதலின் இரங்கத தககவர் என்று அருளாது மழை பெயவதென்னோ' எனத் தலைமகன இரவுககுறி வநதுழி அவன கேட்பத தலைவி தோழிககுக் கூறுவது போல் கூறினாள் (குறு. 158 3-6). கள்ளியினது காயகள வெடிககும ஒலி, துணையுடன் கூடியிருக்கும புறாககளை ஓடச் செயதது (குறு. 174.2,3). ஓமை மரததின கிளைகளில இருநத பருநதினது தனிமையை வெளிபபடுததும தெளிநத ஓசை, வழிச்செல வோர்ககு உசாவும துணையாக அமைநதது (குறு. 207 2-4). யானை தாம விரும்பும துணையைத் தழுவிக கொணடு, புலியின தாககுதலினின்றும் பாதுகாததது (குறு. 215 4-6). 'துணையிலோர்ககுப பகலும மாலை எனப' பருவவரவினகண தோழிககுக கிழததி கூறினாள (குறு 234 6). 'பாகனே, வழியிடை நேரும துனபததிறகஞ்சாது நம விருமபும துணையைத தழுவிககொணடு என நெஞ்சம நமமை விடடு விட்டுப பிரிநது சென்றது' எனப பொருள முறறி மீளும தலைவன தோபபாகற்குக கூறினான (அகம. 237.1,2). பள்ளததில தேஙகியிருககும நீரையுண்டு ஆண்மான, மாலைக காலததே தன துணையோடு துள்ளி விளையாடியது (அகம 250.1-3). 'தலைவா நமககு ஒன்றைச் சொலலாவிடினும், தமககுத துணையாக இருநத தோட்டத்திலுள்ள வேஙகை மரததிறகும தூதுமொழி விடுதலை மறநதார போலும்' என வரையாது பிரிநதவிடததுத தோழிககுக கிழததி கூறினாள (குறு. 266). தலைவியின மாமைப பொருநதும இனிய துணையாகிய தலைவன அவள் இல்லத்திறகு நடு இரவே வநது மீள்வான (குறு. 321:2,3). 'இனிய துணையைப பிரிநது இன்னாத பாலைவழியைக கடததல இனிதோ' எனப பிரிவுணர்ததப்பட்ட தோழி தலைவனுககுக கூறினாள (குறு 363.5,6). 'சிறிய பிடியானை போனற வளுககுத் துணையாகச செலகினறவனே' என்று தலைவியை உடனகொண்டு போகும் தலைவனைக கண்டோர் விளித்தனா (குறு. 390 2). 'தாய வீட்டைக கைவிட்டு நுமககுத துணையாக வநத தவறறினால்தானோ நும் பிரிவைக கேட்டு இவள வளைகள் கழனறு வீழநதன', எனத தலைவி பிரிவுணாநது வேறுபட்டமை சொல்லித தோழி

தலைவனைச் செலவழுங்குவித்தாள் (நற். 26:1-7). நீர் பெருகும் கழியின்கண்ணே துணையோடு சுறா மீன் இயங்கும் (நற். 67:6,7). புறவின் சேவல் தாம் விரும்பும் துணையை அழைக்குந்தோறும் அவ் வோசை தலைவியை வருந்தச் செய்தது (நற். 71: 8-11). வேனிற்காலத்து ஒந்தியாகிய வழலை தன் துணையோடு வாட்ட முற்றுக் கிடந்தது (நற். 92:1-3). தினைப் பயிரைத் தின்னக் கருதிக் களிறு, துணையை நீங்கிச் செல்லும் (நற். 118:1-3) 'யான டைந்த துன்பம் நிலத்தின் எல்லையளவையும் கடந்தது; இனி உசாவும் துணை வேறியாதும் இல்லை' எனப் பிரிவிடை மெலிந்த தலைவி வன்புறை எதிரழிந்து கூறினாள் (நற். 130: 11,12). மனையிடத்து உறைகின்ற புறவின் பேடையாகிய துணையோடு சேவல் சேர்ந்தது (நற். 162:1,2). தலைவன் வேல் துணையாக இரவுக்குறி வந்தான் (நற். 168:8-10). குருவிச் சேவல் வேற்றுப் புலத்திலுள்ள துணையோடு கூடிச் சிறிது பொழுது தாழ்த்திருந்து வந்தது (நற். 181:1-3). 'இப்பெரிய மேகத்தின் முழக்கமானது இனிய துணையைப் பிரிந்தோரை நாடித் தருவது போல் உள்ளது; ஆதலின் நீ வருந்தாதே, எனத் தோழி தலைமகட்குக் கூறினாள் (நற். 208:11,12). தலைவி, கடலிலே துணையோடு (தோழிமாரோடு) ஆடினாள் (நற். 245;4). தலைவனே நீ எம் சிறு குடியின்கண் இரவு தங்கிச் செல்வையாயின், துணையன்றித் தனியே தங்குவாயல்லை' எனத் தோழி தலைமகற்குக் கூறினாள் (நற். 254:5-12). பனையின் குடம்பையிடத்தேயிருந்து தன் துணையைப் புணர்கின்ற அன்றிலின் வருத்தம் தரும் குரலைக் கேட்குந்தோறும் தலைவி துஞ்சாக் கண்ணளாகவிருந்தாள் (நற். 303:4-6). குருகு, பனை மடலில் ஏறியிருந்து தன் துணையோடு புணர்ச்சி துணியுமளவும் நிறுத்தாது கூவியது (நற். 338:9-12). பாசறையின் பக்கத்தே ஒருத்தி, துணை யோடிருத்தலைக் கண்டு, 'துணை நன்குடையள் இம் மடந்தை; ஆயின் யாமோ வாடைக்காற்றுத் துன்புறுத்தலானே, அத்துன்பத்தைப் போக்கவல்ல துணையின்றித் தமியேமாய்ப் பாசறையின்கண்ணே உள்ளேம்' என, வினைவயிற்பிரிந்து ஆற்றானாகிய தலைமகன் கூறினான் (நற். 341:6-10). பூ மலர்ந்து விளங்கிய சோலையிடங்கள்தோறும், தம் துணையுடனே ஆண்வண்டுகள் ஒலித்தன (நற். 348:5,6). ஒள்ளிய தழையுடையணிந்த புனலாடு மகளிர்க்குப் புணரும் துணையாகத் தலைவன் உதவினான் (ஐங், 15). வயலில் நண்டு தன் துணை துறந்து நீர்க்கொடியினது தண்டை அறுத்தது (ஐங். 26:1,2). சுழலுகின்ற ஆயத்தாரோடு அமர்ந்த துணையை (பரத்தையரை) தழுவி தலைமகன் புதுப் புனலாடினான் (ஐங். 64:1,2). மெல்லியல் (தலைவி) தலைவற்குப் புனலாடு புணர்துணை ஆயினாள் (ஐங். 72:3-5). தலைமகன், மகளிர்க்குத் தோள் துணையாகித் தலைப்புனலாடிக் கண் சிவந்தான் (ஐங். 80:2-4). பழனத்தில் மள்ளரன்ன எருமை மகளிரன்ன துணையொடு வதியும் (ஐங். 94:1-3). கழனியூரன் மகளாகிய இத்தலைவி பழனவூரன் பாயலில் இனிய துணை ஆயினாள் (ஐங். 96:3,4) அன்னம் தன் துணையென மயங்கிக் கடற்சங்கினை மிதிக்கும் (ஐங். 106:2,3). நாரை, பெருந்துறைக் கண்ணே தன் துணையோடு சுழன்று திரியும் (ஐங். 158:2, 3). பன்றி பக்கமலையில் தன் துணையொடு உறையும் (ஐங். 262:1, 2). 'நீ அழ நாடன் வாராது நீட்டிப்பின் நின் துணையை நான் இழப்பேன்' எனத் தோழி, தலைவன் இடையிட்டு வந்து சிறைப்புறத்து நின்றுழித் தலைமகட்குச் சொல்லுவாளாய்க் கூறினாள் (ஐங். 269:1, 5). மந்தி துணையொடு வரையிடத்தே ஆடும் (ஐங் 279:2, 3). தலைவி பாயலிடத்தே இனிய துணையாக உள்ளவள் (ஐங். 293:3, 4). தலைவனுக்குத் தன் துணையைப் பிரிந்துவரும் பொருள் நன்று ஆகாது, (ஐங். 307: 3, 4). காதலியது பண்பைத் துணையாகப் பெற்றமையின் வெஞ்சுரம் தலைவனை வருத்த வில்லை (ஐங். 325:3, 4). 'மடவரலாகிய இனிய துணை ஒழியக் காடு கடந்த தலைவனுக்கு அக்காடு குளிர்ந்த தன்மையை உடையதாயினும் வெய்தாக விருந்தது (ஐங். 328:2-4). புள்ளினம், 'யாம் துணை புணர்ந்துறைதும்; நீ எவ்வாறு பிரிந்துறை கின்றாய்' என்று தலைவனிடம் கூற வல்லமை யில்லாதனவோ' எனத் தலைவி புட்களை நொந்து கூறினாள் (ஐங். 333). 'தலைவனோடு உடன் சென்ற தலைவிக்கு நான் நோகவில்லை; அவள் துணையின்றிக் கலங்கும் தோழிக்கே நோவேன்' எனத்தலைமகள் உடன் போயவழி அவள் தோழி ஆற்றாமை கண்ட நற்றாய் கூறினாள் (ஐங். 378: 3-5). 'இனிய துணையாகிய தலைவன் இனிது பாராட்ட மலையிறந்து சென்ற தலைவியை அந்தணர் கண்டமை (ஐங். 387:4-6). 'படருழக்கும் தலைவியின் நெஞ்சிற்கு உசாவுதலை யுடைய துணையாகச்சிறிது நேரம் தங்குவையாயின் எம் தேரைக்காண்குவை' எனத் தலைமகள் மாட்டுப் பாணனைத் தூதாக விடுத்த தலைமகன் கூறினான் (ஐங். 477), 'தலைவியைப் பிரிந்துறைந்த தலைவர் அவள் தோளுக்குத் துணையாக வந்தார்' (ஐங். 496:3-4). 'பழைய உழுவலன்பு வழுவாமல் வரும் என்ற கூற்றை உட்கொண்டு துணை எனப் புணர்ந்தவள் தலைவி (கலி. 2:17, 18). 'நீ

எம்மிடத்து அனபு நீங்கப் பிரிதலைக் கருதாதே, அவ்வாற்றிடைத துனபததிற்கு எம்மையும் துணை யாகக் கொணடு போதலே எமக்கு இன்பம் தருவது' எனத் தலைவி கூறினாள் (கலி. 6:9-11). 'நாம் விரும்பும் காதலர், தம் தேரை விரைந்து செலுத்தி நமககுத துணையாம் தனமையை விரைநது தந்தார்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 27:25,26). தலைவர் மீணடு வருவேம் என்றுரைத்த காலம், ஆற்றிடைக் குறை யிலே அவர் துணையை (பரத்தையரை) புணாந்து மகிழும் இளவேனிலன்றோ' எனத் தலைவன் வரவுணர்ந்து தோழி ஆற்றுவிததாள் (கலி. 35: 13-16). தலைவி, தனக்குத துணையாக வந்த தோழியரைக் காண்டற்கு ஆர்வமிக்க கண்களை உடையளாய் மனையிடததே மீண்டாள் (கலி. 57: 23,24). தலைவன், தலைவியின் தோள் வாடத் தனக்கு அமர்ந்த துணையை (பரததையரை) கூடி மணமனையிடததே இருந்தான (கலி. 66.9,10). அந்தணன் மண நாளில், காதல கொண்டமடநதை தனக்குத் துணையாக அங்கியங்கடவுளை வலமாக வநதான (கலி. 69:4,5). அனனம், தன சேவலைத் தாமரை இலை மறைத்ததாகக கலககமுற்று, மதி யின நிழலை நருட்கண்டு அன்னச சேவல் எனறு நெருங்க, அபபோது தன்னைச் சேருவதறகு எதிரே வருகினற துணையைக கண்டு நாண முற்றது (கலி. 70:1-5). அனனம் துணையைப புணரும் (கலி. 72:2). தன்னருகே வேறு துணையினறி (மலர்கள் இலலாமல்) தாமரைமலா தனிதது மலர்நதது (கலி. 77:1,2). துணையைப புணர்நத கரியதும்பி, தாமரை மலரைச சென்றூதியது (கலி. 78:1,2). 'நீ துணையெனப புணர்ந்தவள் தன் இயற்கை நலததை இழந்தாள்; இது நினககுக கொடிது; நீ அளிபபாயாக' எனத் தலைவிககு நிகழநத காமத்து மிகுதிறத்தைத் தலைவனை நோககிச் சானறோர் கூறினர் (கலி. 100:20-23). 'மாலையே, நீ என் னெஞ்சததைக் கொண்டு நீங்கினவர் எனக்குத் துணையாம் தன்மையைத் தாராத காலத்தே, அல்லலிலே அழுந்தியிருந்த என்னைக கையற வெய்துவிக்க வந்தாயோ' எனப் பிரிவிடை ஆற்றாத தலைவி மாலைப பொழுது கண்டு கூறினாள் (கலி. 120:10-12). துனபக கண்ணீரில் கிடந்து வருநதும் தலைவிக்குக் கடல் அலைகளே துணை யாகி ஒலிக்கும்; இராக் காலத்தில் அசையும் காற்று ஒன்றே துணை; இனிய துணையாகிய தலைவன் பிரிய இரவினுள் துணையாகிக குருகு ஒன்றே நின்று கூவும்' (கலி. 121:7-16). 'அனறிலே, மயககம் செய்யும் மாலைக்காலத்தே எமபோல இன் துணைப் பிரிந்தாரை உடையையோ நீ' எனத் தலைவி தன் ஆற்றாமையை வெளிபபடுததல் (கலி. 129:12-15). 'மென்தோளை நெகிழவிதத வனுடைய துறையிடதது இனிய துணையோடு கூடிய அன்றில், தன் துணையானவனை நீங்கின தலைவி வருநதினாளோ எனறு கருதி இராககாலத் தும் அகவவில்லை' எனத தோழி தலைவியை நோககிக் கூறினாள் (கலி 131:27,28). புள்ளினஙகள், தாம் விரும்பின பேடுகள் தமககுத் துணை யாகத் திரை வநது பொருநதும் இடுமணலிடத்தே தங்கும் (கலி. 132.1-3). வலமபுரிகள துணையைப புணரும் (கலி. 135:1). 'தலைவன காம நோயால வருநதியபோது அவனுக்கு உசாத்துணையானவர் இளையரும் ஏதிலவருமே அன்றிப் பிறரில்லை' (கலி. 138:24,25). 'மாலையே, நீ எம் கேள்வரை முன போலத தருதலும் செயதிலை, ஆதலால் நீ எமககுத துணையில்லை' எனத தலைவன பிரிநதுழித் தலைவி கூறினாள் (கலி. 148:16,17). அரிபடாநத கணகளை யுடைய மகளிா தத்தம் துணையோடு (கணவ ரோடு) நீராடினர் (பரி. 16.9,10). சிவநத நோகக மொடு தலைவி துணையாக அணையும கேள் வனைத் துனிததாள் (பரி. 21:22). புனலாடுமிடததே, 'நீரும நினபரததைக்குத துணை; அதுவேயனறி நீயும் அவளுககுத துணை' எனக கூறித தலைவி தலைவனொடு ஊடினாள் (பரி. தி. 2:44,45).

**2. இனம்.** மகளிர் துணை - இனம்பட்ட சிலவாகிய ஓதியினையுடையவர் (புறம. 97 22,23) தனிததுத தொழில செயயாமல துணைகளோடு கூடும் குதிரைகள் (பெரு. 488,489). பரதலர் துணையுடன கூடிய மகிழசசியுடையவா (அகம. 30:3) துணையீா ஓதி (அகம. 107:22;388:8).

**3. ஒப்புமை.** வளவிய காதில் துணை - ஒபபு- அமைநத (ஒத்தற்குப பொருநத) பிணடியின தளிரை இட்டு நிறைத்தனர் (முரு. 30,31). செவவலரி மாலையைத் துணையறத தொங்கவிட்டனர் (முரு. 236,237). துணையறை மாலை (ஒபபுச சாறறு தலையுடைய மாலை) (குறி. 177). தலைவி இளந துணை ஆயத்தாரோடு கழங்காடினள் (அகம. 17 2). பற்கள் முல்லையின் அருமபுகளில துணையாகிய வற்றை நிரைத்தாலொததன (அகம. 21:2). வண்டு படுகினற துணை (தமக்குத்தாமே ஒபபாகினற) மலர் (அகம். 59·1). விறலி தனககுத துணை இலளாக, விழவுககளம் பொலிய வநது நினறாள் (நற். 170·3,4).

**4. எல்லை/அளவு** - பேகன, எத்துணையாயினும்- எவ்வளவாயினும்-ஈதல நன்றெனறு பிறர் வறுமை

நோக்கி நந்தான (புறம். 141 12-15) 'ஒருவர் கல்வி முதலிய தகுதியின துணை (எல்லை) அறிந்து நலகி னால அது தினையளவாக இருநதாலும இனிதே' எனப பெருஞ்சித்திரனார் கூறுவர் (புறம். 208.7-9). பாாபபாா முதலாயினோர் தததமககுத் துணை யான (அளவான) துறை நூலகளைககற்றனர் (பதி. 90 3). முதது, மணி பொன் இவற்றைக கொண்டு அததுணை (அவ்வவற்றின அளவிறகேற்ப) அணி கலன செயதனா (குறி. 13,14). குறியவும் நெடியவு மாய துணை (அளவு) உடையது குன்றம் (அகம். 99 14). குறுமையும நெடுமையுமாகிய துணை யுடையன மானதுடடிகள் (அகம். 371:4).

5 இணை. 'முதுகிட்டார் மேற் செல்லாத துணை-இணை-தோளினையுடைய பூழிநாட்டார்ககுக் கவசம் போன்றவன்' என இளஞ்சேரல் இரும் பொறை பாராட்டப் பெறுவன (பதி. 90.27). கடம்பினது துணை (இணைதல்) நிறைந்தது மாலை (சிறு. 69). துணை மான் கதவம் (நெடு. 81). துணையால் (இணைப்பூக்களால்) அமைந்தது மாலை (அகம். 5:23). கரியஅழகிய துணை ஒத்த எதிர் எதிா பொருநதிய மலர்களைப் போன்றன மையுண்டகண்கள் (அகம. 363:17,18). துணையாகப பொருந்தக் கட்டியது மலர்மாலை (குறு. 229·6). அழகினையுடைய துணை மலர் போலும் மையுணட கணகள் (கலி. 14:2). துணை மலர்க் கோதை (கலி. 70:9). வியாழம் சனியின் இல்லத்துணைக்கு (இலலமிரணடாகிய மகர கும்பஙகட்கு) அப்பால் மீனத்தைச சோதல் (பரி. 11:7,8). துணையிதழ வாய (பரி. 20:51).

6. இயலபு. 'தலைவி பெண என்னும் துணையினை-இயலபினை-அமைநதனள் (பருவமுறறனள்) என அறிநதும் இறசெறியாதிருந்து விடடேனே' என மகட்போககிய தாய கூறினாள் (அகம. 315:3-6).

**துணையார்** - **தோழியர்.** தலைவி, துணையாருள்-தோழியருள்-அழகுபெறற இயறகை நலததை இழநதாள் (கலி. 124:11).

**துணையோர்** - **ஆயத்தார்.** துணையோர்-ஆயததார்-நனறென்று ஆராயந்த நெயபபினையுடைய மயிரை மலர்களைக் கொணடு அழகுபடுததினர் (முரு. 20). 'இப்பொழுதே வருகுவர் நினது இனிய துணை யோர்' என இனிய மொழிகளைச சொல்லவும் பொறாது தலைவி கலஙகினாள் (நெடு. 155,156). 'துணையோா செலவமும யாமும் வருந்துதும்' எனப பரததையிடத்துப பன்னாள் தஙகி வந்த தலைமகறகுத் தோழி கூறினாள் (ஐங். 50:1).

**துணைவன்** - **தலைவன்.** 'தன்னால விரும்பப்பெற்ற துணைவன ஊக்கமுறுத்த ஊக்கம் கொண்டு அறியாத தேயததுத் தலைவி சென்றனள்' என மகட் போககிய செவிலிததாய் கூறினாள் (அகம். 385:15-18).

**துணைவி** - **தலைவி (மனைவி).** கட்டிலில் மனை யோள் துணைவியாக - தலைவியாக - புதலவன மார்பிலுறப் பாடல் கேட்டிருந்த தலைவனை க கண்டு செவிலி மகிழ்ந்தனள் (ஐங். 410).

**துணைவியர்** – **காதலியர்.** அருங்கறபினையும் சிறு நுதலையும் அகல் அல்குலையும் சிலவாகிய சொற களையும் பலவாகிய கூந்தலையும உடைய கௌணியன் விணணந்தாயனின் துணைவியர் - காதலியர் - அவன் நிலைக்கொப்பத் தததமக்கு ஏறற தொழிலைச் செய்து வநதனர் (புறம். 166: 13-18).

**துத்தி** – **பொறி.** படம் விரித்த பாம்பினது துததியை-பொறியை - ஒபபக கையினது வடுப்பட்டுக் கிடநதது கணணகனற உடுக்கை (பொரு. 69,70).

**துதி** – **1. நுதி.** துதி - நுதி - வாய் எஃகம் (புறம். 353:15).

2. தோல், துதி - தோல் - அமைந்த கால்களை யுடையது அன்னம் (ஐங். 106:2).

3. உறை கரடியின் தொங்கும தோல் துதிக்குள் - உறைககுள் – பொருநதியிருக்கும் நகம பற்றப் பாம்பு வலியிழந்தது (அகம. 8:2-4).

**துப்பு** - **1. வலி.** சேரமான பாலை பாடிய பெருங் கடுங்கோ துபபோடு - வலிமையோடு - எதிர்நத வருடைய புறககொடையைப் பெற்றான (புறம். 11:9). பாணடியன் தலையாலங்கானத்துச் செரு வென்றநெடுஞ்செழியன், பகைத்தற்கரிய துப்பினன யுடைய வஞ்சினங்கூறிய இருவேந்தரைப போர்க்களததில் வென்றான (புறம். 25: 5, 6). கெடாத துபபினையுடைய நினக்குப் பகைவராய் மாறுபட்டோர் அருளிலராய்க கொடாமை உடையராகுக' என்று சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன சாத்தனார் பாடுவர் (புறம. 27,17-19). 'யானை தன் கதுப்பினகண் அடககிய எறிகல்லைப்போல மறைதத துபபினை உடையவன் சோழன நலங்கிளளி (புறம. 30:8, 9). 'நண்ணுதற்கரிய துபபினையுடைய வலிய

குதிரையையுடைய தோனறல் நெடுங்கிள்ளி (புறம். 44:10). கடுமான் கோதையது நாடு துபபோடு மாறுபட்டெழுநத வேநதர், அணுக முடியாதது (புறம். 54:8, 9, 14). 'தனது மிகக துப்புக்கு அஞ்சாது புல்லிய சொற்களைக் கூறிய சினம் பொருந்திய வேநதரை வென்றொழிப்பேன' எனப் பாண்டியன தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன வஞ்சினம் கூறினான் (புறம. 72: 6-9). மூவேந்தருள் ஒருவனுக்குத துப்பு ஆக வேண்டும் என்று அம்மூவேந்தர் பால நினறும் வந்தோர்மலையமான் திருமுடிக்காரிககுப் பொருள் தநதனர் (புறம். 122:5,6). நின்னிடத்துப போர் செயய வநத இருவரையும் கருதின, பழையதாய உறைகினற துப்பினையுடைய நின் பகைவேநத ராகிய சேரபாண்டியரு மல்லர்; நிலைபெற்ற துப்போடு போர் செயதறகெழுந்த நின புதலவ ராகிய அவர் தோறபின் நின பெரிய செல்வத்தை யாவர்க்குக் கொடுபபாய' எனப புதல்வர் மேல் பொரச் சென்ற கோபபெருஞ்சோழனிடம் புல்லாற்றூர் எயிற்றியனார் வினவினர் (புறம 213: 4-61). வீரன் ஒருவன மாற்றுதற்கரிய துபபோடு பகைவர் பாசறைக்கண தங்கினான (புறம். 309:5). அடலரும் துப்பு (புறம. 335:1). துப்புக் கொண்டு போர்செயயவரும் பகைவர்க்கு நினைவுககெட்டாத சேய்மையிலுள்ளவன' நாஞ்சில வள்ளுவன (புறம். 380:10). நூற்றுவரோடு துபபு (துணைவலி) துறை போகிய துணிவுடை ஆண்மையன் அக்குரன' (பதி. 14:6,7). 'தம் அறியாமையால மறந்து நின துபபோடு மாறுபட்டெழுந்த பகைவர் நாட்டையும் கண்டு வந்தேன்' எனவும 'கொடுதது நீங்காத நின்கையிடத்துள்ள கடுநதுப்பினால் ஏற்ற இடத்து நல்கிய மைந்தன் எனவும இமய வரமபன நெடுஞ சேரலாதனைக் குறித்துக் குமட்டூர் கணணனாா கூறியுள்ளார். (பதி. 15:15-40). 'துப்பினகண் முற்றவும் உயர்ந்து நிற்க, சுற்றததார் உவக்கும்படி ஈந்தும் குறையாத செலவத்தினையுடையவன்' களங்காயக கண்ணி நார்முடிச சேரல் (பதி. 32:5, 6). 'துபபின துறைகளையெலலாம முடித்த மிக்க சினமும் வன்மையும் உடையோன் களங்காய்க கண்ணி நார்முடிச சேரல் (பதி. 39:3,8). 'தம் துப்பினால நினது வலியை அறியாது நினனோடு மாறுபட்டுத தோறறு நின் பகைவர் பணிநது திறை தருவர்' என ஆடுகோட்பாட்டுச சேரலா தனைக காககை பாடினியார் நசசெள்ளையார் பாடுவர் (பதி. 59:11,12). பகைவரால் ஆராய்தல் அமைந்த துப்பினை யுடையவன ஆடுகோட் பாட்டுச்சேரலாதன் (பதி. 59:17). 'துப்புததுறைக ளெல்லாம் முற்ற முடிதத வெறறியையுடைய வேநதன் செல்வக கடுங்கோ வாழியாதன (பதி. 62:9). அதிகமானுடைய உரிமை மகளிா இரஙகும்படி அவன துபபினைக கெடுததவன பெருஞ்சேரல் இரும்பொறை (பதி. ப. 8·8). மிக்க புலிபோலும துபபினையுடையவன ஓயமா நாட்டு நல்லியக கோடன (சிறு. 122). பகையைத தெறும் துபபினைப் பெறவேண்டிய துணை யில்லாதவர் தொண்டை மான இளநதிரையனை வந்து வணஙகினர் (பெரு. 426,428). பகைவரால சினத்தறகரிய கடிய துபபினையுடையவர் வீரர் (மது. 32). கிட்டுதற்கரிய துபபினையுடைய பொருநன பாண்டியன (மது. 40,42). பகைவா மனம கலஙகுமபடி அவரிடததே சென்று அசசம தோனறத் தஙகும வருதததததையுடைய துபப மைநத போரேறாக உள்ளவன பாணடியன (மது. 139-144). போாவேநதா பழையதாய்ச செறறங கொணடு தஙகும் துபபு தமமைக கொணடு வருகையினாலே எதிராய வநத யானைகளை உடையவர் (மது. 347,348) வீரா பகைபபுலததைப பாழாக்கும கிட்டுதறகரிய துபபினையுடைய பகைகளை முதுகு கண்டவர் (குறி. 128,129). அரிமாவைப போனற வருததததையுடைய துபபி னைக கொண்டவன திருமாவளவன (பட். 297,298). நனனன பகைப புலததைப பாழ செயயும கிடடுதற கரிய துபபினையுடையவன (மலை. 59). பகைவா திறை கொடுககும் துபபினையுடையவர் முருகவேள் (அகம. 13.2,3). அரியேற்றின துபபினையுடையவன தினை காக்கும சேணோன (அகம. 73.13,14). வயமான் (சிஙகம) போலும துபபோடு பரணின கண கானவன இருநதான் (அகம. 102:1, 2). கெடுதல் இலலாத துபபினையுடையவன எழினி (அகம. 105;10,11). பொறையன பகைவர் தேயம பாழபட அழிககும் துனனருந துபபினை உடையன (அகம். 338. 12,13). மாறுபாடடைக கொணட துபபினையுடைய சிவநத வேலை மலையன தாஙகியிருநதான் (குறு. 312:2). முதிாநத துப்போடு பகை மிகுநது யானை புலியைக கொனறது (நற் 247:1,2). பழமையாய உறற துபபோடு முரண மிகுதலாலே சினஙகொணடு யானை புலியைக கொன்றது (நற. 294:5,6) களிறறின் துபபுககு அஞசாதது புலி (நற் 351.7). வெயய துபபினை உடையது சிவநத ஏறு (கலி. 104 24).

**2. பவளம்.** துபபினை - பவளததை - ஒததன சிவந்த மேடாகிய வழிகள் (அகம். 9 8). துபபினை ஒததது அசோகநதளிா (ஐங. 273;1). பளிஙகு மணியை ஒக்கும் கணணாடிககுள்ளே துப்பு அழுந்தபபட்டவை தோனறினாறபோல முருககின

மொழி பேசுதற்கு அஞ்ச வேண்டியதில்லை என்னும் கருத்தினை தும்பியைத் தூது வேண்டும் தோழி கூற்றில் இவர் கூறும் திறனும் பாராட்டத் தகும (குறு. 392). தலைவனொருவன் இறந்த பின கைமமை நோனபு நோறகும மனையோள் அவனுககுப படையலிடுமாறு அழுத கண்ணளாய் அககணணீரினாலே சாணம் கரைய மனையை மெழுகும தாபத நிலையைப் பாடியுள்ள திறத்தில் (புறம். 249) இவர் உலகியலை நனகு உணர்த்தி யுள்ளார்.

தும்பை – 1. மலர். பாண்டவர் ஐவருடனே சினந்து நிலததைக் கைககொணட பொற்பூநதும்பையை யுடைய (துரியோதனன முதலாகிய) நூற்றுவரும் பொருதனர (புறம். 2:13-15). 'கானபபோ என்னும் எயிலை மீட்டறகு அரிதெனக்கருதி வேஙகை மார்பன வருந்த, நாள்தோறும் வெனறிகொளத் தழைத்த தும்பையையுடைய புலவர் பாடும் துறை களை முடித்த வெற்றியினையுடைய வேநதே' எனக் கானப் பேரெயில கடநத உககிரப் பெருவழுதியை ஐயூர் மூலங்கிழார் பாடுவர் (புறம். 21:6-11). பொன்னாற் செய்யப்பட்ட இதழை யுடைய பசிய தும்பையுடனே பனநதோட்டைச செருகி வீரர் வெறியாடினர் (புறம். 22:20-22). மலர்ந்த பூவையுடைய தும்பைக் கணணியை அணிநத என் இறைவன்மகன் இளையோனுககுப் பகை இரண்டு' என அதியமான்மகன பொருட் டெழினியை ஔவையார் கூறுவர் (புறம். 96). அதியமான், கடல்போனற படையுடனே, பொன்னால் இயனற தும்பைக் கண்ணியை உடையவன் (புறம். 97:14-16). வீரன ஒருவன் பசிய இலையினையுடைய மணஙகமழும் தும்பைப் பூவை நுதலிடததுக கட்டியுள்ளான் (புறம். 283:12,13). வாள் எதிரேற்ற பகைவரை வெட்டுதலால் சாம்பிய பசிய தும்பை மாலையணிநதவன மறப்போர் வல்ல அகுதை (புறம். 347:3-5) 'தும்பை சூடி வந்த பகைவரின போரையும் பெருமையையும் அழிதத, போரை விருமபுகினற வலியுடையவன், இமய வரமபன நெடுஞ்சேரலாதன (பதி 14:8,9) போர்க் குரிய தும்பை மாலையைச் சூடிய சினங்கொணட பகைவர் அலறுமபடி செய்தவன் களஙகாயக் கணணி நார் முடிச்சேரல் (பதி. 39.3,4). அமபுகள் தைத்த உடம்பினையுடையாரொடு அலலாமல ஏனையாரோடு போர் குறித்துத் தும்பை சூடாமல, தம்மை ஒததாரோடு போர செய்யும் பெருமையை யுடையவன கடல பிறககோட்டிய செஙகுட்டுவன (பதி. 42.5-7). பொனனால செய்யப்பட்ட அழகிய தும்பைப பூவினையணிநதவன கடல பிறக்கோட்டிய செங்குட்டுவன (பதி. 45:1,6). வீரர், தோல்வியடை யாமைககுக காரணமான தும்பை மாலை பகை வரின படையிடையே விளங்கும்படி போர்புரிநது உயர்நிலை உலகம் எய்தினர் (பதி. 52:5-9). தும்பை சூடியதற்கேறப நின்று பொருதலாற்றலையுடைய வீரரது உடல் அசையும்படி வநத, குருதி யல்லது வேறு பலியினை அயிரைமலைக் கொற்றவை கொள்ளாள் (பதி. 79:15-17). வாடாத தும்பை சூடின வீரருடைய தலைவன் தொண்டைமான் இளநதிரையன் (பெரு. 101). குற்றநதீர்நத உயர் வினை யுடையார்ககுப் பாண்டியன், கட்டபபட்ட பொனனாற செய்த பூவினையுடைய தும்பையை யாரென வினவியறியாது குறிபபாலுணாநது அவரவர் தகுதிக்கேற்பச் சூட்டினான் (மது 737, 738). தலைவியும் தோழியும் தும்பை மலரைப பிற மலர்களோடு பறிததுப் பாறையில குவித்தனர் (குறி. 90). தலைவியின் மார்பில தும்பை மாலை துவணடது (ஐங். 127).

2. தும்பைத்திணை. 'நாள் தோறும் வென்றி கொளத் தழைத்த தும்பையையுடைய, புலவர் பாடும துறைகளை முடித்த வெற்றிவேநதே' எனக் கானபபேரெயில் கடந்த உககிரப பெருவழுதியை ஐயூர் மூலஙகிழார் பாடுவர் (புறம. 21:6-11). எல்லோராலும புகழ்நது சொல்லப்பட்ட தும்பைப போரானது சேரனுககு வெற்றியைத தருதறகுக கொற்றவை மெயமமையுறறு வினவும் (பதி 83: 22-24) கொடிச்சியர் திருநதிய தும்பை விளைத தலால தணபரஙகுனறு செவ்வேளுககு இயைநதது (பரி. 9:67-69).

துய் – 1. பஞ்சு. துய்-பஞ்சு - போலும் மயிரை யுடைததாகிய தலையினையுடையது மநதி (புறம. 158:24). துய் - பஞ்சு (அகம. 241:14,15; நற். 57: 3;95:4,326:4). துய் போன்ற உசசிக் கொண்டை அமைந்த தலையையுடையது. கோட்டான (பதி. 44:18). துய் போனற தலையினை யுடையது ஈங்கைபபூ (அகம். 294,6; 306:3). துயபோன்ற இதழையுடையது குருககததி (நற. 97:6) இறவு துயததலையுடையது (அகம். 376:16; நற். 111.2) ஈஙகையின் துயபோனற தலையினை யுடையது புது மலர் (நற். 193:1,2). துய்போன்ற தலையையுடையன தினைக்கதிர்கள் (நற். 206:1). துயபோனற தலையையுடையது இறாவின் முடஙகல (நற். 358:8).

2. மென்மை. துய்-மென்மை-அமைந்த தலை மயிரினையுடைய சேணமிட்டது படுககை (மலை. 418). பஞ்சு துய்பட்டாற்போல (மென்மை யுற்றாற் போல) மழை பெய்தது (அகம 217:2,3).

3. ஆர்க்கு வெள்ளிய புறத்தைக் கொண்ட துய்யை - ஆர்க்கை - இடத்தேயுடையது புளியம் பழம் (மலை. 178). தலையில் துய்யினை உடையன பலாவிததுக்கள் (அகம். 7: 21) இண்டையின் குளிர்நத மலர் துய் விரிந்தது (அகம. 252: 9,10).

4. பிசிர். யாழ் நெய் வடிந்தால் ஒத்த துய-பிசிர்-அடங்கிய நரம்பினையுடையது (நற். 300:8).

5. கதிர்களிலும் மலர்களிலும் உள்ள மெல்லிய பகுதி. துய்யினைத் தன்னகததே கொண்டது வாகைபபூ (பதி. 43: 23; 66: 15). துய்யையுடையன பெரிய தினைக்கதிர்கள் (குறி. 37, 38). இனிய துளை யுள்ள துயயையுடையன இருப்பையின் பூக்கள் (அகம. 9:3-5). துய்யினை உச்சியிற் கொண்டது பாதிரிபபூ. (அகம. 191:1). துளையையும, துயயையு முடைய உச்சி கூம்பி வற்றியது இளம்பனை (அகம. 333:10,11). இண்டஞ்செடியின்மலர்கள் துய்யை யுடையன (குறு. 110.5,6; 380:5,6) ஒவியருடைய, ஒள்ளிய அரக்கினையூட்டிய எழுதுகோல் போனற தலையில் நுணணிய துய்யினையுடையது பாதிரி மலர் (நற். 118:8).

**துயர்/துயரம் – வருத்தம்.** 'தலைவனே! நீ அருளாமை யால உனது தலைவி கண்டார் இரங்கமெலிந்து, துயர் - வருததம் - உழைபபள்' எனப் பேகனை நோக்கி அரிசில கிழார் பாடுவா (புறம. 146: 5-7). சுரத்தின்கண்ணே பிரிந்தவர்க்கு இன்றோடு யாண்டு கழிக எனச் சொலலி வலிகெட்டுப் பொறுத்தற்கரிய துயர் உழக்கும் எனது வறுமை யுறுவோள் நினது செலவத்தைக காணுந்தோறும் வியப்பக் களிற்றில் ஏறிப போதலை விரும்பினேன்' எனக குமணனிடம் பெருஞ்சித்திரனார் கூறினார் (புறம. 161:11-20). பெருஞ்சேரல் இரும்பொறை யானைத தொகுதிகளின வலிய துயரைப போககி அவற்றை இரந்தோர் மகிழுமபடி கொடுத்தான் (பதி. 76:6,7) 'வருத்தத்தோடே கூடின துயர் (வறுமை) நின்னை ஆறறுப் படுத்தலினாலே வழி வருத்தம் தீர்ந்திருந்த இரவல' என விளிததுச சிறுபாணனை நல்லியக கோடனிடம் ஆறறுப படுத்துவர் (சிறு. 39,40). தாம்பாலே காலிலே கட்டப்பட்ட வருத்தத்தையுடைய கனறு மிக்க துயராலே சுழலுகினற தன்மையைப் பார்த்து, ஆயமகள், நும் தாய்மார் இபபொழுதே வருவர் எனக கூறினாள (முலலை. 12-16). தனனிடததே தங்குகின்றவனை இனிய துயில் கொள்ளுதலைக் காணாளாயத தலைவி துயர் உழந்தாள் (முலலை. 80). 'நெஞ்சம் செயலற்று வருநத நமக்குத் துயரம் செய்து நம்மை அருளாராயினும் அவரது நடபு நமக்கு ஒழியாதிருபபதாக' எனத் தலைமகன பொருள் வயிற்பிரிந்தவழிக கிழததி தோழிககுக கூறினாள் (அகம. 40.10).' நெஞ்சே, தலைவியின் நீரொழுகும் கண்கள் பிட்டன என்பானது வேல்போல அரிய துயரைத் தரும்' எனத் தலைமகன், பிரியக் கருதிய நெஞ்சிறகுச சொலலிச செலவழுங்கினான் (அகம 77:16-19). தினைபபுனம் காபபோன் பரண்மீது கொளுத்தி வைத்த சுடரின ஒளியினை நோககி வநது தலைவியின நடுககததைத் தரும் துயரினை ஒழிதத நன்மையாளன் தலைவன' (அகம. 88.5-7). 'தலைவியின் தோள்கள் மூங்கிற கணுககளின் நடுவிடததையொததுச் சேய்மைக கண உளவாயினும் நாம நடுஙகத்தகக துயரினைத் தரும்' என இரவுக்குறி வந்து நீஙகும் தலைமகன் தன்னெஞ்சிறகுக கூறினான (அகம. 152:3,14,23,24). 'இரவில் ஆனாது துயர் உறும எம் கணகள் இனிது துயில, உடன் சென்ற தலைவியை எமது மனையின கண் முற்படக் கொணாநது தருவானோ அன்றித் தன் மனையின்கண் கொணடு செல்வானோ' என மகட் போககிய நறறாய் கூறினாள் (அகம. 195. 16-19). 'நனமையையுடைய ஆய மககள் விரும்பி ஆராயும் பழைய நலத்தினை இழநததனாலாய துயரமொடு சிறிதும் வருநதாதே' எனப பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத தோழி வறபுறுத்தினாள் (அகம. 197:3-5). 'நாள் தோறும் அனனையும் அருந்துயர் உற்றனள்' எனத தோழி தலைவியை வறபுறுத்தற்குக் கூறினள் (அகம. 209·1,2). அன்னை தலைவியின துயர் வநத வழியினை அறிதறகு வேலனை அழைத்து வெறியாடறகு வேண்டுவன செயதாள் (அகம். 242.6-12) தலைவி, தனது கணணின் உள்ளிடமெலலாம சிவககப பொறுத்தற கரிய துயரினை உடையாளாயினள (அகம. 244.9-11). 'அணிகள நெகிழநது விழ மெலிந்து நாம வருததத்துடன் நினைவு கூரும அருநதுயரினைத் தூதுவர் கூறக கேடபின, அஙகே தஙக மாட்டார' எனத தலைமகன பிரிவினகண வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகணடு தோழி கூறினாள (அகம். 251.4-6). 'பனிககாலததே நமது அழகினைக கவர்நத பசலை நமமை வருததவும் அதனால நாம எயதும் துயரினை அறிநதிலரோ' எனப பிரிவின்கண தலைமகள் கூறினாள் (அகம. 273 4-6). மேனியின் அழகிய நலம்கெடும்படி நீஙகுதல இல்லாத துயரம் செய்தோளுடைய மலையிலே தோய்ந்து வருகின்ற நீரினகண மூழ்குவேமோ' என, இரவுக் குறிககண் தலைமகன் சிறைபபுறத தானாகத தலைமகட்குத் தோழி கூறினாள (அகம. 278 12-15). அஞ்சததகக நெறிவழியே இனறு

முதல் இரவுக் குறிக்கண் வராதே; வருதியேல், யாங்கள் இவ்விடத்தில் மயக்கமுறும் துயரத்தி னின்றும் நீங்குமாறு நின் சீறூரை அடைந்தபின் நாய்களை அழைக்கும் கொம்பினைச் சிறிது ஊதல் வேண்டும்' என இரவுக்குறி வந்த தலை மகனை வரவு விலக்கித் தோழி வரைவு கடாவினாள் (அகம். 318:9-15). 'குற்றமில்லாத நமது துயரை அறியாமையினால் தனது துயரம் வெளிப்பட்டுத் தோன்றத் தலைவன் செல்லா நிற்பன்' எனத் தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறினாள் (அகம். 330.4-6). 'நெஞ்சே' கொடிய சுரநெறியில் என்னை அழைத்து வந்த நீ, எனக்குத் துயரினைச் செய்து நீயும் ஆற்றாயாகித் தலைவியின் குணத்தினை நினைப்பாயாயினை' எனத் தலைமகன் இடைச் சுரத்துத் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 365: 9-15). பிரிந்தார்க்குத் துயரினை மிகுக்கும் வாடைக்காலம் (குறு. 103:4). 'தலைவன் கொடுமையை நினைந்து, குறையாது பெருகுகின்ற துயரமொடு வருந்தி நடு இரவிலும் தூங்காது இருப்பாரை ஏன் என்று கேளாத அறிவற்ற மக்களோடு நெடிய இராப்பொழுதையும் உடையது இவ்வூர்' என வரைவிடை ஆற்றாது தோழிக்குத் தலைமகள் கூறினாள் (குறு.145). 'கிணற்றினுள்ளே விழுந்த குரால் நிறப்பசு, படும் துயரினை இராப்பொழுதிலே கண்ட ஊமையன் அதனைப் பிறருக்கு எடுத்துரைக்க இயலாது துன்புறுவதுபோல், என் பொருட்டுத் தோழி படும் துயரினைப் பொறுக்கும் ஆற்றல் இல்லாதவளாயினேன்' என, பிரிவிடை இறந்து படும் எனக் கவன்ற தோழி கேட்பத் தலைவி கூறினாள் (குறு. 224). 'படுக்கையிடத்தில் கிடந்து வருந்திய அழகு நீங்கிய உன்னுடைய இக்காலத் துள்ள துயர் பற்றித் தலைவர் கேட்பின் அது கெடும்படி திரும்பி வருவர்' எனப் பிரிவிடைத் தோழி வற்புறுத்தினாள் (குறு. 253:1-4). 'தலைவ னுடைய பிரிவினாலே பொறுத்தற்கரிய துயராலே வருந்துதற்கும் ஆற்றல் இல்லை' என வரை விடைக் கவன்ற தோழிக்குக் கிழத்தி கூறினாள் (குறு. 302:2). சோலையிடத்துள்ள வாழை, மதநோயையுடைய மத்தகத்தைத் தடவுதலினால் மதங்கெட்டுக் கலங்கிய துயர் அடைந்த களிறு பெண் யானையின் முதுகைத் தடவியது (குறு. 308:1-4). துயர் மிக்க மழைக் காலத்தே தலைவன் திரும்பி வந்தான் (குறு 398:1,2,6). தலைவி தனக்குத் துயரம் உறுவித்ததாக இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண் தலைமகன் கூறினான் (நற். 8.5). களிற்றியானை பாம்பின் வாய்ப்பட்டதெனச் சோராத துயரோடு அஞ்சுகின்ற பிடி பிளிறியது (நற். 14:8-10). இரவில் தலைவி, தலைவன்பால் உள்ள அவாவினால் வெய்தாக உயிர்த்து வருந்த, அன்னை அப்போது துயர்மிகுதியை அறிந்தவள் போல 'இன்னும் உறங்கவில்லையோ' என வினவினாள் (நற். 61.1-5). 'நண்டுகளை நோக்கி மகிழும் சிறிய விளையாட்டும் ஒழியும்படி நினக்கு உற்ற பெரிய துயரமாகிய நோயை நீ கூறாய்' எனத் தலைவன் சிறைப்புறத் தானாகத் தோழி, தலைவிக்கு உரைப்பது போன்று கூறினாள் (நற். 123:10-12). 'ஏதிலாட்டியர் பழிச் சொல் தூற்றும்படி, நம் காதலர் அச்சம் மிகுகின்ற துயரை நமக்குச் செய்பவர் அல்லர்' எனப் பிரிவின் போது தோழி தலைவியை வற்புறுத்தினாள் (நற். 138:6-8). 'நெஞ்சமே, நீ பெரிதும் மனமழிந்து இரந்து பின்னிற்றலை வெறாதே; யான் உற்ற நோய்க்கு, அருந்துயராகிய அவலத்தை நீக்கும் மருந்து வேறில்லை' என, குறைமறுக்கப்பட்ட தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (நற். 140:8-11). 'அடங்காத நோயுடனே, கலக்கமெய்தி காமம் அளவு கடந்து பெருகுதலானே கையறு துயரம் கண்டு வைத்தும் அருள் செய்யாய் ஆயின் யான் நோவேன் எனப் பாங்கற்குத் தலைவன் கூறினான் (நற். 185:1-3,12). கண்ணில் விழுகின்ற நுண்ணிய துகளையும் கை விலக்குமாறு போல, நாமுற்ற துயரம் களையாராயினும் தலைவர் இல்லாத ஊர் இன்னாததாகும்' எனப் பரத்தை கூறினாள் (நற். 216:4, 5). 'என் துயரின் மிகுதியினை அறியாத அன்னைக்கு இந்நோய் தணியும்வழி இது என உரைத்தல் செய்தாயல்லை; ஆதலின் நீ கொடியை' எனத் தலைவி தோழியை நோக்கிக் கூறினாள் (நற். 244:5-8). உடம்பெங்கும் பசலை பரந்து துன்பமிக்கு மயங்கிய துயரத்தைப் பார்த்து நம்பாலுள்ள விருப்பத்தாலே தானும் வருத்தமுற்று வேலனை வினவிய அன்னைக்கு, அவன் வெறி என உரைப்பான்; இனி இது எவ்வாறு முடியுமோ' எனத் தோழி தலைமகன் வரவுணர்ந்து தலை மகட்கு உரைப்பது போன்று கூறினாள் (நற். 273: 1-5). குடம்பையின்கண் இருந்து தன்பெடையைப் புணர்கின்ற அன்றிலின் வருத்தம் தரும் குரலைக் கேட்குந்தொறும் காதலியின் கண் உறங்காது துயர் அட மெலிந்து வருந்தும் (நற். 303:4-7). 'நெகிழ்ந்த தோளையும் வாடிய வரியினையும் தளிரின் வனப்பை இழந்த என் நிறத்தையும் நோக்கி, இவள் துயரம் யான் செய்தது என்று அன்பினால் அழாதே' எனத் தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தாள் (நற். 309:1-4). 'தாங்கு வதற்கரிதாகிய துயரினாலே இறந்தொழி யாமையின், அன்பில்லாதவளும் அல்லேன்' எனப்

பிரிவிடை ஆற்றாளாகிய தலைமகள் பருவ வரவின்கண் கூறினாள் (நற். 381:1,3, 10). 'நெஞ்சமே, அடைய முடியாது பொறுத்தற்கரிய துயரிலே வருந்தியிருந்த போது, தனககுரிய நாணத்தையும் விட்டு நம் நோய்க்கு மருந்தென வந்து வாயத்த இந்த இளமையோள், புதுபபூககள் பரவிக் கிடகக அப்பரப்பின் மீது மென்மெல நடககவும் யாம் கண்டனம்' என உடன் போகின்ற தலைவன் தன்னெஞ்சிற்குக கூறினான் (நற். 384: 7-11). 'அன்னையே, பிரிவினால் துனபுறற துயரம நீங்க, அவர் தேர்மணிககுரல் இன்புற ஆனாது இசைக்குமம' எனத் தோழி செவிலிக்குரைததாள் (ஐங். 102). 'அழகிய மாநதளிர் மேனியளாகிய எனது தோழியது துயரைத் துறைவன காணக' எனப் பரதத்தையின் தோழி தலைமகற்கு வாயில் மறுத்தாள (ஐங. 158:4 5). 'நறுமணம் கமழும் கூந்தலையுடைய இத்தலைவியால் அணங்குற்றோர் இரவினும் துயிலுதலறியாது மணியிழந்த பாம்பினது துயரத்தை அடைவர்' (ஐங். 173). 'நெயதல்நிலத் தலைவனுடைய மகள் தீர்தற்கரிய துயரை நலகிததலைவனது இனிய துயிலினைக் கவர்ந்து கொண்டாள்' (ஐங். 195). தலைவி உற்ற துயரினை நோக்கி, அன்னை வேலனை அழைத்து வினவினாள் (ஐங். 241). 'அறியாமை யினால் அன்னையும் நாடன செயத துனபத்தை வெறியினால் தீருமென மயங்கித் துயர் உழந்தனள்' எனத் தோழி தலைவிக்குக கூறினாள் (ஐங். 242). 'நம் நங்கையைப் பெருவரை நாடன் வரையு மாயின் அவற்குக் கொடுத்தல் நன்று; நங்கையின் துயர் இப்பொழுதும் நீங்காமலுள்ளது' எனத் தோழி கூறினாள் (ஐங். 258). 'நம் காதலுககுரிய தலைவி மிக்க துயராகிய அவலத்தானே உயிர் போம் அளவிற்குத் தேய்நது வறிதாகிவிட்ட நம் மனத்தைத் துன்பம் வருத்தத் தன காதலனோடு காடிறந்து சென்றனள்' எனத் தலைமகள் புணாநதுடன் போகியவழி, செவிலி ஆற்றாமை கண்ட நற்றாய் அவட்குக கூறினாள் (ஐங். 313). 'தலைவி நின்னைத் துறந்து சென்றதனை ஏதுவாகக கொண்டு, துயர் வருத்துதலானே உடன்மெலிநது அறக்கடவுளைப் பழிக்கும் அயலிலாட்டியே' என அயலோர் நற்றாயை விளித்துத தலைவியும் தலைவனும் மீண்டமையைக கூறினார் (ஐங் 393). 'மாட்சிமை யிலலாததொரு கோட்பாட்டோடு யாம் மயங்குதற்குக காரணமான துயர் செய்த என மகளை மீணடும் கொணர்ந்து காட்டுதற்கும அக்கோட்பாடே அருள் செயதது' என உடன் போன தலைமகள் வந்தவழித தாய் சுற்றத் தார்க்குக் கூறினாள் (ஐங். 394). 'தலைவிககுத் தலையளி செய்யாமல யாம பிரிநதோம் என்று நினைவூட்டி எம்மைக் காாபபருவம் துயருறுத்தும்' எனக் கார்காலம் வநதவிடததும் மீளபபெறாத தலைமகன, தலைமகனிடத்திருநதும் வநத தூதர் கேட்கக் கூறினான் (ஐங். 441). 'பாணனே, விழிகள் பசலையுண்ணத் துணிமிகுதற்குக காரணமான துயரமொடு படர் உழககும் காதலியின் உசாவுத் துணையாகச் சிறிதுபொழுது ஆங்குத் தங்குவையாயின என்தேரினை நீ தபபாது காண்பாய' எனத் தலைமகள்மாட்டுப் பாணனைத தூதுவிடுதத தலைமகன கூறினான் (ஐங். 477). வாடுகின்ற நாவிற்குத தண்ணீர் பெற முடியாத மனத்தடுமாற்றத்தால் ஏறபடும் அரிய துயரை அவர் கணணீரே வீழ்ந்து நனைத்துபபோககும கடுமையையுடையது பாலைவனம (கலி. 6:4-6). 'காதலா தலைவி இயற்கை நலமும கெட்டு இவ்விடததேயிருநது துயரில அழுந்துமபடி துறநது சென்றாா' (கலி. 16:5). 'காதலா இவ்விடததே யிருந்து தலைவி துயர்மிகும்படி அளிசெயயாது பொருள் வேட்கையால அகன்றாா' (கலி 16 13, 14). 'இயற்கை நலங்கெட்டுத தலைவி துயர் உழபப நீ பிரியத் துணிவை' எனத தலைவனை எதிர்ப பட்டுக கூறித தோழி செலவழுஙகுவிததாள் (கலி. 17:5). 'தலைவர், அரிய துயரைக களைவாராய வநதாா; இனி வருநதாதே' எனத தலைவிககுத் தோழி அவன வரவுணர்நது கூறினாள் (கலி. 29:23-26). 'இளவேனில, நாம துயா அறுதற்குக காரணமான சொல்லோடே நம காதலருடைய தூதாய வநதது' எனத தோழி தலைவியை நோக்கிக கூறினாள (கலி. 32:15-19). தலைவன வநது தான உற்ற நோயுரைககவியலாது பெயர்வன்; யானும் பாயல் பெறாது படர் கூர்நது துயருழபபேன்; ஒருநாள் என் தோள் நெகிழபுறற துயரால் துணிநது நாணற்ற செயல் ஒனறைச் செயதேன' எனத தலைவியின களவுப் புணர்சசி அறிநது தோழி படைததுக கூறினள் (கலி. 37:3-12). 'நினது தீமையான் உணடாகிய அருநதுயரததைப பிறர் அறியாதபடி காததவனுடைய ஆரஞரைத் தீர்க்கும் மருந்தாகி விரைநது செல்வேம' எனத தலைவியின ஆற்றாமை கூறித தோழி வரைவு கடாவினாள் (கலி. 44.18,21) 'நீ வருதலை விரும்பித துயர் உழபபவளுடைய துயிலிலலாத கண்கள் செய்த பழியுண்டோ; அவள் தாங்கிய அரிய துயரததால உறற கேடடைத தூககிப பார்ககில அது மலையினும் பெரிது' எனக கூறித தோழி வரைவு கடாவினாள் (கலி. 48:12,13,22-24). 'அஞ்சல என்று கூறி, அருளாது துறததலின நெஞசழிதறகுக காரணமான துயர், இறநது பாடு

எயதுவிககு அதனை நிறுததவும் முடியும்; ஆனால் நனவின்கணபடும் துன்பம கனவிலும் வந்து வருததுகினறதே' எனத் தோழி தலைவனிடம், தலைவியை ஆறறுவிததலின அருமை சொல்லி வரைவு கடாவினாள் (கலி. 53.16-19). 'நலத்தினை யுடைய மகளிரைக கண்டவர்ககுக் காமநோய் மிகும்படி உயிர்போம் துயரைச் செய்தல் பெண தன்மை அன்று எனக் கூறி நடுங்கினான்' எனத் தோழி தலைவனது குறை நயபபக் கூறினாள் (கலி. 60:5-7). 'யானுற்ற துயருககு மருந்தில்லை யாயின இனி வருநதுவேன் அல்லனோ' எனத் தலைவி கூறினாள் (கலி. 107:27,28). மாலைக் காலததே வெறுபபுக கொண்ட துயர் தீரும்படி காதலர் விரைநது வருவர் (கலி. 120·20,21). 'நமககு அருளாதாரைப் போல நாரையும் கங்கு லிடத்து நம துயரை அறியாமல், காம நோயாலே வருத்தமினறாய் மாறாமல கூவுகின்றது' எனத தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 128.3-7). 'அனறிலே, என துயரை அறிந்தனையாய் ஆர வாரிக்கின்றாயோ' எனத் தலைவி தன் ஆற்றாமை வெளிப்படுததினாள் (கலி. 129:12-14). நீ ஊசலில் ஆடின் நினனைக் கூடியவன் அருமை செய்தயர்தத லால நினககுணடாகிய அருந்துயரை யான அவனை எதிர்ப்பட்டுத் தீர்க்கவும் என்னால் ஒருவாறு இயலும் எனத தோழி தலைவியை ஆற்றுவிததாள (கலி. 131:1-3). 'நினனால் வருநதினவள் துயரத்தை வரைநது சென்றுகளைவாய்' எனத் தோழி தலைவனை வரைவுகடாவினாள் (கலி. 133: 18,19). காதலர்விரைந்து புகுதர, காதலியின் துயரம் நீங்கியது (கலி. 134:26,27). 'தாயத்தில் பத்துருவம் பெறறவனபோல் ஆககம் பெருகினவள், சிறுதாயம் இடுதலால தோற்றவனைப் போலத துயர் உழப் பதோ,நெறியலலாநெறியிலேசூதுபொருகையினால் பொருளை இழந்தவனைப் போலத் துயரில் அழுந்து வதோ, இருகாற சிறுதாயம் இடவேணடியவன, ஒரு கால சிறுதாயம் இடப்பட்டவனைப் போலச் செறிநததுயரில் அழுநதுவதோஎனத் தோழிதலைவி ஆறறாமை கூறி வரைவு கடாவினள் (கலி. 136: 5-21). 'சானறீர்' அரசன் ஒருவன் தவஞ்செய்தலின் நீங்கித்துறககத்திறசேறலை வழுவுகையினாலே இவ் வழுவுதலை மீட்டுத தவஞ்செய்விததுச சுவர்க்கததே போக விட்டுத் துயர் தீர்த்தாறபோல, என் துயரினது தன்மையைப போக்குதலும் நுமக்கு முறையாகும' என மடலேறுகினற தலைவன சானறோரககுக கூறினான (கலி. 139 33-37). மகளிர் தோளைச் சோநத ஆடவா அவர்கள் துயர் மிகும் படி பிரிநதனர் (கலி. 145:13). வளை கழலத் துறந்து துயாசெய்த கள்வன் தலைவன (கலி. 145: 36). வளை கழலப்பண்ணினவன் செய்த துயரால் காமத்தீ சந்துதோறும் மூண்டது (கலி. 145:57). ஆயிழை உற்றதுயர் தலைவன் வந்ததும் ஞாயிற்று முன் இருள் போல் மாய்ந்தது (கலி. 145:66). தன் காதலன் வர அவனைக் கண்டு தான் அழுந்தின துயரமெல்லாம் தலைவி அறுதியாக மறந்தாள் (கலி. 147:67,68). 'தலைவர் பிரிதலின் துன்புறும் மகளிர்க்குத் துயர் செய்தல் நினக்குத் தக்கதோ' எனத் தலைவி மாலைப் பொழுதை வினவினாள் (கலி. 148:10,11). 'தலைவி இட்ட துனிக்காரணத்தை என் ஒழுக்கம் நெறியாக ஓர்த்தலால இதனைப் பொயச்சூள் என்று கருதி என்னை இறை துயர்கூரச் சுடும்; இது செய்யாமல் நீ சென்று இறைவனடியைச் சேர்ந்து ஆற்றுவாயாக' எனத தலைமகன் தோழியிடம் கூறினான் (பரி. 8:77-79). புணை பெறாது தலைவி நீரிற்படுகினற துயரத்தைக் கண்டு, கொழுநன் அந்நீரின்கண் வீழந்து அவளைத் தழுவினான் (பரி. 21:42-45).

**துயில்** - உறக்கம். இராப்பொழுது ஓரிடத்தே துயில் - உறக்கம் - கொணடாற் போன்ற செறிந்த இருளை யுடையது காடு (புறம். 126:6,7) மடமானின் பெரு நிரை வைகிய துயிலை மந்தி எழுப்பும் (புறம். 247: 3 4). 'துஞ்சாத என் கண்களே துயில் கொள்ளு தலை விரும்புகின்றன' எனத் தலைவன் இறந்த போது மாறோக்கத்து நப்பசலையார் கூறுவர் (புறம் 280:4). தலைவன் ஒருவன், எமக்கும் பிறர்க்கும் பொருள் ஈந்து துயில் கொளளுதலை மேற் கொள்வானாயினான' என வேம்பறறூர் குமரனார் பாடுவர் (புறம். 317:6,7). வேட்டுவன் மிக்க துயிலில் அழுந்தினானாக, மானகள் திளைத்து விளையாடின (புறம். 320:3-5). 'நீ விரும்பிய மனைவியுடன் இனியதுயிலைப் பெறுவாயாக, நின் வயல்கள் வேலி ஆயிரமாக விளைக' எனப் பொறையாற்று கிழானைக் கல்லாடனார் வாழ்த்துவர் (புறம். 391: 18-21). 'பாசறைக்கண் வைகறைப் போதில் எழுகின்ற ஒலிகளைக்கேட்பாயாக; படுக்கை யினின்றும் துயில எழுவாயாக' எனச் சோழன் குளமுற்றத்துத துஞ்சிய கிள்ளிவளவனிடம் எருக் காட்டூர்த தாயங்கண்ணனார் கூறினார் (புறம். 397: 7-9). முரசு முழங்குகின்ற பகைவர் நகரங்களில் அரசு துயில் கொள்ளாமல் மாதிரம் பனிக்கும் புகழ் உடையவன் இமயவரம்பன நெடுஞ் சேரலாதன் (பதி. 12:7, 8). மகளிர் மையுண்ட கண்கள் துயில் கொள்வதற்கு இனிய படுககையாக உள்ளவன சேரன் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் (பதி. 16:18). பகைவரது கொடுமை யினால் பல நாள் பாசறையிலே தங்கிப பழகுதலால்

3. ஆடுதல். பொறி அமை பாவையின துங்கல்- ஆடுதல் (அகம். 98:20). தூங்கல - ஆடுதல் (நற். 135:1,258354:7).

**தூங்கலோரியார் - புலவர்.** தூங்கல் என்பது ஊர் போலும் (ப. மூ. பக். 448). ஓரியார் என்பது இயற்பெயர். இவர் பாடியனவாகக் குறுந்தொகை யில் இரண்டும் (151,295), நற்றிணையில் ஒன்றும் (60) ஆக மூன்று பாடல்கள் உள்ளன. தழும் பனையும் அவனுடைய ஊணூரையும் பாடியவர் தூங்கல் எனறு நக்கீரர் அகபபாடல் ஒன்றில் (277) குறித்துள்ளார். தூங்கல் எனும் புலவா இவ்வோரியாரே எனக கருதுவர் பி.நா,ந.மு.வே. ஆகியோர் (அகம். 227-உரை; நற். பாடினோர் வரலாறு). அவ்வாறு தழும்பனையும் அவனூரையும் இவர் பாடிய பாடல கிடைத்திலது. நககீரனாரால் தூஙகல் என்று ஊர்ப் பெயர் கொண்டே குறிக்கப் பெறுமளவு இப்புலவர் பெயர் பெற்றவராகத் திகழ்ந்தமை புலனாம். இவர் தம் பாடல்களைப் பாலை, மருதம் ஆகிய இருதிணைகளில் பாடியுள் ளார். பொருள் வயிறபிரியக் கருதிய நெஞ்சிறகுத் தலைவன் கூறுவதான பாலைத்திணைப்பாடலில (குறு. 151) தலைவியைப் பிரிநது போதலென்பது தன் இளமைக்கு முடிவேயாம் என்று அவன கூற்றாக இவர் அமைத்துள்ள கருத்து உணர்ச்சி மிக்கது. தலைவியை மணப்பதற்கு முன் ஒரு பசுவை வைத்து அதனால் வருவதை உண்டு வாழும் சிறப்பில்லாத வாழ்க்கையுடையவனாயிருநத தலைவன், பெருநலக்குறுமகளான அவள் வர வினால் திருவிழா போனற சிறப்புடை வாழ்க்கை யாளனாய் வளம் பெற்ற குறிபபினை இவர் ஒரு பாடலில் அருமையாக ஆணடுள்ளார் (குறு. 295). உழவர் வாழக்கையை இவர் நன்கு புனைந் துள்ளார் (நற். 60).

**தூங்கியவர் - ஆடினமகளிர்.** 'பட்டினம் படரின், கிடங்கிற்கோமானைப் பாடி, குழலோசையின் தாளத்திறகொப்பத் தூங்கியவரோடு - ஆடின மகளிரோடு - குழல்மீன் சூட்டினை மனைதோறும் பெறுகுவீர்' எனப் பாணர் ஆற்றுப்படுத்தப் பெறறனர் (சிறு. 153,160-163).

**தூங்கெயில் – வானிடத்துத் தொங்கிய எயில்,** அசுரர்க்குப் பகைவராகிய தேவர்கள் நெருங்குதற்கு அஞ்சும் மிக்க வலியையுடைய ஆகாயத்துத தூங்கெயிலை - தொங்கியஎயிலை - அழித்த நின்னுடைய முன் னுள்ளோரை நினைப்பின் எணடுள்ள பகைவரைக கொல்லுதல் நினக்குப் புகழுமனறு எனச் சோழன குளமுறறத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை மாறோக் கத்து நப்பசலையார் பாராட்டுவர் (புறம். 39 5-7). 'தேவருக்குப் பயந்து வானத்திலே அவுணர் அமைத்த தூங்கெயிலின கதவைக காககினற கணையமரம மேலெழுந்தாற் போனறன நார் முடிச்சேரலின் பருத்த முழவனைய தோள்கள்' (பதி. 31:18-20).

**தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியன் - சோழ வேந்தன.** இவன பெயர் இதே வடிவில் பயின்று வந்திலது. எனவே, 'தூங்கெயிலெறிநத தொடி விளங்கு தடககை, நாடா நல்லிசை நறறேர்ச் செம்பியன' (சிறு. 81, 82) எனறு இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் அடைகளொடு பாடியது கொண்டே இவனுக்கு இபபெயா அமைந்தது போலும். இவன பகைவருடைய ஆகாயததே தூங்கும எயிலை எறிநத (அழிதத) செய்தி மாறோககத்து நபபசலையாராலும வியக்கபபட்டுள்ளது (புறம். 39).

**தூங்குகொளை - மந்தகதி.** தூங்கு கொளை – மநத கதி - உடையது (ஆடறகேறற) முழவு (பதி. 43.30)

**தூசு - உடை.** தூசாகிய உடையினையுடையவா மகளிர் (பட். 148-150).

**தூண்/தூணம் - கம்பம்.** சிறிய இல்லினகண்ணே நல்ல தூணை - கமபததை - 'பற்றி நினறு நினமகன யாண்டுளனோ?' எனக்காவறபெணடை நோககி ஒருவா வினவினாா (புறம். 86:1, 2) வேள்விச சாலையுள் பருந்து விழுஙகுவதாகச செயயபபட்ட விடத்து நாட்டப்பெறறது யூபமாகிய நெடியதூண (புறம். 224:8). கேள்வி மலிந்த அநதணா நிறைநத வேள்விச் சாலையில் தூணம் நிறகும (புறம். 400.19). நீராடிய மகளிர் விட்டுச சென்ற மகரககுழையினை இரையென எடுத்த சிசசிலிபபறவை அநதணா செயது முடித்த வேளவிச சாலையிடதது நடட தூணததின் மேலேயிருநது, யவனா கூமபின மேலிட்ட அனன விளககுப போலத் தோனறும (பெரு. 315-318). புதியவா பலரும் ஏறித தொழு வதறகுத தங்கும் பொதியிறகண, தெயவ முறையும அமபலததில் நினற பருதத நிலைமையினையுடைய நெடியதூண சாயுமபடி களிறுகள் தமமுடமபை உரிஞ்சிப பிடிகளுடன தஙகும் (பட். 249-251). மழுவாள் நெடியோன (பரசுராமன) முனபு அரி தினில் முயனறு முடிதத வேளவிககண, கயிறறினை அரையிற சுறறிய, காணததகக அழகினையுடைய அரிய காவலைக கொணட நீணட வேள்வித்தூண

போல யாவரும் காணலாகாதது தலைவியின் மாறபம (அகம. 220:5-9). சிறிய ஊரில வறுமை யுறற பெணடினது புல்வேயந்த குடில் ஒரு பசு கட்டியுள்ள ஒறறைத தூண கொண்ட முகபபினை யுடையது (அகம. 369 22-25). மனையில் எருமைக் கன்றுகளைத் தூணகள் தோறும் கட்டியிருபபர் (நற். 120 1,2). பிருஙகலாதன தாதை (இரணியன்) மாறபில பகைவலிகெடச சென்று அவன இடி முரசு ஒலிப்ப நீ புறப்படுதலால் வெடித்து ஒடிந்த தூணின பிளபபோடு ஒதத நினனால் தடியப்பட்ட ஊனதடி பலபட வகிர்தல் வாயத்த உகிரை உடையை' எனத திருமாலைப புகழுவர் (பரி. 4: 17-21).

**தூண்டில் - மீன் பிடிக்கும் கருவி.** நெடிய மூங்கிலா லாகிய தூண்டிலால் பிடிதத மீனை விற்றுக கினைமகள் புளிங்கூழைச் சமைத்தாள் (புறம். 399:15,16). பாணமகன நெடிய மூங்கிறகோலின் தலையிலே வலிததுக்கட்டின கயிறறிடததே தூண் டிலைக கொளுததி அதனை மறையப் பொதிதத இரையை இரும்பின மடித்த தலை இரையின்றித் தனிக்கும்படியும் கயிறு நடுங்கவும் வாளை மீன் கௌவித் தபபிததோடியது (பெரு. 284-287). பரதவர் உவா நாளில் மீன் பிடித்தறகுப் போகாது, தம குறிய இறபபினையுடைய குடியிருப்பில நெடிய தூண்டிலின் காமபுகளைச் சார்த்தி வைப்பர் (பட். 80,81,90,93). ஓரிடததில் நிற்றலையுடையோர் இட்ட நெடிய கயிற்றையுடைய தூணடிலில் பிடியின் கையை ஒத்த சிவநத கணணையுடைய வரால்மீன் சிககியது (மலை. 456,457). பெரிய வரால போத்து வளைந்த வாயினையுடைய இரும்பிலமைந்த தனக்குக் கூற்றமாகிய இரையினை விழுஙகி, ஆம்பலது இலை கிழிய மேல் எழுநதும் குவளையின மலர்கள் சிதையும்படி பககததே பாயநதும் வள்ளைக கொடியினைக கலககியும் தூணடில இட்டவேட்டுவன் இழுககவும் வாராமல் குளத்தைக கலககியது (அகம. 36.1-8). காட்டு யானை இழுத்துக கைவிடட மூஙகில், மீனைக் கவாநத தூண்டிலைப் போல மேலே விரைநது சென்றது (குறு.54:3,4). பரதவர், கடல்நீரில விரைந்து செலலும சுறாமீனைப பிடிக்க இழுககும விசையை யுடைய தூண்டிலை எறிந்தனர் (நற். 199.5, 6). 'தலைவி அவள் விரும்பும் தலைவருககே உரியள்; அஃதன்றி வேறறுவரைவுப் படுததினரேல், வலையையும் தூணடிலையும் பிடித்துக் கடலின் கணணே செலகின்ற கொலைத்தொழிலையுடைய வெய்ய பரதவர் சிறார்வாய்ப பட்டொழிந் தனளேயாம்' என நொதுமலர் வரைவுழித் தோழி செவிலிககு அறததொடு நினறாள் (நற. 207.9, 12). குரங்கு தன்மேலிருந்துழி வளைந்து அது பாய்ந்து போவுழி நிமிர்கின்ற மூங்கிற்கோல், மீனெறி தூண்டில் நிகர்த்தது (ஐங். 278:1-3). கவரும் தொழில் பலவும் வல்ல பாணனைத் தூண்டிலாகப் போகட்டுப் பரத்தையரை அகபபடுததிக் கொளவர் (கலி 85:22-24).

**தூணி - 1. அம்பறாத்தூணி.** புற்றில் அடங்கிய பாம்பைப போல, தீப்பொறிகள் மேலே எழுகின்ற தூணியில் - அம்பறாத்தூணியில் - அம்புகள் ஒடுங்கி யிருநதன (பதி. 45:1, 2). காணடவ வனததை நெருப்புணணுமபடி செயத கணையை உள் ளடககின தூணியையுடையவன (அருச்சுனன) (சிறு. 238, 239). காவிக் கல்லில தோயத்த துகிலை உடுத்திய அந்தணன, முக்கோலிலே அநத உடையினை இட்டு வைத்த தன்மையை ஒசக அறத்தாற பொருகின்ற போரில் ஓடாமைககுக் காரணமான வலிய வில்லைச் சேரலூன்றி அதிலே தூணிகளை நாற்றினர் (முல்லை. 37-39). கொல்லுந் தொழிலால சிறந்த கூரிய குறிய புழுகெனப் பெயரிய தூணியில் மிகப் பெய்திருக்கும் அமபின் (குப்பி) நுனியை ஒப்ப இருப்பை அருமபியது (அகம. 9:1-3). அம்புகளைத் தொகுத்த தூணி, மூடி திறககபபெற்றதுபோல பூத்துள்ள இருபபையின் தளிர் பொதியப் பெற்ற குவிநத (துளையுடைய) பூஙகொத்துக்கள் காணபபெறும் (அகம. 225:10, 11).

2. **மரக்கால்.** 'கடல் சூழ்நத அகன்ற நிலனே தூணியாக - மரககாலாக - கொணடு, ஏழு மரக்கால் வரையில அளககத்தகக பெரியநிதியைப் பெறுவ தாயினுமவாரேன' எனப் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினை நெருங்கித் தலைவன் செலவழுங்கிக் கூறினான. (நற. 16:7-10).

**தூது - 1. செய்தி விடுப்பு.** அதியமான் தூது விடத் தொண்டைமானுழைச் சென்ற ஔவைககு அவன் படைககலக கொட்டிலைக் காட்டினான (புறம 95). விரைவில் வருக, விரைவில் வருக என வேந்தனால் விடப்பட்ட தூது ஆங்காஙகு இசைகக மறவர் போர்க்கெழுநதனர் (புறம். 284.1, 2) 'பொறுத்தற் கரிய துயரினை உடையளாயினள் தலைவி என்று பாணன விருபபமுற்றுத தூதாக வநதனன்; நீயும் தேரினை விரைநது செலுததுவாயாக' எனத் தலைவன் பாகனிடம் கூறினான் (அகம. 244:.10, 11). 'நாம் தலைவனிடம் செலுததிய தூதும சென்றது'

எனப பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு தோழி கூறினாள் (அகம். 251:1). 'இளவேனிற்கண் பால் போல் பரவிய நிலாவினைக கொண்ட மாலைப் பொழுதானது தூதாக வநதது. கலங்காதே' எனத் தோழி தலைவிககுக் கூறினாள் (அகம. 259.8-11). 'தலைவர் தாம் செய்யும் தொழிலை முடித்துக் கொண்டு மீளும் எண்ணம் உடைய ராயினும் அங்ஙனம் மீண்டுவரும் பெரு விருப்புடன் விடுக்கும் தூது வரப் பெறுவேமாயின இவ்விடத்து நம் பசலை மறைதல் எளிதாகும்' எனப பிரிவிடை வற்புறுததும் தோழிககுத் தலைமகள் கூறினாள் (அகம. 333:18-22). உப்புவாணிகரது கூட்டமாகச் செலலும் கழுதை நிரை போனற பாறைகளின் வழியே பாாபபான் ஓலைச்சுருளுடன் பலகாலும் தூதாகச சென றான் (அகம. 337:6,7). 'தலைவியிடம் விடும் தூது ஒழியாது செலவதாக' என அல்ல குறிப்பட்ட தலைமகன தன்னெஞ்சிறகுக் கூறினான் (அகம். 338:15,16). 'தலைவன குற்றமிலலாத நெஞ்சினால் எணணிக கூறிய சொற்கள் நம்பால வநதுள்ளன; நாமும் அதனை ஏற்றுக கொணடு. தாம் எம்முடன் கூடிக் கலந்த காலத்திருந்த அன்புடையராயினேம் என்று கூறித் தூது விடுவோம்' எனக் கிழத்தி தோழிக்குக கூறினாள் (குறு. 106;3-6). 'தலைவி நம் திறதது உள்ளம் நெகிழ்ந்திலள்; நாம் அவள் உள்ளததை நெகிழ் விப்பதறகு விடும் தூது, மடல் ஊர்வதொனறே, எனத் தலைமகன தன்நெஞ்சிறகுக் கூறினான் (குறு. 182.1,6,7). 'ஈட்டுதற்குரிய பொருளை விரும்பிச் சென்றவராகிய தலைவர் மீண்டுவந்தனர் என அறிவித்தற்குத் தூதுகளும் வந்தில' எனப் பருவம் கண்டு வறபுறுத்தும் தோழிக்குக் கிழத்தி உரைத்தாள் (குறு. 254:6,7). 'நம் தோள்களைத் தழுவி இன்புற்ற பின் பிரிந்து சென்ற வன்மை யுடையராகிய தலைவர் பறவை வழியாக நமககு விடுக்கும் தூதுமொழியைச் சொல்லாராயினும், இராப்பொழுதில துணையாக இருந்த தோட்டத்தி லுள்ள வேஙகை மரத்திற்கும் தூது மொழி கூறலை மறந்தார் போலும்' எனத் தோழிக்குக் கிழத்தி உரைத்தாள் (குறு. 266). 'தாயும் தந்தையும் இல்லத்தில் இல்லாததால கடற்கரைத் தலைவன் இபபொழுது இங்கு வந்தால தலைவி அவனுக்கு எளிதில் பெறுதறகுரியாள் என்னும் தூது மொழியினை நெடுந்தூர வழியைக் கடந்து சென்று கூறி உசாத்துணையாவாரைப் பெற்றால் நல்லது' எனத் தலைமகன் சிறைப்புறமாகத் தலைமகள் தோழிககுக் கூறினாள் (குறு. 269) மழைபோல் நீர் வடிககின்ற தலைவியின் கண்கள் தலைவன் பிரியாதவாறு ஒரு குறிப்பாகிய தூதினைத் தோற்று வித்தன (நற். 5:9). 'அயலார தலைவியை மணம செயது கொள்ளுமாறு விடுககின்ற தூது பல வாயின' எனத் தோழி கூறினாள் (நற். 165 9). துறைவனாகிய தலைவனின் தூதாகப பாணன் வந்தான (நற். 167,5,6). 'தலைவி தலைவனோடு இன்று வருவாள் எனத தூது வநதது' எனச செவிலி நறறாய்க்குக கூறினாள் (ஐங. 400:5,6). 'வேந்தனும் பாசறையிலிருததலை வெறுக்கவில்லை வெற்பனாகிய தலைவனது தூதும் வரவிலலை; என்னாவேனோ' எனத் தலைவி வருந்திக கூறினாள் (ஐங. 460). 'தலைவர் பிரிவெண்ணி வருநதாதே, இளவேனில் வநதுவிட்டது, அது அவருடைய மெய்ம்மொழியாகிய தூதாகி, வருவா என்று சொல்லி வநததுகாண' எனத் தோழி கூறினாள் (கலி. 26.8,25). 'சேய் நாட்டில உறைகினற தலைவர்க்கு நாம் வருத்தத்தைக கூறித தூது விட வேண்டா; நம்மினும இக்காலததுப் பிரிநதிருத தலை ஆறறாராயத் தலைவர்வருவா' எனத்தோழி தலைவிககுக கூறினாள் (கலி. 28.21-24). 'இளவேனில் காதலருடைய தூதாய வநதது; இனி அககாலத் திறகு விருநதாவனவற்றைச செயவோம' எனத தோழி தலைவிக்குரைததாள (கலி. 32 13,18,19). 'தலைவனைப பிரிநத நமககு நோய மிகுமபடி கரியகுயிலகள் கூவும; இநநிலையிலும தலைவர் ஒரு தூதாயினும் வரவிடாராய நம்மைத துறபபா ரோ? துறவாரோ? கூறாய்' எனத தலைவிதோழியை வினவினாள் (கலி. 33:22-25). பரததையரைத தேடித தூதாயத திரிந்து, ஆடைகளை ஒலியாமல் புலைததி திரிந்தாள் (கலி. 72:13,14). பாணன பரததையாககுத தூதாயச சென்றான (கலி. 96 35,36). தலைவியரால தூதாக ஏவபபட்டுத தலைவரொடு மீணடது வண்டின கூட்டம (பரி 8 36,37).

2. கல். (தூதுணம்புறவு காணக)

**தூதுணம்புறவு** - புறாவில ஒருவகை (கலலை உணவாக உணபது). வேள்விப புகையினை வெறுதத குயில கள் தம் பெடையொடு நீங்கிப் போயக காளிக கோட்டத்தில் உள்ள தூதுணம்புறவுகளுடன் குடியிருபபாகத் தஙகும (பட். 55-58). தூதுணம புறவு போனற மடபபமுடையவள் தலைவி (கலி. 56:16).

**தூதை** - சிறுகலம். தலைவி, தூதையும-மரததாற செயத சிறுகலததையும – பாவையும் கொணடு விளையாடினாள் (கலி. 59.5,6).

**தூம்பு** - 1. பெருவங்கியம். கண் திறககபபட்ட தூம பாகிய, களிறறுக்கை போலும் வடிவையுடையது பெருவங்கியம (புறம. 152:15). தூமபு மூஙகிலின

கணுக்களை அறுத்து இயற்றப்பட்டது (பதி. 41:4). கணுக்களின் நடுவே வெளியாகத் திறந்த யானையின் கைபோலும் தூம்பு (மலை. 6). இளி என்னும் நரம்பினுடைய ஓசையைத் தூம்பு ஒலிக்கும் (மலை. 7). மூங்கிலாகிய இசைவளரும் தூம்பின திறந்த கண்ணிடம ஒலித்தது (மலை. 533). கூட்டமாகிய மான்கள், தூம்பின இசை போன்று குரல எழுப்பும் (அகம. 82:5). மயக்கத்தினையுடைய களிறுகள் பலவும் ஒருங்கே தூக்கிய வருத்தத்தினையுடைய கைகள், புகழினைத் திரட்டிக் கூறும கூத்தரது தூம்பினைப் போல ஒலித்தன (அகம. 111:8,9). பிடியின உயிர்பபொலியுடன களிற்றின் உயிர்ப்பொலி கூடினாற போலக் குறிய நெடிய தூம்புகளின ஒலியோடு தணணுமை ஓசை பொருந்தி ஒலித்தது (அகம. 301:16,17). யானை, வாததியங்களுளளே புணர்ந்த தூம்பைப் போல ஒலிக்கும் (ஐங. 377.1,2). விரல செறிந்து விடுகின்ற தூம்பின் துளைக்கு ஏறபத் தும்பி மலரில ஊதும (பரி. 21: 33,34).

2. உட்டுளை. யானையினது பெருங்கை தூம்பு - உட்டுளை - உடையது (புறம. 19:9,10). தூம்பினை அகத்தேயுடையது சிறு முழா (புறம. 103.2). தூம்புடைய மூங்கிற் குழாயிடத்தே முதிர்ந்த இனிய கள இருந்தது (பதி. 81:21). நஞ்சுடனே ஒடுங்கிய தூம்பினையுடைய வெள்ளெயிற்றினையுடையது பாமபு (முரு. 148,150). செந்நெலலினுடைய தாள் தூம்புடையது (பெரு 230,231). நீர மிக்க வயலில அழகிய தூம்பினையுடைய வள்ளைக் கொடிகள் உழக்கப்பட்டன (அகம. 6:16,17;45:5). இருப்பையின பூக்கள் தூம்புடையன (அகம். 95: 6,7). மூங்கிலைக் கண்டாலொத்த தூம்பினையுடைய திரண்ட தண்டினையுடையது தாமரை (அகம். 176:3,7). ஆனேறுகளின் கழுத்தில் தொங்கப் பூட்டியுள்ள அழகிய தூம்பினையுடைய மூங்கிற் குழாயில் உணவு பெய்து வைத்தனர் (அகம். 253: 14-16). இளம்பனை வேனிலில குருத்து இற்றுத் தூம்புடைய துய்யையுடைய உச்சிக் கூம்பி லற்றும் (அகம. 333:8-11). அழகிய தூம்புடையது வள்ளைக் கொடி (அகம். 376:13,14). தூம்புடைய திரண்ட காலினையுடையது ஆம்பல் (குறு. 178:2,3; நற். 6:1). கூதாளத்தின புதுமலர் அழகிய தூம்பினையுடையது (குறு. 282:6). வேழத்துத்திரள் கால் தூம்புடையது (ஐங். 16 1). வேழம தூம்புடையது (ஐங. 20.3). தூம்பினையுடையது நெய்தற்பூ (ஐங. 109:1,2). மழை பெய்தலின் வெள்ளம் பெருகிய வையையின புதுவரவினைக் கண்டோர் வானத்திலுள்ள மேகம தூம்பாயிறறு (ஓட்டையாயிறறு) என ஆரபபரித்தனர் (பரி. 7:30).

**தூமம் - 1. தூமகேது.** பாரியின நாடு சனிமீன புகைகளோடு கூடிப் புகையினும் எலலாத் திசைகளிலும் தூமம் - தூமகேது - தோன்றினும் பெயல் பிழைப்பு அறியாது எனக் கபிலர் அந் நாட்டைச் சிறப்பிப்பர் (புறம. 117:1,7,10).

**2. புகை.** ஆயர்கள் தழுவுதற்கு விட்ட ஏறு, வெருவுதற்குக் காரணமான தூமம - புகை - புகைக்க அதற்கு வெகுண்டு திரிகின்ற கொல் களிற்றை ஒத்தது (கலி. 104:42-44).

**தூயர் - மாசற்றவர்.** தூயர் - மாசற்றவர்-நறியர் நின் பெண்டிர்; யாம் சேய் பயந்தனம்; அதனால் பேய் அனையம்' எனப பரத்தையரோடு பொழுது போக்கி வந்த தலைமகனோடு தலைவி புலந்து கூறினாள் (ஐங. 70:45).

**தூயவன் - குற்றமற்றவன்.** தன் மனைவியிடம் தன் பிழை யாது என்று கேட்கும் தூயவனைக் - குற்ற மற்றவனை - காணமின் என வையை நீர் விழாவில் ஓர் நிகழ்ச்சியைச் சுட்டுவர் (பரி. 12 61)

**தூர் - அடிப்பகுதி.** வேரும் தூரும் - அடிப்பகுதியும் - மடலும் குருத்தும் பறியாத பனையின் மீதிருந்து பல ஆயிரம குலைகள் தரை மிசை உதிர்வன போல் அவுணரது தலைகளை உதிரச் செய்தது திருமாலின் ஆழிப்படை (பரி. 2:42,43). வையை கரைக்கண மரத்தனவும் கொடியனவுமாகிய வேரும் தூரும் காய்களும் கிழங்குகளும பரந்தன பரி. 6:47).

**தூர்ப்போள் - தூர்க்கின்றவள்.** 'தான் விளையாடிய பாவையைக் கடல் கவர்ந்து சென்றதால் சினந்து கடலைத் தூர்ப்போளை - (மணலால்) கடலைத் தூர்க்கும் தலைவியை - கண்டோம் அல்லவோ' எனத் தலைவன் உறவுகொண்ட பெதும்பைப் பருவப் பரத்தையின இளமை கூறித் தோழி நகையாடினாள் (ஐங். 124).

**தூரியம் - வாச்சியம்.** அவி உணவினையுடைய அச்சம் பொருந்திய (மாயோன், முருகன் முதலிய) தெய்வங்கட்கு உயர்ந்த பலிகளைக் கொடுத்தற்கு எடுத்த விழாவிலே தூரியம் - வாச்சியம் - ஒலித்தது (மது. 458-460).

**தூவல் - 1. நீர்த்துவலை.** புன்னை கடல் தூவலாலே நீர்த்துவலையாலே - தழைத்தது (புறம. 24:7). தாழையை வேலியாகவுடைய குளிர்ந்த இளமரக் காவின் கண்ணே வந்து செறிந்தலையுடைய

தூவலின் ஓசை, உப்பை விறகும் அளவர் ஒலியோடே ஒலிக்கும (மது. 114-119). கடற்பரப்பில் எழும் தூவலை ஏற்றுக்கொண்ட, புன்னை அரும்புகள் மலர்ந்தன (அகம. 10:1-3). பூக்களைச் சுமந்து வரும் இனிய புனலையுடைய காட்டாற்றின் கண்ணே காற்று எழுப்புதலின் மேலே எழும் தூவலையே பிரிந்து சென்ற தலைவன் உண்டான் (அகம். 133:10-12). தூவலுடைய கடற்கரை புன்னையின் அடிமரத்தில் பிணித்துக் கிடக்கும் தோணியையுடையது (நற். 354:5-7).

2. மழை. நெருப்பினை ஒத்த ஒள்ளிய செங்காந்தளினது, தூவலாலே - மழையாலே - புதிய முகை செருக்கி வளர்நதது (மலை. 145,146) தூவலால் தழைத்த பரக்கின்ற அரும்புகளையுடையது நறைக்கொடி (மலை. 514). தூவல் போன்றது கள் (அகம். 298:15). தூவலின் நனைநத மாலை போன்ற ஒள்ளிய வாளினை உடையவனாயத் தலைவன வந்தான (ஐங். 206.3).

3. தூவுதல். துவலை தூவல் - தூவுதல் - காரணமாக யாவரும் நீர் பருகவிலலை (நெடு. 64:65). தூவல் - தூவுதல் (அகம். 24·41;217:3).

**தூவி** - சிறகு. கொக்கினுடைய தூவி - சிறகு - போன்ற வெள்ளிய நரைத்த கூந்தலையுடையவள் முதியோள் (புறம். 277:1,2). கழியிடத்தே துழவி மீன் அருந்தும் புதா (நாரையினம்) நெருங்கிய தூவியை உடையது (புறம. 391:15,16). அனனச் சேவலின் தூய நிறத்தையுடைய தூவியைப் பரபபி அதற்கு மேலாக அணைகளும் இட்டு வைத்துப் படுக்கையில் துகிலின் தூமடியை விரிப்பர் (நெடு. 131-135). சிறிய மெல்லிய தூவியினையும் சிவந்த காலினையுமுடையது வாவறபேடை (அகம். 57:1). மயிலின் தூவியால் தொடுத்த மாலையை மழவர் அணிவர் (அகம். 249:12). குற்றமற்ற அகனற படுக்கையில் அழகிய மெல்லிய அன்னத்தின் தூவியாலாய அணையினைச சேர்ந்து தலைவி தங்கியிருநதாள் (அகம. 289:12.13). கிள்ளையின் இளைய பார்ப்பின் தூவியினையொததது மழை வளர்தத பசிய பயிர் (அகம். 324,3-5). நாரை முள்ளுமுருங்கை மலரின் இதழைப் போனற மென்மை வாய்நத தூவியினையுடையது (குறு. 103:2,3). நெருங்கிய மெனமையான தூவிகளையுடைய புறாககள் ஆணும பெண்ணுமாயச சோந்திருநதன (குறு. 174:3). மின்னுகினற இனிய தூவியையுடையது கரிய குயில் (குறு. 192:3). நீர்த்துறையிலே கழுவிய வெள்ளாடையின் மாசற்ற மடிபோனற நன்னிறம விளங்கிய தூவியினையுடையது சிறு வெள்ளாங்குருகு (நற். 70.2,3). அசைகினற மூங்கிலினுள்ளே உரிககபபடும உரியை மடிதது மெலலிதாகப பிசைந்து வைததாலொதத தொகுதியமைந்த தூவிகளையும நீணட கால்களையும் உடையது நாரை (நற். 176.1,2). புள்ளிகளையுடைய முதிய பருநது தன இறகைப புடைததுக் கொள்ளுதலால் உதிர்ந்த பறத்தலையுடைய புலலிய தூவியினை, வீரா தம அம்பிலே கட்டுவா (நற். 329:4-6). ஒனறறொனறு விலகிய மெல்லிய தூவியினையும சிவநத காலினையுமுடையது அன்னப்பறவை (நற். 356:2). வெள்ளாங்குருகின குஞ்சு இறக்க அதனைக் காணச சென்ற, நாரை உளர்தலால் உடலினினறும நீங்கிய தூவியினை மணற்குவியலிடததே துறைவன பெறுவான (ஐங. 158:1-4) வெள்ளாஙகுருகின குஞசு இறக்க அதனைக் காணச செனற நாரை அசைதலால் ஒழிநத செநநிறததையுடைய தூவி கழியிடத்தே பரநதது (ஐங. 156·1-4) குறறமிலலாத தூவியினையுடையது சிறிய கரிய காககை (ஐங். 391:1). சிங்ககக்கால் மேல தைதத தாஙகு கட்டிலின மெலலிய படுககை அன்னத தூவியாற செயதது (கலி. 13:15,16). ஆயநத நுணணிய தூவியினையுடையது அனனம் (கலி. 56·15,69 6). படுககையிடததுககிடநதமெல்லணை அனனத்தின தூவியாற செய்யப பெறறது (கலி, 72.1.2).

**தூற்றல்** - பலரறியச் செய்தல். 'மடலூாநது, அவளை அடைதலில தோறறேனாகிய எனனையும தலைவியையும் தூற்றலும்-பலரறியச் செயதலும-பழியே' எனத் தலைவன் கூறினான் (குறு. 32:4,5). அயலில உள்ளார் அலரைத தூற்றுகையினாலே தலைவியின கண்கள் ஆயநத தம நலததை இழநதன (கலி. 53:20). ஊரில உள்ளாா அலா தூறறலின தலைவியின நறிய நுதல் ஒளிகெட்டுப பீாககம பூவினது அழகைககொணடு பிறையினது அழகை இழந்தது (கலி. 53 14,15).

**தூறு** - புதர். பெரிய மூஙகிலிற பிறநத மிகக நெருப்பு பசிய தூறுகளைச சுட்டது (மது. 302) மலையினைச் சார்நத மூஙகில் தூறு எலியால அழிநதது (பட். 301,302). இடையன சீழ்ககைககு அஞ்சி நரி முட்களையுடைய குறிய தூறறினகண ஒடியது (அகம. 274:8-11). அரியகாட்டில யானைத திரளோடே ஒழிநத விலங்கின திரளகளும மறவரும மயங்குகையினாலே தூறுகள் எலலாம, வழிப பட்டுப பழைய வழிகள் மயஙகின (கலி. 5:1-3).

# தெ

**தெங்கு** - தெனனை. வயலிடததது வீழும் பறவைகளை ஓட்டுபவா, கழிமீனைச சுட்டு அதனுடன கள்ளை யும் சோதது உண்டு அமையாராயத் தெங்கினது - தென்னையினது - இளநீரை உதிரபபர் (புறம். 29: 13-16). சிறுவர், தெங்கு தரும் பெரிய பழததை வெறுப்பின, பனையினது பழத்தைத் தொடுதற்கு முயலவா (புறம. 61:9-11). நாடு தழைத்த தெஙகினையுடையது (பதி. 13.7-9). குலைகொண்ட தெஙகினையுடையது குடியிருபபு (பொரு. 208,210). யானையின உடம்பையொககும் சருச்சரையை யுடைத்தாகிய தெங்கின் வளவிய, உலர்ந்த பழுத்த இலையினை முடைநது தனிமனை வேயப்பெற்றது (பெரு. 352-355). சுழுகுகளின் பக்கத்தே சூழ்ந்த தெங்கினுடைய மூன்று புடைப்பினையுடைய திரணட காய, வழிச்செலகின்ற புதியோா தமது மிகக பசி தீரும்படி சோற்றை ஆக்குகின்ற பானை அடுப்பினின்றும் அசைநது விழும்படி நிலத்தே விழும (பெரு. 363-367). கழனி குலைகளையுடைய தெஙகினையுடையது (பட். 8,16).

**தெடாரி** – தடாரிப்பறை. கூத்தர், யானையின் காற் சுவடனைய தெடாரியின் - தடாரிப்பறையின் - தெளிந்த கண்ணிடம் ஒலிபயக் கொட்டியவாறு பரிசில் பெறப் பாடிச் செலவர் (புறம். 368:14-16). செறியப பிணிக்கும் துண்டான வார்களால் கட்டபபட்ட தெடாரியபறையை ஒருபால் தழுவிக் கொணடு, பாணர் நல்லியககோடனது புது மணைக்கண பாடி நிறபர் (புறம். 376:3-6).

**தெண்டிரைப் பரப்பு** - தெளிந்த அலைகள் பொருந்திய பரப்பு (கடல). தெண்டிரைப பரபபினை-தெளிநத அலைகள் பொருநதிய பரப்பினை (கடலை) தொண்டியின துறைமுறறம பெற்றிருந்தது (அகம். 290:13).

**தெமமுனை** - பகைபபுலம் பகைவா திறையிடுதலான் 'நின் தேரின மீது அசைகின்ற கொடிகள் நின தெம்முனை-பகைபபுலம் - இடத்தே தோன்றா' எனப பெருஞ்சேரல இரும்பொறையின் மறச் சிறபபினை அரிசில கிழாா பாடுவா (பதி. 80:14-17). மழவர் சினநதெழுநத பகைவரது தெமமுனை தொலைததனா (அகம. 187:5-7). கோசர், முரசம் முழஙகத் தெம்முனையை அழிததனர் (அகம, 251: 7-10).

**தெய்வஉத்தி** - சீதேவி என்னும தலைக்கோல அணி. ஆயததாா நன்றென்று ஆராய்ந்த கடை யொத்த நெயப்பினையுடைய மயிரிலே தெய்வ உத்தியொடு - சீதேவி எனனும் தலைக் கோல அணியொடு - வலம்புரி வடிவாகச் செயத தலைக் கோலத்தையும் வைததற்குரிய இடத்திலே வைததுச் சூரரமகளிர் ஆடினர் (முரு. 20,23,41).

**தெய்வக்கடி** - தெய்வத்திற்குச் செய்யும் சிறப்பு. பாணடியன் குடியின பினபு தோன்றிய ஆயர் அபபாண்டியற்குப் பாணடி மணடலம் பயந்த விளைவுகளும கடலில வளர்ந்த முத்தத்தோடே மறறும் உளள பொருள்களும தீதின்றிப பொலி வனவாக எனத் தெயவககடி - தெயவததிறகுச் செய்யும் சிறபபு - செய்தனா. (கலி. 105:1-6).

**தெய்வத்தாமரை** - தெய்வத் தன்மையையுடைய தாமரை. பெரிய முலையை ஒதத பெரிய முகை நெகிழ்ந்து அழகினையுடைய முகம் போல மலர்ந்த தெயவத தாமரை - தெயவததனமையையுடைய தாமரை - இடத்துக குற்றமில்லாத அங்கையைச் சாதிலிங்கம் தோய்நதாலொதத சிவநத இதழ் சூழ்ந்த செம் பொன்னாற செய்தாலொதத பீடததிலே தன் இனிய பெடையைத் தழுவிக் கொண்டு தும்பி பாடும் (சிறு. 70-78).

**தெய்வப்பிரமம்** - தெய்வத்தன்மையுடைய பிரமவீணை. செவ்வேள் குன்றத்திறகுச் செல்லும் சிலர் தெய்வப் பிரமம் - தெய்வத் தன்மையையுடைய பிரம வீணையை - எழுப்புவோராய்ச் சென்றனர் (பரி. 19:40).

**தெய்வம்** - கடவுள. சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம் பலததுத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தமை யினைப் பாலபோலும் நிறததையுடைய பனைக் கொடியோனும் நீலநிறத் திருமேனியுடைய நேமி யோனுமாகிய இரு பெருந தெயவமும் ஒருங்கு நினறாறபோல விளங்கியதாகக காவிரிப்பூம்பட்டி னத்துக காரிக் கண்ணனார் பாடுவர் (புறம 58: 14-17). பெரியமலை (இமயம்) பெருந்தெய்வமாகக் கருதப்பெறறது (பதி. 51:13). 'வணமையும், மாட்சி மைப்பட்ட குணஙகளும் செல்வமும் பிள்ளைப் பேறும் வழிபடுதெயவமும் மற்ற எலவாப் பொருள் களும தவமுடையோாககுரியன (பதி. 74:24-28). 'நின் மனத்துப பகைத் தனமைபெரிதாகையினாலே, நின்பகைவா நின்னையஞ்சித்தாம் தாம் வழிபடும்

தெயவத்தைத் தத்தமக்குக் காவல் என்று சொல்லுவர் என இளஞ்சேரலிரும்பொறையிடம் பெருங்குன்றூர் கிழார் கூறினார் (பதி. 82:1). போரினகண் வெற்றி வேண்டி மாற்றுதறகரிய தெய்வத்துக் கூட்டத்தைப் பரவினர் (பதி. 88:24, 25) இளஞ்சேரல் இரும்பொறை மந்திர மரபில் தெய்வம் பேணினான (பதி. ப. 9:10). நான்காகிய பெரிய தெயவத்தையுடைய (இநதிரன, யமன, வருணன், சோமன்) ஊர்கள் நிலைபெற்ற உலகத்தைக் காககும் ஒரு தொழிலையே விரும்பிய கோட்பாட்டையுடையவர் திருமால (முரு 151,160, 161) தெயவத்தன்மை அமைநத வலிவிளங்கும வடிவினையும், வானைத்தீண்டும வளர்ச்சியினையு முடைய செவ்வேள், அவையை வநதணுகி, மணம் நாறுகினற தெயவத் தன்மையையுடைய இளைய வடிவைக காட்டி அடியோர்ககு வீடு பேறறினைத் தருவன (முரு. 287-295) (2) சிற்பநூலையறிநத தச்சர், நூலை நேரே பிடிததுத் திசைகளைக் குறித்துக கொண்டு அத்திசைகளில் நிற்கும தெய்வங்களையும் குறைவறப் பார்த்துப் பெரும பெயர் மனனர்கு ஒப்ப மனை வகுத்தனர் (நெடு. 76-78). பிறப்பறுப்பதற்குக் காரணமான தலைமையையுடைமையால கோயில்களிடத்தே உண்டாக்கின பலரும் தொழும் தெயவங்களுக்குப பாடுமகளிரோடே கூடி வங்கியம் இசையை யுண்டாக்க, யாழ்வாசிக்க முழவு முழஙக, முரசு ஒலிபப விழா எடுத்தனர் (பட். 155-160). தலைவன தலைவிககு, புகாரிடத்துள்ள தெய்வததை நோககிக் கடிய சூள செய்து கொடுத்தான (அகம. 110:4, 5). 'பூமாலையை வண்டுகள் அஞ்சி ஊதாது ஒழி வதற்கு ஏதுவான உயர்ந்த பலிகளையே பெறும் அசசம் தரும் தெய்வம், நீ ஐயுறறோள்வயின எனக்குத் தொடர்பிருபபின வருத்துக' எனத் தலைவன் தலைவியைச் சூளுரைத்துத தெளிய வைத்தான் (அகம. 166:4-9). வெட்சி வீரர் ஆனிரையைக் காட்டு நிலத்துச செலுத்தியவாறு தெய்வம தங்கிய பருதத அரையையுடைய வேபப மரததினடியில், பசுவினைத் தடிந்து உதிரத்தைத தூவிப பலியிட்டு அதன புழுககினை உணடனா (அகம். 309:2-6). அஞசத்தகும மிகக வலியையுடைய இரு பெருநதெயவங்களுடைய (சிவனும் திரு மாலும்) செநநிறமும் கருநிறமும் ஒருங்கு சேர்ந் தாறபோல அநதிவானததின அழகுடன கடலின அழகையும் கொண்டு மாலைக்காலம தோனறியது (அகம். 360:6-9). சேரனுககுரிய அசசம தரும் கொலலி மலையில உள்ள கரிய கணணையுடைய தெய்வத தால் அம்மலையின மேல கொலலிபபாவை எழுதி வைக்கப பெறறது (குறு. 89:4-6). 'ஆட்டுக்குட்டி யின் கழுத்தை அறுத்துத தினையைப் பலியாக வைத்து ஆற்றுத் துருததியிலே பல வகையான இசைககருவிகள் முழஙக வெளிப்படுதலேயன்றித் தலைவியின நோய்ககு மருநதாக அமையாத வேறான பல தெயவங்களை வாழ்ததி வழிபடடுத தலைவி பேயால பீடிககபபட்டாள் எனக கூறுவது வருநதுவதற்குரியது' எனத் தோழி கூறினாள் (குறு. 263:1-5). அழிதலிலலாத வாழ்வை எணணிமுயலும் ஆர்வமாககள தாம் வழிபடும தெயவததைக கணணாற் காண்பர் (நற். 9 1,2). நெடிய மலையிலே, தெய்வத்தால் எழுதபபெறற வினை மாட்சிமைபபட்டது பாவை (நற. 185 10,11). பலா மரங்களின் பழஙகள பொருநதிய கொல்லிமலை தெய்வததாலே பாதுகாககபபட்டு வருகினறது (நற. 201.5,6) நெருஙகிய பெரிய தெய்வம எனப பெயர் கொண்ட (தெயவத்தன்மையுடைய) யாணடுகள பல கழிநதன (நற். 315.1). தலைவியின் பசலைககுக காரணம் அறியாளாயத தாய, பலநாளும துனபம பொருநதிய நெஞசததுடனே தெயவமபேணி இலலகத்தழைத்து வெறிககளம திருததி வெறி ஆடினாள் (நற். (351:3-5). மாலைப பொழுதிலே, அசசம் செயகினற தெயவமும (அணஙகும) மறைநது உறையாதபடி இயஙகும (நற. 398 7). 'பரததை, தலைமகனோடு புனலாடி வானமஙகை யாககுத தெயவம போனறு மேமபடடனள்' எனப பரததையோடு புனலாடி வநத தலைமகன அதனை மறைததுக கூறியவழி தோழி கூறினாள (ஐங. 76:2-4). 'தலைவன் சென்ற காட்டினது கடுமை கருதித தெயவத்துத திறன நினைநது வருநதாதே' எனத தோழி தலைவி யிடம் கூறினாள் (கலி. 16.18,19). தலைவனும தலைவியும கூடுதற்காக, வரையுறைதெயவம மனம மகிழுமபடி குரவைக கூததாடபபெறறது (கலி. 39.26—28). 'என்னை ஐயுறறுச சினககினற அளவிறகு யாது குறை எனனிடததுள்ளது? என்னிடததுத தீதில்லாமையைத தெயவததாலே நினககுத் தெளிவிபபேன' எனத தலைவன காமக கிழததியிடம் கூறினான (கலி 91:6-8). தலைவன, 'வையைப புனலையாடுதறகுத தஙகின படியை வாாததையால தெளிவிததுபபின தெயவததால் தெளி விபபேன, நான செயயாதன வறறைச செயத தாகச சொலவது என்ன பயனைத தரும்' எனக கூறித்தலைவியைத தெளிவித்தான (கலி. 98 31-33). ஆயசசியர், குரவைககூத்தாடி, வழுதிவாழக என்று, கெடாத புகழையுடைய தெயவத்தைப பரவிப பாடுவர் (கலி. 103.75-79). இயறகைப புணாசசிககுப பினனர்ப பிரியேன என்று தலைவன தெயவததாலே தெளிவித்தான (கலி. 124:18). தலைவன, கடலாகிய

தெய்வத்தை நோக்கித் தலைவியைப் பிரியேன என்று தெளிவித்தான (கலி. 131:1). 'தனக்கு வலியைத் தரும் என்று கருதித் தான் வழிபட்ட தெய்வம் தன்னைச் சேர்ந்தவர்கட்கு நெஞ்சழியும் நோய் கைமமிகுமபடி வருத்தமாகிய தன்மை போல, நின்னைத் தனக்கு வலியென்று வழிபட்ட என தோழியை நீ செய்தபழி பரந்து அலர் தூற்றுகை யினாலே உண்டான நினைவு வருத்த, நீ நீங்குதல் கொடிது காண' எனத் தோழி வரைவு கடாவினாள் (கலி. 132:21-24). பெரிய நிலம் அசையாமல் வடதிசைககணணே மிக ஓங்கி வளர்ந்த அணங குதல் சான்ற தெய்வத்திற்கு (தெய்வச் சாதிக்கு) இறையாகிய இந்திரனாற் காக்கப்படுவது இமயம (பரி. 9.1-3). குன்றுகள் சிலவற்றுள்ளும் தெய்வங்கள் தாமாக விருமபும் மலரையுடைய அகன்ற தடங்களுடனே மேகங்கள் படியும சிகரத்தை யுடைய குலவரைகள் சில சிறந்தன (பரி. 15.8-10). 'மாலிருங்குன்றத்தை இருமுதுகுரவரோடும் மனைவி மக்களோடும தெய்வமாகப் பேணித் திசை நோக்கித் தொழுது சென்மின்' என இளம் பெரு வழுதி கூறுவர் (பரி. 15:46-48).

**தெய்வமடை** - தெய்வத்திற்கிடும பலி. தெய்வமடை- தெய்வத்திற்கு இடும் பலி-போலப் புழுக்கலையும் வாடூனையும் தேக்கிலையில் குவித்துத் தர அவற்றைப் பாணர் பெற்றுச் செல்வர் (பெரு. 100,104,105).

**தெய்வமால்** - தெய்வமாகிய திருமால். தலைவியின் தந்தையோடே தமையன்மார் எல்லாரும் சேரக் கூடியிருந்து தெய்வமால்-தெய்வமாகிய திருமால- தலைவிக்குத் தலைவனைத் திணணிதாகக கொண்டு வந்து காட்டிற்று என மகிழ்ந்து, பொதுவனுக்குத் தலைவியைக் கொடுத்தலைச் சூழ்ந்தனா (கலி. 107:33-35).

**தெய்வ விழவு** - தெய்வத்திற்குச் செய்யும் விழா. பிரிந்த தலைவா விரைந்து வந்து கூடுதற்குப் பரங்குன்றின்கண் தலைவியர் தெய்வ விழவினை- தெய்வத்திற்குச் செய்யும் விழாவை-செய்தனர் (பரி. 17 42,43).

**தெரிதீங்கிளவி** - ஆராய்ந்த இனிய சொற்களையுடைய தலைவி (அனமொழித் தொகை). தெரிதீங்கிளவி- தலைவி-துன்பச்சுழற்சியிலிருந்து நீங்கத் தலைவன் பாகனிடம் தேரை விரைவாகச் செலுத்தக் கூறினான (குறு. 250:4-6).

**தெரியல்** - மாலை. கார்காலத்து நறிய கடம்பினது பசிய இலையோடு விரவிய தெரியலை - மாலையை - உடையவன் முருகன (புறம். 23:3,4). தாமரைப் பூவுடனே, கம்பியாகச் செய்த நூலின்கண்ணே இட்டு அலங்கரித்த தொழிலாற் பொலிந்த பொன்னான இயன்ற நல்ல தெரியலைப் பாண்சுற்றம் தலை பொலிவு பெறச் சூடிச் சோழன் நலங் கிள்ளியின் திருவோலக்கத்தில் மகிழ்ந்திருந்தது (புறம். 29:1-5). ஆத்தியாற் புனைந்த தெரியலைச் சூடிய நலங்கிள்ளியின் முன்னோர், பார்ப்பார் நோவன செய்யாதவர் (புறம். 43:13,14). நலங் கிள்ளியும் நெடுங்கிள்ளியும் பகை கொண்டு நின்ற போது, இருவரையும் நோக்கி, 'உங்கள் பகைவன் கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்' எனக் கூறிக் கோவூர்கிழார் அமைதிப்படுத்தினார் (புறம். 45:2). ஊரைக்கொள்ள வந்த பொருந னோடு ஆத்தியால் தொடுக்கப்பட்ட தெரியல் சூடிய நெடுந்தகையின் போர் விரைந்து நிகழ்ந்தது (புறம். 82:4-6). அச்சம் தரும் குருதியோடு கலந்து உருமாறித் துணிபட்டுக் கிடந்த நொச்சித் தெரியலை ஊன் என்று கருதிப் பருந்து கவர்ந்து சென்றது (புறம். 271:5-7). 'முன்பு இளமைக் காலத் துடுத்த, அழகிய பகைத் தெரியல் ஆக உதவிய ஆம்பலிடத்துண்டாகும் அல்லியரிசியை உணணும் கைம்பெண்டிர் போலத் தலைவன் இறந்தவழி வாழ்தல் எனக்கரிது' என வீரன் ஒருவனது மனைவி கூறினாள் (புறம். 280:10-15). சேரன் சிறிய இலை யினையுடைய உழிஞைத் தெரியலைச் சூடிப் போரினை வென்றான (பதி. 63:8,12). உழவர், குளிர்ச்சியையுடைய நீர்த்துறையினிடத்தேயுள்ள பகன்றைப் பூவினது நன்மையுடைய தெரியலை, வெளுத்தலுற்ற வெள்ளிய ஆடையைப் போலச் சூடினா (பதி. 76.12,13). கரிய பனங்குருத்தில் அலர்ந்த வலப்பக்கத்து ஓலையையும் வேம்பி னுடைய அழகிய தளிராற்செய்த தெரியலையும் சேரனும் பாண்டியனும் சூடினர் (பொரு. 143-146). கிடங்கில் என்னும் ஊர்க்கு அரசன் தளையவிழந்த தெரியல அணிந்தான் (சிறு. 160,161). பெரிய வேப்பந் தெரியலை உடையவர் செலவர் (மது. 437,442). வீரர் தம்மார்பில கழுத்திடத்தினின்றும் தாழ்ந்த விரவுதலையுடைய பூந்தெரியலையணிந் தனர் (மது. 716,718). விரவுதலையுடைய பூந் தெரியலையணிந்தவர் பெருஞ்செய ஆடவர் (மது 745,746). 'கூறுபாட்டின அமைதியோடு விளங்கிய, அழகு அமைந்த தெரியலை உடைய பொருநனைக் கணடீரோ' என ஆதிமந்தி பேதுற்று வின வினாள் (அகம. 76.7,8). குட்டுவன் தேனொழுகும தெரியலை யணிந்தவன (அகம. 212:16)' அருமபு

கட்டிய கதிரபோன்ற ஒள்ளிய பூங்கொத்தினை யுடைய நொச்சித் தெரியலைச் சூடிக் குயவன், மக்களுக்குத திருவிழா நிகழ்ச்சியை அறிவித்தான் (நற். 200:1-4). நீலமணிபோலும் பூங்கொத்தினையுடைய நொச்சித் தெரியலைச் சூடிக் குயவன் தன்னால் இடப்படும் பலியை உண்ணுதறகு அணங்குகளையும் காக்கைகளையும் அழைத்தான (நற். 293:1-3). கொன்றையம் தெரிய லான் ஆகிய இறைவன் முப்புரத்தை அம்பு எயகை யினாலே தோனறின நெருப்புப் போல ஞாயிறு சுட்டது (கலி. 150:1-3).

தெரியிழாய் - ஆராய்ந்த இழையினை உடையாய் (வாளி). 'வளமலை நாடனை, தெரியிழாய - ஆராய்ந்த இழையினை உடையாய - நீ ஒன்று பாடு' எனத தோழி கேட்டாள் (கலி. 43:14,15). 'தெரியிழாய! செய்தவறு இல்வழி நீ எங்ஙனம சினப்பாய' எனத தலைவன தலைவியிடம் கூறினான (கலி. 87.3). தலைவன, 'தெரியிழாய்! யான் தெளிவித்ததனைக் கொணடு நினநெஞ்சைத் தெளிவியாது சினந் தாய் எனத் தலைவியிடம் உரைத்தான (கலி. 91:16). 'தெரியிழாய்! நீ கூறிய கூறறால் நீ கூறியது உண்மை என்று யான தெளிநதேன்' எனத தலைவன் கூறினான (கலி. 113:22). 'தெரி யிழாய்! சாந்தி செயயச் செல் எனறாய்: அதனாலே நின்பொய்ச்சூளானாகிய ஏதம் நின்னை வெளவு தலை யாம் அறிநதேம்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (பரி. 8:83,84).

தெரிவை – தலைவி. 'தெரிவையின - தலைவியின் - கண் பண்டைய நிலையில் நில்லாமல மாறிக் கலக்க முறறு அழுகை நிற்காமல் எம தேரைத் தடை செயதன' எனத் தலைவன கூறினான் (குறு 256. 7,8).

தெரு/தெருவம்/தெருவு – வீதி. நமபி நெடுஞ்செழியன், நெடுந்தெருவில் தேரை இயககினான் (புறம். 239:14). மாலையணியப் பெற்று மங்கல மகளிரின குரல யாழிசையோடு கலந்திசைக்க மறவன வேல் தெளிநத நீருளள மடுக்களிலும் தெருககளிலும் திரிந்து பகைவர் வருந்தச் சென்றாலும் செல்லும் (புறம். 332:5-8). தெருவு தேரோடத் துகள் கெழுமின (புறம. 345:2). மலையின மேலிருநது வீழகின்ற அருவியைப் போல மாடத்தில் காறறி னிடததே கொடிகள் அசைகின்ற தெருவினை யுடையது தொன்னகர் (பதி. 47:3,4,8). தெருவினை யுடைய ஊர் யானைகளின மதவருவி, எழுந்த துகளை அவிககையினாலே புழுதியடங்கின (சிறு. 200, 201). பட்டினம் பரதவர் மிகக, மாடங்கள் உயாந்த, பலவாய வேறுபட்ட தெருககளை யுடையது (பெரு. 323,336). திண்ணிய தேர்கள பலகால ஓடிககுழித்த தாழச்சியையுடைய நெடிய தெருவினையுடையது மூதூர் (பெரு. 397,411). தழையாலே வேய்நத கூரை ஒழுங்குபட்ட தெருவிடத்து யானை காவலாக நினறது (முல்லை. 29-31). உணடு அமையாத உணவு மிகுகின்ற செலவததோடே நோககியமையாத கடகு இனிமை யினையும் உயாந்த சிறகுகளையும (இரு புறத் துமுள்ள வீடுகளின் வரிசை) உடைய சீரிய தெருவில் மாநதர் வதிநதனா (மது. 16–20). யாறு கிடநதாற போன்ற அகனற நெடிய தெருககளிலே பல குழாஙகளின ஓசை மிக்கொலித்தது (மது. 359, 360). புழுகு முதலியன நாறுகின்ற நாற்றம தெருவு களெல்லாம மணநதது (மது. 447). சிறியோரும பெரியோருமாகிய நெயதல தொழிலைச செயவார் திரணடு நானகாய் வேறுபட்ட தெருவுகள் தோறும் ஒருவர் காலோடு ஒருவா கால நெருஙக நின்றனர் (மது. 521,522). அலரும பருவமாக மலர்நத புதிய பூககள் தெருவுகள எஙகும மணநதன (மது. 564). தேரோடும தெருவினகணணே நீா திரணடு ஒழுகும்படி மழை மிகப பெயதது (மது. 648,649). மாடஙகளுயாந்த வளபபததையுடைய பழைய ஊரில் யாறு கிடநதாற் போன்ற அகனற நெடிய தெருவிலே மிலேசசா கள்ளுண்டு திரிநதனா (நெடு. 29-35). குதிரைகள் கரியசேறறையுடைய தெரு விலே தம மேலே வீசும் துளிகளைஉதறின (நெடு. 180). புகாரில கடலருகினகண இருககும பரதவ ருடைய அகனற தெருவிடததுப பணடகசாலை இருநதது (பட். 118,119,133). தெருவினகணணே யுளளதும நறிய பூககளைச சிதறிக கூததருடைய மததளத் தாளததோடே யாழைக கேடகும திரு நாள் இலலாததும ஆகிய முதிாநத மனறம் அசச முடையது (பட். 252-255). யாறெனனுமபடி கிடநத பெருநதெருவினை யுடையது மூதூா (மலை. 481,487). தலைவி தோவழஙகும தெருவில் தன புதலவனைப பரத்தை அணைததமையினைத தலை வனிடம கூறி அவளோடு அவனுககுள்ள தொடாபை வெளிபபடுத்தினாள் (அகம. 16:5,6,10, 11). பரத்தையரொடு தலைவனைக கூடடுவிக்கும பாணன, தெருவில, ஈன்றணிமை யுடையதோா பசு, தன்னைப பாயநதமையாற் கலக்கமுற்று யாழினைக கீழே போட்டுத தம்மனைககு வநதமை யினைத் தோழி தலைவிககுக கூறினாள் (அகம. 56: 9-12). தலைவன், பரததை ஒருத்தியை வதுவைஅயா தற்குப புதிய அணியோடு தெருவழிச செல்லும போது தன் புதலவனைக காணடறகுத தேரில

இருந்து இறங்கி வந்தமையினைத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 66:7-13). ஊரில் பாணர்களது வாச்சியங்கள் தேர் ஓடும் தெருவில் அறாது ஒலிக்கும் (அகம். 189:13-15). மேகங்கள், பெரிய இடி முழக்கத்தோடு துளிகள் மிக்குப் பெய்தலால் நீர், தெருக்கள் தோறும் ஓடியது (அகம். 264:7-10). 'தலைவன், இடைநெடுந் தெருவில், என்னை விரைந்து கண்டு என் பொற்றொடி அணிந்த முன்கையினைப் பிடித்தான்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 356:4-6). 'ஊரவர் சொல்லும் பழிமொழியோடு எம்முடைய தெருவிற்கு வருதலை ஒழிவாயாக' எனத் தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தாள் (குறு. 139:5,6). 'நாம் தலைவியிடம் விடுகின்ற தூது, மடல் மாவின் மேல் ஏறி, நம் நாணத்தையெல்லாம் விடுத்துத் தெருவினிடத்தே செல்லவும் தருவது தான் போலும்' எனக் குறை மறுக்கப்பட்ட தலைவன் நெஞ்சிற்குக் கூறினான் (குறு. 182:3-7). குற்றமில்லாத தெருவினிடத்தேயுள்ள நாயில்லாத அகன்ற கடைவாயிலிலே அறிவர் பிச்சை எடுத்தனர் (குறு. 277:1-3). 'நீ எம்மைப் பிரிதற்கு விரும்பினால் எம் தந்தையின் ஊரினிடத்தே பாம்புகள் திரியும் தெருவில் முன்பு நடுங்குதற்குரிய மிகுந்த துன்பத்தை நீக்கிய நீ எம்மை வீட்டினிடத்துக் கொண்டு சேர்ப்பாயாக' எனத் தோழி வாயில் மறுத்தாள் (குறு. 354:3-6). பாணன் கையிலுள்ள சீறியாழ் ஒலிக்கும் தெருவிலே தலைவனைப் பரத்தையர் பற்றிக் கொண்டனர் (நற். 30:2-5). 'தலைவன் துணங்கையாடுதலைக் கையகப்படுப்பேமாகி யாங்கள் செல்ல அவன் அவ்வணிகளையுடையனாய் நெடிய நிமிர்ந்த தெருவின் வளைந்தவிடத்தே விரைந்து வந்து எதிர்ப்பட்டான்' எனக் கூறித் தோழி பாணர்க்கு வாயில் மறுத்தாள் (நற். 50:3-5). பூவிலைமடந்தை புதிய மலர்களைத் தெருவுகள் தோறும் விலை கூறிச் செல்லுவாள் (நற். 118:10,11). இரவின்கண், சுறாமீன் நீரைக் கக்குதலால் அந்நீர் பெரிய தெருவின்கண் மழை போன்று உதிரும் (நற். 132:2,3). குயவன், ஆறு கிடந்தாற் போன்ற அகன்ற நெடிய தெருவிலே விழாவினைப் பலருக்கும் அறிவிப்பான் (நற். 200: 3,4). ஆர்க்காடு என்னும் பதியிலே கண்ணையுடைய சாடியின்கண் வண்டுகள் ஒலித்து நீங்காத தேர்கள் இயங்கும் தெருவினை ஒப்ப பெரிய கௌவை உண்டாயிற்று (நற். 227:5-8). தெருவிலே முக்காற் சிறு தேரைப் பற்றிக்கொண்டு புதல்வன் நடை பயின்றான் (நற். 250:2,3). மூதூரிடத்தே அகன்ற நெடுந்தெருவில் கூகையின் சேவல் அதன் பெடையொடு சென்று நாற்சந்தியிடத்தே குழறியது (நற். 319:3-5). தழையணிந்த அல்குலையுடையளாய்த் தெருவின்கண்ணே பரத்தை சென்ற ஒரு காரணத்திற்காக, ஓரியைக் கொன்ற மலையமான் திருமுடிக்காரி அவ்வோரியினது ஒப்பற்ற பெரிய தெருவிலே புகுந்ததைக் கண்ட, ஓரியைச் சார்ந்த பலரும் பேரிரைச்சல் இட்டாற்போல் ஊரிலே நகையொலி உண்டாயிற்று (நற். 320:3-7). தெருவில் தான் ஆடிய மணலாற் செய்த சிற்றிலைத் தலைவன் முன்பு சிதைத்தமையினைத் தலைவி நினைவு கூர்ந்தாள் (கலி. 51:1,2). தோழி தலைமகற்குக் குறை நேர்ந்தபோது 'தெருவின்கண் காரணமின்றிக் கலங்குவோரைக் கண்டு ஏதிலவாயிருப்பனவற்றை நீ நின்மேல் ஏற்றுக் கொள்வானேன்' எனத் தலைவி தோழியிடம் வினவினாள் (கலி. 60:12-14). 'உலக ஒழுக்கத்தைத் தப்பி ஒருவன் தெருவின்கண்ணே நின்று கூறும் கூற்றை உண்மை என்று கொண்டு, உணராது தெளிதல் எளிது' எனத் தலைவி கூறினாள் (கலி. 60:24,26). சிலம்பு ஆரவாரிப்ப வந்து தெருவிடத்தே தாக்கணங்கு போலத் தாக்கித் தலைவன் நெஞ்சைப் பரத்தை அகப்படுத்திக் கொண்டாள் (கலி. 69:8,9). 'பெரும! தாய்மார் (பரத்தையர்) பெரிய தெருவிலே நின்னைக் கொண்டாடிக் கற்பிக்க நீ அவர்பால் கற்ற சொற்களை யாம் கேட்கும்படி அதிலே சிலவற்றைக் கூறு' எனப் புதல்வனை நோக்கித் தலைவி கேட்டாள் (கலி. 81:11-15). பிள்ளைகள் தம்மிற்கூடி விளையாடும் இடுமணலை இடத்தேயுடைய அகற்சியையுடைய தெருவிலே பிள்ளையை விளையாடுவித்துக் கொண்டு வருதற்குத் தலைவி புதல்வனைத் தோழியுடன் அனுப்பினாள் (கலி. 83: 3,4). தலைவியின் மகனை, தாய்மார் (பரத்தையர்) தெருவிலே வந்து தடுப்ப அவன் அவரிடத்தே தங்கினான் (கலி. 84:14,15). தன் கணவன் இல்லாத தனிமை வருத்துகையினாலே, பொலிவழிந்த அழகினையுடைய தலைவி, கணவனைக் கெடுத்தாள் போலே தெருவிலே புறப்பட்டு வெயில் தன்மேல் உறும்படி சிலம்பொலிப்பத் திரிந்தாள் (கலி. 147: 3-7). மதுரை நகரிலுள்ளோர், தம் உடம்பின் விளக்கம் தெருவில் உள்ள இருளைப் போக்கப் பரங்குன்றம் சென்றனர் (பரி. 19:14). மாயோன் கொப்பூழில் தோன்றிய தாமரையை ஒத்தது சீரூர்; அப்பூவின் இதழ்களை ஒத்தன தெருவம். (பரி. தி. 7:1-3).

**2. இராசி வீதி.** கார்த்திகையும் திருவாதிரையும் பரணியும் முதலாக அவற்றின் கீழிருந்து தெருவால் (இராசி வீதியால்) வேறுபடுக்கப்பட்ட ஓரொன்று ஒன்பது நாளாகிய மூவகை இராசிகள் (பரி. 11:1-3).

**தெருவம் - வீதி 'தெரு./தெருவம்/தெருவு' காண்க.**

**தெருவு - வீதி. 'தெரு/தெருவம்/தெருவு காண்க.**

**தெருமரல் - 1. சுழன்று திரிதல்/மனச்சுழற்சி.** 'ஆதர வற்ற தனிமைத் துன்பத்துடனே தெருமரல் -(வளளியோரை) சுழன்று திரியும-வருத்ததைதயும் போக்குவோம்' எனக் கரும்பனூர் கிழான் பரிசிலரிடம் கூறினான் (புறம. 381:15-16). ஏவல செயயாத பகைவர் நாடு தெருமரல மிகக் கரிகாலன் ஆண்டனன் (பொரு, 134). தலைவன் தெருமரல் உள்ளமொடு வருந்தினான் (அகம். 90:7). தலைவி நம் வயின தெருமரல் உள்ளமொடு வருந்துதல் அமையாது எனத் தலைவன் கூறினான் (அகம். 289:5,6). 'தலைவி தெருமரலில் இருந்து உயய, பாகனே! தேரினை விரைந்து செலுத்துக' எனத் தலைவன் தேர்ப்பாகறகுரைத்தான (குறு.250:4-6). 'உலகததைப் பெறினும் அரிய நெறியையுடைய ஆயர் மகளிர்க்கு இருமணம் உண்டாதல் இயலபன் றென்று நான் தெருமருதலைச சிறிது கைவிட் டிருக்கவா; கைவிட்டிருககின குடிப்பழுதுமாயக் கற்பும் நீங்குமன்றோ' எனத் தலைவி கூறினாள். (கலி. 114:12-20).

**2. மனம் சுழலாதே.** பொருள்வயிற் பிரிந்தார் மாட்டுத் தெய்வத்துத் திறன் நோககித் தெருமரல் -மனம் சுழலாதே - எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 16:18,19). - தெருமரல் - மனம் சுழலாதே (கலி. 26:22)

**தெருள் - தெளிதல்.** 'என் இடும்பையினை அறிவித் தேன்; இதனைத் தெருளுற - தெளிதலுற-நோக்கித் தலைவி எனனை அருள் உறும்படி செயயின் நுமக்கு அறனும் புகழும் உணடாகும்' எனத் தலைவன கணடார்ககுக கூறினான் (கலி. 40:30-34). தலைவி யிடம் தெருளும் மயக்கமும கலநதிருததல (கலி. 144:7).

**தெருளாமை - தெளியபபெறாமை.** தலைவி அறிவு தெருளாமையின்-தெளியப்பெறாமையின் - தீதோடு பொருந்தி, இரககமறறுப் பொருள் மேற்சேறலைத் தலைவன விரும்பவில்லை (அகம. 379:1-4).

**தெவ்/தெவ்வு - பகை/பகைவர்.** வன்கண் ஆடவரது தும்பை மாலை தெவ்வழி - பகைவரிடத்தே - விளஙகச சேரலாதன் அமர் கடநதான (பதி. 52: 7-10). நல்லியக கோடன், வலியமைந்த வெற்றி யோடே தெவ்வை (பகையை) தத்தம் நிலததைக் கைவிட்டுப போகச செயதான் (சிறு. 246). செவ் வேள் தெவ்வுப் பொருநதிய மலையில் வேற படையைச் செலுத்தி அம்மலையை உடைத்தா (பரி. 19:102,103).

**தெவ்வர் - பகைவர்.** முதுகுடுமிப பெருவழுதி 'போர் செய்தற்கு மாறுபட்ட தெவ்வர் - பகைவர் - தேயததின்கண் யானைகளை ஏவி, அரணகள் பலவறறையும் கொண்டு, கொள்ளபபட்ட அணி கலன்களைப பரிசிலர்ககு நல்கினான் (புறம. 6.11-16). முதுகுடுமிப பெருவழுதி கழனிக்கண்ணே குதிரையினுடைய கவிநத குளமபுகள் தாவத் தெவவர் தேயததுக்கண தேரைச செலுததினான் (புறம. 15.4-6). 'போா செய்யும கூறுபாட்டை யறியும வீரருடனே தெவ்வர் மாய, அம மாறறா ருடைய மண்ணைக கொண்டுணணும தலைவன எனச் சேரமான யானைககட் சேய மாநதரஞ்சேரல் இரும்பொறை சிறப்பிககப பெறறான (புறம. 20: 12, 13). 'காட்டுக கோழிச சேவல தினைப்புனம காப்போரைத் துயிலுணாததுவதாகக கூவும காட்டினகண நலஙகிள்ளியின தெவவா இருநதனர் (புறம. 28:8-10). அதியமானஞ்சி போா முனைக் கண் தெவவர் முரண அவியப பொருதனன (புறம். 98:1, 2). பொருநதாத தெவவரைத தடுககும நாட்டையுடையோன மலையமான திருமுடிககாரி (புறம். 126.22, 23). மனம ஒனறாத தெவவா முனனே நினறு அவர் மேற சென்று தடுதது யானைகளைக் கொனறு, வீழநது பட்டிறநத வீரர்ககு நடுகல எடுததல மரபு (புறம். 335.9-11). மறக்கள வேளவியின்போது, மனம் பொருநதாத தெவவருடைய, உடலினினறும நீஙகிய தலைகளால அடுபபமைததனா (புறம. 372-5). 'செல்வக கடுங்கோ வாழியாதன என்று தனபெயர் கூறிய அளவில், தெவ்வர் தமமுடைய கொறறக குடையைத் தாழத்தி வணஙகி, நெடிது தாழக காமல தாம செயதறகுரிய சிறபபுககளைச் செயது இவண வரவிடுவா' எனச் சேரமான சிககற பள்ளித் துஞ்சிய செலவக கடுங்கோ வாழி யாதனைக குன்றுகட் பாலியாதனார் சிறபபிபபர் (புறம. 387:30-32). களங்காயககணணி நார் முடிச சேரல், அடஙகாத தெவ்வரது மனவெழுச்சி நீஙகும்படி அவர்களை ஓட்டினன (பதி. 31:32). களஙகாய்ககணணி நார்முடிச சேரல், துமபை மாலையைச் சூடிய சினம கொண்ட தெவவரை அச்சததையுடைய போாககளததில் அலறுமபடி செயதான (பதி. 39:3-6). தெவ்வரது தலையை, மிளகைப போல உலசகையால இடித்தனா (பதி. 41:20,21). அரிய வழிகளை அடைததற்கு முள்ளிடு தலையறியாத எலலையையுடைய தெவவரது

வில்லிலிருந்து வரும் அம்பின் வேகத்தை அடங்கச் செய்த சேனையை உடையவர் அரசர். (பதி. 45: 15-17). சேரலாதன் தன்னோடு பொருந்தாத தெவ்வரது போர் கெடும்படி தடுத்து மதில்களைக் கைக்கொண்டான் (பதி. 53:10,11). மாறுபட்ட தெவ்வரது வீரம் கெடும்படி வஞ்சியாது எதிர் நின்று வென்றவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதி. 65:3). 'பகைமையில் நின்றும் தவிர்தல் இல்லாத தெவ்வர் எதிரே நின்று, பாதுகாத்தலை ஏற்றுக் கொள்பவனாகிய எம் அரசனுக்குத் திறை யிடுக' எனப் பெருஞ்சேரல் இரும்பொறையின் வீரர் கூறினர் (பதி. 80:9-11). 'குற்றத்தைச் செய் தெழுந்த தெவ்வரைத் திறை கொள்ளும் கூறுபாடு களெல்லாம் முடியப் போன செல்வன் கரிகாலன் (பொரு. 120,121). முன்பு கரிகாலனது வலியறியாத தெவ்வர் பின்பு வலியறிந்து ஏவல் கேட்டனர் (பொரு. 133). புலால் நாறும் வேல் பொருந்தாத தெவ்வர் அஞ்சக் குத்தி, கூர்மையையுடைய முனை மழுங்கியது (பெரு. 117-120). கைவண் தோன்ற லாகிய தலைவன் (இளந்திரையன்) பெரும் படை யுடனே சினந்து தன்மேல் வந்த தன் ஏவலைப் பொருந்தாத தெவ்வர் தோற்றவிடத்து வெற்றிக் களிப்புத் தோன்ற ஆரவாரித்தான் (பெரு. 418-420). தன் ஏவலைப் பொருந்தாத தெவ்வர் முதுகிட்ட விடத்து விட்டுப் போன குதிரைகளுடன் பொன் னாற் செய்த பக்கரைகளையும் தொண்டமான் பரிசிலாக அளித்தான் (பெரு. 490-492). 'பிரிந்து சென்ற தலைவர், தெவ்வர் மண்ணைக் கொண்டு திறைபெற்றுக் கொண்டு வருதல் உண்மை' எனக் கூறிப் பெருமுதுபெண்டிர் தலைவியைத் தேற்றினர் (முல்லை. 18-20). செறப்பட்ட தெவ்வர் மனம் கலங்கும்படி அவரிடத்தே சென்று அவர்க்கு அச்சம் தோன்றத் தங்கும் வலியினை யுடையவர் தென் பரதவர் (மது. 139,140). பாண்டியனால் செறப் பட்ட தெவ்வர் அவன் ஏவல் கேட்டு நடந்தனர் (மது. 189). 'திங்கள் நாள்தோறும் தேயுமாறு போல நின் தெவ்வருடைய ஆக்கம் நாள்தோறும் தேய்வனவாக' எனப் பாண்டியன் நெடுஞ்செழி யனிடம் மாங்குடி மருதனார் கூறினார் (மது. 195, 196). கரிகாற் பெருவளத்தான் தெவ்வரைக் கொல்லுதற்கு அறுதியிட்டு வைத்த வேலினும் காடுகள் கடியவாயிருந்தன (பட். 299,300). தெவ்வர் தேயம் சேணிகந்ததாயினும் ஆண்டுச் சென்று நன்னன் அவர் தூசிப்படையைக் கொன்று குவித்தான் (மலை. 86,87). பொருந்தாத தெவ்வர் முதுகிட்ட அளவிலே தமது வெற்றி தோன்ற வீரர் ஆரவாரித்தனர் (மலை. 386). நன்னனைப் பொருந்தாதே நீங்கின அவன் ஏவற்குப் பொருந் தாத தெவ்வர் இருக்கும் அருநிலங்கள் பல (மலை. 397, 398). பொருந்தாத தெவ்வருடைய கரிய தலைகள் துணியப் பருந்துகள் படியப் போரை வெல்லும் இயல்பினர் நன்னனின் மறவர் (மலை. 488,489). பாணன் என்பானது நல்ல நாட் டிற்கு அப்பாற்பட்ட, வழியிற் செல்லும் புதியர் களைக் கொன்ற தெவ்வர் (ஆறலைப் போர்) தாங்கள் எறிந்த படைக்கலத்தைக் கழுவினர் (அகம். 113:17-19). சேரன் போர் புரிந்தழித்த மாறுபட்ட தெவ்வரது மதில் போலத் தலைவி யின் மேனி பாழ்பட்டது (அகம். 381:15-17). பகை மிகுதலாலே ஆண்டு வந்த தெவ்வரை அழித்த விராஅன் என்பவனுக்குரியது புனல் வாயில் (நற். 260:6,7). பாணன், தலைவனை நோக்கி, 'நின் கழலடி சேரா அச்சம் அமைந்த தெவ்வர் போலப் பெரிதும் தலைவி நடுங்கினள்' எனக் கூறினான் (கலி. 30:20,21). தலைவி தன் மகனைப் பார்த்து, 'நீ மாறுபட்ட தெவ்வரை வென்று களம் கொள் ளுந் தன்மையில் நின் தந்தையை ஒப்பாய்; அவன் பரத்தமையை ஒவ்வாதே' எனக் கூறினாள் (கலி. 86:13-16). செவ்வேளின் கையிலுள்ளது பொருந் தாத தெவ்வரைத் தடிந்த வேல் (பரி. 21,8,9).

**தெவ்விர் - பகைவர்களே** (தெவ்வர் - விளி ஏற்றது). அவ்வையார் அதியமான் நெடுமானஞ்சியின் பகை வர்களைப் பார்த்துத் 'தெவ்விர் போர்க்களத்தின் கண் புகுதலைப் போற்றுமின்' எனக் கூறினார் (புறம். 87:1). கூர்வேல் பிட்டனைக் குறுகல் ஓம்புமின் தெவ்விர்' என மருத்துவன் தாமோ தரனார் அவன் பகைவரை முன்னிலைப்படுத்திப் பாடுவர் (புறம். 170:8, 9).

**தெவிட்டல் - உமிழப்பட்டது.** குதிரைகளின், பால் கடையுங்கால் தோன்றும் வெண்ணெயின் மிதப்பினை ஒத்த வெள்ளியதான தெவிட்டலாய - உமிழப்பட்டதாய-பின்னே வழிந்திடும் மெல்லிய நுரை, சிலம்பியின் நூல் போல நுணங்குவன வாய்ச்சிதறித் தலைவன் மார்பில் மறுச்செய்தது (அகம். 224:5-9).

**தெழி - 1. ஓசை.** ஊர், கடைந்தமோரைக் கையால் அலைக்கும் தெழி - ஓசை - கேட்கும் மிக அணிமை யுடையது (கலி. 108:35).

**2. உரப்பி ஒட்டுதல்.** உமணர் பகடு தெழி - உரப்பி ஓட்டுதல் - உடைய தெள்விளி குன்றத்தியம்பும் (அகம். 17:13, 14).

**தெளி** - தெளிவு கடல குறைபடுத்த நீர், யானையது குருதிக கோட்டின கண்ணுள்ள கறையைத் தெளி - தெளிவு - பெறக் கழுவிற்று (பரி. 20:1, 4, 5).

**தெளிவரல்** - தெளிவுபெறுதல். வையை கார்காலத்துக் கலங்கி வேனிற் காலத்துத தெளிவரல - தெளிதல - எஞ்ஞான்றும் ஒத்திருப்பதில்லை (பரி. 11:72,73).

**தெளிவு 1.** தேற்றம். தோழி தலைவனை நோக்கி, 'நீ இங்கு நயநது தெளிவிககும் தெளிவு - தேறறம் - முழுவதும் அழிந்தொழிவதாக' எனத் தெளி விடை விலககினாள் (நற். 345:10).

**2.** கலங்கலின்மை. களிறுகள் பொருதலுற்ற களம் போன்று இனிய நீர்மையையுடைய புனல, தெளிவு - கலங்கலினமை - இன்றாயிற்று (பரி. 10.110,111).

**தெற்கு** - தென் திசை பாண்டியன பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின ஆட்சி எல்லையைச் சுட்டும் போது தென்பாலது, உட்கும திறம் பொருந்திய குமரியாற்றின் தெறகு எனக் கூறப் பட்டுள்ளது (புறம. 6:2). வடககுத் தெற்காகச் செலலும் வழியைத் தடுத்து விளங்கும் சிகரத்தை யுடையதாகி அழகு பெற்றிலங்குவது பனிமிகக இமயமலை (பதி 31:16,17). விளக்கில் எரிகினற கொழுந்து வாடைக்காற்று அடிக்குந்தோறும் அசைநது தெற்கு நோக்கிச் சாயந்த தலையினை யுடையதாய் எரிந்தது (நெடு. 173-175). வெள்ளி யாகிய மீன் தான் நிற்றற்குரிய வடதிசையின் நில்லாமல் தெற்கு ஏகினும் காவிரி பொயயாமல் ஓடும் (பட். 1-6). மழைக்காலத்தில் மேகங்கள் தேற்கே எழுநது போய் மிகக மழையைப் பொழியும் (அகம். 13:12,13). பெருமழை பொழிந்த எழிலி, தெற்கே எழுந்து செல்லும முனபனிக காலததில காதலரைப் பிரிந்து செலலுதல் அரிது (நற். 5:5-7).

**தெற்றி** - திண்ணை/மேடை. குறுநதொடி மகளிர் பொனனாற செய்யப்பட்ட கழலான தெற்றி - திணணை-போல் உயர்ந்த எக்கர்க் கணணே இருந்து விளையாடுவர் (புறம். 36:3,4). விளங்கில் நகரில் மகளிர் தெற்றிக் கணணே விளையாடுவர் (புறம். 53.3,4). தெறறிமேல் வைத்து விளையாடும் பாவையை மணலினகண வைதது மகளிர் விளையாட்டயர்நதனர் (புறம். 283.10,11). 'தெறறி யிடத்தேயுள்ள (மேடை) பூஞ்செடிகள காயந தாலும் வயலைக கொடி வாடுதலுறறாலும் கலங் காத மனத்தோடு உடன போககினைத், துணிக' எனத் தோழி தலைமகட்குக கூறினாள் (தெறறியை மரம என்றும கூறுவா) (அகம். 259 11-14). உடன போகிய தன மகள் விளையாடிய நீலமணி போனற பூவையுடைய நொசசியையும் தெறறியை யும் பாாத்துத் தாய வருநதினாள் (நற். 184:6-9).

**தெறல் - 1.** அழித்தல்/வருத்துதல். சேரமான் பெருஞ சோற்று உதியஞ் சேரலாதன வலியும தெறலும் - அழிததலும -அருளும உடையவன (புறம. 2.6). 'தெறலரும் மரபினையுடைய நின சுற்றத்துடனே பொலியும்படி கபிலன, புகழ்பரந்து நிற்ப நின்னைப் பாடினான' என மலையமான திருமுடிக காரியை மாறோககதது நப்பசலையார் பாடினார் (புறம. 126:8-13). பகைவரைத் தெறல வலலவர் மறவர் (புறம். 345 5). கடிய தெறலுடையவன இராமன (புறம. 378:18). வெயய தெறல தொழி லுடையது ஞாயிறு (பெரு. 17). தொணடை மானுககுப் பகைவரது ஊாகளிலுள்ள மன்றுகளில மககள் இல்லையாயப பாழபடுமபடி அவறறைத் தெறல எளிது (பெரு. 422,423). தெறலரிய கடிய வலியினையுடையவர் வீரா (மது. 32,38). தெறலருமமரபினையுடைய கடவுள் முருகவேள் (அகம். 13:3). கடுநதெறலுடையது வேனில (அகம. 121:1,2). பிறரால் தெறலரிய மரபினையுடையவர் கடவுள் (அகம. 372.1). தலைவன தெறலருங கடவுள் முனனாத தெளிவிததுத தன கைபபறறி யமையைக காதற் பரததை கூறினாள (அகம். 396: 7,8). தெறலருமதானையுடையவன பொறையன (நற். 18.4,5). பாணா, தெறலரும கடவுள முன நின்று அதன சினமடங்க யாழிசைததனர் (நற. 189:2-4). பசிபபிணி தெறலால் வருததததினை யுடையது பெருஙகளிறு (கலி. 20.4) தெறலை இயல்பாக உடையவன கொடுஙகோல அரசன (கலி. 146.2,3).

**2.** வெமமை. சேரமான் யானைககட்சேய மாநதரஞ் சேரலிரும் பொறையின ஆடசி நிழலில வாழவோா செஞஞாயிறறுத தெறல்-வெமமை-அலலது பிறிது தெறல அறியாா (புறம. 20 8,9).(2). முனபு மகளிரது இழைகளை நெகிழததமள்ளன இனறு கடுநதெறல செநதீ வேடடுச சடையினைப புலாததிய வாறு உளளான (புறம. 251:3-7). 'உடமபு தீயுமிழகினற தெறலால் வெபபமுடைய தாயிறறு' எனத தலைவி தோழிககுக கூறினாள (நற. 236:1,2). திருமால' 'தீயினுள் தெறலாக' உள்ளாா (பரி. 3 63).

**3.** தண்டித்தல். செஙகோல செலுததும அரசாககு வேணடபபடாத குறறங்களுள் தெறற கடுமையும-

பிசுதியாகத் தணடித்தலும்- ஒனறாகும (பதி 22: 3,4)

**தெறுவரல** - வெருட்சி தோன்றல்/அச்சம் தோன்றல். முரசு கட்டிறகண அறியாதேறிய மோசிகீரனைத் தெறுவர - வெருட்சிதோனற - இருகூறாககாது ஒழிதத தகடூரெறிநத பெருஞ்சேரல் இரும்பொறை யினைப் புலவர் பாராட்டினார் (புறம். 50:7-10). 'தெறுவர (அச்சம உற) இரங்கத் தககாளாகிய இவள் எனனாகுவாளோ என என வருத்ததிற்கும் இரஙகா நின்றாய்' எனத தோழி தலைவியைப் பார்த்துக கூறினாள் (அகம். 73:6-8). தம் உயிர் வேறொரு நற்பதவியிறபுக, நற்போரை வென்று பட்ட வீரரின் குடரைப பருந்து தெறுவர இழுத்துச் செல்லும் (அகம. 77:9-12). கோசரை அழுந் தூரிடத்துத தெறுவரக் கொன்று அன்னி மிஞிலி இகல்தீாந்தாள் (அகம். 196:9-12). 'காமம் அலைப்பத தெறுவர நடுஙகிக் கோவால அடிககப்பட்ட பாம்பு போல வேறு துணையின்றி யிருந்து வாடுவையோ' என அல்ல குறிப்பட்டுப் போகினற தலைமகன தனனெஞ்சிறகுக கூறினான் (அகம். 322:3-6).

**தெறுதல்** - அழித்தல். ஞாயிறு தெறுதலால் - அழித் தலால - நிலம் அழிந்தது (அகம். 31:2,3). பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும பொருளினாற்கைகூடும் எனத் தலைவன் பிரிநதான் (கலி. 11:2-4).

**தெறுவர்** - பகைவர். உப்புவாணிகரால் யாருமில்லாத இடத்தே கைவிடபபட்ட முடம்பட்ட பெரிய எருது போல மறவன தெறுவரது - பகைவரது - மிக்க உயிர்களைக் கவர்ந்தான் (புறம். 307:7-10).

**தெறுழ்** - கொடி வகை. கார் காலத்து மழை பெய்து யாறிய காட்சி இனிய காவத்துக களிறறு முகத் தினகண் புகர் போலத் தெறுழ் பூத்தது (புறம். 119:1, 2). மழையை நோக்கி மலர்ந்த, கரிய புதர் களிலுள்ள நல்ல கொத்துக்களையுடைய தெறுழ மலா, மழைக்காலம் நீங்குதலாலே தன்னிறம் மாறி வெண்மையாயிறறு (நற். 302.3 5).

**தென்கடல் முத்து** - தென்கடலிற் பிறந்த முத்துக்கள். தெனகடல முதது - தென் (திசைக) கடலிற் பிறந்த முத்துக்கள் - படடினததே வநது குவிந்தன (பட். 189, 192) 'தெனா பல்வத்து முதது' காண்க.

**தென்குமரி** - தெனதிசைக்கண் குமரி. நிலம தென் குமரியும - தென திசைக்கண் குமரியும - வட திசைக்கண் இமயமும கீழததிசை மேறறிசைக்கண கடலும் எல்லையாகவுடையது (புறம. 17:1, 2; மது. 70, 71).

**தென்திசை** - தெற்குத்திசை. தென திசைக்கண்ணே வெள்ளி தோனறினும் வயலிடம் விளைவு மிகுந்தது (புறம். 117:2,3). வடதிசையிலே இமயம் உள்ளது: தென் திசைககண் ஆஅய்குடி இனறாயின உலகம் பிறழ்ந்துவிடும் என ஆஅய்குடியின் பெருமை கூறுவர் முடமோசியார் (புறம். 132:7-9). 'வெள்ளி வடதிசை நினறு தென வயிற்செலினும் தென்திசை நின்று குறுகாது நீடினும், யாம் வேண்டுவன வற்றை எம் குறிப்புக் கணடுணர்ந்து நல்குவோ னாகிய வளவன் தாள் வாழ்க' எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைக் கோவூாகிழார் வாழ்த்துவர் (புறம். 386:22-25). 'தெறுகதிர்க் கனலி, தென திசைக்கண் தோன்றினும் கிளளி வளவன் தாள் நிழற்கண் வாழும் யாம் அஞ்சேம்' என எருககாட்டூர்த் தாயங்கணணனார் பாடுவர் (புறம். 397:21-27). வடுகர் தமக்கு முன்னே துணையாகி வர, மோரியர் தென்திசை நாடு களைப் பற்ற எண்ணுவர் (அகம். 281:8,9). வையை யில் நீராடிய பின் யாவரும் தென்திசை நோககி மீண்டனர் (பரி. 10:121).

**தென்பரதவர்** - தென்றிசைக்கண் வாழும் பரதவர். (குறு நில மன்னர்). தென்பரதவர் மிடல சாய வென்றலன சோழன் (புறம். 378:1,5). தென் பரதவர் போர் ஏறே' என தலையாலங்கானததுப் பாண்டியன் நெடுஞ்செழியன் விளிக்கப்படுகிறான் (மது. 144).

**தென்பவ்வத்து முத்து** - தென்கடலில பிறந்த முத்துக்கள். நாஞ்சில் வள்ளுவன் தென் பவ்வதது முத்துப் பூணடவன் (புறம். 380:1). 'தென் கடலமுத்து' காணக.

**தென்புலங்காவல்** - பாண்டி நாட்டு ஆட்சி 'பகை வரைப் புறங்காணேனாயின தென்புலங்காவலின - பாண்டி நாட்டு ஆட்சியின் - நீங்கிப் பிறருடைய வன்புலங்களைக் காக்கும் குடியில் பிறப்பேனாக' என ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன சூளுரைத் தான் (புறம. 71:5,18,19).

**தென்புலங்காவலர்** - தென்புலத்தை ஆட்சி செய்பவர். தென புலங்காவலா குடியிலுள்ளோனாகிய கடிய தேரைச் செலுத்தும் செழியனுடையது மதுரை (சிறு. 63-67).

கல் என்னும் ஓசை உண்டாக நெடிய தேரினைச் சமைத்துக் கொண்டு தலைவன் வருவான் (நற். 207:3,4). வினைமுற்றி மீளும் தலைவன் பாகனிடம் 'என் மனைவி புதல்வனை எந்தாய் வருக! என்று அழைக்கும் அந்த இனிய மொழியைக் கேட்பதற்குத் தேரை விரைந்து செலுத்துக' என்றான் (நற். 221:7). சோழர்க்குரிய ஆர்க்காடு என்னும் நகரிலே உள்ள தெருக்களில் தேர் எப்பொழுதும் ஓடிக் கொண்டிருக்கும் (நற். 227:8). நல்ல தேரினை யுடையவன் செம்பியன் (நற். 234:7). கார்காலத் தைக் கண்டு தலைவன் தேரைச் செலுத்து என்று பாகனிடம் கூறினான் (நற். 242:5,6), தலைவன் தலைவியைத் தேடிப் பூண் நிரம்பிய நெடிய தேரிலே வருவான் (நற். 245:8). சேரியினர் கல் என்று அலர் தூற்றுமாறு தலைவன் தேர் சென்றது (நற். 249:10,11). சிறு குழந்தை தெருவில் முக்கால் சிறுதேரைப் பற்றிக்கொண்டு நடைபயிலும் (நற். 250:2,3). பாண்டியன் பொன்னாலாகிய தேரை யுடையவன் (நற். 298:9). விறலி பாணனிடம், தேரை அலங்கரித்துத் தலைவியின் வாசலில் நிறுத்தி விட்டுப் பரத்தையைத் தேடிச் சென்று விட்ட தலைவனுடன் நீயும் போகாது தேருடன் வந்து நிற்கும் நீ அப்படியே நில் என்றாள் (நற். 300:5,7). குதிரை பூட்டிய தேரிலே மணிகள் ஒலிக்கும் (நற். 307:1). தலைவனின் தேரோசை கேட்டல் அரிது என்று தோழி கூறினாள் (நற். 311:11). தலைவியைக் காண விரைந்து தேரைச் செலுத்து என்று பாக னிடம் தலைவன் கூறினான் (நற் 321:8). தோழி தலைவனிடம் எங்கள் ஊரின்கண் உள்ள சோலையில் வண்டுகளின் ஒலி உன்னுடைய தேரின் மணிகளின் ஒலியைவிட மிக்கிருக்கும்; ஆகவே வருவதற்கு அஞ்சாதே என்றாள் (நற். 323:9). நெடிய தேரின் உருளை அடும்பின் கொடிகள் சிதையுமாறு விரைந்து செல்லும் (நற். 338:2, 3). செழியன் விரைந்து செல்லும் தேரினை உடையவன் (நற். 340:2). தலைவன் விரைந்த தேரிலே சென்று தலைவிக்கு ஏவல் செய்வான் (நற். 349:1). மணியோசை ஒலிப்பத் தலைவனது தேர் மாலைக் காலத்தில் தலைவியின் இல்லிற்கு வரும் (நற். 361:7). வினைமுற்றி மீளும் தலைவனைக் குறித்துக் கண்டோர், மணிகளொலிக்கும் அருங்கலம் விளங்கிய தேரினுடைய உருளைகள் கார்ப்பருவத் திலே குறித்தபடி வந்து விட்டன என மகிழ்ந்து அவனை வாழ்த்தினர் (நற். 394:4). குட்டுவன் நெடிய தேரையுடையவன் (நற். 395:4). குளிர்ந்த நீர்த்துறையையுடைய ஊருக்குத் தலைவன் தேரோடு தலைவியிடத்து வருவான் (ஐங். 5:5). தோழி தலைவனிடம் மிக்க அழகுடைய உன் தலைவியைவிடுத்து, உன்னுடைய தேர்பரத்தையை நாடிச் செல்லக் கூடாது என்றாள் (ஐங். 52:4). பாண்டியன் திண்ணிய தேரினை உடையவன் (ஐங். 54:1). தேர்வழங்கும் வள்ளன்மையுடையவன் பாண்டியன் (ஐங். 55:2). தலைவி, தலைவனிடம் 'பரத்தையரையே தேடி அலைகின்ற உன்னுடைய தேர், இங்கு ஏன் வந்தது' என்று வெகுண்டு கூறினாள் (ஐங். 62:4). தலைவி, தலைவனிடம், 'தேரோடு வந்து உன் புதல்வனை என்றும் பிரியாமல் இருக்கும் நீ, இப்பொழுது எந்த பரத்தையின் காரணமாகப் பிரிந்தாயோ' என்று கேட்டாள் (ஐங். 66:2-4). தலைவியினுடைய பிரிவாகிய நோய்க்குத் தலைவனுடைய தேர் மருந்தாக அமையும் (ஐங். 101:5). கடற்பறவை களின் ஒலிபோன்று தேரில் கட்டிய மணிகள் ஒலிக்கும் (ஐங். 102:2-4). ஊரார் பலரும் உறங்கிய நடுயாமத்தில் தலைவியைக் காண, இலக்கண மமைந்த தேரில் தலைவன் வருவான் (ஐங். 104:3). பிரிவினால் அழகை இழந்த தலைவி, நெடிய தேரையுடைய தலைவன் வந்தவுடன் இழந்த அழகைப் பெற்று விடுவாள் (ஐங். 134:2). பரத்தை மையில் ஒழுகிய திண்ணிய தேரையுடைய தலைவன் திருந்தினும் தலைவி நம்புவதற்கு மறுப்பாள் (ஐங். 157:2). அயலான் தேரொன்று பலமுறை இப்பக்கம் வருகின்றதால், இல்லின் புறத்தே செல்லாதீர் என்று செவிலி தலைவி யிடம் கூறினாள் (ஐங். 186: 4). தலைவ னுடைய தேர் பொன்னாலாகியது (ஐங். 200:2). தலைவியினுடைய அல்குல் தேரின் தட்டைப் போன்று இருக்கும் (ஐங். 316:2) தலைவியை முயங்க வேண்டுமென்ற ஆவலால், சுரத்தின் வெம்மை யையும் ஓராது குதிரைகளை விரைவுபடுத்தித் தேரைச் செலுத்திக்கொண்டு தலைவன் வருவான் (ஐங். 360:4). கான்யாறு ஈர்த்துச் செல்லும் தலைவியைத் தேரில் வந்த தலைவன் காப்பாற்றி னான் (ஐங். 367:4). தமர் வரைவு மறுத்துழி, தலைவி தலைவனுடன் தேரேறி உடன்போக்குச் சென்று விடுவதும் உண்டு (ஐங் 385:1). தலைவன் தலைவியிடம் கொண்ட பேரன்பு, தளர்நடை நடந்து சிறுதேர் உருட்டி வரும் புதல்வனிடம் மேலும் பெருகி விரியும் (ஐங். 403:5). காற்றுப்போல விரைந்து செல்லவல்ல குதிரைகள் பூட்டிய நெடிய தேர் முல்லைமலர்கள் உதிரும்படியாக விரைந்து செல்லும் (ஐங். 422:1-3). தலைவியை விரைவில் காண, நமது நெடிய தேரை விரைந்து செலுத்துக என்று தலைவன் கூறினான் (ஐங். 425:3). வினை வயிற் பிரியும் தலைவனின் தேரினை மழைவந்து தடுத்து விடுவதும் உண்டு (ஐங். 428:1). போர்த்

தொழில விரைவில முடியின், விரை நதுசெல்லுதலை யுடைய நல்ல தேரின்கண சென்று என் தலைவியைக் கண்டு மகிழ்வேன் என்று தலைவன் கூறினான் (ஐங. 443:1). தேரானது கல நிலமும் சிதையுமபடி உருளவல்ல காலகளையும் பந்தியிலே நிற்றலை வெறுத்த குதிரைகளையும பெற்றுத் திண்மையுடைததாயும் மாட்சிமையுடைததாயும் விளங்கிற்று (ஐங். 449.1-3). மண்ணாசையால் பாசறைககண் தங்கியிருக்கும் வேநதரோடு, எம் தலைவரும தங்கியிருத்தல சரியாகுமா; தேரோடு வந்து எமக்கு விருநதாக வேணடாமா என்று தலைவி கூறினாள் (ஐங். 451:2). காாப்பருவம தொடங்கியதைக கண்டு எனனுடைய கண் நீர் உகுககத் தொடங்கிவிட்டது, தலைவனின தேர் மட்டும் வருதலைத தொடங்கவில்லையே என்று தலைவி கூறினாள் (ஐங். 453:5). முல்லைக கொடிகள் காாபபருவததை நயப்பது போல, என்னுடைய உடல தலைவனின தேர்வருதலை நயககும் என்று தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 454:4). வினைமுற்றிய தலைவன் தலைவியை நினைந்து நீாவீழ்ச்சி போனறு விரைநது செல்லும் தன் தேரினைச் செலுத்தி வருவான் (ஐங். 465:1). தலைவன, வடிதத மணிகள் கட்டப்பட்ட தேரினைச் செலுத்தி வருவான (ஐங். 468:4). தலைவன் தமது நெடிய தேரினைச் சுவடு உண்டாகும்படி விரையச் செலுத்திப் பகைவரின அரண்களைத் தகர்ப்பான் (ஐங. 474:3). பாசறைக்கண இருக்கும் தலைவன பாணனிடம, நீ போயத தலைவியை ஆற்றுவிததிரு, என் தேரையும் விரைவில் அங்குக் காணபாய எனறான (ஐங். 477:5). வினைமுற்றிய தலைவன பாகனிடம், இன்றே போய் என தலைவியைக் காணவேண்டியிருபபதால் நமது தேரினை விரைநது செலுத்துக எனறான் (ஐங். 481:4). விரைநது செலலும் தேரைக் கண்டு மான முதலிய விலங்குகள மருண்டு ஓடும் (ஐங். 485:5). தலைவியைக் காணப பாகனே! தேர் விரைநது செலலுவதற்குக் குதிரைகளின விசைவாரினை ஆராய்நது கையிற்கொண்டு செலுததுக எனறு தலைவன கூறினான (ஐங 486;5). அறிவுடைய பாகனே! தேரினை விரைநது செலுத்து எனறு தலைவன கூறினான (ஐங். 487.3). தேரினகண் பிடரி மயிரை யுடைய சிறநத குதிரைகளைப பூட்டி ஓட்டுவர் (ஐங. 488:3,4). வினைமுறறி மீண்டுவரும் தலைவன், பாகனே குதிரையின கடிவாளததிட்ட விசைககயிற்றை இழுததுப் பிடித்து நெடிய தேரினை விரைந்து செலுததுக என்றான் (ஐங். 489:5). நெடிய தேரில அழகிய மணிகள் கட்டபபட்டிருக்கும (ஐங். 490 4). இயல் பாகவே விரைவினையுடைய நெடிய தேரினை மேலும விரைவாகச செலுததுவர் (ஐங. 498:4). பிரிநத தலைவன பகைவர் மயஙகுதறகுக காரணமான கடிய திணணிய தேரை விரைநதுசெலுத்திக கொணடு தலைவியிடம் வருவான (கலி. 27.25). நெடிய திணணிய தேர் அழகோடு விளங்கியது (கலி. 30:19). வினைவயிற பிரிநத தலைவன பகையை வென்று திறையைப பெற்ற உடனே பாய்ந்து செலலுகினற திண்ணிய தேரைச செலுததிககொணடு தலைவியிடம வருவான (கலி. 31:17).) பிரிநதிருநத தலைவன் கடிய திண்ணிய தேரைக் காறறைபபோல விரைநது செலுததிக் கொணடு தலைவியிடம வருவான (கலி. 33.31). பறவையினது பறததல் தனமையையுடைய கடிய திணணிய தேரினையுடையவன பாணடியன (கலி. 35:23,24). தலைவன தனனை வநதடைநத பரிசிலர்க்குத தேரைக கொடுபபான (கலி. 42'21). தேர் காற்றைவிடபபோதல தொழிலிலே மிககுச செல்லும (கலி. 50'15). பாணடியன பநதியிலே நிறகும பாயந்து செலலும குதிரைபூட்டிய தேரை உடையவன் (கலி. 57:14). இல்லினுள் சென்ற தலைவன், வருமளவும் பாகன பூட்டிய தேரை நிறுததியே இருபபான (கலி. 66:24). பரததைமை உடைய தலைவனைப பாகன தேரோடும சென்று ஒவவொரு பரததையர் இலலினும தேடுவான் (கலி. 68'17). ஒரு பரததை மேல ஆசை கொணடு அவளை அழைதது வரப பாகனைத தேரோடும தலைவன அனுபபி வைததான (கலி 69:12). பரத்தைமையில் புரள்கினற தலைவனை நினைநது வருததததால் உறஙகாத தலைவியைப பரத்தையரைக கொணடு விடவரும அவனுடைய தேரின்மணியோசை மேலும் அவளின் உறககததைக கெடுககும (கலி. 70.18). உனனைத தவிர தலைவன எநதப பெணணையும நாடவிலலை எனறு தலைவிககுப பாகன தேரைத தொட்டுச சூளுரைப்பான (கலி. 71:10). தோபபாகனைப் பற்றி ஊரவா. தலைவனுககுப பரத்தையரைப பிடித்துததரும வலை இது எனறு பேசிககொளவா (கலி. 74 16). தலைவன தலைவியரின இலலததிறகு விருநதினா தேரில வருவா (கலி. 75.16). சிறு தோ உருட்டும தன புதல்வன முருகனைப போனறுள்ளான எனறு தலைவி மகிழவாள் (கலி. 81 8) சிறுவா நுஙகு எடுககபபட்ட பனஙகுருமபையைக கொடியால கட்டி, சிறு தேரை உருட்டுவதுபோல உருட்டி விளையாடுவா (கலி. 83.10). தன செலவன சிறுதோ உருட்டும்போது நடககும தளா நடையைக கணடு தலைவி, 'உன நடை மிகக அழகு மகனே' எனறு கூறுவாள் (கலி. 85 18) தேரோடு வரும்

தலைவனைப் பார்த்து, இவன் ஒரு செல்வ மகன் போலும் என்று பரத்தையர் மயங்குவர் (கலி. 98 18). பரத்தையை அழைத்து வருவதற்குத் தலைவனின் தேர் செல்லும்பொழுதெல்லாம் ஊரவர் அவனைப்பற்றி இகழ்ச்சியாகப் பேசிக் கொள்வர், நீ பரத்தையருடன் நீராடப் போகும் பொழுது உன் தேரின் உருளைகள் மணலினுள் புகாவாறு பார்த்துக் கொள்க என்று தலைவனிடம் தலைவி கூறினாள் (கலி. 98 5-36). வேந்தன் இழையணிந்த கொடியினையுடைய திண்ணிய தேரினைப் பெற்றிருந்தான் (கலி. 99.7). பாய்ந்து செல்லும் பரிபூண்ட கடிய திண்ணிய தேரில் வந்து தலைவியை மணந்து கொள் என்று தலைவனிடம் தோழி கூறினாள் (கலி. 121:23). தேர் புரிந்த உளையினை யுடைய கலிமாவைப் பூண்டிருந்தது (கலி. 124:20). உன்னுடைய திண்ணிய தேரின் மணியோசையைப் பறவைகளின் ஒலி என மயங்கும் தலைவியின் துயரம் தீர நீ தேரில் புறப்படு என்று தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 126: 6,22). அலையொலிக்கின்ற கடற்கரையிலே தலைவனுடைய தேர் வரும் பொழுது அறிந்து தலைவி வருவாள் (கலி. 127.10). தலைவியை மறந்திருந்த தலைவனிடம் அறத்தை எடுத்துக்கூறித் 'தலைவியின் துன்பத்தைக் களைய, உன்னுடைய தேர் குதிரைகளைப் பூணுவதாக' என்று தோழி கூறினாள் (கலி. 133.19). நெடிய தேர் ஓடுகின்ற ஒலியினையும் திண்மையையும் உடையது (கலி. 135: 20). 'தலைவியை விரைந்து அருளத் தேரில் ஏறுவாயாக' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 136 21). காதற் பித்தேறிய தலைவி ஒருத்தி, காற்றைப் பார்த்து, உயவுத் தேரை ஊர்ந்து வந்து, எனக்குக் காம நோயைத் தந்துவிட்டு ஓடி ஒளிந்து கொண்ட என் தலைவனைக் கொண்டு வந்து காட்டுவாயாக! இல்லையேல் என் கண்ணீராத் தீயால் உன்னைச் சுடுவேன் என்று கூறினாள் (கலி. 144·37). வேதங்களாகிய குதிரைகள் பூட்டப்பட்ட பூமியாகிய தேரில் சிவபெருமான் ஏறிச் சென்றார் (பரி. 5:23). முருகப்பெருமானின் மனைவியர் தேவசேனையும், வள்ளியும் தேருக்கு அழகு செய்யும் அழகிய கயிற்றைப் பற்றும் முறை தெரிந்து பற்ற வருவாரைப் போல, ஒருவர் சடையினை ஒருவர் பற்றி இழுத்துப் போரிட்டனர் (பரி. 9:52). வையைக் கரையில் கொடியுடைய திண்ணிய தேர்களில் ஆடவரும் பெண்டிரும் ஏறினர் (பரி. 11:51). வையையில் பெரு வெள்ளம் வந்தபொழுது வெள்ளத்தில் நீராடச் சிலர் தெளிந்த ஓசையை யுடைய மணிகள் கட்டப்பட்ட நெடிய தேரின்கண் சென்றனர் (பரி. 12:29). சிற்றரசரின் தேர்களுக்கு நடுவே பாண்டியனுடைய மீனக் கொடி பறக்கும் தேர் நடுநாயகமாக உயர்ந்து விளங்கியது (பரி. 17:45). திருப்பரங்குன்றத்திற்கு நல்ல ஓட்டம் அமைந்த தேர்களைச் செலுத்திய பாகர், அத்தேர்களை வழியில் நிறுத்தாமல் ஓரமாகக் கொண்டு நிறுத்தினர் (பரி. 19:13,33). வையை வெள்ளத்தில் நீராடச் செல்வோர் தூக்க மயக்கத்தில் திண்ணிய தேரில் பூட்டுவதற்குரிய குதிரையைக் கொண்டு போய் வண்டியில் பூட்டினர்; வண்டியில் பூட்டுவதற்குரிய எருதினைத் தேரில் பூட்டினர் (பரி. 20:16-17). வையையில் நீராடச் செல்வோர் மிக்க அழகுடைய ஓட்டமமைந்த தேர்களிலே சென்று திருமருதத் துறையின் முற்றத்தை அடைந்தனர் (பரி. 2:17).

**2. பேய்த்தேர்** (கானல் நீர்). ஞாயிற்றின் வெப்பம் எரிபோலப் பரந்து கிடந்த பாழிடத்தே வலிமை யழிந்த யானை தேரை - பேய்த்தேரை - நீரென்று எண்ணி வழியெலாம் ஓடி வருந்திக் கிடக்கும் (அகம். 29:17) மழைவளம் வறந்த பாழிடத்தே உருவம் இல்லாத ஊர்ந்திடப்பெறாத தேருடன் நிலத்தே பொருந்திய பரல்கற்கள் பலவும் ஒருங்கு ஒலி விடும் (அகம். 67:15). யாவற்றையும் அழிக்கும் ஞாயிற்றின் ஒளிகாயும் முதுவேனிலில் மழையின்மையான் நீர்வறண்ட அகன்ற பாழிடத்தில் தேர் ஓடும் (அகம். 89:2) வானையளாவிய மலையினது பக்க மலைக்கண்ணே வெண் தேர் ஓடும் (அகம். 179:1,2). மூங்கில்களெல்லாம் காய்ந்து போகும் படியாக மழை வறண்ட கானகத்தே நீர்வேட்கை மிக்கு நீரென்று கருதித் தேர் பின்னே ஓடிய கலைமான் வருந்திக் கிடக்கும் (அகம். 241:9). தேர், பாலையில் நீர்விளங்கினாற்போல விளங்கித் தோன்றும் (அகம். 395:9). மரங்கள் இல்லாது நீண்ட இடத்தில் மான் கூட்டம் பெரிய நீர்ப் பரப்பையொத்த வெளிய தேரை நீரென விரும்பிச் செல்லும் (நற். 13:4). பாலையில் வெளிய பேய்த்தேர் பெரிய நீர்ப்பரப்புப் போலத் தோன்றும் (நற். 84:4). தலைவி கிட்டாமையினாலே தலைவன் காமம் காழ்கொண்டு அறிவு மயங்கி மானென மதித்து மடலூர்ந்து, மதிலென மதித்து வெளிய தேர் ஏறினான் (நற். 342:2). சுரத்தில் ஆறலை கள்வரால் கொல்லப்பட்டாருடைய பிணத்தின் ஊனை நிரம்ப உண்ட முதுநரி நீர் வேட்கைமிக்கு நீரென்று கருதித் தேர் உள்ள இடத்திற்குச் சென்று வருந்தியிருக்கும் (நற். 352:7). சுரத்தின்கண் ஊரப்படாத தேரை தண்ணீரென்று களிறுகள் அவாவும் (கலி. 7:2). சுரத்தின்கண் யானை நீர் வேட்கையினாலே விளங்குகின்ற தேரின் பொருட்டு ஓடும் (கலி. 24:10).

3. வண்டி. 'ஏறிச செல்லுகின்ற தேர் - வண்டி - சேற்றில அழுநதினாலும் அதறகுத் தளராத கொண்டையையுடைய எருது ஒன்று வேணடும்' என்று கூறி தாமான் தோனறிககோனிடம அதனை ஐயூர் முடவனார் வேண்டுவர் (புறம. 399:27). கொல்லரால் இயற்றபபட்ட தேரை இளமையான எருது இழுத்துச் செல்லும் (கலி. 109:5).

4. உவம உருபு. இளியைத் தேர் - ஒத்த - இனிய குரலுடன் பருந்தின்சேவல தனபெடையை அழைககும் (அகம. 33:5-7).

**தேர்ச்சி** - 1. ஆராய்தல். அதியமான் நெடுமான அஞ்சியின மார்பில் தைத்த வேல அழகிய சொல்லையும் நுண்ணிய தேர்சசியையும்-ஆராய்ச்சி யையும் - உடைய அறிஞரின் நாவினகண்ணே போய வீழ்ந்தது (புறம். 235:13). மதுரையைக் காககும காவலா நுண்ணிய செறிந்த நூலின் வழியைத் தபபாத நுண்ணிய தேர்சசியை உடைய வர் (மது. 646). வையையாறு இனிய தன்மையில் மேம்பாடுற்ற தேர்ச்சியினை உடைய இசையோடு கூடிய பரிபாடலாலே வாழ்த்தபபடுகினறது (பரி. 11:137).

2 தெளிதல். திருமாலை விளக்கமாக அறிந்து கொளளுதல மயககந்தீர்நத தேர்ச்சியை - தெளி வினை - உடைய முனிவர்களுக்கும் அரிதாகும் (பரி. 1:30).

**தேர்மணி** - தேரில் கட்டியமணி. நன்கு வற்றிக்காய்ந்து போன மரத்திலிருந்து சிள்வீடு என்னும் வண்டுகள் தேர்மணி - தேரில் கட்டியமணி - போல ஒலிக்கும் (அகம். 145:2). வினை முற்றிய தலைவன் வருகின்ற தேர் மணியோசையோ, காண்போம் வா' எனத் தோழி தலைவியை அழைத்தாள் (குறு. 275:8). இறசெறிப்புற்ற தலைவி, நள்ளிரவில் பறவைகளின ஒலியைக் கேட்குந தோறும், நம் தலைவனின் தேர்மணி ஓசையோ என மயங்கித துயிலொழிநதாள் (நற். 287.10).

**தேர்வண் மலையன்** - மலையமான. இவன் சிறநத போராற்றல் வாய்க்கப் பெற்றவன. சோழன் இராசசூயம் வேட்ட பெரு நற்கிள்ளியும சேர மான் மாந்தரஞ்சேரலிரும்பொறையும் எதிர்ததுப் போரிட்டபோது, இமமலையன் சோழனுககுத் துணையாகி அவனது வெற்றிக்கு வழி வகுததான். இவன துணை வந்தமையாலேயே தனக்கு வெற்றி வாய்த்தமையால் வென்ற சோழனும் தன்னை வெல்வித்தோன எனறு இவனை மகிழநது போறறி னான்; அசசோழனுககுத துணையாகி இவன வாராதிருநதிருபபின தான வெல்லுதல எளிதாய அமைந்திருககும எனற கருததுடன, தோறறோ னான சேரனும தனனைத தொலைவிததோன் என்று இவனையே புகழநதுரைததான். இவவாறு இருவர்ககிடையே ஒருவனாய் உயர்நது விளஙகிய இவன் வடம வணணககன பெருஞ்சாத்தனாரால் பாராட்டிப பாடப பெறறான் (புறம். 125).

**தேர்வு** - அறிவு. 'இது கார்காலமனறு; மேகம தவறிப பெயத மழைககுத் தேர்வு - அறிவு - இலலாத பிடவும கொன்றையும் காநதளும மலர்ந்து விட்டன' என்று தலைவியிடம தோழி கூறினாள் (நற். 99 8).

**தேரதரனார்**-புலவர். இவரது இப்பெயாககுப பொருள் விளங்கவிலலை. மற்று இவா பெயா தாமோதரன என்ற பாட வேறுபாட்டுடனும காணபபடு கின்றது. குறுநதொகையின 195-ஆம பாடல் ஒனறே இவருடையதாய உளளது. தலைவனது பிரிவிடையாறறாத தலைவி பருவ வரவு கணடு மெலிநது கூறியதாக இவா அபபாடலை இயற்றியுள்ளார். 'நினைவுத துயரைச் சுமநது வரும் துன்பம மிகக இம்மாலைக் காலததில அசைநது வருதலையுடைய தெனறற காறறு எனனுடம்பினில பாயநது தீணடுவதனால இவ வுடம்பு வேறுபட்டொழிதலை அறியாத தலைவா இக்காலததுயான வருநதுவேன என்பதைஉணராத வராய எஙகுள்ளாரோ' எனறு தலைவி இரஙகு வதனை இவர் பாடல நனகு புனைகினறது.

**தேரர்** - தேரை உடையவர். மதுரையிலிருநது திருப பரஙகுனறததிறகு விரைநத ஓடடமுடைய தேரா - தேரை உடையவா - சிலா செனறனா (பரி 19 13).

**தேரன்** - தேரையுடையவன் (தோ). செல்லும ஒலியைக கேட்டால சோலையிலுள்ள வணடுகள் அஞசும எனக கருதிய தேரன - தேரையுடையவன் - மணிகளுடைய நாவினை ஒலியாமல் கட்டிவிடுவான (அகம. 4:12). குதிரைகளின வேகததைத தளாததிய தேரன, தலைவியின கண்களைப பனமுறையும நோககிச செனறான (அகம. 48:20,21).

**தேரான்** - தேரை உடையான. வையை நதிக் கரையில ஆடவரும் பெண்டிரும நீராடிக களித்த இடம விரைகின்ற தேரான - தேரினையுடையான (பாண்டியன)- போர்க்களம் போலக காட்சி

யளிக்கும் (பரி. 11:61). பாண்டியன கொடியை யுடைய தேரானாவான (பரி. 16.47) முருகவேள் கணடோர் நனறென்று ஆராய்தற்குக காரண மான தேரானாவான் (பரி 18:14) வையையில் நீராடிக களிபபதற்குச் சென்ற மககளோடு பொறறேரானும் (பாணடியன்) சென்றான் (பரி. தி. 2:26). மீன் கொடியையுடைய தேரானாகிய பாணடிய மன்னனுககுரிய பொதியில்மலை இருக் கும் வரையிலும மதுரை தன புகழில் குன்றாது (பரி தி. 8.3). பாணடியன ஒப்பனை செயயப் பட்ட தேரானாவான் (பரி தி. 9:3). பாண்டியன மீனக் கொடியையுடைய தேரானாவன் (பரி. தி. 10:3).

**தேரினர்** - தேரை உடையவர். சோழன் குராப்பள்ளித் துஞசிய பெருநதிருமாவளவனிடம் மதுரைக் குமர னார், பண்பறிநது ஒழுகாத கொடியசையும் தேரினர் - தேரையுடையவர்-என்பதற்காக மதிகக மாட்டோம் என்று கூறினார் (புறம. 197:1-8). வையை நீரிலே நீர் விளையாட்டு விளையாடுதற்கு ஆடவரும் பெணடிரும் நிறம் ஊட்டபபட்ட நல்ல நெட்டிகளாலே செய்யப்பட்ட தேரினராய்ச சென்றனர் (பரி, 6:35)

**தேருநர்** - தெளிகின்றவர். வையை நதிக்கு வந்த ஆட வரும் பெண்டிரும அழகு பெற்றது வையையாலா? வையை அழகு பெறறது இவர்களாலா? என்று தேருநருககும - தெளிகினறவர்ககும் - இது இயலாத காரியமாகும் (பரி. 22:32-34).

**தேரை** - தவளை. மழை பெய்தமையால நீர் நிரம்பிய பள்ளஙகளில் உள்ள பிளநத வாயை யுடைய தேரைகள் - தவளைகள் - இசைககருவிகள் ஒலிப்பது போல ஒலித்தன (அகம். 154.2; 301:19; ஐங். 453:1). சுனையினகண் உள்ள பிளநத வாயை யுடைய தேரைகள் கிளி கடி கருவியாகிய தட்டைப் பறையைப போல ஒலிததன (குறுந். 193:2). வேனிறகாலத்து வெபபததைத் தாங்க முடியாத தேரைகள் மணலுள் முழுகி மறைநது கிடந்தன (நற். 347:10). காாகாலததில நீர் நிலைகளில உள்ள தேரைகள் ஒலிககும் (ஐங் 468). புதுப பெயல் பெற்றமையால தேரை இனிதே ஒலித்தது (ஐங். 494.1). பிரிநதிருககினற தலைவி, ஆறறாமை யினால் 'ஞாயிறே! மதி ஆகாயததில தோனறுவது போல, நீ நீரினுள தோன்றுவாயானால், நீரினுள் இருக்கும தேரைகள இரை எனறு உனனை விழுஙகாமல பாதுகாததுக கொள்' எனறு கூறினாள் (கலி. 147:32).

**தேரைவாய்க்கிண்கிணி** - தவளையின் வாயைப் போன்ற குழந்தையின் சதங்கை என்ற அணி. தேரைவாய்க் கிண்கிணி - தவளைகளின் வாயைபபோன்ற குழந்தையின் சதங்கை என்ற அணி - குழந்தை களின் கால்களில ஒலிக்கும் (கலி 86.9).

**தேரோர்** - தேரினை உடையோர். தேரோர்க்கு - தேரினை உடையோர்க்கு - வெம்மையைச் செய்யும் வேலினை உடையவன் நலலியக் கோடன் (சிறு. 234). தலைவர் வெளிய பிடரிமயிர் பொலிவு பெறற புரவி பூட்டிய தேரோராவார் (நற். 135:9).

**தேரோன்** - தேரினை உடையோன். தேரோன - தேரினை உடையோன (தலைவன்) - கானலின்கண் நெய்தல சிதையுமாறு தேரில் ஊர்நது வந்தான (குறு. 227:4). 'குழநதையை ஈனற தலைவி தலைவனுககு ஏறறவளாகாள்; ஆகவே தேரோனைப பரததையரிடம் அழைத்துச் செல்' எனறு தோழி பாணனிடம் கூறினாள (நற். 380:6).

**தேவகுலத்தார்-புலவர்**. தேவகுலம்என்பது தேவாலயம், இறைவன கோயில் என்று பொருள்படுமாதலால் அககோயில் சார்பினால் இவர்க்கு இப்பெயர் அமைந்தது போலும். தலைவனொடு தனககமைந்த நட்பு நிலத்தினும் பெரிது; வானினும் உயர்ந்தது; கடல நீரினும் அளததற்கரிய ஆழமுடையது எனறு தலைவி, அவன சிறைப்புறத்தேயிருககையில இயற் பழிதத தோழிக்கு இயறபட மொழிவதாக இவர் பாடிய குறுந்தொகைபபாடல் (3) அமைந்துள்ளது. 'மலைப்பக்கததில் குறிஞ்சி மலர்களின் நிறைநத தேனைக கொண்டு வணடுகள் கூடு செய்தற கிடமான நாடன' எனறு தலைவி கூற்றில் இவர் தலைவனைக் குறிப்பிட்டு, வழிமுறையே பெருகி வந்த அன்பினைக் கொணடு பால்வரைத் தெய்வம் கூட்டி வளர்த்த அவ்விருவரின் காதலுறவைப் புலபபடுத்தும் நுடபம் உணர்நது பாராட்டத் தகுவதாம். அவ்வொரு பாடலே இவருடையதாய அமைந்துள்ளது.

**தேவர்** - 1. விண்ணுலகத்தவர். திருமாலை, வானு லகத்தை வாழிடமாகக் கொண்ட நான்கு வகை எண்ணினையுடைய முப்பத்துமூன்று வகைப்பட்ட தேவர்களும் விணணுலகத்தவரும் வழிபடுவர் (பரி. 3.28).

2. முனிவர். திருமாலை இநநிலவுலகத்துத் தேவர் களும் - முனிவர்களும் பாடித்துதிப்பர் (பரி. 3:27).

**தேவர் உலகம்-விண்ணுலகம்.** சோழனகுள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்த போது ஐயூர் முடவனார் அவன் தேவர் உலகம் - விண்ணுலகம- அடைந்து விட்டான் என்று வருந்திப்பாடினார் (புறம். 228:10-11).

**தேவனார் - புலவர்.** தேவன் என்ற தெய்வப் பொதுப் பெயரே இவர்க்கு இயற்பெயராய் அமைநதது. இவர் பாடியதாக நற்றிணையில் மட்டும் ஒரு பாடல் (227) உள்ளது. வரையாது நெடுஙகாலம். வந்தொழுகும் தலைவனை எதிர்பபட்டுத தோழி அலர் அறிவுறுததி வரைவு முடுககுவதாக இவர் அபபாடலை இயறறியுள்ளார். சோழரது ஆாக காட்டிலே தேரோடுகின்ற தெருவின ஆரவாரத்தை இவர் அலரின் ஆரவாரத்திறகு உவமித்துள்ளார்.

**தேவி - அரசி.** ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்னும சேரவரசன் வேளாவிககோமானுடைய தேவியின- அரசியின - மைந்தனாவான (பதி. ப. 6:2).

**தேள் - கொடுககினால் கொட்டி வருத்தும் நச்சுடை உயிரினம்.** தலைவன் காமவேட்கை கொண்டு தலைவியை வேண்டுமபோது, 'தேள் கடிககு - தேளின நஞ்சுக்கு - அப்பொழுதே மருந்திடுவது போல உன காம வேட்கையை உடனே போகக முடியுமா' என்று தலைவி வினவினாள் (கலி. 110:3).

**தேற்றம் - தெளிவு,** மறையோர் தேற்றம் - தெளிவு - பெற்றவர்களாய இருபபா (குறி.வெ. 2:2), தலைவன் தலைவிககு நலலனவறறைத தேற்றஞ் செய்து (தெளிவடையச் செய்து) கூடினான (ஐங. 23:3).

**தேற்றாதோன் - அறியாதவன்.** பிறரைக் குற்றங்கூறிப பேசுதலைத் தேற்றாதோன் - அறியாதவன் - எனறு, தலைவனைத் தலைவியும் தோழியும புகழநது பேசினா (கலி. 43:19).

**தேற்றான் - தெளிவில்லாதான்.** சகடத்தைச் செலுத்த வல்லவனால் குறித்த இடத்தை அடையமுடியும்; சகடம செலுத்துவதில் தேறறானால - தெளி வில்லாதானால - குறித்த இடத்தை அடைய முடியாது (புறம். 185:2-4). தலைவன் ஏமாற்றுவதில வலலவனும், தான கூறிய உறுதி மொழியைக் காபபதில ஒருசிறிதும் தேற்றானும் - தெளிவில்லா தானும - ஆவான் (ஐங். 37:2-4).

**தேற்றாள் - தெளியாதவள்.** (அறியாதவள்). தலைவியே, நீ தினையை நன்கு காவல செய்யா யாயின, கிளியை ஓட்டுவதற்குத் தேறறாள் - அறியாதவள் - என எண்ணி வேறு யாரையாவது தாய் அனுப்பி விடுவாள் என்று தோழி கூறினாள் (அகம். 28:10-13). கள்ளுண்ட மயக்கத்தால ஒருததி மொய்க்கும் வண்டுகளை ஓட்டும் இடம் தேற்றா ளாயக கைசோர்நதாள் (கலி. 92:48-50). நீரில விழுநதவளைக காககக முயனறேன, அதற்குள் அவளே எழுந்து சென்றுவிட்டாள்; அவள் காம நுகர்சசி தேற்றாள் என்று தலைவன் தலைவியிடம கூறினான் (பரி. 6:88-90).

**தேறல் - 1. மது (கள்).** பாண்டியன தலையாலங் கானத்துச செருவெனற நெடுஞ்செழியனை மாங்குடி கிழார், 'மகளிர பொற்கலததில பெயது கொடுத்த குளிர்நத நறுநாறறததையுடைய தேறலை - மதுவை - உண்டு நீ வாழவாயாக' என வாழத்தினார் (புறம். 24.31-32). பாணடியன இலவந்திகைப பள்ளித் துஞ்சிய நனமாறனை, 'யவனரால கொண்டுவரபபட்ட குளிர்ந்த நறு நாற்றததையுடைய தேறலைப் பொறகலததில் மகளிர் கொடுப்ப உண்டு வாழவாயாக' என்று நககீரனார் வாழததினார் (புறம். 56:18-20). சேரமான பெருஞ்சேரலாதன், புறபபுணணிறகு நாணி வடககிருந்தானிடம, 'நீ இலலாததனால் சுற்றததார் வண்டாாநத தேறலை உணணா தொழிவா' எனறு கழாததலையாா கூறினாா (புறம். 65.3). வேள்பாரி இறநத பொழுது' நிலததினகண புதைக்கபபட்டு முறறிய தேறலை இனி குடிதோறுங கொடுபபோர் யாா' எனக கபிலா கையறறுப பாடினார் (புறம. 120:12). ஆய் அணடிரனுடைய மலையில் வாழகினற குறவர், மூஙகிற குழாயிலிருநது முற்றிய தேறலை உண்டு வேஙகை மரததின முற்றததில குரவை யாடுவர் (புறம. 129 1-3). பிடடஙகொறறன பாணர்க்கு நாரால வடிகட்டிய விருமபததகக கள்ளாகிய தேறலைக் கொடுததான் (புறம. 170 12, 13). ஓா அரசனைபபறறி, அவனுடைய வீரன, சிறநத மதுவை எஙகளுககு அளிததுவிட்டு, சிறபபில்லாத தேறலை அரசன உணபான என்று கூறிச சிறபபிததான (புறம.298.1,2). தருமபுததிரன என்னும அரசனை, 'மகளிர் சிறநத கடடேறலைப பொறகலததில தர உண்டு செலவச சிறபபுடன விளஙகுவாயாக' எனறு கோதமனார் வாழததினார் (புறம். 366.16). சேரமான மாரிவெணகோவும, பாணடியன கானபபேர்தநத உககிரப பெரு வழுதியும், சோழன இராசசூயம வேடட பெருநற கிள்ளியும் ஒருங்கிருநதபொழுது, மகிழநத ஔவையார் மகளிர் பொறகலததில் கொடுதத

நாரால வடிதத நல்ல தேறலை உண்டு விணமீன களினும, மழைததுளிகளினும நீணடநாள பெற்று நீவிர வாழவீராக என்று வாழ்த்தினார் (புறம். 367: 6,7). ஓயமான் நலலியாதன் தமககுப பாம்பு சீறினாற போனறு முழுக்கமிடும நலல தேறலைக் கொடுததான எனறு நனனாகனார கூறினார் (புறம. 376:14). வாட்டாறறு எழினியாதனின் நாட்டில் கோசா இனிமையான தேறலை உணடு குரவையாடுவா (புறம 396:7-9). சோழன் குள முறறத்துததுஞ்சிய கிள்ளிவளவன, மணிகள் இழைதத வள்ளததில் நிறையப பெயத மணங் கமழும தேறலைத தமக்கு அளித்தான என எருக் காட்டூர்த தாயஙகணணனார் கூறினார் (புறம். 397:14). பாயல்மலைககு உரியவனான சேரமான வஞ்சன, உணணுகின்றவரின நிழல் தோன்றும் படியான தெளிநத தேறலைத தமக்குக் கொடுத் தான எனத திருத்தாமனார கூறினார் (புறம். 398: 22, 23). இமயவரமபன் நெடுஞ்சேரலாதன், மலரருமபு பெய்து பககுவம் செய்யப்பட்ட தேறலைத் தங்களுககுக் கொடுததான் எனக் குமட் டூர்க் கணணனார கூறினார் (பதி. 12:18). சோழன் கரிகாற பெருவளததான், பெறுதற்கரிய பொற கலத்தில் வேணடிய அளவு உண்ணுங்கள் என்று கூறி இனிய மலர் மணம் கமழகின்ற தேறலை நாள தோறும உணணச் செயதான என்று முடத்தாமக் கணணியாா கூறினார் (பொரு. 156-158). ஆறறுப் படுததும பாணன, வறுமையுறற பாணனிடம், நீவிா நலலியக கோடனைக காணச் செல்லும் வழியில எயிறபட்டினத்தை அடைவீர்களானால் அஙகு அழகிய நுளைமகள் காயசசி அரித்த நல்ல தேறலைப பரதவர் நும்வாயிலே ஊட்டுவர் என்று கூறினான் (சிறு. 158,159). ஓயமானநாட்டு நலலியக் கோடன பரிசிலாககுப் பாமபினது நஞ்சு ஏறி மயககினாற் போன்று மயககும் தேறலைத் தானே இருநது உணணச் செய்வான் (சிறு. 237). மதுரை நகரின புறத்திலே யானைப போரைக் காண வந்தவர் கடிய களளின் தேறலை உண்டு திரிவர் (மது. 599). தலையாலஙகானததுச் செருவெனற நெடுஞ்செழியனைப பொனனால ஆகிய கலததில பெயது மகளிா கொடுதத மணம நாறுகினற தேறலை உணடு நாள்தோறும் மகிழ்வோடிருப பாயாக எனறு மாஙகுடி மருதனார் வாழததினார் (மது 779 - 781). மதுரை நகரில பருத்த உடலினையும மிகக வலிமையினையுமுடைய கீழ மக்கள, மாலையில வணடுகள் மொயககும தேறலை உணடு தமமேல்விழும் மழைததுளிக ளுக்கும் குளிருககும் அஞ்சாராயச சுறறித்திரிவர் (நெடு. 32 - 34) மாமபழததினாலும, தேனடை யாலும், பலாப்பழத்தினாலும உண்டான தேறலை நீரெனறு கருதி உணடமயில், கழாய்க கயிற்றில் ஏறி ஆடுகினறவள் தாளந்தவற, அடி தளருமாறு போலத் தளரும் (குறி. 188-194). பரிசு பெற்று வரும் கூத்தன வறுமையுற்ற கூத்தனிடம் நனனன வேண்மானைக காணப்போகும் நீவிர் போகும் வழியில் கள்விறகும் பழையருடைய மகளிா களிபபு மிகுதியால் அசையும மிடாவி னினறும் வார்த்த பசிய முளையாலாக்கின தேறலை உண்டு சென்மின எனறான (மலை. 463). தலைவியின் உறவினர் அரும்பினினறும் உணடாகிய கள்ளின் தேறலைப் பருகினர் (அகம். 221:1). உழததியர் தெளிந்த கள்ளாகிய தேறலைப் பருகிக காஞ்சிமரததின நிழலினகண் குரவைககூத்தாடுவர் (அகம. 336:6). பரதவர்க்கும் உழவர்க்கும் போர் உண்டாகியபொழுது அபபோரைப் பெரியோர் விலககிவிட்டுக குறறம் இலலாத பரதவா மகிழும் படி தேனால் உணடாகிய தேறலை அளிப்பர் (அகம். 366:8-11). மீன் வேட்டையாடிவிட்டு வந்த பரதவர் தேன மணம் கமழும் தேறலைப் புன்னை மரநிழலில் உறவினருடன அருந்துவர் (நற். 388:7, 8). வெணமையான பகனறைப்பூவோடு சேர்ந் திருந்த தாமரை மொட்டு, வெள்ளிக்கிண்ணததில வார்ததிருநத குளிா்ந்த நறிய தேறலைக் குடித்துக் களிகொண்ட மங்கையின முகம்போல மலர்ந்தது (கலி. 73:2-5). தலைவன் ஒருவன பரததையின் இலலில களிபபுமிகக பழத்தேனால உண்டான தேறலை உணணாமல் பரததையைக் கூடிக் களிபபதிலேயே நாட்டமாய் இருநதான (பரி. 16: 28).

2. தேன். வாழைக்கனியிலும் பலாக்கனியிலும் உணடாகிய தேறலை - தேனை - குரஙகு உணட மயக்கத்தில சந்தன மரததில ஏறமுடியாமல் மலர்ப் படுககையிலேயே உறங்கும் (அகம். 2:1-7). குறவன், இனிய பலாபபழததின் சுளையால் உணடாகிய தேறலை இளையருடன சேர்ந்து பருகி வேட்டைககுச செல்வான் (அகம். 182:3, 4).

**தேறலர் – 1.** களளை உடையவர். தந்துமாறன் எனனும் வளளல தண்ணிய தேறலரை - கள்ளை உடையவரை - பாதுகாததான (புறம். 360:4).

**தேறியாள் -** தெளிநதவள். தலைவன கூறிய சொற்களை விருபபமெனத் தேறியாள் - தெளிந் தவள் - தலைவி (கலி. 100:9).

**தேறு -** தேற்றாமரம். உழவருடைய இசையொலியைக் கேட்டு, அடும்பு, பகன்றை, புன்னை முதலிய

மரங்கள் உள்ள சோலையில் தங்கும் நாரைகள், வெறுப்பின தேறு - தேற்றாமரம் - உள்ள சோலையில் போய்த் தங்கும் (பொரு. 200).

**தேறுதல் - கருதுதல்,** தலைவன் கூறுவனவற்றை யெல்லாம் மெய்யென்றே தலைவி தேறுதலை - கருதுதலை - கொண்டு அவன் அவளை வஞ்சிக்கின்றான் என்று தோழி கூறினாள் (ஐங. 267:5).

**தேன் - 1. பூவிலிருந்து ஊறும் தீஞ்சாறு.** ஈக்கள் மொய்க்கும் மதநீரையுடைய யானை தேன் சிதைந்த மலைபோலத் தோன்றும் (புறம். 22:5-8). பாணர் சுற்றத்தோடு வரகரிசியில் பாலைக் கலந்து சமைத்த சோற்றில் தேனையும் கலந்து உண்ணுவர் (புறம். 34:9-14). சோழநாட்டு உழவர், கரும்பிலிருந்து கொண்டுவரப்பட்ட தேனை, வறண்ட நிலப்பகுதியிலிருந்து வரும் தம் உறவினர்களுக்கு அளிப்பர் (புறம். 42: 15, 17). பாரிவள்ளலின் பறம்புமலை நன்கு முதிர்ந்த தேனைச் சொரியும (புறம். 109:8). ஓய்மான் நல்லியக் கோடனது நாட்டில், விளையாட்டுச் சிறுமியர் கேழற்பன்றி உழுத சேற்றிலிருந்து ஆமை முட்டைகளைத் தேன் மணம வீசும்படியான ஆம்பல் கிழங்கோடு எடுப்பர் (புறம். 176:3,4). சோழநாட்டில வாழும் மக்கள் தேனையும் கிழங்கையும் விற்று அவற்றிற்கு மாறாக மீன் நெய்யையும் நறவையுங்கொண்டு சென்றனர் (பொரு. 214,215). மதுரையில், வண்டுகள் படியுமாறு நன்கு முற்றிய தேன் இருந்த அழகிய பூக்களோடு புகையினையும் பலியாகக் கொண்டு சாவக நோன்பியர் அருகனை வாழ்த்துவர் (மது. 475,476). சிறுகுடிக் கானவர் தேனினர் (மலை. 152,155). குறத்தியர் தேன் மணம் வீசும் கூந்தலையுடையவர் (அகம். 58:5;129:15). தலைவன தேனொழுகும் தாரணிந்த மார்பினன் (அகம. 76:7). மலையில உள்ள வண்டுகள் காந்தள் பூவின் தேனை உண்டு அதன் குவிந்த குலையில் உறங்கும் (அகம். 132:12). வேட்டுவன கவணால் எறிந்த கல வேங்கை மரத்தின் பூக்களைச் சிதறித் தேனையும் அழிக்கும் (அகம். 292:10-13). குறவரின முன்றிலில் உள்ள மாமரக் கனியினுடைய சாறு தேன் போன்று இனிமையுடையது (அகம். 348:1,2). மலையில உள்ள குறிஞ்சிப்பூக்களின் தேனை வணடுகள் எடுக்கும (குறு. 3:4). செவ்விய தேனை விரும்பிப பல வணடுக் கூட்டங்கள் உலாவும் (குறு. 175:1). பலமுறை உணடால் தேன் கூடத் தெவிட்டும் (குறு. 354:2). தாமரையின் தண்ணிய தாதினையும் சந்தனத்தின தாதினையும் கொண்டு அசசந்தனமரத்தின்மேலே வண்டுகள் இழைத்த இனிய தேன்போலத் தலைவனின நட்பு மிகவும் மேலானது என்று தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 1.3-5). கழிக்கரைச் சோலையில் புன்னையின காம்பற்ற மலா மிகுதியாக உதிர்ந்ததனால தேன மணம் எங்கும் வீசும் (நற். 76:7). வேங்கை மரக் கிளைகளில் உள்ள அடைகளில் ஈக்கள மொய்த்ததால கசிந்து வழிந்த தேனைக் குறச்சிறுவர் வழித்துண்டு எஞ்சியதைக் குரங்குக் குட்டி நக்கும (நற். 168:2-5). தலைமகனுடன சென்ற தலைவியை நினைந்து நற்றாய, 'நானும செவிலியும பாலொடு தேனைக் கலந்து ஊட்டினாலும உண்ண மாட்டாத, சிறியவள் மனையறம் ஆற்ற வல்லளோ' என அஞ்சிக் கூறினாள (நற். 179:5-9). கொல்லி மலையிலுள்ள காந்தட்பூக்களின தேனை வண்டுகள் கொண்டுவந்து அடைகளில் சேர்க்கும (நற். 185: 8-10). கானற் சோலையின் மணற்பரப்பில் தேன நிறைந்த ஞாழல் பூக்கள் பரவிக்கிடக்கும (நற். 191:1). ஆண்யானை வேங்கை மரத்தைக் கீழே தள்ளி அதன பூக்களிலே தேனைச் சேர்க்கின்ற ஈக்களெல்லாம பறந்தோடுமாறு பூக்களையும தழையையும் பறித்துத் தன் கன்றுக்கும் பிடிக்கும ஊட்டும் (நற். 202:3-6). சந்தன மரத்தின கிளைகளிலே சுற்றியிருக்கும் தமாலக் கொடியைத் தேன் எடுக்கவரும் குறவர்கள அறுத்துச் செல்வர் (நற். 292: 2, 3). கானற்சோலையிலுள்ள பனை மரத்தின தேன நிறைந்து முற்றிக்கனிந்து அழிந்த பனம்பழம், மூக்கு இற்றுச் சேற்றிலே விழுந்து புதையுண்டது (நற். 372:2-4). மனையறம மிக்க தலைவி, தன கணவனின ஊரிலுள்ள நீர், மானுண்ட சிறிய கலங்கல் நீரேயானாலும், தாய வீட்டின் தேன் கலந்த பாலினும இனிது என்றாள் (ஐங். 203:2-5) பலாப்பழம் மலை வெடிப்பிலுள்ள முழையின்கண் வீழ்ந்ததனால தேன நிறைந்த அடை கிழிந்து சிதைந்தது (ஐங. 214: 2, 3). புனத்திலே அகிலபுகைமறைத்ததனால ஒளி குன்றிய நிலவினை மலை முகட்டில இருக்கும தேன நிறைந்துள்ள அடை என்று கருதிக் குறவர் அதனை எடுக்க முயல்வர் (கலி. 39 7-9). முருகனைத் தொழுகின்ற கொடிச்சியரின கைகள் போன்ற காந்தள் பூக்களில இருக்கும தேன ஒழுகும்படி அப்பூக்கள் அசையும (கலி. 40:12,13) வையை யாற்றில் நீராடச் சென்றவருட் சிலர், முதல நாள் இரவில் ஊடல கொண்டதை நினைந்து நினைந்து, அந்த இனபமாகிய தேனைப பருகி நின்றனர் (பரி. 10.32). வையையில நீராடிவிட்டு, மதுரைக்குத் திரும்பும் மகளிர், கூந்தலின்கண் நறுமணங்கமழும தேனை ஈட்டும் வணடுகள் ஓசையிடப் புறப்பட்டனர் (பரி. 10:118). வையை

யாற்றின பூமபொழிலகளிலும், குளஙகளிலும், ஆறறிடைககுறைகளிலும வணடுகள் தேனுணடு களிதது இசைபாடின (பரி. 16.17,18). வையை யாறறில மகளிா நீராடுமபொழுது, அவர்தம் கூநதலினினறும விழுகினற மலரிலிருந்து தேன சொட்டியது (பரி. 16 42,43). வையையின வெள்ள நீரினகண மலாகள தரும் தேன மணமும் கலநது வநதது (பரி. 20.9). திருபபரஙகுனறததில் மாணிக்கம போனற சிவநத நிறமுடைய தேனால் உணடாகிய மதுவை உணடமையால் களிப்பு மிகுநது பூஙகொடிபோல அசைநது ஒருததி ஆடிக கொணடிருநதாள் (பரி. 21:57,59).

2 தேனடை எயினருடைய அரணகளிலே, மலையில் தொஙகும தேன - தேனடை - போனறு அம்புக் கட்டுககள் குதையோடு தொஙகும (பெரு. 123). கடலால சூழபபட்ட இந்த உலகம் தேன் தொஙகும்படியான உயர்நத உசசிகளை உடைய மலைகள நிறைநததாகும் (மது. 3,4). தோழி தலைவனிடம, 'எமது தோட்டததிறகு அடுத்துள்ள வட்டமான தேன வைககப்பெறற உயாந்த மலைக்கண வருவாயாக' எனறாள் (அகம். 18:4). குறவர் தேனை அறுத்து எடுகக முடியாத அரிய வழிகளமைநத உசசியையுடையது பொதியமலை (அகம. 322:12-14). பாழி என்னும மலை, தேன் எங்கும நிறைந்ததாய இருககும (அகம. 372:2,3). புல்லி எனபானுக்குரிய மலையில தேன எங்கும் தொங்கிக கொணடிருககும் (அகம. 393:18,19). உயர்நத மலையின் உசசியிலுள்ள தேனைக கணட முடவன அதனை நினைதது உள்ளஙகையை நக்குவான (குறு. 60:2-4) மலையின உச்சியிலுள்ள தேன் யாருககும் பயன்படாமல முதிர்நது வீழநது அழிநது விடும் (குறு. 176.4). உயர்நத மலையில உள்ள தேனை மூஙகில்கள் அசைநதாடி கிழித்து விடும (குறு. 179:4,5). மலையின் உசசியில உள்ள தேனை எடுபபதறகுப் பழைய ஏணியைக கொண்டு ஏறிய மடவோன அசசங்கொணடு இடையில இறஙகிவிடுவான (குறு. 273:5,6) மலைகளில் தேன் தொஙகிககொணடிருககும (நற. 328;1). அருவி ஆரவாரிதது வீழும மலையில் தேன் தூஙகும் (நற். 396.2) குரஙகுககுட்டி, ஏறுதற்கரிய மலையின்கண் உள்ள தேனை விரும்பி அதிலுள்ள ஈக்களை எழுபபி விட்டு, அவ்வீக்களின கொட்டுககு அஞ்சி அருகில உளள மரககிளைகளில தாவி ஓடும் (ஐங். 272:2,3). தலைவியினதாய தநதையர், தலைவனுககு அவளைத தாராது மாறறானுககு மணம முடிககும அறமலலாச செயலைச செயவாாகளானால மலை முகட்டில தேன தொடா என்று தோழி கூறினாள் (கலி.39:12). நீராடுவாா் புல்லக் குழைந்து வடுப்படும் மான் மதசசாநது (கததூரிக் குழம்பு) பொருந்திய தலைவனின்மார்புததோறறம, மூங்கிலால் கிழிக்கப் பட்ட தேன் உடைந்து ஒழுகுகின்ற மலையைப போன்றிருக்கும் (பரி. 16:44-46). தேன் பொருந்திய குவடுகளையுடைய சையமலையின்கண மேகம மழையை மிகுதியாகப் பெய்தது (பரி. தி. 1:1,2).

3. தேனீ. தேனீ - மலையென்று கருதிப பெரிய யானை மேல வந்து தங்கும் (புறம். 17 34,35). நெறபயிரின கணுவிடங்களில கட்டிய அடைகளி லிருநத தேன, நெல்லரியும் தொழுவர் இசைககும் தண்ணுமை ஓசையைக கேட்டு அஞ்சி வெகுணடு பறந்தோடும் (புறம. 348:1,2). கரிகாலனின புனல் நாட்டில் உள்ள வயலகளின் நெல் அரிகளில் தேன் அடைகட்டும் (பொரு. வெ. 3:3).

4. வண்டு. கரிய நீரோடையில் மலர்நத நெயதற் பூவின் மணத்தை அமிழ்ததனைப போல விரும்பி அதன் தாதினைத தேன - வணடு-உணணும (அகம. 170:2). பாதிரி மலாகளிலும் புனலியின் மலர் களிலும் குராவினது மலர்களிலும் தேன ஒலிக்கும் (அகம. 237:1-4). தேன் இசைபாடும் கானற சோலையில பரதவர் முத்துககளைப் பங்கிட்டுக கொள்வர் (அகம். 280:12-14). சேரமனனன தேன் முரலும்படியான மலர்மாலையை அணிந்திருந்தான் (அகம. 381.15). வேனிலால் வெதும்பிய மரா மரததினது மலர்ந்த ஒற்றைப பூஙகொத்தைத் தேன ஊதி, அதில் ஒன்றும் இனமையால் வேற்றிடம நாடும (குறு. 211.4-6). புலியின வரி போனற மணலதிடரில புன்னை மலர்களிலிருந்து உதிர்நத தாதினைத் தேன் உணணும் (நற். 323:7,8). மலையில தேன் முரலுதல் (ஐங். 292:12). திருமருதநதுறையில் எல்லாத் திக்குகளிலும் தேன ஆரவாரிக்கும (கலி. 26:13). மதுரையில் இள வேனிற்காலததில் முலலைமலர்களிலே தேன் ஆர வாரிககும (கலி. 30:11,12). இளவேனிறகாலததில் குளங்கள் சூழநத சோலையில தேன், வாச்சியங்கள் ஒலிப்பன போல இம்மெனனும் ஓசையை எழுபபும் (கலி. 36:6). கானவன் கவணில வைதது அடிககும கலலானது தேனால கட்டப்பட்ட அடையைத் துளைததுச செலலும் (கலி. 41:13). மலையிலிருநது அருவிநீர் விழுவதுபோல, யானையின காதுகளி லிருந்து வழியும் மதநீரைத தேன மொய்க்கும (கலி. 48:2). காவிலே தேனினம் ஒலிககும் (கலி. 92:66) சோலையில புன்னை மலர்களில் அமாந்து தேன் இசை முரலும் (கலி. 131 45). வையையாறறின புது வெள்ளததில் மலர்கள் மலிந்திருபபதால

திருப்பதால் எப்பொழுதும் தேன் இசை பாடிக் கொண்டிருக்கும் (பரி. 16:18).

4. **மணம்.** தோழி தலைவியைத் 'தேன் - மணம் - கமழும் கூந்தலையுடையவளே' என்று அழைத்தாள் (கலி. 40.9).

**தேனூர்** - ஓர் ஊரின் பெயர். பாண்டிய நாட்டிலுள்ள தேனூர், கோடைககாலத்திலும் குளிர்நத நீரை யுடையதாயிருக்கும் (ஐங். 54:3). தேனூர், கரும் பாட்டும் ஆலைப்பொறி ஆண்யானையின பிளிற் றொலிக்கு மாறாக ஒலிக்கும் வளமுடையதாகும (ஐங் 55:1,2) தேனூர் கதிரவன் ஒளியைபபோன்ற வேள்வித தீயினையும ஆம்பல மலர் பூததிருககும் படியான அழகிய வயலகளையும் உடையது (ஐங. 57:1,2).

**தேனெய்** - தேனாகிய நெய். கரிகால் வளவனின சோழநாட்டில் தேனெய்யுடன - தேனாகிய நெய் யுடன - கிழங்கை விற்ற குறிஞ்சி நிலமக்கள மருத நிலப்பொருளான மீன் நெயயுடன மதுவையும் கொண்டு சென்றனர் (பொரு. 214).

# தை

**தைஇ** - தைத்திங்கள். பகன்றையின அரும்புகள் மழைத்துளிகள் வீசுவதால் மலரும் காலமாகிய குளிர்நத பெயல் நின்ற தைஇயாகிய - தைததிங்க ளாகிய - முன்பனியின் கடைநாளிலே வாடையுடன் கூடிய விடியற்காலையில் மாமழை, தென்புலம படர்ந்தது (அகம. 24:3-8). பிரிந்து சென்ற தலைவர் தைஇ நின்ற குளிர்ந்த பெயலின இறுதி நாட்களில் விரைநது வருவர் (அகம. 269:13,14,25).

**தைஇத்திங்கள் – தைத்திங்கள்.** தைஇத்திங்களின் கண குளிர்ந்த பொய்கையைப போலக் கொள்ளக் கொள்ளத தொலையாத சோற்றையுடையது அகன்ற நகர் (புறம. 70:6,7). 'பாரியின பறமபு மலையிலுள்ள தைஇததிங்களில் குளிர்நதனவாகிய சுனைநீரைத தந்தாலும் வெப்பம் உடையதாய உவர்ப்புச் சுவை உள்ளது என்று கூறுவீர' என்று வாயில் வேண்டிவநத தலைவற்குத தோழி கூறினாள் (குறு. 196:3-5). 'தைஇத் திங்களில தண்ணிய நீர்நிலையிலாடுகின்ற இளமகளே யானுற்ற நோய்க்கு மருநது' எனத் தலைவன கூறினான (நற். 80:7-9).

**தைந்நீர்** - தைமாதத்துநீர். வையையில நீராடுவோர், 'தைநநீரே! யாம் ஆடும் அளவினையாய நிறம தெளிநதாய்; அதனால நீ தககாய' என மகிழநது கூறினர் (பரி. 11 115).

**தைந்நீராடல்/தைந்நீராடுதல்** – தைமாதத்தில் கன்னிப் பெண்கள் நீராடும் நோன்பு. 'இவனுற்ற நோய யாதெனறு கேட்கும் அருள் இவளுககிலலை எனறு கூறி அயலார் பழிககும்போது, இளைய மகளிர்கு நடுவே நின்று அணிகளால பொலிந்து நீ தைந நீராடிய தவத்தின பயனைப பெறுவையோ; பெறாயகாண' எனறு தலைவன தலைவியிடம் கூறினான் (கலி. 59:10-13). 'புலன்களை அடககிச் செயயும தவத்தை அடுத்தடுததுச் செயததாலோ, தாயின அருகே நின்று தவமாகிய தைநநீராடலை நினகண் பெற்றது' எனததோழி வையையை நோககிக கூறினாள் (பரி. 11.90,91). 'தைந நீராடலை முனபு செயத தவததினாலே இப பிறபபிற் பெற்றோம; அதனை மறுபிறபபிலும பெறுவோமாக' எனத தோழி தலைவன கேட்பக் கூறினாள் (பரி. 11.134-139).

**தைப்பு** - தைத்தல். செவ்வேள தம தாமரையடியில் அணிநதது சருமததால் தைபபு-தைததல-அமைநத அடையற செருப்பாகும (பரி 21.3-7).

**தையல்** - 1. **பெண்.** 'கரியகணணையுடைய நெருஙகிய விருப்பத்தையுண்டாககும் முலைகளையும மையல விளைவிககும் பார்வையினையும உடைய தையலை விரும்பியவா அளிககத்தககார' என மகடபாற் காஞ்சிததுறையில அடைநெடுங கலவியார் பாடுவா (புறம. 345: 10-12). 'நம தலைவர் பலபிறவி களிலும தொடாநதுவரும நடபினால, குறறமறற நெஞ்சததால கலநதோரபோலத 'தையல, யாம பிரியேம' எனறு பொயமிக்க உள்ளததால யாம விருமபுமாறு கூறினா' எனத தலைவி கூறினாள் (அகம. 205:1-4). 'மாலைககாலததே, துனபமுடைய நெஞ்சினளாய தையல உவபபப பாகனே! நெடுத தேரை விரைநது செலுததுக' எனத தலைவன உரைததான (ஐங். 489 2-5).

2. **ஒப்பனை.** அநதணரது வேதநெறியால வளாநத அசைகின்ற அழலின்கணணே தையல - ஒபபனை - உடைய மகளிர் தம ஈரணியைப் புலர்ததுவா (பரி. 11:84-86). பொனனாற செயத பாவை போனற தையலினையும (கட்டழகினையும) விரும்பபபடும மென்மைத தன்மையினையும உடையவள தலைவி (அகம. 392.5-7).

**தையலவர்** – மகளிர். 'திருமாலிருங் குன்றத்தை, நும் தையலவரோடும (மகளிரொடும) இருமுதுகுரவ ரோடும குழவிகளோடும சுற்றத்தோடும் கூடத் தெய்வமாக மதித்துத திசைநோககித தொழுது செனமின' எனப பாடுவர் இளம்பெருவழுதியார் (பரி. 15:45-48).

**தையலாய்** – அழகுடையாய் (விளி). 'தையலாய்! முருகனை ஏத்துவாமபோல, அழகுபெறற மேகம் படிநதுளள உச்சியினையுடைய மலைநாடனைப் பாடுவோம' எனத தோழி கூறினாள் (கலி. 43:5-7). 'தையலாய' தலைவன சொலலியவற்றுக்கெல்லாம மாறாய யான் மறுகக, இனிககளவு நிகழாது எனறு அலமநதான போல மீணடான்' எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (கலி. 111:19-21).

**தையலாள்** – அழகுடையாள். தையலாள் – அழகுடை யாள் – தன மெயயிடததே அழகுணடாக, மனத் தினிடத்தே நகையுண்டாக நல்லெழில் மார் பனிடததே சேர்நதாள் (கலி. 147:69-71).

**தையால்** – அழகுடையவளே (விளி). தினைப்புனத்தே ஊசலாடிக கொணடிருந்த போது தலைவன் வரத் தோழி 'ஐய, சிறிது ஆட்டிவிடு' எனக்கூற அவனும் 'தையால! -அழகுடையவளே – நன்று' என ஊககி னான எனத தோழி படைத்துக் கூறினாள் (கலி. 37:14-16). இரவிலே தனியாக நின்ற தனனிடம் முடமுது பார்ப்பான 'தையால்! தம்பலம் தின்றியோ' என வநது கேட்டதாகத் தோழி படைததுக கூறினாள் (கலி. 65.13). 'மனத்தில அறனிலலாதவனாகிய தலைவன், தையால்! நினனைப் பிரியேன் நீ தெளி'என்று தெளிவிதது எனனை முயங்கினான்' எனறு தலைவி கூறினாள் (கலி. 144.35, 36).

**தையூண் இருக்கை** – நோன்பியர் தைந் நீராடி நோன்பு முறறி இருந்து உண்ணுதல. மநதி, தினைக்கதிர் களைக் கொயது கடுவனோடு மலைமீதேறிக் கவுள் நிறைய உண்டு மழைபெய்தலால் நனைநத புறத் தவாயிருத்தல், நோனபுடையாா தையூண இருககை – தைந நீராடி நோனபு முறறியிருநது உணணுதல்- போலத தோனறும (நற். 22.2-7.).

# தொ

**தொகுதி** – கூட்டம். நரம்பு ஆரவாரிததாற போன்ற மிடறறையுடைய தொகுதியோடு – கூட்டததோடு (பாடுமகளிரோடு) – உளளான முருகன் (முரு. 212-214). நாரையினம மணல்மேட்டில் ஏறியிருந்து அரசருடைய படையினது தொகுதி போல விளங்கித் தோனறும் (நற். 291:2-4).

**தொகுநிலை** – கூட்டம். வற்றல் மரங்களின் நிழலில் தங்கி வாடிய மரலைக் கவவிய செயலற்ற மானின தொகுநிலையில் – கூட்டத்தில் – புகுந்து செந்நாய் தாககியது (அகம். 199:5-9).

**தொகை** – 1. திரள். கோடியாா தலையினைச் சேர்த்துக் கட்டிய பல தொகையாகிய – திரளாகிய – வாசசி யஙகளையுடைய பையினர் (அகம. 301:22,23). பரதவர் இறாவோடு தொகையாயுள்ள மீனகளைப பிடிககப் படகேறிச செலலுவர் (நற். 111:2,6).

2 தொருத்துக்கூறல. தொகையினையும்-தொகுததுக் கூறலையும் – வகுத்துக கூறலையும சானறோர் அறிவர் (கலி. 39.47).

**தொட்டி** – பத்தர். ஐம்புலத்தையும் நுகர்வனவாகிய காமுகப பனறிகள நுகரும் இதழ வாயையுடைய தொட்டி – பததா – எனப பரததையர் சுட்டப் பெறுவா (பரி. 20:50,51).

**தொடங்கற்கண் தோன்றிய முதியவன்** – நான்முகன். தொடங்கற்கண தோனறிய முதியவன-நான்முகன் – முதலிய தேவர்கள், சிவனிடம் அவுணரது வலிமையைக கெடுததறகு வநது இரநதனர் (கலி. 2:1,2).

**தொடர்** – 1. சங்கிலி. பகைவர் வாளாற்படாது தொடரால – சங்கிலியால் – பிணிக்கப்பட்ட நாய் போலச் சேரமான் பிணிககப்படடான் (புறம். 74). மறவனொருவன், வீரா தடுககவும் அவரைக் கடநது, தொடராகிய தளை பூணடு செல்லும் யானை போலக் கொலையுணட மறவரது குடல் தன் காலைத் தளைப்பப் பகைவரால வளைப் புண்டிருககும தோழனபால் வநதான் (புறம. 275:6-9). வீடு தொடராலே நாயகளைக கட்டிவைத்த காவலையுடையது (பெரு. 125). யவனர் புலித் தொடர் விடபபடட புனைதல மாட்சிமைப்பட்டது நலல இலலம் (முலலை. 62). யானை, மெல்லிய பிணிபபினையுடைய வலிய தொடரைக் காவ லெனறு பேணாது அது கட்டின தறியை முறித்துக் கம்பததைக கைவிட்டுச் சுழலும் (மது. 382,383). 'வேற்று நாட்டிடததே போய, நின்னைப் பிணித்த ஆசையாகிய தொடரை அறுத்துத தததுவப்

பொருளைக் கூடிய கூட்டத்தாலே தலைவியின இளமையை மீட்டுத் தருதல் பொருந்துமோ, எனத் தோழி தலைவனை வினவினாள் (கலி. 15:18,19). பரத்தையாகிய புத்தியானை, மனைவாசலில் கதவ மாகிய கம்பத்தைச சேர்நது நின்று அதனோடு துவககுண்டதே தனக்குத தொடராகக் கட்டுணடு ஒருவரும போகாதபடி காலைத் தடுத்து வீழககும் (கலி. 97:16-18). யானைகளை வழியினின்றும் அகற்றி அதன் காலில் உள்ள தொடரை ஆட்டிக் கயிற்றால மரங்களில கட்டுவர் (பரி. 19:30,31).

2. **பிணிப்பு/தொடர்பு.** பரத்தை, தனது முன் கையினால் பிணிதத நெடிய தொடரினை - பிணிபபினை - தலைவன விட்டுச் சென்ற அளவிற்கே வெகுண்டனளாய அழுதாள (அகம். 176:16-18). 'நும்முடன் இவட்குத் தொடர் மிகும் காலததே நுகராமையாகிய துன்பம் இடையே வந்தால் அதனை யாம் கூறுவதற்கு என்ன இருககிறது' எனத தோழி கூறினாள் (கலி. 22: 20-22). 'என் தொடர் நீஙகின இவள் நலமிழப்பாள்' எனத் தலைவன கூறினான் (கலி. 78:16).

3. **மாலை.** குவளையை அரும்புகளோடு கட்டின நெடிய தொடரை - மாலையை - வடிம்பிலே விழும்படி உடுத்துப் பரததையர் இளையரோடு விளையாடினர் (மது. 587-589). வேங்கைப பூக் களாலாய நிறைந்த தொடரை அணிந்து பொலி வுற்ற ஆயத்தாருடன் அழகு பொருநத தலைவி நடநதாள் (அகம். 188:9,10). குவளைமலரின குறிய தொடரினைக் கூந்தலிற் செருகினர் (அகம. 358:5,6).

4 **தொடர்தல்.** புலிககணத் தன்ன நாய் தொடர் - தொடர்தல் - (அகம். 158:15). தொடர்-தொடர்தல் (கலி. 41.3; பரி. 10:119; பரி. 19:30).

**தொடர்பு - 1. நட்பு.** 'அன்னையும் நெடுவேளைப் பரவும்; இனி, தலைவனொடு பொருநதிய நம் தொடர்பு - நட்பு -என்ன நிலையினை அடை யுமோ' எனத் தோழி தலைமகன சிறைப்புறத தானாகக கூறினாள் (அகம். 272:15-19). "நாட, நின்னோடு யாம் கொண்டுள்ள தொடர்பு தேயாது' எனத் தலைவியை உட்கொண்டு தோழி உரைத தாள் (குறு. 42:3,4). 'மலை நாடனொடு அமைந்த நம் தொடர்பு, உலகம் இடம் விட்டுப பெயர்ந தாலும், நீரும தீயும் தம் இயற்கையினின்றும் மாறு பட்டாலும், பெரிய கடலுககு முடிவு நேர்நதாலும் மகளிரின் பழிச்சொல்லுக்கு அஞ்சிக் கெடாது' எனத தலைவிக்குத தோழி கூறினாள் (குறு. 373: 1-48). 'கடறசேர்பபனோடு பொருநதிய நமது தொடர்பு, அன்னை இறசெறிததலால பசலையாகி விளியுமோ' எனத் தோழி கூறினாள் (நற். 63:6,7, 11). 'மடநதையினது அழகிய நெறறியிலே பசலை ஊருமாறு நீ அவளது தொடர்பை எவவாறு கைவிட்டாய' எனத தோழி தலைமகள் ஆற்றாமை கூறி வரைவு கடாவினாள் (நற். 108:7-9). 'வெறப னொடு அமைந்த நம்தொடாபு, பிரிவினால நுதலில பசலை பாயதறகுக காரணமாயிற்று எனத தோழி கூறினாள் (நற் 282.3-6,9). 'ஊரன தொடர்பினை நீ விரும்பினால என சொல்லை ஏறறுககொள்' எனத தோழி, வாயிலாயப புகக பாணன கேடகக் கூறினாள் (நற. 290:3-5). 'அனபு மிகக காமமே தலைக்கீடாக யாம நாடனொடு கொண்ட தொடர்பு, அன்னை என்னை அமர்நது நோக்கிய தால் யாதாய முடியுமோ' எனத் தோழி நொநது கூறினாள் (நற. 389:3,10,11). 'தமமிடததே இருககும்போது அவாககுச் சிறபபுச செயது புகழ்நது, வாழததி அவா நீங்கிய அளவிலே அவர் பழியைப் பலர்ககும் கூறும புறஙகூறுவாா தொடர்புபோல, நீா கூடியிருககும காலதது மலர் போன்று அழகிதாயத தோனறிச சிறிது பிரியும போது நுமபழியைத தூறறி அழிதலமையாதது இவள் கண' எனத தோழி கூறினாள் (கலி. 25: 13-16). ஒருவர்க்குச் செல்வமுணடான போது நீங்காதிருநது அவா செலவததை நுகாநது வறுமை யுறற காலதது ஒன்றை உதவாத அறிவிலலாதாா தொடாபு போல், தலைவன அருள்செயயும் காலததுத் தலைவிககு உணடாகிய அழகைத் தானும பெறறுப பிரியும காலததுத தோள் மெலிய வளை கழனறு போயிறறு (கலி. 25:17-20)' 'மனம பொருநதிய கேண்மையினால ஒருவன கூறிய மறைப பொருளை உணாநது அவன நீஙகியவிடதது மறைபபொருளைப் பிறர்ககுச சொல்லும் பெருமை யறறவர் தொடாபு போல, நீா அளிசெயயும காலத்து ஒளிமிககு, அளியாககாலத்து நும் குணததைப பலாககும அறிவிதது நுதல பசநதது' எனத தோழி கூறினாள் (கலி. 25.21-24). 'வெறபன் நின்னைத துறநது செல்லான; அவன தொடாபின கண இத்தகைய கொடியவை தோனறின அது ஞாயிறறுள்ளே இருள தோன்றிய தனமைத்து' எனத தோழி கூறினாள் (கலி, 41.35-38). 'இளமைப பருவததே நீ கலநத தொடாபை அவள் கணணீர் சிநதுவதைக கணடு வைத்தும நல்காது விடும நீ கொடியை காண' எனத தோழி தலைவனிடம கூறினாள் (கலி. 125:9-11). இளமைப பருவத்து எழுசசி மேனமேல வளர நீ நல்கிய தொடர்பு, அவள் மேனி சாயநது அழக்கண்டும கை விடுகின்ற

நின நிலை கொடிது' எனத் தோழி தலைவனிடம கூறினாள் (கலி. 125:12-15) எந்நாளும் கண்கள் துயிலாமையைச செய்தவன் தந்த தொடர்பின் உண்டான நோய மதுவுண்டாரைப் போல மயங்கும்படி விடாது உயிரோடு பொருநதி விட்டது எனத் தலைவி நிலைமையைக் கூறினாள் (கலி. 147.54-56).

2. தொடர்தல் ஈயாச் செலவர் தொனமைமாக்களின் தொடாபு - தொடர்தல - அறியலர் (புறம. 165:5). தொடா-தொடர்தல் (நற. 116.8; பரி. 20:44).

**தொடரி** - தொடரிப்பழம். தயிரும் -தொடரியும - தொடரிபபழமும போன்றவறறை உண்ணுதல. (புறம. 328.7-12).

**தொடலை** - தழையுடை. நொச்சித் தழை, இளமகளி ருடைய அலகுலிடததே தொடலையாக-தழையுடை யாக-அணியபபட்டது (புறம். 271:2-4). அல்குல் அழகுபெறத் தரித்த பல தளிருடன கூடிய தொடலை அசைய, சேரிதொறும் உபபு விறகும் மகளிா சென றனர் (அகம. 390:6-10).

2. மேகலை. தொடலை – மேகலை - அணிநத அல்குலையும் தொடியணிந்த தோளையுமுடைய மகளிா கடலாடினர் (புறம். 339:6,7).

3. மாலை. அழகிய பூக்கள விரவித்தொடுத்த தொட லையை - மாலையை - மகளிர் அணிநதனர் (புறம். 341:2). ஆம்பல் மலராலாகிய அழகிய தொடலை யணிந்தவள ஐயை (அகம். 6:1,3). நின பூககள் பொருநதிய தொடலை அசைய அடிககடி எழுநது கிளிகளை ஓட்டும் ஓசைகளைத தலைவி இடை யிடையே எழுபபாது போயின, அன்னை தினை காத்தற்குப் பிறரைக் கொணர்நது நிறுததுவள்' எனத தோழி கூறினாள் (அகம. 28:9-13). வேங்கை யின் ஒள்ளிய இலை கலந்த தொடலையினை மலை நாடன அணிந்தான் (அகம். 105:1-3). தொடலை போன்ற ஆயததாரோடு தலைவி கடலாடினாள் (அகம். 110:6). 'முருகனை மனைக்கண் வருவிததுப பாடி, அவன பனநதோட்டினையும் தொடலை யினையும கையிற கொணடணிந்து இரவெலலாம் ஆடுதல நன்றோ' எனத் தலைவி கூறினாள் (அகம். 138:10-13). சுனையிலுள்ள பூக்களைப் பறிததுத் தொடலையாகக கட்டித் தலைவி சூடினாள (குறு. 142:1,2). தொடலையணிநத மகளிா கூட்டததோடு கூடித தலைவி குரவையாடினாள் (குறு. 294:2). தலைவன, சுனையில் மலர்ந்த குவளை மலராலான தொடலையைத் தலைவிக்குக கொடுத்தான (குறு. 346:3-8). நெயதல் மலருடன இலையை இடையிட்டுத் தொடுத்த தொடலையைத் தலைவிக்குச சூட்டினர் (நற். 138:5-7). ஆயமகளிருடன் விளையாடவும் செயயாது, நெய்தல மலரலான தொடலையையும் புனையாது கடலருகுள்ள சோலையிலே தலைவி நின்றாள் (நற். 155:1-3). முலலையின் நறுமலரை இடையன் இரவிலே கொயது பனங் குருத்தின் போழுடனே சேர்த்துத தொடுத்த அசைகின்ற தொடலையின் நறியமணம தெருவிலே கமழந்தது (நற். 169:5-9). சுனையிலுள்ள மலர்களைக் கொய்து தொடலையாகத் தொடுத்து முருகனுக்குச் சார்த்தி வழிபட்டனர் . (நற் 173:1-3). வேங்கை மலராலே தொடுககப் பெறற தொடலை போல், குட்டிகளை ஈன்றது வயாநோய பொருநதிய பெண்புலி (நற. 383:1-3). 'இநநெய்தல மலர்களில் சில பூக்களைக கொள்வதல்லது இதனையே தொடலையாகத் தொடுபபாரில்லை' எனத தோழி தலைவனிடம் கையுறை மறுத்துக கூறினள் (ஐங். 187:4,5). தொடலை போனறது ஒள்ளிய வாள் (ஐங். 206:3). தலைவி, வேனிற் காலதது மலாகின ற பாதிரியினது மலாகளைக் குவித்துத தொடலை செய்தாள் (ஐங். 361:2,3).

4. தூக்கு. தொடலை - தூக்கு - இட்ட வாளினை யுடையவர் விழித்தகண் இமைக்கின்ற அளவிலே மறைகின்ற கள்வர் (மது 636,642).

**தொடி** - 1. வளை/வீரவளை. விளங்கிய தொடியை - வளையை - அணிநதவா மகளிர் (புறம். 24:11,31; 56:20; 176:1; 229:23). தொடி (வீரவளை) அணிந்த தோளாகிய துடுப்பால் துழாவி அடப்பட்ட உணவால களவேள்வி செயதவன தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (புறம. 26:5-11). நீண்ட கோல தொழிலால செயயப்பட்ட குறிய தொடியினையுடையவா மகளிர் (புறம். 36: 2,3; 113:8) ஆம்பல் தண்டால் செயத தொடி யணிநத கையினையுடையவர் மகளிர் (புறம. 63:12). 'இளையோன் பொருட்டு எனது தொடி என்னைக கைவிடுதலான் யானயானை அஞ்சுவேன' எனச் சோழன போர்வைக கோபபெருநற் கிள்ளியைப் பெருங்கோழி நாய்கன மகள் நககண்ணையார் கைககிளைத் துறை அமையப் பாடுவர் (புறம். 83:1,2). கழல இடப்பட்ட தொடி பொருநதிய பெரிய கையினையுடையவன் அதியர் கோமான (புறம். 91:2,3). மகளிர் குறிய தொடியை யுடையவர் (புறம். 97.24;240:4;251:2). நுண்ணிய தொழிலையுடைய தொடியணிநதவர் மகளிர் (புறம். 117:10). ஆஅய் கழல இடப்பட்ட தொடி

(வீரவளை) அணிநதவன் (புறம். 126:5). வெளிமான துஞ்சியதால் தொடி கழிககப்பட்ட உரிமை மகளிரைப் போலப் பழைய அழகு தொலைந்து பாடுவாரது சுற்றமும் ஒளி மழுங்கின (புறம். 238: 6,7). 'இளைய மகளிரது தொடியணிநத தோளை முயங்கினான நம்பி நெடுஞ்செழியன் (புறம். 239: 1). ஒள்ளிய தொடியினையும் வச்சிராயுதத்தையு முடைய பரந்தகையினையுடைய இநதிரன் கோயில் (புறம். 241:2,3). விறலியர் முன்கையும் தொடியினால் பொலிதல் இல்லை (புறம். 244:2). 'செல்வம் பொருநதிய அழகிய நகரே, புதல்வாதநதை புறங் காட்டை அடைநதபின் மனையிடத்து மயிரைக் குறைத்துக் குறிய தொடியினை நீககி அலலியரிசி யாகிய உணவையுடைய மனையாளுடன் இப பொழுது பொலிவழிநதுள்ளாய்' எனத் தாயங கண்ணியார் வருநதிப் பாடுவர் (புறம். 250:4-9). தொடியையுடைய இளமகளிர் அல்குலிடததே நொச்சியைத் தழையாக அணிவர் (புறம். 272:1,5). பாணா போனறு பாடிச் செனறோர் வருந்தோறும் மனம் மகிழநது கொடுபபவன விளஙகுகின்ற தொடியணிநத பெரிய கையையுடைய பாரி (புறம. 337:4-6). தொடியணிந்த தோளையுடையவர் மகளிர் (புறம. 339:6). இளையோள் தொடியானது கையின முனனும் பினனுமாக இயங்கும் முன் கையினையுடையவள் (புறம. 350:10). மகளிர் ஆம்பலின் தணடால் செயயப்பட்ட தொடி யணிந்த கையையுடையவர் (புறம். 352:5). கோடரியால் துணிக்கப்பட்டுக கிடந்த தொடி யணிந்த பெரிய கை ஒன்றை எடுதது மேலே உயர்த்திப் பேய மகள் பாடிக கூத்தாடினாள் (புறம். 370:22-25). கழல இடப்பட்ட தொடி யணிந்தவன ஆஅய அண்டிரன (புறம. 374.16; 375:11). தொடியணிநத தோளையுடையவர் இயவர் (பதி. 17:5-8). இயவர், குறுநதடியினைக கொண்டு முரசததை அறைய வேண்டித் தொடி யணிநத தோளை ஓசசினர் (பதி. 19:7,8). தோள் வெற்றியாலாய தொடியணிநதது (பதி. 40:12). ஒளி மிகுகின்ற விளஙகிய தொடியை யணிநத முன்கையையுடையவர் மகளிர் (பதி. 46:2,4). தொடியணிநதவர் தோளிடைக குழைநத கோதை யினை அணிந்த மார்பினன் (பதி. 79:6,7). கழலும் படி இடபபட்ட தொடியை யணிந்தவன் தலைவன (பதி. 64:15). தொடி ஒளிவிடும் வன்மையையுடையது முனகை (பதி. 80:6). மறவர் இரவிலும் சிறநத தொடி ஒளிவிடத் தோளைப பிணித்த, கைகளை உடையரரய இருந்தனர் (பதி. 81:10, 11). 'ஒள்ளிய தொடியை அணிநதோளுடைய கணவ' என இளஞ் சேரல இரும்பொறை விளிக்கப்படுகிறான (பதி. 90:50). ஒள்ளிய தொடியினையுடைய பெருமை யுடைய கையிலே கரிய தலையை எடுதது, வெற்றிக களத்தைப் பாடிப் பேயமகள் துணங்கைக் கூததாடுவாள் (முரு. 51-56) முருகனது ஒருகை, தொடியொடு மேலே சுழனறு களவேள்விககு முததிரை கொடுத்தது (முரு. 113, 114). முருகன தொடியணிநத தோளையுடையவர் (முரு. 211). மாயோளுடைய முன்கையில் அழகினையுடைய நேரிய தொடியை ஒககும் வார்க்கட்டினையுடைய யாழ (பெரு. 14, 15) பகைவர் தூங்கு எயிலை அழித்த தொடி விளஙகும பெருமையையுடைய கையினை உடையவன் செம்பியன (சிறு. 81, 82). கழலும் தொடியினை அணிந்த பெருமையுடைய கையினன் காரி (சிறு. 95) மகள் தொடியணிநத கையினையுடையவள (சிறு. 192). மகளிரின் முன்கையில் குறிய தொடியை ஒககும, நெகிழ வேணடிய வழி நெகிழந்து இறுக வேணடியவழி இறுகும் வார்ககட்டினையுடைய யாழ (பெரு. 12,13). மணலிலே மெத்தெனக கையிறபுனைநத குறுந்தொடி யசைய மகளிர பொன்னாற செயத கழலைக கொணடு விளையாடுவர் (பெரு 334). குறுந்தொடி யையுடைய முனகையினையுடையவர் மஙகையர் (முலலை 45). தொடியை உடையவாகிய தோளையுடைய கைகளைத துடுபபாகக கொணடு துழாவி ஊனாகிய சோற்றை அடுவர் (மது. 34, 35). விறலியர் வறுஙகையிலே தொடிகளை இடுவர் (மது. 218). பூததொழிலையுடைய தொடியினை உடைய மகளிர அழகிய திரடசியை யுடைய விளங்குகினற தொடி மிக விளங்கும்படி கையை வீசி விளையாடுவா (மது. 563). மகளிர ஓடவைதத பொனனாற் செயத விளங்குகினற தொடியினையும பசிய பூணினையுமுடையவா (மது. 578, 579). நனறாக ஆயநத தொடியினை யுடையவா மகளிர் (மது. 712). பொனனாற செயகையினாலே பொலிவு பெறற மணிகள் அழுத்தின மோதிரம வலிபொருநதிய பெரிய கையில தொடியோடு விளஙகியது (மது 719, 720). முன்கை பொன்னாற செயத தொடி கிடநது தழும் பிருநதது (நெடு. 141). இளையர் ஒள்ளிய தொடி யினையுடையவர் (குறி. 139-141) பொலிவு பெறற தொடியினையுடையவர் மகளிர் (குறி 224) வரிசை யாகத் தொடியணிநத பெணணும் பண்புடையள (நிரை தொடி - இஙகுத தொடியணிநத பெண ணைச் சுட்டிறறு) (குறி. வெ. 1:1). மயிலபோனற மெனமையான சாயலையுடைய மகளிர் செறிநத தொடியினை உடைய முனகை குவிததுத தொழு தனர் (பட். 154). புதல்வா பொனனாற செயத தொடியினை அணிநதனர் (பட் 296). யாழ தொடி

வளைந்தான (பதி 62 1,4). பெருஞ்சேரலிரும் பொறை புணபட்ட யானைத தொழுதியின் துயர் போககி இரநதோர்க்கு நலகினான் (பதி. 76:6-8). ஆண யானைகள் நெருங்கிய பல கேடகங்களின் தொழுதியோடு தேரில் அசைகின்ற கொடிகள் விளஙக இளஞ்சேரலிரும்பொறை பொலிவொடு விளஙகினான (பதி. 83.3,4). ஓசையையுடைய புளளின் ஈணடிய சுறறத தொழுதி மரககிளையில் தஙகும (பெரு 406,407), பசிய காலையும் மெலலிய சிறகையுமுடைய நாரையின தொழுதி கயலமீனைத் தினனும் (நெடு. 15,17). வேறபடை திரணட தொழுதி (தானை) இரிந்தோடுதலைப் போன்று காற்று வீசுகின்ற ஆரவாரத்தாலே கரும்பு சாய்ந்து இறைஞ்சி அலமந்தது (மலை. 116-119). கரிய மேகத்தொழுதி துவலை தூறறும் (மலை. 362,363). மராமரத்திடத்தே கிடநத தொழுதி (இனம்) எலலாம கெடடுப போக ஆமானினது குழவி அகப்பட்டுககொணடது (மலை. 498,500). மீனையுண்ணும் மெல்லிய சிறகினையுடைய பறவைத் தொழுதி புன்னை மரததிலுள்ள கூடுகளிற சென்று சோந்தது (அகம 40 3,4). யானையின கனனததிலிருந்து இழியும மதநீரில வணடின தொழுதி ஒலிகக அதனை யாழின் இசையெனறு கருதி அசுணமா உறறுக் கேட்டது (அகம். 88:9-12). களிறறியானைகளின தொழுதி, காடாகப் பரந்த நீணட மரங்களையுடைய சோலையில தஙகும் (அகம. 109:4,5). கூனிய முதுகினையும் குறுநடையினையும உடைய கரடிகளின தொழுதி, கறையான புறறின நீணட உச்சி உடைநதிடப் பெயாத்துப் புற்றாஞ்சோறறினை விரும்பிச் சூழும் (அகம. 112:1-4). புறவிடததே கூட்டம் கூட்டமாக வரும் அழகிய சிறையினையுடைய வணடின, தொழுதி, மாலைக் காலததே முலலை மலரிடத்தே ஆரவாரிக்கும் (அகம. 204 5-7). அழகிய சிறையினையுடைய வணடின,மெல்விதாகப பறததலையுடைய தொழுதி முலலை மலரின தாதினை விரும்பி ஊதும் (அகம. 234:12,13). பெரிய பெண யானைகளின தொழுதியாகிய இனததுடன் கலவாமல் மதத்தால் செருக்குற்றுப பெரிய களிறு காட்டில் இயஙகியது (அகம. 298:8-10). மேகம, கரிய பிடிகளின் தொழுதி போன்று சோநது திரண்டது (அகம. 334:6) இனிய சுளைகளையுடைய பலாமரத்தின் தொழுதியையுடையது உம்பற்காடு (அகம. 357:9,10). ஆண பருநதினது கிளையுடன கூடிய தொழுதி, ஊனின மிகுதியைத தெரிவிததுப பறநதெழுந்து செவ்வானம போல விசுமபினை அழகு செயதது (அகம. 381:10-12) தேனை விருமபிப பறந்த வண்டின் தொழுதி புன்னை மரததின கிளையிலே வந்து கூடும் (குறு. 175.1,3). கழியின்கண் உள்ள மீனாகிய இரைகளைத தின்ற குருகுகளின் பறவைததொழுதி, பனை மடலினகண்ணே உறைந்தது (நற். 123.2,3). எககரிடத்தே உளள பெரிய சுற்றததையுடைய நணடின தொழுதி, மாதர் வெயிலிலே காயும் தினையைக் கைவிரலாலே துழாவி வருதல போல, ஞாழலில் உதிர்ந்த மலரைக் காலால வரித்துக் கோலஞ் செயயும் (நற். 267:2-5). மகளிர் விளையாட்டு ஆரவாரததிறகு அஞ்சியெழுந்த அழகிய சிறகினையுடைய பறவைத் தொழுதி மரக் கொம்பிலே ஏறியிருநது, மகளிர் தம்மை அலைத்ததை அவர்தம் சுற்றத்தார்க்குக கூறுவது போல் குரல எழுப்பும் (கலி. 75:3-8). பெரிய புலித் தொழுதியும் யானைத்திரளும் தம்முள் மாறுமாறாய்ப் பொருதாற்போலப பொதுவர் பொருது ஏற்றைத் தழுவிக கொண்டு தொழுவை விட்டுப் போயினர் (கலி. 103:56-58). தலைவியரால் தூதாக ஏவப்பட்டுத் தலைவரோடு மீணட வணடின் தொழுதியது முரறசி அத்தலைவியர் காதலை மூதூர்ககண் அரவமாக்கிறறு (பரி. 8:36,37).

**தொழுநை** - யமுனையாறு. வடககின் கண்ணதாகிய நீர்வளம் அறாத தொழுநை - யமுனை - யாற்றின் அகன்ற துறையில் நீராடிய ஆயர்மகளிர் தழையை உடுத்திக கொள்ளக் கண்ணன் குருந்த மரம் வளைய மிதித்தான (அகம். 59:3-6).

**தொழுமகளிர்** - குற்றேவல் மகளிர். வேழத்தினது உட்டுளை பொருந்திய தண்டின்கண சிறுதொழு மகளிர் - குற்றேவல் மகளிர் - மையைபபெய்து வைத்தனர் (ஐங். 16:2).

**தொழுவர்** - உழவர்/தொழில் செய்வோர். நெல்லையரியும் பெரிய தொழுவர் - உழவர் - செஞ்ஞாயிற்றினது வெப்பததை வெறுததால தெளிந்த கடல் திரையில பாயவர் (புறம். 24:1-3). வயவிடததே நெல்லரியும் தொழுவர் ஆம்பலின் அழகிய இலையிலே மதுவையுணடு, கடலலையின் இனிய சீராகிய தாளததிறகேற்ப ஆடுவர் (புறம. 209:2-5). நெலலரியும் தொழுவர் தம்முடைய கூர்வாள் வாய் மழுஙகுமாயின மீணடும் மறங்குனறாது அரிய வேணடித் தீட்டுக் கலவாகக கருதிச் சேற்றிலே படிநதிருக்கும் யாமையின் முதுகிலே தீட்டுவர் (புறம். 379:3-5). வயல தழைககுமபடி நீரை நிறைத்தற்குக் காரணமான குளங்களில் நீரை இறைகூடையால் முகநது கொள்ளும தொழுவரிடததே ஆரவாரம் எழுந்தது (மது. 89,90) சிறுகுடி பெருந்தொழுவர்தம் ஒழியாத ஆரவாரத்தினை உடையது

முதுவெள்ளிலை என்னும் ஊர் (மது. 122). காவலையுடைய அகனற மனைகளில் சிறியராகிய குறுநதொழுவர் கூட்டு அரைத்தனர் (நெடு. 49,50). வயலிலே நெற்கதிர் அறுக்கும் தொழுவருடைய கூரிய வாளால் நெயதல் அறுபட்டது (நற். 195: 6,7).

**தொழுவை - மடு.** தலைவன் பரத்தையரை நுகர்ந்து அவருடனே அழகிய புனலையுடைய தொழுவையில் - மடுவில் - புனலாடினன் (கலி. 30.5,6).

**தொள்ளை - 1. வளை.** குறுமுயல ஊருககுள்ளே யிருக்கும் குறிய புதலிடததே துள்ளிவிளையாடும் தொள்ளை – வளைகள் – பொருநதியது மனறம் (புறம 333:3-5).

2. **தொளை.** கரடிக் கூட்டம் கறையான புற்றினை வெறுததால் இருப்பை மரததின தொள்ளை (தொளை) உடைய பூவைக் கவர்ந்துண்ணும் (அகம். 149:3-4). இருப்பை மரத்தின் தொள்ளையுடைய பூக்களை கரடிக குட்டிகள் கவர்ந்து உண்ணும் (அகம். 275:11,12).

**தொளி - சேறு.** ஏறுகள் தம்முள் பொருத செயயின் கண் உழப்படாத நுண்ணிய தொளியை - சேற்றை - நிரவி உழவர் முடியாகக் கிடககின்ற நாறறை நட்டனர் (பெரு. 211,212). புறவிடததே தொளியின் கணணே பொருதலால் எழும் குமிழிகள் தோன்றி மறையத் தேர் விரைநது செனறது (அகம். 324:5,7).

**தொறு - ஆடு.** தொறு - ஆடு - கிடை கட்டிய வயல் களில் ஆரல மீனகள் பிறழ்ந்தன (பதி. 13:1).

**தொன்மை - பழமை** (வழிவழிவரும நல்லியல்பு). வீரன ஒருவனைத் 'தொன்மை - பழமை - சுட்டிய வண்மையோன' எனச சிறப்பிப்பர் மதுரைக கணக்காயனார் (புறம். 330:7). 'உயர்நதசெலவர், இரபபோர்ககு ஈயாத காரணத்தால தொனமை மாக்கள் (பழைய வண்மையுடைய மாககள்) போலப் பின்னும் தம் பெயரை உலகோடு ஒட்டி வாழ்தலை அறியாா' (புறம். 165:3-5).

**தொன்று - பழையது/பழமை.** நாட்டின மேற்கின் கண்ணது தொனறு-பழைமை-முதிர்நத பௌவம் (புறம். 6:4). நின்னொடு தொனறு முதிர்நத உயிரினும், உயிரொடு நினறு மூதத உடம்பு போன்றது நினகுடி' எனத் தலையாலங்கானத்துச செருவெனற பாண்டியன் நெடுஞ்செழியன் குடியைச் சுட்டுவர் (புறம. 24.26-28). 'நினனோடு போர் செய்ய லநதோர் தொனறு உறை வலியையுடைய பகை வருமலலர்' எனக் கோப் பெருஞ் சோழனிடம புலலாற்றூர் எயிறறியனார் கூறுவா (புறம். 213:5). தொனறு இசையுடையவன கோபபெருஞசோழன (புறம. 217.11). தொனறு தாமுடுத்த அழகிய பகைத் தழையாய் உதவிய ஆமபலிடததுண்டாகும் அல்லி யரிசியைக் கைமபெணடிா உண்டனர் (புறம. 280: 12-14). தொனறுபடு துளையுடன கூடியது ஆடை (புறம. 376.10). தொன்றுபடு சிதாஅர் (புறம. 393: 16,400:10). பைதிரம் இன்று அன்று, தொன்று நல்ல (பதி. 19:18,24,25). சேரனுடன தமக்குளள தொனறினைக கூறி அரசர் ஏவல தொழிலைச செயதனர் (பதி. 90:8). தலையாலங்கானததுச் செருவெனற பாண்டியன நெடுஞசெழியனிடம தமக்குரிய தொனறு மொழிநது நாடடில வாழ வோரெலலாம தொழில் செயதனர் (மது. 70-72). பாண்டியன நெடுஞசெழியனிடம பெருநதொழுவர் நானிலவரொடு தொனறுமொழிநது தொழில கேட்டனர் (மது. 122-124). அகனற மாாபிடததே தொனறுபட்டுவரும் பேரணி கலஙகளோடே நறுந்தாா பொலிய வீராகள் விலலேநதி நினறனர் (குறி. 122,129). தொன்று ஒழுகும் மரபினை யுடையது யாழ (மலை. 39). கூத்தர் தொனறு ஒழுகும்மரபினையுடைய இலகசணததில தபபாமல கடவுளை வாழத்தினர் (மலை. 537,538). வளனறற காட்டைக் கடநது செல்லுதல் அறனனறு என்று கூறுவதுதொன்றுபடு கிளவியாகும (அகம 5 16,17). தொனறியல் சிறுகுடி (அகம. 75:7). தலைவியின களவினை அறியாத பெற்றோா தொனறியல மரபின திருமணம நடதத விருமபினர் (அகம. 112: 15,16). உயிர் கலந்தொனறிய தொனறு படு நட்பில் செயிர்தீர் நெஞ்சமொடு செறிநதோர் என்றும் பிரியார் (அகம. 205.1-3) இமமையில நன்று செயயுமிடததில் தீது வருவதிலலை எனறு கூறபபடும் தொனறுபடு பழமொழி இனறு பொயத்து விடடதோ எனத தலைவி கூறினாள் (அகம. 101:1-3). ஆரியா அலறத தாக்கித தொனறு முதிர்நத வடவரையில் சேரன விலபொறித்தான (அகம. 396. 16-18) வேளிரின குனறாா தொனறு முதிாநதது (குறு. 164 3,நற.280.8). யானை தொனறு படு துபபோடு பகை மிகுதலால் புலியைக கொன்றது (நற். 247:1,2). தொனறியல புகழுடையது மாலிருஙகுனறம் (பரி. 15 36).

**தொன் மருங்கு – 1. பழைய குலம்.** 'தொனமருங்கினை-பழைய குலத்தினை-நீ அழிததலை அஞ்சித்

தம அரணகளைக காபபாகக் கொணடு தூங்காத பகையரசரும் தூங்கவும் நீ நின் தேவியைக காணவும் தேரில் செலவாயாக' எனறு இளஞ சேரலிரும் பொறையிடம் பெருங்குன்றூர்கிழார் கூறினார (பதி. 81.32-37).

2. பழைய நூல். தொன் மருங்கினை-பழையதாகிய நூலினை-அறியும தெயவ இருடிகள் (குறி. 17,18).

**தொன்முது பெணடிர்** - பழைய மூதத பெண்டிர். கோதிபபினனே முடிதது இட்ட பெரிய நரை மயிரினையுடையவா தொன்முது பெணடிர்-பழைய மூததபெணடிர்- (மது. 407-409).

**தொன்னகர்ச் செல்வி** - பெருந்தேவி (சேரன்தேவி) களங காயக கண்ணி நார்முடிச் சேரலின தொனனகர்ச செல்வி - பெருந்தேவி - அருநததி அனையள் (பதி. 31:28).

**தொன்னாண்மீன்** - மறையும் நாண்மீன். பங்குனி மாதத்தினது முதற் பதினைநதின்கண் தலைநாண மீனாகிய உததரம் உச்சியினின்றும் சாய, அதற்கு எட்டாவது நாண்மீனாகிய மூலம் தோன்றிடத் தொனனாணமீனாகிய-மறையும நாண் மீனாகிய-மிருகசீரிடம் துறையிடத்தே மறைய இவ்வாறு வானநிலைகள் அமைந்த பொழுதின்கண, எரி நட்சத்திரம் ஒனறு வீழ்வதனைக் கண்ட சானறோர் யானைககட் சேஎய் மாந்தரஞ்சேர விரும்பொறைககு ஊறு நேருமென அஞ்சினர் (புறம். 229.5-15).

**தொன்னிலக் கிழமை** - பழைய நில உரிமை. 'சோழன் நலஙகிள்ளியின தொன்னிலக கிழமையை - பழைய நில உரிமையை - குறிப்பின, குயக்குலததினை யோர் கலம் வனைதற்குத் திகிரியில் வைதத பசு மண் போல அவன் கருததிற் கொண்ட முடிபை உடையது இத்தண்பணை நாடு' எனக் கோவூர் கிழார் கூறுவர் (புறம. 32:7-10).

**தொன்னிலை மரபு** - பழைய நிலைமை பொருந்திய முறைமை. தொன்னிலை மரபினை - பழைய நிலைமை பொருநதிய முறைமையினை - உடைய முனனோர் போனறு அதியமானும அரச உரிமையைத தபபாமற பெறறான் (புறம். 99:4-8).

# தோ

**தோகை** 1. மயில். பலவின் பழத்துள் விளைந்த தேறலை நீராகக் கருதி உண்ட தோகை-மயில-சாரலிடத்தே தளரும (குறி. 190,191,194). விறலியர் திரட்சியைக் கொணட தோகைபோல மயிரைத் தாழ்த்து இளைத்தனர் (மலை. 44-46). துளுநாடு பாகற் பழத்தைத் தின்னுதலையுடையதும் பறை போல வட்டமான பீலிகளையுடையதுமாகிய தோகைகள் மிக்க சோலைகளையுடையது (அகம். 15:4,5). வரகின் கதிர்களை உண்ட குடுமி பொருந்திய தலையினையுடைய நீண்ட கரிய தோகை அழகிய பீலியினை விரித்துக் குருந்தின் கிளையிலிருந்து கிளி ஓட்டும் மகளிர் போல அகவும் (அகம். 194:9-15). தோகையின் தூவியால் தொடுத்தலையுடைய மாலையை மழவர் அணிந் தனர் (அகம். 249:11). உழவர் செருககு மிகுகு எழுப்பிய ஆரவாரத்தினை அஞ்சிப் பறந்து சென்ற தோகை தெயவத்தையுடைய குனறிடததே பொலிய வந்து தங்கியது (அகம். 266:17-19). நீல மணியை ஒக்கும் நிறம் விளங்கும் கழுத்தினையும் அழகிய பீலியையுமுடைய மயிலாகிய தோகைகள் இனிய குரலினையுடையவாய் நெருங்கின (அகம் 358:1-3). விருப்பம் தரும் பீலி பொருநதிய மயிலாகிய தோகைகள் வருடைக் கடாவின ஒலியைக கேட்டு அஞ்சிக் கொம்புபோல ஒலித்துப பறந்துசென்று மூங்கிலில தங்கும் (அகம. 378.3-7). வேங்கைச் சினையில் இருநத தோகை மரததின்மேல ஏறிப் பூப்பறிககினற மகளிர் போலக் காட்சி தரும் (குறு. 26:2,3). வாகை மலர் இளமையான கரிய தோகையின உச்சிக் கொண்டை போலத் தோன்றும் (குறு. 347:1-3). நாட்காலையில், வேங்கைக் கிளையிலிருநது நறுமணம் வீசும் பூக்களின மகரநததில் அளைநது அழகுபெற்ற தோகை, தன் கூட்டத்தோடிருந்து இளவெயிலைத் துயத்தது (நற். 396: 3-7). நீர்விளையாட்டிடத்தே பாய் வோளது கூந்தல், வானிலிருந்து இறங்குகின்ற தோகையினது அழகு போனறது (ஐங. 74:1,4). தோகை போனற மாட்சியையுடையவள் தலைவி (ஐங். 293:4). வேங்கை மரத்தில் இருநத தோகை, இழையணிநத மகளிர்போல் தோனறும் (ஐங். 294: 1,2). மலர்நத வேங்கைச சினைக்கண் இருந்த தோகை, மலர் கொயயும் மகளிரைப் போலத் தோன்றும் (ஐங். 297:1,2). கொடிச்சியின் கூந்தலைப போலத தோகை சிறகை விரித்தது (ஐங். 300:1,2). தலைவர் சென்ற வழியில், மலையில் நீலமணி போனற அழகுடைய தோகையும் உணடு (ஐங்.431). வாகையின பூவைபபோன்ற உசசியையுடைய தோகைகளின் நிறைநத குரல், கூடிப்பிரிந்தோரை, 'நீடன்மின மீண்டுவருக' என அழைபபது போலிருந்தது (பரி. 14:7-9).

2. தோடு. நெறகதிா வளம் மிக்கவயலில் தீயின கொழுந்தினை ஒத்த தோகைகளை – தோடுகளை - ஈனும் (அகம. 13:17-19).

3. கூந்தல். சோததுக கட்டிய தோகையினையும்-கூந்தலினையும - மூங்கில போனற தோளினையு முடைய மகளிர் கடலில் நீர்விளையாடுவர் (குறு. 326:1,2).

4. வால். கூரிய பல்லினையும வலமாகச் சுரிந்த தோகையினையும் வாலினையும - உடைய நாய் இரவில் குரை ததது (அகம். 122·7,8).

5. மயிறறோகை. பாஙகியர் மயிலாக நினறு தோகையை விரித்து ஆடினர் (இஙகுத தோகை என்பது தொகை என நின்றது) (பரி. 9:64)

தோட்டி - 1. தோட்டிமலை. இருமபாற புனைந்து செயயபபடாத மிகக புகழுடைய் தோடடியாகிய மலையைக் காப்பவன் நள்ளி (புறம். 150:25-28).

2. அங்குசம். இரும்பாற செய்யபபட்ட அழகிய தோட்டியால்-அங்குசததால-யானையை முனனர்ச செலுத்தினா (புறம. 14 1-3). பகைவர் மதிலின இடஙகள் அழியும்படி தோட்டியினால யானையைப் பாகன ஏவினான் (பதி. 38:5), தோட்டியின் எல்லையைக் கடவாமல, பாகர் ஏவலினோடு பொருநதி நின்று போர்ததொழிலை யானைகள் விரும்பும் (பதி. 40:27-31). களிறு மதத்தால் தோட்டியைக கடநதது (பதி. 53:17, 19, 21). அறனல்லவறறை எனறும் விருமபா உள்ளம் ஓரோவழி மயஙகி விரும்பினும கேடட கேள்வி தோட்டியாக உள்ளமாய யானையை மீட்டல பெரியோர் ஒழுககம் (அகம. 286:8-13). 'நீ கூறிய புததியானை தலைக்கோலமாகிய தோட்டி யுடையது' எனத் தலைவி பரத்தையை யானை யாகக கூறிப புலநதாள் (கலி. 97:13). வேழம மதமிகுதியினால் தோட்டியைக கைகடந்து செலலும் (கலி. 138:1, 2) புலிமுகமாடத்துப பணணிலைதத வேங்கையைக கணட அளவில் பிடி சிதைய, அச்சிதைவிற்காற்றாது களிறு தோட்டியைக் கைகடநது சென்றது (பரி. 10.45-49).

3. காவல். பல்யானைச செல்கெழுகுட்டுவன போர் செயத பகையரசரது எயிலகளில மககள் இன்மையின தோட்டி - காவல - வைககபபட விலலை (பதி. 25:5). பெருஞ்சேரலிரும்பொறை அருமையான மதிலின தோடடியைக் கைபபறறிக கொணடான் (பதி. 71:13).

4. வணக்கம். 'தம் பசைவரை வருத்துதலையுடைய பெரிய கையையுடையராயத தோடடி - வணககம்-சொல்லிப பணிநது நின் பகைவர் திறை தருவா' எனச செலவக கடுங்கோ வாழியாதன மறச சிறபபைக கபிலர் கூறுவர் (பதி. 62:11,12).

5. கதவு. மதுரையில அகநாடடைச சூழவுடைத் தாகிய முழுவரணகளிலிட்ட வருத்தத்தையுடைய தோட்டிகள் - கதவுகள் - பல (மது. 693,697).

6. ஆணை. முருகன கூற்றினது மிகக தோட்டியை-ஆணையை - இகழும் ஆற்றலையுடையவன (பரி. 8:86).

தோடு - 1. இதழ். பொனனாற செயயபபட்ட தோட்டை - இதழை - உடைய பசிய துமபை யுடனே பனமபுடையலைச செருகி வீரர் வெறி யாடுவர் (புறம. 22:20-23). வெள்ளிய தோடு வரிசை யாக அமைந்தது போருக்குரிய துமபைப்பூ (பதி. 40:10). படுககை,துகில் விரிதத செஙகழுநீர் முதலிய வற்றின தோடு பொருநதியது (நெடு. 134,135). தாழையின முளளாகிய பறகளையுடைய நெடுந தோடு காபப, அதன அகட்டினை இடமாகவுடைய பூ தூயதாக விரிநதது (அகம. 130 5-7). வணடுகள் தோடடிடததே செனறு தேனை உண்டன (அகம். 161.9,10). தாழை முள்ளுடைய நெடுநதோடு உடையது (அகம. 180:11,12). தலைவி வணடு ஒலிககும முச்சியினையும, தோடு பொருநதிய கூநதலையும உடையவள் (அகம. 231.14,15). வெள்ளியாலாய வெணதோடு போனறது கயல் மீன (அகம். 346:4). தோடு வளாநத பசிய தினை யின் நீணட கதிாகளை மகளிா காத்தனா (அகம். 368:3,4). நெல வளஙகெழு தோட்டினை உடையது (அகம. 376.15). வரகு புதுககொலலையில் தழைதத ஈரிய இலையின் நெடிய தோட்டினையுடையது (அகம். 393.4,5). தாழையின செழிபபான அருமபு, நாரைகள் கோதுகினற சிறகினைபபோல தோடு அவிழநதது (குறு. 228·1,2). தோடு விரிகினற மணம் கமழும் கணணியைக கட்டி மகளிா சூடுவா (கலி. 28·3). தோட்டாலே நிறைநத கதுபபினையுடைய வள் தோழி (கலி. 117:10). எருவை நறுந தோட்டை யுடையது (பரி. 19:77).

2. தொகுதி/திரட்சி. தோடு - தொகுதி - கொணட வேலினது காட்சியை ஒபபக கருமபின வெணபூ அசைநதது (புறம. 35 9,10). தோடுகொணட முரசஙகளும கணகிழிநதன (புறம. 238 8). பாசறை யிடத்துச சிறபபுடை மறவன வேலைப பகைவா

பால திருப்பி, தோடு (மறவர் தொகுதியை) உகைத்து எழுந்து சென்று போர்க்களத்தில் சிதைநது வேறாயினான (புறம். 295:1-6). அரிமான் வழங்கும சாரறகண் வேறுவிலங்குகளின் தோடு கொண்ட இனநிரை நெஞ்சு நடுங்கும் (பதி. 12: 5,6). வளப்பமற்ற நாடுகளில் ஊரினர் ஒருங்கே எழுந்து, இனத்தினரும், தோடும் (பசு முதலிய வறறின் தொகுதியும்) விட்டு நீஙகினர் (பதி. 19: 16-18). காட்டில தோடுகொண்ட மடமான் ஆண் மானோடு கூடிச செலலும் (பதி. 89:2). தோடு நிறைநத தோனறி, உதிரம் போன்று பூத்தது (முலலை. 96). தோடு அமைந்த பரலினையுடைய சிலம்பு ஒலிக்கத தலைவி விளையாடும் (அகம். 49.17). அருவியின இனிய ஓசை, தோடமைந்த முழவின் இசையாக ஒலித்தது (அகம். 82.3,4). ஞாயிறறின் வெபபம் மறையப் புதிய புட்களின் ஒலிபொருநதிய பெரிய தோடு விசும்பிடம் மறைய வட்டமிடடுப பின துறையில செனறு தங்கும் (அகம. 181 8-10,19). தோடுகொண்ட கரிய தலை மயிரை உடையவன ஆட்டனத்தி (அகம 236: 15,16). அசையும தலையினையுடைய செமமறி யாட்டின தோடு பாதுகாவல் அடைந்தது (அகம. 274 4). ஆடு பரநதாலொத்த ஈனற பெண் கரடி களின தோடு இருபபைமலரை உணடது (அகம. 331:1-4). தொடுததல் அமைந்த பலமலர்களின் தோடு (தொகுதியை) பொதிநது யாதத குடை போனறது கமுகம்பாளை (அகம. 335:12-14). அழகிய மயிலின தோடு கொணட தழைதத தோகை (அகம 393 21,22). யானையங்குருகின் (வணடாழஙகுருகின) பெரிய தோடு மள்ளரின் ஆரவார ஒலியைக கேட்டு அஞ்சும் (குறு. 34:5,6). சிறிய தலையினையுடைய வெள்ளாட்டின் தோடு பரந்தாலொதத மீனுண்ணும் கொக்குகளை யுடையது சோலை (குறு. 163:2,3). மரககிளை யிலிருநத பெரிய தோடுகொண்ட புள்ளினம் தாம் துணையோடு கூடியிருநதமையின் துணைவரைப் பிரிந்தலரின் துன்பததை எணணாது இனிய குரல எழுப்பியது (குறு. 191:2-4). 'யான் தோடு நிறைநத ஒளி படைதத வளைகள் நெகிழுமபடி, படுககையிலே கிடந்து துனபமுறறேன' எனத் தலைவி கூறினாள் (குறு. 216:4-6). அழிசி விலஙகுத தோட்டினை (தொகுதியை) வேடடை யாடுவான (குறு. 258:5,7). பரதவர் சுறாமீனை எறியக கரையிலேயிருநத அன்னப் பறவைகளின் வெள்ளிய தோடு அஞ்சி ஓடும் (குறு. 304.4-6). காககையினது பெருநதோடு, கடலலைகளின் திவலைகள் தம் ஈரமான சிறகுபபுறத்தை நனைக்க அககுளிரினை வெறுத்துச் சோலைகளைச் சென றடையும் (குறு. 334:1-3). உப்புவாணிகரின் வண்டி களின தோடு வரிசையாக வைததாற்போனறு, உலாந்த மரககிளைகள் தோன்றும் (குறு. 388:4,5). ஆடுகின்ற தலையையுடைய ஆட்டின் தோட்டினை இடையன் மேய்ககச் செலுத்தினான் (நற். 169.6,7). தோடு அமைநத தூவியினையும் நீண்ட காலகளையு முடையது நாரை (நற். 178:2). தாழையின் முள்ளையுடைய நெடுந்தோட்டு (தொகுதியாகிய இலையிலே) உள்மடலிலே வெண்பூ தோன்றும் (நற. 203: 2, 3). வெற்பனோடு கொண்ட தொடர்பின் விளைவாகத் தலைவியின் தோடாக, அமைத்துச் செறிந்த வளை நெகிழ்ந்தது (நற். 282:1,9). நெருங்கிய தோடாக உடைய ஒளிமிக்க வளையணிந்தவள் தலைவி (நற். 306:10). யாடு களின் தோடு தாம் மேயவதை ஒழித்துததொழுவம் புகுந்தது (நற். 321.1,2). கறையான் தோடு புனைநது உயர்ததிய புற்றில் சிதலை ஒழியும்படி ஆணகரடி இரவில் உறிஞ்சி இழுத்தது (நற. 325: 1-5). புன்னையின் நறுநதாது உதிரும்படி அதன கிளைகளில் தங்கிய நாரையின் தோடு இரை வேண்டிப பெயர்நதது (நற். 375.1,2). "தலைவன் பிரிநது சென்ற இடததிலுள்ள புளளினங்களின் பெருநதோடு, 'யாம் புணர்ந்துறைதும்; நீ யாங்குப் பிரிநதுறைதி' என அவனிடம் கூறவில்லையே" எனறு தலைவி புட்களை நொநது கூறினாள் (ஐங். 333:2-5. கொம்புகள் மகளிரிடததே தலைமை யினையுடைய பூக்களைத தோடு உறத் தாழ்நது கொடுததன (கலி. 28:1-4).

3. இலை/ஓலை. சோழன கரிய பனையின் வெளளிய தோட்டை - ஓலையை - சூடினோ னலலன (புறம். 45:1). அதியமான, இளைய பனையினை உச்சியில கொணட ஊசித்தனமை பொருநதிய வெள்ளிய தோட்டை வெட்சி, வேங்கைப் பூக்களுடனே பொலிவுபெறத் தலையில் சூடியவன் (புறம. 100:3-6). ஈர நிலத்தே உழுது வித்திக் களையைக களைதலான் தோடு (இலை) தழைததுக் காயத்து வரகு சீரிதாக விளைநதது. (புறம. 120:3-9). வேங்கை மலரினைப பனந் தோடடில தொடுத்துக கோவலா நடுகல்லுககுச் சூட்டுவர் (புறம. 265:2-5). கழனிவளவிய தோட்டி னையும் ஒனறோடொன்று தம்மிற் பினனிக் கிடக்கும் கதிர்களையுமுடையது (புறம். 338:9,10). சேரன, வீரம் பொருநதிய பனையின வெள்ளிய தோட்டை அணிந்தான (பதி. 51:31). மறவர் வெள்ளிய பனந் தோட்டிலே தொடுத்த குவளைப் பூவைச் சூடினர் (பதி. 58:2). சேரன பனையினது குவிநத அரும்பு போனற ஊசி வெண

தோடடினை அணிநது போர்க்குச் சென்றான (பதி. 70:6,7). கரிய பனங குருத்தில் அலர்நத தோட்டினை அணிநத சேரனைக கரிகாலன வென்றான (பொரு. 143-148). தெங்கினுடைய வளவிய தோட்டின் வாடிய மடலால வேயப் பெற்றது தனி மனை (பெரு. 353-355). நெல் வளவிய தோட்டினையுடையது (நெடு. 22). கட்டு விசியும் வேலனும் முருகனை மனைககண் வருவித்து அவனது கடம்பினையும் களிற்றினையும் பாடிப பனந்தோட்டினையும் கடப்ப மாலையை யும் கையிற் கொணடணிநது அசைநது அசைநது ஆடினர் (அகம. 138:10-13). பாதிரிப பூவை அலரியொடு விரவித் தாழம் பூவின வெண தோடடில வைததுக கணணி கட்டினர் (அகம். 191:1-3). மலையில நீண்டு வளர்நத செவ்வாழை யின் அசையும் அழகிய தோடு, காற்று மோதுந தோறும துயில கொள்ளும யானையின் உடமபினைத தடவும் (அகம். 302:1-3). தலைவன பனைமரத்தின் உச்சியிலே உள்ள வெண்மையான தோட்டிலே வேப்ப மலரைக் கட்டித் தலையி லணிந்தனன் (குறு. 281:2-4). சுறாமீன் கொம்பு போன்று இரு புறமும் முள்ளையுடைய தாழை யினதோடு முறிநது சாயும்படி நாரையின கூட்டம வநது தங்கியது (நற். 131:4-6). தினைக் கதிர்கள் எல்லாம் பால் நிறைந்து முற்றித் தலை சாய்ந்து மேலே உள்ள தோடுகள் அலைநதன (நற். 206:1,2). மணல மேடாகிய நெடிய கரையில கடலின் புறத்திலே, தோடு பொதிந்த தாழை தலை சாயநதன (நற். 211:6,7). தினைபபுனமெல்லாம தோடு புலர்ந்து, மலையருவி ஒலிததாற்போல் ஒலித்தன (நற். 313:9-11). குருகு மன்றத்தின்கண, உயாந்த பனையின் தோடாகிய மடலில ஏறி யிருந்து தன துணையினைக் கூவியழைத்தது (நற். 338:8-12).

4. முகிழ் (பனங் குரும்பையின் மேலுள்ளது). பனை யின சருச்சரையுடைய தோட்டு - முகிழையுடைய- குரும்பையைக் கொடியாற் கட்டிப் பினனின பின்னலைச் சிறுவர் இழுத்தனா (கலி. 83:81-0).

5. **காதணி.** தோடு-காதணி-அணிந்து பாடுதற குரியார் பாடினர் (பரி. 10:115,116).

6. **கதிர்த்தாள்.** தலைவி தினையை நோக்கி, 'தோடு - கதிர்த்தாள் - தலை சாயாது நிமிர்ந்து நினறு நெடுநாள் கழித்துக் கதிரீன்று விளைக' எனக கூறினாள் (நற். 251:9-11).

7. **தாறு.** வாழையின் மெல்லிய தோட்டின- தாற்றின-நுனியில நாலும் பூவை நெற்கதிர் அசையச செய்தது (நற். 400:1,2).

**தோணி** - படகு. சீறூர் மன்னன புரவி கடலிற் செல்லும் தோணி போலப் படையினைப பிளந்து சென்றது (புறம். 299.1-3). கப்பல் கொணடு வநது தந்த பொற் பரிசத்தைக் கழிகளில இயங்கும் தோணியால கரையில் கொண்டு சோத்தனர் (புறம. 343.5,6). மீன பிடிக்கும் படகின் மேலேறிக் கொண்டு கடற்பரப்பின்கண்ணே கடநது சென்று, சுறாமீனையும் பிற மீன்களையும் பிடித்து, அவற்றைத் துண்டித்து, இறைச்சிகளை நிரபபிய தோணியராயப் பரதவர் திருமபினர் (நற. 111:3, 6-8)

**தோப்பி/தோப்பிக்கள்** - நெல்லாற் சமைத்த கள. தலைவன் பகைவர் பசுககளை அடிததுக் கொண்டு சென்று அவற்றைக் கள்ளுக்கு விலையாகப்போக்கி இல்லிலே சமைதத களளில இனிதாகிய நெல்லாற செய்த தோப்பியினை உண்டான. (பெரு. 138,141, 142). கரந்தை வீரர், நடுகல்லில் மயில தோகை களைச சூட்டித துடியை அடிததுத தோப்பிக் கள ளோடு செம்மறிக் குட்டியைப பலிகொடுததனா (அகம. 35.6-9) மறவா எருதினைக் கொன்று அதன இறைச்சியைத் தின்று அவ்வூனைத தின்றதனா லாய வேட்கை தீரக குற்றமற்ற முதிர்நத தோப்பிக் கள்ளைக் குடித்தனா (அகம. 265 12-17). மாங கனிகளுடன, பலவினது சுளைகளையிட்டுத் தேனுடன கூட்டி ஆக்கிய, வண்டு மொய்க்கும அரியலாகிய மூங்கிற குழாயில் நெடிதிருநது முதிர்தலின கடிய வேகங்கொணட பாமபினது வெகுட்சியை ஒதத தோப்பியினைத் தெய்வம உறையும மலைக்குப் படைததுக் குறவா தம மகளிா தரப்பருகினர் (அகம். 348.2-9).

**தோமரம்** - தண்டாயுதம். தோமரததை - தணடா யுதத்தை - வலப்பக்கத்தே ஏநதியவராயப் பகை வர்க்கு அச்சததைச செய்யும பொருட்டு இளையர் எழுநதனா (பதி. 54:14-16).

**தோரை** - நெல்லில ஒருவகை (மூங்கில நெல்). அகிலையும சநதனததையும வெட்டி மேட்டு நிலததே விதைத்த குறிய கதிர்களை யுடையது தோரைநெல - மூங்கில்நெல (மது. 286,287). காட்டி டததே மழையால ஈனறணிமை தீர்நது முற்றிய அழகிய குலையினையுடைய தோரை அவல இடிக்கும செவ்வியைக் கொணடன (மலை. 120,121).

**தோல்** - 1. கேடகம்/பரிசை. தோலகள் - பரிசைகள - ஒலித்துத் தைதத அம்புகளால துளை தோன்றுவன

நிலையில் தப்பாத இலக்கத்தை ஒத்தன (புறம். 4: 5,6) சோழன இராசசூயம்வேட்ட பெருநறகிள்ளி முகிலபோலும் நிறததையுடைய தோல் பரப்பி முனையிடம் கலங்க மேறசென்றான் (புறம். 16:2,3). ‘திரணட முகிலெனக கருதி மயங்கும் பல தோற் படையினையுடைய, வேநதன் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை (புறம். 17:34, 40). தேர் கொடுவர வந்த போரிற்கமைந்தோர் எலலாம் தாம் பிடித்த தோல் தம் கண்களை மறைப்ப ஒருசேரப்பட்டனர் (புறம். 63:5, 6). அதியமான், கடல் போன்ற படையுடனே, கழல் வடிவாகவும கிணகிணி வடிவாகவும் செய்து செறிககபபட்டு அம்பு படுதலால் துளைபட்ட தோலை உடையவன (புறம். 97:14-16). அதியமான் வேலைக் கணட பகைவர் தமது தோலைக் காம்புடனே, கைநீட்டிச் செறித்தனர் (புறம். 98: 10, 11). தோல் சிறியாழ்ப்பாணன கையதாயிற்று (புறம. 285:3, 4). ‘தோலதா, தோலதா எனறு கேட்கினறாய; தோலோடு துறுகல் ஒன்றைக கொணடு நின் மார்பை மறைப்பாய் ஆயினும் உயகுவாய அல்லை’ என வீரன் ஒருவனை அரிசில கிழாா பாடுவா (புறம. 300:1, 2). குதிரையின் உளைமயிா போலும் குடுமியுடனே தோலமிசை வீழநது கிடக்கும வீரன் ஒருவனைப் பொன் முடியார் பாராட்டுவர் (புறம. 310:5-8). சிறப் புடைய செங்கண புகையெழ நோக்கித் தன் ஒரு தோலைக கொணடு பகைவா எறியும் படைகளைத தடுககும வீரனை ஒளவையார் சிறப்பிபபர் (புறம. 311:5-7). பகைவரது வில்லிலிருந்து வரும் அம்பின் வேகத்தை அடங்கச் செய்த வன்மையையுடைய வெள்ளிய தோல் போன்ற பண்பினையுடைய சேனையையுடையவர் அரசர் (பதி. 45:15-17). சேனையைப புனலாக உருவகம் செய்யும் போது உயாநத தோல் எல்லையின்மேல் வேலாகிய மீன் விளங்குதல் குறிப்பிடப்பட்டுள்ளது (பதி. 50:9). மேகததை ஒததுக கரிய பெரிய தோற்படை தோனறும் (பதி. 52:6;62:2). விடியறகாலத்து மேகக் கூட்டததின உச்சியை ஒத்த தோற்றத்தையுடைய தோலின் மேல் வேல எழும் (பதி. 66:11,12). இளஞ் சேரலிரும்பொறை தேரின் கொடி நுடஙகத் தோல் பககததே போா குறித்து ஆர்பபப் பாசறையில இருந்தான (பதி 82:8,9). ஆண்யானை நெருங்கிய பல தோல தொகுதியொடு தேரில் அசை கினற கொடிகள் பொலிவு பெறறு, நின்னைக காணபாாக்கு நினது படை செல்லும் செறிவு மிகவும இனியது’ என இளஞ்சேரல் இரும் பொறையின படைச சிறபபைப் பெருங்குன்றூர் கிழாா பாராட்டுவர் (பதி. 83.3-5). ஒனறோ டொன்று கலத்தலையுடைய, முரசுகள் ஒலிக் கின்ற, வரிசையாக அமைந்த, தோல வரைப் பினையுடைய கொங்கு நாட்டிலுள்ளார்கருத் தலைவன் இளஞ்சேரல் இரும்பொறை (பதி. 88: 16,19). கழிகளுடன பிணிக்கப்பட்ட கரிய தோலிடததே பொழியும் அம்புகள் தைத்தலால் எழும் ஓசை, யானை மணி ஒலியுடனும் முரசொலி யுடனும் சேர்ந்து நள்ளிரவில் ஒலித்தது (அகம். 24: 13-15). கழியாற் பிணிக்கப்பட்ட கரிய தோலின் நிரைகணடாலொத்த, இறந்த ஆட்களை இட்டுத் தழைகளைக் கொண்டு மூடிய கற்குவியல்கள் தோன்றும் (அகம். 67:13,14). சோழர் கரிய மேகம் போனற நிறமுடைய பல தோறபடையினை யுடையவர் (அகம. 123:10). பழையன் மேகம் போலும கரிய தோலினை உடையவன் (அகம். 186:15). நீலம ஊட்டப்பெறற தோலினது நிறம் மறையும்படி பதித்த வட்டக கண்ணாடி போலப் பகன்றை வெள்ளியனவாக மலரும் (அகம். 217: 6-8). மேகம் போன்ற தோலினையுடையவர் சோழர் (அகம். 336:19,20). அரசரது வரிசையாகச் செலலும் நுண்ணிய வேலைப்பாடமைந்த தோல் போலத் தேனடைகள் தொங்கும் (குறு. 392:7,8). மதில் மேல பகைப்படை பாயாதவாறு காதது நிற்கும் தோல போல விசும்பிலே மேகம் செல்லும் (நற. 197:10,12).

2. உறை. தோலின் கண-உறையின் கண்-செறித்தல் இல்லாத வேலை உடையவன் அதியமான (புறம். 98:10). பாணன் இறைச்சி இட்டு வைத்த தோலினைத் தோளிடததே கோத்துத் தொங்க விட்டுள்ளான் (பெரு. 283,284). கழுவோடே சூட்டுக் கோலகளையும் இட்டுச சுருககிய தோல் உடையவா கோவலர் (கலி. 106:1,4).

3. மேந்தோல். பாலின்மையின் தோலாம் தன்மை யோடு திரங்கித துளை தூர்ந்தது வறிய முலை (புறம். 164:3,4). குறும்பூழச்சேவல் தோல் களைநத எள்ளையுண்டது (புறம். 321:1-3). புள்ளிமான தோலினை, ஊனை ஒழித்துத் தீய பாகத்தைக் களைநது எஞ்சிய ஒளிவிடுகின்ற விளிம்பிலே, அருங்கலத்தையும முததததையும் கட்டி யாகஞ் செயதறகுச் சூடுவர் (பதி.74:10-14). பிள்ளையைப பெற்ற எயிறறி மான் தோலாகிய படுககையிலே அபபிள்ளையோடே முடங்கிக கிடந்தாள் (பெரு. 89,90). இரும்பைத தகடாககினாலொத்த திரை யாத மெல்லிய தோலினையுடையவா கருங்கை வினைஞரது காதலஞ் சிறாஅா (பெரு. 222, 223). இருள் கரிய பிடியினகண்ணே பொருநதின

தோலையொத்தது (மது. 634). நறவை நாட்காலத்தே குடித்த குறவர், தம் பெண்டிரோடே கூடி மான் தோல் போர்த்த சிறுபறை ஒலிப்பக் குரவைக் கூத்தாடுவர் (மலை. 320:322). முதலையின் மேந் தோலையொத்தது கரிய அடியினையுடைய ஓமை மரம் (அகம். 3:1,2). ஆண் கரடியின் தொங்கும் தோலுள் (உறைக்குள்) பொருந்தியிருக்கும் நகம் பற்றிக் கொள்வதால் பாம்பு வலிமையற்றொழியும் (அகம். 8:2-4). தோலாம் தனமையோடு திரங்கிய முலையுடையது பெண் கரடி (அகம. 201:16-19). எருமையின், முதுகு மயிரால் அழகு பெற்ற கரிய தோலினையுடையது (அகம். 206:3,4). ஆறலைப் போர் கல்லெடுத்து எறிதலின, வழிச செல்வோர், புலியின தோல போன்ற பல கிழிவுகளைக கொணட உடையினராயச சென்றனர் (அகம. 285·8-10). உதிர்ந்து கிடககும் நெல்லிககாயகளைப பிணைமான உணண வேண்டிக கலைமான தோலாற பொதியப் பெற்ற கொம்புகள் அதிரந் திடக் கூவி அழைககும் (அகம். 291:16-20). ஓமை மரத்தின தோலினைக காட்டு யானை உணணும் (குறு. 79:1,2). அருவி பாம்பின் தொஙகுகின்ற தோலை ஒததிருக்கும் (குறு. 235:1,2). ஆண் பன்றி, தோலாய வற்றிய முலையையுடைய பெண் பனறி யுடனே செனறு தினைக கதிரைத் தின்றழிககும் (நற். 336:1,2) பால்வற்றிய தோலாகிய முலையை யுடையது செநநாய (நற. 103:5,6). தோலை யுடையது பகன்றை மலா (நற். 86 2,3). புலியைக கொனறு அதன தோலை உடுததுச சிவன கபாலம ஆடுவா (கலி. 1:11). செவ்வேள் காலில் அணிநதது தோலால தைதத முதுகுடையதும் பீலிபபோழால் அலங்கரிககபபட்டதுமாகிய செருப்பு (பரி. 21·3-7)

4. துருத்தி. கொற்றொழில செயகின்றவன் மெத தெனற தோலை - துருத்தியை-அமுக்கி ஊதுவான (பெரு. 206:207). பிரபபங்கொடி ஆம்பலின இலை யினைச் சுற்றிட, அதனை வாடைக காறறு அசைததலால, அவ்விலை ஊதப பெறும் கொலலன உலைக் களத்து விசைத்து இழுத்துவிடும் தோல் போன்று புடைத்துச் சுருங்கும (அகம். 96:3-7). ஏழு ஊரில் உள்ளார்ககும் பொதுவான தொழிற் பாட்டுக்காக ஓர் ஊரில் அமைககப்பெற்ற உலை யிடததில பொருத்தப் பெறற தோல் போலத் தலைவியின் நெஞ்சம் எல்லையின்றி வருந்தும (குறு. 172:5-7).

5. யானை. தோலை-யானையை - பெயர்த்த மிக்க வலியையுடையவன கரிகாலன (புறம். 7:6). அணி யாய் நின்ற தோல ஓட்டிப புகழை உணடாக்கி எடுத்தது வெற்றிக்கொடி (மது. 370-371). உயர்ச் சியையுடையதோல் அணிந்து நிறகின்ற அணியிலே சென்று வீராபொருதனர் (மலை. 88). மேகங்கள என்று மருளும பல தோல உடையது அரண (மலை. 377,378). மேகஙகள், படைகளின கணனே நிரைக்கப்பட்ட தோலை ஒபபனவாகி வலமாக எழுந்தன (அகம். 278:1-3). கல்வரையின தோல வழஙகு சிறுநெறி உள்ளது (குறு. 207:5).

6. குதிரைச்சேணம். தோலினை-குதிரைச சேணத் தினை - துமித்துக கூரிய முனையினையுடைய அமபுகள வநது அழுத்துகையினாலே, குதிரைகள் செவி சாயத்துப புல்லுணணாது வருநதின (முல்லை. 72-74).

7. செருபபு. பொதிநத தோல-செருபபு - ஒலிககும் அடியினையுடையவா உமணர் (அகம. 194,4). 'தொடுதோல்' காணக.

**தோழம்-பேரெண.** திருமால் பாறகடலைக கடைதறகு நாணாகி அககடலைக கடையக் கழிநத ஒரு தோழம் காலமும பூமுடி நாகராகிய ஆதிசேடன தமது அழியா ஆறறலாலே இடையறாமல மத்தின கண நாணாகிக கிடநது அழகு செயதா (பரி. தி. 1:68-71).

**தோழன் - நணபன்.** 'யான இமமகளிர்தம தநதையின (பாரியின) தோழன' எனப பாரி மகளிரை இருஙகோவேளுழைக கொண்டு செனற கபிலா கூறினார் (புறம. 201·5,6). போரிலே பகைவரை எதிர்தத தம தோழறகு உதவ வீரன ஒருவன விரைநது வநதான (புறம. 275·9). 'புலவா தோழ' எனத தலைவன தன பாங்கனை விளிததான (குறு. 129:2).

**தோழி - 1.** தலைவியின் தோழமையைப் பெறறவள்; வேநதன பொருட்டுப புணணுறற மறவரைப பேய தொடாது காததறகு மனைவி 'காபபோம வருக அனபுடைத தோழியே' எனத தன பாங்கியை அழைததாள் (புறம. 281 7-9). 'சாணைக்கல செய வோன அரக்கொடு சேர்த்தியற்றிய கல்லைப போல் பிரியேம எனறு கூறிய சொலலையும தோழி, தலைவா மறநதனரோ?' எனப பாஙகியை விளித்துத தலைவி, தன ஆறறாமை கூறினாள் (அகம். 1 5-7). 'தோழி' என விளிததுத் தலைவி, தலைவன் சுட்டிச செனற பருவ வரவினைக கூறினாள் (அகம. 23.10). 'ஊரனைப புலத்தல கூடுமோ தோழி, எனத தலைவி உரைததாள் (அகம். 26:1,5). தோழி, வேறறு மொழியினை

யுடைய தேயங்களிலுள்ள பல மலைகளையும் கடந்து தலைவர் சென்றார் என்று கூறுதல இலலாதவராக என்னையே குறை கூறுகின்றனர்' எனத் தலைவி உரைத்தாள் (அகம். 31:12,15). 'நமதோளின உரிமை தனககே உரிமையாதலை அறியானாய், என்னை இரநது பின்னிறறற்கு முயலும் நம் தலைவனைத தோழி, நகுதற்குச் செலவோம' எனத் தலைவி மொழிந்தாள் (இதனைத தோழி தலைவிககுக் கூறலாகவும் கொள்வர்) (அகம. 32.17-21). 'தோழி, தலைவர் நமக்குப பிரிதல துன்பினைச் செய்து நம்மை அருளார் ஆயினும அவருடைய நட்பு நமககு ஒழியாதிருபபதாக' எனப பாங்கியை விளித்துத் தலைவி கூறினாள் (அகம். 40:9-12). ஞாயிறு மறையும பொழுதிலே தலைவன் மறையும் திசையை நோககித 'தோழி, இவன ஓர் ஆடவனே' எனத தலைவி கூறித தன காதல் உணர்வை வெளிப படுததினாள (அகம 48:24-26). 'தோழி, வாழி; நம தாயககு நின் மகளது கண்ணிறபடர்நத பசலையானது காம நோய் என இன்னுயிர் கழிவ தாயினும உரையாதே' எனப பாங்கியை விளிததுத் தலைவி உரைததாள் (அகம. 52:12-15). 'வாழி தோழி; நம் காதலா காதலிததது நமமினும் பொருளே; நீயோ அவர் காதல நம்பால அருள் செய்தலே எனகிறாய; நீ அறியாய' எனத தலைவி கூறினாள் (அகம. 53:1,15,16). 'தோழி, தலைவன் மாாபில பரத்தையரைப புணர்க்கப பரிவுடன் வரும் பாணன, பசு தன்னைப பாய்ந்தமையால் யாழினைக் கீழே போகட்டு எம்மில்லின கண் புகுநதான்; அது நகை விளைபபதாயுள்ளது' எனத தலைவி கூறினாள (அகம. 56:1,10-13). 'தோழி, மககளைப பெற்றோர்ககு இவ்வுலகததே புகழும் மறுமையும் வாழவும் எயதும என்பது உண்மை எனபதை உணாநதேன; நம் தலைவன நேற்றுப பரததை ஒருத்தியை மணம செய்தறகு இததெரு வழியே சென்ற போது வழியில மகனைக் கணடு அவனோடு நம இலலத்திறகே வநது விட்டான்' எனத் தலைமகள் கூறினாள் (அகம. 66:1-18). 'தோழி, நம நலததைத் துறநது போனவர் சென்ற நெறி, பறநதலையில் பேயத் தேரோடு பரல் இமைக்கும எனபர்; யான் என செய்வேன்' எனத தலைமகன பிரிந்த வழி வறபுறுத்தும் பாங்கிககுத தலைமகள் கூறினாள் (அகம். 67.1,14-18). 'வாழி தோழி; என்னுயிர் துறககும் பொழுது இது கொல்' எனத் தலைவன பிரிவிடதது ஆறறாளாய்த் தலைமகள் பாங்கிககுக கூறினாள் (அகம. 71:16-18). அஞ்சததகக வழியே வநதோன கொடியனுமலலன்; அவனைக குறிவழி வரச் செய்த நீயும தவறுடையை யல்லை; நின்பால் அரிய துன்பினை ஆக்கிய யானே தோழி, தவறுடையேன' எனத் தலைமகன இரவுக குறிக்கண் சிறைப் புறத்தானாகத் தலைமகள் பாங்கிக்குக் கூறினாள் (இதனைத் தோழி தலைமகட்குக் கூறியதாகவும் கொள்வர்) (அகம். 72:17-22). 'வாழி தோழி; மாலையினை அணிநத மார்பனைத் தினைப புனத்தில கண்டோர் பலர்; அவருள் இரவில் அணையொடு பொருந்தி, நீர் சொரியும் கண்ணினொடு மெலிநத தோளை யுடையவளாக யானொருத்தியுமே ஆயது என்னையோ' எனக கூறி, தலைவி பாங்கிக்கு அறத்தொடு நினறாள் (அகம். 82.14-18). 'தோழி வாழி; நம்களவொழுககத்தினை உணர்ந்து வைத்து அமைதியுறறிருககும் அன்னை முன் யாம் இக்களவொழுக்கத்திறபடடு ஒழுகுதல எவ்வாறு இயலும்' எனப் போககுடன்பட்ட தலைமகள் பாங்கிக்குக கூறினாள் (அகம. 95.5,14,15). 'தோழி, பலவும் நினைநது துனபததில் ஆழநதிடாதே என்கின்றாய, என் கணபனி நிறுத்தல எளிதோ' என வற்புறுககும் பாஙகிககுத் தலைமகள கூறினாள் (அகம. 97:14-16). 'தோழி, என்வளை நெகிழ்நத நிலையினைப் பார்த்து, வெறியாடுதலின் விளைவாகச் செவ்வேள் அருள் செயதால, யானுறற துன்பம பிறிதொன்றால் வநதது எனத தலைவன கருதுவன; அந்நிலையில் யான உயிர் வாழ்தல் இலலை' எனப் பாங்கிககுத் தலைமகள் கூறினாள் (தோழி தலைமகட்குக கூறியதாகவும் கொள்வர்) (அகம. 98:21,27-30). 'வாழி தோழி, நான கூறுவதனைக கேடபாயாக; பல மலைகளையும் கடந்து சென்ற தலைவர்க்கு வெறுககத் தகக செயல யாதும் நாம் செய்திலமே' எனக கிழததி பாங்கிக்குக கூறினாள் (தோழி கிழததிககுக கூறியதாகவும் கொள்வர்) (அகம. 101:1,17,18). 'தோழி, தலைவன என தோள் மணநது இனசொல கூறிச் சென்றனன்; இன்று அவன நல்காத காரணத்தால் நாம் நெறறியின் பசப்பினைக் காண்கிறோம்' என இரவுக குறிக்கண தலைமகன் சிறைப் புறமாகப பாஙகிககுச் சொலலுவாளாய்த் தலைமகள் கூறினாள் (அகம. 102:14-19). 'ஏடி தோழியே, ஞாயிறு மறையும சிறுபுன மாலையும் தலைவர் நமமை உள்ளார்' என நம்மைப புலநதுறையும் தலைவியின் துன்பம நீங்கத் தேரை விரைநது செலுத்துக எனத் தலைவன் பாகனிடம கூறினான (அகம.114:1-8,16). 'தோழி, நம் களவு, தித்தன எனபானது மதிலாகிய வேலியையுடைய உறையூரைச் சூழ்நதுள்ள கறகள் நிறைநத காவற் புறங்காடு போன்ற பல தடைகளை உடையது' எனத் தலைமகள் மொழிந தாள் (அகம. 122:21-23). 'வாழி தோழி; காமம்

கரை கடந்து செலலும்; ஆயினும என் நெஞசம் கை கடந்து அறநெறியில அவரது தளரா நின்ற அடியைத் தாங்கும் பொருட்டுச சென்று விட்டது' எனத் தலைமகன சிறைபபுறத்தானாகத தலைமகள் பாங்கிக்குக் கூறினாள் (அகம். 128:3-7,14,15). 'தோழி தலைவர், 'எம்மொடு வருதல் வலலையோ' என்று எனனை வினவினர் எனத் தலைமகள உரைததாள் (அகம். 133:12,13). 'காதலையுடைய அழகிய தோழியே, ஆதிமந்தி போல அறிவு திரிந்து யான் மயங்கியுள்ளேன்' எனப் பிரிவின் கண வேறுபட்ட தலைமகள் பாஙகிக்குக் கூறினாள (அகம். 135:5, 6). 'இகுளையே, காதலையுடைய அழகிய தோழியே, கேட்பாயாக; நாடன் குறி வருதலை என் நெஞசு நினையும்; என் துன்பத் தினைக கணடு அனனை ஐயமுறறு, முருகனை மனைக்கண தருவிததுக கடடுவிசசியும வேலனும அசைநதசைநதாடுதல் நனறோ' எனத தலைமகள், தலைமகன சிறைபபுறததானாகப் பாங்கிககுக கூறினாள் (அகம். 138). வாழி தோழி; நான் கூறுவதனைக கேட்பாயாக; சுரன் இறநதோர் முதிய ஊரினகண் பலரும் ஒனறு சேர்ந்த விழவினை நம்முடன் கொண்டாட வருவாராக' எனறு, பிரிவிடை ஆறறாள் எனக்கவனற பாங்கிககுக் கிழததி உரைத்தாள் (அகம். 141:1, 10, 11, 29). 'வாழி தோழி; காடிறநது சென்ற தலைவர் பொருள் நினையும் நெஞசததால நமபால் மிகவும் அவளுடையர் அல்லர் ஆவர்' எனப பிரிவினகண் வேறுபட்ட தலைமகள் கூறினாள் (அகம. 151.4, 5, 15). 'தோழி தலைவரது பிரிவால நாம நோயுழப் போமாயினும் தாம தம பொருள ஈட்டும வினை யினை முடிதது வருவாராக' எனத தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் கூறினாள் (அகம. 155.5, 6). 'தோழி, மனையின்கண் தலை வரைப பிரிந்து தனிததிருத்தலை வலலாாகுத தலைவர் அவர் மனம விரும்பி ஏறறுக கொளளுமபடி சொல்வர்; யான அவவாறு தனித் திருத்தலை ஆறறுகிலேன' எனப் பிரிவுணர்ததிய பாஙகிககுத தலைமகள் கூறினாள் (அகம. 157: 9, 10, 14). 'தோழி, வெஞசுரம இறநத காதலர் வினை முடிதது வருவேன எனறனரன்றோ' (வந்திலரே என செய்வல்) எனத் தலைமகள் வருந்தியுரைததாள் (அகம. 175:8, 9). 'தோழி, தலைவர் சேயமைககண உள்ளாராயினும் தாழ்ககாதுவருவர் எனகிறாய; ..கார் காலம் வந்து விட்டதே' எனத தலைமகன குறிதத பருவ வர வினகண தலைமகள் பாஙகிககுக கூறினாள் (அகம. 183;4,5,10). 'தோழி, பொருள்கடைக் கூட்டிய நெஞசமொடு தலைவர் நம் உயர்வு உள்ளினா; பொலிவினையுடைய அழகிய மனையின முற்றம் தனிமையுறுமோ' எனபபிரிவுணாததிய தோழிககுத தலைமகள் கூறினாள் (அகம. 187.4,5,9,10). 'தோழி, இன்ன போழதில வருவோம எனத தலைவர் தெரிவிதத காலம இதுவே' எனப் பருவம் கண்டு ஆறறாது தலைமகள் கூறினாள் (அகம. 194:16-19). 'தோழி, ஊரனாகிய நம தலைவன் பரததையின மனையில் மணததினைப பொருந துதல உடையன; அதனை வெறுதது என் வளைகள் நெகிழப் பெற்றன; இவ்வாறாகவும இவ்விறலியின் கூறறு யாதெனப்படும' என வாயில வேண்டிச் சென்ற விறலிககுத் தலைமகள் வாயில மறுத்தாள் (அகம். 206:1,6,16). 'தோழி, நமது இனிய உயிாத் துணைவராய காதலர் வருவர்கொல் எனறு நம காதலி வருநதுவள்; ஆதலின பாகனே, விரைநது நம் தேர் செலவதாக' என வினை முற்றிய தலைமகன தேர்பபாகற்குக கூறினான (அகம். 224:1,15-18). 'வாழிதோழி' - நுதல பசநதுள்ளது, தோள்கள் மெலிநது விட்டன, அல்குலின வரிகளும வாடிப் போயின; இனி இவள் எநநிலை அடை வாளோ' என, நீ நெடிது நினைநது வருநதாதே' எனப் பிரிவின்கண வேறுபடட பாஙகிககுத் தலைமகள் கூறினாள் (தலைமகட்குத தோழி கூறிய தாகவும் கொள்வர்) (அகம. 227.1-5). 'எனது மேனியின அழகு தொலைதலை நோககி வருந தாதே எனகிறாய, தோழி, இப்பொழுது வருவேம எனத தெளிவித்துச சென்றவா, இளவேனிற காலததிலும வநதிலரே' எனப் பிரிவினகண வேறுபட்ட தலைமகளை வறபுறுத்தும பாஙகிககுத் தலைமகள வனபுறை எதிரழிநது கூறினாள (அகம். 229:14,15,20,21). 'வாழி தோழி;நான் கூறுவதனைக கேள்; நம தலைவா பொருள் தேடுதலை விருமபி நம்மை நினைநதிலரோ, நினைநதும வினையின மிகுதியினால மறநது விட்டனரோ' எனப பிரிவின கண, தலைமகள் ஆறறாமை மீதூரப பாஙகிககுக கூறினாள (அகம. 235'1-3). 'ஊரனது காமம பெருமை இவறறினை அறியாதேன, துனபததைச சொலலி மயங்குதலினின்றும பெரிதும தபபினேன, வாழி தோழி' என ஆறறாமை வாயிலாகப புகக தலைமகன நீககததுககண புகக பாங்கிககுத தலைமகள் கூறினாள் (அம. 236.8-10,21). 'வாழி தோழி, எனறும நமமை விடடுப பிரியாத காதலுடன நம பககலில உள்ளாராகிய நம் காதலர், மலையினைக கடநது சென்றார், ஆதலின ஆறறகில்லேன எனப பிரிவிடை வேறுபடட தலைமகள வறபுறுககும பாங கிககுக கூறினாள் (அகம. 241 4,5,16). 'தோழி, தலைமகனோடிருக்கும்போது இனபதநிறகுக

காரணமான வாடை நாம் நீரொழுகும் கண்களை உடையேம ஆக நமககே துனபம தருவதாக ஆகின்றது; நம தொலவினைப் பயன் அத்தன்மைத் துப போலும' எனப் பிரிவின்கண் வறபுறுத்தும் பாஙகிகுத் தலைமகள் ஆற்றேன் என்பதுபடக் கூறினாள் (அகம. 243:13-15). 'வாழி தோழி; குளிாநத செவ்வியையுடைய கார் காலத்தே நம் தலைவர் வரினும வாராதிருபபினும் அவர் சென்ற இடம அவர்கது இனியது போலும' எனத் தலைவி கூறினாள (அகம 244:6-13) தோழி வாழி; துறந்து செனறோா அருளிலர்' எனத தலைமகளது வேறுபாடு கணடு வேறுபட்ட பாங்கிக்குத் தலைமகள் கூறினாள (அகம. 247:2,3). 'வாழி தோழி; நானகூறுவதனைக கேட்பாயாக, மலை இறந்த நம தலைவா எனது இளமை நலம் தொலைந்த வழியும அருள் செயகிலர்; அவ்வாறாகவும் இவ்வூரார் செயயும அம்பல எனனையோ' எனத் தலைமகளதுவேறுபாடு கண்டு ஆற்றாளாய பாங்கிக்குத தலைமகள் கூறினாள் (அகம. 249:1,,2,10) 'தோழி, பெரிய மலைச சாரலினகண வேல் ஒன்றனையே கொண்டு தனியனாகி வருதலைத் தலைவனும் அஞ்சான்; தனித்திருததலை யானும் ஆறறகில்லேன; யாம் என் செய்வாம்' எனத் தலைமகன சிறைபபுறத்தானாகப் பாங்கிக்குச் சொல்லுவாளாயத தலைமகள் கூறினாள் (அகம். 252.5-9). 'தோழி, பொருளீட்டும் முயறசி மேறகொணடு செனற நம் தலைவர், வாடை வருத்துதலால வளை நெகிழ்தலைச் சென்று சொலலும அனபு உடையாரைப பெறின காலம் தாழ்த்தாது விரைநது வருவர்; அங்ஙனம் சென்றுரைப்பார் இலரே' எனப் பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆறறாமை மீதூரப பாங்கிககுக் கூறினாள (அகம. 255:7-9,15-19). 'தோழி, வாழி; சுரததினைக் கடநது சென்ற தலைவர் நம்மினும் உறுதியுடையதாக ஆய்நது துணிந்த பொருள், இமயமாய செவ்விய மலையினை ஒக்குமோ; கங்கையின் நீர் அடியில் மறைவுறற செலவமோ; என்னை கொல்' எனத தலைமகள் ஆற்றாமை மீதூரப பாஙகிக்குக் கூறினாள (அகம. 265·3-7,22,23). 'தோழி, காடு பல வறறையும கடநது செனறவராய தலைவர் பழியுடையரலலர்; வளையலை நெகிழவிட்ட தோள்களே தவறுடையன' எனத தலைமகளது பிரிவாறறாமை கணடு ஆற்றாளாகிய பாஙகிககுத் தலைமகள கூறினாள் (அகம. 267:13–17). 'இளவேனில் வநதது; தோழி, நம் காதலர் வாரார்' எனத்தலைமகள பருவங் கணடழிநது பாங்கிக்குக கூறினாள் (அகம. 277: 18-20). 'தோழி, தலைவர் அவரை நமககு விட்டு விட்டு மலையிறநது செனறனர்; இனிச் செயற்பாலதனை ஆராய்ந்து பார்' எனப பிரிவின்கண் தலைமகளது வேறுபாடு கண்டு ஆற்றாளாகிய பாங்கிக்குத தலைமகள் கூறினாள் (அகம். 281:1,12,13). 'தோழி, சேர்ப்பன் நம்மை மணத்தற்கு முன்பும் என் கண்கள் நெயதலின நிறததினை நீங்கிப் பொன் போலும் நிறத்தைக் கொண்டன; இஃது என்னையோ' எனத்தலைமகன் சிறைப்புறததானாகப் பாங்கிக்குச் சொல்லுவாளாய்த தலைமகள் கூறினாள் (அகம். 290:8-16). 'தோழி, வளை நெகிழதற்கு ஏதுவாய துன்பத்தினைக கண்டு, வெறியாடுதலையும் நாணுவேன்; மலைநாடன் நம்மை மணந்து கொள்ளாதவழி நாம் செய்வதனைககூறுவாயாக'என வெறி அசசுறுததித் தலைமகள் பாங்கிககுக் கூறினாள் (அகம். 292:1,5,6,15). 'தோழி, வேனிலால் வெபப மிக்க சுரத்தில் தனித்து நம் காதலா செல்வார் என்று ஊரார் கூறுகினறனா' எனப பிரியக் கருதிய தலைமகன் குறிபபறிநது தலைமகள பாங்கிககுக் கூறினாள் (இதனைத் தோழி கூறறாகவும் கொள்வர்) (அகம். 293:7,10). 'தோழி, நம் துனபினை அறியாத அறனிலாத தலைவர் நம் துயா நிலையினை நீக்க வருவாரோ எனறெணணி, வாடைக் காறறால் எனது தனிமையை யான் பொறேன ஆகினறேன்' எனப் பருவ வரவின்கண வற்புறுககும் பாங்கிகுத் தலைமகள் கூறினாள் (அகம. 294: 13-16). நீ தலைவியின தொடி திருததி, 'நின் தோழியொடு மனை செல்க' எனச் சொல்லிய அளவில தலைவி, வருந்துதற்கு யான அஞ்சுகிறேன' எனப் பகற குறிவநது நீங்தம் தலைவறகுப் பாங்கி கூறினாள் (அகம. 300:7-12). 'தோழி, துனபம் மிகப் பிரிந்த தலைவரைப் பலகாலும் நினைந்து வருந்துதலைச் சிறிது அமைந்திருபபோம் எனக கூறுகின்றனை; காதலர் செய்த காதலை மறததல கூடுமோ' எனப் பிரிவிடை வற்புறுத்தும் பாங்கிக்குத் தலைமகள் கூறினாள் (அகம். 301:1-3,27,28). 'தோழி, அருளில்லாத நம் தலைவர் பொருள் ஈட்டும் வினைககுச் செல்ல, வருததமுற்ற நெஞ்சுடையேனாகிய யான எங்ஙனம் ஆறறியிருபபேன்' எனப் பிரிவுணாததப்பட்ட பாஙகிககுத் தலைமகள் கூறினாள் (தோழி தலைமகட்குக் கூறியதாகவும் கொள்வா) (அகம். 305; 9-11). 'தோழி, நம் தலைவர் செனற நாட்டின்கண் நாம சென்றால எனனையோ' எனப பிரிவிடைத் தலைமகளது வேறுபாடு கண்டு வேறுபட்ட பாங்கிகுத் தலைமகள் கூறினாள் (அகம 309:12,17). 'வாழி தோழி யான கூறுவதனைக் கேட்பாயாக; நம் காதலர் களவொழுககமும் வரம்பிகந்து நீண்டது; அனனையும் இதனை உட்கொண்டு காவல் செய்

திருக்கும்; எனவே இங்குத் தங்கியிருத்தல் எங்ஙனம் இயலும்; இவள் இரங்கத்தககாள் எனறு அருளிச் சில நாள் அமைந்திருப்பாயாக எனக் கூறிச் சென்றுள்ளார்' எனக் கொண்டு நீங்கக் கருதி ஒழிநத தலைமகன் பிரிவின் கண் தலைமகள் பாங்சிக்குக் கூறினாள் (அகம். 325:1,4-6,13,14). 'தோழி, இரவெல்லாம் இனிதாக இயைந்த தலைவர் நட்பு, நம் வளை நெகிழ அவர் வெறுத்தலைத் தெளிவாக உணர்வோ மாயின, அததலைவன் மார்பினை நாம் முயங்கு தொறும் நம மார்பின் கண்ணே அடககியிருப போம; அது கழிநததே' என இரவுக் குறி சிறைப் புறமாகப பாங்கி சொல்லெடுபபத தலைமகள் கூறினாள் (அகம 328.5-11). 'தோழி, பல நாடுகள் பினனே ஒழியச சென்றோர் அன்பிலர்' எனத் தலைமகன பிரிவின்கண பாங்கியிடம தலைமகள் கூறினாள (அகம. 331:8,9). வாழி தோழி; நாடன் நினது உயாவுக்கு ஏற்ற மெனமைத் தனமையன் என நீ அனபால் உரைத்து என் மனம் அமைதி யுறக் கூறிய இன சொறகள் எலலாம் வாய்மை யாய் முடிநதன' என இரவுக் குறிச் சிறைபபுற மாகப பாங்கியிடம தலைமகள் இயற்பட மொழிந்தாள் (அகம. 332:9-12). 'வாழி தோழி; மலையைக கடந்து சேயமைக்கண் சென்றன ராயினும் தாம் கூறிய கால எலலை நீடாது வருவர் என நீ கூறும இனிய மொழிகள் உண்மை யாக, வருவாராயின நன்றே; அவ்விடததில் தங்குவராயினும தூது வரப்பெறின் நமது பசலை மறைதல எளிதாகும்' எனப பிரிவிடை வற்புறுத்தும பாங்கிககுத் தலைமகள் கூறினாள் (அகம். 333:13-22). 'தோழி சிறநத இன்பததினை நுகரும் துணையினைப பககததில உடையார்க்கு வேனிற்பருவம அழகியதாகும். துணையைப பிரிநதுள்ள நாம் உயயுமாறில்லையே' எனப பிரிவினகண பாங்கியிடம தலைமகள் கூறினாள (அகம். 341:1,12,13). 'தோழி, நாம உடன செலல விழைநதனமாக, சின்னாள் கழிக எனறு முன்னாள் நம்மொடு பொய்ததனர்; ஆயினும் அவர் செல்லும் நெறி இளைபபாறிச் செலவதறகுக் காடு கவின பெறுவதாக' எனப பாஙகியிடம் தலைமகள் கூறினாள (அகம. 345:3,10, 11,18-21). 'வாழி தோழி; தலைவர், மூதூரின கண சேரிப் பெண டிருடைய அம்பலும் அலரும நமமிடத்தே தஙகியிருகக நம்மைப பிரிநது சென றனராயினும அவாககுச செய்யும வினை கை கூடுவதாக' எனத் தலைமகன பிரிவின்கண் தலைமகள் பாஙகியிடம கூறினாள (அகம. 347:6-9). 'தோழி, சுரநெறியைக கடந்த தலைவர் தாம் வரைந்து கொண்டு பற்றியதாலாய பழைய அழகு கெட என்ன பொருளைக் கருதினரோ' எனத தலைமகன் பிரிவினகண் பாங்கியிடம் தலைமகள் கூறினாள் (அகம். 349.2,3,14). 'காதல் மிகக அழகிய தோழி, ஆராயுமிடத்து நீ மிகவும் நல்லை; குன்ற நாடன் உயர்குடிப்பிறப்புடையவன், கூடுகினற வரைப் பிரியான், நாவால கெடு மொழிகளைக் கூறுவானல்லன்; அன்புடையவன்' எனறு அவன் சிறப்புககளைக் கூறிக கூட்டி வைததனை; அவன வதுவை செய்த நாளினும் எமககு இனியனாக உள்ளான்' எனத் தலைமகள் பாங்கியிடம கூறி னாள் (அகம. 352:7,11,17). 'இளவேனிற காலம வநதுளளது, அதனால வளையினை நெகிழதத துன்பினைத தலைவற்குக காட்டி, இவவாறு ஒழுகுதல நின தகுதிககு ஒத்ததன்று எனறு கூறி வருதறகுத் தோழியே செலவோம' எனப பிரி வுணாததிய பாஙகிக்குத தலைமகள் கூறினாள் (அகம. 355 7-14). 'காலம கார்ப பருவததைத் தொடங்கியது; வேந்தன் பாசறைக்கணணே உளள நம் தலைவர் வென்றி கொளளும விருபபததால் நமமை நினைத்தலும் செய்திலா; யாது செயவாம தோழி' எனப பருவம கணடழிநத தலைமகள் பாங்கியிடம் கூறினாள் (அகம். 364 9-12). 'கொடிய சுரநெறியைக கடந்து சென்ற நம தலைவா நீஙகி லராய மீண்டுவருதலை அறியின தோழி, என கண்கள் அழமாட்டா' எனப பிரிவிடை வேறுபட்ட தலைமகள் பாஙகிககுக் கூறினாள (அகம 375 16-18). 'தோழி, தலைவன பிரிநத மையால ஆகிய தனிமையும, மாறுபட்ட அனனையின பொருநதாத பாாவையும, துனப மிகக மாலைப பொழுதும கூடி நினறு வருததவும எஙஙனம வாழகினறாய எனக கேட்கிறாய; தலைவா நம்மை நினையாராயினும அவர் நாட்டில வானை அளாவிய மலை காணப பெறுதலின உள்ளேன ஆகினறேன' என இரவுக குறி சிறைபபுறமாகப பாஙகி சொலலெடுபபத தலைமகள் கூறினாள் (அகம. 378:11-24). 'வாழி தோழி, யான கூறுவதனைக கேடபாயாக, தலைவனது மார்பினையும அழகினையும விருமபி நாம வருநதும துனபினை உணராளாய அனனை வெறியாடலில் விருமபி வேலனை அழைகக, அவன இதனைத தணிககும மருநதினை யான அறிவேன எனக கூறுவான்; நாம், முருகன வேடடை யாடுதற்குச செலலுதலும உணடோ என வினவின எனனையோ' என இரவுககுறி சிறைப புறமாகத தலைமகள பாங்கியிடம கூறினாள் (தோழி தலைமகட்குக கூறியதாகவும கொள்வா) (அகம். 388:1,15-26). 'தோழி, எனது கூநதலிடததே

துயின்ற தலைவா புனைந்த கூந்தல் முடியைக் காணுநதோறும முனபுளள எனது பழைய அழகு நினைககபபடுகினறது; அவர் சென்று சின்னாட்களே ஆயினும என் கண்கள் துயிலா' எனப பிரிவிடை வறபுறுததும பாங்கியிடம் தலைமகள கூறினாள் (அகம். 391:6-10). 'காடிறநதோராகிய தலைவர், மழைக்கண நீரொழுகும் துன்பம் ஒழிய இபபொழுது வரின் நன்று, வாழி தோழி' எனப் பிரிவிடையே பாஙகிககுத் தலைமகள் கூறினாள் (அகம. 395·3-5,15). 'தோழி தலைவன பிரிநது செனறானாக, கணகள் இமை பொருந்தாவாயின; காம நோய என்பது இததகு தனமையுடையதோ' எனப பிரிவிடை ஆறறாள் எனக் கவன்ற பாஙகியிடம கிழத்தி உரைத்தாள் (குறு. 5.1,4,5). 'தோழி, நாடன என்னை விட்டு நீஙகத தலைபபட்டனன; அதனால் என கணகள பசலை நிறததை நிரமபப் பெறறுவிட்டன' எனக் கிழததி பாஙகியிடம் கூறினாள் (குறு. 13:3-5). 'தோழி, கேட்பாயாக; தலைவன கூடியது போனற பொயககனா மயகக, அவன அருகில் இருப்பதாக எண்ணிப் படுககையைத் தடவினேன' எனத் தலைமகள் கூறினாள் (குறு. 30:1-4). 'தோழி, குன்ற நாடன் நறறோள் மணநத ஞானறு பிரியேன என வஞசினம உரைததது நின் வருத்தததிறகுக் காரண மாகுமோ' என ஆறறாள் எனக் கவனறு வேறு பட்ட பாஙகியைத தலைமகள் ஆற்றுவித்தாள (குறு. 36). 'தோழி, தலைவனது நட்பு, அவன் பிரியக கணணீரோடு அப்பிரிவைப பொறுத்துக் கொள்ளும வனமையுடையாாக்கு எபபோதும் நலலது' எனத் தலைமகள் தனது ஆறறாமை தோனறப பாஙகியிடம் கூறினாள் (குறு. 38:3-6). 'தோழி, காதலர் பககததில் இருநதால் விழாக் கொள்ளும ஊரினர் போல மகிழவேன; ஆயின அவன் பிரிநதபோது பொலிவழிநது வருநதுவேன' எனப பிரிவிடை வேறுபாடுகணடு கவன்ற பாங்கிககுக கிழததி கூறினாள (குறு. 41). 'தோழி, அவா பிரிந்து சென்ற நாட்டில துனபததைத் தரும மாலைக காலமும தனிமைத் துயரும் இலலை போலும்' எனப பிரிவிடை ஆறறாள் எனக கவனற பாஙகியிடம கிழததி ஆறறுவல் எனபது படக கூறினாள் (குறு. 46:6,7). 'தோழி, தலைவர் பிரிவினால நாம துனபததையுடையேமாய் இருத தலை அறிந்தும் சேயநாடு பிரிநதவர் இன்னும் சேயராகவே உள்ளார்' எனப பாங்கிககுக கிழத்தி கூறினாள் (குறு 64 4,5). 'தோழி, காடு இறநதோர் உள்ளார் கொலலோ? எனப பிரிவிடை ஆறறாத தலைமகள பாங்கியிடம கூறினாள் (குறு. 67:1,5). 'வாழி தோழி; ஒனறு சொலவேன கேட்பாயாக; அரிய பாலை நிலத்துப பிரிந்து சென்ற தலைவர் திறதது என தோள்கள் எளியவாயின' எனப் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகள் பாங்கியிடம் கூறினாள் (குறு. 77:1,5,6). 'தோழி, முன் பனிக் காலத்திலும் வாராத தலைவர் பிரியும் முன்பு அழுதலைத தவிர் என்று நம் அழுத கணணீரைத் துடைப்பவர் இபபொழுது எத் தனமையுடையராவரோ' (மறநதனர் போலும்) எனப பருவம் கண்டழிந்த தலைமகள் பாங்கிககுக் கூறினாள் (குறு. 82) 'தோழி, நம் உயிர் நீஙகு மாயினும் அவர்மாட்டுப பரிவுரை பகராதே; அத தலைவர் நமககுத் தாயும் தநதையும் அலலரோ; அன்பு இலலாதவிடததுப புலவி எதன பொருட்டு' என வாயிலாகப் புகக பாங்கியிடம் தலைவி வாயில் மறுததாள (குறு. 93). 'தோழி, பிச்சியின் அருமபுகள் சிவநது காணபபடுதலைக் கணடு யானே காரப்பருவம என்று மயங்குவேன; பிரிந்து தனித்திருபபவராகிய தலைவர் மேகங்கள் முழஙகும ஒலியை நள்ளிரவில் கேட்பின் பிரிவுத் துயரால எநநிலையினை எய்துவரோ' எனப் பருவம் கண்டு தலைமகள் கூறினாள் (குறு. 94). 'வாழி தோழி; பீரககம் மலர்களுள் சிலவற்றைக் கொண்டு, தலைவரிடம் செனறு தலைவி இம்மலர் போனற நிறமுடைய பசலைபடரப் பெறறாள் என்று அவரிடம சொலலுவாரைப் பெற்றால் மிகவும நன்மை தருவதாகவிருககும்' எனறு பருவம் கணடழிநத தலைமகள் பாஙகியிடம கூறினாள் (குறு. 98). 'தோழி, துனபம மிகக வாடைக காலத திலும நம் காதலர் வாரார; யானும் இனி உயிர் வாழேன்' எனப பருவம கணடழிநத தலைமகள பாஙகியிடம் கூறினாள (குறு. 103:4-6). 'வாழி தோழி, ஒனறு சொலவேன கேட்பாயாக; நம் காதலர் பனிவீழகினற காலத்திலே பிரிந்தனா; அஙஙனம அவா பிரிநது செனற நாட்களும் பல வாகினறன' எனப பிரிவில் ஆறறாளாகிய தலைமகள் பாங்கிககுக கூறினாள் (குறு. 101). 'வாழி தோழி; தலைவனது சொற்களையுரைக்கும் தூது நம்மிடத்து வநதுள்ளது; அதனை ஏறறுக் கொணடு தாம எம்முடன் கூடிககலந்த காலத்திருநத அன்பு உடையராயினேம என்று கூறித் தூது விடுவோம்' எனத் தலைமகன் தூது கண்டு கிழத்தி பாங்கிக்குக் கூறினாள் (குறு. 106). 'தோழி, முலலை நிலத்தில் முல்லையினது வெணணிற மலர்கள் செக்கர் வானததின அழகைக கொணடன; இவறறைக் காணும் யான் இனி உயிா வாழேன்' எனப பருவம் கணடழிநத தலைமகள் பாஙகியிடம கூறினாள் (குறு. 108). 'தோழி, துன்பம் தருவதாய வீசும் வாடைக காறறினால எத்தனமையள் ஆயினளோ

எனக் கவலையுறாத தலைவர் வாராவிடினும் வரினும் நமக்கு எத்தகைய உறவினராவர்' எனப் பருவம் கண்டழிந்த தலைமகள் பாங்கிக்கு உரைத்தாள் (குறு. .110:1,2,7,8). 'தோழி, பிறர்கூறும் பழிக்கு அஞ்சின காமம் மெலிவடையும்; அதனைக் கைவிட்டால் நாண ஒன்றே எஞ்சும்; அவர் உண்ட நலன் பட்டையயுடைய ஒடிந்த கிளையைப் போன்றுள்ளது; இதனைக் காணபாயாக' என வரைவு நீட்டித்த வழித் தலைமகள தோழிக்குக் கூறினாள் (குறு. 112). 'தோழி, மாரிக் காலததே பலரும புகுவதறகுரிய வீட்டுக் கடைவாயிலை அடைப்போர், இன்னும் உள்ளே வருகின்றவர் இருக்கின்றீரோ என்று கூவிக் கேட்கவும நம் தலைவர் வாராராயினா' என வரைவு நீட்டித்தவழித் தலைமகள் பொழுது கண்டு பாங்கிககுக் கூறினாள் (குறு 118)· 'தோழி, தலைவன் இபபொழுது வந்ததாக நீ கூறியது உணமை தானோ; தலைவன குறியை வாயப்பச செய்யாத தவற்றினால் என்னுடைய தோளகள் பசலையடைநதன' எனத் தலைமகன் வரவுணர்ததிய பாங்கியிடம் தலைமகள் கூறினாள் (குறு. 121). 'வாழி தோழி, என பெண்மை நலன என தலைவனோடே என்னை விட்டு இடம் பெயர்ந்துள்ளது; அங்ஙனமாகவும யான் மட்டும் வளை நெகிழுமபடி மெலிந்து இன்னும் உயிர் வாழ்கின்றேன்' என வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகள் பாங்கிக்குக கூறுவாளாய்த் தலைவன சிறைப்புறமாகக் கூறினாள் (குறு. 125). 'தோழி, பிரிநத தலைவா மீணடு வநதாரிலலை; மழையால பாதுகாககபபட்ட முல்லைக் கொடி, தன அருமபுகளையே பறகளாகக் கொணடு எம்மைப பார்த்துச் சிரிககும்' எனப பருவம் கண்டழிந்த 'தலைமகள் பாங்கியிடம கூறினாள் (குறு. 126). 'தோழி, கிளி ஒடித்து உண்ணுதலால் குறைபட்ட தினைத்தாள் மழை பெயதமையால தழைததாற போல, என் பெணமை நலததைத் தலைவா உணடு பிரிந்ததனால நோந்த தனிமை வருத்தததோடு அவர் வநதருளவாா என்னும் துணிவினால் உயிர் தாங்கியுள்ளேன்' என வரைவு நீடடித்தவிடத்துத் தலைமகள் கூறினாள் (குறு. 133). 'வாழி தோழி, ஒன்று சொலவேன் கேட்பாயாக; மலை நாடனோடு கூடிய நட்பானது நமககுப் பிரிவின்றி இருககுமானால் மிகநன்று' என வரைவிடை ஆற்றாளாகிய தலைமகள ஆற்றுவிககும பாஙகிககுக் கூறினாள் (குறு. 134:1,2,7). 'சாரல் நாட, நீ நடுயாமத்தில் வருகினறாய; அவ்வாறு வருதலை ஒழிக; அன்னை கிளிகள் தினைக கதிரைக் கவர்நது செல்லாமல் ஓட்டும பொருட்டுத் தினைப்புனததிறகுச் செல் வீராக எனக் கூறியுள்ளாள' என்று தோழியே, நீ எடுத்துரைத்தால் வரும குற்றம் யாது' எனத் தலைமகன் சிறைபபுறமாகப பாஙகிககுத தலைமகள் கூறினாள் (குறு. 141:1-3, 7 8). 'தோழி கடத்தற்கரிய பாலை நிலத்தைக் கடநது நெடுந தொலைவில தங்கியிருத்தற்கு வன்மையுடைய அததலைவர் எவ்வாறு அவ்வனமையை அறிநதவராவா' எனப பொருள் வயிற்பிரிநத தலைமகனை நினைந்து தலைமகள் பாங்கிககு உரைததாள் (குறு. 154:1,7, 8). 'தோழி, யாமப பொழுதில் வாடைக் காறறு வீசும கூதிரக் காலததிலும தலைவர் வநதாரிலலை; நம் காதலர் வருகை இததன்மையதுதானோ' எனப் பாங்கி ஆற்றுவிப்புழித் தலைமகள் கூறினாள் (குறு. 160:4-6). 'தோழி, குளததினிடததே வீசிய மீனுககுரிய வலையில் விலங்கு அகபபடடாற போல, அயலாரிடத்தே தோன்றும வரைவுககுரிய இந்த முயறசி என்ன பயனைத் தரும், இதனை நீயும் பாராபபாயாக' எனப் பாஙகிககுத் தலைமகள் கூறினாள் (குறு. 171). 'தோழி, கடறகரைத் தலைவன பொருட்டு வருநதேன்; பிறா கூறும அம்பலாகிய பழிப்புரைகள் என்ன துனபததைச செய்துவிடும்' எனப பிரிவிடை கடுஞசொல் சொலலி வறபுறுத்தும் பாஙகிககுக கிழததி கூறினாள் (குறு. 175). 'தோழி, தலைவனுடைய மனை வாழவுககு உரிய கடபபாடுகளையும கைக கொண்டுளள நமககுப புலவிக காலததில இத தலைவா இததன்மையா என்ற இனிமையிலலாத பேசசு என்ன பயனைததரும்' எனத் தலைவன பரததையிற பிரிநதவழி ஆறறாளாகிய தலைமகள இயறபடமொழிநதாள (குறு. 181). 'தோழி, தோள் மெலிநதனவாய வளைகள் நெகிழப பெறறு, இததகைய மாறுபாடடை உடையளாகுதல நும்மால விளைநதது என்று சொனனால என்ன குற்றம் வநதுவிடும்' எனத் தலைமகன இரவு வநது நின்ற காலத்துக் கிழத்தி கூறினாள் (குறு. 185.1-4). 'தோழி, நாடறகுத துயில் துறநதன என கணகள' எனப பருவ வரவினகண ஆறறாள எனக் கவன்ற பாங்கிககுக கிழததி கூறினாள (குறு. 186.3, 4). 'தோழி, நாடன கல்லினும வலியன, அவன வலியன என்று கருதாமையால என நெஞசு மெலியும்' எனத் தலைமகளை ஆறறுவிககப பாஙகி இயறபழிக்கத் தலைமகள் இயறபடமொழிநதாள (குறு. 187:3-5). 'வாழி தோழி, தோளைத் தடவி, வளை நெகிழப பொருள்வயிற பிரிநதோர் தொழுவதது அரையிருள நடுநாள் இயம்பும் மணிக் குரலை, அறிவாகொல்' எனப பிரிவிடை ஆறறாளாகிய தலைமகள பாஙகியிடம கூறினாள் (குறு. 190). 'தோழி, மினனலோடு மேகம் இடிககும செயல மட்டுமா, அதனெதிர்

